**திருமதி ரேணுகா ரே:** இந்தச் சட்டத் தொகுப்பு முன்பே வந்தது.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** கிருஸ்தவர்கள், முஸ்லீம்கள், பார்சிகளை தாங்கள் விட்டு விட்டீர்களே.

**மௌலானா ஹஸரத் மோகனி:** தங்களது இனமுறைச் சட்டத்தில் எந்தத் தலையீட்டையும் முஸ்லீம்கள் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** நீங்கள் எனக்கு ஞாபகப் படுத்தத் தேவை இல்லை. அது எனக்குத் தெரியும், அதை நான் அறிவேன். எனது மதிப்பிற்குரிய நண்பர் மௌலானா ஹஸரத் மோகனியின் ஆலோசனையை முற்றிலுமாக மதிக்கிறேன். ஆனால், அப்படியாயினும், அரசியல் சாசனத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடுகளிலிருந்து இது ஒரு அடிப்படை விலகுதலாகும் எனக் கருதுகிறேன்.

மதிப்பிற்குரிய எனது நண்பர் திருமதி துர்க்காபாய், சட்டத் தொகுப்பு நியாயமானது என்று கூறியபொழுது, சட்டத் தொகுப்புக்கு ஆதரவாக மறுக்கமுடியாத நியாயம் உள்ளது என அவர் நிரூபிக்க முயன்றார். எனது சகோதரி திருமதி துர்க்காபாய் மீது எனக்கு அதிகம் மரியாதை இருந்தபோதிலும், என்னால் அவரது கூற்றை ஏற்றுக் கொள்ள முடியாது என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சட்டம் ஒரு நிலையில் இல்லாமல் தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கும் நிலைமை இருந்தால் அல்லது கருத்துவேறுபாடுகள் அதிகம் இருந்தால், அல்லது அது குறித்து தெளிவற்ற, நிச்சயமற்ற தன்மை அதிகம் இருந்தால், சட்டத் தொகுப்பின் அவசியத்தை நான் புரிந்து கொள்ள முடியும். அத்தகைய நிலை இருந்தால் நாட்டில் உள்ள தலைசிறந்த வழக்கறிஞர்கள் ஒன்றாக அமர்ந்து சட்டத் தொகுப்பை தயாரிக்கலாம்; கிட்டத்தட்டக் குழப்பமான, நிச்சயமற்ற நிலையில் உள்ள பல்வேறு சட்டக் கோட்பாடுகளுக்கு வடிவம் கொடுக்க வேண்டும். இந்த நாட்டில் உள்ள இந்துச்சட்டம் இம்மாதிரியானதா?

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா (ஐ.மா - பொது):** அதுதான் நிலை.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** உங்கள் கூற்றை நான் ஏற்றுக்கொள்கிறேன்; ஆனால் தாங்கள் வெளிப்படுத்திய மாபெரும் அறியாமைக்காக மிகவும் வருந்துகிறேன். மதிப்பிற்குரிய எனது நண்பர்

ஒரு வழக்கறிஞர்; ஆனால் இந்துச் சட்ட வழக்குகளை அவர் நடத்திய தில்லை. இந்த நட்புப் பூர்வமான பதிலடிக்காக தயவு செய்து அவர் என்னை மன்னிக்கட்டும். தடங்கல்களை நான் சமாளிக்க முடியும். எனது பேச்சில் நீங்கள் குறுக்கிட்டால், எனது உரைக்கு உத்வேகத்தைத் தான் அளிப்பீர்கள். இந்த நாட்டில் பிரிட்டீஷார் வந்த பின்பு, இந்துச் சட்டம் படிப்படியாக உறுதி பெற்றுள்ளது. நாட்டு மக்களின் தனி நபர் சட்டத்தைத் தொட அவர்கள் துணியவில்லை.

**திரு. பாபு ராம்நாராயண சிங்:** கட்டுப்படுத்தப்பட்ட சொத்துரிமையை அவர்கள் பெண்களுக்குக் கொண்டு வந்தார்கள்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** அந்த விஷயத்துக்கு இப்போது வருகிறேன்: இந்த விஷயத்திற்கு பதிலளிக்க நான் மறந்தால், தயவு செய்து எனக்கு அதனை ஞாபகப்படுத்துங்கள். இந்துச் சட்டம் ஒரு மிகவும் பரந்த விஷயம். தலைவர் அனுமதித்தால், அதுபற்றி பல மணி நேரம் என்னால் பேச முடியும். அதை நான் செய்யப் போவதில்லை என்று தங்களுக்கு உறுதியளிக்கிறேன், ஐயா.

முதலாவதாக, இந்த மசோதா இந்த அவைக்குள் திருட்டுத் தனமாகக் கொண்டு வரப்பட்டிருப்பதற்கு எதிராகக் கண்டனம் தெரிவிக்கிறேன். அது ஒரு அசாதாரணமான நடைமுறை, திரு. துணை சபாநாயகர் அவர்களே.

**திருமதி ரேணுகா ரே:** திரு. துணை அவைத் தலைவரே. அவைக்கு அளிக்கப்பட்ட இந்த அவமதிப்பை ஆட்சேபிக்கிறேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இது ஒரு ஒழுங்குப் பிரச்சினை அல்ல.

**திருமதி ரேணுகா ரே:** ஐயா, இது ஓர் ஒழுங்குப் பிரச்சினை. அவைக்கு எதிராகச் சொல்லப்பட்ட கூற்றை ஆட்சேபிக்கிறேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** 'திருட்டுத்தனமாகக் கொண்டுவருவது' என்ற சொல் நாடாளுமன்ற சம்பிரதாயத்திற்கு முரணானது என்று நான் ஒருபோதும் புரிந்துகொண்டதில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினர் இத்தகைய சொல்லைப் பயன்படுத்தியது தவறு என்று கருதினால், அதற்குப் பதிலாக வேறொரு சொல்லை உபயோகிப்பேன். அவையில் இந்த மசோதாவை மிக வேகமாக நிறைவேற்ற முயற்சித்தது அசாதாரணமானது, இவ்வாறு கூறுவதும்

நாடாளுமன்ற நடைமுறைக்கு புறம்பானதா? அப்படியாயின் நாடாளுமன்ற நடைமுறைக்குகந்த பதத்தை அளியுங்கள். இதற்கு மாறான பதத்தை உங்களால் கண்டுபிடிக்க முடியாது. (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** 'என்ன அற்புத வேகம்'). இந்த அவையில் மிக அசாதாரணமான நடைமுறை கையாளப்பட்டுள்ளது. நாடாளுமன்ற நடவடிக்கைகளில் எனக்குக் கொஞ்சம் அனுபவம் உண்டு. இத்தகைய முக்கியத்துவமும் பரிமாணமும் வாய்ந்த ஒரு மசோதாவை தற்போது போல் நிறைவேற்ற முயன்ற ஒரு நிகழ்வை நான் ஒருபோதும் கண்டதில்லை.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்** (பீஹார் : பொது): இது ஒரு போதும் நிறைவேறாது. (குறுக்கீடு).

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** குறுக்கிடுகளை நான் விரும்புகிறேன்; ஆனால் அவர் என்ன சொன்னார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இடைவிடாது என்னைக் குறுக்கீடு செய்வதன் மூலம் என் உரையின் தாக்கத்தைப் பாழ்ப்படுத்த முடியும் என்று நினைத்தால், அவர்கள் தவறு செய்கிறார்கள்.

சென்ற வரவு செலவுக் கணக்குக் கூட்டத் தொடரின் கடைசி நாளன்று இந்த மசோதா அறிமுகப்படுத்தப்பட்டது.

**திரு. பாபு ராம் நாராயண் சிங் :** கடைசி நேரத்தில்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இத்தகைய முக்கியத்துவமும் பரிமாணமும் வாய்ந்த ஒரு மசோதாவை, இந்து சமூகத்தின் வாழ்வையும் திசை வழியையும் முறைப்படுத்தும் ஒரு மசோதாவை சென்றக் கூட்டத் தொடரின் கடைசி நாளன்று அறுமுகப் படுத்தப் பட்டது என்பதைத் தாங்கள் நன்கு அறிவீர்கள். எவ்வாறு அன்றைய வேலைகளின் கடைசியில் 5 மணிக்கு பின்பும் நாம் அமர்ந்திருந்தோம் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்; பொறுக்குக் குழுவிற்கு அதை அனுப்ப மாண்புமிகு சட்ட அமைச்சர் ஓர் உரையாற்ற அனுமதிக்கப் பட்டார்; மிகக் குறைந்த கால அவகாசத்துக்குள் மூன்று அல்லது நான்கு பேர்கள் மட்டுமே பேச அனுமதிக்கப்பட்டனர்; குறைந்த காலக் கட்டத்திற்குப்பின் 7 மணிக்கு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. அதற்குப்பின்பு என்ன நடந்தது? அது பொறுக்குக் குழு விற்குச் சென்றது. பொறுக்குக் குழு அதன் மீது அறிக்கை சமர்ப் பித்தது; அந்த அறிக்கையைப் பரிசீலிப்பதற்கான தீர்மானத்தின் மீது உரிமைப் பிரச்சினைகள் எழுப்பப்பட்டன. அந்த உரிமைப்

பிரச்சினைகளின் தகுதிகள் பற்றி நான் எதுவும் பேசப் போவதில்லை. அவை பைசல் செய்யப்பட்டன. சென்ற கூட்டத் தொடரில் பொறுமை யின்மை அவ்வளவு அதிகமாக இருந்தது; இந்த மசோதா உடனடியாகப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்று மாண்புமிகு சட்ட அமைச்சர் விரும்பினார்; உரை எதுவும் ஆற்றப்படவில்லை. எப்படியோ அது நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றது, ஒழுங்குப் பிரச்சினைகள் நிராகரிக்கப்பட்டன. இந்த மசோதாவை பொறுக்குக் குழுவுக்குச் சமர்ப்பித்தபடிப் பரிசீலிக்க இந்த அவைக்கு தகுதி உள்ளதாகக் காணப்பட்டது. இது இப்பொழுது எந்த முறையில் கையாளப்படுகிறது என்பதைப் பாருங்கள். ரயில்வே வரவு செலவுத் திட்டத்திற்கும் பொது வரவு செலவுத் திட்டத்திற்கும் இடையே உள்ள குறுகிய காலத்தில் இதை நிறைவேற்ற முயற்சிக்கப்படுகிறது. இது பற்றி போதிய அக்கறை எடுத்துக் கொள்ளப்படவில்லை. இதன் முக்கியத்துவத்தை யாரும் உணர்வதில்லை. இத்தகைய மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த இந்த சட்டமியற்றல் எம்முறையில் கையாளப்படுகிறது என்பது நாடு முழுவதையுமே கலக்கியுள்ளது. இதற்கு உண்மையான முக்கியத்துவம் அளிக்க நீங்கள் விரும்பினால், இது குறித்த பணியை முறையாகச் செய்ய நீங்கள் விரும்பினால், இன்று நிலவும் சட்டத்தை மாற்றி அமைப்பதற்காக ஏதாவது செய்ய வேண்டுமென்று நீங்கள் விரும்பினால், அதை செய்வதற்கு இது சரியான வழியல்ல. ஒரு சிறப்புக் கூட்டத் தொடரைக் கூட்டி இந்த மசோதாவை அதன் முன் சமர்ப்பியுங்கள். சிறிய வங்கி மசோதாக் களுக்கு நாள் கணக்கில் நீங்கள் நேரம் ஒதுக்குகிறீர்கள். நிலைமை இவ்வாறு இருக்க, இந்து சமுதாயத்தின் வாழ்வையும், கதிப்போக்கை யும், பண்புகளையும் முறைப்படுத்த விழையும் ஒரு மசோதாவை ஒழுங்கு முறையில்லாதமுறையில் கையாள நீங்கள் நினைக்கிறீர் களா? இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த சட்டம் பரிசீலிக்கப்படும் முறைக்கு எதிராக எனது கடும் கண்டனத்தை தெரிவித்துக் கொள் கிறேன். நேற்று மாலை 3 மணிக்கு ரயில்வேக்களுக்கான துணை மானியக் கோரிக்கை முன்வைக்கப்பட்டது. பின்பு பொது வரவு - செலவுத் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டது. திரு. துணை அவைத் தலைவர் அவர்களே, இத்தகைய மசோதாக்கள் சம்பந்தமான நிகழ்ச்சி முறைகள் எனக்குப் பழக்கமில்லை. இதற்கு ஒரு முன்மாதிரியை ஞாபகப்படுத்த முடியுமா என்று சட்டப் பேரவையின் பழைய உறுப் பினர்களைக் கேட்கிறேன்.

**திரு. பாபு நாராயண் சிங் :** எதுவும் இல்லை.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** ஐயா, பிரச்சினை என்ன வெனில், சட்டத் தொகுப்பிற்கு உண்மையிலேயே அவசியம் எதுவும்

உள்ளதா? நிச்சயமாக எதையும் நான் காணவில்லை. ஏனெனில் கற்றறிந்த என்து நண்பர் திருமதி துர்க்காபாய் கூறியதுபோல் இந்துச் சட்டம் நன்றாக ஸ்தாபிக்கப்பட்டுள்ளது; அது சுமார் நூறு ஆண்டுகள் நிலவி வருகிறது. பிரிட்டிஷ்காரர்கள் இங்கு வந்தபோது, புராதன இந்துச் சட்டத்துக்கு இந்தியப் பண்டிதர்களால் பொருள் விளக்கம் தரப்பட்டது. அவர்கள் நீதிமான் பண்டிதர்கள் என்று அழைக்கப் பட்டனர்; அவர்கள் எல்லா **ஸ்மிருதிகளையும் தர்ம சாஸ்திரங்களை** யும் துருவித் துருவி ஆராய்ந்து இந்த சட்டத்துக்கு வியாக்யானம் செய்தனர். ஏராளமான **ஸ்மிருதி**களிலிருந்தும் நிபந்தங்களிலிருந் தும், வழக்காற்றலிலிருந்தும் இந்து சட்டத்திற்கான அடிப்படைக் கோட்பாடுகளை அவர்கள் வெற்றிகரமாக வகுத்தனர். அவை இன்றும் நிலை நிற்கின்றன. ஐயா, உலகம் அறிந்த மரபுவழி சட்ட இயல்களில் இந்துச் சட்டம் மிகப் பழைமையானது என்பது நன்கு தெரிந்த ஒன்றே.

**டாக்டர் மனோ மோகன் தாஸ்** (மேற்கு வங்காளம் - பொது) : இந்து சட்டம் நேர்மையற்றது!

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஆம். இந்துச் சட்டம் நேர்மையற்றது! இந்து சமுதாயம் நேர்மையற்றது! இந்துக்கள் நேர்மை யற்றவர்கள்! இந்துச் சட்டம் நேர்மையற்றது என்ற குற்றச் சாட்டுக்குப் பதிலளிப்பது யாருக்கும் சாத்தியமல்ல. அந்தக் குற்றச்சாட்டு மூன்று சொற்களை மட்டுமே கொண்டுள்ளது. 'அது நேர்மை அற்றது' என்ற மூன்று சொற்களில் சொல்லப்பட்ட ஒரு மிகக் கடுமையான குற்றச் சாட்டிற்கு பதிலளிக்க எனக்கு சக்தி இருக்கிறதா என்பதை நான் அறியேன். ஓர் அமைப்பு முறை நல்லதா அல்லது கெட்டதா என்பதை சமுதாயம்தான் தீர்மானிக்க வேண்டும்; அதைத் தீர்மானிக்க வேண் டியது ஏமாற்றமடைந்த அல்லது அதிருப்தி அடைந்துள்ள நபர்கள் அல்ல. அதன் ஸ்திரத் தன்மைக்கு ஒரு நிச்சயமான ருசு நூற்றாண்டு களின் சோதனையை அது சமாளித்து நிற்க முடிந்தது என்ற உண்மையில் தான் அடங்கியுள்ளது. இயல்பாகவே மோசமான, ஆரோக்கியமற்ற, அல்லது நேர்மையற்ற எந்த அமைப்பு முறையும் நீண்ட காலத்திற்கு தாக்குப் பிடித்து நிற்க முடியாது. ஆண்டாண்டுக் காலமாக நாட்டை உலுக்கிய அதிர்ச்சிகளையும் புரட்சிகளையும் வெற்றிகரமாகச் சமாளித்து நிற்க முடிந்தது இந்துச் சட்டமும் அதற்கு ஆதார அடிப் படையாக உள்ள அமைப்பு முறையும். வரலாற்றுப் பிரளயங்கள் புராதன நாடுகளான கிரீஸ், ரோம், அஸ்ஸிரியா, பாபிலோனியா போன்ற வற்றின் நாகரிகங்களைச் சீர்குலைத்தன. அந்நாகரிகங்கள் சிதறுண்டு

போயின; ஆனால், தான் தோன்றிய காலத்தைக் கூற முடியாத இந்துக் கலாசாரமும், சமுதாயமும் இன்னமும் சக்தியுடனும் உயிர் துடிப்புடனும் செயல்பட்டு வருகின்றன. இந்நிலைமையில் முரட்டுத் துணிச்சலான, அக்கறையற்ற வழிகளில் சட்டமியற்றுவதன் மூலம் அதன் அடிப்படைகளையே தகர்க்க நாம் முயலாத வரை, அதை செயல்பட இறைவன் அனுமதிப்பார் என்று உறுதியாக நம்புகிறேன். இந்து மத அஸ்திவாரங்களில் முக்கிய பலஹீனம் எதுவும் இருந்திருந்தால், இன்ப துன்பங்கள் நிறைந்த அதன் நீண்ட வரலாறு முழுவதிலும் அதைத் திணறடித்த பயங்கரமான பேரெழிச்சிகளையும் சமாளித்து நிலைத்து நின்று இருப்பது சாத்தியமில்லை. ஓர் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக நம் நாடு அன்னியர் ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டு வந்தது. மாறும் நிலைமைகளுக்கேற்ப அதிசயமான முறையில் தன்னை மாற்றிக்கொள்ளும் திறமையை இந்து மதம் பெற்றிருப்பதை வரலாறு உங்களுக்கு எடுத்துரைக்கும், சிந்தித்துப் பார்த்தால் வளைந்து கொடுக்கும் நிலைமைக்கேற்ப தன்னைத் தகவமைத்துக் கொள்ளும் கருக்களை இந்து சட்டம் தன்னுள் கொண்டிருந்ததை உங்களுக்கு புலப்படுத்தும்; எல்லாக் காலங்களிலும் மாறிவரும் தேவைகளையும் சவால்களையும் எதிர்கொள்ளவும் இவை சாத்தியமாக்கின.

**திருமதி துர்க்கா பாய் :** சபாஷ், சபாஷ்.

**திருமதி ரேணுகா ரே:** இப்பொழுது ஒரு மாற்றம் ஏற்பட்டு இருக்கிறது (குறுக்கீடு)

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** நான் பேசும்போது ஏராளமான குறுக்கீடுகள் நேருவது குறித்து மகிழ்ச்சியடைகிறேன்; அவை எனக்கு சிந்திக்க அவகாசம் அளிக்கின்றன. தயவு செய்து அதைத் தனித்தனியாகச் செய்யுங்கள். துணை அவைத் தலைவர் அவர்களே, நான் கூறுவதை பலர் அப்படியே ஒப்புக்கொள்வர் என்று நம்பக் கூடிய அவ்வளவு பெரிய முட்டாளல்ல நான்; ஆனால், நம்மில் சிலராவது நான் கூறுவது பற்றிச் சற்றுச் சிந்திப்பார்கள் என நம்புகிறேன். இந்து மதம், இந்துச் சட்டம், இந்துப் பண்பாடு மிகப் பழைமையான பாரம்பரியத்தைக் கொண்டவை, ஒரு வரியில் சட்டம் இயற்றி அவற்றை அகற்ற நினைப்பது விவேகமற்றது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். வலது புறமும் இடது புறமும் இருக்கும் எனது நண்பர்களுக்கு இந்த வேண்டுகோளை விடுக்கிறேன். இப்பொழுது நம் முன் உள்ள இந்துச் சட்டத் தொகுப்பு நமக்கு என்ன சாதிக்கப் போகிறது

என்று நான் கவலைப்படுகிறேன். ஐயா! இதில் இந்து என்று எதையும் நான் காணவில்லை. இந்து அல்லாத அல்லது இந்து-எதிர்ப்பு சட்டத் தொகுப்பு என்று இதனைக் கூறுவது சரியாக இருக்கும் என்று கருதுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்கம்: முஸ்லீம்) : முஸ்லீம் சட்டத் தொகுப்பு.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** அது வேறு எதுவாகவும் இருக்கலாம். ஆனால் அது இந்து சட்டத் தொகுப்பு அல்ல. இந்து மதத்தின் ஆன்மாவை அது சுவாசிக்கவில்லை. அது இந்து அல்லாத உணர்வையே வெளிப்படுத்துகிறது. மசோதா முழுவதிலும் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை இந்து என்று கூறும் எதற்கும் மிக மோசமான அவமதிப்பைக் கொண்டுள்ளது.

**திரு. எச்.வி. காமத் :** இந்து ஆன்மா என்றால் என்ன?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஐயா, அதை இந்து மதம் என்று சொல்கிறார்களா? திருமணம் மற்றும் பிதுரார்ஜித சொத்தைப் பெறுதல் பற்றிய உங்கள் அமைப்பு முறை பற்றி தயவு செய்து சிந்தியுங்கள். அவைதான் இந்து அமைப்பின், அல்லது இந்து சமுதாயத்தின் ஆதார அடிப்படைகள்; நீங்கள் செய்யப் போகும் வழிமுறையில் அதைச் சிதைக்கப் போகிறீர்களா? இங்குள்ள நமக்கு மட்டுமல்ல, வெளியில் உள்ள நமது நாட்டு மக்களுக்கும் எதிர்காலச் சந்ததியருக்கும் நீங்கள் பதிலளிக்க வேண்டிய கேள்வியாகும் இது.

ஐயா, இப்பொழுது செய்ய முயற்சிக்கப்படுவது போல் இந்துச் சட்டத்தைத் தொகுத்தால் அறிவாளிகளின் வெறும் பொழுது போக்காக சட்டத் தொகுப்பை செய்வதற்காகவே செய்வதாக நான் எண்ணுகிறேன். அவ்வாறு செய்வது விவேகமற்றது என்று எனது மதிப்பிற்குரிய நண்பர்களிடம் மன்றாடிக் கூறிக் கொள்கிறேன். அது அவசியமற்றது. அது அவசியமானது என்று யாரும் உணரவில்லை. பல்வேறு உயர் நீதிமன்றங்களின், மாவட்ட நீதிமன்றங்களின் நீதிபதிகளது கருத்துக்களைப் பாருங்கள். இவர்கள்தான் இந்துச் சட்டத்தை நடைமுறைப்படுத்தப் போகிறவர்கள். இந்துச் சட்டம் தொகுக்கப்படுதல் தேவைப்படுகிறதென்றும், அதுவும் இப்பொழுது செய்ய

முயற்சிக்கப்படும் ரீதியில் செய்ய வேண்டுமென்று நீதித்துறை வலியுறுத்தும் கோரிக்கைகளை உள்ளடக்கும் பெரிய கருத்துத் தொகுப்பை அரசு வைத்திருக்கிறதா? இல்லை. தாங்களே தங்களை வழிகாட்டிக் கொள்ள வேண்டிய, இந்தச் சட்ட ஷரத்துகள்படி தங்களின் வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் வழிநடத்த வேண்டிய மக்களிடமிருந்து அத்தகைய ஒரு பொதுக் கோரிக்கை இருக்கிறதா? அவர்கள் கோரியுள்ளார்களா? அம்மாதிரியான கோரிக்கை வந்துள்ளதா? வலது பக்கத்திலுள்ள மதிப்பிற்குரிய எனது நண்பர் இல்லை என்கிறார், அது முற்றிலும் சரி.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** அவர் தங்களை ஆதரிக்கிறார்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** மதிப்பிற்குரிய எனது நண்பர் கூறுகிறார் அவர் என்னை ஆதரிக்கிறார் என்று. அவர் உண்மையைத் தான் ஆதரிக்கிறார். நாம் செய்துகொண்டிருப்பதைப் பற்றி நாடு ஆச்சரியப்படும், ஒரு விவேகமான காரியத்தை நாம் செய்கிறோம் என்று நமது ஆன்மாக்களுக்கு போலி புகழ்ச்சியான அபிடேகத்தை நாம் செய்ய வேண்டாம். நீங்கள் செய்துவரும் முறை பற்றி என்னை நானே ஏமாற்றிக் கொள்ள முடியாது என்பதை நான் அறிவேன். அது விவேகமாக இருந்திருந்தாலும் நான் கூறிய காரணங்களால் அந்தச் சட்டத் தொகுப்புக்கு முயலுவது அவசியம் என்று நான் சிந்தித்திருக்க மாட்டேன். அதற்கு ஒரு சீரான தன்மையை உங்களால் அளிக்க முடியாது. இந்து மதம் என்பது வேறுபாடுகளுக்கு மத்தியில் அடிப்படை ஒற்றுமையைக் குறிக்கிறது. இந்து மதத்தின், இந்து சட்டத்தின், இந்துக் கலாசாரத்தின் சாராம்சமாக அந்த ஒற்றுமை திகழ்கிறது. இதுபோன்ற ஒரு பரந்த நாட்டில் இயற்கையான வேறுபாடுகளைப் புறக்கணித்து, ஒரு சீரான அளவுகோல் கொண்ட ஒரு வாழ்க்கையை நீங்கள் எதிர்பார்க்க முடியாது. அவ்வாறு நீங்கள் எதிர்பார்த்தால் தோல்வியைத்தான் தழுவுவீர்கள்; இது ஆச்சரியமல்ல. இப்பொழுது அதை உணரமாட்டீர்கள்; காலம் வரும்போது புரிந்து கொள்வீர்கள். இந்தச் சட்டத் தொகுப்பு உருவானதும் உங்கள் நோக்கம் நிறைவேறப் போகிறதா? நான் கூறுகிறேன் இல்லை நிறைவேறாது. மைசூரிலிருந்து வந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர் நேற்று ஓர் உரையாற்றினார். இப்பொழுது இந்து சட்டத் தொகுப்பு மிக எளிதாக ஆக்கப்பட்டுள்ளதால், நான்கு அணா அல்லது ஆறு அணா மதிப்புள்ள பிரசுரத்தை வாங்கி அதன்மூலம், இந்துச் சட்டம் அவ்வாறு நிலவுகிறது என்பதை நீங்கள் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்ளலாம் என்று அவர் கூறினார். பல நண்பர்கள் 'மிகவும் சரி', '

'மிகவும் சரி' என்று கூச்சலிட்டனர். ஆனால், இந்த மசோதாவைப் பிரரேபித்தவரே தாம் இந்துக்களின் மொத்தச் சட்டத்தையும் தொகுக்கப் போவதாகப் பாசாங்கு செய்யவில்லை. இந்துச் சட்டத் தொகுப்பின் ஆர்வலர்கள் இதை உணர்கிறார்களா? முகப்புரையில் அவர் பகுத்தறிவுக்கு ஒவ்வாத கோரிக்கையை முன் வைக்காமல் மிக எளிமையான கோரிக்கையை முன்வைக்கிறார்; அவர் கூறுகிறார்:

> ''இந்திய மாகாணங்களில் இப்பொழுது அமுலிலிருக்கும் இந்துச் சட்டத்தின் சில குறிப்பிட்ட பிரிவுகளைத் திருத்தித் தொகுப்பது உசிதம் என்று கருதப்படுகிறது.''

எனவே, தொகுக்க உத்தேசித்துள்ளது சில குறிப்பிட்ட பிரிவுகளேயாகும்; அதாவது திருமணச் சட்டம், மரபுச் சொத்துரிமைச் சட்டம், சுவீகாரச் சட்டம் பொதுவாக சொல்வதானால் இவைதான் முக்கியமானவை.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி:** விடப்பட்ட பிரிவு எது?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இந்தச் சட்டத்தில் எது விடப்பட்டுள்ளது என்று மதிப்பிற்குரிய என் நண்பர் கேட்கிறார். இந்துச் சட்டத்தில் இவைதான் உள்ளனவா? இந்து வாழ்க்கையின், தேச நடவடிக்கையின் முழு களத்தையும் இந்த மூன்று பிரிவுகளும் தான் பூர்த்தி செய்கின்றனவா? அவரது அறியாமையைப் பற்றி நான் அனுதாபப்பட மட்டுமே முடியும். கூட்டுக் குடும்பச் சொத்து, பாகப் பிரிவினை, கூட்டுக் குடும்ப வியாபாரம், மதம் மற்றும் தர்ம அறக் கட்டளைகள், கொடைகள் முதலிய மற்ற விஷயங்கள் பற்றி, என்ன செயால்லுகிறீர்கள்? இந்தப் பட்டியலில் இடம் பெறாத இன்னும் எத்தனை எத்தனையோ விஷயங்கள் உள்ளன.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** உயில்களையும் இவ்வகையில் குறிப்பிடலாம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** உயில்கள் பற்றி வெறுமனே குறிப்பிடுவதால் மட்டும் அவை நம் முழுக் கவனத்தையும் ஈர்த்ததாகாது. எப்படியாயினும் நான் டாக்டர் அம்பேத்கருக்கு நன்றியுடையவனாக இருக்கிறேன். அவர் மிகவும் தன்னடக்கமுள்ளவர். ஒரு சர்வ வியாபகமான தொகுப்பை முன்வைத்துள்ளதாக அவர் ஒருபொழுதும் உரிமை கொண்டாடவில்லை. இதுதான் இந்து

மதத் தொகுப்பு முழுவதுமே என்று மதிப்பிற்குரிய நண்பர்கள் நினைத்தால் அம்பேத்கரிய விஷயத்தில் அம்பேத்கரையே அவர்கள் மிஞ்சுகிறார்கள் என்றுதான் கூறவேண்டும். நம்முன்னால் கொண்டு வரப்பட்டுள்ள வடிவத்தில் இந்த இந்துத் தொகுப்புச் சட்டம் நிறை வேற்றப்பட்டாலும், மற்றொரு காரணத்தாலும் அதன் நோக்கத் திலிருந்து அது தடம்புரள்கிறது. எனது மதிப்பிற்குரிய சகோதரி துர்க்காபாயும் மைசூரைச் சார்ந்த எனது மதிப்பிற்குரிய நண்பரும் 'நல்லது இதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்' என்று நேற்றுக் கேட்டனர். விவசாயச் சொத்து துண்டு துண்டாக்கப் பிரிக்கப் படுவதற்கு இது இட்டுச் செல்லாது. இந்த மசோதாவை நிராகரிப் பதற்கு மிக வலுவான ஒரு வாதத்தை அவர்கள் அளிக்கிறார்கள் என்பதை அவர்கள் உணர்ந்தார்களா என்பதை நான் அறியேன். தாங்கள் உணராமலேயே, எனது சகோதரியும் சகோதரரும் இந்த மசோதாவை முற்றிலுமாக நிராகரிப்பதற்கு மிக வலுவான வாதங் களில் ஒன்றை அளித்துள்ளார்கள். சொத்தைப் பிரித்துக் கொடுப்பதை முறைப்படுத்தப் போகிறீர்கள். இப்பொழுது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது என்னவெனில், இந்நாட்டில் அசையாச் சொத்தில் 90 சதவிகிதம் கிராமங்களில், மாகாணங்களில் உள்ளன இந்திய அரசின் நேரடி நிர்வாகத்திலுள்ள பரப்புகள் நீங்கலாக எல்லா மாகாணங்களிலுமுள்ள இந்துக்களுக்கு இந்தச் சட்டத் தொகுப்பு பொருந்தும் என்ற கோரிக்கையை இது எவ்வாறு நிறைவேற்றும்? இந்த மசோதாவை தூக்கியெறிய வேண்டும் என்பதற்கு ஒரு பலமான காரணம் அதனுடைய நோக்கத்தில் அது தவறுகிறது என்பதேயாகும். மூன்று கிளைகளைத் தவிர, நான் குறிப்பிட்டபடி உட்படுத்தாத பல விஷயங்கள் உள்ளன. அரசியல் சட்டப் படி மாகாண விவசாயச் சொத்து முற்றிலும் மாகாண சம்பந்தமான விஷயம் என்று வாதிக்கப் படுகிறது; அவ்வாறே அறக்கட்டளை சொத்துக்கள், கூட்டுக் குடும்பச் சொத்து, பாகப்பிரிவினை, சுயமாகச் சம்பாதித்தது முதலானவையும் இவற்றில் அடங்கும். இந்தப் பரந்த களம் இவற்றை உட்படுத்தப் படாமல் உள்ளது. இந்த அவையை அக்கறையுடன் கேட்கிறேன்: இது ஒரு சர்வ வியாபகமான சட்டத் தொகுப்பு அல்லது எல்லாவற்றை யும் தன்னுட் கொண்ட சட்டத் தொகுப்பு, மேலும் இந்து சமுதாயம் மரபுவழி பெற்று வந்த எல்லா சமூக, பொருளாதார சீர்கேடுகளுக்கும் இது சமய சஞ்சீவியாக விளங்கும் என்று நினைப்பவர்களின் உரிமை கொண்டாடுதலைப் பற்றி அவர்கள் எல்லோரும் திருப்தி கொண் டிருக்கிறார்களா? 139 பிரிவுகளும் வைட்டமின் மாத்திரைகளாக இந்து சமுதாயம் முழுவதற்கும் வீரியமூட்டும் என்று அவர்கள் உண்மை யிலேயே நம்புகிறார்களா? நீங்கள் அந்தக் கருத்தைக் கொண்டிருக்கலாம்.

இந்த அவையும் அந்தக் கருத்தைக் கொண்டிருக்கலாம். ஆனால் நான் அந்தக் கருத்தைக் கொண்டிருக்கவில்லை. மாறாக இது அவசர கோலமானது, இந்துச் சட்டத் தொகுப்பு நிறைவேற்றப்பட்டாலும், தங்கள் சொந்த மாகாணங்களில் விவசாய நிலத்தின் உடைமை மாற்றத்திற்கான இதுபோன்ற சட்டத்தை மாகாண அரசுகள் நிறை வேற்றும் வரை இது அமுலுக்கு வரமுடியாது. எல்லா மாகாணங் களிலும் இந்தச் சட்டம் அமுலுக்கு வரும்முன் ஒவ்வொரு மாகாணமும் அதைச் செய்தாக வேண்டும். சமஸ்தானங்களைப் பற்றி நான் பேச வில்லை. நான் மாகாணங்களைப் பற்றித்தான் பேசுகிறேன். மேலும் மாகாணங்கள் வேறுபட்ட முறைகளை எடுக்கலாம் என்பதும் புரிந்து கொள்ள முடியாததல்ல. ஒரு குறிப்பிட்டப் படியான மரபுரிமைச் சட்டத்தை, விவசாயச் சொத்தின் உடைமை மாற்றம் ஒரு குறிப்பிட்ட முறையில் இருக்கவேண்டுமென்றோ மாகாண அரசுகளை மத்திய அரசு நிர்பந்திக்க முடியாது. அப்பொழுது மாகாண சுயாட்சி பாதிக்கப் படும். தங்களது கருத்துக்கு மாறாக மத்திய அரசின் கட்டளை அமைந் திருந்தால் மாகாண அமைச்சரவைகள் அதை ஏறெடுத்துக்கூடப் பார்க்கமாட்டா என்பது நிச்சயம். இது எனது உறுதியான கருத்து.

**திரு. துணை அவைத் தலைவர் :** அவையின் தகவலுக்காக நான் கூற விரும்புவது இதுதான்: பல உறுப்பினர்களிடமிருந்து சீட்டு களும் கடிதங்களும் வந்துள்ளன. அவர்களில் மிகப் பெரும்பான்மை யோர் - எல்லோரும் இல்லாவிடினும் - இந்த மசோதா பற்றித் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க அக்கறையுடன் உள்ளனர். மதிப்பிற்குரிய உறுப்பினரின் உரை எவ்வளவு ருசிகரமாக இருந்தபோதிலும், இந்த மசோதாவுக்கு ஆதரவாக ஒரு தரப்பினர் எழுப்பும் வாதங்களுக்கு மற்றவர்கள் தயவு செய்து பதிலளிக்கட்டும் என்று ஆலோசனை கூறுகிறேன். இவ்வாறு எல்லா விஷயங்களும் அலசி ஆராயப்படும்; விவாதத்தைச் செழுமைப்படுத்த இது உரிய பங்கு ஆற்றும். இந்தச் சட்டத் தொகுப்பைப்பற்றி டாக்டர் அம்பேத்கர் பகுப்பாய்வு செய் துள்ளார். அந்த விஷயங்கள் எவ்வாறு தவறு என்றும் மறுபக்கத்தில் உள்ளவர்கள் இதற்கு எவ்வாறு பதிலளிக்கிறார்கள் என்றும் அறிய அவை விரும்பும்; எனவே இது விஷயத்தில் அதிகக் கவனம் செலுத்தப் பட வேண்டும். பட்டியலில் உள்ள காத்திருக்கும் பேச்சாளர்களின் எண்ணிக்கையையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

**திரு. எச்.வி. காமத் :** ஐயா! இந்த மசோதா மிகவும் ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்தது; இது குறித்து விவாதிக்க இரண்டு அல்லது

மூன்று நாட்கள் போதுமானதாக இருக்காது. எனவே, பொது விவா தத்திற்கு குறைந்தபட்சம் இரண்டு அல்லது மூன்று வாரங்கள் ஒதுக்கும் படி தங்களை நான் கேட்டுக் கொள்ளலாமா?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** ஐயா, தாங்கள் தெரிவித்த கருத்துக்களுக்கு நான் மிகவும் மரியாதை அளிக்கிறேன். சட்டமியற் றுதலைத் தாமதப்படுத்த நான் நீண்ட உரையை ஆற்றுகிறேன் என்ற எண்ணத்தை நான் ஏற்படுத்தியிருந்தால் அதற்காக வருந்துகிறேன். ஐயா, இந்த மசோதா மிக அதி முக்கியத்துவம் வாய்ந்தது; எனவே பொது விவாதத்தை வெகு விரைவில் முடித்துக் கொள்ளும்படி எங்களைக் கேட்பது அவைக்கு நியாயம் செய்வதாகாது. ஏனெனில், முதல் கட்டத்தில் உரை ஆற்ற எங்களுக்கு கிஞ்சித்தும் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. மசோதாவின் கோட்பாட்டிற்கு எங்களை உட்பட செய்தபின், வரம்புக்குட்படுத்தப்பட்ட இந்தக் கட்டத்தில் நம் நாட்டிற்கு எவ்வாறு சிறப்பாக சேவை செய்யமுடியும் என்பதை தாங்கள்எண்ணிப் பார்க்க வேண்டும். 36 பேர் உரையாற்ற முன் வந்திருப்பது இந்த மசோதா இப்பொழுது எவ்வளவு அக்கறையுடன் கூடிய கவனத்தை ஈர்த்துள்ளது என்பதற்கு எடுத்துக்காட்டு; அவர்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகின்றனர். எனவே இம் மாதிரியான விவாதத்திற்கு இவ்வளவு நேரம்தான் ஒதுக்க வேண்டும் என்ற கெடுபிடி கூடாது.

இன்று விவாதத்தை நாம் முடிக்கவில்லையெனில், இதுபற்றி விவாதிக்க அதிக நாட்கள் கண்டுபிடிக்கப்பட வேண்டும். மாண்புமிகு சட்ட அமைச்சர் இதுபற்றி மிக அக்கறை கொண்டுள்ளார். இதற்காக அதிகப்படியான ஒரு கூட்டத் தொடரை அவர் ஏற்பாடு செய்ய முடியும்; அவ்வாறு இல்லையெனில், இந்தக் கூட்டத் தொடரிலேயே, மேலும் நான்கு அல்லது ஐந்து நாட்கள் ஒதுக்க வழி வகை செய்ய வேண்டும். விஷயம் முழுமையாக விவாதிக்கப்பட வேண்டும். விவாதத்தை முடித்துக் கொள்வதை அவை ஏற்றுக் கொள்ளாது என்று நம்புகிறேன். முடித்துக் கொள்ள வேண்டுமென்ற தீர்மானத்தை பிரதம மந்திரி முன் மொழிய மாட்டார் என்று எண்ணுகிறேன். முழுமையானதும் போதுமானதுமான விவாதத்தை உத்திரவாதம் செய்யாமல் ஆணை இடுவதன் மூலம் இம்மாதிரியான தீர்மானத்தை முடித்துக் கொள்ள முடியாது.

**திரு. எச்.வி. காமத் :** மற்றொரு விஷயம். ஐயா, இங்கு இல்லாத மாகாணச் சட்டப் பேரவை உறுப்பினர்களை இந்த விவா தத்தில் கலந்துகொள்ளும்படி அழைக்கலாமா?

**துணை அவைத்தலைவர்:** நாம் இப்பொழுது அவையை ஒத்திவைப்போம்....

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஐயா! நான் இன்னமும் முடிக்கவில்லை. மதிய உணவுக்குப் பின் என் உரையை நான் தொடரலாம் என்று நினைக்கிறேன்.

**துணை அவைத் தலைவர்:** ஆம். இப்பொழுது மதிய உணவுக்காக ஒத்திவைப்போம்.

*பிற்பகல் இரண்டரை மணி வரை மதிய உணவிற்காக அவை ஒத்திவைக்கப்பட்டது.*

---

*அவை மதிய உணவுக்குப் பின் பிற்பகல் 2-30 மணிக்கு மீண்டும் கூடியது . திரு. எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி தலைமை தாங்கினார் . (தலைமை தாங்குவர்கள் பட்டியலில் ஒருவர் அவர்.)*

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இடை வேளைக்கு அவை ஒத்திவைக்கப்பட்ட போது, முக்கிய அம்சங்களில், அதன் நோக்கத்தில் எவ்வாறு இந்த இந்துமதத் தொகுப்பு தோல்வியடையப் போகிறது என்று விளக்கிக் கூற நான் முயன்றேன். இந்தச் சட்டத் தொகுப்புக்கு எந்த அவசியமும் இல்லை என விளக்கினேன்; ஏனெனில், இந்துச் சட்டம் அதன் எல்லா அம்சங்களிலும் நன்கு நிலை நிறுத்தப்பட்டுள்ளது மட்டுமல்லாமல், மக்கள் அதை நன்கு புரிந்து கொள்கிறார்கள் என்று எடுத்துரைத்தேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் நாட்டின் நீதிபதிகள் நீதி நிர்வகம் - உயர் மட்டம் உட்பட - சட்டம் தொகுக்கப்பட வேண்டுமென ஒரு பொழுதும் கோரியதில்லை என்பதையும் விளக்கினேன்; இந்த மசோதா ஒரு குறுகிய வரம்பைக் கொண்டது என்றும், மேலும் திருமணம், தத்து எடுத்தல், மரபுச் சொத்துரிமை ஆகியவற்றைத் தவிர, அது விட்டுவிட்ட விஷயங்கள் ஏராளமாக உள்ளன என்றும் விளக்கினேன். விவசாய நிலத்தைப் பொறுத்தவரை, நாட்டின் நீதிமன்றங்களின் பல்வேறு முடிவுகளின்படி, நிலம் என்ற பிரச்சினை மிகப் பல்வேறுபட்ட நலன்களையும் நபர்களையும் - நிலச்சுவான்தாரரிலிருந்து கலப்பை ஏந்தி நிலத்தை உழுது பயிடுபவன் வரை - உட்படுத்தித் தழுவி நிற்கிறது என்று அவைக்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மத்திய சட்டம் குறிப்பிட்டுள்ளதற்கு மாறான வழிகளில் பல்வேறு மாகாண அரசுகள் அவற்றின் சொத்தின் வினியோகத்தை முறைப்படுத்தினால் விபரீதமான விளைவுகளும் குழப்பமும் ஏற்படவே செய்யும்.

ஐயா, அடுத்து, இந்தச் சட்டத் தொகுப்பு தற்போதுள்ள இந்து சட்டத்தை அதனுடைய குறுகிய வரம்பிற்குள் ஜீரணிக்க முயல்வது மட்டுமல்லாமல், இவ்வாறு வரிசைப் படுத்தி ஜீரணிக்கும் செயல் பாட்டினிடையே, பல விஷயங்கள் புகுத்தப்பட்டுள்ளன என்று குறிப் பிட விரும்புகிறேன். பலவிஷயங்கள் குறிப்பாக திருமணம், வாரிசு உரிமை ஆகியவற்றில் அறிமுகப்படுத்துகின்றன; ஒப்புக்கொள்ளப் பட்ட, நடைமுறையில் உள்ள இந்து கருத்துக்களுக்கு நேர் எதிராக உள்ளன இவை. எனவே, வெறுமனே மனதில் ஈர்த்துக் கொண்டு வரிசைப் படுத்துவது என்பது மட்டுமல்ல; மேலும் திருத்தம் செய்வது மட்டு மல்ல - ஏனெனில் திருத்தம் என்பது ஒரு மிதமான வெளிப்பாடு - அது அதைவிட அதிகம் செய்கிறது. திருமணச் சட்டத்தில் மட்டுமல் லாமல் வாரிசு உரிமைச் சட்டத்திலும் புதுமை செய்கிறது, மிக வியாபகமான மாற்றங்களை அது கொண்டுவருகிறது. இந்த மாற்றங் களின் முழு விளைவுகளையும் அவைக்கு விளக்கிக் கூறமுடியும் என நினைக்கிறேன். ஆனால் அதற்கு ஈடு கொடுக்கும் உடல் வலு எனக்கில்லை. இந்த மாற்றங்களை நான் எவ்வாறு காண்கிறேன் என்பதை வேகமாக விளக்க முற்படுவேன்.

என் கருத்திலும், என் நட்டு மக்களின் மிகப் பெரும்பான்மை யினரின் கருத்திலும், இரு வகை மாற்றங்கள் அதிக தீவிரம் வாய்ந் தவையாகவும் அதிவேகம் கொண்டவையாகவும் உள்ளன; அவை திருமணம், வாரிசு உரிமை பற்றியவையாகும். எனது மாண்புமிகு நண்பர் சமயச் சடங்கு ரீதியான திருமணத்திற்கு சந்தேகமின்றி சட்டத் தொகுப்பில் இடமளித்திருக்கிறார். இந்த மசோதா வரையப்பட்டு, அதற்கு உருவம் அளிக்கப்பட்ட நேரம் வரை திருமணங்கள் எம்முறை யில் ஒப்பந்தம் செய்யப்பட வேண்டுமென்று நிர்ணயிக்க மக்கள் இந்நாட்டின் அரசைக் கோரினார்களா? இந்த மசோதா அறிமுகப் படுத்தப்படும் வரை, மக்கள் திருமணம் செய்துகொள்ளவில்லை என்றோ, நாம் திருமணம் செய்து கொள்வதில் பெருமளவு கஷ்டம் இருந்தது என்றோ யாரும் கூறவில்லை என நினைக்கிறேன். திருமணங் கள் எவ்வாறு செழுமைப்படுத்தப்படலாம் என்பது எனக்குத் தெரிய வில்லை. இந்தத் திருமணங்களுக்கு எனது அடிப்படையான ஆட் சேபனை என்னவெனில் ஒரு திருமணத்தை புனிதத்தன்மை வாய்ந்தது என்று ஒருபக்கம் அது வருணிக்கும் அதே சமயத்தில், இந்த புனிதத் தன்மை எனும் முகமூடியில், புனிதத் தன்மை வாய்ந்த அல்லது புனித சடங்குடன் கூடிய திருமணம் என்று கருதமுடியாத பல விஷயங்களை அது அறிமுகப்படுத்துகிறது. தடை செய்யப்பட்ட இரத்த உறவுத் திருமணத்தைப் பாருங்கள்; சம்பந்தப்பட்டவர்களின் மரபுக் கூறுகளைப்

பாருங்கள். அது சாதி விட்டு சாதி செய்துகொள்ளும் கலப்புத் திருமண மாக இருக்கலாம். சாதிக்கு வெளியிலான திருமணமாக இருக்கலாம் அல்லது ஒரே கோத்திரத்தில் *(சகோத்திரம்)* செய்யும் திருமணமாக இருக்கலாம். அதே சமயம் அது புனித சடங்கு ரீதியான திருமணமாக இருக்கும். புனித சடங்கு ரீதியான திருமணமுறை என்று சொல்லிக் கொண்டே அதே சமயம் சிவில் திருமணமும் (சடங்குகளின்றி) அதிகாரி களால் நடத்திவைக்கப்படுகிறது. இது விசித்திரமாக உள்ளது. இந்துச் சட்டத் தொகுப்பிலேயே இது எவ்வாறு இடம் பெறுகிறது என்று எனக்குத் தெரியவில்லை. முற்றிலும் மாறுபாடான விஷயத்திற்கு இடம் அளித்துள்ளார்கள். புனித ஆசாரத் திருமண முறையில் ஒரு குறிப்பிட்ட வகையான ரத்தக் கலப்புத் திருமணம் தடை செய்யப்படு கிறது; சிவில் திருமணத்தில் முற்றிலும் வேறான வகை உள்ளது. தடுக்கப்படும் ரத்த உறவுத் திருமணங்களின் எல்லை குறுக்கப்படு கிறது. இதனால் பல சமயங்களில் இத்திருமணங்கள் நெருங்கிய உற வினர்களிடையே உடலுறவு வைத்துக்கொள்ளும் திருமணங்களாகி விடுகின்றன. எல்லா விதமான ஒழுக்க நெறி தளர்த்தலுக்கும் சட்ட மீறலுக்கும் நேரடியான உற்சாகமளிக்க நாம் விரும்பினாலன்றி இந்த மசோதாவிற்கு என்ன அவசியம் வந்தது ஐயா, துரதிர்ஷ்ட வசமாக, இந்தப் போக்கு இந்த நாட்டின் இளைஞர்களை ஆட்டிப்படைத்து வருகிறது. இதற்குச் சட்ட பூர்வமான உரிமையை நாம் வழங்கப் போகிறோமா? கேலிப் பேச்சுக்கும் அக்கறையின்மை உணர்வுகளுக் கும் இடம் கொடுக்காமல் ஒரு கடினமான சமூகப் பிரச்சனையை ஆழ்ந்து பரிசீலனைக்கு உட்படுத்தி இந்தக் கேள்விக்கு பதிலளிக்கும் படி மாண்புமிகு எனது நண்பரைக் கேட்டுக்கொள்கிறேன்.

விவாகரத்து விஷயத்தை புகுத்தியதன் மூலம் இந்து விவாகம் என்ற அடிப்படை கருத்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு மிகக் கடுமையான அதிர்ச்சியை பெற்றுள்ளது; இந்து திருமணம் என்ற சிந்தனைகளுக்கு இது மிகவும் ஆட்சேபகரமானது; அருவருக்கத் தக்கது. என்னைப் போன்று தம்மை ஓர் இந்து என்று கூறிக்கொள்ளும் ஒவ்வொருவருக்கும், தம்மை ஓர் இந்து என்று அழைத்துக் கொள்வதில் பெருமை கொள்ளும் ஒவ்வொருவருக்கும் புனிதமானது இந்து திருமணமே அன்றி சிவில் திருமணமல்ல என்பது நன்கு தெரிந்திருக் கும். எனவே, விவாகரத்து என்பது அதன் கண்ணோட்டத்திற்கு முற்றி லும் அன்னியமானது என்பதை ஒப்புக் கொள்வது அவருக்குக் கஷ்டமாக இருக்காது. இந்து சாஸ்திரங்களின்படி, திருமணத்தால் ஒன்றுபடுவது புனிதமானது, மேலும், நிச்சயமாக ரத்து செய்ய முடியாதது. (குறுக்கீடு) என்னுடைய உரையைச் சுருக்கிக் கொள்ள

வேண்டுமென நீங்கள் விரும்பினால், தயவு செய்து முக்கியமான விஷயங்களில் மட்டுமே குறுக்கீடு செய்யுங்கள். குறுக்கீடுகளைப் பற்றி நான் அஞ்சவில்லை; அவற்றிற்கு எவ்வாறு பதிலளிப்பது என்பதை நான் அறிவேன். என் சொந்த வழியிலேயே அவற்றிற்கு என்னால் பதிலளிக்க முடியும். ஆனால் நீங்கள் குறுக்கீடு செய்து கொண்டே இருந்தால், எனது உரை தேவையில்லாமல் நீண்டுபோகும்; மேலும், நான் அளிக்கும் பதில்கள் உங்களுக்கு மகிழ்ச்சியாகவும் இருக்காது.

**திரு. பாபு ராம்நாராயண் சிங்:** அது அப்படித்தான் இருக்க வேண்டும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இந்த நாட்டிலோ அல்லது வேறு எந்த நாட்டிலோ, விவாக ரத்து என்ற முறை எந்த சமுதாயத்தின் நலனுக்காக இருப்பதாகக் கூறப்படுகிறதோ அந்த சமுதாயத்தின் நலனை அது வளர்ப்பதாகத் தெரியவில்லை. மனித சமுதாய இயலின் ஒரு தன்னடக்கமுள்ள மாணவன் என்ற முறையில், திருமண நீதிமன்றங்கள் பற்றிய செய்திகளைப் படிக்கும் சந்தர்ப்பங்கள் எனக்குக் கிடைத்தன. மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர், நீதிபதி **லிண்ட்சே** பற்றிக் குறிப்பிட்டார். அவர் அந்தப் புகழ்பெற்ற நீதிபதி பற்றிக் குறிப்பிட்ட போது, இம்மாதிரி திருமண முறைகளை எதிர்ப்பதற்கு மிகப் பலமான வாதங்களில் ஒன்றை அவரை அறியாமலே அளித்தார் என்பதை எனது நண்பர் இந்த இந்துமதத் தொகுப்பு வகை செய்திருப்பது போல் அறிவாரா என்பது எனக்குத் தெரியாது. (நமது) குடும்ப வட்டத்திற்குள் ஒரு நபருக்கும் அவரது தாயாரின் சகோதரர் மகளுக்கும் அல்லது அவரது அப்பாவின் சகோதரியின் மகளுக்கும் இடையே கல்யாண உறவுகள் ஏற்படுவதை நாம் அனுமதிக்க வேண்டுமா என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனமாகப் பரிசீலிக்க வேண்டுமென விரும்புகிறேன்.

**திரு. எச்.வி. காமத் :** அது சகஜம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** தென் இந்தியாவில் அது சகஜமாக இருக்கலாம்; ஆனால், தென் இந்தயா என்பது இந்தியா முழுவதையும் குறிக்கவில்லை. என்னுடைய முழு வாதம் என்ன வெனில், நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஒரு குறிப்பிட்ட முறை நடைமுறையில் இருக்கிறதென்றால், அதை நாடு முழுவதற்கும் பொருந்த செய்யத் தேவையில்லாமல் முயலக்கூடாது.

தென்னிந்தியாவில் இல்லாத ஒரு மாகாணத்திலிருந்து நான் வந்திருக்கிறேன். அது பின்தங்கிய - கல்வியிலும் பண்பாட்டிலும் பின்தங்கிய - அதை எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள் இருளில் மூழ்கிக் கிடக்கும் வங்காள மாகாணம், அங்கு வாழும் குடும்பங்களின் நிலைமைகளை நான் அறிவேன். வங்காளத்திலுள்ள எந்த வீட்டிற்கும் செல்லுங்கள்; அங்கு மகன்கள், மகள்கள், இயல்பான வாரிசுகள், எல்லாவிதமான உறவினர்களும் - சகோதரிகளின் மகன்கள், உடப் பிறந்தார் மகன்கள், உடன் பிறந்தார்கள் மகள்கள், தாய் மாமன் மகன்கள், மாமாவின் மகள்கள் - எல்லோரும் வலைப்பின்னல்போல் ஒன்றாக ஒரு கூட்டுக் குடும்பத்தில் காப்பாற்றப் படுவதைக் காண்பீர்கள். நல்லொழுக்கம் மற்றும் மதச் செல்வாக்கில் அவர்கள் முறையாகக் கட்டுப்படுத்தப்படுகின்றனர். அநேகமாக எல்லா வீடுகளிலும் இதை நீங்கள் காணலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** கஷ்டம் என்ன?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** கஷ்டம் எங்கு உள்ளது என்று உங்களுக்குச் சொல்கிறேன். தங்களுக்குச் சொந்தக் குடும்பம் எதுவும் இல்லாதவர்களுக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. கஷ்டம் இம்முறையில் ஏற்படுகிறது. சிரமத்தை இங்கு பகிர்ந்து கொள்வதற்காக என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். என் குடும்பத்தில், என் மகன்கள், மகள்கள், அப்பாவின் சகோதரியின் மகள்களும் மகன்களும், அம்மாவின் மகள்களின் மகன்களும் மகள்களும் மற்றும் சகோதரியின் மகள்களும் எல்லோரும் ஒன்றாக வாழ்கிறார்கள்; எனது மகன்களில் ஒருவன் அவன் மைனராகவோ, வளர் இளம் பருவத்தினனாக இருக்கும் போது அவனது அத்தை மகளுடன் நெருக்கமாகப் பழகுகிறான் எனில் - இன்று மனித இயல்பு எவ்வாறு உள்ளது என்பது தெரிந்ததே - இந்த நெருக்கம் வளர்ந்து கலியாணத்தில் முடிவதன் சாத்தியப்பாட்டை தாங்கள் அகற்றுவீர்களா? அவ்வாறு நீங்கள் செய்தால், உங்களை மோசமான வரலாற்று மாணவர், சமூக இயலின் மோசமான மாணவர், மன இயலின் மோசமான மாணவர் என்றுதான் சொல்லவேண்டும். மனிதச் சதையின் அழைப்பு இருக்கவே இருக்கிறது. எந்தச் சட்டமும், எவ்வளவு சர்வவல்லமை பொருந்தியதாயினும், மனித இனத்தின் இந்த இயற்கையான, பலம் வாய்ந்த மனக்கிளர்ச்சியை அழிக்க முடியாது. இரத்த உறவு உள்ளவர்களுக்கிடையே, வீட்டில் உள்ள மிக நெருக்கமான உறவினர்களிடையே, திருமணத்திற்கு நீங்கள் அங்கீகாரம் அளித்தால், சமுதாயத்திற்கு என்ன நேரும் என்று நினைக்கவே நான் பயத்தால் நடுங்குகிறேன்.

நடைமுறைப்படுத்தப்படுவதில்லை. சமுதாயத்தில் சில வட்டாரங்களில் அது இன்றும் நிலவுகிறது என்று வாதிக்கப்படலாம். இங்கு ஓர் எச்சரிக்கை விடுக்க விரும்புகிறேன். பலத்தைப் பயன்படுத்தி அல்லது கட்டாயத்தின் பேரில் அதை உங்களால் ஒழித்துவிட முடியாது. பொது மக்களின் கருத்தை உருவாக்க வேண்டும்; அப்பொழுது இந்தத் தீய வழக்கத்தின் தீங்குகளை இந்த துரதிர்ஷ்டச் சகோதரர்கள் உணர்ந்து அதைக் கைவிட்டுவிடுவார்கள். மாறாக, அவர்களின் தரத்தை உயர்த்தாமல், கல்வி மூலமும் பொது மக்களின் கருத்து மூலமும் விழிப்புணர்வை ஏற்படுத்தாமல், உங்களின் சட்டத்தை அவர்கள் மீது திணிக்கிறீர்கள் என்றால், அவர்கள் மீது அது எத்தகைய பாதிப்பையும் ஏற்படுத்தாது என்பதை உணரும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். எனது மதிப்பிற்குரிய சகோதரி கூறியதுபோல், இன்னொரு மனைவியை வைத்துக் கொள்ளலாகாது எனக் கட்டளையிடும் உருக்குச் சட்டத்தைக் கொண்டது உங்கள் சமுதாயம் என்ற சிலர் கூறுவார்கள். இதற்கு நெற்றியடி போல் பின்கண்ட பதில் வரும்: அப்படியானால் இதை அனுமதிக்கும் வேறு ஒரு மதத்தை நாங்கள் தழுவுவோம். எந்த சமூக இயல் வாதியும், சமூக சீர்திருத்த அக்கறையுள்ள எவரும் இதனைக் கவனத்தில் கொள்ள வேண்டும். பயம் முற்றிலும் ஆதாரமற்ற ஒன்றல்ல. எப்படியும், இந்துச் சட்டத்தைத் தொகுக்க நீங்கள் விரும்பினால், நீங்கள் செய்து முடித்திருக்க வேண்டியதெல்லாம், திருமணத்திற்கு அத்தியாவசியமானவற்றை அதாவது திருமணம் செய்து கொள்ள அதாவது திருமணம் செய்து கொள்ள விரும்பும் தம்பதியரிடையே தேவைப்படும் அவர்களது வயது, அவர்களது மன, உடல் நிலை, தடுக்கப்பட்டுள்ள ரத்த உறவு திருமணங்கள் போன்றவை வரையறுக்கப்பட வேண்டும். சமூகச் சடங்குகள், நிகழ்ச்சிகளில் நம்பிக்கை உள்ளவர்கள் சம்பிரதாய முறையான திருமணத்தைச் செய்து கொள்ளலாம். ஆனால் சிவில் திருமணத்திற்கும் புனித சடங்குமுறைத் திருமணத்திற்குமிடையே திருமணத்தின் அத்தியாவசியங்கள் மாறுபட அனுமதிக்கக் கூடாது. நாட்டில் கலப்புத் திருமணங்கள் அதிகரிக்க வேண்டுமென்ற ஒரு கோரிக்கை எழுந்தால் அதற்கு நான் குறுக்கே நிற்க மாட்டேன். தங்கள் சொந்தச் சாதிகளுக்கு வெளியே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறவர்கள், 1874-ம் ஆண்டு சிவில் திருமணச் சட்டத்தின் ஷரத்துகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். தங்கள் சாதிகளுக்கு வெளியே திருமணம் செய்து கொள்ள அக்கறையுள்ளவர்களுக்கு குறுக்கே இப்பொழுது எதுவும் இல்லை. வேறுபட்ட சாதிகளைச் சார்ந்த இளைஞர்களுக்கும் இளம் பெண்களுக்குமிடையே உண்மையான பற்றுதல் இருந்தால், அவர்கள் திருமணம் செய்து கொள்வதை நிறுத்தவோ தடுக்கவோ நாங்கள் விரும்பவில்லை. இன்றைய சட்டத்தின் படியும் நான் முன்பு குறிப்பிட்ட சட்டத்தின்படியும் அவர்களுக்கு கதவுகள் திறந்திருக்கின்றன. அந்தச் சட்டத்தை நீங்கள்

மாற்றலாம். சில ஷரத்துக்களை நீக்கலாம் அல்லது திருத்தலாம். அதன் மூலம் அந்தச் சட்டத்தின்படி திருமணம் செய்து கொள்பவர் களின் குழந்தைகள் இன்று இருப்பது போல இந்திய மரபுரிமைச் சட்டத்திற்குப் பதிலாக இந்துச் சட்டத்தின் செயல்பாட்டிற்குட்படுவர். அதற்கு எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை; ஆனால், ஒரு இந்துச் சட்டத் தொகுப்பில், புனித சமயச் சடங்கு திருமணத்தை அடுத்து சிவில் திருமணத்தை ஏன் அனுமதிக்கிறீர்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அத்துடன் எந்த சம்பந்தமுமில்லாத இதைச்சட்டத் தொகுப்பிலிருந்து எடுத்துவிட வேண்டும். எல்லோருக்கும் ஒரு தனிச் சிவில் திருமணச் சட்டம் இருக்கலாம்.

ஐயா, எனது சொந்தக் கருத்து என்னவெனில், விவாகரத்து விஷயத்தையும் இதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நீங்கள் வலியுறுத்தினால், நாட்டில் எங்கும் இதற்கு எதிர்ப்பு எழுவதை நீங்கள் எதிர்நோக்க வேண்டிவரும். நம்மில் பொது வாழ்வில் உள்ள மனிதர் களில் மிகப் பெரும்பான்மையினர் போல் நாம் நமது காதுகளில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டால், அதற்காகக் கடுமையான விலையை நாம் கொடுக்க வேண்டியிருக்கும். எப்படியும் ஒரு இந்து என்ற முறையில், நடைமுறைக்கு முரணான விவாகரத்து என்ற கருத்தை இந்து திருமண அமைப்பிற்குள் கொண்டுவருவதை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

இப்பொழுது வாரிசுரிமைச் சொத்து விஷயத்திற்கு வருவோம். இதிலும் புதுமை புகுத்தப்பட்டு உள்ளது; இது விஷயத்தை நான் மிக விரிவாக எடுத்துக் கொள்ளப்போவதில்லை. ஆனால் அங்கும், பண்டைய இந்துச் சட்ட மூலவர்களின் தீர்ப்பில் நாங்கள் முழு நம்பிக்கை உள்ளவர்கள் என்று எனது மதிப்பிற்குரிய சகோதரி திருமதி துர்க்காபாய்க்குத் தெரிவிக்க விரும்புகிறேன். ஆண் - பெண் சமத்துவத்தில் நாங்கள் உறுதியான நம்பிக்கையுள்ளவர்கள்; ஆனால், சகோதரி துர்க்காபாயோ அல்லது அவரது நண்பர்களோ பேசும் அர்த்தத்தில் சமத்துவம் என்பது, வாய்ப்பு அளிப்பதில் சமத்துவம் என்று பொருள் கொள்ள வேண்டும். உடல் ரீதியில் ஆணையும் பெண்ணையும் ஒன்றாகக் கருத முடியாது. எனவே, சமத்துவம் என்பதற்கு வேறு ஒரு அர்த்தம் இருக்கவேண்டும். பெண்கள் தாழ்ந்தவர்கள் என்ற மனப்பான்மை எதுவும் இல்லை. மக்களின் கல்வி பற்றியும் அவர்கள் திருமணம் பற்றியும் பாகுபாடு எதுவும் இல்லை. நமது சாஸ்திரங்கள் பின்வருமாறு கூறுகின்றன:

*''கன்யாப்யேவாம் பலானியா, ஷிக்ஷானியதிகதாந்த் தேயா போராயா விதூஷா, தானா ரத்னா சமன்விதா.''*

இதன் பொருள், புதல்வர்களைப் போலவே புதல்விகளுக்கும் கல்வி அளிக்கப்பட வேண்டும்; உரிய வயது வந்ததும் விலையுயர்ந்த நகைகள் உள்ளிட்ட வரதட்சணையுடன் சரியான மணமகனுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட வேண்டும் என்று சமுதாயத்தில், இந்து சமுதாயத்தில் இவ்வாறுதான் ஆணை இடப்பட்டுள்ளது.

*''யாத்ரா நர்யாஸ்து பூஜ்யாந்தே, ராமான்ந்தே தாத்ரா தேவதா.''*

பெண்களுக்கு மரியாதை தரப்படும் இல்லங்களை கடவுள் ஆசிர்வதிக்கிறார் என்பது இதன் பொருள். இந்து சமுதாயத்தில் பெண்களுக்கு மிக உயர்வான, மதிப்புமிக்க இடம் அளிக்கப்பட்டுள்ளது. சில கடுமையான சட்ட திட்டங்களும் இருக்கலாம் என்பதை நான் மறுக்கவில்லை. எம்முறையில் பெண்கள் நடத்தப்பட வேண்டுமோ அம்முறையில் நடத்தப்படாத கடுமையான நிகழ்வுகளும் உள்ளன. உங்களுடைய முனிவர்களும், ஞானிகளும், சட்ட வல்லுநர்களும், உங்களுக்கு வகுத்துத் தந்த இலட்சியங்களை நிறைவேற்றத் தவறி விட்டால், அவர்களை நீங்கள் குறை கூற முடியாது; ஏனெனில் அவர்கள் உங்களை கைவிட்டுவிடவில்லை. குறை உங்களிடம்தான் உள்ளது. நடைமுறையில் மகாத்மா காந்தியின் லட்சியங்களுக்கு ஒப்ப நடந்து கொள்ள பல சந்தர்ப்பங்களில் தவறிவிடுகிறோம். ஆனால் அதே சமயம் எல்லாக் காலத்திலும் அவற்றை போதனை செய்கிறோம்; எல்லாவற்றிலும் அவர் பெயரைப் பயன்படுத்தகிறோம்; எனினும் அவரது அடிச்சுவடுகளை பின்பற்றத் தவறிவிடுகிறோம். இங்கு தவறு மகாத்மாஜியுடையதல்ல, தவறு நம்முடையது. அவ்வாறே, உங்களுடைய சாஸ்திரங்களையும் சட்டத்தை வகுத்தளித்தவர்களையும் நீங்கள் குறைகூற முடியாது. அவர்கள் மிக உயர்வான பிரமாணங்களை நிறுவியுள்ளனர். அவற்றிற்கேற்ப நீங்கள்தான் நடந்துகொள்ள வேண்டும். நமது தீவிர முயற்சிகள் இருந்தபோதிலும், எல்லா அநீதிகளையும் அல்லது கொடுமையையும் நாம் போக்கிவிட முடியாது. ஏனெனில் மனித நிறுவனங்கள் குறைவற்றவையாக இல்லை. எத்தகைய மனித விவேகமும் எந்த நடைமுறையையும் வகுக்க முடியாது; எந்தச் செயல்முறையின் மூலமும் அல்லது ஸ்தாபனத்தின் மூலமும் சமூக ரீதியின் சாத்தியப்பாடுகளை முற்றிலுமாக அகற்றிவிட முடியாது. இந்த விஷயத்தை ஒளிவு மறைவின்றி அணுகுவோம்; அதை உணர்ந்து கொள்வோம்.

எனது மதிப்பிற்குரிய நண்பர் சொத்தை நிர்வகிப்பது குறித்து கூறினார். சொத்தை மிக நன்றாக நிர்வகிக்கும் பெண்களை தாம் அறிந்துள்ளதாகத் தெரிவித்தார்.

**மாண்புமிகு திரு. என்.வி. காட்கில்** (பணிகள், சுரங்கங்கள் மற்றும் மின்சக்தி அமைச்சர்) : ஆண்களும் கூட.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அதேதான். ஆண்களும் கூட. திருமணமான ஓர் ஆண்கூட இந்த அவையில் இந்த கூற்றுக்கு மறுப்புத் தெரிவிப்பார் என்று நான் நினைக்கவில்லை. வீட்டில் அவள் தான் ஆட்சி செலுத்துகிறாள். அவள்தான் எல்லாமுமே. நம்மில் மிக அதிகம் உயர்வானவள். சட்ட அமைச்சரோ அல்லது அவரது சகாவோ இங்கு எவ்வளவுதான் கர்ஜனை செய்தாலும் - அங்கு பெண்மணிமுன் பணியவேண்டும். அங்கு நீங்கள் ஓர் இரும்புக் கம்பியால் ஆளப்பட வில்லை; ஆனால் ஒரு விசித்திரமான சாட்டையால், மிருதுவான இனிமையான அன்பு இழைகளால் பின்னப்பட்டு கயிற்றால் ஆளப்படுகிறீர்கள்; அது எல்லாக் கடுமையையும் முரட்டுத்தனத்தை யும் அகற்றிவிடுகிறது. ஆண்கள் உற்சாகத்துடன் அவளின் ஆட்சிக்கு கட்டுப்படுகிறார்கள். வீட்டின் ராணி அவள். திருமணமான பலர், ஏன் திருமணமான மிகப் பெரும்பான்மையோர், இதை தயக்கமின்றி ஒப்புக்கொள்வர் என நினைக்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இவ்வாறுதான் நாம் அவர்களை ஏமாற்றியுள்ளோம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இந்தச் சட்டத் தொகுப் பின் மூலம் இப்பொழுது நாம் அவர்களை ஏமாற்றப்போகிறோம். சொத்தின் மீது அவர்களுக்கு உரிமை அளிப்பதன் மூலம் மட்டுமே அவர்களுக்கு மிகச் சிறந்த நீதி அளிக்கப்படும் என்று நீங்கள் கருதுகிறீர்களா? திரு. தலைவரே, இந்து கருத்துக்களின்படி, ஒரு பெண் ஒரு சிறப்பான நிலையை, ஆணுடையதிலிருந்து முற்றிலும் மாறுபட்டதொரு நிலையைப் பெறுகிறாள். சமஸ்கிருத நூல்களைப் படித்த அல்லது அதைப் பற்றி அறிந்துள்ள மதிப்பிற்குரிய உறுப் பினர் எவராவது இந்த உண்மையை மறுக்க முடியுமா?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** சட்ட அமைச்சர் அதை அறிவார்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** அவர் அதை அறிந் திருக்கலாம்; அவர் ஒரு கற்றறிவாளர். நல்லது. இறவாப் புகழ்பெற்ற நமது கவிஞர் காளிதாசரின் சகுந்தலையை எடுத்துக் கொள்ளுங்கள். அந்தக் காவியத்தில் சகுந்தலையின் திருமணத்திற்குப் பின், தனது

கணவரின் ஊருக்கு அவள் கிளம்புகிறாள்; அங்கு ஒரு சுலோகம் வருகிறது; அந்த சுலோகம் பண்டைப் பெருமை உடையது; இந்து சட்டத்தை அளித்த மூலவர்களும் இந்து சமுதாயமும் தமது பெண்ணியத்தை எவ்வாறு கண்டனர் என்பதை அது உங்களுக்கு அளிக்கிறது. சகுந்தலை தனது கணவர் இடத்திற்கு ஆசிரமத்தை விட்டுச் சென்றதும் கன்வ முனிவர் கூறினார்: ''நான் இன்று பெரும் பொறுப்பிலிருந்து விடுபட்டதாக உணர்கிறேன்''.

*''ஆர்த்தோ ஹி கான்யா பராக்கியா ஏவ டாம் ஆத்ய சாம்ப்ரஷ்ய ப்ரதிக்ராஹிதா. ஜதி மமயாங் பிஷாதா ப்ராகாமம் ப்ரத்யார்பித் நியாசா இவன்தாராட்மா.''*

''இந்த எனது இதயம், எனது உள்ள உணர்வு ஒரு பெரும் சுமையிலிருந்து விடுபட்டுள்ளது; அந்த சுமை இறங்கியதன் மகிழ்ச்சியைப் பெறுகிறேன்.'' அந்த சுமை எது? குடும்பத்தில் ஒரு மகள் மற்றொருவருடைய பணத்தை நம்பிக்கையுடன் சேமிப்புத் தொகையாக வைத்திருப்பது போன்றவள்; அந்த நம்பிக்கைத் தொகை அல்லது சேமிப்பு அதன் உரிமையுள்ள சொந்தக்காரரிடம் சேர்க்கப்பட்டதும், பெரும் சுமையிலிருந்து விடுபட்ட உணர்வை ஒருவர் பெறுகிறார். இதே போன்றுதான் சகுந்தலையை அவளது கணவரிடம் சேர்ப்பித்த உணர்வை இன்று நான் பெறுகிறேன் (குறுக்கீடு). காலவரையறைச் சட்டம் அமலில் உள்ள இன்றைய நாட்களைப்பற்றி நான் பேசவில்லை, அத்தகைய சட்டம் நடைமுறையில் இல்லாத நாட்களைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறேன். ''நியாஸா'' என்றால் ஒரு வைப்புத் தொகை அல்லது அடைக்கலப் பொருள் என்று பொருள். மதிப்பிற்குரிய என் நண்பர் டாக்டர் காமத் மேலும் விவரங்களை அறிய விரும்பினால், அதை அவைக்கு வெளியே அவருக்குத் தெரிவித்து முற்றிலுமாகச் சம்மதிக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத் :** ஆனால் நான் ஒரு மருத்துவரல்லவே?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஒரு மருத்துவரை விட மேலானவர்; நீங்கள் மருத்துவர், தத்துவ மேதை, வழக்கறிஞர் மற்றும் சட்டமன்ற உறுப்பினர். உங்கள் பால் எனக்கு உயர்ந்த மதிப்புண்டு. தாங்கள் இனிமையானவர்: எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு சிறந்த தேசபக்தர்.

ஐயா, இளம் பெண்களைப் பற்றிய கண்ணோட்டம் அது. இந்து மதச் சட்டத்தை உருவாக்கியவர்கள் குடும்பத்தில் மகனுக்கு சமமான சொத்து உரிமையை அவர்களுக்கு கொடுக்கவில்லை எனில், அது வெறுப்பினாலல்ல, பிடிக்காததாலும் அல்ல; இளம் பெண் அவளுடைய கணவனுடைய குடும்பத்திற்கு உரியவள்; அவள்தான் பிறந்த

குடும்பத்தின் ஓர் அங்கமாக இனி இருக்கப் போவதில்லை. இதுதான் நிலைமை, எனவே, இது அநீதியோ அல்லது சமத்துவமின்மையோ அல்ல. (நமது) நாட்டின் எந்த ஒரு பாகத்திலும் தந்தையின் சொத்திலிருந்து ஒரு மகள் மகனுக்கு இணையாக பங்கு பெறுவதற்கு வகை செய்யும் இந்துச் சட்ட முறை நிலவுகிறதா என்பதை நான் அறிந்திருக்கவில்லை.

**திரு. பி.ஐ. சோந்தி :** (கிழக்கு பஞ்சாப் : பொது) : அப்படியானால் விமானத்தில் செல்லுங்கள்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** விமானத்தில் போக துவங்கிவிட்டேன். அது முற்றிலும் உண்மை. ஆனால் அங்கும் நிலைமை உகந்ததாக இல்லை. நான் வேடிக்கையாகப் பேசவில்லை. நாடு நம்மைப் பற்றி அதிருப்தி கொண்டுள்ளதாக உணர்கிறேன்; நம்மைபற்றி ஏமாற்றம் அடைந்துள்ளது; சாமானிய மனிதனுக்கு உண்மையில் நாம் எதுவும் செய்ய தவறியதுதான் இதற்குக் காரணம். இதுவரை காஷ்மீர் பிரச்சினை இருந்துவந்தது. அத்தியாவசியப் பொருட்களின் விலைப் பிரச்சினை உள்ளது. துரதிர்ஷ்வசமாக தபால் கார்டு மற்றும் துணியின் விலையை உயர்த்தி நேற்று நாம் ஒரு 'புத்திசாலித்தனமான' காரியத்தை செய்தோம்.

**திரு. தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் மசோதா பற்றிப் பேசுவதோடு நிறுத்திக் கொள்ளட்டும்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** பொருட்களின் விலை உயர்வு, தொழிலாளர் வேலை நிறுத்தங்கள், கம்யூனிஸ்டு அபாயம், அகதிகள் பிரச்சினை முதலியவை நமது அரசாங்கத்தால் சமாளிக்க முடியாத அளவு உள்ளன என்றுதான் கூறுவேன். சமூக சீர்திருத்தச் சட்டத்தைப் படாடோபமாக விவாதிப்பதற்கு, அதுவும் மிக அதிகம் கருத்து வேறுபாடு கொண்ட மசோதாவைக் கொண்டுவருவதற்கு இதுதான் சமயமா? கடுமையான மனக் கசப்பை இது நிச்சயம் தோற்றுவிக்கும். இது ஏற்கனவே அதிகமான கசப்புணர்ச்சியுடன் கூடிய வாக்குவாதத்தை ஏற்படுத்தியுள்ளது. மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு கடிதங்கள் வந்து குவிகின்றன என நம்புகிறேன் (குறுக்கீடு); இந்து எதிர்ப்புக் குழு கல்கத்தா மற்றும் இம்மாதிரியான இதர பல அமைப்புகளிலிருந்தும் கடிதங்கள் வந்துள்ளன. புனாவிலுள்ள பெண்கள் அமைப்பிலிருந்து கண்டனங்கள் எனக்கு வந்துள்ளன. வங்காளத்திலுள்ள பெண்கள் அமைப்பிலிருந்தும் கண்டனங்கள் வந்துள்ளன;

அதன் உறுப்பினர்கள் நாட்டின் மிக உயர் நிலையிலுள்ள மேற்குடியைச் சேர்ந்தவர்கள்: இதற்கு எதிராக ஆட்சேபம் தெரிவிக்காத வழக்கறிஞர் சங்கங்களை நான் அறியேன். இந்த மசோதா சம்பந்தமாக இதுவரை வினியோகிக்கப்பட்ட விவரணங்கள் என்னிடம் உள்ளன. அவற்றை நான் வகைப்படுத்தியுள்ளேன். இந்த சட்டத் தொகுப்புக்கு எதிரான கருத்துக்கள் மிக அதிகம் உள்ளன. நமது பிரதம மந்திரியின் வேண்டுகோளின்படி நாம் ஒன்றுபட வேண்டும் என்ற நிலையில் நாட்டின் பிரச்சினைகளைத் தீர்க்க நமது சிந்தனைகளை ஒருமுகப் படுத்தி, நல்லிணக்கமும் உடன்பாடும் ஏற்படுத்த நமது நேரத்தையும் சக்தியையும் செலவிட வேண்டிய நிலையில், சீர்குலைவுக்கும் ஒற்றுமை இன்மைக்கும், மன வருத்தத்துக்கும், அதிருப்திக்கும் வழிவகுப்பதற்கு நாம் இடம் தரலாகாது. இப்போதைக்கு இந்த மசோதாவை அமல் நடத்துவதைத் தள்ளிப்போட்டால் எதையும் நாம் இழக்கப்போவதில்லை எனக் கருதுகிறேன். இவ்வாறு செய்யவில்லை என்றால் இந்த மசோதாவை ஒவ்வொரு கட்டத்திலும் நான் வன்மையாக எதிர்ப்பேன். இதை ஏன் எதிர்க்கிறேனெனில், இது முற்றிலுமாக தேவையற்ற நடவடிக்கை என்று கருதுகிறேன். மேலும் இம்மாதிரியான சட்டம் கொண்டுவர வேண்டும் என்று நாட்டில் கோரிக்கை எதுவுமில்லை. எல்லாச் சமூகச் சட்டங்கள் விஷயத்திலும் நாம் அவசரம் காட்டாது நிதானமாக நடந்து கொள்ள வேண்டும்; மேலும் சட்டமியற்றுவதன் மூலம் மட்டுமே பெரிய அளவிலான சமூக சீர்திருத்தத்தை நாம் கொண்டுவரமுடியாது. சமுதாயத்திற்குள்ளே ஏற்படுத்தப்படும் பொதுமக்களின் கருத்து பலத்திலிருந்துதான் சீர்திருத்தங்கள் வரவேண்டும். மூன்றாவதாக, இந்த மசோதா மிகவும் ஒழுங்கற்ற முறையில் இந்த அவையில் நிறைவேற்றப்படுவதை நான் விரும்பவில்லை. காரணம் இந்த சட்டப் பேரவை அமைக்கப்பட்டுள்ளபடி, இந்த மசோதாவை இங்கு விவாதித்து நிறைவேற்ற தார்மீக ரீதியில் நான் தகுதி பெற்றிருக்கவில்லை என்று கருதுகிறேன். இந்த மசோதாவை நான் எதிர்ப்பதற்கு மற்றுமொரு காரணம் திருமணம் பற்றிய கருத்தில் மரபுரிமை, வழிவழிச் சொத்து உள்ளிட்ட இந்துச் சட்ட அமைப்பு முறையில் தீவிரமான மாற்றங்களை அது புகுத்துகிறது. தவிரவும், சிவில் திருமணப் பதிவுப் புத்தகம், புனிதச் சடங்குத் திருமணப் பதிவுப் புத்தகம், திருமண அறிவிப்புப் பதிவுப் புத்தகம், திருமணங்களின் தலைமை இயக்குநர், திருமணங்களின் பிரதமப் பதிவாளர், திருமணங்களுக்கான அமைச்சரகம் போன்ற முடிவற்ற, தேவையற்ற சிக்கல்களை இது ஏற்படுத்தும். நான் எதிர்ப்பதற்கு மற்றுமொரு காரணம் நமது குடும்பங்களில் கசப்புணர்வையும், ஒற்றுமையின்மையையும், தகராறுகளையும் தோற்றுவிக்கும்; இவை

சமுதாயத்தின் சிதைவுக்கு இட்டுச் செல்லும். இதை நான் எதிர்ப்பதற்கு மேலுமொரு காரணம்,இது ஜனநாயகத் தன்மையற்றது; ஏனெனில், நாட்டில் மிகப் பெரும்பான்மைக் கருத்து இதற்கு எதிராக உள்ளது. இவற்றின் காரணமாக, எனது முழு பலத்தையும் கொண்டு இந்த மசோதாவை எதிர்ப்பது எனது தார்மீகக் கடமை என்று கருதுகிறேன்.

இந்த சில வார்த்தைகளோடு - ஆம், இந்த சட்டத்தின் பூதாகாரத் தன்மையோடு ஒப்பிடும்போது இவை ஒரு சில வார்த்தைகளே; - இன்னும் சொல்லப்போனால் இதிலடங்கியுள்ள பிரச்சினைகளின் ஆழமான தன்மையுடனும், அது எழுப்பியுள்ள எதிர்ப்புடனும், சமுதாயத்தில் அது எத்தகைய விபரீத விளைவுகளை ஏற்படுத்தும் என்பதுடனும் ஒப்பிடும்போது இவை ஒரு சில வார்த்தைகளே - என் பேச்சை முடித்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன். இந்த சட்டமியற்றலால் ஏற்படும் அபாயத்திலிருந்து சமுதாயத்தை உண்மையில் பாதுகாக்க விரும்பும் எவரும் தங்கள் குரலை எழுப்பாமலும் ஆழமாக விவாதிக்காமலும் இருக்க முடியாது, விஷயம் முழுவதுமாக, நடுநிலை உணர்வுடன் பரிசீலிக்க அவர் நேரத்தை ஒதுக்க வேண்டும். சட்டமன்ற உறுப்பினர்கள் நம்மை தவறான வழியில் இட்டு செல்லாதிருக்கவும் சமுதாயம் சரிவுப் பாதையில், நாசத்தை நோக்கிப் போகாமல் இருக்கவும் அவர்களுக்கு அவர் எச்சரிக்கை செய்ய வேண்டும்.

*__மாண்புமிகு திரு. என்.வி. காட்கில்:__ இந்த மசோதா மீதான விவாதத்தில் பங்கு கொள்ளுமாறு நான் ஒரு வகையில் தூண்டி விடப்பட்டுள்ளேன் என்றுதான் சொல்ல வேண்டும். இந்த மசோதா சந்தேகமின்றி புரட்சிகரமானதுதான். இந்த அவையில் பத்து ஆண்டுகளுக்கும் மேலாக எவருடன் சேர்ந்து பணியாற்றும் கௌரவம் பெற்றுள்ளேனோ அந்த மதிப்பிற்குரிய என் நண்பரின் உரையை மிக அதிக மரியாதையுடன் செவிமடுத்துக் கேட்டேன். அவரை ஏதேனும் பெரிதும் வேறுபடுத்திக் காட்டுகிறதென்றால், அது அவருடைய மெய்யார்வம்தான்; அதற்கு இணையானது அவரது மிகச் சிறந்த சொல் வன்மை. சமூக சீர்திருத்த விஷயங்களில் ஒருவர் நிதானத்துடன் செல்ல வேண்டுமென்பதில் நான் அவருடன் முற்றிலுமாக உடன்படுகிறேன். அது பற்றி எனக்குக் கிஞ்சித்தும் ஐயமில்லை. ஆனால் இந்த மசோதா மெதுவாக நகர்கிறது. இதனால், இது மிக முன்பாகவே

★ அ.நி.வி (சட்டப்பேரவை விவாதங்கள், தொகுதி II, பாகம் II, 1949 மார்ச் 1, பக்கங்கள் 1015 - 20.

நிறைவேற்றப்படவில்லையே என்று எங்களில் சிலர் புகார் செய்தோம். எனக்குத் தெரிந்தவரை, இந்த மசோதாவின் பிரதான ஷரத்துக்கள் இந்த அவையின் முன்னால் அல்லது இதற்கு முந்திய அவையின் முன்னால், வழக்கறிஞர்கள் சங்க உறுப்பினர்கள் உட்பட நாட்டின் முன்னால் எட்டு ஆண்டுகளுக்கும் மேலாக இருந்து வந்திருக்கின்றன. எனவே, இந்த மசோதா இந்த அவையின் அல்லது நாட்டின் முன்னால் திடீரென்று கொண்டுவரப்பட்டிருப்பதாகக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

1945-ல் என்று நினைக்கிறேன்; பொதுத் தேர்தல்களின் போது, சில பிரிவினர் என்னைக் கடுமையாக எதிர்த்தனர்; காரணம் சமூக சீர்திருத்தத்தை நான் பலமாக ஆதரித்தேன்; இந்துச் சட்டம் தொகுக்கப் பட வேண்டும் என்ற நிலையை மேற்கொண்டேன். அந்தத் தேர்தலில் நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன் என்பதும், நான் உங்கள் முன்னால் தற்போது நிற்கிறேன் என்பதும் நான் எனது தொகுதியின் கருத்துக் களைப் பிரதிபலிக்கிறேன் என்பதற்கு எடுத்துக்காட்டாகும்.

இத்தன்மைவாய்ந்த ஒரு சட்ட மசோதாவை நிறைவேற்ற இந்த அவை தகுதி வாய்ந்ததல்ல என்று எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் மைத்ரா ஒரு வாதத்தை முன்வைத்தார். கடந்த பதினைந்து ஆண்டுகளாக இந்த ஆட்சேபத்தை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன். ஒரு சமூக சீர்திருத்த மசோதா அவை முன் கொண்டுவரப்படும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இதே ஆட்சேபனை கிளப்பப்பட்டு வந்திருக்கிறது. முடிவு என்ன என்பது எல்லோரும் அறிந்ததே. சுதந்திர இந்தியாவுக்கு அரசியல் சாசனத்தை இயற்ற இந்த அவை தகுதி பெற்றது என்றால், இந்த மசோதாவை நிறைவேற்ற இது எவ்விதம் தகுதிவாய்ந்ததல்ல என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு தனிப்பட்ட வேண்டுகோளுடன் தனது வாதத்தைப் பலப்படுத்த, மதிப்பிற்குரிய எனது நண்பர் பண்டிட் மைத்ரா, மாண்புமிகு டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்தின் கருத்துகளை மேற்கோள் காட்டினார். நான் மட்டுமல்ல இந்த அவையில் உள்ள ஒவ்வொருவரும் எல்லா வித மரியாதையையும் மாண்புமிகு டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்திடம் வைத்துள்ளோம். எனினும் இந்த அவையின் ஒவ்வொரு உறுப்பினரும் தமது மனச் சாட்சிக்கும், தமது தொகுதிக் கும் எல்லாவற்றிற்கும் மேலாக, இந்த மகத்தான நாட்டிற்கும் கடமைப் பட்டிருக்கிறார்; அது அவர் சட்டப்பேரவை உறுப்பினர் என்பதில் மட்டுமல்ல, இந்து சமுதாயத்தின் புனரமைப்பை நம் கண்முன் நிறுத்து பவர் என்ற முறையிலும், அவர் கடமைப்பட்டிருக்கிறார் என்பதை

மறந்துவிடக் கூடாது. அத்தகையவர் மற்றொருவரின் தனிப்பட்ட கருத்துக்களை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வாராயின் அவர் தமது கடமையிலிருந்து தவறுபவராகிறார். இதை நான் கூறும்போது, எந்த மரியாதைக் குறைவான உணர்வோடும் கூறவில்லை. ஏனெனில் எந்த ஒரு தனி நபர் மீதுள்ள மரியாதையையும்விட எனது கடமை உயர்ந்தது என நான் எண்ணுகிறேன்.

முக்கிய விஷயம் என்னவெனில், இந்துச் சட்டத்தை தொகுப்ப தற்கு நேரம் வரவில்லையா? திருமணம், தத்து எடுத்தல், மரபு உரிமை மற்றும் இந்து சட்டம் என்று பொதுவாக அறிந்தவற்றோடு சேர்ந்த எல்லா மற்ற விஷயங்களின் அமைப்பு முறையில் மாற்றங்கள் கொண்டுவருவதற்கு நேரம் வரவில்லையா? இந்துச் சட்டத்தின் தோற்றுவாய்கள் பற்பல. இதுபற்றி விரிவாக கூற நான் விரும்ப வில்லை; மேலும் இந்த அவையின் நேரத்தை அதிகம் எடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. சட்டத்தை வியாக்கியானம் செய் வதில் ஒரு சீரான தன்மை, சில வரையறைகள் இருக்க வேண்டும் என்பது தெளிவு. சட்டம் தெளிவாக இல்லையெனில், சட்டம் ஒரு சீரான தன்மை கொண்டிருக்கவில்லையெனில் சமுதாயத்தின் ஸ்திரத்தன்மை பாதிக்கப்படும். ஒரு குறிப்பிட்ட வாசகத்துக்கு அரை டஜன் உயர்நீதிமன்றங்களின் மாறுபட்ட விளக்கங்கள் நம்மிடம் இருந்தால், இதற்கெல்லாம் முடிவு கட்டுவதற்கு நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன்.

மேலும், இந்து சமுதாயத்தை ஒழித்துக்கட்ட நாங்கள் முயன்று கொண்டிருக்கிறோம் என்று மதிப்பிற்குரிய எனது நண்பர் குறிப் பிட்டார். எனது உணர்வு என்னவெனில், இந்து சமுதாயத்தோடு நெருக்கமான தொடர்பு உடைய 290 நபர்கள் இங்கு இருக்கிறோம். இங்கு நாம் ஒன்றாகச் சேர்ந்து, நமது கருத்துக்களை வெளியிட்டு, சிறிதளவேனும் உடன்பாட்டிற்கும் இசைவுக்கும் வந்து, இந்து சமுதாயம் மேற்கொண்டு முன்னேறும் வகையில் ஒரு சட்டத்தை இயற்றலாம். மனு, பராசரர், யாக்ஞவல்கியர் ஆகியோர் **ஸ்மிருதி** களை எழுதியபோது, அவர்களுக்கு இந்த அனுகூலம், அதாவது எந்தச் சட்டப் பேரவையும் இருக்கவில்லை. அவர்கள் சிறந்த மனிதர்கள் என்பதில் ஐயமில்லை. சிறந்த மனிதர்களின் இனம் அவர்களுடன் முடிந்துவிடவில்லை. எனக்கு இடது பக்கத்தில் மிகுந்த சிறப்பும் புலமையும் பண்பும் நிறைந்தவரைக் காண்கிறேன்; சில பழைய ரிஷிகளோடு சட்ட மூலவர்களோடு அவரை நான் ஒப்பிடுவது தவறாக இருக்காது. இன்று, அவருடைய சொந்த ஞானம் மற்றும் கல்வி அறிவுடன்

கூட, 290 நபர்களின் ஒத்துழைப்பை அவர் கோருவாராயின், அவர் கரங்கள் பலப்படுத்தப்படும் என்றும், அவரது வேண்டுகோள் நமக்கு ஏற்புடையதாக இருக்கும் என்றும் நினைக்கிறேன்.

அப்படி என்னதான் இருக்கிறது இந்தச் சட்டத் தொகுப்பில்? மரபுரிமைப் பிரச்சினையைத் தவிர நாம் அடிக்கடி கேள்விப்படாத, சாராம்சத்தில் நாம் ஏற்றுக்கொள்ளாத எதுவும் இதில் இல்லை. என் பார்வையில், கருத்து மாறுபாடு கொண்ட இரு முக்கிய விஷயங்கள் இருக்கின்றன. ஒன்று திருமணம்; மற்றது கூட்டு உரிமையை இந்து சட்டத்திலிருந்து எடுத்துவிடுவது. திருமணத்தைப் பொறுத்தவரை இதில் புரட்சிகரமானது எதுவுமில்லை. ஒவ்வொன்றும் மேலும் மேலும் அரசுக் கட்டுப்பாட்டை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் இந்தக் காலத்தில், தேசிய மயமாக்குதல் பற்றி நாம் பேசிக் கொண்டிருக்கும்போது, தனி நபர் அதிகார எல்லைக்குட்பட்ட ஒன்றே ஒன்று திருமணம்.

**திரு. நாசிருத்தீன் அகமது:** அதுவும் தேசியமயமாக்கப்படும்.

**மாண்புமிகு திரு. என்.வி. காட்கில்:** இப்போது இந்த மசோதாவில் ஒரு நடுநிலையான பாதை மேற்கொள்ளப்பட்டுள்ளது. மேற்கு நாடுகளிலிருந்து வரும் ஒரு நாகரிக மனிதன் நமது பிற்பட்ட நிலையைக் கண்டு எள்ளி நகையாடும் வகையில் இந்த அரங்கில் நுழைவதும் வெளியேறுவதும் கட்டுப்பாட்டிற்கு உட்படுத்தப்படுகின்றன. திருமணம் என்பது தம்பதியர் இருவருக்கும் மிக உயர்வான இன்பம் பெற்றுத் தருவதற்கான விஷயம் என்றால் விவாகரத்திற்கான காரணங்களில் ஒன்று உளப்பாங்கின் ஒத்திசையாமையாக இருக்க வேண்டும். இந்த விஷயத்தை நீங்கள் கவனத்தில் எடுத்துக் கொண்டிருக்கிறீர்களா? மசோதாவில் உள்ள விவாகரத்திற்கான காரணங்கள் மிகக் குறுகலானவை. உண்மையில் நான் கூறுகிறேன்: இது மிக மிதமான நடவடிக்கை. ஒரு பைத்தியத்துடனோ, ஒரு தொழு நோயாளியோடோ, ஒரு மனைவி வாழ வேண்டுமென்று நீங்கள் எதிர் பார்க்க மாட்டீர்கள்; **ஸ்மிருதி**களில் உள்ள வகையுரைகளுக்கு மாறாக உள்ள எதுவும் இந்த மசோதாவில் இல்லை. இந்து சமுதாயம் மற்றும் பண்பாட்டின் மேன்மைக்கு பொருந்தாத எதுவும் இதில் இல்லை. நம்மில் மிகப் பெரும்பாலோர் **ஸ்மிருதி**யை அறிவோம். அந்த **ஸ்மிருதி** கூறுகிறது:

**नष्टे मृते प्रव्रजित, क्लीवेच पतिते पतो। पति: अन्यत् तु नारीणाम् विधीयते।**

இந்த **ஸ்மிருதி**யின் மூல வாசகத்திலுள்ள காரணங்கள் இவை. அதற்கு உகந்தாற்போலுள்ள ஏதாவது இன்று இந்து சமுதாயத்தில்

இல்லை எனில், நாம் தேங்கி நின்றுவிட்டதும் முன்னேற்றத்திற்கான இயக்க ஆற்றல் கொண்ட எல்லாத் தூண்டுதல்களுக்கும் செயல் படாமல் நின்றுவிட்டதுமே இதற்குக் காரணம். இந்து சமுதாயத்தில் யார், எந்த அளவுக்குப் பாதிக்கப்படப் போகிறார்கள்? எனது மாகா ணத்தைப் பற்றி பேசுவதானால், 95 சதவிகிதத்தினர் ஏதாவது ஒரு விவாகரத்து முறையைக் கொண்டுள்ளனர் - அது சட்ட ரீதியான விஷய மாக இல்லாமல், வழக்கம் சம்பந்தமானதாக உள்ளது. மக்கள் தொகை யில் இரண்டு அல்லது மூன்று சதவிகிதத்தினரே, மேல் வர்க்கங்களைச் சேர்ந்தவர்களே, இதை எதிர்க்கிறார்கள். நியாயமான பார்வையில் நோக்கினால், கல்வி கற்ற பகுதி முற்றிலுமாக இதற்கு ஆதரவாக உள்ளது.

ஒரு புறத்தில், விவாகரத்து மிக மலிவானதாக ஆக்கப்படக் கூடாது என்பதை ஒப்புக்கொள்கிறேன். உளப்பாங்கின் ஒத்திசை யாமை ஒரு காரணமாக இருக்கக்கூடாது. நடைமுறையில் அவ்வாறு வருமானால், திருமணத்தை ஓர் ஆயுள் தண்டனையாகக் கருதக் கூடாது. எப்படியாயினும் திருமணம் ஒரு தனித்தன்மை பெற்றிருந் தாலும், அதற்கு ஒரு சமூக அம்சமும் உள்ளது. தம்பதியர் இருவரும் உடன்பாடு கொள்ளவில்லையெனில், பின்பு சச்சரவும், கசப்புணர்வும், ஒத்திசைவின்மையும் குடும்ப வட்டத்திற்குள் மட்டும் இருப்பதில்லை. அதற்கு பரந்த பயன்பாடும் பாதிப்பும் இருக்கும்; சமுதாயமும் சுற்றி யுள்ள சுற்றச்சார்பும் பாதிக்கப்படுகின்றன. தாம் நிறைவேற்ற விரும்பும் எந்தச் சட்டமும் அது கருதுகிற பலன்களை பெற்றுத்தரும் திறமை பெற்றிருக்க வேண்டுமென்பது எந்தச் சட்ட மூலவரின் விருப்பம் எனில், இதுகாறும் இருந்த சட்டம் நாம் எதிர்பார்த்த பலன்களை உண்மையில் அளித்தள்ளதா என்பதை நாம் முடிவு செய்ய வேண்டும்.இது நம்மை நாமே உள் சோதனை செய்துகொள்வதாகும். மணவாழ்வில் உண்மையில் மகிழ்ச்சியாக இல்லாதவர்களை அதிலிருந்து வெளிவர ஒரு வழியை நாம் இப்பொழுது ஏற்படுத்து கிறோமெனில், நாம் நமது சமுதாயக் கடமையையே ஆற்றுகிறோம் என்று நினைக்கிறேன்.

திருமணத்தைப் பொறுத்தவரை, வேறுபட்ட சாதிகளைச் சேர்ந்த நபர்களிடையேயான திருமணங்களை நாம் எப்படி ஆட்சே பிக்க முடியும் என்பதை என்னால் சிந்திக்க முடியவில்லை. 1949-ம் ஆண்டில் இங்கு ஒரு நபர் எழுந்து நின்று, வேறுபட்ட சாதிகளைச் சேர்ந்த நபர்களிடையேயான திருமணங்களைச் சட்டரீதியாக ஆக்கக் கூடாது என்று கூறுவார் எனில், அது நமது முற்போக்குக் கண்ணோட்

டத்துக்கு விளைவிக்கும் களங்கமாகும். சுதந்திர இந்தியாவில், ஒரே ஒரு சாதிதான் அதாவது சுதந்திர மனிதர்களின் சாதிதான் உள்ளது என நினைக்கிறேன்; ஒரே ஒரு மதம், மனித நேய மதம்தான் இருக்கிறது. (திரு. **எச்.வி. காமத் :** 'மற்றும் சுதந்திரமான பெண்கள்'). இந்த சீர்திருத்தம் இந்த நாட்டின் முன் நீண்ட காலமாக உள்ளது; இதன் பொருள் இந்து சமுதாயத்தின் சிதைவு என்று கருதுகிறவர்கள் முன்னேற்றத்தின் எதிரிகளேயாவர். என் அபிப்பிராயத்தில், அத்தகைய ஓர் இந்து சமுதாயம் கலைக்கப்பட வேண்டிய சமுதாயமேயாகும். ஒரு மனிதன் ஒரு குறிப்பிட்ட சாதியில் பிறந்தால் அவனைத் தீண்டத்தகாதவன் என்று எப்படி அழைக்க முடியும்? ஒரு துடைப்பத்துடன் பிறந்த ஒரு பையனை நான் ஒருபோதும் கண்டதில்லை. ஒரு பிராமண குடும்பத்தில் ஒரு **யக்னோபவிதாவுடன்** பிறந்த ஒரு பையனை நான் என்றும் கண்டதில்லை; அல்லது ஒரு மார்வாரி குடும்பத்தில் **தரஜா**வுடன் பிறந்த ஒரு பையனை நான் எக்காலத்திலும் கண்டதில்லை.

**जन्मना जायते शूद्र:। संस्कारात द्विजोच्यते वियया याति विप्रत्वं त्रोभि: श्रीतयोच्चतो चवे।**

எல்லோரும் சூத்திரர்களாகத்தான் பிறக்கிறோம். பின், ஒரு மனிதன், கல்விகற்கும் மற்றும் இதர பல சாதனைகள் புரியும் பல்வேறு கட்டங்களையும் கடந்து உயர்ந்த நிலையை அடைகிறான்; அவன் **ஸ்ரேஷ்ட்ரியா** ஆகிறான். இந்து மதத்தின் உண்மையான ஆன்மா இங்குதான் உள்ளது; இங்கும் வெளியிலும் உள்ள நமது பழைய சனாதனிகள் நிரூபிக்க விரும்பும் ஆன்மா அல்ல. இந்த மகத்தான நாட்டின் லட்சியம், அடிக்கடி கூறப்படுவதுபோல, வர்க்கபேதமற்ற சமுதாயத்தை அமைப்பது என்றால், ஒரு சரியான அமைப்பை, சமூக - அரசியல் ரீதியான அமைப்பை உருவாக்கி விரிவுபடுத்த நாம் பாடுபட வேண்டும். எனவே, திருமணம் சம்பந்தமாக இந்தச் சட்டத் தொகுப்பில் அளிக்கப்பட்டுள்ள பரிந்துரைகள் மிகமிக அவசியமென்று கருதுகிறேன்; ஆனால் அவை போதுமானவை அல்ல. ஆனால் சமுதாயவிஷயங்களில் நாம் நிதானமாகவே இருக்க வேண்டும் என்பதில் என் மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் மைத்ராவுடன் நான் உடன்படுவதால், இப்போதைக்கு இந்த நிலையை ஏற்றுக்கொள்ளத் தயாராக உள்ளேன்.

ஒட்டுமொத்தத்தில், அதிகக் கருத்து வேறுபாட்டிற்கு உட்பட்ட பகுதி இந்து சமுதாயத்திலிருந்து கூட்டு உரிமையை அகற்றுவதுதான். இது சம்பந்தமாக மக்களின் கருத்து பற்றி ஏதோ சொல்லப்பட்டது. பத்திரிகைகள் பற்றியும், வழக்கறிஞர் சங்கம் பற்றியும் கூறப்பட்டது. என்னுடைய சொந்த மாகாணத்திலேயே 'தர்ம நிர்ணய மண்டல்'

என்று அழைக்கப்படும் சங்கம் உள்ளது. இந்த மண்டலில், உயர்வான கல்வி கற்ற புலமை மிக்க மனிதர்களை, மகா மகோத்தியாயா தர்க்க தீர்க்க வித்யாவாசஸ்பதிகளைக் காணலாம். அவர்கள் மிக அண்மையில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினார்கள்; மேலும், உத்தேசிக்கப் பட்டுள்ள இந்துச் சட்டத் தொகுப்பைப்பற்றிக் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார்கள்:-

''இப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருக்கும் சட்டப்பேரவைக் கூட்டத் தொடரில், இந்துச் சட்டத் தொகுப்பை நிறைவேற்றுவது பரிசீலனையில் இருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் தற்போதைய சட்டத்தொகுப்பின் வரைவுச் சட்டத்தில் தாராளமயமாக்கல் போக்குக் கடைப்பிடிக்கப்பட்டிருப்பதற்காகத் தர்ம நிர்ணய மண்டல் தனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது. இந்தத் தாராளமயமாக்கலின் செல்வாக்கை கீழ்க்கண்டவற்றை அகற்றுவதில் மண்டல் தெளிவாகக் காண்கிறது:

அ) பூர்வீகக் கூட்டுச் சொத்துக்கும் சொந்தமாகத் தேடிக்கொள்ளும் சொத்துக்குமிடையே உள்ள பாகுபாடு;

ஆ) மகன்களையும் மகள்களையும் மாறுபாடாக நடத்துவது;

இ) பெண்களின் சொத்துரிமையை விளக்குவதில் சட்ட சம்பந்தமான கஷ்டங்கள்;

ஈ) மரபுரிமை விதிகளின் மிதாக்ஷராவுக்கும் தாயபாகாவுக்கும் இடையேயான பாகுபாடுகள்.

இந்த இந்துச் சட்டத்தொகுப்பு இந்தியா முழுவதற்கும் அமுல் நடத்தப் படப்போவதன் மூலம் மேலே சொல்லப்பட்ட சீர்திருத்தங்கள் நீதிமன்ற வழக்குகளை பெருமளவுக்குக் குறைக்கவும், தேசிய உணர்வை வளர்க்கவும், ஒற்றுமை உணர்வை ஏற்படுத்தவும் பெரிதும் உதவும் என மண்டல் நம்புகிறது. வரலாற்றில் இந்தத் திசை வழியில் முதல் முதலாக மேற்கொள்ளப் பட்ட முயற்சி இது என்று மண்டல் நம்புகிறது.

முக்கியத்துவமில்லாத சிற்சில விஷயங்களில் கருத்து வேறுபாடுகள் இருந்தபோதிலும் இந்த சட்டமியற்றும் முயற்சிக்கு மண்டல் உளபூர்வமான ஆதரவு அளிப்பதற்கு காரணம் இதுதான்.''

**திரு. பாபு ராம்நாராயண் சிங்:** அவர்கள் எந்த மக்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறார்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவர்கள் மிகச் சிறந்த கல்வி அறிவாளர்கள், வைதீகர்கள்.

**மாண்புமிகு திரு. என்.வி. காட்கில் :** ஆனால் அறிவொளி வாய்ந்த வைதீகர்கள்.

இப்பொழுது, இந்துக் கூட்டுக் குடும்பப் பிரச்சினையை எடுத்துக் கொள்கிறேன். கால மாற்றங்களோடு ஒரு முற்போக்கான சமுதாயம் மாறவேண்டியது அவசியம் என்றும்,

மாலை 4 மணி

சொத்துக்கும் சட்டத்திற்கும் பொருத்தமான அமைப்புகளை அது உருவாக்க வேண்டுமென்றும் இந்த அவை ஐயமின்றி என்னுடன் உடன்படும் என்று நம்புகிறேன். குடும்ப மகிழ்ச்சியை அளிக்கும் அமைப்பு முறை சொத்து அமைப்பு முறை என்ற ரீதியில் கூட்டுக் குடும்ப முறையின் நல்ல அம்சங்களை உணர்ச்சிவசப்படாமல் மதிப்பீடு செய்ய வேண்டிய காலம் வந்துவிட்டது. இன்றும்கூட, இந்துக் கூட்டுக் குடும்பத்தின் நன்மைகளைப்பற்றி ஒப்புக் கொள்ளத் தக்க வாதங்களை ஒருவர் அளிப்பாரானால், அவர் கூறுவதற்கு செவி சாய்க்க நான் தயார்; ஏனெனில் நான் வரட்டுத்தனம் வாய்ந்தவனல்ல; உண்மைதான் கற்பனையற்றது, ஒருவரின் சொந்தக் கருத்துகளுக்கான தன்மானம் அல்ல.

இப்பொழுது, முதலாவது விஷயத்தை எடுத்துக் கொண்டால், கூட்டுக் குடும்ப ஒழுங்குமுறை குடும்பத்தின் தனிப்பட்ட உறுப்பினர்களுக்கு மகிழ்ச்சியைத் தேடித் தருகிறதா, ஒரு பெரிய குடும்பத்தில் அவர்கள் ஒன்றாக வாழும்போது மருமகள்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது பற்றி நான் பேசவில்லை. நான் பார்த்தது, கேட்டதிலிருந்து, மகிழ்ச்சியையும் இணக்கத்தையும் பொறுத்தவரை, இந்த அமைப்பு பயனும் மதிப்பும் இல்லாததாகிவிட்டது என்பது தெளிவாகத் தெரிகிறது. எப்படியாயினும், இதில் புதியது எதுவும் இல்லை. 32 கோடி இந்துக்களில் ஏற்கனவே 5 கோடிப்பேர் **தாயபாகா** நடைமுறைக்கு உட்பட்டிருக்கிறார்கள்; அந்த ஒழுங்குமுறை நன்றாகச் செயல்படுகிறது என்றால், அது மிக மோசமானது என்று ஒருவரால்கூட சொல்ல முடியவில்லையென்றால், அது பற்றி நாம் அவசியம் சிந்திக்க வேண்டும். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அது முற்றிலும் புதியது). அது புதியது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் எதிர்காலத்திற்காக நாம் காண்கிற சமுதாயம் எது? குடும்பத் தலைவரின் அதிகாரத்திற்குட்பட்ட மாதிரியானதா அது? நீங்கள் புனரமைக்க விரும்புகிற சமுதாயத்தின் திட்டவட்டமான தன்மை என்ன? நான் புரிந்துகொண்டபடி, அந்தஸ்தில் சமத்துவமும், சந்தர்ப்பங்களில் சமவாய்ப்பும் நிலவும் ஒரு சமுதாயமாக அது இருக்கும்; ஏனெனில் இந்த இரு சொற் தொடர்களை வரைவு அரசியல் சாசனத்தின் முகப்புரையில் இணைத்துள்ளோம். முகப்புரைக்கு கூட்டுக் குடும்பச் சொத்து அமைப்பு முறை முரணானது என நினைக்கிறேன்.

எனக்குத் தோன்றும் உண்மையான கஷ்டம் - பல்வேறு உறுப்பினர்களின் உரைகளைக் கேட்ட பின் - மகள்களுக்கு என்ன கொடுக்கப்

பட வேண்டும் என்பதேயாகும். சொத்து உடைமையை அடிப்படையாகக் கொண்ட கூட்டுக் குடும்ப முறை போக வேண்டும்; ஏனெனில் அது செல்வத்தைக் குவிக்கிறது. மக்கள் என்னிடம் பின்வருமாறு கேட்கலாம்: ''நல்லது. அது ஏதாவது நல்லது செய்திருக்கிறதா, இல்லையா?'' அது ஓரளவு நன்மை செய்திருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன்; ஆனால் சொத்து அம்சம் சம்பந்தப்பட்டவரை, சமூக நலம் சம்பந்தப்பட்ட வரை மற்ற மாற்று வகைகள் தோன்றி விட்டன - கூட்டுறவுச் சங்கங்கள், கூட்டுப்பங்கு கம்பெனிகள் முதலியன; அவை அதிக நல்ல பலன்களை அளித்துள்ளன என்பதை அனுபவத்தில் நாம் கண்டுள்ளோம். எனவே அதனிடத்தில் ஏதேனும் ஒன்றை இடம் பெறச் செய்யாமல், நாம் அதை அழிக்கவில்லை; முன்பு இருந்தது போல, நாம் சமுதாயம் முழுவதையும் ஒருமாதிரியான வெற்றிடத்தில் விட்டுவிடவில்லை. பயனுள்ள தன்மையை எது இழந்துவிட்டதோ அதை நீக்கிவிடுகிறோம்; அதனால் புதிய இந்தியா அதிவேகத்தில் முன் சென்று, மிகச் சிறந்த முன்னேற்றத்தை அடையும்.

நான் ஏற்கெனவே கூறியதுபோல, உண்மையான கஷ்டம் மக்களுக்கு கொஞ்சம் பங்கு அளிப்பது பற்றியது; அது பாதியாக இருக்கவேண்டுமா அல்லது அதற்குக் குறைவாக இருக்க வேண்டுமா என்பது போன்ற விவரங்களைப் பின்பு விவாதித்துக் கொள்ளலாம். ஆனால் ஒரு விஷயம் நிச்சயம்: மகள் நிச்சயம் ஏதாவது பங்கைப் பெற வேண்டும். சுதந்திர இந்தியாவில் -

यत्र नार्यस्तु पूज्यन्ते रमन्ते तत्र देवता

என்று மட்டுமே நீங்கள் கூறப்போகிறீர்களெனில், அப்பொழுது அவள் ஒன்று நீதிமன்றத்திற்குச் செல்ல வேண்டும், இல்லையெனில் ஜீவனாம்சம் கோர வேண்டும்; இது நியாயமல்ல என்று கூறுகிறேன்.

எனது கருத்து என்னவெனில், ஆரம்பத்தில் சில கஷ்டங்கள் எழலாம்: புதிய அமைப்பு வரும்போது, புதிய சிந்தனைகள் உருவாகும் போது தன்னைச் சரிசெய்து கொள்வதற்கு சமுதாயம் கொஞ்சம் காலத்தை எடுத்துக் கொள்கிறது. இந்தக் கஷ்டங்கள் பெரியவையா அல்லது சிறியவையா என்பதல்ல கேள்வி: பொருத்தமான கேள்வி என்னவெனில், உத்தேசித்துள்ள புதிய ஏற்பாடு நல்லதா, கெட்டதா என்பதேயாகும். அது நல்லது என்று தாங்கள் திருப்தியடைந்தால், சரி செய்து கொள்வதில் இயல்பாகவே சிறிது கஷ்டம் இருக்கும் இந்தக் கஷ்டம் பற்றி நாம் கவலையே படக்கூடாது.

திருமணம் முடிந்து உடனேயே, மணமகன் தொல்லை கொடுக்க ஆரம்பித்துவிடுவான் அதாவது தனது மனைவி தன்னுடைய பெற்றோர் களிடமிருந்து பெற்ற பாகத்திற்காக வழக்கு தொடுக்க முற்பட்டு விடுவான் என்று கூறப்பட்டது. இது வழக்கறிஞர்களுக்கு மகிழ்ச்சி கரமாக இருக்கும். நல்லது, எந்த அளவு சாத்தியமோ அந்த அளவுக்கு தேசியமயமாக்க நாம் முயன்று கொண்டிருக்கும்போது, அதில் விடுபட்டுப்போன சிறிய பகுதி பெரிய சமுதாய பாதிப்பை ஏற்படுத்தாது - ஒருசிறு பங்கிற்காக மக்கள் நீதிமன்றத்திற்கு செல்லக்கூடும். காலம் செல்ல, பையனுக்கும் பெண்ணுக்கும் விடப்பட்டுள்ளது சிறிதளவு தான் இருக்கும். அது வழக்குகளுக்கு இட்டுச் சென்றாலும் கூட, நாம் நீதியை வழங்க வேண்டாமா? ஒரு நல்ல விஷயம் ஒரு சிலரால் தவறாகப் பயன்படுத்தப்படலாம் என்பதால், எல்லோருக்கும் அதை மறுத்துவிட வேண்டுமென்பதாகுமா? இதை அவை முடிவு செய்ய வேண்டும். பாலினச் சமத்துவம் என்று பொதுவாகப் பேசுவதுடன் நிற்காமல் சொத்து உரிமையில் சமத்துவம் தொடர்ந்து நிலைநாட்டப் படவேண்டும். அதை நாம் செய்யாவிடில், கபட நாடகம் ஆடுகிறோம் என்ற குற்றச்சாட்டை நாம் எதிர்நோக்க வேண்டிவரும்.

மகத்தான இந்து சமுதாயத்திற்கு எல்லாவிதக் கஷ்டங்களும் நேருமென்று மதிப்பிற்குரிய எனது என் நண்பர் பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா தீர்க்கதரிசனமாகக் கூறினார். ஆனால் சென்ற காலத்தில் எப்பொழுதும் இத்தகைய தீர்க்கதரிசிகள் இருந்துள்ளனர் என்பதும் அவர்கள் கூறியது எப்பொழுதும் பொய்த்துப்போயுள்ளது என்பதும் நிரூபிக்கப்பட்டுள்ளது. பல்வேறு கலாசாரங்களைக் கிரகித்துக் கொள்ளும் இணக்கமான தன்மையை இந்து சமுதாயம் பெற்றிருக்கிறது என்பதில் எனக்குக் கிஞ்சித்தும் ஐயமில்லை; காலம் காலமாக அது வெற்றிகர மாக ஜீவித்து வந்திருக்கிறது எனில், சமுதாய விஷயங்களில் வழிநடத்து பவர்கள் அந்தந்தக் காலங்களுக்கு ஏற்ப பொருத்தமான மாற்றங் களுக்கான ஆலோசனைகளைக் கூறி வந்திருப்பதுதான் அதற்குக் காரணம். இந்து சமுதாயம் இதுவரை ஜீவித்திருப்பதன் இரகசியம் இதுவேயாகும். பொதுமக்களின் கருத்துக்கேற்ப சட்டத்தைக் கொண்டு வர செய்யப்படும் முயற்சி இது. சட்டம் இயற்றுவது பொது மக்கள் கருத்தை வலுப்படுத்தி ஒன்றாக்குகிறது; பொது மக்கள் கருத்து அதன் இயல்பில் ஆற்றல் மிக்கதாதலால், இப்பொழுதும் பின்பும் அது முன்னேறிச் செல்கிறது. அது அடிவானம் போன்றது; ஒருவர் அதற்கு அருகில் சென்றால், அது பின்நோக்கி நகர்கிறது. நவீன சமுதாயம், அதன் தன்மையாலேயே வெகுவேகமாக முன்னேறிச் செல்கிறது. எனவே, பொதுமக்கள் கருத்தையும் நாட்டின் சட்டத்தையும் நாம்

ஒரே சீராக்க வேண்டும். அதைச் செய்வதற்கு மற்ற வழிகளும் உள்ளன; ஆனால் அதைச் செய்ய மிக நல்ல, நேர்மையான வழி சட்டமியற்று தலே ஆகும், அந்த திசை வழியை நோக்கிச் செய்யப்படும் முயற்சி இது என நினைக்கிறேன். இது புரட்சிகரமானது என்றாலும் அது திட்ட மிடப்பட்ட புரட்சி; எனவே அது வெற்றியடைவது திண்ணம்.

*திரு. **நசிருத்தீன் அகமது :** எனக்குக் குறுகிய நேரமே உள்ளது (டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஏன்? உங்களுக்கு உரிய நேரம் உள்ளது). நான் கையாளவுள்ள விஷயம் முக்கியமானது. அதனுடன் ஒப்புநோக்கும்போது இது குறைவான நேரம் என்ற பொருளில்தான் கூறினேன். இந்த விஷயத்திற்கு நான் அளித்த சிந்தனையையும் கவனத் தையும் போல் இந்த அவையும் இதற்கு அளிக்கும் என நம்புகிறேன். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இந்த விஷயத்தோடு உங்களுக்கு என்ன சம்பந்தம் உள்ளது). இதில் எனக்கு என்ன சம்பந்தம் உள்ளது என்று என்னிடம் கேட்கப்படுகிறது. நான் கூறுகிறேன், அத்துடன் எனக்கு எல்லா விஷயத்திலும் சம்பந்தம் உள்ளது. நாட்டில் இரு மிக முக்கிய மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஒன்று, நமது வகுப்புவாதத் தன்மையை கைவிடுவது என்று நாம் முடிவு செய்துள்ளோம்; மற்றொன்று, கூட்டு வாக்காளர் தொகுதிகளின் பயன்களை நம் மீது திணித்துக்கொள்வது என்று தீர்மானித்து இந்துக்களில் ஒரு பெரும் பகுதியினர் சிந்திக்கிற அதே வழியில் சிந்திக்க ஒரு முஸ்லீமுக்குள்ள உரிமையை இந்த அவையின் மதிப்பிற்குரிய எந்த கனவானாவது மறுக்க முடியுமா? எப்படியும் இந்துக்களோடு நாங்கள் வாழ்ந்தாக வேண்டும். மேற்கு வங்காளத்தில் அவர்கள் 80 சதவிகிதத்தினர்; அவர் களுடன் நாங்கள் வாழவேண்டும், அவர்களுடன் சிந்திக்க வேண்டும். என்னுடன் நீங்கள் மேற்கு வங்காளத்திற்கு வாருங்கள். வங்காளத்தில் இந்த மசோதாவுக்குள்ள எதிர்ப்பை நீங்கள் கண்கூடாகப் பார்க்கலாம். இந்த மசோதாவுக்கு அங்கு கடுமையான எதிர்ப்பு இருப்பதை பண்டிட் மைத்ரா மென்னயத்தோடு கூறினார்.

**திருமதி ரேணுகா ரே:** எதிர்ப்புக்குச் சமமாகவும் இன்னும் சொல்லப்போனால் அதைவிட அதிகமாகவும் தீவிர ஆதரவும் உள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** என்னுடன் மேற்கு வங்கத்திற்கு வாருங்கள். வைதீகப் பிரிவினர் சார்பில் நான் பேசவில்லை. இந்த

★ அ.நி. (சட்டப்பேரவை) விவாதம், தொகுதி II, பாகம் II, 1949 மார்ச் 1, பக்கங்கள் 1020 - 30.

மசோதாவின் அந்த அம்சம் பற்றி எனக்கு எந்தச் சம்பந்தமும் இல்லை. இந்த அவையில் எழுப்ப என்னிடம் கடுமையான கேள்விகள் உள்ளன; அவை இதுவரை எழுப்பப்படவில்லை. வங்காளத்தில் உள்ள ஆட்சேபம் கடுமையானது; பொது மக்களின் கருத்தை அறிய அங்கு ஒருவர் பயணத்தை மேற்கொள்வாராயின் - (குறுக்கீடு) புத்திசாலித் தனமான மிகவும் அறிவாற்றல் உள்ள பகுதியினர் பற்றி நான் கூறு கிறேன் - அங்க யாரொருவர் சொன்னாலும், மேற்கு வங்காளத்தில் நகரம் நகரமாக, ஊர் ஊராக எவரொருவர் பயணம் மேற்கொண் டாலும் மிக புத்திசாலித்தனமான பகுதியிடமிருந்து, அறிவாளர்களின் பகுதியிடமிருந்து அவர் எதிர்ப்பை எதிர்நோக்குவார். (**மதிப்பிற் குரிய ஓர் உறுப்பினர்:** இதை மதிப்பிற்குரிய உறுப்பினர் செய்ய வில்லை). இந்தக் குறுக்கீடு விஷயத்தை முற்றிலுமாக பரிசீலனை செய்ததன் அடிப்படையில் எழுந்ததல்ல என்று நம்புகிறேன். வழக்கறிஞர் சங்க உறுப்பினர்கள் பிற்போக்கு சிந்தனை வாய்ந்தவர்கள் அல்ல என்பது ஒப்புக்கொள்ளப்படும் என்று பணிவுடன் கூறிக்கொள்கிறேன்...

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** அவர்களில் மிகப் பெரும் பாலோர் வைதீக, பழமை எண்ண வாதிகளாக உள்ளனர்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அவர்கள் வைதீகப் பிரிவினர் அல்ல....

**திருமதி ரேணுகா ரே:** திரு. அட்குல் குப்தாவின் கருத்து பற்றி என்ன சொல்கிறீர்கள்? மிகப் புகழ் பெற்ற வழக்கறிஞர்களில் ஒருவர் அவர்; நாட்டின் பிரிவினைக் குழுவுக்கு காங்கிரஸால் தேர்ந் தெடுக்கப்பட்டவர்.

**திரு. கிருஷ்ணச் சந்திர சர்மா:** வழக்கறிஞர்கள் கருத்து முன் மாதிரிகள்.

**திரு. நசிருத்தீன் அகமது:** குறுக்கீடுகள் இருந்தபோதிலும், அவர்கள் வைதீகப் பிரிவினர்கள் அல்ல. எந்த வழக்கறிஞர் சங்க நூலகத்திற்கும் சென்று பாருங்கள். இந்த மசோதா முழு மூச்சுடன் எதிர்க்கப்படுவதை அங்கு நீங்கள் காண்பீர்கள்....

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஏனெனில், அவர்களது தொழில் போய்விடும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்த மசோதா மூலம் வழக்கறிஞர்களின் தொழிலை அகற்றி விடுகிறீர்கள் என்பதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. உங்களால் நினைக்க முடியாத சிக்கல்களை நீங்கள் புகுத்துகிறீர்கள். மாறாக, வழக்கறிஞர்கள் ஒரு மாறுபட்ட பரிமாணத்தில், ஒரு தொழில் பரிமாணத்தில், கருத்து வேறுபாடுடைய இந்த மசோதாவை அறிமுகப்படுத்தியதற்காக, அவைக்கு நன்றி செலுத்துவர். கல்கத்தா உயர்நீதிமன்றத்தின் நான்கு நீதிபதிகள் - நான்கு அனுபவம் வாய்ந்த இந்து நீதிபதிகள் - அவர்களில் ஒருவர் திரு. பி.கே. முகர்ஜி சமஷ்டி நீதிமன்றத்தை அலங்கரிக்கிறார்; சட்டம் ஏற்கனவே நன்கு நிலைநிறுத்தப்பட்டுள்ளது, சட்டம் நன்றாக அறியப்பட்டுள்ளது என்று அவர் கூறினார். இங்கும் அங்கும் சட்டம் வேறுபட்டிருக்கலாம்; அது பல்வேறுபட்ட காரணங்களால் இருக்கலாம். இதுபற்றி நான் எடுத்துக் கூறத் தேவையில்லை. சட்டம் நன்றாக அறியப்பட்டுள்ளது.

**திரு. ஏ. கருணாகர மேனன் :** சட்டம் அவ்வாறு நிலை நிறுத்தப்பட்டிருந்தால், சட்டம் பற்றிய அறிக்கைகள் ஏன் ஒவ்வொரு வாரமும் வெளியிடப்படுகின்றன?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஏனெனில் மதிப்பிற்குரிய எனது நண்பர் சட்டத்திற்கு அடிப்படையாக உள்ள நுட்பங்களை உணர்ந்து கொள்ளவில்லை என நான் எண்ணுகிறேன். உண்மையில் முன்மாதிரிகள் தேவைப்படுகின்றன. எல்லா சாத்தியப்பாடான வழக்குகளையும் சட்டத்தால் எதிர்பார்க்க முடியாது. எனவே முன் மாதிரிகள் தேவைப்படுகின்றன. அவை கஷ்டங்களை வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன; எதிர்காலத்தில் வழக்குகளை முடிவு செய்ய அவை உதவிகரமாக உள்ளன. முன்மாதிரிகளை மனித சமுதாயம் கைவிட்டதும், குறிப்பாக சட்ட அரங்கில் கைவிட்டதும், அவை புத்திசாலித்தனமான பிராணிகளாக இல்லாமல் போகும். எனவேதான், வைதீகர்களாக இல்லாத வழக்கறிஞர்கள் இந்த மசோதாவை எதிர்க்கின்றனர் என்று கூறுகிறேன்; அவர்களுக்கு உணவு கிடைக்காமல் போகும் என்பதற்காக அல்ல.

**திருமதி ரேணுகா ரே :** வங்காளத்தில் பெண்களுக்கான வரையறுக்கப்பட்ட சொத்து வழக்குகளினால் போய்விட்டால் என்ன நேரும்?

**திரு. நசிருத்தீன் அகமது :** எனது மதிப்பிற்குரிய சகோதரி திருமதி ரேணுகா ரே வங்காளத்தின் பெண்களைப் பிரதிநிதித்துவப்

படுத்துகிறார் என்று நம்புகிறேன். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்;** ஆமாம் அவர் வங்காளத்தின் பெண்களைப் பிரதிநிதித்துவப்படுத்து கிறார்). மேற்கு வங்காளம் முழுவதிலும் அவர் ஒரே ஒரு நட்சத்திரம் தான். எதிர்ப்பதில் குறைந்தது அரை டஜன் நட்சத்திரங்களை மேற்கோள் காட்டலாம் நான்; திருமதி ரேணுகா ரேக்கு சமமாகவே அவர்கள் நன்கு பிரபலமானவர்கள். இந்துக்களின் வாதத்தை முன்வைத்து வழிகாட்டும் ஒரே ஒரு நட்சத்திரம் அவர்.....

**திரு. ஆர்.கே. சித்வர் :** ஒரே ஒரு நட்சத்திரம்.

**திருமதி ரேணுகா ரே:** நௌகாளிக்கும் மற்ற இடங்களுக் கும் சென்ற நூற்றுக்கணக்கான பெண்கள் உள்ளனர். வங்காளத்தில் பல வழிகாட்டு நட்சத்திரங்கள் உள்ளனர்; இந்த சமூகப் பெண் ஊழியர் கள் எல்லோரும் வழிகாட்டு நட்சத்திரங்கள். அவர்கள் எல்லோரும் இந்துச் சட்டத் தொகுப்பை ஆதரிக்கிறார்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது:** எனது மதிப்பிற்குரிய சகோதரிக்கு வழக்குகள் பற்றிய அனுபவம் இல்லை என்று கூறுகிறேன். அவர் சட்டத்தில் வாழவில்லை. அவர் அதில் வாழ்ந்திருந்தால் ஏராளமான சாத்தியப்பாடுகளை கண்டிருப்பார்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** அவரை ஆண் என்று சொல்லாமல் பெண்மணி என்று கூறுங்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** செழிப்படைந்து வருகிற தொழி லுக்கும் .... அவருக்கும் அவளுக்கும் வித்தியாசம் எதுவும் இல்லை. மிக சமீபத்திய அளவுகோல்களின்படி 'அவர்' என்றால் அவளும் உட்படுகிறாள். பெண்மணிகள் இனி 'அவள்' என்று அழைக்கப்படக் கூடாது; அவர் என்றே அழைக்கப்பட வேண்டும்.

வழக்கறிஞர்கள் இந்தச் சட்ட மசோதாவுக்கு எதிராக இருக் கிறார்கள். அவர்களின் குடும்ப அமைதி வெகுவாக பாதிக்கப்படும். அவர்கள் வெகுவாக அதிருப்தி கொண்டுள்ளனர். **மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ''தங்களின் தொழிலைப் பற்றிப் பயப்படுகிறார்களா?''. இல்லை, அவர்களுக்கு அதிக வழக்குகள் கிடைக்கும். வழக்கறிஞர்கள் சார்பாக - அந்தத் தொழிலை சார்ந்தவன் என்ற பெருமை எனக்கு உண்டு - அவர்களின் சொந்த நலன்களுக்காக அவர்கள் இதை வரவேற்க வேண்டும் என்று இந்த அவைக்கு உறுதிகூறுகிறேன்.

*(திரு. எல். கிருஷ்ண சாமி பாரதி : 'தாங்கள் தவறாகக் கூறுகிறீர்கள்').* நான் தவறாகக் கூறவில்லை. மதிப்பிற்குரிய எனது நண்பரை விட நான் அதிக காலம் சட்டத் துறையில் இருந்திருக்கிறேன். வழக்குகளில் பங்கெடுத்துள்ளேன். விவாகரத்து ஷரத்து எல்லையற்ற வழக்காடுதலில் கொண்டுவிடும் பல குடும்பங்களில் முடிவற்ற சிக்கல்களுக்கும் முடிவற்ற கஷ்டங்களுக்கும் இட்டுச் செல்லும்; பெண்களுக்கும் ஆண்களுக்கும் அதிக துயரங்களை அளிக்கும்.

மிக முக்கியமான ஒரு விஷயத்திற்கு நேரடியாக வருகிறேன். இந்த மசோதா பற்றி மிகக் கடுமையான ஒரு படப்பிடிப்பை அவை முன் நான் சமர்ப்பிக்க வேண்டும். சட்டப்பேரவையில் இந்த மசோதா ஏப்ரல் 9-ஆம் தேதி வேகமாக அறிமுகப்படுத்தப்பட்டது. மதிப்பிற்குரிய சகோதரிகள் அந்தக் கட்டத்தில் அதை எதிர்க்க வேண்டாமென்று நம்மிடம் கேட்டுக் கொண்டனர். அது மிக முக்கியமானது என்று கருதப்பட்டதால், அது குறித்து அதிக சர்ச்சை தேவை இல்லை, அது நிறைவேற்றப்பட வேண்டும் என்றனர். எனவே அந்த நாளின் கடைசி நேரத்தில் அது பரிசீலிக்கப்படுவதை அனுமதிக்க நாம் சம்மதித்தோம். இந்துக் கண்ணோட்டத்திலிருந்து நான் எனது ஆட்சேபத்தைக் கிளப்பினேன். முஸ்லீம் கண்ணோட்டத்திலிருந்து நான் எந்த ஆட்சேபத்தையும் கிளப்புகிறேனா? நிச்சயமாக இல்லை. எனது ஆட்சேபம் இந்துக் கண்ணோட்டத்திலிருந்து என்று நான் அறிவித்தது ஆச்சரியத்தையோ சிரிப்பையோ எழுப்ப வேண்டியதில்லை. இந்துப் பார்வையிலிருந்துதான் நான் பேசிக்கொண்டிருக்கிறேன். கற்றறிந்த எனது சகோதரி அன்று கேட்டார்: ''உங்கள் சொந்த சகோதரிகளுக்கு நீங்கள் அளிக்கும் உரிமையை உங்கள் இந்து சகோதரிகளுக்கு ஏன் மறுக்கிறீர்கள்.'' அது மிக அடிப்படையான கேள்வி. நான் பதிலளிக்கட்டுமா? எனது பதில் இதுதான்: வெவ்வேறுபட்ட வகைகளைச் சார்ந்த நபர்களுக்கு ஒரே மாதிரியான உணவைத் தாங்கள் அளிக்க முடியாது. இந்துச் சட்டத்தின் அடிப்படையில் தான் ஓர் இந்துப் பெண்மணியின் நிலையை மதிப்பீடு செய்ய முடியும். அதே போல் முஸ்லீம் சட்டத்தின் அடிப்படையில்தான் ஒரு முஸ்லீம் பெண்மணியின் நிலையை மதிப்பீடு செய்ய முடியும். இந்த அமைப்பு அல்லது அந்த அமைப்பின் விவேகம் பற்றி விவாதிப்பதற்காக நாம் இங்கு இல்லை. இங்கு இரண்டு வகையான உறுப்பினர்களை நான் காண்கிறேன்: சிலர் சைவ உணவு அருந்துகிறவர்கள்; சிலர் அசைவு உணவு அருந்துகிறவர்கள். சைவச் சாப்பாட்டுக்காரருக்கு மாமிச உணவை நீங்கள் அளிப்பீர்களா? சைவ உணவு அருந்துபவருக்கு காய்கறி உணவு அளித்தால், அவருக்குச் சலுகை காட்டுவதாக நீங்கள் குற்றம் சாட்டு

வீர்களா? (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** 'இது என்ன தருக்க ரீதியான வாதமா? விசித்திரமான வாதம்?) எனது சகோதரி திருமதி ரேணுகா ரே என்னிடம் கேட்ட கேள்வி எப்படி தருக்கரீதியாக இருந்ததோ அதேபோல்தான் இதுவும் உள்ளது. இருவேறு வகையான நபர்களுக்கு ஒரே வகையான உணவை தாங்கள் கொடுக்க முடியாது; உண்மை யில் அவர்கள் பிறந்து வளர்ந்த சூழ்நிலையே வெவ்வேறானது. ஏப்ரல் 9ம் தேதி அவையில் மசோதா வேகமாக அறிமுகப்படுத்தப் பட்டது. மாண்புமிகு சட்ட அமைச்சர் பொறுக்குக்குழு அறிக்கையின் ஒரு வாசகத்தை நமக்கு வெளிப்படுத்தினார். பொறுக்குக் குழுவிடம் மசோதா சமர்ப்பிக்கப்படும் முன் அதன் நல்ல அம்சங்கள் எந்தவிதப் பரிசீலனையையும் பெறவில்லை என்ற அப்பட்டமான உண்மையை அவர் அம்பலப்படுத்தினார். அது ஒரு விசித்திரமான அறிவிப்பு. முதலில் மசோதா நன்கு வரையப்பட்டதாகக் கருதப்பட்டது; நல்ல மசோதா என்றும் கூறப்பட்டது. அது ஏப்ரல் 9-ம் தேதி அவசரமாக அமைக்கப்பட்ட ஒரு பொறுக்குக் குழுவுக்கு எடுத்துச் செல்லப்பட்டது; அது சட்ட நுட்ப அல்லது சட்ட அமைச்சகப் பரிசீலனையைப் பெற வில்லை என்று உணரப்படுகிறது. அது ஏன்? நான் கேட்கிறேன்: சட்ட நுட்பம் சம்பந்தமான அல்லது சட்ட அமைச்சரகப் பரிசீலனை பெறாதபோது ஏன் அந்தக் கட்டத்தில் மசோதா அவசரமாக அறிமுகப் படுத்தப்பட்டது? (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அப்போது நாம் ஏப்ரல் 1ஆம் தேதியை நெருங்கிக்கொண்டு இருந்தோம்.) அப்படி இருக்கலாம். ஏப்ரல் 1 ஆம் தேதி நெருங்கிக் கொண்டிருந்ததால் வேகமாகக் கையாளப்பட்டதற்கு அது காரணமாக ஒருவேளை இருக்கலாம். அது மிகுந்த அக்கறைக்குரிய ஒரு பணியாக எண்ணப் படவில்லை. நமது அழகான சகோதரிகளை திருப்திப்படுத்துவதற்காக உணர்ச்சிமயமான ஆவணம் நிறைவேற்றப்பட வேண்டும். மசோதா ''பெண் இனத்தின் மீதுள்ள பரிவால்'' அதிகமாக முடுக்கிவிடப் பட்டதே ஒழிய, விஷயத்தின் தேவைகள் பற்றிய பரிசீலனையினால் அல்ல. முன் என்றுமில்லாதபடியான ஒரு பணியை இலாகா மேற் கொண்டது. மசோதா நன்றாக வரையப்படவில்லை என்றும் அதில் பல குறைகள் உள்ளன என்றும் அது மாற்றி எழுதப்பட வேண்டு மென்றும் அவர்கள் முடிவுக்கு வந்தனர். மசோதா பல்வேறு தனித் தனி அத்தியாயங்களையும், தனி எண்களையும், தனி வரையறைகளை யும் - ஒன்று மற்றொன்றிலிருந்து முற்றிலும் வேறுபட்டது - கொண் டிருந்தது. அது குறைபாடுகளைக் கொண்டுள்ளது என்றும் தொடர்ச்சி யான எண்கள் கொடுக்கப்பட்டு முழு மொத்தமாக எல்லாம் இணைக்கப்பட்டு மசோதா மறு வடிவமைப்புச் செய்யப்பட வேண்டும் என்றும் சட்டப் பேரவை இலாகா கருதியது.

இம்மாதிரியான முடிவுக்குச் சட்டப் பேரவை இலாகா வந்தவுடன், நியாயமாக என்ன செய்திருக்க வேண்டும்? இந்த மசோதாவை வாபஸ் பெற்றிருக்க வேண்டும். அமைச்சரவை ஏற்றுக்கொள்கிற முறையில் ஒரு புதிய மசோதா வரையப்பட்டு, புது மசோதாவாக அறிமுகப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். அதற்குப் பதிலாக, நான் பழக்கப்படாத சட்டங்கள் இயற்றும் முறையில் வரைவு செய்யும் செயல்முறை நடைபெற்றது. இந்தியாவின் மற்றும் உலக நாடுகளின் அரசியல் சட்ட வரலாற்றில், ஒரு மசோதா அறிமுகப்படுத்தப்பட்டு, பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட்ட பின், ஒரு மசோதா தயாரிக்கப்படும் உதாரணத்தை நாம் எங்கும் கண்டதில்லை. முற்றிலும் ஒரு புதிய மசோதாவைத் தயாரிக்க வரைவுக் குழுவுக்கு என்ன அதிகாரம் உள்ளது என்று திரு. ராம்நாராயண் சிங் நேற்று வினவினார். **(மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** 'அது ஒரு புதிய மசோதா அல்ல'): மிகக் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்று காண்பிக்கக் கூடிய துரதிர்ஷ்ட நிலையில் நான் இருக்கிறேன். மாண்புமிகு சட்ட அமைச்சர் நேற்று இந்தக் கேள்விக்கு பதிலளிப்பதை தவிர்த்த போதிலும், இறுதியில், தாம் எந்த மாற்றங்களையும் செய்யவில்லை என்றும், மாற்றங்களைச் செய்தது பொறுக்குக் குழுவினர்தான் என்றும் அவர் ஒப்புக்கொள்ள வேண்டி வந்தது. மாற்றங்கள் கணிசமற்ற மாற்றங்கள் அல்ல, மாறாக அவை மிக முக்கியமானவை, மிகத் தீவிர மானவை என்பதை அவை முன் எடுத்துக் காட்டும் நிலையில் உள்ளேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்னை. பொறுக்குக் குழு பரிசீலித்தது வேறொரு மசோதா, அதற்கு அனுப்பப்பட்ட மசோதா அல்ல என்பதால் மசோதாவை பொறுக்குக் குழுவிற்கு அனுப்ப வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்டு மதிப்பிற்குரிய உறுப்பினர் வாதித்தால், அந்த விஷயம் ஏற்கெனவே அவைத் தலைவரால் தீர்ப்பு அளித்து தீர்க்கப்பட்டது; அந்த விஷயத்தை அவர் வலியுறுத்தத் தேவையில்லை; அவரிடம் வேறு காரணங்கள் இருந்தால், அதை அவர் எடுத்துச் சொல்லலாம்; பொறுக்குக் குழுவிற்கு மசோதா திருப்பி அனுப்பப்பட வேண்டும் என்ற அவரது திருத்தத்தின்மீது அவர் பேசிக் கொண்டிருக்கிறார். ஆனால், அவர் இந்த வாதத்தை வலியுறுத்தினால், அதாவது பொறுக்குக் குழு பரிசீலித்த மசோதா, அவை அதற்கு அனுப்பிவைத்த மசோதா அல்ல என்று வாதித்தால், அதே மசோதாதான் என்று அவைத் தலைவர் அளித்த தீர்ப்பில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (மதராஸ் : பொது): பரிசீலனையை நிராகரிப்பதற்கான ஒரு வாதமாக இது இருக்கலாம்.

**திரு. எல். கிருஷ்ண சாமி பாரதி :** இது அப்படியாயின், விஷயம் இவ்வளவு அதிகமாக விரிவாக விவாதிக்கப்பட்டுள்ள நிலையில் அதற்கு எதிராக அவர் வாதித்தால், அவையின் நேரத்தை அவர் எடுத்துக் கொள்வதாகவே இருக்கும். இந்த அம்சம் நன்றாக விவாதிக்கப் பட்டது; வாதங்கள் முன் வைக்கப்பட்டன. அப்படியிருக்கும்போது அவர் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருக் கிறார். எந்தப் புதிய வாதத்தையும் நாம் கேட்கலாம்; ஆனால் அதே வாதங்கள் அவரால் திரும்பக் கூறப்படுவதை நாங்கள் கேட்கத் தயாராக இல்லையென்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா :** எனது நண்பர் திரு. பாரதி எழுப்பிய ஒழுங்குப் பிரச்சினை சம்பந்தமாக சில வார்த்தைகளை நான் முன் வைக்கலாமா? அவர் கூறினார்: பொறுக்குக் குழுவிற்கு திருப்பி அனுப்பவேண்டுமென்ற தனது திருத்தத்திற்கு மதிப்பிற்குரிய உறுப் பினர் நசிருத்தீன் எழுப்பிய வாதங்களை அவைத் தலைவரின் தீர்ப்பு உள்ளடக்கியுள்ளது என்று. அவைத் தலைவரின் தீர்ப்பிற்கு அவ மரியாதை இல்லாமலே, பொறுக்குக் குழுவிற்கு திரும்ப அனுப்ப தன்னை இட்டு சென்ற காரணங்களை அளிக்க மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினரும் உரிமை பெற்றுள்ளார் என்று உறுதியாகக் கூறுகிறேன். ஒழுங்குப் பிரச்சினை எதுவும் இதில் இல்லை. பொறுக்குக் குழு விற்கு மீண்டும் அனுப்ப சிபார்சு செய்யும் தீர்மானத்தை முன் வைக்க தமது வாதங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறுவது ஓர் உறுப்பின ருக்குள்ள நியாயமான உரிமை.

**அவைத் தலைவர்:** இதில் எந்த ஒழுங்கு பிரச்னையும் இல்லையென நினைக்கிறேன், ஏனெனில் இந்த மசோதா குறித்து மேலும் கருத்துகளைப் பெறும் நோக்கத்தோடு இதனை மீண்டும் சுற்றுக்கு விட வேண்டுமென்ற தமது திருத்தத்திற்கு ஆதரவாக அவர் பேசுகிறார்; இந்த மசோதா எவ்வாறு மாறியுள்ளது, மூல மசோதா எவ்வாறு பொறுக்குக் குழுவில் திருத்தி அமைக்கப்பட்டது என்ற விவரங்களை அவர் முன்வைக்கிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மதிப்பிற்குரிய எனது நண்பரின் உண்மையான கஷ்டம் இதில் இல்லை. நல்ல அறிவாளியான திரு. பாரதி உண்மையான கஷ்டங்களை நன்கு அறிவார் என நம்புகிறேன். எனவேதான், மிகவும் புத்திசாலித்தனமாக அவைத் தலைவரின் தீர்ப்பினால் என்னைத் தடுக்கவிரும்புகிறார் என்று பணிவுடன் கூறிக்

கொள்கிறேன். இந்த அவையில் ஏனைய எல்லோரையும் விட அவைத் தலைவரின் தீர்ப்பு குறித்து மிக உயர்வான மதிப்பை நான் கொண்டிருக்கிறேன். இதனை இங்கே இப்பொழுது நான் தெரியப் படுத்த வேண்டும்.

***பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:*** இந்த விஷயத்துக்கு ஏன் செல்கிறீர்கள்?

***திரு. நசிருத்தீன் அகமது:*** அவை தலைவரின் முடிவை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று மட்டுமே சொல்கிறேன். அதனை ஆராய்வதில் நான் இறங்கவில்லை.

***பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா*** *(பஞ்சாப் : பொது): நீங்கள் அதனை ஆராய்வதிலும் இறங்க வேண்டும்; ஏன் கூடாது?*

***திரு. நசிருத்தீன் அகமது :*** அவை தலைவரின் தீர்ப்பு என்ன? மசோதாவை பரிசீலிப்பது ஒழுங்குமுறையற்றதல்ல என்பதுதான். உண்மையில் அவரது தீர்ப்பு என்னவெனில், பொறுக்குக் குழு உறுப் பினர்களின் முன்னால் பழைய மசோதாவும் இலாகா மசோதாவும் இருந்தன என்றும், அவர்கள் விஷயம் முழுவதையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதுமாகும்; அந்த அடிப் படையில் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது இலாகா மசோதாவே தவிர மூல மசோதா அல்ல என்ற எனது சட்ட ரீதியான ஆட்சேபத்திற்கு சரியான அடிப்படை உள்ளது. தீர்வின் விளைவு அதுதான். அதுதான் தீர்வு. எனது இப்போதைய நோக்கம் என்ன வெனில், பொறுக்குக் குழு உறுப்பினர்கள் முன் மூல மசோதா இருந்தபோதிலும், அவர்கள் முன் இலாகா மசோதா இருந்தபோதிலும் அவர்களிடம் இவ் இரண்டுமே இருந்தபோதிலும், இரண்டையும் ஒப்பு நோக்கி இலாகா மசோதாவில் என்ன வெளிப்படையான இடைச் செருகல்கள் செய்யப்பட்டன என்பதைக் காணும் சந்தர்ப்பம் அவர்களுக்கு இருந்த போதிலும், அவர்கள் அவ்வாறு செய்யவில்லை என்பதைச் சுட்டிக்காட்டுவதுதான். விஷயத்தின் முக்கியத்துவத்தை பரிசீலிப்பதைப் பொறுத்தவரை, அவர்கள் தங்கள் கடமையை அவசரமான முறையில், முறையற்ற முறையில், அக்கறையற்ற முறை யில் செய்துள்ளனர். இதனைத்தான் இங்கு வலியுறுத்திக் கொண் டிருந்தேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** சட்ட அமைச்சரை நீங்கள் வன்முறைக்குத் தூண்டுகிறீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுமாதிரி எதையும் நான் செய்ய மாட்டேன். ஏனெனில், திரு. அகமதுக்கு பதிலளிக்க ஏராளமான வாதங்கள் என்னிடம் உள்ளன.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாண்புமிகு சட்ட அமைச்சர் நிலைமையை நன்கு உணர்ந்துள்ளார் என்று நம்புகிறேன். இலாகா மசோதாவில் என்ன முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டன என்பதை இதற்குள் நிச்சயமாக அவர் அறிந்திருப்பார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரியாது; உறுப்பினர்களின் உரைகளைக் கேட்கவே நான் காத்திருக் கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாண்புமிகு சட்ட அமைச்சர் பின்வருமாறு கூறினார்: ''சில முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டன. ஆனால் நான் எதுவும் செய்யவில்லை. பொறுக்குக் குழுதான் அவ்வாறு செய்தது.'' நேற்று ஒரு குறிப்பிட்ட கேள்வியை எழுப்பி னேன். அன்புடன் அவர் அதற்கு பதிலளித்தார்; அதாவது, அமைக்கப் பட்ட இலாகா குழுவுக்கு எத்தகைய முக்கிய மாற்றங்களைச் செய்ய வேண்டாம் என்று ஆணையிடப்பட்டது? அதற்கு காரணம், தேர்வுக் குழுவின் பெரும்பான்மை உறுப்பினர்கள் கீழ்க்கண்ட திட்டவட்ட மான அறிவிப்பைச் செய்துள்ளார்கள்: 'மாற்றி அமைக்கப்பட்ட வரைவு, மூல மசோதாவின் அடிப்படை அம்சத்தில் தீவிரமான மாற்றங்கள் எதையும் செய்யவில்லை''. இத்தகைய அறிவிப்பு அவரால் பொறுக்குக் குழுவிற்கு அளிக்கப்பட்டது என்று அறிகிறேன்; இந்த அடிப்படையில்தான், மூல மசோதா அவர்கள் முன் இருந்த போதிலும், அதில் நிகர மாற்றங்கள் எதுவும் செய்யப்பட்டுள்ளதா என்று அவர்கள் மிகுந்த அக்கறையுடன் கவனித்து அவற்றை ஒப்பு நோக்கிப் பார்க்கவில்லை.

**திருமதி ரேணுகா ரே:** திரு. அவைத் தலைவரே, ஓர் ஒழுங்குப் பிரச்னை. தேர்வுக் குழுவில் நிகழ்ந்த விஷயங்களை, இம் முறையில் வெளிக் கொண்டு வருவதை அனுமதிக்கலாமா?

***திரு. நசிருத்தீன் அகமது:*** இந்த ஒழுங்குப் பிரச்னை பற்றி, நான் ஏற்கனவே கூறியுள்ளேன்...

***திருமதி ரேணுகா ரே:*** ஐயா, இது ஓர் ஒழுங்குப் பிரச்சினை. இதுபற்றி தாங்கள்தான் தீர்வு செய்ய வேண்டும்.

***திரு. அவைத் தலைவர் :*** ஒழுங்குப் பிரச்சினை எதுவும் இல்லை எனக் கருதுகிறேன். பொறுக்குக் குழு இவ்வாறு நடந்து கொண்டதா இல்லையா என்பது திரு. நசிருத்தீன் அகமதுவின் ஊகம் மட்டுமே. பொறுக்குக் குழு மீதோ அல்லது பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் மீதோ மதிப்பிற்குரிய உறுப்பினர் அவதூறு எதுவும் கூற மாட்டார் எனக் கருதுகிறேன். அவர் அவ ;நு வாதங்களை முன்வைக்கலாம்.

***பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:*** பொறுக்குக் குழு நடந்து கொண்ட முறை அவையின் விமர்சனத்திற்கு நிச்சயம் உட்படும்.

***திரு. நசிருத்தீன் அகமது :*** நான் கூறுகிறேன்....

***பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:*** திரு. அவைத் தலைவரே, தாங்கள் கூறியது சரியே. அவதூறுகள் எதுவும் கூறாமல், அவர் வாதங்களை முன்வைக்கலாம்.

***திருமதி ரேணுகா ரே:*** அவர் அவதூறு செய்கிறார்.

***திரு. அவைத் தலைவர் :*** அதிகபட்சம் கூறவேண்டுமெனில், அவை ஊகங்களே.

***திரு. நசிருத்தீன் அகமது :*** ஐயா, எனது ஊகம் என்னவெனில், மாண்புமிகு அமைச்சர் பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு நிச்சயமாக உறுதியளித்தார்....

***திருமதி ரேணுகா ரே:*** ஐயா, இதை நான் ஆட்சேபிக்கிறேன். இது அவதூறு செய்வதாகும். இந்த ஊகங்கள் அவதூறுகளைக் கூறுவதாகும்.

**திரு. அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினரும் தமது சொந்த ஊகம் செய்து கொள்ள உரிமை பெற்றுள்ளார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, பொறுக்குக் குழுவின் எந்த உறுப்பினரும் இதை உடனே மறுத்துக் கூறலாம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இல்லை; நிச்சயமாக நாங்கள் மறுத்துக் கூற முடியாது. ஆனால், மறுப்பை நீங்கள் விரும்புவதால், பொறுக்குக் குழுவின் உறுப்பினர் என்ற முறையில் மறுக்கிறேன். விஷயம் முழுவதையும் பரிசீலித்தோம்; மேலும் நாங்கள் திருப்தியடைந்தோம்......

**திரு. நசிருத்தீன் அகமது:** தாங்கள் ஓர் அறிக்கை வெளியிடுகிறீர்கள்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஒரு மறுப்பை நீங்கள் விரும்பினீர்கள். நான் மறுக்கிறேன்.

**திருமதி ரேணுகா ரே:** திரு. அவைத் தலைவரே! ஊகங்கள் செய்யப்படுகின்றன; அவதூறுகள் கூறப்படுகின்றன; இதனால் பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் மிக இடர்ப்பாடான நிலையில் வைக்கப்படுகின்றனர்; பொறுக்குக் குழுவில் நடந்த எல்லாவற்றையும் நாங்கள் வெளிக் கொண்டுவர வேண்டியிருக்கும்; இங்கு அவ்வாறு நாங்கள் செய்யக்கூடாது என்று கூறப்படுகிறது.

**திரு. அவைத் தலைவர் :** அமைதி, அமைதி; பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு எதிராக எந்த அவதூறும் கூறவேண்டாம் என மதிப்பிற்குரிய உறுப்பினரை வேண்டிக்கொள்கிறேன்; மசோதா எவ்வாறு மாற்றப்பட்டது என்பது பற்றி வாதங்களை அவர் முன் வைக்கட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஒரு விஷயத்தை விளக்க தேவைப்பட்டாலன்றி மதிப்பிற்குரிய எந்த உறுப்பினர் மீதும் எந்த அவதூறும் கூறமாட்டேன். 30 கோடி மக்களின் விதியைப் பாதிக்கும் வகையில் ஏதாவது நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டால், பொறுக்குக்

குழுவின் உறுப்பினர்கள் ஏதேனும் தவறு செய்தால் அப்பொழுது கண்ணியமான முறையில், கபடமற்ற முறையில் விமர்சனம் செய்வேன். அவையின் எந்த ஓர் உறுப்பினருக்கும் இந்த அளவு உரிமை வழங்கப்பட வேண்டும். நான் செய்வது தவறு என்றால் அதைத் திருத்திக்கொள்வேன். அவதூறு செய்வதற்கென்றே அவதூறு செய்ய மாட்டேன். மசோதாவின் நல்ல அம்சங்களைப் பாதிக்கும் சில தீவிர மாற்றங்களையும் தவறான நடைமுறைகளையும் எடுத்துக் காட்டுவதோடு நிறுத்திக் கொள்வேன். அதை விவாதிக்கும்போது தவிர்க்க முடியாதபடி பொறுக்குக் குழு உறுப்பினர்களை விமர்சிக்க வேண்டிவரும். பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் ஒரு விவா தத்தைக்கண்டு ஏன் பயப்பட வேண்டும்?

**திருமதி ரேணுகா ரே:** விவாதத்திற்கு நாங்கள் பயப்பட வில்லை. பொறுக்குக் குழுவில் என்ன நடந்தது என்பதை எடுத்துச் சொல்ல எங்களுக்கு உரிமை அளிக்கப்பட வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இது விஷயத்தில் பொறுக்குக் குழுவின் புனிதம் பல சமயங்களில் உடைக்கப்பட்டுள்ளது.

**திரு. மகாவீர் தியாகி** (ஐ.மா. : பொது) : இதில் புனிதம் எதுவும் இல்லை. இதை நாம் விவாதிக்கலாம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இது குறித்து விவாதிக்க நாங்கள் தயாராக இருக்கிறோம்.

**திரு. மிகிர்லால் சட்டோபாத்யாயா** (மே. வ. பொது) : இம்மாதிரி உரையாடல்கள் நடத்த உறுப்பினர்கள் அனுமதிக்கப்பட வேண்டுமா, ஐயா?

**அவைத் தலைவர்:** அமைதி, அமைதி, எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உரையாற்றுபவர் அவரது வாதத்தை தொடர்ந்த முன்வைக்க தயவு செய்து மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அனுமதிப்பார்கள் என நம்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** குறிப்பிட்ட சில விஷயங்கள் ஏன் நடைபெற்றன என்பதை விளக்கிக் கூறும்படி திரு. துணைத் தலைவர் டாக்டர் அம்பேத்கரை நேற்று கேட்டுக் கொண்டார். அது, தமது

எதிரிகள் தமது நண்பர்களையும் பயன்படுத்தி ஒன்றுசேர்ந்து செய்த தனால் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இது பொறுக்குக் குழுவின் இரகசியங்கள் என்று அழைக்கப்படுவதை வெளியிடுவ தாகாதா?

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப் பினரைக் குறுக்கீடு செய்ய நான் விரும்பியதே இல்லை. ஆனால் மசோதாவில் சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளதால் அது மறுபடியும் சுற்றுக்கு அனுப்ப வேண்டும் என்பது அவரது தீர்மானம் என்பதை தங்கள் கவனத்திற்கும் அவைத் தலைவர் கவனத்திற்கும் கொண்டு வருவது எனது கடமை என்று இப்பொழுது நினைக்கிறேன். அந்தத் தீர்மானத்தின் சாராம்சம் என்னவெனில், என்ன மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன என்பதை எந்தவிதமான முன் விவாதமும் இல்லாமல், நேரடியாக எடுத்துக்காட்ட முற்படுவதுதான் எனக் கருதுகிறேன். இதை அவரிடமிருந்து தெரிந்துகொள்ளக் காத்துக் கொண்டிருந்தேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** சம்பந்தப்படாத விஷயங்கள் எழுப்பப்பட்டவுடன் நான் செய்யவிருந்தது இதுவே.

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை; இந்த கேள்வி இந்த அவை உறுப்பினர்களின் உரிமைகளைப் பாதிப்ப தாகும் என்று தாழ்மையுடன் கூறிக்கொள்கிறேன். நம்முன் உள்ள கேள்வி இதுதான்: நடைமுறை சம்பந்தமாக, பொறுக்குக் குழு உறுப் பினர்களின் தவறான நடத்தை, செயல்பாடு பற்றி விமர்சனம் செய்ய அவையின் உறுப்பினர்களுக்கு உரிமையில்லையா? ஒரு மசோதா பொறுக்குக் குழுவின் முன் வைக்கப்படுகிறது என்றும், குழு பரிசீலித்த அந்த மசோதா அதற்கு அனுப்பப்பட்டதல்ல என்றும் மற்றொரு மசோதா மாற்றீடு செய்யப்பட்டுள்ளது என்றும் வைத்துக் கொள் வோம். இது பற்றிக் கூற அவையின் உறுப்பினர்கள் உரிமை பெற்றி ருக்கவில்லையா? பொறுக்குக் குழுவின் இந்தச் செயலை அவையின் உறுப்பினர்கள் விமர்சனம் செய்ய முடியாதா? இது பற்றித் தங்களது தீர்ப்பை வழங்கலாம். பொறுக்குக் குழுவில் என்ன நடந்திருந்தாலும் அதை வெளிப்படுத்துவதை அனுமதிக்காமல் இருக்கலாம். ஆனால் நடவடிக்கைகள் எம்முறையில் நடத்தப்பட்டன என்பது விமர்சனத் திற்கு உட்பட வேண்டியதாகும், இல்லையெனில், ஒரு மசோதா மீது அவையின் உறுப்பினர்களுக்கு எவ்விதமான கட்டுப்பாடும் இல்லாமல் போகும். ஒரு மசோதா அவையில் அறிமுகப்படுத்தப்பட்டதும், அது

அவையின் சொத்தாகிவிடுகிறது; பொறுக்குக் குழுவின் முறையற்ற செயல்களைச் சுட்டிக்காட்ட ஒவ்வொரு உறுப்பினருக்கும் உரிமை உண்டு.

**அவைத் தலைவர்:** இது ஒழுங்குப் பிரச்னை அல்ல. பேசுபவர் தொடரட்டும்.

**மாண்புமிகு திரு. கே சந்தானம்** (ரயில்வே, போக்குவரத்து இணை அமைச்சர்) : பொறுக்குக் குழுவை விமர்சிக்கவோ அல்லது கண்டிக்கவோ கூட அவைக்கு உரிமை இருக்கிறது. ஆனால், அதன் முன்னால் உள்ள மசோதா, அதன் பரிசீலனைக்கு அனுப்பப்பட்ட மசோதா அல்ல என்று கூற அவைக்கு உரிமை கிடையாது என்று நான் கூறலாமா? பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப்பட்ட மசோதா இது அல்ல என்று அவை கூற முடியாது. தனது கடமையை பொறுக்குக் குழு செய்யவில்லை என்று அதை அவை கண்டிக்கலாம். நம் முன்னால் அறிமுகப்படுத்தப்பட்டு பரிசீலனையில் இருக்கும் மசோதாவை அதற்கு அறிமுகப்படுத்தப்பட்ட மசோதா அல்ல என்று நம்மால் கூற முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** பொறுக்குக் குழுவைக் கண்டிப்பதே என் நோக்கம் : இதற்கு மேல் எதுவும் இல்லை என்று பணிவுடன் கூறிக்கொள்கிறேன்.

**அவைத் தலைவர்:** பொறுக்குக் குழுவிலிருந்து வெளிவந்த மசோதாவை மதிப்பிற்குரிய உறுப்பினர் விமர்சனம் செய்வதற்கும், அதில் செய்யப்பட்டுள்ள மாற்றங்களைச் சுட்டிக் காட்டுவதற்கும் அவருக்கு முழு உரிமை உண்டு. ஆனால் மசோதாவில் செய்யப்பட்டுள்ள மாற்றங்கள் பற்றிய தமது கருத்துக்களை வெளியிடுவதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** சில மாற்றங்கள் குறிப்பாக சில முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டதை அவைக்கு சமர்ப்பிக்கப் போகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவற்றைச் சுட்டிக்காண்பியுங்கள். செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றி தெரிந்து கொள்ள காத்திருக்கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் தமக்குத்

தேவையான நேரத்தை எடுத்துக் கொள்ளலாம். மாற்றங்கள் எவை என்பதை அவர் நமக்குச் சொல்லட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** எனக்கே உரிய முறையில் தொடர் வேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் அம் மாதிரி செய்ய முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** மூல மசோதா திரு. ஜோகேந்திர நாத் மண்டலால் அறிமுகப்படுத்தப்பட்டது. அச்சிட்ட தேதி 1946 ஆகஸ்டு 1-ம் தேதி என்று அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப்பட்ட மசோதா இதுவே. 1948 ஆகஸ்டு 16-ஆம் தேதி அச்சிடப்பட்ட் மசோதா பொறுக்குக் குழுவிலிருந்து அறிக்கை யுடன் வெளிவந்தது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, இதில் விஷயம் என்ன?

**திரு. நசிருத்தீன் அகமது :** அதற்கு நான் வருகிறேன். இரண்டு மசோதாக்களுக்குமிடையே தீவிரமான முரண்பாடுகள் உள்ளன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதைத் தெரிந்து கொள்ளத்தான் நாங்கள் காத்திருக்கிறோம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** மிகவும் நன்றி. சரி இனி விஷயத் துக்கு வருகிறேன். மூல மசோதாவுக்கும் பொறுக்குக் குழுவின் அறிக்கையுடன் இணைக்கப்பட்ட மசோதாவுக்கும் இடையே முக்கிய மான முரண்பாடுகள் உள்ளன. (குறுக்கீடுகள்). என்னுடைய உரையை விரைவிலேயே முடித்துக்கொள்ளச் செய்யும் வழியல்ல இது. இந்த இரு மசோதாக்களுக்கும் இடையே பெரிதும் பயனுள்ள ஓர் ஆவணம் வெளிவந்தது. அது இலாகாவின் வரைவு; அது 1948 ஜுலை 17-ல் அச்சிடப்பட்டது. இரண்டுக்கும் இடையே வந்தது இந்த வரைவு மசோதா. இந்த அவையில் எழுப்பப்பட்ட எல்லா ஒழுங்குப் பிரச்னைக ளும் விவாதிக்கப்பட்டது இந்த இலாகாவின் வரைவு பற்றியதே. இப்பொழுது நடைபெறும் விவாதத்திலும், மாண்புமிகு சட்ட அமைச்சரை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தேனாகில், இந்த இலாகா மசோதாவைப் பற்றி அவர் எதுவும் குறிப்பிடவில்லை,

ஆனால் எல்லா மாற்றங்களும் பொறுக்குக் குழுவால் செய்யப்பட்டவையே அன்றி தம்மால் அல்ல என்று கூறினார். நான் 1948 ஜூலை 17 தேதியிட்ட மசோதாவைக் குறிப்பிடுகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி :** பொறுக்குக் குழுவின் கூட்டத்திற்கு முந்திய தேதியாகும் அது.

**திரு. நசிருத்தீன் அகமது :** அச்சிடப்பட்ட தேதி அதாவது ஜூலை 1948, பொறுக்குக் குழு முதல் முறை கூடுவதற்கு அழைக்கப்பட்ட தேதிக்கு முன்னால் இந்த மசோதா.....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அது அவ்வாறு தான் இருக்க முடியும் என்று கூறி மதிப்பிற்குரிய எனது நண்பரின் வாதத்தைச் சுருக்க விரும்புகிறேன். மறுவரைவு பொறுக்குக் குழுக் கூட்டத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்பு அனுப்பப்பட்டது.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் குறிப்பிட்டுக் கொண்டிருந்த விஷயமும் அதுதான். இதனை ஒப்புக்கொண்டதற்காக நன்றி கூறக் கடமைப்பட்டு இருக்கிறேன். பொறுக்குக் குழு கூடுவதற்கு முன் இந்த வரைவு பூர்த்தியாக்கப்பட்டிருந்தது. அந்தக் கட்டத்தில் இது பற்றி அவைக்கு தெரிவிக்கப்படவில்லை என்று கூற விரும்புகிறேன். மூல மசோதாவை முழுமையாக மாற்ற சபையின் அங்கீகாரம் பெறப்படவில்லை.

**திரு. மகாவீர் தியாகி:** நடுவில் இருப்பது அறிக்கையோடு இணைக்கப்பட்டதுடன் ஒத்ததாக இருந்ததா?

**திரு. நசிருத்தீன் அகமது:** சில மாற்றங்கள் இருந்தன. பொறுக்குக் குழு ஒரு சில மாற்றங்களையே செய்தது; ஆனால் முக்கியமான மாற்றங்கள் இலாகாவால் செய்யப்பட்டது; பொறுக்குக் குழு அதை ஒருபோதும் அறிந்திருக்கவில்லை.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** மாற்றங்களைக் கொண்டுவந்தது பொறுக்குக் குழு, இலாகா அல்ல.

**திரு. நசிருத்தீன் அகமது :** மிக முக்கியமான விஷயம் என்னவெனில், இலாகாவின் வரைவை அவர்கள் ஒருபோதும் விரிவாக

பரிசீலனை செய்யவில்லை. மாறாக பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப் பட்ட ஒரு மசோதா முற்றிலும் மாற்றி வரையப்பட்ட மற்றொன்றால் ஈடு செய்யப்பட்டு அதனுடன் சேர்த்து வைக்கப்பட்டது. இதுதான் நடந்த உண்மை. இந்தியாவின் அல்லது இதர நாடுகளின் சட்ட மியற்றும் வரலாற்றில் இதுபோன்று நடந்திருப்பதற்கான ஒரே ஓர் உதாரணத்தையாவது மாண்புமிகு என் நண்பர் திரு. சந்தானம் காட்ட முடியுமா?

**மாண்புமிகு திரு. கே. சந்தானம் :** பல பொறுக்குக் குழுக் களில் நான் இருந்திருக்கிறேன். பல சந்தர்ப்பங்களில், மூல மசோதா பொறுக்குக் குழுவால் முற்றிலுமாக மறு வரைவு செய்யப்பட்டிருக் கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது :** அது வேறு விஷயம்.

**அவைத் தலைவர் :** மாண்புமிகு சட்ட அமைச்சர் அளித்த வரைவையும் சேர்த்து பொறுக்குக் குழுவால் மூலமசோதா பரிசீலிக்கப் பட்டது என்று அவைத்தலைவர் தீர்ப்பு அளித்துள்ளார் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு நான் சுட்டிக்காட்டலாமா? அந்த முடிவின் காரணத்தால், பொறுக்குக் குழுவில் மூல மசோதா எவ்வாறு மாற்றம் அடைந்துள்ளது என்ற விஷயத்தோடு அவரது வாதத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். பொறுக்குக் குழுவில் என்ன நடந்தது என்பன போன்ற மற்ற விஷயங்கள் உறுப்பினரின் உரிமை எல் லைக்கு அப்பாற்பட்டவை.

**திரு. நசிருத்தீன் அகமது :** பொறுக்குக் குழு மூல மசோதாவை யும் இலாகா வரைவையும் பரிசீலித்து, இந்த முடிவுக்கு வந்துள்ளது என எடுத்துக் கொண்டாலும், மிகவும் கவனமற்ற முறையிலும் மோசமான முறையிலும் இவ்வாறு செய்யப்பட்டுள்ளது என்பதுதான் எனது வாதம். மூல மசோதாவையும் இலாகா வரைவையும் பரிசீலித்து இந்த முடிவுக்கு வந்ததாகக் கூறப்பட்டாலும் இந்த முடிவு பெரிதும் கவனமற்ற முறையிலும் அவசர கோலத்தில் அறைகுறையாகவும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இலாகா மசோதாவில் அறிமுகப்படுத்தப் பட்டுள்ள தீவிர மாற்றங்கள் அவர்களைப் பெரிதும் கவர்ந்திருக்கும் என்று நினைக்கிறேன்; அவர்கள் முன்வைக்கப்பட்ட மாற்றியமைக்கப் பட்ட வரைவின், சௌகரியமாக தயாராக வைக்கப்பட்ட வரைவின் மயக்கும் செல்வாக்கின் கீழ் முழுமையாக அவர்கள் இருந்திருக்க

வேண்டும். பொறுக்குக் குழு உறுப்பினர்கள்பால் உள இயல்பான தாக்கத்தை அது ஏற்படுத்தியிருக்க வேண்டும்; அதனால் பொறுக்குக் குழு, அவர்களுக்கு உரிமை இருந்த போதிலும், பெருமளவில் இலாகா வரைவை சார்ந்திருந்தார்கள்; இது இறுதி மசோதாவின் நல்ல அம்சங் களைப் பாதிக்கிறது - சட்ட ரீதியாக இல்லாவிட்டாலும்.

நான் கூறுவது என்னவெனில், ஏராளமான மாற்றங்களைச் செய்ய பொறுக்குக் குழுவிற்கு உரிமை இருக்கிறது; ஆனால், முற்றிலும் மாற்றப்பட்ட ஒரு புது மசோதா பொறுக்குக் குழுவின் கரங்களில் வைக்கப்படுகிறது; பிறகு அந்த புது மசோதாவைப் பரிசீலிப்பார்கள்; இம்மாதிரி ஒருபோதும் நிகழ்ந்ததில்லை. சம்பிரதாயப்படி அவர் களிடம் மூல மசோதா இருந்தாலும், புது மசோதாவை பிரிவு பிரிவாக அவர்கள் பரிசீலித்தனர். அது தகுதியைப் பொறுத்த விஷயம். இலாகா வின் மசோதா புகுத்தப்பட்டது, மசோதாவை நியாயமாகவும் பாரபட்சமற்ற முறையிலும் பரிசீலிப்பதில் ஒருதலைச் சார்பை ஏற்படுத்தியது. மூல மசோதா, பிரிவு, பிரிவாகப் பரிசீலிக்கப்பட்டு, மாற்றங்கள் படிப்படியாக மூல மசோதா வாசகங்களில் கொண்டு வந்திருக்கப்பட வேண்டும். அதற்குப் பதிலாக, இலாகாவின் மசோதா அவசியமாக எடுத்துக் கொள்ளப்பட்டது - ஓரத்தில் மூல மசோதாவின் பிரிவுகள்பற்றி குறிப்புகள் அளிக்கப்பட்டிருந்த போதிலும் பொறுக்குக் குழுவின் உறுப்பினர்களுக்கு எந்த அவ மரியாதையும் இல்லாமல், இலாகாவின் மசோதாவில் எவ்வளவு ஏராளமான மாற்றங்கள் செய்யப்பட்டன என்பதை ஓர் உறுப்பினரால் சரியாகப் பார்க்க முடியாது என கூறுகிறேன் நான்; இது இறுதி மசோதாவின் தகுதிகளைப் பாதித்துள்ளது என்று நான் கூற விரும்பு கிறேன். பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு எந்த மாற்றங்களைச் செய்யவோ அல்லது இலாகா மசோதாவை ஏற்றுக் கொள்ளவோ அல்லது மூல மசோதாவை பரிசீலனை செய்யவோ உரிமை இல்லை என்று நான் ஒருபோதும் கூறவில்லை. மரியாதையுடன் மீண்டும் கூறுகிறேன், மேலெழுந்த வாரியாக பணி செய்யப்பட்டது என்று கூறுகிறேன்; பொறுக்குக் குழுவின் பணி இலாகா வரைவுடன் சார்ந்து இருந்திருக்க வேண்டும். இலாகாவின் வரைவு பரிசீலிக்கப்பட்டு, இப்போதைய மசோதாவின் தகுதிகளை பரிசீலிக்க வேண்டும்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** வேறுபடும் எல்லா விஷ யங்களையும் நாம் பார்க்கலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** சட்டமியற்றுதல் முழுவதுமே பிழையுடன் துவங்கியது என்று பணிவுடன் கூறுகிறேன். பிழையிலிருந்து பிழைக்கு, மிகப் பெரிய பிழைக்கு நாம் செல்லுகிறோம். தவறு முதலில் 1937-ல் ஏற்பட்டது. பின்னர் ஒரு தவறு மற்றொரு தவறுக்கு இட்டுச் சென்றது; அந்தத் தவறு மற்ற தவறுகளுக்கு இட்டுச் சென்றது; இந்தத் தவறுகள் வழியில் பொறுக்குக் குழு சென்றது; இறுதியாக.... (குறுக்கீடு). நான் பேசும்போது இவ்வாறு குறுக்கீடு செய்யப்பட வேண்டுமா என்று திரு. கிருஷ்ணசுவாமி பாரதியை மிக அக்கறையுடன் கேட்கிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** அவைத் தலைவரை நோக்கி மதிப்பிற்குரிய உறுப்பினர் பேசினால், குறுக்கீடு மிகக் குறைவாக இருக்குமென நினைக்கிறேன்.

திரு. நசிருத்தீன் அகமது: 1937-ம் ஆண்டில் ஒரு மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டது. அது திருமணமான இந்து மகளிருக்கு சொத்தில் உரிமை வழங்கும் சட்டம், 1937 என்பதாகும் என்பதையும் தாங்கள் பரிசீலிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அது அவசரப்பட்டு இயற்றப்பட்ட சட்டம் எனக் கூறுகிறேன். அது நன்கு ஜீரணிக்கப்படாத, சரியாகப் புரிந்து கொள்ளப்படாத சட்டத்தை தன்னுள் உட்கொண்டிருந்தது; அதுதான் இந்தத் துன்பத்திற்கெல்லாம் இட்டுச் சென்றது. உண்மையில் இந்த மசோதாவைத் தயாரித்தவர் டாக்டர் தேஷ்முக். டாக்டர் தேஷ்முக் - நமது இப்போதைய டாக்டர் தேஷ்முக் அல்ல என்பதை அறிய மகிழ்ச்சியடைகிறேன் - இந்து சமுதாயத்திற்கு நல்லது செய்வதாக நினைத்துக் கொண்டு இந்த மசோதாவை அறிமுகப்படுத்தினார். இந்த மசோதாவின் விளைவு என்னவெனில், மரபுரிமைச் சட்டத்தில் சில மாற்றங்களைக் கொண்டு வர வேண்டியிருந்தது. இந்துச் சட்டத்தின்படி நான் அதைப் புரிந்து கொண்டபடி - ஒரு மனிதன் இறந்தால், அவருடைய வாரிசுகள் மகன், பேரன், கொள்ளுப்பேரன் ஆவர். மகன் இருக்கும்போது ஒரு மறைந்த மகனின் மகன் சொத்துரிமை பெறுகிறான்; தனது மறைந்த தந்தையை பேரன் பிரதிநிதித்துவப்படுத்தி தன் தந்தையின் பங்கை எடுத்துக் கொள்கிறான். எனவே இம்மாதிரியாக, மகன், பேரன், கொள்ளுப் பேரன் ஆக மூன்று தலைமுறையினர் சொத்தை வாரிசு உரிமையாகப் பெறுகின்றனர். விதவைக்கு திட்டவட்டமான அந்தஸ்தையும், திட்டவட்டமான உரிமையையும் அளிக்க வேண்டும் என்ற கருத்தால் டாக்டர் தேஷ்முக் உந்தப்பட்டார். எனவே அவர் மரபுவழி முன்னவரின்

விதவையை ஒரு பங்கு பெறுபவராக்கினார்; மரபுவழி முன்னவரின் விதவை மட்டுமின்றி, இறந்துபோன மகளின் விதவை, இறந்துபோன பேரனின் விதவை, இறந்துபோன கொள்ளுப்பேரனின் விதவை ஆகியோரையும் பங்கு பெறுபவர் ஆக்கினார். பங்குதாரர்கள் வட்டத் திற்குள் கூட அவர்களும் உட்படுத்தப்பட்டனர். அந்த மசோதாவின் கர்த்தா மிக உயர்ந்த தேசபக்த உணர்வும் சமுதாய நல உணர்வும் கொண்டிருந்தாலும், அது சரியாகப் பரிசீலிக்கப்படாதது என்று கூறு கிறேன். மேலும் ....

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** மிகச் சிறந்த இந்துச் சட்ட நிபுணரான அமரர் சர் என்.என். சர்க்காரால் இந்த மசோதா ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பதைத் தெரிவிக்க மதிப்பிற்குரிய எனது நண்பர் விரும்புவாரா?

**திரு. நசிருத்தீன் அகமது:** நான் எடுத்துக் காட்ட விரும்பு கிறேன்: அவர் மட்டுமல்ல நானும் ஏற்றுக் கொண்ட காலம் இருந்தது (குறுக்கீடு). அவையின் கட்டுப்பாட்டில் நான் இருக்கிறேன்.

**அவைத் தலைவர் :** இந்துச் சட்டத்தின் திருத்தங்களின் வரலாறு பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் எடுத்துக் கூறுகிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்து திருமணமான மகளிர் சொத்துரிமைச் சட்டம் முதல் தவறு எனக் கூறுகிறேன், அதற்குள் மற்ற தவறுகளின் விதைகள் இருந்தன என்றும் இந்த மசோதாவில் அவை வந்து முடிந்துள்ளன என்றும் கூறுகிறேன்.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** அன்று நிலவிய சட்டப்பேரவையை இழிவுபடுத்துவதாகும் இது.

**திரு. நசிருத்தீன் அகமது:** சட்டப்பேரவையே தவறை ஒத் கொண்டது. அது ஒரு தவறு என்று சட்டப் பேரவையே ஏற் கொண்டது. அது தவறு என்று ஒப்புக்கொண்ட சட்டப்பேரவை வாசகங்களை மேற்கோளாக என்னால் காண்பிக்க முடியும். (குறுக்கீ

**அவைத் தலைவர் :** அமைதி, அமைதி.

**திரு. நசிருத்தீன் அகமது :** தவறு எவ்வாறு ஏற்பட்டதெ

எடுத்துக் கூற விரும்புகிறேன். கொள்ளுப்பேரன்.... மறைந்த மகனின், பேரன், விதவைக்கும் பங்கு அளித்தது மகளின் நிலை முற்றிலும் நிச்சயமற்றதாகிவிட்டது. அந்த சமயத்தில், இந்தச் சட்டத்தின்படி மகளின் நிலை என்ன என்பதை யாரும் தெரிந்திருக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மகள் என்ற பதத்தை எடுத்துவிட ஒப்புக் கொண்டால்தான் அரசாங்கம் சட்டம் இயற்றும் நடவடிக்கையை ஆதரிக்கும் என்று கூறி எனது நண்பர் டாக்டர் தேஷ்முக்கிடமிருந்து திரு. என்.என். சர்க்கார் வாக்குறுதி பெற்றார். அதன்படி 'மகள்' என்ற வார்த்தையை எடுத்துவிட அவர் (டாக்டர்தேஷ்முக்) ஒப்புக்கொண்டார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிந்த அளவு அந்தச் சட்டத்தின் வரலாறு பற்றி நான் அறிவேன்.

**திரு. அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் அதிக நேரம் எடுத்துக்கொள்ளப் போகிறாரா?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஆம், ஐயா!

**திரு. அவைத் தலைவர் :** அப்படியாயின், அவர் தமது உரையைப் பின்பு தொடரலாம். இப்பொழுது நாம் ஒத்திவைப்போம்.

*(சட்டப் பேரவை, 1945 மார்ச் 3-ம் தேதி செவ்வாய்க் கிழமை ...த்தே முக்கால் மணிக்கு ஒத்திவைக்கப்பட்டது.)*

---

## *இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்கிறது.

**திரு. துணை அவைத் தலைவர்:** கீழ்க்கண்ட குழுக்களுக்கு வேட்பு மனுக்கள் பெறுவதற்கும், தேவைப்பட்டால் தேர்தல் நடத்துவதற்கும் பின்வரும் தேதிகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்:

| | வேட்பு மனுக்கான தேதி | தேர்தலுக்கான தேதி |
|---|---|---|
| 1. தொழில் நுட்பக் கல்விக்கான அகில இந்தியக் கவுன்சில் | 2-4-49 | 5-4-49 |
| 2. ரயில்வே கன்வென்சன் வேலை செய்வது பற்றி திறன் ஆய்வுக்கான குழு | 2-4-49 | 5-4-49 |

இதற்காக குறிப்பிடப்பட்டுள்ள தேதியில் மதியம் 12 மணி வரை விளம்பர அலுவலகத்தில் வேட்பு மனுக்கள் பெறப்படும். ஒற்றை மாற்று வாக்கு சீட்டு முறைப்படி தேர்தல்கள் கவுன்சில் மாளிகையின் துணைச் செயலாளர் அறையில் (எண். 21) காலை 10-30 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை நடைபெறும்.

---

## இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்கிறது

**திரு. துணை அவைத் தலைவர் :** 1948 ஆகஸ்டு 31-ல் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கரால் முன் மொழியப்பட்ட கீழ்க்கண்ட தீர்மானத்தை மேற்கொண்டும் பரிசீலிக்க அவை இப்பொழுது தொடர்கிறது :-

> ''இந்துச் சட்டத்தின் சில கிளைகளை திருத்தவும், தொகுக்கவும் செய்யும் மசோதாவை பொறுக்குக் குழு அறிவித்துள்ளபடி பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.''

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** (மேற்கு வங்காளம் - பொது) : ஐயா, மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. நசிருத்தீன் அகமதுவை அவரது உரையை தொடரும்படி நீங்கள் அழைப்பதற்கு முன்,

---

★ அ.நி.ச. (சட்டப் பேரவை) விவாதங்கள், தொகுதி III, பாகம் II, 1949 ஏப்ரல் 1, பக். 2211-43.

வழக்கமற்ற முறையில் இந்தத் தீர்மானம் அவ்வப்போது அவை முன் கொண்டுவரப்படுவதை தங்கள் கவனத்திற்கு மீண்டும் கொண்டு வர வேண்டுமென்ற கட்டாயத்திற்கு ஆளாகியிருக்கிறேன். நேற்று வரை இந்த மசோதா மீண்டும் பரிசீலனைக்கு வருகிறது என்பதை நம்மில் மிகச் சிலரே அறிந்திருந்தனர் என நினைக்கிறேன். உண்மை என்னவெனில், அவசரமான அரசாங்க அலுவல்கள் அதிகமாக இருந்ததால் அதற்காக எந்த நாளையும் நிர்ணயிக்க முடியவில்லை என்று அவை கருதியது: இந்த விஷயம் மீதான விவாதத்தில் கலந்து கொள்வதற்காக இங்கு வந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள், இந்தக் கூட்டத் தொடரில் இந்த விஷயம் எடுத்துக் கொள்ளப்படப் போவதில்லை என்ற கருத்து நிலவியதால், பல உறுப்பினர்கள் திரும்பிச் சென்றனர். அவையில் அதிக நேரம் பேச விரும்பிய, பண்டிட் கோவிந்த மாளவியா இந்த விஷயம் வரப்போவதில்லை என்று அவருக்குக் கூறப்பட்டபோது....

**மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள்:** யாரால் அவ்வாறு கூறப்பட்டது?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இதைப் பெரும்பாலானவர்கள் அறிவர். இது இந்த அவையின் ஒரு சாதாரண அலுவலல்ல. அரசாங்கத்தின் எந்த ஓர் உறுப்பினரும் எழுந்து, ''இது விவாதிக்கப்படும் என்று நான் உறுதியளிக்கிறேன்.'' என்று கூறுவதில்லை. கட்சிப் பேச்சுக்களிலும் மற்ற இடத்திலும் ஒவ்வொருவரும் தெரிந்து கொண்டது இந்தக் கூட்டத் தொடரில் இது வரப்போவதில்லை என்பதேயாகும். அப்படி இருக்கும்போது, அது இப்பொழுது எடுத்துக் கொள்ளப்பட்டால் அவைக்கு மரியாதை கொடுத்ததாகாது. இந்த மசோதா அத்தகைய கருத்து வேறுபாடுகள் கொண்ட தன்மையது என எண்ணுகிறேன்; இப்பொழுது செய்யப்படுவதுபோல - பல்வேறு கட்டங்களில் திரும்பத்திரும்பச் செய்யப்பட்டது போல் - இது தொடரப்படுவதை நீங்கள் அனுமதிக்கக்கூடாது. அவையின் முன் நான் வைக்கும் கருத்தை ஐயா, பரிசீலிக்க வேண்டியது தாங்களே. அவையில் உறுப்பினர் எண்ணிக்கை குறைவாக உள்ளது; வரவு செலவு அறிக்கையின் மீதான விவாதம் முழுவதும் முடிந்துவிட்டது; மிகப் பெரும்பான்மையான உறுப்பினர்கள் இத்தகைய கருத்து கொண்டு இருப்பது நியாயமே. மாற்றம் பற்றிய எண்ணம் எதுவும் அவர்களுக்கு இல்லாத போது இந்தக் கடைசிக் கட்டத்தில் திடீரென மாற்றம் கொண்டுவந்து ஆச்சரியப்படுத்துவது நியாயமாகாது எனக் கருதுகிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ஐயா, இதில் தங்கள் முடிவை நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

**துணை அவைத் தலைவர்:** ஆனால், இதில் ஒழுங்குப் பிரச்சினை எதுவுமில்லை.

**திரு. மகாவீர் தியாகி** (ஐ.மா.: பொது) : அப்படியானால், எவ்வளவு நேரத்திற்கு விவாதங்கள் நடத்த உத்தேசிக்கப்பட்டுள்ளது என்ற தகவலை அறிய விரும்புகிறேன். இந்து சட்டத் தொகுப்பு மசோதா பரிசீலனைக்கு எப்பொழுது வருகிறது என்று தெரிவிக்கும்படி என் மாகாணத்திலுள்ள எனது நண்பர்கள் என்னைக் கேட்டுக் கொண்டனர். இன்றா, நாளையா அல்லது வேறு ஒரு நாளா அல்லது கூட்டுத் தொடர் முடியும்போதா எப்போது மசோதா பரிசீலிக்கப்படும் என்று எனக்குத் தெரியாததால், அவர்களுக்கு நான் தகவல் கொடுக்க முடியவில்லை. எனவே, ஐயா, இந்த மசோதாவை எவ்வளவு நேரம் நாம் விவாதிக்கப்போகிறோம் என்று அவைக்குச் சொல்ல தங்களால் முடியுமா; நேரம் இருந்தால், நான் அவர்களுக்குத் தெரிவிக்க முயலலாம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** பண்டிட் மைத்ரா என்ன சொன்னாரோ அதில் எனக்கு முழு உடன்பாடு உண்டு; ஆனால் இதற்கு எந்த வழியையும் என்னால் காண முடியவில்லை. எனக்குத் தெரிந்தவரை - இந்தச் சட்டப் பேரவையில் பல ஆண்டுகள் இருந்திருக்கிறேன் - பல நபர்கள் அக்கறை கொண்டுள்ள இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த எந்த விஷயமும் எடுத்துக் கொள்ளப்படும்போது, அடுத்த வாரத்திற்கான நிகழ்ச்சி நிரல் முந்திய வெள்ளியன்றாவது, படிக்கப்படும். அத்தகைய நடைமுறைக்குத்தான் நான் பழக்கப்பட்டிருக்கிறேன். இந்த மசோதாவுக்கு நேரம் இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லை என்பது தெளிவு; ஆனால், ஒரு நாள் நீட்டிக்கப்பட்ட பொழுது இன்றைக்கும் நாளைக்கும் நேரம் இருப்பது தெரிய வந்து நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட்டுள்ளது. அதனால்தான் முன் அறிவிப்பு கொடுக்க முடியவில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தந்திகள் முதலியவற்றின் மூலம் இதர உறுப்பினர்களை வரவழைப்பதற்கு இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்வார்கள் என நம்புகிறேன். எனவே திரு. தியாகியைப் பொறுத்தவரை, வெளியில் இருக்கும் மற்ற உறுப்பினர்கள் அவை நடவடிக்கைகளில் அக்கறை கெண்டிருக்கிறார்கள் என்று அவர் நினைத்தால், அவை நடவடிக்கைகள் வானொலியில் இன்று மாலையோ அல்லது நாளைக்காலையோ ஒலிபரப்பப்படும்; அப்பொழுது அதுபற்றி அவர்கள் அறிந்துகொள்வார்கள்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அவர்கள் நாளைக் காலை எப்படி வரமுடியும்?

**திரு. துணை அவைத் தலைவர் :** அவர்கள் விமானத்தில் வர முடியலாம். அவர்கள் எவ்வாறு வரமுடியும் என்பது பற்றி திரு. அவைத் தலைவர் முடிவு செய்ய முடியாது. என்னால் கூற முடிவது எல்லாம் இத்தன்மை வாய்ந்த ஒரு முக்கியமான விஷயத்தில், அரசாங்கம் முறையான அறிவிப்புக் கொடுத்திருக்க வேண்டும். ஏனென்றால் பொது மக்கள் இதில் மிகுந்த அக்கறை கொண்டுள்ளனர். மாகாணங் களிலிருந்தும் சமஸ்தானங்களிலிருந்தும் பெரும் எண்ணிக்கையில் உறுப்பினர்கள் இங்கு இல்லை. அவ்வாறு அவர்கள் இருந்திருந் தாலும் திடீர் அறிவிப்பில் எல்லா நூல்களையும் அவர்கள் ஒவ்வொரு வரும் படிப்பார்ளென்றோ, பயன்படுத்த எல்லா தகவல்களையும் வைத்திருப்பார்களென்றோ எதிர் பார்க்க முடியாது. இவை பாதகமான அம்சங்கள்; ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் சந்தர்ப்பத்தை அதிகப்பட்சம் பயன்படுத்துவர் என உறுதியாக நம்புகிறேன். விவாதம் எவ்வளவு நேரம் நடக்குமென்று - இன்று மாலையே முடிவுறலாம் அல்லது நாளை வரை நடைபெறலாம் - யாரும் உத்திரவாதம் அளிக்க முடியாது.

**திரு. டி.ஏ. ராமலிங்கம் செட்டியார்** (சென்னை : பொது) : இந்த மசோதாவுக்கு நிகழ்ச்சி நிரல் யாது?

**திரு. துணை அவைத்தலைவர் :** அது முற்றிலுமாக அவை யின் பொறுப்பு, நாம் நிகழ்ச்சி நிரலை வைத்துக் கொள்ள முடியுமென நான் நினைக்கவில்லை. விவாதத்தைத் தொடர்வது அவசியமா என்பதை பார்த்துக் கொள்ள வேண்டியது அவைதான்; போதுமான விவாதம் நடந்தால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முடிக்கலாம்.

**திரு. மகாவீர் தியாகி :** ஐயா, கேள்வியை வேறு முறையில் முன் வைக்கிறேன். அரசாங்கத்திற்கு வேறு எந்த மசோதாவும் இந்த கூட்டத் தொடரில் பரிசீலனைக்கு இருக்கிறதா அல்லது நம் முன் உள்ள ஒரே பணி இந்த மசோதா மட்டுமா என்பதை நான் அறிந்து கொள்ளலாமா? அப்போது இந்த மசோதா விவாதம் எத்தனை நாட்கள் நடைபெறும் என்று என்னால் முடிவு செய்ய முடியும்.

**துணை அவைத் தலைவர்:** இது சம்பந்தமான நிகழ்ச்சி நிரலை உறுப்பினர் பார்பாரேயாகில், அலுவல்கள் மிக அதிகம் இருப்பதைத் தெரிந்து கொள்வார். இன்றைக்கு முதல் மசோதா இது என்பதில் சந்தேகமில்லை, ஆனால், பட்டியலில் உள்ள மற்ற மசோதாக்கள் எடுத்துக்கொள்ளப்படும். இந்த விஷயத்தில் நாம் மேலும் அதிக நேரம் செலவழிக்க வேண்டிய அவசியமில்லை.

திரு. நசிருத்தீன் அகமது.

**திரு. பி. தாஸ்** (ஒரிஸ்ஸா : பொது): உரைகளுக்கு நேர வரம்பைத் தாங்கள் தீர்மானிப்பீர்களா?

**திரு. துணை அவைத் தலைவர்:** இத்தகைய கருத்து வேறுபாடு கொண்ட விஷயத்தில் எந்த நேர வரம்பையும் நான் நிர்ணயிக்க முடியாது. தலைவர் நாற்காலியில் நான் அமர்ந்திருக்கும் வரை - அவைத் தலைவர் மேலும் நன்றாகச் செய்வார் - திரும்பத் திரும்பக் கூறுவதை தவிர்க்க முயல்வேன். நான் செய்யக் கூடியது அதுதான். இந்த விஷயத்தில் சம்பந்தமில்லாதவற்றைக் கொண்டுவருவதைத் தவிர்க்க பெரும் முயற்சி எடுத்துக் கொள்வேன். எவ்வளவு அதிகம் சுதந்திரம் கொடுக்க முடியுமோ அதைக் கொடுக்க விரும்புகிறேன்.

***திரு. நசிருத்தீன் அகமது** (மேற்குவங்கம் முஸ்லீம்) : திரு. அவைத் துணைத்தலைவர் அவர்களே! விதியின் கேலிக்கூத்தைப் பாருங்கள்! இந்த மசோதா மீது விவாதங்கள் விட்டு விட்டு செய்யப் பட்டிருக்கின்றன; எவ்வளவோ இடைவெளிக்குப் பின் முட்டாள்கள் தினத்தில் விவாதம் மீண்டும் துவங்க வேண்டுமென அரசாங்கம் முடிவு செய்துள்ளதை வேறு எப்படிச் சொல்வது? மிக அவசரத்தில் மசோதா பொறுக்குக் குழுவுக்கு சென்ற ஏப்ரல் 9-ம் தேதி அனுப்பப் பட்டதாக நான் சுட்டிக்காட்டிக் கூறியபோது, ஏப்ரல் 9ஏப்ரல் 1க்குப் பக்கத்தில் இருப்பதாக மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் ஞாபகப் படுத்தினர். எப்படியாகிலும், இந்த மசோதா ஏப்ரல் 1 உடன் சம்பந்தப்படுத்தப்பட்டுள்ளது. காலம் காலமாக இந்த நாளில் ஒவ்வொருவரும் மற்றவரை கேலி செய்கிறோம்; போலியான அழைப்புகளை அனுப்புகிறோம்; போலியான திருமணங்கள் அறிவிக்கப்படுகின்றன; மற்ற பல்வேறு போலி விஷயங்கள் செய்யப் படுகின்றன!

---

★ அ.நி.ச. (சட்டப் பேரவை) விவாதங்கள் தொகுப்பு III, பாகம் II, 1949 ஏப்ரல் 1, ப. 2213-43.

**திருமதி அம்மு சுவாமி நாதன் :** (சென்னை : பொது) ; ஐயா, இந்துச் சட்டத் தொகுப்புடன் இது ஏதாவது சம்பந்தப்பட்டுள்ளதா? சம்பந்தமில்லாத எந்த விஷயமும் அனுமதிக்கப்பட மாட்டாது என்று இப்பொழுது நீங்கள் கூறினீர்கள். முட்டாள்கள் தினம், இந்து சட்டத் தொகுப்புடன் ஏதாவது சம்பந்தப்பட்டிருக்கிறதா?

**திரு. துணை அவைத் தலைவர் :** அது பொருத்தமுள்ளதா அல்லது பொருத்தமற்றதா என்று முடிவுக்கு வர உறுப்பினர் கூறியதை நான் போதுமான அளவு கேட்கவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, அவ்வப்போது திருப்தியற்ற முறையில் இந்த மசோதா கொண்டு வரப்படுவதை வலியுறுத்திக் கொண்டுதான் இருந்தேன். இத்தகைய முக்கியத்துவமும் மகத்துவமும் வாய்ந்த ஒரு மசோதாவுக்குத் தேவைப்படுவது, மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தொடர்ந்து அமர்ந்து இருக்க வேண்டும் என்பதே ஆகும்.

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இதுகுறித்து சச்சர விட்டுக் கொண்டிருக்க வேண்டுமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** இதற்காக சச்சரவிட்டுக் கொண்டி[illegible]க வேண்டுமா' என்று மைத்ரா கேட்கிறார். நான் கூறியது அந்த பொ[illegible]ருளில் அல்ல. ஐயா, இத்தகைய மகத்துவம் வாய்ந்த மசோதா மீது நீண்ட நேரம் தொடர்ந்து அமர்ந்து விவாதிக்க வேண்டிய தேவை உள்ளது. நீண்ட இடைவேளைகளில் இந்த விஷயத்தை விவாதிப்பதில் பிரதிகூலம் என்னவெனில், விவாதத்தின் கோர்வையை உறுப்பினர்கள் விட்டுவிடுகிறார்கள்: ஏற்கனவே கூறப்பட்டதே திரும்பத் திரும்பக் கூறப்படு[illegible]தடன், அவற்றை ஒன்று இணைத்துப் புரிந்து கொள்வது அவர்களுக்குக் கஷ்டம். எனவே இது இந்த மசோதாவையோ, இந்த அவையையோ அக்கறையுடன் நடத்தும் முறை ஆகாது.

சென்ற தடவை, இந்த முக்கியமான சட்டத்தின் வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும்போது, திருமணமான இந்துப் பெண்களின் 1937 ஆம் வருடச் சொத்துரிமைச் சட்டம் நிறைவேற்றப்பட்டது முதலாவது தவறு என்று சுட்டிக்காட்டினேன்.

தவறு என்னவெனில், போதுமான பரிசீலனை செய்யப்படாமல் மிகவும் சிக்கலான ஒரு மசோதாவை அவசர அவசரமாக சட்டப் பேரவையில் நிறைவேற்றியதாகும். உண்மையில், அந்த சமயத்தில்

இது விஷயத்தை போதுமான அளவு பரிசீலிக்காமல் திரு. தேஷ்முக் அவைக்கு இந்த மசோதாவைக் கொண்டுவந்தார்; அவையும் தாராள மனோபாவத்துடன் அந்த மசோதாவை நிறைவேற்றியது. அந்தச் சட்டத்தின்படி, சில குறிப்பிட்ட வகைப் பெண்களுக்கு மகன்களோடும், பேரன்களோடும், கொள்ளுப் பேரன்களோடும் நேரடி மரபுச் சொத்துரிமை அளிக்கப்பட்டது. அவர்களுக்கு சுதந்திரமான உரிமை அளிக்கப்பட்டது. அவை வெறுமனே இந்துப் பெண்களின் உரிமைகள் மட்டுமல்ல; மாறாக அவை சொத்துரிமையை முழுமையாக மாற்றி அமைக்கக் கூடிய மரபு ரீதியான உரிமைகள். அதற்கு அடுத்து, இந்துச் சட்டம் சம்பந்தமாக எழக்கூடிய சில கஷ்டங்கள் பற்றி வங்காளத்தைச் சேர்ந்த திரு. ரிஷிந்திர நாத் சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவந்தார். திரு. ரிஷிந்திர நாத் சர்க்கார் ஒரு புகழ்பெற்ற வழக்கறிஞர்; மேலும் திருமணமான இந்துப் பெண்களின் சொத்துரிமைச் சட்டம் பற்றியும் அது சம்பந்தப்பட்ட மற்ற சட்டங்கள் பற்றியும் ஏராளமான நூல்கள் இயற்றியுள்ள ஆசிரியரும் ஆவார். இந்த மசோதா சம்பந்தமாக உள்ளார்ந்த சில கஷ்டங்களை அவர் சுட்டிக்காட்டினார்: 1938-ல் 1938 சட்டம் XVI-ன் படி 1937 சட்டம் திருத்தப்பட வேண்டியதாயிற்று. எனினும், சிரமம் அத்துடன் நின்றுவிடவில்லை; 1938-ல் திருத்தப்பட்ட சட்டத்தால் மேலும் பல கஷ்டங்கள் எழுந்தன. அந்தத் திருத்தப்பட்ட சட்டத்தின்படி, மரணமடைந்தவரின் விதவை, மகனின் விதவை, பேரனின் விதவை, கொள்ளுப் பேரனின் விதவை ஆகியோருக்கு உரிமை வழங்கப்பட்டது; மகளின் நிலை பற்றி கணிசமான கஷ்டங்கள் எழுந்தன. உண்மையில் அதிக அளவிலான கருத்து வேறுபாடு இருந்தது; மகளைப் பொறுத்தவரை, உள்ள கஷ்டங்களை திரு. சர்க்கார் சுட்டிக்காட்டினார். நாடு முழுவதும் இந்தப் பிரச்சினை மீது கிளர்ச்சி ஏற்பட்டது; மகள் நிலை பற்றி கூறுவதற்கும் மகன், பேரன் மற்றும் பல்வேறு பட்டவர்களின் விதவைகளுக்கு உரிமை வழங்குவது பற்றி தெளிவாக்குவதற்கும் சட்டப் பேரவைக்கு அரை டஜன் மசோதாக்கள் சமர்ப்பிக்கப்பட்டதாக அறிகிறோம். அம் மசோதாக்கள் சட்டப் பேரவைக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டு நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட்டன. என்றுமில்லாதவாறு அதிக எண்ணிக்கையிலான மசோதாக்களை - ஆறு மசோதாக்களை அரசாங்கம் எதிர்கொண்ட நிலைமை பற்றி பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா போன்ற அனுபவம் வாய்ந்த உறுப்பினர்கள் எடுத்துக் கூற முடியும் என நம்புகிறேன். ஐயா, அந்த சமயத்தில், போதுமான பரிசீலனை செய்யாமல் சமூக விஷயங்கள் பற்றி அவசரம் அவசரமாக சட்டங்களை இயற்றுவது மோசமானது என்று உள்துறை உறுப்பினர் சர் ரெஜினால்ட் மாக்ஸ் வெல் சுட்டிக்காட்டினார். மேன்மேலும் அதிக

எண்ணிக்கையில் சட்ட மசோதாக்கள் கொண்டுவரப்பட, கஷ்டங்கள் பெரிதும் அதிகரித்தன. இதனால் உறுப்பினர்கள் நிலைபற்றி அவர் அனுதாபம் கொண்டார்; எந்தச் சட்டமும் இயற்ற நடவடிக்கை எடுக்கும் முன், பல்வேறு கண்ணோட்டங்களிலிருந்து விஷயத்தை முறையாகப் பரிசீலிக்க அவர் ஒப்புக் கொண்டார். இது ராவ் குழுவின் தோற்றத்திற்கு இட்டுச் சென்றது. குழு ஒரு மசோதாவை தயாரித்தது; கருத்தறிவதற்காக பல்வேறு நபர்களுக்கு அனுப்பி, பதில்களைப் பரிசீலித்து வேறொரு மசோதாவையும் தயாரித்தது. அவர்கள் தங்கள் பணியை மேலும் தொடர்வதற்கு முன், ஒரு துவக்க கஷ்டத்தை எதிர் நோக்கினர். 1937, 1938 சட்டங்கள் சம்பந்தமாக வேறு ஒரு குறைபாடு உள்ளதை அவர்கள் கண்டுபிடித்தனர். 1938 சட்டத்தால் திருத்தப்பட்ட 1937-ம் ஆண்டுச் சட்டம் விவசாய நிலங்களுக்குப் பொருந்தாது என்று அவர்கள் கருதினர். மத்திய அரசு சட்டரீதியாக கையாளக்கூடிய விஷயமாக விவசாய நிலம் இல்லாதபோது 1937-ல் முதல் சட்டம் நிறைவேற்றப்பட்டதால் கஷ்டம் எழுந்தது.

**துணை அவைத் தலைவர்:** பிற்பகல் 2-30 மணிக்கு அவை ஒத்திவைக்கப்படுகிறது.

*இதன்படி பகல் உணவிற்காக பிற்பகல் 2.30 வரை அவை ஒத்திவைக்கப்பட்டது.*

---

*மதிய உணவிற்குப்பின் பிற்பகல் 2.30 மணிக்கு அவை மீண்டும் கூடிற்று. திரு. அவைத் தலைவர் (மாண்புமிகு திரு. ஜி.வி. மாவலங்கர்) தலைமை தாங்கினார்.*

---

**சீமாட்டி அன்னி மாஸ்கரேன்:** (திருவிதாங்கூர் சமஸ்தானம்): ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்ப விரும்புகிறேன். சட்டப் பேரவையின் கூட்டத் தொடர் முழுவதும் ஒருவர் அதில் கலந்து கொள்வது இந்த அவை உறுப்பினர் ஒருவரின் கடமையா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**அவைத் தலைவர்:** இது ஓர் ஒழுங்குப் பிரச்சினையே அல்ல. ஓர் உறுப்பினர் எந்த விவாதத்திலும் கலந்துகொள்ள விரும்பவில்லையெனில் அவர் அவைக்கு வருகை தர வேண்டியதில்லை. ஆனால் இங்கு ஒரு கருத்தை தெரிவிக்க விரும்புகிறேன். ஒரு மசோதாவை

ஆதரித்தோ அல்லது எதிர்த்தோ ஓர் உறுப்பினர் உரையாற்றினால், அதற்கான பதிலைக் கேட்பதற்கு அவையில் இருக்க வேண்டியது அவரது கடமையாகும்.

**சீமாட்டி அன்னி மாஸ்கரேன்:** மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் சில நாட்கள் வராமல் இருந்து பின்பு அவைக்கு வந்து அவையின் நிகழ்ச்சி நிரல் பற்றி தமக்குத் தெரியவில்லை என்று புகார் செய்தால், அவரை மன்னித்து விடலாமா ஐயா!

**அவைத் தலைவர் :** அவைமுன் அவர் வைக்கும் அறிக்கையின் அடிப்படையில் அது பற்றி முடிவு செய்யப்படும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** பகல் உணவிற்கு செல்லும் முன், இந்த சட்டமியற்றல் வரலாற்றின் முதல் பாகத்தை பற்றிக் கூறி கொண்டிருந்தேன். 1937ம் ஆண்டுச் சட்டமும் 1938ம் ஆண்டுத் திருத்தச் சட்டமும் மகள் விஷயத்தில் பல கஷ்டங்களைத் தோற்றுவித்தன. அவளது நிலையைத் தெளிவுபடுத்த பல மசோதாக்கள் கொண்டுவரப் பட்டன. அந்தக் கட்டத்தில், இந்த விஷயத்தை அரசு ஒப்புக் கொண்டு, ராவ் குழுவை நியமித்தது. விவசாய நிலம் சம்பந்தப்பட்டவரை, சட்டங்கள் இயற்ற சட்டப்பேரவைக்கு அதிகாரம் எதுவும் கிடையாது என்று ராவ் குழு விரைவில் கண்டுகொண்டது. முந்திய அரசியல் சாசனத்தின்படி மத்திய அரசாங்கத்தின் சட்டமியற்றும் உரிமைப் பட்டியலில் விவசாய நிலம் இருந்தது. அந்த பழைய அரசியல் சாசனத்தின் கீழ் இயங்கிய கீழவையில் 1937 மார்ச் மாதத்தில் மசோதா நிறைவேற்றப்பட்டது. 1935ம் ஆண்டு அரசியல் சாசனம் அமுலுக்கு வந்த பின் ஏப்ரல் மாதத்தில் மேலவை அதை நிறைவேற்றியது. எனவே, மேலவையால் அந்த மசோதா நிறைவேற்றப்பட்டபோது, விவசாய நிலம் பற்றிச் சட்டம் இயற்ற அதற்கு அதிகாரம் இல்லை. கீழவை, மேலவை இரண்டிற்கும் சட்ட அதிகாரம் இல்லாமல் இருந்த போது 1938-ம் ஆண்டு திருத்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அன்றையச் சட்டப்பேரவை செய்த பெரும் பிழைகளாகும் இவை. ராவ் குழு விஷயத்தை சமஷ்டி நீதிமன்றத்திற்கு கருத்தறிய அனுப்பியது. சமஷ்டி நீதிமன்றம் அளித்த தீர்ப்பு அவை.....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்டத் துறை அமைச்சர்) : நீங்கள் கூறுவது முற்றிலும் தவறு.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** ( மதராஸ் : பொது) : சமஷ்டி நீதிமன்றத்திற்கு கருத்தறிய ராவ் குழு எப்படி அனுப்ப முடியும்?

**திரு. நசிருத்தீன் அகமது :** அது முற்றிலும் தவறா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஆம். முற்றிலும் தவறு.

**திரு. நசிருத்தீன் அகமது :** எவ்வகையில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனது பதிலில் அதை எடுத்துரைப்பேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அவர் கூறியது சாராம் சத்தில் சரியே.

**திரு. நசிருத்தீன் அகமது :** ராவ் குழு அரசாங்கத்திற்கு அறிக்கை கொடுத்தது; இது சம்பந்தமாக கருத்தறிய சமஷ்டி நீதிமன்றத் திற்கு கவர்னர் - ஜெனரல் அனுப்பி வைத்தார். ஒரு சிறு சட்ட நுணுக்க விஷயத்தில்தான் நான் தவறு செய்துள்ளேன். மீண்டும் கூறுகிறேன்: ராவ் குழு முறையான வழி மூலம் - அதாவது கவர்னர் ஜெனரல் மூலம் - விஷயத்தை சமஷ்டி நீதிமன்றத்திற்கு அனுப்பிவைத்தது. அது தவறா? நான் கூறியது முற்றிலும் சரி; எவ்வகையிலும் தவறல்ல. (குறுக்கீடு)

**அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடர்ந்து பேசலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** சமஷ்டி நீதிமன்றத்திற்கு விஷயத்தை ராவ் குழு பரிசீலனைக்கு அனுப்பியது; விவசாய நிலம் சம்பந்தப்பட்ட வரை, இந்த விஷயம் சட்டப் பேரவையின் அதிகாரத் திற்கு அப்பாற்பட்டது என்று அவர்கள் தீர்ப்பு வழங்கினார்கள். அந்த சமயத்தில் தெரியவந்த மிகப்பெரும் தவறாகும் இது. சமஷ்டி நீதிமன்றத் தீர்ப்பு வெளிவந்ததும் நான் அரங்கத்திற்கு வந்தேன். இந்துச் சட்டத் தொகுப்போடு எனது தொடர்பு தற்செயலானதோ அல்லது சமீபத்தில் ஆனதோ அல்ல. நீண்ட காலத்திற்கு முன்பே 1941-லேயே, இந்தச் சட்டம் பற்றி சட்ட பூர்வமான நடவடிக்கைகளை நான் எடுத்தேன் என்பதை இந்த அவைக்குச் சுட்டிக்காட்டும் நிலை யில் இருக்கிறேன். அப்பொழுது வங்காளச் சட்டப்பேரவையின் ஓர் உறுப்பினனாக இருந்தேன். ராவ் குழுவின் முதல் அறிக்கை வெளி வருவதற்கு முன்பேயே நான் ஒரு மசோதாவைச் சமர்ப்பித்தேன்.

சமஷ்டி நீதிமன்றத்தின் தீர்ப்புத் தெரிந்ததும், விவசாய நிலம் சம்பந்தப் பட்ட வரை சட்டத்தை வங்காளத்திற்கு நீட்டிக்க வங்காள சட்டப் பேரவையில் ஒரு மசோதாவை நான் அறிமுகப்படுத்தினேன். இது விஷயத்தில் இந்தியாவில் அப்பொழுது சட்டமியற்றச் செய்யப்பட்ட முதல் முயற்சியாகும் அது.

**திரு. தாஜாமுல் உசேன்** (பீஹார் : முஸ்லீம்) : மதிப்பிற்குரிய எனது நண்பர் அப்பொழுது இந்துச் சட்டத் தொகுப்பிற்கு சாதகமான நிலை எடுத்தாரா என்பதை அவரிடமிருந்து நான் தெரிந்து கொள்ள லாமா? எந்தச் சமயத்தில் அவர் தமது மனதை மாற்றிக் கொண்டார்?

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்துச் சட்டத் தொகுப்பு அப்பொழுது தோன்றக்கூட இல்லை. இந்த விஷயம் பற்றி அப் பொழுது பல பிரபலமானவர்களைப் போல் நான் தவறானப் போக்கைக் கடைப்பிடித்ததாகப் பிற்பாடு எனக்குத் தோன்றியது. உண்மையில் வங்காளத்தில் உள்ள விவசாய நிலத்திற்கு சட்டத்தை விரிவுபடுத்த நான் விரும்பினேன். வங்காளச் சட்டப்பேரவையில் நான் அறிமுகப்படுத்திய மசோதாவின் நோக்கம் அதுவே. அந்த மசோதா பற்றிய கருத்துக்களை அறிவதற்காக வங்காளம் முழுவதிலும் அது சுற்றுக்கு அனுப்பப்பட்டது; பெரும் அளவிலான பொது ஜனக் கருத்து மசோதாவிற்குச் சாதகமாக இருந்தது. என்னைப் போல, ஒவ்வொருவரும் மசோதா சரியானது என்று நினைத்தனர்.

**திரு. தாஜாமுல் உசேன் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது மனதை ஏன் மாற்றிக் கொண்டார் என்பதற்கான காரணங்களைத் தெரிவிக்கவில்லை.

**அவைத் தலைவர்:** அது இப்போதைய விஷயத்திற்கு சம்பந்தப்பட்டது அல்ல. எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் அவர் தமது மனதை மாற்றிக் கொள்ளலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** மதிப்பிற்குரிய உறுப்பினர் பொறுத்திருக்க முயல வேண்டும். 1941 ஜூலை 14-ம் தேதி மசோதா என்னால் சமர்ப்பிக்கப்பட்டது என்பதை அவை தயவு செய்து குறித்துக் கொள்ள வேண்டும். வங்காளத்தில் இருந்த மக்கள் கருத்து அப்பொழுது அதற்குச் சாதகமாக இருந்தது. பின்பு, ஒரு பொறுக்குக் குழுவின் நிகழ்ச்சி நிரலில் இந்த மசோதா சேர்க்கப்பட்டது. 1942 செப்டம்பர் 25-ம் தேதிய நிகழ்ச்சி நிரலின் ஒரு பிரதி என்னிடம்

உள்ளது. இந்து-முஸ்லீம் கூட்டணி கட்சிப் பெரும்பான்மை கொண்ட வங்காள சட்டப்பேரவையில் அதனை நிறைவேற்றக் கூடிய நிலையில் நான் இருந்தேன். கட்சியின் பெரும்பான்மை மசோதாவுக்கு சாதகமாக முடிவு எடுத்தது. அது ஒரு பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப் படவிருந்தது. எனினும், இதற்குள் மசோதாவுக்கு எதிராக இந்துக்கள் கருத்து போதுமான அளவு உருபெற்றது. மசோதா நிறைவேற்றப்பட்டால் மோசமான விளைவுகள் ஏற்படும் என்று என்னிடம் கூறப்பட்டது. நான் உள்ளிட்டு பலர் இந்த மசோதா நிறைவேற்றப் பட்டால் புதல்விகளதும் மற்றவர்களதும் நிலை குழப்பத்திற்கு உள்ளாகும் என உணர்ந்தோம். இதற்குள், ராவ் குழுவின் அறிக்கை பிரசுரிக்கப்பட்டது: அவர்களால் மறு வரைவு செய்யப்பட்ட மசோதா நாட்டின் முன் இருந்தது. 1941-லும் 1942-லும் இதுபற்றி பெரும் அளவிலான கூட்டங்கள் நடைபெற்றன. எனது சொந்த ஊரான பர்த்துவானில் ஒரு கூட்டம் நடந்தது; பிரதான மசோதாவைக் கண்டித்து வங்காளம் முழுவதிலும் இம்மாதிரியான கூட்டங்கள் நடைபெற்றன. மசோதாவுக்கு தேவையான பெரும்பான்மை என்னிடம் இருந்த போதிலும், நான் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கவில்லை. ஏனெனில், இது இந்து சமூகத்தை மட்டும் பாதிக்கும் விஷயம்; மேலும் அது அவர்களால் எதிர்க்கப்பட்டது. இந்த மசோதாவை, அதனால் பாதிக்கப்படாத, வெறும் பெரும்பான்மை நபர்களால் நிறைவேற்றுவது நல்லதல்ல என்று கருதினேன். எனது சொந்த மசோதாவுக்கு ஒரு குறிப்பிட்ட காலத்தில் நான் சாதகமாக இருந்த போதிலும், இந்துச் சட்டத் தொகுப்பிற்கு ஒருபோதும் நான் சாதகமாக இருந்தில்லை. மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. தாஜாமுல் உசேனை இது திருப்திப்படுத்தும் என நான் நம்புகிறேன். நான் என்ன செய்ய வேண்டுமென எனது இந்து உறுப்பினர்களைக் கேட்டேன்; அவர்கள் எனது இந்த மசோதாவுக்கு எதிராக இருந்தனர்; எனவே மசோதா கைவிடப்பட்டது. இந்த ஒப்புதலை அளிக்க நான் கிஞ்சித்தும் அஞ்சவில்லை. எனது மசோதாவுக்கு முன்னால் 1937 சட்டத்தை விவசாய நிலத்திற்கு விரிவு படுத்த எல்லா ஸ்தல சட்ட சபைகளிலும் ஒரு மசோதா அறிமுகப்படுத்தப்பட வேண்டும் என ஒவ்வொருவரும், ஏன் ராவ் குழுவும் நினைத்தனர். நானும் அதே நிலையை மேற்கொண்டேன்: ஆனால், பின்பு எனது மசோதாவிற்கு எதிராக இந்துக்களின் கருத்து கணிசமாக இருப்பதைக் கண்டேன். விவசாய நிலத்திற்கு 1937ம் ஆண்டுச் சட்டத்தை எந்த மாகாணமும் ஒரு பொழுதும் அமுல் நடத்தவில்லை. ஐயா, அதைத் தொடர்ந்து, வங்காளத்தில் பெரும் எண்ணிக்கையில் கூட்டங்கள் நடைபெற்றன. ராவ் குழுவின் மசோதா எங்கிலும் கண்டனத்திற்கு உள்ளானது.

இப்பொழுது, ராவ் குழுவின் இந்த அறிக்கையைப் பொறுத்த வரை, அவர்கள் ஒரு மசோதாவைத் தயாரித்தார்கள். அது ''இந்துச் சட்டத் தொகுப்பு - பாகம் I உயில் இல்லாமல் நிலத்தில் மரபுரிமை'' என்பது ஆகும். அது மத்தியச் சட்டப் பேரவையில் அறிமுகப்படுத்தப் பட்டது; அது சட்டப் பேரவையின் இரு அவைகளதும் ஒரு வலுவான கூட்டுப் பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப்பட்டது. அந்தப் பொறுக்குக் குழுவின் அறிக்கையின் ஒரு பிரதி என்னிடம் உள்ளது. ஒரு பகுதியினர் அதைப் பலமாக ஆதரித்தனர்; அதே அளவு பலமாக மற்ற பகுதியினர் எதிர்த்தனர். பொறுக்குக் குழுவின் அறிக்கையுடன் அந்த மசோதா மீண்டும் சட்டப் பேரவைக்கு வந்தது. இந்தச் சட்டத் தொகுப்பு பகுதி பகுதியாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்று 1941-ல் ராவ் குழு கூறியிருந்தது. அது மிக முக்கியமான யோசனையாகும். இந்து சட்டத் தொகுப்பு பகுதி பகுதியாக - மரபுரிமை, திருமணம், பாதுகாப்பாளர் பதவி முதலியன - எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்று உண்மையில் ராவ் குழு கூறியுள்ளதை உங்களது விசேடக் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். 1941-ம் ஆண்டு அவர்களது அறிக்கையின் 23 ஆவது பக்கத்தில் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:

> ''மிகவும் அழுத்தம் தி ருத்தமாக நாங்கள் வலியுறுத்திக் கூற விரும்புவது என்னவெனில், ஒரு முழுமையான இந்துச் சட்டத் தொகுப்பை படிப்படியான கட்டங்களில் வழங்க வேண்டும். நாங்கள் கூறியுள்ளபடி மரபுரிமையை சட்டத்திலிருந்து தொடங்கி, அதைத் தொடர்ந்து திருமணம், பின் உரிய சமயத்தில் இந்துச் சட்டத்தின் மற்ற விஷயங்கள் இடம் பெறவேண்டும். இந்த பெரிய தொகுதிகள் கூட ஓரளவுக்கு ஒன்றோடொன்று இணைப்புடையவையாக இருப்பது அவசியம்; வரைவு செய்பவருக்கு மரபுரிமைச் சட்ட முழுமையை கையாள்வது, விதவைகளுக்கு சொத்துரிமை பற்றிய தனித் தனி விதிகளைக் கையாள்வதைவிட இலகுவாக இருக்கும். சச்சரவுள்ள விஷயங்களின்மீது ஒன்றுபட்ட தீர்வுக்கு இந்தத் திட்டம் நல்ல சந்தர்ப்பத்தையும் அளிக்கலாம்; ஏனெனில், அரங்கம் பெரிதானால், சமரசத்திற்கு அதிக் இடம் இருக்கும். எந்த அளவு சாத்தியமோ அந்த அளவுக்கு ஒப்புக் கொள்ளத்தக்க தீர்வுகளை அடைவதும், சிக்கலான கருத்து வேறுபாடுகளைக் கிளப்புகிற எதையும் தவிர்ப்பதும் நோக்கமாக இருக்க வேண்டும். இப்படிக் கூறுவதால், சீர்திருத்தத்தின் வேகத்தைக் குறைப்பது என்று பொருள் கொள்ள வேண்டியதில்லை; ஏனெனில், நிர்பந்திப்பதைவிட இணக்கம் ஏற்படுத்துவதன் மூலமே உண்மையான சீர்திருத்தம் முன்செல்கிறது.''

பக்கம் 11-ல் அவர்கள் கூறுகிறார்கள்:

> ''சட்டத்தின் எல்லாப் பாகங்களும் உடனே எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று நாங்கள் ஆலோசனை கூறவில்லை. மரபுரிமைச் சட்டம்..... முதலில் எடுத்துக் கொள்ளப்படலாம், அடுத்துத் திருமணச் சட்டம், இவ்வாறாக ஒவ்வொரு பாகம் பற்றிய சட்டம், சட்டப்படி தேவைப்படுகிற உருவத்திற்கு

சுருக்கப்பட்டவுடன், பல்வேறு சட்டங்கள் ஒரே தொகுப்பாக இணைக்கப்படலாம்.''

இதுதான் அறிக்கை, அவர்கள் சமர்ப்பித்த அறிக்கைக்கு ஏற்ப, இந்துச் சட்டத் தொகுப்பு பாகம் I, உயில் இல்லாத சொத்தில் மரபுரிமை பற்றிய அவர்களது மசோதாவை கூட்டுப் பொறுக்குக் குழு முடிவு செய்தபடி சமர்ப்பித்தனர். மரபுரிமை பற்றிய மசோதா சட்டப் பேரவைக்கு வருவதற்கு முன்பே, கூட்டுப் பொறுக்குக் குழு பின்வருமாறு சிபார்சு செய்தது: இந்த பாகத்தை மட்டும் நிறைவேற்றுவதால் பயன் எதுவுமில்லை; இப்பொழுது உள்ள இந்துச் சட்டத் தொகுப்பு பற்றிய உண்மையான படப்பிடிப்பு அவர்களுக்குக் கிடைக்க வேண்டும்; பல்வேறு பாகங்கள் ஒன்றோடொன்று சார்ந்து இருப்பதால், இந்த மசோதா நிறைவேற்றப்படக்கூடாது; இந்துச் சட்டம் பற்றிய பரந்த பார்வை கொள்ளப்படவேண்டும். தங்களது அறிக்கையில், பொறுக்குக் குழு பின்வருமாறு கூறுகிறது:

''இந்துச் சட்டக் குழுவை உயிர்ப்பிக்கவும், இடைவேளையில் சட்டத் தொகுப்பின் இதர பாகங்களை வடிவமைத்து சட்டமாக்கப்படுவதை ஊக்குவிக்கவும் நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென நாங்கள் கருதுகிறோம். இப்போதைய மசோதா நிறைவேற்றப்பட்டு நடைமுறைக்கு வரும்போது இந்த இடைவேளை கடந்துபோகும். இந்த மசோதா அமுலுக்கு வரும்முன் இந்துச் சட்டத்தின் மற்ற கிளைகள் பற்றி முடிவுகள் எடுக்கப்பட்ட வெளிச்சத்தில் ஒழுங்கு செய்யப்பட்டு திருத்தப்பட வேண்டும் என்பதை நன்கு காணலாம்.''

எனவே, அவையும், நாடும் மிகவும் முழுமையான ஒரு சித்திரத்தைப் பெற வேண்டுமென அவர்கள் சிபாரிசு செய்தார்கள். இந்துச் சட்டக் குழு புதுப்பிக்கப்பட்டது; இந்து சட்டத்தின் மற்ற கிளைகள் பற்றிய முழுச் சித்திரத்தை நமக்கு அளிக்கும்படி அவர்கள் கோரப்பட்டனர். அவர்கள் செய்த முதல் காரியம், இந்து ''சட்டத் தொகுப்பு பாகம் II திருமணம்'' என்ற மற்றொரு மசோதாவை உருவாக்கினர். இரண்டாவது மசோதா அவர்களால் தயாரிக்கப்பட்டது; பின்பு மற்ற பாகங்களையும் அவர்கள் தயார் செய்தனர். நான் வலியுறுத்த விரும்பும் விஷயம் என்னவெனில், இவை தனித்தனியான தன் முழுமையுடைய மசோதாக்கள். பிதுர் ராஜ்ய சொத்துரிமைச் சட்டம் முற்றிலுமாக தனியானது; தனியாகவே சட்டமாக்கப்படக்கூடிய தன்மை வாய்ந்தது. திருமணச் சட்டமும் தனியாகச் சட்டமாக்கப்படலாம். ஒரே தொகுதியாக அச்சிடப்பட்டு சுற்றுக்கு அனுப்பப்பட்ட போதிலும், மற்ற மூன்று பாகங்கள் தனித்தனி பாகங்களாக உள்ளன. பின்பு கருத்துக்கள் பெறப்பட்ட பின், பின் சேர்க்கையாக சில மாற்றங்

களையும் கூட அவர்கள் அறிமுகப்படுத்துகிறார்கள். எனவே முற்றிலும் தனித் தனியான மசோதாக்கள் தனித்தனியான முழுமையுடைய விஷயங்களாகத் தனித்தனி எண்கள் கொடுக்கப்பட்டு ஒரே புத்தகத்தில் அச்சிடப்பட்டிருப்பதன் உண்மையான பொருளையும் நோக்கத்தை யும் அவை தயவு செய்து கவனிக்கவேண்டும். எனினும் தனித்தனி பாகங்களைத் தனித் தனியாக எண்கள் கொடுக்கப்பட்டதன் நோக் கத்தை சட்ட அமைச்சரகம் தவறாகப் புரிந்து கொண்டதாகத் தோன்று கிறது. உண்மையில், இந்த மசோதா பற்றிய பொறுக்குக் குழுவின் அறிக்கையில், பெரும்பான்மை உறுப்பினர்கள் தனியாக எண்கள் கொடுக்கப்படுவதும், தனித்தனி பாகங்களும் கேள்விப்படாத ஒன்று என்றும், நோக்கமற்றது என்றும் கூறுகிறார்கள்; எனவே தனிப் பாகங் களை முழுமையானதாக இணைத்து அவற்றுக்கு தொடர் எண்கள் கொடுக்கப்பட வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். தன் முழுமை கொண்டதென்றும், தர்க்க ரீதியில் அமைந்தது என்றும் அவர்கள் கருதிய இந்து சட்டத் தொகுப்பை அவர்கள் உருவாக்கியதன் காரணம் இதுதான். தனித்தனியாக சட்டமாக்கப்பட்டு, பின்பு ஒன்றிணைக்கப்பட வேண்டும் என்ற ராவ் குழுவின் நோக்கம் அறவே கைவிடப்பட்டது.

இது சம்பந்தமாக முதலாவதாக நான் சுட்டிக்காட்ட விரும் புவது என்னவெனில், சட்டத்துறை அமைச்சகம் அமைத்த இலாகாக் குழு செய்த மாற்றங்கள் மூல மசோதா அல்லது வேறான மசோதாக் களின் நோக்கத்திற்கு அப்பால் சென்றன என்பதேயாகும். உண்மை யில், மூல மசோதாதான் வெவ்வேறு பாகங்களை ஒன்றாக இணைத்து ஏராளமான சிரமங்களை ஏற்படுத்தியது; குழப்பத்தை மேலும் தீவிர மாக்கியது. ராவ் குழு ஆலோசனை அளித்தபடி, தனியான பாகங் களைத் தனியாக சட்டமாக்கி நிறைவேற்றியிருந்தால் நல்லதாக இருந் திருக்கும்; இதனால், ஆட்சேபனைகள் பெருமளவுக்குக் குறைந் திருக்கும்; மேலும், அவையின் கவனம், நாட்டின் கவனம் தனி விஷ யங்கள்பால் குவித்திருக்கும் - இந்துச் சட்டம் பற்றிய பரந்த அளவி லான முழுச் சித்திரம் அவர்களுக்குக் கிடைத்திருக்கும். வெவ்வேறு பாகங்கள் அல்லது மசோதாக்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு தொடர்ந்த எண்கள் அளிக்கப்பட்டது நம்மை இந்த அவையில் கஷ்ட மான நிலையில் வைத்துள்ளது. பொறுக்குக் குழுவிடமிருந்து வந்த ஒன்றிணைக்கப்பட்ட மசோதாவிற்கு முழு ஆதரவளிக்கும் எந்த உறுப் பினரும் இருப்பதாகத் தெரியவில்லை. விவாக ஷரத்துகளை சிலர் ஆதரிக்கிறார்கள்: பிதுர்ராஜிதச் சொத்துரிமைக்கு மற்றவர்கள் ஆதரவாக இருக்கிறார்கள்; ஆட்சேபம் மிகக் குறைவே. மூல திட்டத்தில் இருந்த

தனி மசோதாக்கள் விஷயங்களை எளிதாக்கியிருக்கும்; சிரமங்களைக் குறைத்திருக்கும்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** மிகச் சிறந்தது ஜீவனாம்சம் பற்றிய பாகம். மற்றவையெல்லாம் குப்பை.

**திரு. நசிருத்தீன் அகமது :** பண்டிட் மைத்ரா சுட்டிக் காட்டியிருப்பதுபோல் மிகக் குறைந்த ஆட்சேபத்தைப் பெற்றது ஜீவனாம்ச பாகம். பாகங்கள் தனித்தனியா வைக்கப்பட்டிருந்தால், தனித்தனியான விஷயங்களை சுலபமாக கையாளும் நிலையில் அவை இருந்திருக்கும். ஜீவனாம்சம் என்ற விஷயம் கருத்து வேறுபாட்டிற்கு உட்பட்டதல்ல. சமுதாயத்தின் மத அமைப்பை அது பாதிப்பதில்லை. இந்துக்களின் மத உணர்வுகளையும், காலம் காலமாக உள்ள நம்பிக்கைகளையும்அது புண்படுத்துவதில்லை. அதை உடனேயே நிறைவேற்றியிருக்க முடியும். தனித்தனியாக பரிசீலிப்பதற்கான காரணம் இதுவே. ஆனால், தனித் தனியாக கையாள்வதன் நோக்கத்தை இலாகாக் குழு பார்க்க தவறிவிட்டது; எல்லாவற்றையும் ஒன்றாக கலந்து குழப்பியுள்ளது.

ஐயா, ராவ் குழுவின் இரண்டாவது அறிக்கையிலும்கூட, மசோதா பல்வேறு பிரிவுகளாகத் தயாரிக்கப்பட்டது; அது தனித் தனியாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்ற அவர்களது ஆலோசனையை மீண்டும் கூறினர். மசோதா தனித்தனிப் பாகங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டு தனித்தனியாகக் கையாளப்பட வேண்டும் என்பதே மசோதாவின் உத்தேசமாக இருந்தது.

**திரு. தாஜாமுல் உசேன் :** இந்த நோக்கத்தோடு தாங்கள் திருத்தங்களை ஏன் கொண்டுவரக் கூடாது?

**திரு. நசிருத்தீன் அகமது :** மதிப்பிற்குரிய எனது நண்பர் தமது குறுக்கீடு மூலம் சொல்ல விரும்புவது: ''எல்லா விஷயங்களையும் நான் விரும்புகிறபடி கலந்து விடுவேன். அவற்றை தனிமைப் படுத்திப் பொருத்தமான திருத்தங்களைக் கொண்டுவருவது உங்கள் வேலை.'' அது சாத்தியமல்ல. மாமிசம், மீன் மற்றும் காய்கறிகளை ஒன்றாக நீங்கள் சமைத்து, ஒரு சைவ உணவு உண்பவரைப் பார்த்து, ஒரு திருத்தம் மூலம் அவற்றைப் பிரித்து காய்கறிகளை மட்டும் தனியாக எடுக்கும்படி கூறுகிறீர்களெனில், அது குதிரைக்கு முன் வண்டியை வைப்பது போன்றதாகும். சட்டத்தின் தனித் தன்மை வாய்ந்த தனி

வகைகளைச் சேர்ந்தவைகளை ஒரு முழுமையான ஒன்றாக மசோதா கலந்து விட்டது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** இல்லை. இல்லை தனித் தனி அத்தியாயங்கள் உள்ளன.

**அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது சொந்தக் கருத்துக்களை வெளிப்படுத்துகிறார். அதேபோல் தங்கள் சொந்தக் கருத்துக்களை எடுத்துரைக்க மற்ற உறுப்பினர்களுக்கும் சந்தர்ப்பம் கிடைக்கும். குறுக்கீடு செய்வதால் என்ன நன்மை? அது அவரது உரையை நீடிக்கவே செய்யும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு பாகத்தின் பகுதிகள் அதிலிருந்து எடுக்கப்பட்டு மற்றொரு பாகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

**திரு. எல்.கிருஷ்ணசாமி பாரதி:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. பல்வேறு அத்தியாயங்களை அது இணைத்து குழப்பம் உண்டுபண்ணிவிட்டது என்ற அவரது அறிவிப்பை, திருத்த எனக்கு உரிமை இல்லையா?

**அவைத் தலைவர் :** இதனைத் திருத்துவதற்கு அவர் உரிமை பெறுவார். குறுக்கீடுகள் இருக்கக்கூடாது. நாம் அவசியமில்லாமல் பொறுமையிழக்கிறோம் என்று நினைக்கிறேன். இந்த மசோதா பற்றிய நமது கருத்துக்கள் அதற்கு ஆதரவாக அல்லது எதிர்ப்பாக இருந்தாலும், எதிர் தரப்பினர்க் கூறுவதைப் பொறுமையாகக் கேட்டு அவரது கருத்துக்களுக்கு பதில் அளிக்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் முழு சந்தர்ப்பம் அளிக்கப்போகிறேன். எனவே குறுக்கீடுகள் இல்லாமல் இருக்கட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இந்தக் கட்டளைக்காக நான் மிகவும் நன்றியுடையவனாக இருக்கிறேன். விஷயம் என்னவெனில், ஒவ்வொரு பாகத்திலும் விளக்கங்களும், விதிகளும் முற்றிலும் தனியானவை. பொறுமையுள்ள எவரும், அவைக்கு திரு. ஜோகேந்திர நாத் மண்டல் சமர்ப்பித்த மூல மசோதாவை மாற்றியமைக்கப்பட்ட மசோதாவுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், வித்தியாசத்தைக் காண முடியும்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ஜோகேந்திர நாத் மண்டல் யார்?

**திரு. நசிருத்தீன் அகமது :** அவர் முந்திய சட்டத்துறை அமைச்சர். அவர் சமர்ப்பித்த பழைய மசோதாவையும் இப்போதைய மசோதாவையும் ஒருவர் ஒப்பிட்டுப் பார்த்தால், வெவ்வேறான பாகங்களிலிருந்து பகுதிகள் மற்ற பாகங்களுக்கு இடம் பெயர்த்து வைக்கப்பட்டுள்ளதைக் காண்பார். இந்த செயல் நிச்சயமாக நல் லெண்ணத்தில் செய்யப்பட்டதே; ஆனால், விஷயங்களைத் தனியாக கையாள வேண்டியதன் நோக்கத்தை முழுமையாக புரிந்து கொண்ட அடிப்படையில் இது செய்யப்பட்டதல்ல. உண்மையில் சட்ட அமைச்சகம் மறு வரைவு செய்த ஒரு மசோதா பொறுக்குக் குழு முன் வைக்கப்பட்டது. பொறுக்குக் குழுவை முற்றிலும் தவறாக வழி நடத்தக்கூடியது அந்த மசோதா என நான் சமர்ப்பிக்கிறேன். இந்த ஆவணம்தான் 1948 ஜுலை 17-ல் அச்சிடப்பட்டது. பொறுக்குக் குழு கூடுவதற்கு முன்பே அது குழு லகுவாக கையாளுவதற்கு ஏற்ற முறையில் தயாரிக்கப்பட்டது இந்த ஆவணம்; பொறுக்குக் குழுவுக்கு அறிமுகப்படுத்தப்பட்டது இந்த இலாகா மசோதாதான். நான் ஏற் கனவே எடுத்துக் காட்டியதுபோன்று இடையில் வந்த இதர இலாகா மசோதாவில் ஒரு முக்கிய மாற்றம் செய்யப்பட்டது; அதாவது, வெவ்வேறு பாகங்கள் ஒரு முழுமையானதாக கலந்துள்ளன; தனிப் பாகங்களை அவற்றின் முதலிலிருந்த உருவத்தில் மறுபடியும் வைப்பதை சாத்தியமற்றதாக்கும் முறையில் இது செய்யப்பட்டது. இது ஓர் ஆய்வு மாணவனால் செய்ய முடியலாம்; அத்தகைய மனப் பாங்கோ விருப்பமோ இல்லாத உறுப்பினர்களால் முடியாது. எனவே, முற்றிலும் தனியான விஷயங்களை கவலையாக்கியதன் மூலம் இலாகாக்குழு முதல் தவறைச் செய்தது. முன்பு கண்டிராத, ஒரு முக்கிய அரசியல் சட்ட முறைமையை இது அறிமுகப்படுத்துகிறது.

பிறகு ஐயா, இலாகாக் குழு தங்கள் இலாகா மசோதாவில் முக்கிய மாற்றங்களைப் புகுத்தியுள்ளது. பொறுக்குக் குழுவின் நட வடிக்கைகளில் இலாகா மசோதா ஏற்படுத்திய தாக்கத்தையும் விளைவையும் நாம் பரிசீலிக்கும்போது அது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும். நான் சுட்டிக்காட்ட முயற்சி செய்வதுபோல, இலாகா மசோதா மிக முக்கிய மாற்றங்களை அறிமுகப்படுத்தியது. மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரோ, பொறுக்குக் குழு உறுப்பினர் களோ, இந்த அவையின் உறுப்பினர்களோ இந்த மாற்றங்களின் முக்கியத்துவத்தைப்பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்று தோன்றவில்லை என்பதை நான் அவசியம் சுட்டிக்காட்டியாக வேண்டும். உண்மையில், சென்ற முறை தீர்மானம் பரிசீலிக்கப்படு வதற்கு ஆதரவாக பேசியபோது சட்டத்துறை அமைச்சர், மசோதாவில்

செய்யப்பட்டுள்ள கணிசமான மாற்றங்களைச் சுட்டிக்காட்டினார். ஆனால் எல்லா மாற்றங்களும் பொறுக்குக் குழுவால் செய்யப் பட்டன என்று வலியுறுத்துவதில் அக்கறை காட்டினார். அவரது உரையை நான் கவனத்துடன் குறிப்பு எடுத்துக்கொண்டேன். அதிகார பூர்வ தஸ்தாவேஜுகளிலிருந்து இதைச் சரிபார்த்துக் கொள்ளலாம். ஜோகேந்திர நாத் மண்டலின் மூல மசோதாவிலிருந்து இறுதி மசோதா எவ்விதம் பெருமளவுக்கு விலகிச் செல்லுகிறது என்பதை அவர் சுட்டிக் காட்டினார். பொறுக்குக் குழுவிற்கு சமர்ப்பிக்கப்பட்ட மசோதா என்று அழைக்கப்பட்டதில் அவரது இலாகா செய்த தீவிரமான மாற்றங் கள் பற்றி மாண்புமிகு அமைச்சர் முற்றிலுமாக அறிந்திருக்கவில்லை என்பதை அது காண்பிக்கிறது. குறுகிய கால அறிவிப்புக் கேள்வி என்ற முறையில் அமைச்சரைப் பின்வருமாறு கேட்டேன்: மூல மசோதாவில் கணிசமான மாற்றங்களைச் செய்ய குழுவிற்கு இலாகாவால் அதிகாரம் அளிக்கப்பட்டதா? அவர்களுக்கு அத்தகைய அதிகாரம் எதுவும் இருக்கவில்லை என்று பதில் வந்தது. மறுபுறத்தில், மாற்றங்கள் எதுவும் இருந்தால், சட்டத்துறை அமைச்சர்தான் அவற் றிற்கு பொறுப்பு என்றார்; திரு. ராம்நாத் சிங்கின் துணைக் கேள்விக்கு சட்டத் துறை அமைச்சர் பின்வருமாற பதிலளித்தார்: ''நான் எந்த மாற்றங்களையும் செய்யவில்லை.''

உண்மையில், விஷயம் என்னவெனில், கலாசார மசோதா கணிசமான மாற்றங்களைச் செய்ததா என்பதே; தாம் அத்தகைய மாற்றம் எதையும் செய்யவில்லை என்றும் பொறுக்குக் குழு மட்டுமே மாற்றங்களைச் செய்தது என்றும் அவர் மிகத் தெளிவாகக் கூறினார். பொறுக்குக் குழு மாற்றங்களைச் செய்தது என்றும் இலாகாக்குழு எந்த கணிசமான மாற்றங்களையும் செய்யவில்லை என்றும் அவை முழுவதும் கருதுவதாகத் தோன்றுகிறது. சென்ற தடவை நான் பேச எழுந்தபோது, இலாகாக்குழு கணிசமான மாற்றங்கள் செய்தது என்பது பற்றி குறிப்பிட்டுச் சொல்லும்படி பலமுறை நான் கோரப் பட்டேன். இந்த விஷயத்தை இங்கு நான் குறிப்பிடுவது மிக முக்கிய மானது; ஏனெனில், பொறுக்குக் குழு உறுப்பினர்களோ, அவையோ அல்லது சட்டத்துறை அமைச்சரோ கூட மசோதாவில் கணிசமான மாற்றங்கள் உண்மையில் பட்டுள்ளன என்பதை அறிந்திருக்க வில்லை என்பதை இது எடுத்துக் காட்டுகிறது; எனவே நான் பணி வுடன் கூறுகிறேன்: இலாகாக் குழுவால்தான் உண்மையில் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டன, அதே சமயம் பொறுக்குக் குழுவால் அரிதாகவே மாற்றங்கள் செய்யப்பட்டன என்று நான் காண்பிக்க முடிந்தால், முக்கியமான பரிசீலனைகளை அவைமுன் அது எழுப்பும்.

முன்னதாகவே தயாராக வைக்கப்பட்டிருந்த புது மசோதா பொறுக்குக் குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்டது. பொறுக்குக் குழுவின் அறிக்கையில் இருந்த உறுதிமொழி என்னவெனில், அது கணிசமான மாற்றங்கள் எதையும் கொண்டிருக்கவில்லை என்பதாகும்; மேலும், விதிகளை மாற்றி அமைத்தது, அவற்றின் எண்கள் மாற்றி அமைத்தது. மற்றும் வரைவுத் தன்மை வாய்ந்த சில ஒழுங்குபடுத்தும் மாற்றங்கள் மட்டுமே செய்யப்பட்டன என்று பொறுக்குக் குழுவின் அறிக்கையில் நாம் பெறும் உறுதிமொழி இதுதான். எனவே, இலாகாக் குழுவில்தான் அந்தக் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டன என நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். மாற்றங்களைத் தேடிக் கண்டுபிடிப்பது சுலபமானதல்ல; அவற்றைக் கவனிக்கத் தவறியதற்காக மதிப்பிற்குரிய உறுப்பினர்களை நான் குறை கூற முடியாது. ஓர் ஒப்பு நோக்கு விளக்க அட்டவணையை எண்கள் மட்டுமல்லாமல், மூன்று மசோதாக்களின் விதிகள், துணைவிதிகளை பக்கம் பக்கத்தில் எடுத்துக்காட்டும் விளக்க அட்டவணையை தயாரிக்க வேண்டி வந்தது. இலாகா மசோதாவின் ஒரு நகல் வேண்டுமெனக் கேட்டேன்; ஆனால், அது எனக்கு அளிக்கப்படவில்லை. ஐயா, அந்த இலாகாவின் மசோதா மிக முக்கியமான ஆவணம்; உறுப்பினர்களுக்கு அது கொடுக்கப்பட வேண்டும் எனக் கூறுகிறேன். பொறுக்குக் குழு முன் அளித்த வாக்குமூலம் பற்றிய அறிக்கை நமக்கு அளிக்கப்பட்டது. ஆனால் இறுதியான மசோதாவை உருவாக்குவதில் பெரும் பங்கு வகித்த அதிமுக்கியமான ஆவணம் அளிக்கப்படவில்லை. மிக மிகச் சிரமத்துடனேயும் நான் ஒரு பிரதியை பெற்றேன்; அதுவும் இலாகாவிடமிருந்து பெறவில்லை. மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினரின் தயவால்தான் அது கிடைத்தது. ஐயா, பின்பு இணையான கட்டங்களில் மூல மசோதாவின் பொருத்தமான ஷரத்துக்களையும் அதற்கு ஒத்திருக்கும் இலாகா மசோதா, இறுதி மசோதாவின் ஷரத்துக்களையும் கொண்ட ஒப்பு நோக்கு அறிக்கையைத் தயாரித்தேன்; ஒப்பு நோக்கும் விளக்க அட்டவணையை குறிப்பிட்டுக் காட்டினாலன்றி, மாற்றங்களின் உண்மையான முக்கியத்துவத்தை விளக்கிக் கூறுவது மிகவும் கடினமானது என்பதை நான் காண்கிறேன்.

இணையான பத்திகளில் மசோதாக்களை அச்சிட முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அது பூர்த்தி செய்ய முடியாமல் போனதற்கு, உறுப்பினர்களின் வசதிக்காக அவர்களின் கரங்களில் அதை வைக்க முடியாமல் போனதற்கு வருந்துகிறேன். ஆனால், செய்யப்பட்ட கணிசமான மாற்றங்களை ஒவ்வொன்றாகக் குறிப்பிட்டுக் கூறுகிறேன். அவ்வாறு செய்யும்போது இலாகாக்குழு செய்த மிக முக்கிய மாற்றங்

களைக் குறிப்பிட்டுக் கூறுவேன். இலாகாக்குழுவால் செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றிய பரிசீலனையின் பேரிலே இந்த விஷயம் முடிவு செய்யப்படும். இலாகாக் குழு செய்த மாற்றங்களை - அதிகாரபூர்வமாக இலாகாவால் மறுக்கப்பட்ட, அவையின் உறுப்பினர்கள் அறியாத மாற்றங்களை - நான் எடுத்துக் கூறுவேன். மூல மசோதாவின் குறிப்பிட்ட சில விதிகளை தயவு செய்து அவை பரிசீலிக்கட்டும்.

பாகம் I-ல், விதி 2, துணை விதி (3) (4). இந்த விதிக்கு ஒத்ததான இலாகா மசோதாவின் விதி 2, துணை-விதி(2). மூலமசோதா கூறுகிறது:

> "மாறாக நிரூபிக்கப்பட்டாலன்றி, மதத்தால் முஸ்லீம், கிருஸ்துவர், பார்ஸி அல்லது யூதர் அல்லாத ஒவ்வொரு நபருக்கும் இந்தத் தொகுப்பு முழுதும் பொருந்தும் என்று ஊகிக்கப்படும்."

மூல மசோதாவில், அது வெறும் தற்கால ஏற்பு நியமம்தான். ஆனால் இலாகா மசோதாவில் அது நிச்சயமான சட்டவிதி. மூல மசோதாவில், ஒரு மனிதன் முஸ்லீம், கிருஸ்தவர், பார்ஸி அல்லது யூதனாக இல்லாமலிருந்தால், அவர் இந்து என்று தற்காலிகமாக அங்கீகரிக்கப்படுவார். அது சட்டத்தின் ஒரு விதியாகாது, ஆனால் ஊக விதியாகும். இலாகா மசோதாவில், பின் கண்டவாறு இது மாற்றப் பட்டது:

> "மதத்தால் ஒரு முஸ்லீம், கிருஸ்தவர், பார்ஸி அல்லது யூதர் அல்லாத மற்ற எந்த நபருக்கும் இந்த சட்டத் தொகுப்பு பொருந்தும்."

இரண்டிற்கும் வித்தியாசம் என்னவெனில், மூல மசோதாவின் படி முஸ்லீம், கிருஸ்தவர், பார்ஸி அல்லது யூதராக அல்லாத எந்த மனிதரும் இந்து என்று ஊகிக்கப்படுவார்; இந்துச் சட்டத்திற்கு உட்படுத்தப்படுவார்: இலாகா மசோதாவில் அது பின்வருமாறு கூறப் பட்டுள்ளது.

> "மதத்தால் முஸ்லீம், கிருஸ்தவர், பார்ஸி அல்லது யூதர் அல்லாத எந்த ஒருவருக்கும் இந்தச் சட்டத் தொகுப்பு பொருந்தும்."

ஐயா, இது ஒரு கணிசமான மாற்றத்தைக் கொண்டுவருவதாகும். மூல மசோதாவில் உத்தேச விதியாக இருந்தது இப்பொழுது ஒரு நிச்சயமான விதியாகி முஸ்லீம்கள், கிருஸ்தவர்கள், பார்ஸிகள், யூதர்கள் அல்லாத எந்த ஒருவருக்கும் இந்துச் சட்டம் பொருந்தும் என்று வரையறுத்துக் கூறுகிறது.

அந்த ஷரத்தில், பின்வருமாறு கூறப்படுகிறது:-

''எவர் ஒருவருக்கு இந்துச் சட்டம் பொருந்தாது என்று நிரூபிக்கப்பட்டால், அவருக்கு இந்துச் சட்டம் பொருந்தாது.''

விஷயங்களை சொல்லும் முறை திருப்திகரமாக இல்லை என்று நினைக்கிறேன். இறுதி மசோதா அவர்களுக்கு பொருந்தும்; ஆனால் இந்த ஷரத்து இச்சட்டத்தையே மாற்றுகிறது.

ஐயா, இது ஒரு தீவிரமான மாற்றத்தைக் கொண்டுவந்துள்ளது என்று கூறுகிறேன். சட்டத்தின் கொள்கை மீது நான் அக்கறை கொள்ள வில்லை. ஆனால் இலாகா மசோதாவில் உள்ள மாற்றங்கள் பற்றி கவலை கொள்கிறேன்; இதுபற்றி பொறுக்குக் குழு அறிந்திருக்க வில்லை என்று தோன்றுகிறது.

அடுத்து, ஐயா, மசோதாவின் மற்றொரு பகுதிக்கு வருகிறேன்....

**திரு. தாஜாமுல் உசேன் :** ஓர் ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்ப தங்கள் அனுமதியைப் பெறலாமா?

**திரு. அவைத் தலைவர் :** ஓ, தாராளமாக.

**திரு. தாஜாமுல் உசேன்:** எனது கற்றறிந்த நண்பர் திரு. நசிருத்தீன் அகமது, பொறுக்குக் குழு இலாகா மசோதாவை பரிசீலித் ததே தவிர மூல மசோதாவை அல்ல என்பதை நிலைநாட்ட முயன்று கொண்டிருக்கிறார். பொறுக்குக் குழுவால் மூல மசோதா பரிசீலிக்கப் பட்டது என்று தாங்கள் அளித்த தீர்ப்புக்குப் பின் அவர் இவ்வாறு சொல் கிறார். இப்பொழுது தங்கள் தீர்ப்பு பற்றி தெரிந்துகொள்ள விரும்பு கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவரது வாதத்தை கேட்டுக் கொண் டிருக்கிறேன்; மசோதா சுற்றுக்கு அனுப்பப்பட வேண்டும் என்ற அவரது திருத்தத்திற்கும் அதைப் பொறுக்குக் குழுவுக்கு மீண்டும் அனுப்ப வேண்டுமென்ற மற்றொரு திருத்தத்திற்கும் ஆதரவாக அவர் பேசிக் கொண்டிருக்கிறார் என்று உணர்கிறேன். எனவே, எனது தீர்ப்பு அமுலில் இருக்கிறது என்றாலும் அவர் ஒரு வாதத்தை எடுத்துக் கூற முயலுகிறார் என நினைக்கிறேன். அதாவது திட்டத்திலும் உள் ளடக்கத்திலும் திரு. ஜோகேந்திரநாத் மண்டல் அறிமுகப்படுத்திய மூல மசோதாவிலிருந்து கணிசமான மாற்றம் செய்யப்பட்டுள்ளதால்,

இப்பொழுது மறுபடியும் சுற்றுக்கு அனுப்பப்படுவது அல்லது அதே பொறுக்குக் குழுவிற்கு மீண்டும் அனுப்பப்படுவது அவசியம் என்று கூறுகிறார். இதுவரை நான் புரிந்துகொண்டபடி, அவர் கூறுவது என்னவெனில், முதல் மசோதாவில் ராவ் குழுவின் மூலத் திட்டப்படி, சட்டத்தின் பல்வேறு பகுதிகள் பல்வேறு உட்பிரிவுகளாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்பதாகும். ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரிப்பது சாத்தியமே. ஆனால் இப்போதையத் திட்டப்படி, எல்லாம் ஒன்றிணைந்த ஒன்றாக ஆக்கப்பட்டுள்ளது; அவரவர்கள் ஏற்றுக் கொள்கிற சில பாகங்களை எடுத்துக் கொள்வதும் அவர்கள் ஒப்புக் கொள்ளாததை விட்டுவிடுவதும் இப்பொழுது கஷ்டம், அவர் கூறுவது எந்த அவிற்குச் சரி என்பது வேறுவிஷயம்; எனவே மசோதாவை கருத்தறிய மீண்டும் சுற்றுக்கு அனுப்புவது அவசியம் என்று அவர் கூறுகிறார். விஷயத்தை இதுவரை நான் அறிந்து கொண்டது இவ்வாறு தான்; அவர் எனது தீர்ப்பை எதிர்த்துக் கூறுகிறார் என்று நான் நினைக்கவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** கிஞ்சித்தும் இல்லை ஐயா, தங்களின் தீர்ப்பு குறித்துச் சந்தேகப்படுவதுகூட சரியல்ல. தீர்ப்பு ஒரு சட்ட விஷயம்; அது மிகச் சட்ட நுணுக்கத்தன்மை வாய்ந்தது. எனது ஒழுங்குப் பிரச்னை சில ஊகங்களை அடிப்படையாகக் கொண்டது; அவற்றைத் தெளிவாக நிரூபிக்க முடியவில்லை.

**திரு. அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது வாதத்தைத் தொடரலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனது கருத்து அதுதான் என்பதை சாராம்சத்தில் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இது அதற்கு மேலும் செல்லுகிறது. உண்மையில், மாண்புமிகு சட்டத் துறை அமைச்சரும் - அவர்தான் இலாகா மசோதாவுக்குப் பொறுப்பு - பொறுக்குக் குழு உறுப்பினர்களும் இலாகா மசோதாவில் செய்யப்பட்ட கணிசமான மாற்றங்களைப்பற்றி சரி நுட்பமாக அறிந்திருக்கவில்லை எனில், சட்ட ரீதியாகவும் யதார்த்தமாகவும் அவர்கள் இரண்டையும் கணிசமாகப் பரிசீலித்தார்கள் என்று எப்படிக் கூறமுடியும்? எனது நோக்கம் இதை எடுத்துக் காட்டுவதே. சட்ட ரீதியில் அவர்கள் இரண்டையும் பரிசீலித்தவர்கள்; ஆனால் உண்மையில் அவர்கள் போதுமான அளவு பரிசீலித்தார்களா என்பதுதான் கேள்வி. அவர்களின் தீர்ப்பு காரணமாக, சட்ட சம்பந்தமாக எத்தகைய பிரச்சினையும் எழவில்லை; அதன் நியாயத்தை நான் மரியாதையுடன் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால்

நான் வலியுறுத்தும் விஷயம் என்னவெனில், அவர்கள் இரண்டையும் பரிசீலித்தபோதிலும், ஒரு முக்கிய கஷ்டத்தை அவர்கள் எதிர் நோக்கினர்; அதாவது, அவர்களுக்கு சமர்ப்பிக்கப்பட்ட மசோதா மூல மசோதாவின் மறு வரைவு என்றும், விதிகள் மாற்றி அமைக்கப் பட்டன என்றும், எந்தக் கணிசமான மாற்றங்களும் செய்யப்பட வில்லை என்றும் தெளிவான உறுதிமொழி அளிக்கப்பட்டது; என்றாலும், உண்மையில் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தன. நான் கூறும் விஷயம் என்னவெனில், சட்ட நுட்பரீதியில் பொறுக்குக் குழு மூல மசோதாவையும் இலாகா மசோதாவையும் பரிசீலித்த போதிலும், இந்த வெளிப்படுத்தப்படாத மாற்றங்கள் பற்றி தேவைப் படும் போதுமான பரிசீலனை மேற்கொள்ளப்படவில்லை, மேற் கொண்டிருக்கவும் முடியாது. இதுதான் முக்கியமான விஷயம். எனது நோக்கம் என்னவெனில், மசோதாவை மீண்டும் பொறுக்குக் குழு விற்கு அனுப்ப வேண்டும் அல்லது கருத்துக்கணிப்புக்காக சுற்றுக்கு அனுப்பவேண்டும் என்ற நிலையை தெளிவுபடுத்தத்தான்.

இலாகாக் குழு கணிசமான அளவு மேற்கொண்ட அடுத்த மாற்றம் விதி 2, துணை - விதி (4)-ல் காணப்படுகிறது. இங்கு புகுத்தப்பட்ட மாற்றம் இலாகாக் குழு செய்தது. மாற்றம் முற்றிலுமாக புதிது, அது மூல மசோதாவில் இல்லை; இது ஒரு முக்கியமான மாற்றம். இந்த மாற்றம் இலாகாக் குழுவால் மசோதாவில் அறிமுகப்படுத்தப்பட்டதே தவிர, பொறுக்குக் குழுவால் அல்ல. இது அதி முக்கியமான விஷயம். இலாகா மசோதா பின்வருமாறு வழி வகை செய்கிறது:

> "2(4) விசேஷத் திருமணச் சட்டம் 1872-ல் எது எப்படிக் கூறப்பட்டிருந்த போதிலும் (1872 சட்டம் III) அந்த சட்ட ஷரத்துப்படி இந்த சட்டத் தொகுப்பு அமுலுக்கு வரும் முன் திருமணம் செய்து கொண்ட எல்லா இந்துக்களுக்கும் இந்த சட்டத் தொகுப்பு பொருந்தும்."

இம்மாதிரி எதுவும் மூல மசோதாவில் இல்லை; விசேஷ திருமணச் சட்டம் 1872-ன் கீழ் திருமணம் செய்துகொண்டவர்கள் அந்தச் சட்ட எல்லைக்கு உட்படுவர் என்று குறிப்பிடுவதோடு மூல மசோதா நின்றுகொண்டுள்ளது. அதாவது விவாகரத்து, ஜீவனாம்சம் மற்ற ஷரத்துகள் பொறுத்தவரை அந்தச் சட்டத்தின் கீழ் திருமணம் செய்து கொண்டவர்கள் 1872 விசேஷ திருமணச் சட்ட ஷரத்துகளால் ஒழுங்கு படுத்தப்படுவர்; இவை முற்றிலும் மாறானது. இன்றைய சட்டத் தொகுப்பிலிருந்து இது எவ்வளவு மாறுபட்டது என்பது மிக முக்கிய மல்ல. எனினும் இப்போதைய துணை விதியின்படி சட்டத் தொகுப்பு அமுலுக்கு வருமுன் 1872ம் ஆண்டு விசேஷத் திருமணச் சட்டத்தின்கீழ்

செய்யப்பட்ட திருமணங்கள் விசேஷத் திருமணச் சட்டத்தின் கீழ் அல்லாமல் இந்தச் சட்டத் தொகுப்பின் எல்லைக்கு உட்படும். இது இலாகா மசோதாவில் கொண்டுவரப்பட்ட ஒரு முக்கிய விலகல் அல்லது மாற்றம், பொறுக்குக் குழு இதனை அப்படியே ஏற்றுக் கொண்டது. இது ஒரு முக்கிய மாற்றம்; அது நல்லதா, கெட்டதா, அது நல்லெண்ணத்தில் செய்யப்பட்டதா இல்லையா என்பதல்ல பிரச்சினை; ஆனால் ஒரு முக்கிய மாற்றம் இலாகாக் குழுவால் செய்யப் பட்டது; செய்யப்பட்ட மாற்றம் பற்றிப் பொறுக்குக் குழுவிற்கு குறிப்பாகத் தெரிவிக்கப்படவில்லை. மூல மசோதாவின் விதிகள் பற்றிய குறிப்புகள் ஓரத்தில் கொடுக்கப்பட்டிருந்தாலும், அந்தத் துணை விதி முற்றிலும் புதிது; ஆனால் இது ஒரு மாற்றம் என்பது சுட்டிக் காட்டப்படவில்லை. துணை விதியில் உள்ள மாற்றங்களும் சுட்டிக் காட்டப்படவில்லை. உண்மையில் சாதாரண மசோதாக்கள், பொறுக்குக் குழுவிலிருந்து வெளிவரும்போது, பொறுக்குக் குழு செய்த மாற்றங்கள் கோடிட்டுக் காட்டப்பட்டிருக்கும். இந்த நடைமறை அவசியமில்லை என்று பொறுக்குக் குழு கூறுகிறது; காரணம் ஓரத்தில் குறிப்புகள் கொடுக் கப்பட்டுள்ளன என்பதால் ஓர இடக்குறிப்பு விதிகளுக்கு மட்டுமே; ஆனால் இந்த துணைவிதி (4) முற்றிலும் புதிது என்று கூறுகிறேன். இந்தத் துணை விதி பற்றிய குறிப்பு பாகம் I, பகுதி 6, பக்கம் 2-ம் மற்றும் விவர அட்டவணை I, பக்கம் 30 ஆகும். செய்யப்பட்ட மாற்றம் இங்கு குறிப்பாகவோ அல்லது கோடிட்டுக் காட்டியோ எடுத்துக் கூறப்படவில்லை. குறைந்தது அது ஒரு முக்கியத் தன்மை வாய்ந்த மாற்றம்; பொறுக்குக் குழுவின் விசேஷ கவனத்தை ஈர்க்கும் முறையில் செய்யப்படவில்லை; மாற்றத்தின் தன்மையும் சுட்டிக் காட்டப்படவில்லை. இது மாற்றம் 2. முக்கிய மாற்றங்களைப் பற்றியே இங்கு எடுத்துக் கூறுகிறேன். இத்தகைய மாற்றங்கள் பல உள்ளன. இலாகாவால் அறிமுகப்படுத்தப்பட்ட உண்மையான மாற்றங்கள் பற்றியும், பொறுக்குக் குழுவால் உண்மையில் அறிமுகப்படுத்தப்பட்ட மாற்றங்கள் பற்றியும் உறுப்பினர்களும் பொது மக்களுக்கும் தெரிந்து கொள்ள ஒரு பிரசுரம் எதிர்காலத்தில் கிடைக்க ஏற்பாடு செய்யப்படு மென நான் நம்புகிறேன். நான் மீண்டும் வலியுறுத்துகிறேன்: பொறுக்குக் குழு சில மாற்றங்களையே செய்தது; மிகக் கணிசமான மாற்றங்கள் இலாகாக் குழுவால் செய்யப்பட்டது.

மசோதாவின் மற்றொரு பாகத்திற்கு நான் வருகிறேன். முந்திய பழக்க வழக்கங்கள், நடப்பு ஆகியவை சம்பந்தமாக சட்டத் தொகுப்பு செயல்படுவது பற்றி எடுத்துரைக்க மூல மசோதாவின் பாகம் I, விதி 3-ல் வழிவகை செய்யப்பட்டுள்ளது:

''இந்த சட்டத் தொகுப்பில் கையாளப்படும் எந்த விஷயங்கள் பற்றியும் இங்கு தெளிவாகக் குறிப்பிடப்படாத எந்த பழக்கவழக்கங்களையும் அல்லது செயல்பாடுகளையும் அதன் ஷரத்துக்கள் விலக்கி வைக்கும்.''

மூல மசோதா ''பழக்க வழக்கங்களையும் செயல்பாடுகளையும்'' மட்டுமே விலக்கி வைக்கும்; மூல மசோதாவில் குறிப்பாக அங்கீகரிக்கப்படாத வேறு எல்லாப் பழக்க வழக்கங்களும் விலக்கி வைக்கப்படும். இலாகா மசோதாவில் இதற்கு ஒத்ததான ஷரத்துக்களைப் பார்ப்போம்; பொறுக்குக் குழு கேள்வி கேட்காமல் ஏற்றுக் கொள்ளப்பட்டவை இவை. மாற்றம் இலாகா குழுவால் செய்யப்பட்டது, பொறுக்குக் குழுவால் அல்ல. இலாகா மசோதாவில் விதி 4, இறுதி மசோதாவின் விதி 4 உடன் ஒத்ததாக உள்ளது. ஓரக் குறிப்பு ' 'சட்டத் தொகுப்பின் ஒதுக்கித் தள்ளும் விளைவு' ஆகும்; இது அதிகம் மாறுபட்டது; அது மசோதாவின் பாகமாக இல்லாததால் இந்தக் குறிப்பைப் பற்றி நான் வலியுறுத்தவில்லை; இலாகா மசோதா பின்வருமாறு கூறுகிறது:

''இந்தச் சட்டத் தொகுப்பில் மற்றபடி தெளிவாக வழிவகை செய்யப்படாத இந்தச் சட்டத்தின் எந்த வாசகம் அல்லது சூத்திரம் அல்லது விளக்க உரை அல்லது பழக்க வழக்கம் அல்லது செயல்பாடு அல்லது இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதற்குமுன் நடைமுறையில் இருந்த மற்ற எந்த சட்டமும் இந்த தொகுப்பு கையாளும் எந்த விஷயங்கள் மீதும் எந்த சட்டரீதியான விளைவையும் ஏற்படுத்தாது.''

வார்த்தை மாற்றங்கள் முக்கியமானவையல்ல; ஆனால், பல முக்கிய புதிய விஷயங்கள் இலாகா குழுவால் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. ''இந்து சட்டத்தின் எந்த வாசகம், சூத்திரம் அல்லது விளக்கு உரை'' மற்றும் அடுத்து இந்தத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்குமுன்பு நடைமுறையில் இருந்த மற்ற எந்த சட்டமும்'' - இவை முற்றிலும் புதிது. இந்த அவை ஒரு நிமிடம் யோசித்து மாற்றத்தின் தீவிரத் தன்மையைப் பரிசீலிக்கட்டும். மூல மசோதாவில் குறிப்பாக அங்கீகரிக்கப்படாத எல்லாப் பழக்கவழக்கமும் செயல்பாடுகளும் நிச்சயமாகப் போய்விடும். ஆனால், பல வாசகங்களிலும், சூத்திரங்களிலும், விளக்க உரைகளிலும் இந்த மசோதா குறும்பு செய்துள்ளது. இதனால் நீதிமன்றம், பிரிவி கவுன்சில் ஆகியவற்றின் தீர்ப்புகளும் மூல சமஸ்கிருத வாசகங்கள் அல்லது மிக உயர்ந்த நீதிமன்ற சட்டரீதியான விளக்கங்களும் அழிந்துவிடும்; அதுபோலவே இந்த சட்டத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பிருந்த எல்லாச் சட்டங்களும் புனித மூல வாக்கியங்கள் மற்றும் ஒன்றரை நூற்றாண்டுக்

காலமாக உள்ள செழுமையான சட்டமும் ஒரு கையெழுத்தால் ஒழிக்கப் படும். ''இந்துச் சட்டத்தின் எந்த வாசகமும், சூத்திரமும் அல்லது விளக்க உரையும்'' என்பது எல்லாவற்றையும் உட்படுத்தும்போலும். ''இந்த சட்டத் தொகுப்பு அமுலுக்கு வருவதற்கு முன்பு நடைமுறை யில் இருந்த எந்தச் சட்டமும்'' என்பது இதில் உட்படுத்தப்படலாம் போலும்; நான் இவ்வாறு கூற அனுமதிக்கப்பட்டால், மசோதாவால், குறிப்பாக அங்கீகரிக்கப்படாத இந்துச் சட்டத்தின் எல்லா மூல வாக்கி யங்களும், விளக்க உரையும், சூத்திரமும் பயனற்றுப் போய்விடும். இது ஒரு கணிசமான மாற்றம்.

**திருமதி ஜி. துர்க்காபாய்** (மதராஸ் : பொது) : ஓர் ஒழுங்குப் பிரச்சினை. தங்கள் தீர்ப்பின் தகுதி குறித்து ஐயம் எழுப்புவது மதிப் பிற்குரிய உறுப்பினரின் உரிமைக்கு உட்பட்டதா? மசோதாவை 'இலாகா மசோதா' என்று கூறுவதன் மூலம் அவர் பொறுக்குக் குழு உறுப்பினர்களை அவமதிக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். பொறுக்குக் குழுவின் உறுப்பினர்கள் மசோதாவை முற்றிலுமாகப் பரிசீலித்தனர்; எல்லா மாற்றங்களையும் கவனத்தில் கொண்டனர். அதை இலாகா மசோதா என்று அவர் குறிப்பிடுவதால் இனி அது குறித்து அவர் வாதிக்க முடியாது. இவ்வாறிருக்கும்போது அவர் கூறுவது முறையா என்று தங்களின் தீர்ப்பை அறிய நாங்கள் விரும்பு கிறோம்.

**அவைத் தலைவர் :** இது ஓர் ஒழுங்கு பிரச்சனை அல்ல என்று அஞ்சுகிறேன். இவை அவரவரது சொந்தக் கருத்துகள்; இவை சில உறுப்பினர்களைக் கோபமூட்டுவதைப் புரிந்து கொள்கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் இலாகா மசோதா என்ற சொற்தொடரை உபயோகிக்கும்போது, விஷயங்களை பொறுக்குக் குழு உறுப்பினர்கள் பரிசீலிக்கவில்லை என்று அவர் கூறுகிறார் என்று நான் நினைக்க வில்லை. ஒவ்வொரு தடவையும் ''பொறுக்குக் குழு உறுப்பினர்களின் சௌகர்யத்திற்காக இலாகாவில் வரைவு செய்யப்பட்ட மசோதா'' என்று சொல்வதற்குப் பதிலாக சுருக்கமாக 'இலாகா மசோதா' என்று சொற்தொடரை அவர் உபயோகித்து வருகிறார் என்பதை நான் கவனித்து வருகிறேன். இதற்குமேலும் இதில் எதுவும் இருப்பதாக நான் கருதவில்லை. இதனை வேறு எந்த வகையிலும் நாம் அர்த்தம் செய்து கொள்ள வேண்டாம். இலாகா மசோதா என்பது அதற்கான ஒரு சுருக்கமான சொற்றொடர். முன்பு மதிப்பிற்குரிய மற்றொரு உறுப் பினர் இந்த விஷயத்தைக் குறிப்பிட்டபோது ஒன்றைக் குறிப் பிட்டேன். அப்போது மதிப்பிற்குரிய இந்த உறுப்பினர் அன்று

அவையில் இருந்தாரா என்று எனக்குத் தெரியாது; பொறுக்குக் குழு செய்த மாற்றங்கள் கணிசமானவை; மாற்றங்கள் கணிசமானவை என்கிறபோது இந்த மசோதா பொறுக்குக் குழுவிற்கு திரும்ப அனுப்பப்பட வேண்டும் என்றோ அல்லது மறுபடி சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்றோ அவர் கூறுவது அவரது உரிமைக்குட்பட்டதே. விஷயம் அதுதான் என தோன்றினாலும், அவர் பாணியிலேயே அவர் பேசுகிறார்; மிக விரிவான முறையில் சொல்கிறார்; இதையே அவர் சுருக்கமாகக் கூறியிருக்க முடியும்.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** நான் கூறுவது என்னவெனில், பொறுக்குக் குழு உறுப்பினர்கள் அறியாமையில் இருந்ததாக அவர் குறை கூறுகிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** கிஞ்சித்தும் அப்படி இல்லை. ''அறியாமை'' என்று நான் குற்றம் சாட்டவில்லை; இலாகா மசோதாவைத் தொடர்ந்த இயல்பான கவனமின்மையால் மாற்றங்களுக்கான எந்தத் தடயங்களையும் இந்த மசோதா அளிக்கவில்லை (குறுக்கீடுகள்).

**அவைத் தலைவர் :** அமைதி, அமைதி.

**திரு. நசிருத்தீன் அகமது :** ''அறியாமை'' என்ற சொல்லை நான் வாபஸ் பெறுகிறேன். ஆனால், இலாகா மசோதாவின்பால் கொண்டுள்ள தவறான நம்பிக்கையால் அவர்கள் அதன் செல்வாக்கிற்குட்பட்டனர். (குறுக்கீடுகள்). இன்னமும் இது அவருக்குத் தெளிவாகவில்லையெனில், அவருக்காக வருந்துகிறேன்; மதிப்பிற்குரிய உறுப்பினர் இன்னமும் அதே சிந்தனையால் பாதிக்கப்பட்டிருக்கிறார்.

**அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் வேறு ஒரு முறையில் தொடரட்டும். இந்த விஷயத்திற்கு அவர்கள் அதிக கவனம் அளித்திருக்க வேண்டுமென்று அவர் சொல்லட்டும்.

**நசிருத்தீன் அகமது :** நான் கூறுவதன் பொருள் அதுதான். உண்மையில், எனது வாதத்திற்கு எந்தக் கடுமையான பதப்பிரயோகமும் எனக்கு தேவை இல்லை. பதப்பிரயோகத்தைவிட காரணத்தை நான் அதிகமாக நம்புகிறேன். அந்தக் கடினமான பதப்பிரயோகத்தையும் நான் பயன்படுத்தியிருந்தால், அது நாடாளுமன்ற மரபு தவறியதாக இல்லாவிடினும், நான் அதை வாபஸ் பெறுகிறேன். மீண்டும் என் பேச்சைத் துவக்குகிறேன்.

**அவைத் தலைவர்:** அவர் அதை திரும்பக் கூறத் தேவையில்லை; அவர் தொடர்ந்து பேசலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மற்ற விஷயம் என்னவெனில், கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்பது மட்டுமல்ல, அந்த மாற்றங்கள் குறித்த தெளிவான அறிவிப்பு எதுவும் பொறுக்குக் குழுவிற்கு அளிக்கப்படாமல் அந்த மாற்றங்கள் செய்யப்பட்டன....

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இதைத்தான் நாங்கள் ஆட்சேபிக்கிறோம். அவர் இவ்வாறு கூறமுடியாது. முழுவதையும் நாங்கள் நன்றாக அறிந்திருந்தோம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** மாண்புமிகு சட்ட அமைச்சர் மாற்றத்தை அறிந்திருக்கவில்லையெனில், கணிசமான மாற்றங்களைச் சுட்டிக்காட்டும்படி மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் திரும்பத் திரும்ப என்னைக் கேட்டார்கள் என்றால், அவற்றைப் பற்றி அவர்கள், தெரியாமல் இருந்தார்கள் என்பதை அது காண்பிக்கிறது; மாற்றங்களை அறிந்துகொள்ளாமலே நல்லெண்ணத்தில் அவர்கள் அவற்றை ஏற்றுக் கொண்டனர் என்பதையே அது காட்டுகிறது. மசோதாவை அபிவிருத்தி செய்வதாக நினைத்து ஒரு புத்திசாலியால் நல்லெண்ணத்தில் சில மாற்றங்கள் அறிமுகப்படுத்தப்பட்டன என்று நினைக்கிறேன்; இதன் மூலம் முற்றிலும் ஒரு புது மசோதாவை நாம் தயாரிப்பதை அவர் உணரவில்லை; யாரும் இதைக் கண்டு கொள்ளவுமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** உண்மையில் நான் இதை எதிர்த்து கண்டனம் செய்ய வேண்டும். இது வரைவு செய்பவர் மீது தொடுக்கப்படும் ஒரு கடும் கண்டனமாகும். பொறுக்குக் குழு எல்லாவற்றையும் பரிசீலித்தபின், மசோதாவில் மாற்றங்கள் செய்ய வேண்டுமென ஒரு வரைவாளர் மூளையில் உதித்தது என்று அனேகமாக கருத்துத் தெரிவிக்கிறார் என் நணபர். இதை எதிர்த்து என் கடுமையான கண்டனத்தைத் தெரிவிக்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு எதிராக அவர் குற்றம் சாட்டும் முறையை எதிர்த்து நாங்கள் கண்டனம் தெரிவிக்கிறோம்.

**அவைத் தலைவர் :** பொறுக்குக் குழு அறிக்கைக்குப் பின் மாற்றங்கள் செய்யப்பட்டனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதைத்தான் அவர் குறிப்பாய் தெரிவிக்கிறார்.

**அவைத் தலைவர் :** ''முன்பு'' என்று கூறுகிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஆம் ஐயா, பொறுக்குக் குழு கூடுவதற்குமுன் மாற்றங்கள் செய்யப்பட்டன என்று நான் கூறினேன் என்பது முற்றிலும் உண்மை.

**திரு. அவைத் தலைவர்:** கொஞ்சம் தவறாகப் புரிந்து கொண்டதாகத் தோன்றுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனக்கு கருத்து எதுவும் இல்லை. எனது நண்பரின் உரையை நான் புரிந்து கொண்டிருக்கிறேனாகில், அதன் பொருள், எது பற்றியும் கவனிக்காமல் பொறுக்குக் குழு கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்திட்டது என்பதாகும். இல்லையெனில், பொறுக்கக் குழு தன் பணியை முடித்த பின்பு, வரைவாளர் தமது மூளையில் உதயமானபடி சில மாற்றங்களை அறிமுகப்படுத்தினார் என்பதாகும். வேறு எந்தப் பொருளும் இதற்கு இருக்க முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாற்றங்கள் நல்லெண்ணத்தில் செய்யப்பட்டனவா, நல்லெண்ணமற்ற முறையில் செய்யப்பட்டனவா என்பது நாம் பரிசீலிக்க வேண்டிய விஷயம் அல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்த நண்பரும், பொறுக்குக் குழு செய்த மாற்றங்கள் என்று கருதுபவற்றை வரிசைப் படுத்திக் கூறினால் நான் கேட்கத் தயாராக இருக்கிறேன். பொறுக்குக் குழு சில மாற்றங்களைச் செய்தது என்று வைத்துக்கொண்டாலும், அது மட்டுமே கருத்தறிய மீண்டும் சுற்றுக்கு அனுப்புவதற்கு போதுமான காரணமாகுமா என்று அறிய விரும்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இல்லை, இல்லை. அந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவில் செய்யப்பட்டன என்று ஒருபோதும் நான் கூறவில்லை.

**அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு நான் கூறும் ஆலோசனை என்னவெனில், அவர் கருத்துப்படி கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்று வைத்துக் கொண்டாலும், அவர் கோரிக்கை போதுமான அளவு பலமானது; மாற்றங்கள் அறியாமையால் செய்யப்பட்டனவா, நல்லெண்ணமற்றதாகச் செய்யப்பட்டனவா என்பதை அவர் கூறத் தேவையில்லை. பொறுக்குக்

குழு, திறந்த மனதுடன் எல்லா விஷயங்களையும் பரிசீலித்து மாற்றங்களைச் செய்திருக்கலாம். இன்னமும், கணிசமானத் தன்மை கொண்ட மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளதால் மசோதா கருத்துக்காக மறு சுற்றுக்கு அனுப்பப்படவேண்டும் என்று அவர் நினைக்கிறார்; மாற்றங்கள் முக்கியமானவை என்று அவர் நம்பினாலும், மற்றவர்கள் அதை ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை. கருத்துக்கள் வேறுபடலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** பொறுக்குக் குழுவால் செய்யப்பட்ட மாற்றங்கள் என்ன என்பதை எடுத்துரைக்க வேண்டியது என் பொறுப்பு என்று மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் கூறினார். பொறுக்குக் குழுவால் செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றி அவையின் கவனத்தை நான் ஈர்க்கவேயில்லை என்று திரும்பத் திரும்பக் கூறுகிறேன். மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரின் மனதை அரித்துக் கொண்டிருக்கும் தவறு அதுதான் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அது மாதிரி எதுவும் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் செய்யப்பட்டன என்பதை அவர் வலியுறுத்திக் கூறுகிறார். இது வரையில், நான்குறிப்பிட்டு வந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் செய்யப்பட்டவையல்ல; மாறாக அவை இலாகாக் குழுவால் செய்யப்பட்டவை.

**அவைத் தலைவர் :** அமைதி, அமைதி, இங்குதான் பிரச்சினை வருகிறது. யார் மாற்றங்களைச் செய்திருந்தாலும், பொறுக்குக் குழு அவற்றை ஏற்றுக் கொள்ளும்போது அவை பொறுக்குக் குழுவால் செய்யப்பட்ட மாற்றங்களாகவே கருத வேண்டும்; பொறுக்குக் குழுவுக்குத் தெரியாமல் மற்றவர்கள் செய்த மாற்றங்களாகக் கருதலாகாது. எனவே, மதிப்பிற்குரிய உறுப்பினர் இம்மாதிரியான குற்றச்சாட்டை சுமத்த வேண்டிய அவசியமில்லை. அவை யாரால் செய்யப்பட்டிருந்தாலும் - ஒரு தனி உறுப்பினர், அல்லது சட்ட அமைச்சகம், வரைவுக் குழு அல்லது வேறு எவரது விருப்பப்படி செய்யப்பட்டிருந்தாலும், இந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் செய்யப்பட்டவை என்று நினைத்துக் கொண்டு பேச்சைத் தொடரவேண்டும். அவை கணிசமான மாற்றங்கள் என்று காண்பிக்க அவர் பேச்சைத் தொடர வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனது சிரமம் என்னவெனில் நான் இதோடு நிறுத்திக்கொள்ள முடியாது. மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் புகுத்தப்பட்டன, வரைவுக் குழுவால் அல்ல என்று மாண்பு மிகு சட்டத்துறை அமைச்சர் வலியுறுத்திக் கூறுகிறார். பொறுக்குக் குழு விசுவாசத்துடனும் நல்லெண்ணத்துடனும் வரைவுக்குழு புகுத்திய மாற்றங்களை ஏற்றுக் கொண்டது. இது தெள்ளத் தெளிவானது. பொறுக்குக் குழு அதை ஏற்றுக்கொண்டபோது, அது மாற்றம் என்று தெரிந்து தனது சிந்தனையைச் செலுத்தவில்லை. மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் தெரிந்து கொள்ளாமல் இருப்பதுபோல, பொறுக்குக் குழுவும் தெரிந்து கொள்ளாமல் இருந்திருந்தால், இலாகாக் குழு புகுத்திய இந்த மாற்றங்களை யாந்தரீகமாக அவர்கள் ஏற்றுக் கொண் டனரே தவிர, இந்த மாற்றங்கள் எல்லாவற்றையும் முழுமையாகப் புரிந்து கொண்டு அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்று கருதலாம். இந்த விஷயம்தான் எனது நிலையை பலமாக்குகிறது. இவை பொறுக்குக் குழு விரும்பியே செய்த மாற்றங்கள் என்பது மட்டுமல்ல; அவர்கள் செய்த மாற்றங்கள் கணிசமானவை; இதை புரிந்து கொள்ளாமலே அவர்கள் மாற்றங்களை ஏற்றுக்கொண்டனர். இது எனது நிலையை மேலும் வலுவாக்குகிறது. உண்மையில், இலாகா மசோதா, எந்த ணிசமான மாற்றமும் இல்லாத மறு வரைவு மட்டுமே என்று கருதி வர்கள் ஏற்றுக்கொண்டனர் என்பது தெளிவு. பொறுக்குக் குழுவால் ய்யப்பட்ட மாற்றங்களை நான் சுட்டிக்காட்டுகிறேன் எனச் சட்டத் றை அமைச்சர் கூட கருதுகிறார் என்பது இதை ஊர்ஜிதப்படுத்து து. எனவே மாற்றங்களின்பால் பொறுக்குக் குழுவின் கவனம் கப்படவில்லை என்று வாதிக்கும் கட்டாயத்திற்கு நான் உட்படு றன். அதற்கு மாறாக, எந்தக் கணிசமான மாற்றமும் லாமல், மூலமசோதாவின் மறுபதிப்பே இலாகா மசோதா என்று ர்கள் எடுத்துக் கொண்டனர். அதை எந்த வித குற்றச்சாட்டும் லாமல் நான் சொல்ல முடியும்; எந்தத் தவறுகளையும் நாம் பாழுதும் விவாதிக்க முடியும். விஷயத்தை இதைவிட சவிஸ்தார முன்வைக்கத் தேவை இல்லை என்று கருதுகிறேன்.

ஐயா, பொறுக்குக் குழு உறுப்பினர்கள் அல்லது சட்டத் துறை ச்சர் இதுபற்றி அதிகம் உணர்ச்சிவசப்படத் தேவையில்லை. அது செய்யப்பட்ட விஷயம். உண்மையில், தாம் எந்த மாற்றத்தையும் டுவரவில்லையென சட்டத் துறை அமைச்சர் கூட ஒத்துக் டார்; பொறுக்குக் குழு செய்த மாற்றங்களை நான் சுட்டிக் கொண்டிருப்பதாக அவர் எடுத்துக் கொள்கிறார். அவை ஏற்றுக் ப்பட வேண்டும்; இந்த மாற்றங்களை அவர்களை ஒப்புக்

கொண்டிருக்க வேண்டும். ஆனால் நான் சுட்டிக்காட்டும் விஷயம் என்னவெனில் இவை உணர்வுபூர்வமாக, சட்டப்படியான சிந்தனையோடு அணுகப்படவில்லை என்பதேயாகும்; ஏனெனில் அவர்கள் அதுபற்றி அறிந்திருக்கவில்லை. இலாகாக் குழுவால் எந்தக் கணிசமான மாற்றங்களும் செய்யப்படவில்லை என ஒரு கேள்விக்கு மாண்புமிகு அமைச்சர் வலியுறுத்திக் கூறினார். ஆனால் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டு இருப்பதைப் பார்க்கிறோம்; அவை இலாகா மசோதாவில் சுட்டிக்காட்டப்படவில்லை. எனவே, வேண்டுமென்றே குற்றம் சாட்டப்படுகிறது என்ற கேள்விக்கே இங்கு இடமில்லை.

**திரு. அவைத் தலைவர் :** அந்த விஷயம் பற்றி இனி நாம் மீண்டும் குறிப்பிட வேண்டாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இது ஒரு தீவிரமான, அடிப்படையான மாற்றம். ஒரு பலமான அடித்தளத்தின் மீது நான் செல்வதாக நினைத்தேன். பட்டவர்த்தனமான விஷயங்களை சுட்டிக்காட்டுவது பொறுக்குக் குழு உறுப்பினர்களைப் புண்படுத்துவது என்று கருதப் பட்டால், அதற்காக என் வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** உறுப்பினர்களுக்கு எதிராக நீங்கள் குற்றம் சாட்டக் கூடாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** என்ன குற்றச்சாட்டு? அவர்கள் தவறு செய்தார்கள் என்பதா? தவறு செய்வது மனித இயல்பு. பொறுக்குக் குழு உறுப்பினர்களும் மனிதர்களே என்பதைத்தான் குறிப் பிட்டேன்.

**திரு. பி. தாஸ் :** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. மதிப்பிற் குரிய உறுப்பினர் கடந்த மூன்று மாதங்களாக பொறுக்குக் குழு உறுப் பினர்களின் குறைபாடுகளை சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கலாமா? விஷயம் எழுப்பப்பட்டு தீர்த்து வைக்கப்பட்டுள்ளது. அவரது சொற்களை நான் ஏற்றுக் கொள்கிறேனா இல்லையா என்பது வேறு விஷயம். சட்ட நிறைவேற்றலை தடுப்பதற்கான கண்ணோட்டத்தில் மதிப்பிற்குரிய உறுப்பினர் பேசிக்கொண்டே போகக்கூடாது; சில ஆண்டுகளுக்கு முன் குழந்தைத் திருமணச் சட்டத்தை திருத்தி அதற்கான எனது மசோதா விஷயத்தில் எனது நண்பர் திரு. பைஜ்நாத் இவ்வாறுதான் செய்தார். சாஸ்திரங்களிலிருந்து மேற்கோள் காட்டினார்; மற்றும் மகாபாரதத்திலிருந்தும் மற்ற நூல்களிலிருந்தும் வாசித்துக்

காட்டினார். இங்கு பாவம் பொறுக்குக் குழு உறுப்பினர்கள் எனது நண்பர் திரு. நசிருத்தீன் அகமதால் மூன்று மாதங்களாக தாக்கப்பட்டு வருகிறார்கள். இது நீதிமன்றமல்ல. ஐயா, இந்த இந்து சட்டத் தொகுப்பு மசோதா ஏன் நிறைவேற்றப்படக்கூடாது என்பதற்கான அவரது வாதத்தை முன்வைக்கும்படி, நீங்கள் அவரைக் கேட்க வேண்டும். பொறுக்குக் குழுவிற்கு எதிராக நாம் இடைவிடாமல் ஏன் பேசிக் கொண்டே இருக்க வேண்டும்? இந்த அவையின் நீண்ட கால உறுப்பினர் என்ற முறையில், இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

**அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர், தீவிர மன மாற்றங்கள் பற்றி மட்டுமே குறிப்பிடலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** சரி, ஐயா, சட்டம் இயற்றலை தடுப்பதற்காக வேண்டுமென்றே நான் நீண்ட நேரம் பேசுகிறேன் என்ற குற்றச்சாட்டை ஆட்சேபிக்கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் கொஞ்சம் அதிகமாகவே செல்கிறார் என்று நினைக்கிறேன். அவர் தமது மனதை முழுவதுமாக மூடிவைத்துக் கொண்டார் என்றே தோன்றுகிறது; கேட்கும் மனோநிலையில் அவர் இல்லை.

ஐயா, இதை பரிசீலிக்கும்படி நான் தங்களைக் கேட்டுக் கொள்ளலாமா? நான் பேசுவது கிஞ்சித்தும் பொருத்தமில்லாமலும் தவறாகவும் உள்ளதா என்று பாருங்கள். இந்துச் சட்டத்தின் தெளிவான மூலவாசகங்களையும், இந்த சட்டம் பற்றிய நீதிமன்றங்களின் கருத்து விளக்கங்களையும் அது தள்ளிவிடுகிறது என்பது தெளிவு. மூலமசோதாவில் இம்மாதிரியான எதுவும் இல்லை; மாற்றம் இலாகாக் குழுவால் அறிமுகப்படுத்தப்பட்டது. நியாயமாகப் பார்த்தால், அது ஒரு தீவிர மாற்றம் அல்லவா? சட்ட விஷயங்களை திரு. தாஸ் காது கொடுத்துக் கேட்க முடியாது. நிதி விஷயங்களில் அவர் திறமைசாலி. அவரது இரண்டாவது குழந்தைப் பிராயத்தை அவர் வேகமாக அணுகிக் கொண்டிருக்கிறார்.

**திரு. பி. தாஸ்:** இங்கு நாம் சட்டம் இயற்ற இருக்கிறோம். வழக்கறிஞர்கள் அல்லது உயர்நீதிமன்ற நீதிபதிகளின் வியாக்யான விளக்கங்களைக் கேட்க நாம் இங்கு வரவில்லை. (குறுக்கீடு)

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, எல்லாம் கணிசமான மாற்றங்களைப் பொறுத்திருக்கிறது. இவை இலாகாக் குழுவால் புகுத்தப்பட்டவை அல்லவா? இந்த விஷயத்தைப் பொறுத்துள்ளது

மொத்தப் பிரச்சினையும். அது இலாகாக் குழுவால் புகுத்தப்பட்டிருந்தால், அது ஒரு கணிசமான மாற்றம் என்றால், பொறுக்குக் குழுவிற்கு அது பற்றி தெரிவிக்கப்படவில்லை. பொறுக்குக் குழு பரிசீலித்தது இலாகா மசோதாதான் என்றும், மூல மசோதாவை அல்ல என்றும் திரும்பத்திரும்பத் தெளிவாக்கப் பட்டுள்ளது. இது மறைமுகக் குற்றச் சாட்டு எனில், நான் வருந்துகிறேன். எனது கடமையை விசுவாசத்துடனும் ஆனால் கிஞ்சித்தும் பயமின்றியும், மிக மரியாதையுடனும் நான் ஆற்ற வேண்டியுள்ளது; இலாகா மசோதா, சாராம்சத்தில் மூல மசோதாவின் மறுபதிப்பே என்று நம்பும்படி பொறுக்குக் குழு செய்யப் பட்டது என்று பணிவுடன் கூறிக்கொள்கிறேன். மாற்றம் எதுவுமில்லை என்று மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் கூட நம்ப வைக்கப் பட்டார். இது மறைமுகக் குற்றச்சாட்டல்ல. இது யதார்த்தம். மாற்றங்களைச் செய்தது யார்? அது சட்டத்துறை அமைச்சராக இருந்திருந்தால், அப்போது அவர் அது பற்றி தெரிந்து கொண்டிருப்பார். வேறு யாராவதா? மாற்றம் மற்றொருவரால் செய்யப்பட்டது என்று நான் சுட்டிக்காட்டுவது முறையற்றதா? அதைத் தவறாக அல்லது நல்லெண்ணத்தில் அவர் செய்திருக்கிறார் என்று நான் கூறுகிறேன். இந்த மாற்றங்கள் நேர்மையற்ற முறையில் செய்யப்பட்டன என்று நான் கூறுவது முறையாகுமா? அம்மாதிரி எதையும் நான் கூறவில்லை. நான் ஊகிக்கக் கூடியது என்னவெனில், இந்த மாற்றங்கள் நல்லெண்ணத்தில் பேனாவின் நர்த்தனத்துடன் - அபிவிருத்தி செய்யப்பட்டன என்பதுதான். ''மரபுச் சட்டத்தை மட்டும் ஏன் ஒதுக்கித் தள்ள வேண்டும்? பிரிவி கவுன்சில் தீர்ப்புகளையே நாம் ரத்து செய்து விடலாமல்லவா?''

ஐயா, எனது விமர்சனம் முறையானது. நான் உபயோகித்த எந்தச் சொல்லும் முறையற்றது எனில், அதைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன். ஆனால் விமர்சனம் விமர்சனம்தான்.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** பிற மாற்றங்களையும் நாம் கேட்கலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஏன் கவலைப்பட வேண்டும்? இதற்குக் காது கொடுக்கக் கூடாதா?

**அவைத் தலைவர் :** அமைதி, அமைதி. மசோதா மீதான விவாதத்தை இம்முறையில் நாம் நடத்திக் கொண்டிருக்க முடியாது. இந்த மசோதாவை ஆதரிப்பவர்கள் இருக்கிறார்கள்; அதை எதிர்ப்

பவர்களும் இருக்கிறார்கள். ஒவ்வொருவரும், எம்முறையில் விரும்பு கிறாரோ, அம் முறையில் அவரது கருத்தைக் கூறட்டும் - புண்படும் படியோ நாடாளுமன்ற முறைக்கு ஒவ்வாத முறையிலோ பேசுவது கூடாது. அதுதான் ஒரே நிபந்தனை. இல்லையெனில், ஒவ்வொரு கட்டத்திலும் குறுக்கீடு இருக்கும்; முடிவில், மசோதாவை ஆதரிக்க விரும்புபவர்களே பாதிப்புக்குள்ளாவர்; இம்மாதிரியான விவாதத்தை அவசியமற்ற முறையில் மேற்கொள்வதில் நேரம்தான் வீண் விரய மாகும். மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது கருத்தைக் கூறுவார்; குழு இதில் அல்லது அதில் கவனம் செலுத்தவில்லை என்றோ அல்லது இந்த விஷயங்கள் பொறுக்குக் குழுவால் பரிசீலிக்கப்படவில்லை என்றோ அவர் கூறினால், அதில் அவமரியாதை என்று எடுத்துக் கொள்வதற்கு என்ன இருக்கிறது? அவ்வாறு கூறுவதற்கு அவருக்கு முழு உரிமை உண்டு. ஆனால் அவர் வேறு ஏதாவது கூறி மறைமுகமாக குற்றச்சாட்டைக் கூறக்கூடாது; இதில் நான் மிகவும் கவனமாக இருக் கிறேன். ஆனால் தமது கருத்துக்களை வெளியிட அவர் உரிமை பெற்றி ருக்கிறார் என நம்புகிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்கு நான் கொண்டுவர விரும்பும் மற்றொரு விஷயம் இருக்கிறது. இந்த முக்கியமான மாற்றம் தமக்குத் தெரியாது என்று சட்டத்துறை அமைச்சர் கூறுவதால் இந்த மாற்றத்தைச் செய்தது வேறு ஒருவர் என்று உறுப்பினர் கூறுகிறார். அதற்கு மற்றொரு அம்சமும் உள்ளது. கணிசமான மாற்றம் என்று கருதப்படுவதை சட்டத்துறை அமைச்சர் கணிசமான மாற்றம் அல்ல என்று கருதினால், எந்தக் கணிசமான மாற்றம் பற்றியும் தாம் அறிந்திருக்கவில்லை எனக் கூற அவர் முழு உரிமை பெற்றுள்ளார். எனவே, ஏதோ மற்றவர் அறியாமையாலோ, அமைச்சருக்குத் தெரியாமலோ பொறுக்குக் குழுவில் புகுத்தினார் என்று பொருள் கொள்ள வேண்டிய அவசியமில்லை. விஷயங்கள் உருப்படியாக இருக்கட்டும். விஷயங்கள் உருப்படியானவையா, அல்லவா என்ற பிரச்சினையோடு கருத்துவேறுபாடு கட்டுப் பட்டிருக்கட்டும். இப்பிரச்சினையிலுள்ள பிரதான விஷயம் இதுதான் என நம்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** தவறு எனறால் திருத்திக் கொள் கிறேன். இது ஓர் உருப்படியான மாற்றம் என்று உணராமலோ அல்லது நம்பாமலோ சட்டத்துறை அமைச்சரால் அது செய்யப்பட்டிருக் கலாம். ஆனால் விஷயம் எங்கு இருந்ததோ அதே இடத்தில் இருக் கிறது. இவையெல்லாம் சாராம்சமான விஷயங்கள் - சட்டத்துறை அமைச்சரால் உணர்ந்தோ அல்லது மற்றொருவரால் உணரப்படா மலோ - எவ்விதத்தில் செய்யப்பட்டிருந்தாலும் அதுபற்றி விவாதிப்பது

நமக்கு முறையானதல்ல. ஆனால், இந்துச் சட்டத்தின் எல்லா மூல வாசகங்களும் விதிகள், விளக்கங்கள் எல்லாம் ஒரேவரியில் எளிதாக நீக்கப்படுகின்றன. இதன் விளைவு என்னவெனில், பிரிவி கவுன்சில், சமஷ்டி நீதிமன்றம் மற்றும் உயர்நீதிமன்றங்களின் கற்றறிந்த தீர்ப்பு யாவும் ஒரே வரியில் போய்விட்டன. உண்மையில், மூல மசோதா மீது இது தீவிரமாகத் தலையிடுவதே ஆகும்; இல்லையென்றால் அது என்ன என்று எனக்குத் தெரியவில்லை. கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். இந்த விஷயத்தை முற்றிலும் பாரபட்சமின்றியும், திறந்த மனதுடனும் அணுகும் ஒருவர், இது மூல மசோதா மீது மிகக் கடுமையாகத் தலையிடுவது என்று ஒப்புக் கொள்வதில் எந்தக் கஷ்டமும் இருக்காது.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** மற்ற உருப்படியான மாற்றங்கள் பற்றி தயவு செய்து பேசுங்கள்.

**நசிருத்தீன் அகமது:** மிக முக்கியமான விஷயத்தை மிக இலகுவாக கையாள்வது இது. ஆனால் நான் கூறுகிறேன் இவை மிகத் தீவிரமான மாற்றங்கள் :- இடைச் செருகல்கள் என்ற விளிம்பிற்குள் வருகின்றன - நல்லெண்ணத்திலா அல்லது தீய எண்ணத்திலா என்பது விஷயமல்ல.

ஐயா, இலாகாக் குழு உருவாக்கிய அடுத்த கூண்டு பாகம் I, பிரிவு 5 துணைப் பிரிவு (a)-ல் 'சாதி' பற்றிய விளக்கத்தை நீக்கியதாகும்; அதில் சாதி பற்றிய விளக்கம் இருந்தது. அது முற்றிலுமாக நீக்கப்பட்டது.

**அவைத் தலைவர் :** எந்தப் பிரிவை மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார்?

**நசிருத்தீன் அகமது :** பாகம் I, பிரிவு 5, துணைப் பிரிவு (b)ஐக் குறிப்பிடுகிறேன்; அதில் 'சாதி' பற்றி விளக்கம் இருந்தது.

**அவைத் தலைவர் :** மூல மசோதாவை அவர் குறிப்பிடுகிறாரா?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஆம். அந்த விளக்கம் இலாகா மசோதாவில் முற்றிலுமாக விடப்பட்டிருக்கிறது; அவ்விதம் விடப்பட்டிருப்பது பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை. மூலப் பிரிவுக்கு

பக்க ஓரத்தில் ஏனோ தானோ என்ற ரீதியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது; இந்தத் துணைப் பிரிவு விடப்பட்டிருக்கிறது; அது பற்றி எந்தக் குறிப்பையும் காண முடியவில்லை. இம்மாதிரி விட்டுவிடப்பட்டது பற்றிக் குறிப்பாக பொறுக்குக் குழுவின் கவனத்திற்குக் கொண்டு வரப் படவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா; இவை முக்கிய மான விஷயங்களா அல்லது இல்லையா என்பது பற்றி கருத்து வேறுபாடு அதிகம் இருக்க முடியாது. எப்படியாயினும், இந்த மாற்றங்கள் செய்யப்பட்டன என்பது பற்றி அறிவிக்கப்படுவதற்கு பொறுக்குக் குழு உரிமை பெற்றுள்ளது; இவை கணிசமான மாற்றங் களா அல்லது இல்லையா என்பது பற்றி ஒருவருக்கு ஒருவர் வேறுபட லாம். ஆனால், இந்த மாற்றம் செய்யப்பட்டனவா என்பதைத் தெரிந்து கொள்ளப் பொறுக்குக் குழுவிற்கு உரிமையுண்டு. ஆனால் அவர் களுக்குக் கூறப்படவில்லை.

அடுத்து, அதே பிரிவின் துணைப் பிரிவு (f)க்கு வருவோம்; இங்கு கோத்ரம் மற்றும் பிரவாரா பற்றிய வரையறைகள் விடப்பட்டு விட்டன. பின்பு, துணைப் பிரிவு (f)ல், ஸ்ரீதானம் என்பதன் விளக்கமும் விட்டுவிடப்பட்டது. எனவே சாதி பற்றிய வரையறை, கோத்ரம் பற்றிய வரையறை, பிரவாரா பற்றிய வரையறை, ஸ்ரீதானம் பற்றிய வரையறை ஆகியவை முற்றிலுமாக விடப்பட்டுள்ளன. மசோதா மீது இது எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தும் என்பதை அவையில் சுருக்கமாக விளக்கிக் கூறமுடியாது.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை** (திருவிதாங்கூர் சமஸ்தானம்): சட்டத்தில் தேவைப்படாத கலைச் சொல்லின் வரையறை என்றாலும் அது வரையறுத்துக் கூறப்பட வேண்டுமா என மதிப்பிற்குரிய உறுப்பினரிடமிருந்து நான் தெரிந்து கொள்ளலாமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமோ அவ்வளவு ஜாக்கிரதையாக மதிப்பிற்குரிய உறுப்பினர் செயல்படவில்லை எனக் கருதுகிறேன். உண்மையில், இங்கு எழும் கேள்வி ஒரு விளக்கம் தேவைப்படுகிறதா இல்லையா என்பதல்ல. மசோதாவிலிருந்த ஒரு விளக்கம் யாரோ ஒருவரால் எந்த அதிகாரமும் இல்லாமல் நீக்கப்பட்டது. இலாகாக் குழு அதை நீக்கியது; அதை நீக்கு வதற்குத் தகுதி பெற்ற பொறுக்குக் குழுவின் கவனத்திற்கு அது கொண்டு வரப்படவில்லை.

**திருமதி ஜி. துர்க்கா பாய்:** பொறுக்குக் குழு அதற்காக முழுப் பொறுப்பையும் எடுத்துக் கொள்கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** இது பொறுக்குக் குழுவால் பரிசீலிக் கப்படவில்லை.

**திரு. எம். திருமலராவ்** (மதராஸ் : பொது) : அச்சுக் கோப் பவர் அதை விட்டுவிடவில்லை என்பது பற்றி தாங்கள் உறுதியாக இருக்கிறீர்களா?

**அவைத் தலைவர் :** குறுக்கீடு செய்பவர்களை இடஞ்சல் செய்பவர்கள் என்றும் அழைக்கலாம். குறுக்கீடு செய்தால், அதுபற்றி அவர் அதிக நேரம் எடுத்துக் கொள்வார்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இந்த எல்லா விஷயங் களும் உண்மையில் பொறுக்குக் குழுவின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டன என்று கூறி மேற்கொண்டும் வாதங்களை நான் சுருக்க லாம். இந்த விஷயம் பொறுக்குக் குழுவின் கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் தேவையில் லாமல் திரும்பத் திரும்பக் கூறி கொண்டிருக்கிறார். பொறுக்குக் குழுவின் உறுப்பினர் என்ற முறையில் இந்த எல்லா விஷயங்களும் முழுமையாகப் பரிசீலிக்கப்பட்டன. சகல அம்சங்களும் பொறுக்குக் குழுவால் பரிசீலிக்கப்பட்டன. எனவே மதிப்பிற்குரிய உறுப்பினர் அரைத்த மாவையே அரைப்பதுபோல் இந்த விஷயம் பற்றி மீண்டும் மீண்டும் பேச வேண்டிய அவசியம் இல்லை.

**அவைத் தலைவர் :** விஷயம் முழுமையாகப் பரிசீலிக்கப் பட்டிருந்தாலும், தமது கருத்துக்களை எடுத்துரைப்பது மதிப்பிற் குரிய உறுப்பினரின் உரிமைக்கு உட்பட்டதே என நான் கூறுவேன். இந்த மசோதா மீண்டும் பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப்பட வேண்டும் என்ற தமது நிலையை விளக்க அவர் தமது வாதங்களை முன்வைக்கிறார் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் காண முடியும். முழுமையான, போதுமான, முறையான, நியாயமான கவனத்தைப் பொறுக்குக் குழு மேற்கொண்டிருக்கலாம்; ஆனால் அவர் கருத்துப்படி அது போதாது. எனவே, கவனம் செலுத்தியது வேண்டிய அளவு இல்லை என்பதால் மசோதா பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு மீண்டும் அனுப்பப்படவேண்டுமென அவர் வலி யுறுத்துகிறார். அவர் பின்பற்றும் வாதப்போக்கு அது; அத்தகைய

வாதப் போக்கை அவர் பின்பற்றினால் அவரது நிலையை அவர் நீடிக்க வேண்டும். தேவையான கவனம் அளிக்கப்பட்டது பற்றி, முறையான போதுமான கவனம் அளிக்கப்பட்டதா என்பது பற்றி பொறுக்குக் குழு உறுப்பினர்கள் முழுமையான தீர்ப்பளிப்பவர்களாக எவ்வாறு இருக்க முடியாதோ அவ்வாறே அவருடைய தீர்ப்பும் இறுதியானதல்ல. அவர் தமது கருத்தை முன்வைக்கிறார். அந்த அடிப்படையில் நாம் தொடர்வோம். இல்லையெனில், இந்த விவாதத்திற்கு முடிவே இருக்காது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** யதார்த்த நிகழ்வு பற்றிய விஷயத்தை மட்டுமே நான் குறிப்பிட்டேன்.

**அவைத் தலைவர் :** அது கருத்து பற்றிய விஷயமாகும். மதிப்பிற்குரிய உறுப்பினர் யதார்த்த நிகழ்வு என்று எதைக் கருதுகிறாரோ, அது உண்மையில் கருத்து என்ற ஒரு விஷயம்தான். கவனம் போதுமானது அல்லது இல்லை என்பது கருத்து என்ற விஷயம் அல்ல; யதார்த்த நிகழ்வு என்ற கேள்வி மட்டுமே.

**திரு. நசிருத்தீன் அகமது :** கவனத்தின் போதுமான தன்மைதான் பிரச்னை.

*(இந்தக் கட்டத்தில் அவைத்தலைவர் அவையிலிருந்து வெளியில் செல்ல, தலைமைப் பொறுப்பை துணை அவைத் தலைவர் (திரு. அனந்தசயனம் அய்யங்கார்) ஏற்றார்.*

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, மற்றைய நாளில் அநேகமாகத் தொடர்ந்து எனக்குக் குறுக்கீடு ஏற்பட்டது; இன்றும் மறுபடியும் பல குறுக்கீடுகள் செய்யப்படுகின்றன.

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** தங்களுக்கு நான் தொடர்ந்து ஆதரவு அளித்து வருகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனது நண்பர் திரு. பாரதி இருக்கிறார். பொறுக்குக் குழுவில் என்ன நிகழ்ந்தது என்று அவர் அவைக்குக்கூறுவது சரியா? அப்படியாயின் பொறுக்குக் குழுவின் உறுப்பினர்களிடமிருந்தே இதற்கு மாறான கருத்தை கூறுவதற்கு எனக்கு பலமான ஆதாரம் உள்ளது. ஓர் உறுப்பினரின் கூற்றை மற்றொரு உறுப்பினரின் கூற்றோடு ஒப்பிடுவது மிக தவறானதாக

இருக்கும்; பொறுக்குக் குழு எல்லாவற்றையும் பரிசீலித்தது என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் உறுதியளிப்பதற்கு அவசியமில்லை. அவர் அவ்வளவு உறுதியாக இருப்பாராயின், பல காரணங்களால், தேவையான பரிசீலனை அளிக்கப்படவில்லை என்பது பற்றி நானும் அதே அளவு உறுதியாக இருக்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி:** நான் என்னைப் பற்றி மட்டுமே பேசிக் கொண்டிருந்தேன்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** விஷயங்களை உங்களால் புரிந்து கொண்டிருக்க முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது:** உண்மையில், இது ஒரு தனி மனிதர் சம்பந்தப்பட்ட விஷயமல்ல. இது முழுவதும், ஒரு தனி மனிதர் விவகாரமல்ல, ஒருவர் புரிந்து கொண்டாரெனில், எல்லோரும் அதைப் பரிந்து கொண்டனர் என்று பொருளல்ல.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஒரு மரம் தோப்பாகாது.

**திரு. நசிருத்தீன் அகமது:** உண்மையே. ''ஒரு மரம் தோப்பாகாது'' தான், மாற்றம் எதுவும் செய்யப்படவில்லை என்று பொறுக்குக் குழுவில் உள்ள ஒருவர் நம்பினாலும் பொறுக்குக் குழுவிற்கு மீண்டும் மசோதாவை அனுப்பி வைக்க சிபாரிசு செய்ய வேண்டுமென்ற நிலையை எடுக்க அது போதுமானதாகும். இவை மிக முக்கியமான மாற்றங்கள் என்று மீண்டும் நான் பணிவுடன் கூறுகிறேன். அடுத்து எத்தனை மாற்றங்கள் அதில் உள்ளன என்று என் நண்பர்கள் அதிசயிக்கின்றனர்; அவர்களிடம் அத்தகைய பல பல மாற்றங்களை நான் காண்பிக்க முடியும். உதாரணமாக....

**திருமதி ஜி. துர்க்காபாய் :** இதற்கிடையில், எனக்கு ஒரு விஷயம் தெரிய வேண்டும். பொறுக்குக் குழு செய்த மாற்றங்கள் அவையை முழுமையாகக் கட்டுப்படுத்துமா? அம்மாற்றங்களை அவை ஏற்றுக் கொள்ளலாம் அல்லது அவற்றை நிராகரிக்கலாமல்லவா?

**திரு. நசிருத்தீன் அகமது :** பொறுக்குக் குழுவின் மாற்றங்களை அவை ஏற்றுக் கொள்ள வேண்டுமா அல்லது நிராகரிக்க வேண்டுமா என்பது பொருத்தமற்ற விஷயம் என்பதை மிகவும்

மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். பொறுக்குக் குழு எந்த மாற்றத்தையும் செய்யலாம்; மேலும் அவையும் மேற்கொண்டு மாற்றங்களைச் செய்ய முடியும். மாற்றங்களை அவை செய்ய முடியுமா? அதைப்பற்றிச் சந்தேகம் எதுவும் கிடையாது. ஆனால் விஷயம் என்னவெனில், சில காரணங்களால் பொறுக்குக் குழு தனது கடமைகளை முழுமையாகச் செய்யவில்லை அல்லது செய்ய முடிய வில்லை அல்லது செய்யத் தவறிவிட்டது அல்லது செய்யாமல் விட்டு விட்டது. இது இவ்வாறாயின், இந்த விஷயம் பற்றி முழுவதும் பரிசீலனை செய்யும் உரிமை அவைக்கு உள்ளது; எனவே, பொறுக்குக் குழுவிலிருந்து அவைக்கு நான் வேண்டுகோள் விடுக்கிறேன். அதையும்விட பெரிய அவை உள்ளது. இந்தியாவின் மொத்த வாக் காளர்கள்தான் அந்த அவை. மூல மசோதா பிரிவு 7க்கு இப்பொழுது நான் வருகிறேன். சில உறுப்பினர்கள் நிதானம் தவறிவிட்டார்கள் என்று நினைக்கிறேன்.

**திரு. தாஜாமுல் உசேன் :** உறுப்பினர்கள் நிதானம் இழந்து விட்டனர் என்ற கூற்றை வன்மையாகக் கண்டிக்கிறேன். இது சம்பந்த மாக ஓர் உரிமைப் பிரச்சினையை எழுப்புகிறேன். நிபந்தனையின்றி அதை அவர் வாபஸ் பெற வேண்டும்.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் இதையெல்லாம் கூறத் தேவையில்லை என நினைக்கிறேன்.

**திரு. தாஜாமுல் உசேன்:** அவர் அதை வாபஸ் பெற வேண்டும். அவரது இந்தக் கூற்று முறையானதா? மதிப்பிற்குரிய உறுப் பினர்களுக்கு எதிராக உக்கிரமான சைகைகளை நெடுகிலும் அவர் காண்பித்து வருகிறார்.

**திரு. துணை அவைத்தலைவர் :** உறுப்பினர்கள் நிதானத்தை இழந்துவிட்டனர் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறுவது முறை யானது என்று நான் நினைக்கவில்லை. அவையின் கண்ணியத்திற்கு அது இழுக்கு ஏற்படுத்துகிறது. அதேசமயத்தில் நான் இதைக் கூற வேண்டும்: ஓர் உறுப்பினர் யாரைக் குறித்து பேசுகிறாரோ அவருக்கு இவர் உபயோகிக்கும் பாஷை பிடிக்காமல் போகலாம். கொஞ்சம் பொறுமை காண்பிக்கப்பட வேண்டும். வார்த்தையாலோ சைகை யாலோ குறுக்கீடுகள் இருக்கக்கூடாது. எனவே, உறுப்பினர் கோப்புக் புத்தகங்களைப் புரட்டிக் கொண்டிருக்கும்போது, குறுக்கீடு செய்தால் அவற்றை அவர் தவற விட்டுவிடக்கூடும்; இத்தகைய குறுக்கீடுகள் அவரை ஆத்திரமடையவே செய்யும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** நான் நிதானம் இழந்துவிட்டேன் என்று நேருக்கு நேராகவே என்னிடம் கூறப்பட்டது.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது வாதத்திலிருந்து விலகிச் செல்லுகிறார்.

**திரு. தாஜாமுல் உசேன் :** அவர் திசை தவறிச் செல்லுகிறாரா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் எனது வாதத்தைத் தொடர்கிறேன். மூலமசோதாவில் பிரிவு 2 'மகன்' என்பதை வரையறை செய்யும்போது **ஒரு தராத்தகா கிரிட்ரிமா** அல்லது கோதா மகன் முதலியவற்றைக் குறிக்கிறது. ஆனால் **தாசி புத்திரர்** போன்றவர்களை அது குறிக்கவில்லை. இலாகா மசோதாவில் இது முற்றிலுமாக விடப்பட்டிருக்கிறது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** மதிப்பிற்குரிய உறுப்பினர் எதையாவது படிக்கும்போது, அதைச் சரியாக செய்ய வேண்டாமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** இது விட்டுவிடப்பட்டதாக நான் காண்கிறேன். எங்காவது வரையறை - மசோதாவின் வேறு எந்த பாகத் -திலாவது இருந்தால், எனது கவனத்திற்கு அதைக் கொண்டு வரலாம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** உரையாற்றியவரை இப்பொழுது குறுக்கீடு செய்த மதிப்பிற்குரிய உறுப்பினர் மீண்டும் மீண்டும் யோசனைகளைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார். தாம் சொல்ல விரும்புவதைக் குறித்துச் சொல்வதில் திரு. நசிருத்தீன் அகமது கொஞ்சம் வேகக் குறைவாக இருக்கலாம். அவரை குறுக்கீடு செய்வது தேவையில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** 'மகன்' பற்றிய வரையறை விடப் பட்டுள்ளது எனக் கூறுகிறேன். நான் கூறுவது தவறு என்றால் தவறை எனக்குச் சுட்டிக் காட்டலாம்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்** (மத்திய மாகாணம் : பொது) : மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறியது தவறு என்று நினைக்கிறேன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் கள் இம்மாதிரிக் குறுக்கீடு செய்து கொண்டிருந்தால் அவையின்

அலுவலை ஒழுங்கான முறையில் நடத்துவது சாத்தியமில்லாது போகும். மதிப்பிற்குரிய உறுப்பினர்களிடம் கேள்விகள் கேட்காமலே திரு. நசிருத்தீன் அகமது தொடர்ந்து பேசலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் கூறியது போல, மகன் பற்றிய பொருள் வரையறை விடப்பட்டிரக்கிறது; அத்துடன் பாகம் II பிரிவு 2, துணைப்பிரிவு (3ல்) சொத்து மீதான மரபுரிமை பற்றிய விளக்கங்களும் விடப்பட்டுள்ளன. 4 விளக்கங்கள் விடப்பட்டுள்ன. இவை கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றிய தன்மை பற்றி அவையின் கவனத்தை ஈர்க்கவே முயன்று கொண்டிருக் கிறேன். என் கருத்துப்படி இந்தவிடுபாடுகள் முக்கியத்துவம வாய்ந்தவை. வரைவு தன்மை கொண்ட விடுபாடுகள் அல்ல இவை. மசோதாவை செழுமைப்படுத்தவோ அல்லது இந்த விடுபாடுகளைச் செய்யவோ பொறுக்குக் குழுவிற்கு உள்ள உரிமையை நான் மறுக்க வில்லை. என்றாலும், இந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் செய்யப்படவில்லை, வரைவுக் குழுவால் செய்யப்பட்டவை; இந்த விடுபாடுகள் பற்றிக் குறிப்பாக பொறுக்குக் குழுவின் கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை.

அடுத்து, வரைவுக் குழு புகுத்திய மிக உருப்படியான மாற்றங் களை எடுத்துக் காட்ட மசோதாவின் மற்றொரு பாகத்தை எடுத்துக் கொள்கிறேன். மூல மசோதாவின் பாகம் II, பிரிவு 4-ல் வாரிசுதாரர் களின் பட்டியல் கொடுக்கப்பட்டுள்ளது. உயில் எழுதாமல் இறந்து விட்ட ஓர் ஆணின் மரபுரிமைச் சொத்து இந்த பாகத்தில் வகுக்கப் பட்ட விதிகளின்படி, (அ) உட்பிரிவு 5-ல் எண்ணிக்கையிடப்பட்ட வாரிசுகள் இருந்தால் அவர்களுக்கோ (ஆ) எண்ணிக்கையிடப்பட்ட வாரிசு யாரும் இல்லையெனில், அவரது பங்காளிகள் யாரும் இருந் தால் அவர்களுக்கோ, பங்காளிகள் யாரும் இல்லையெனில், இரத்த உறவு உடைய உறவினர்களுக்கோ, இரத்த உறவு உறவினர் இல்லை யெனில், உட்பிரிவு 10ல் குறிப்பிடப்பட்ட வாரிசுகள் யாராவது இருந் தால் அவர்களுக்கோ உரிமையாக்கப்படும்.

**திரு. துணை அவைத் தலைவர்:** இந்துச் சட்டத் தொகுப் பின் ஒப்புநோக்கு அட்டவணைகளின் பிரதி மதிப்பிற்குரிய உறுப் பினரிடம் இருக்கிறதா என்பது எனக்கு தெரியாது. மதிப்பிற்குரிய எல்லா உறுப்பினர்களுக்கும் அது அனுப்பப்பட்டது. ராவ் குழுவால், வரைவு செய்யப்பட்ட மூல இந்துச் சட்டத் தொகுப்பு சட்டத்துறை அமைச்சகத்தால் திருத்தங்கள் செய்து சீராக்கப்பட்டது; செய்யப்பட்ட

மாலை 4 மணி

மாற்றங்கள் அதில் குறிப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன. எனவே மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்த விஷயம் பற்றி சிரமப்பட வேண்டாம். முதல் விஷயம் பற்றி அவர் போதுமான நேரத்தைச் செலவழித்திருக்கிறார் என்று நினைக்கிறேன். விஷயம் போதுமான அளவு தெளிவாக இருக்கிறது என்பது என் சொந்த அபிப்பிராயம். உதாரணங்கள் எப்பொழுதும் அதிகப்படுத்தப்படலாம். இங்கு, ஏதேனும் விஷயம் இருந்தால், அதை அவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும். எடுத்துக் கூறப்பட்ட சில விஷயங்கள் போதுமான எண்ணிக்கையில் உள்ளன. அவை மேலும் தெளிவுபடுத்தப்படலாம் என்பதை ஒப்புக் கொள்கிறேன்; ஆனால் அட்டவணையில் செய்யப்பட்ட மாற்றங்கள் போதுமானவை.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, பட்டியல் முழுமையானதுமல்ல, திட்பநுட்பமானதுமல்ல; மற்றும் செய்யப்பட்ட மாற்றங்கள் சுட்டிக்காட்டப்படவில்லை. மூல மசோதாவின் மூலப்பிரிவுகளுக்கு மாற்றான மாற்றங்கள் பற்றிய குறிப்புகள் மிகக் குறைவு. இப்பொழுது மிக முக்கியமான ஒரு மாற்றத்திற்கு வருகிறேன். அது மரபுரிமை பற்றியது. புதிய மசோதாவோடு அல்லது இலாகா வரைவோடு கண்டு கொள்ள முடியாத அளவுக்கு அது மாற்றப்பட்டுள்ளது. மூல மசோதாவுக்கு ஒரு மாற்றானதாகவும் அது இல்லை. மரபுரிமையைப் பொறுத்தவரை, பெரும் எண்ணிக்கையில் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

மசோதாவின் பாகம் II(a) பிரிவு 4ல் வரிசைப்படுத்தப்பட்ட வாரிசுகள் பற்றி முதலில் கூறுகிறேன். ஒவ்வொன்றாக வரிசைப் படுத்தப்பட்டுள்ள பட்டியலில் முக்கியமான மாற்றங்கள் செய்யப் பட்டதைக் காண்பிக்கும் நிலையில் இருக்கிறேன். மூலமசோதாவில் இருந்தது ஒன்று; இலாகாக் குழு மாற்றி வரைவு செய்ததில் அது முற்றிலுமாக வேறாக உள்ளது. முதலில் செய்துள்ள ஏற்பாடு தலைகீழாக மாற்றப்பட்டுள்ளது. அடுத்து, வரிசைப்படி கொடுக்கப்பட்டுள்ள வாரிசுகள் இல்லையெனில் சொத்து பங்காளிகளுக்குச் சேர்கிறது. பங்காளிகள் என்பதற்கான வரையறை மூலமசோதாவில் நன்கு தரப்பட்டிருந்தது; ஆனால் இலாகாக் குழுவால் மாற்றியமைக்கப்பட்ட மசோதாவில் 'பங்காளி' என்ற சொல் மிகவும் குறுகிய அர்த்தத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளது. இந்துச் சட்டப்படியும் முஸ்லீம் சட்டப்படியும் வேறு எந்தச் சட்டப்படியும், வரிசைப்படுத்தப்பட்ட வாரிசுகள் இல்லையெனில் தூரத்து வாரிசுகளும் உரிமை பெறுகின்றனர்; மூல மசோதாவின்படி இதுதான் நிலை. இலாகாக் குழு திருத்தியமைத்த மசோதாவில், பங்காளி என்னும் சொல் ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள் வைக்கும்

வகையில் பெரிதும் மாறுபாடு செய்யப்பட்டுள்ளது; இந்த வட்டத்திற்கு அப்பால் உள்ள பங்காளிகள் மூல மசோதாவின்படி மரபுரிமை பெற்றிருப்பர். ஆனால் இலாகாவின் மசோதாவின்படி அவர்களுக்கு இந்த மரபுரிமை மறுக்கப்படுகிறது. இம்மாதிரியே ரத்த உறவினர்களும் இலாகா மசோதாவில் பாதிக்கப்படுகின்றனர். இது ஒரு கணிசமான மாற்றம்; ஏனெனில், தூரத்துப் பங்காளிகளையும் தூரத்து ரத்த உறவினர்களையும் அது நீக்கி விடுகிறது. அடுத்து ஐயா, பிரிவு 4-ன் (a)ல் மற்றவர்களும் நீக்கப்படுகின்றனர். மூலமசோதா பாகம் II பிரிவு 4ல் பிதிர் ரார்ஜித சொத்துரிமை பற்றிய ஏற்பாடு ஒவ்வொரு கட்டத்திலும் மாற்றப்பட்டுள்ளது; மிக முக்கிய மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன; வரிசைப்படுத்தப்பட்ட வாரிசுகளும் மாற்றப்பட்டுள்ளனர்; தாயாதிகள் ஒரு எல்லைக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர்; மற்ற ரத்த உறவினர்களும் குறுக்கப்பட்டுள்ளனர்; மற்ற பிரிவுகள் முற்றிலுமாக நீக்கப்பட்டுள்ளன. இந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவின் முழுப் பரிசீலனைக்குப் பின் சட்டப்படி செய்யப்பட்டிருக்கலாம் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியும். ஆனால் இந்த மாற்றங்கள் பொறுக்குக் குழுவால் செய்யப்படவில்லை. இலாகாக் குழுவால் செய்யப்பட்டன; உறுப்பினர்கள் கேட்கின்றனர்: செய்யப்பட்ட மாற்றங்கள் எவை என்று கூறுங்கள்.

**திரு. துணை அவைத்தலைவர்:** எல்லாப் பொறுக்குக் குழு உறுப்பினர்களும் எழுந்து நின்று, இவை பற்றி கவனம் செலுத்தினார்கள். பொறுக்குக் குழுவில் செய்யப்பட்டனவை பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் முழுமையாகத் திருப்தியடைவார் என்று நான் புரிந்து கொள்ளலாமா?

**திரு. நசிருத்தீன் அகமது :** விஷயம் என்னவெனில் மாற்றங்கள் பற்றி பொறுக்குக் குழு உறுப்பினர்கள் தெரிந்து கொள்ளும்படி செய்யப்படவில்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** இதனால் எந்த நோக்கமும் நிறைவேறப்போவதில்லை. பொறுக்குக் குழுவின் பணி மீது அவைக்கு அதிகாரம் இருக்கிறதா என்ற சட்டப்பிரச்சினை அல்ல இது. பொறுக்குக் குழு ஒரு முடிவுக்கு வர ஒவ்வொரு பிரிவையும் பரிசீலித்திருக்கிறது என்பதைக் காண்பிக்க போதுமான அளவு விவாதிக்கப்பட்டது. ஆனால் அடிப்படையான விஷயங்கள் பற்றி பழைய சட்டம் விரிவாக மாற்றப்பட்டுள்ளது. அதில் ஒரு சாரம் உள்ளது. அவைக்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் எடுத்துக் கூற வேண்டிய விஷ

யங்கள் இவைதான். கூறப்பட்டுள்ளது எல்லாம் பொருத்தமற்றது என்று நான் கூறவில்லை; ஆனால் போதுமான அளவு சொல்லப் பட்டுள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** மதிப்பிற்குரிய பல உறுப்பினர் களுக்குப் போதுமான அளவு கூறப்படவில்லை. இவையெல்லாம் உருப்படியான மாற்றங்கள் அல்ல என்று கூறப்பட்டது; அவற்றைச் சுட்டிக்காட்ட நான் கவனம் எடுத்துக் கொள்வேன். கஷ்டம் என்ன வெனில் மாற்றங்கள் பெரும் எண்ணிக்கையில் உள்ளதால் அவற்றை அவையின் கவனத்துக்குக் கொண்டுவருவது சிரமம். உண்மையில் மாற்றங்கள் முக்கியமானவை, பல்வேறு வகைப்பட்டவை, மிகவும் உருப்படியானவை; நான் கூறுவது என்னவெனில், அவை பொறுக்குக் குழுவால் அறிமுகப்படுத்தப்படவில்லை. அவர்கள் அவற்றை ஏற்றுக் கொண்டார்களா இல்லையா என்பது வேறு விஷயம். எனது வாதம் என்னவெனில் தயாராக வைக்கப்பட்டிருந்த மசோதா எவ்வித உருப் படியான மாற்றங்களும் செய்யப்படவில்லை என்ற உறுதிமொழி யுடன் அவர்களுக்கு அளிக்கப்பட்டது என்பதே. எனவே பொறுக்குக் குழுவின் கவனம் அந்த விஷயத்தின்பால் போதுமான அளவு ஈர்க்கப் படவில்லை. வாரிசுரிமைச் சொத்துப் பட்டியலில் உண்மையில் செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றி நாம் இப்பொழுது பரிசீலிப்போம். உண்மையில் மூல மசோதாவில் வாரிசுரிமைச் சொத்துப் பட்டியலை மசோதாவின் முக்கிய பாகம், பக்கங்கள் 4, 5, 6ல் காணலாம். இலாகா மசோதாவில் இது அப்படியே அங்கிருந்து முழுவதுமாக எடுக்கப் பட்டு ஏழாவது அட்டவணைக்கு மாற்றப்பட்டது. மற்ற பாகங்கள் பிரதான பாகத்தில் இருக்கும்போது, விசித்திரமாக விளக்க முடியாத காரணங்களுக்காக வாரிசுரிமைச் சொத்துப் பட்டியல் அகற்றப்பட்டது. ஏழாவது அட்டவணையில் உள்ள புதிய பட்டியலை மூலப் பட்டிய லோடு ஒப்பிட்டுப் பார்ப்பது மிக சுலபமானதல்ல; அதில் முக்கியமான, கணிசமான மாற்றங்கள் உள்ளன. செய்யப்பட்ட மாற்றங்கள் என்ன என்று தெரிந்துகொள்ள விரும்பினார் மாண்புமிகு அமைச்சர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவற்றைப் பற்றி நான் நன்கு அறிவேன். என்னைப் பொறுத்தவரை, எனக்குத் தெளிவு படுத்த தங்களின் நேரத்தைச் செலவிட வேண்டியது அவசியமில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** இவை திட்டமிட்டு செய்யப்பட்ட மாற்றங்களாயின், அப்புறம் வரைவுக் குழுவால் மாற்றங்கள் எதுவும்

செய்யப்படவில்லை என்றும், எல்லா மாற்றங்களும் பொறுக்குக் குழுவால்தான் செய்யப்பட்டன என்றும் கூறுவதன் பொருள் என்ன? மேலும் ''எங்கள் கவனத்தை இலாகா மசோதாவோடு மட்டுப்படுத்திக் கொண்டோம்'' என்று பொறுக்குக் குழு கூறட்டும். எனவே, இதன் மீது அவர்களின் கவனம் ஈர்க்கப்படவில்லை. இது ஒரு எளிதான வாத முடிவாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்கள் சொந்த வழியிலேயே வாதியுங்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஓர் இக்கட்டான நிலையில் தாம் இருப்பதை மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் உணர்கிறார் என்று எனக்குத் தோன்றுகிது; எப்படியோ தவறு ஒப்புக் கொள்ளப்பட்ட போதிலும், அது தெளிவாகச் செய்யப்படவில்லை. மிகவும் சாராம்சத் தன்மை வாய்ந்த மாற்றங்கள் உண்மையில் செய்யப்பட்டுள்ளன. கடைசி நாளன்று மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் என்னைக் கேட்டார்: ''வரைவுக் குழுவால் செய்யப்பட்ட மாற்றங்கள் என்ன என்று நாம் தெரிந்துகொள்வோமா?'' இப்பொழுது, ''எல்லாவற்றை யும் நான் அறிவேன்'' என்று கூறுகிறார். பின்பு அவற்றை அவர் பரிசீலித்திருக்கலாம்; ஆனால் இந்த மாற்றங்கள் முக்கியத்துவத் தன்மை வாய்ந்தவை. அவை பொறுக்குக் குழுவால் அறிமுகப்படுத்தப்பட வில்லை. இலாகாக்குழுவால் அறிமுகப்படுத்தப்பட்டன; கேள்வி என்னவெனில் எந்த அளவு பொறுக்குக் குழு உண்மையில் அவற்றைப் பரிசீலித்தது என்பதுதான். சிறுபான்மைக் கருத்து வேறுபாட்டைத் தெரிவிக்கும் தமது குறிப்பில் டாக்டர் பக்ஷி தேச் சந்து கூறுகிறார் : ''எங்கள் கவனத்தை இலாகாக் குழுவின் மசோதாவோடு நிறுத்திக் கொண்டோம். மூல மசோதா மீதல்ல.'' ஏனெனில் இலாகா மசோதா வில் எந்த கணிசமான மாற்றங்களையும் அறிமுகப்படுத்தவில்லை என்று அவர்களுக்கு உறுதிமொழி அளிக்கப்பட்டது. இதைக் கணக்கில் கொண்டால், எத்தகைய முடிவுக்கு வருவது என்று எனக்குத் தெரிய வில்லை. உண்மையில் இது ஒரு கடுமையான, முறையற்ற செயல், அவை கவனம் செலுத்த வேண்டிய செயல் இல்லையென்றால் இது வேறு என்ன என்று எனக்குத் தெரியவில்லை. சரியான முடிவு எடுப் பதில் இலாகா தவறு செய்துள்ள பட்சத்தில் ''இவற்றை எல்லாம் நான் அறிவேன். மாற்றம் எதுவும் செய்யப்படவில்லை, ஒவ்வொரு மாற்றமும் பொறுக்குக் குழுவால்தான் செய்யப்பட்டது'' என்று கூறுவதற்கு பதில் தவறை ஒப்புக் கொள்வதே உசிதமானதாகவும் சரியாகவும் இருக்கும். பொறுக்குக் குழு மாற்றங்களைச் செய்ய

வில்லை, இலாகாக்குழுவால்தான் அவை செய்யப்பட்டன என்று நான் கூறியபோது அதை நான் அறிவேன்'' என்று கூறப்பட்டது. அப்படியானால் இலாகாவின் நிலைதான் என்ன என்பதை நாம் தெரிந்தாக வேண்டும். இலாகா ஒரு மாற்றத்தைச் செய்கிறது எனில்....

**திரு. பி. தாஸ் :** அடுக்கடுக்காக வாதம் செய்வதற்கு இது ஒரு நீதிமன்றமல்ல. மதிப்பிற்குரிய உறுப்பினர் ஓர் உரையை ஆற்றிவிட்டு அமரவேண்டும்.

**திரு. துணை அவைத் தலைவர்:** அவைத் தலைவர் தலைமை தாங்கி நடத்தியபோதும் மதிப்பிற்குரிய உறுப்பினர் திரு. தாஸ் இந்த அறிவிப்பைச் செய்தார். ஒரு வகையில் இது ஒரு நீதிமன்றம் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஒரு நீதிமன்றத்தில் ஒரு வழக்கை வாதிப்பதுபோல் அவர் வாதிடலாகாது. எது எப்படியிருப்பினும் நாம் அவரது உரையில் குறுக்கிடக்கூடாது; சாத்தியமான அளவு இம்மாதிரியான பேச்சு தவிர்க்கப்பட வேண்டும்.

**திரு. பி. தாஸ்:** நாம் நமக்கிடையேதான் பேசிக்கொள்கிறோம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய மற்றோர் உறுப்பினர் பேசிக்கொண்டிருக்கும்போது பேசுவதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு உரிமை எதுவும் கிடையாது. அவர் குறுக்கிடக் கூடாது.

**திரு. பி. தாஸ் :** அவர் எங்களைச் சாடிப் பேசிக் கொண்டிருக்கிறார்.

**திரு. துணைத் அவைத் தலைவர் :** தாங்கள் பேசியிருக்கக் கூடாது. மதிப்பிற்குரிய மற்றொரு உறுப்பினர் பேசிக் கொண்டிருக்கும்போது மதிப்பிற்குகிய வேறு உறுப்பினருக்கும் பேச உரிமை கிடையாது. அவர் பேசுவதைக் கேட்கவேண்டும்; அவையில் சப்தம் போடக்கூடாது.

**திரு. பி. தாஸ்:** எரிச்சலூட்டுதலை நான் புரிந்து கொள்கிறேன். நான் வெளியே போகத் தயாராக இருக்கிறேன்; ஆனால் இந்த அவையின் உறுப்பினர்களை மதிப்பிர்குரிய உறுப்பினரின் உரை எரிச்சலூட்டக் கூடாது.

**திரு. துணை அவைத் தலைவர்:** இது தவறு. எந்த உறுப்பினரின் உரையையும், அவர் இழிவான சொற்களை அல்லது நாடாளுமன்ற மரபுக்கு முரணான சொற்களை உபயோகித்தாலன்றி, எரிச்சலூட்டுவதாகக் கூறக் கூடாது. அவரது பேச்சு நமக்கு உடன்பாடானதாக இருக்கலாம் அல்லது உடன்பாடற்றதாக இருக்கலாம், ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது நிலைமையை அவை முன் எடுத்துக் கூறிக் கொண்டிருக்கிறார். மதிப்பிற்குரிய எந்த ஓர் உறுப்பினரின் உரையையும் எரிச்சலூட்டுவதாகக் கூற யாருக்கும் உரிமை கிடையாது.

**திரு. பி. தாஸ் :** உங்கள் தீர்ப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்; சட்டத்துறை அமைச்சர் பற்றி ''மோசடி'' போன்ற பதங்களை அவர் உபயோகித்தார்.

**திரு. துணை அவைத் தலைவர் :** தம்மைப் பாதுகாத்துக் கொள்ள போதுமான பலம் பெற்றிருக்கிறார் மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மூலப் பிரிவை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. துணை அவைத்தலைவர்:** அவை தனது நிலையை மாற்றிக்கொள்ளத் தூண்டக்கூடிய வலுவான விஷயங்கள் எதுவும் மதிப்பிற்குரிய உறுப்பினரிடம் உள்ளனவா?

**திரு. நசிருத்தீன் அகமது:** இவை கணிசமான மாற்றங்கள். இவற்றை நான் சுட்டிக்காட்ட வேண்டும். உண்மையில் நான் மேன் மேலும் பேசிக் கொண்டே போகலாம். ஆனால் தவறை ஒப்புக் கொள்வது அல்லது பொறுமையோடு கேட்பதுதான் சாலச்சிறந்தது. எவ்வளவோ விஷயங்களை நான் எடுத்துச் சொல்ல வேண்டும்; எனது வாதத்தை நான் திரும்பத் திரும்பச் சொன்னாலோ அல்லது நான் கூறுவது பொருத்தமில்லை என்றாலோ, என்னை நீங்கள் திருத்தலாம். பாகம் IIல், பிரிவு 5ல், வகுப்பு I இருக்கிறது. மகன்கள், விதவைகள், மகள்கள் மற்றும் பலர் இவற்றில் இடம் பெற்றுள்ளனர்; இலாகாக் குழுவால் இதில் ஒரு மாற்றம் செய்யப்பட்டுள்ளது. முன் மரணமடைந்த மகளின் முன் மரணமடைந்த மகனின் மகன் இலாகா மசோதாவில் 7-வது அட்டவணையில் ஒத்திருக்கிற வகுப்பு 1ல் புதிதாகப் புகுத்தப்பட்டுள்ளது. உண்மையில் மூல மசோதாவில்,

அதன் இடத்திலிருந்து இந்த அட்டவணை அகற்றப்பட்டு அதிக இடம் தாண்டி வைக்கப்பட்டுள்ளது; இந்த இரு வகுப்புகளும் அடுத் தடுத்து வைக்கப்படாவிடில், மாற்றத்தைக் கண்டுகொள்வது எளிதல்ல. முன் இறந்த மகனின் முன் இறந்த மகனின் மகன் மூல மசோதாவில் இடம் பெற்றிருக்கவில்லை; ஆனால், இலாகாக் குழுவால் மாற்றி எழுதப்பட்ட மசோதாவின் 7-வது அட்டவணையில் இது புகுத்தப் பட்டுள்ளது.

இனி, மற்ற பட்டியல்களுக்கு வருவோம். மூல மசோதாவில் உள்ள பட்டியலில் முதலில் உள்ள வரிசைப்படுத்தப்பட்ட வாரிசு களுக்குப்பின், இரண்டாவது இனத்தில் இருப்பது மகளின் மகன், இலாகா மசோதாவில் மகளின் மகன் மேற்கொண்டும் கீழே கொண்டு வரப்படுகிறான். மூல மசோதாவின் படி, மரபுரிமை பெற தந்தையை விட தாய் முன்னுரிமை பெறுகிறாள். இலாகா மசோதாவில், தந்தையும் தாயும் ஒரே வரிசையில் வைக்கப்படுகின்றனர்; அவர்களின் வரிசை மாற்றப்பட்டுள்ளது; இலாகா மசோதாவின்படி, அவர்கள் மரபுரிமை பெறும்போது, மூல மசோதாவின்படி, தந்தை விலக்கப்பட்டு தாய் மரபுரிமை பெறுகிறார். தாய் இல்லையெனில், தந்தை மரபுரிமை பெறுவார். இலாகா மசோதாவில் மகளின் மகன் மேற்கொண்டும் கீழே கொண்டுவரப்பட்டிருக்கிறான் என்பது ஏற்கனவே சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தைப் பரிசீலிக்கும் எவருக்கும் இம்மாற்றங்கள் கணிமானவை என்பது தெளிவாகியிருக்க வேண்டும்.

அடுத்து, மூல மசோதாவின் வகுப்பு III-க்கு வருவோம். மூல மசோ தாவின் வகுப்பு IIIன் பட்டியலில், சகோதரரின் மகளின் மகன் முதல் இடத்தில் இருந்தும், இலாகா மசோதாவில் அது முற்றிலும் காணப்பட வில்லை. இது திட்டமிட்டு வேண்டுமென்றே செய்யப்பட்டிருந் தால், பொறுக்குக் குழுவின் அறிக்கையில் அல்லது உரைகளில் அது பற்றி குறிப்பு எதுவும் இருந்திருக்க வேண்டும். இது ஒரு கணிசமான மாற்றமா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். சகோதரரின் மகளின் மகனாக இல்லாத ஒருவருக்கு இது ஒரு கணிசமான மாற்றமாக இல்லாமலிருக்கலாம்; ஆனால் சகோதரரின் மகனின் மகனுக்கு அது ஒரு கணிசமான மாற்றமாகும்; ஏனெனில், மற்ற வாரிசுகள் இல்லா விடில், சொத்துக்கு அவன் உரிமை பெற்றிருப்பான்.

பட்டியலில் அடுத்து வருவது சகோதரி, இலாகா மசோதாவில் சகோதரனும் சகோதரியும் ஒன்றாக மரபுரிமை பெறுவதை நாம் இப்பொழுது காண்கிறோம். மூல மசோதாவில் மேல் வரிசையில்

இருந்த சகோதரர் வகுப்பு IIIல், கீழ் வரிசைக்கு மாற்றப்பட்டு, சகோதரியோடு ஒருசேர மரபுரிமை பெறுகிறார். (குறுக்கீடு)

என் வாதத்தை நான் நிறுத்திக் கொள்ள வேண்டுமா?

**திரு. தாஜாமுல் உசேன் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் மதிப்பிற்குரிய மற்றொரு உறுப்பினருடன் பேச உரிமை கிடையாது. ஐயா, இதை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன்.

**திரு. லட்சுமி நாராயணன் சாகு** (ஒரிஸ்ஸா பொது): அவையில் குறைந்த பட்ச உறுப்பினர்கள் இல்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** குறைந்தபட்ச உறுப்பினர்கள் இருக்கிறார்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு சகோதரரையும் ஒரு சகோதரியையும் விட்டு விட்டு ஒரு மனிதர் இறக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். மூல மசோதாவின்படி சகோதரர் மரபுரிமை பெற்றிருப்பார்; சகோதரி தள்ளிவைக்கப்பட்டிருப்பாள்; ஆனால் இலாகா மசோதாவின்படி சகோதரரும் சகோதரியும் சமமாக மரபுரிமை பெறுகின்றனர். பட்டியலில் 11 நபர்களை தள்ளிவைத்து சகோதரியின் உரிமைக்கு ஒப்பாகச் சகோதரர் இப்பொழுது கீழே இறக்கப்படுகிறார். இது மிகவும் கணிசமான மாற்றம் என்று பணிவுடன் கூறுகிறேன்.

அடுத்து நாம் சகோதரரின் மகனுக்கு வருகிறோம். வகுப்பு I-ல் உயர் மட்டத்தில் அவர் இருந்தார். இலாகா மசோதாவில் மூன்றாவது வகுப்பிற்கு சகோதரியின் மகன் வரிசைக்கு அவர் கீழே கொண்டு வரப்படுகிறார். ஒரு சகோதரரின் மகனையும் ஒரு சகோதரியின் மகனையும் விட்டுவிட்டு ஒரு மனிதர் இறந்துவிட்டால் மூல மசோதாவின்படி சகோதரரின் மகன் மரபுரிமை பெற்றிருப்பார்; ஆனால் இலாகா மசோதாவின்படி சகோதரரின் மகனும் சகோதரியின் மகனும் ஒருசேர மரபுரிமை பெறுவர். இவற்றை மிகவும் கணிசமான மாற்றங்கள் என்று கூறுகிறேன்.

அடுத்து, மூல மசோதாவின் வகுப்பு IVக்கு வருகிறேன். மூல மசோதாவின் வகுப்பு IVல் ஒரு அப்பாவின் அம்மாவையும், அப்பாவின் அப்பாவையும் விட்டுவிட்டு ஒருவர் மரணமடைந்தால் எழும் பிரச்சினையை மூல மசோதாவும் இலாகா மசோதாவும் வெவ்வேறு

விதமாகக் கையாளுகின்றன. மூல மசோதாவில், வாரிசுகளான அப்பா வின் அம்மாவுக்கும் அப்பாவின் அப்பாவுக்கும் இடையே அப்பா வின் அம்மா முதன்மை பெறுகிறார். அப்பாவின் அப்பா தள்ளிவைக்கப் படுகிறார். ஆனால், இலாகா மசோதாவின்படி அவர்கள் இருவரும் ஒருசேர வைக்கப்பட்டு, ஒருசேர மரபுரிமை பெறுகின்றனர். இது ஒரு கணிசமான மாற்றமில்லையா எனக் கேட்கிறேன்.

அடுத்து ஐயா, வகுப்பு IV, இனங்கள் (1A). (1 B), (1 C), (1 D)ல் சில வகை வாரிசுகள் இருக்கிறார்கள். ராவ் குழுவின் மூல அறிக்கை யில் ஒரு திருத்தம் மூலம் இவை அறிமுகப்படுத்தப்பட்டன. மூல மசோதாவில் ஓர் அப்பாவின் விதவையும் ஒரு சகோதரரின் விதவை யும் இருந்தால், அப்பாவின் விதவை, சகோதரரின் விதவையைவிட முன்னுரிமை பெறுவார். இலாகா மசோதாவில், அப்பாவின் விதவை யும் சகோதரரின் விதவையும் ஒருசேர மரபுரிமை பெறுகின்றனர். இது ஒரு முக்கியமான மாற்றம் என்று கூறுகிறேன்; இந்த மாற்றம் நல்லதா அல்லது கெட்டதா என்பதல்ல இங்கு பிரச்சினை. அடுத்து, ராவ் குழு அறிக்கையில் ஒரு திருத்தம் மூலம் கொண்டுவரப்பட்ட துணைப் பட்டியலில் உள்ள இரண்டு வாரிசுகளை எடுத்துக் கொண் டால், சகோதரரின் மகனின் விதவையையும், சகோதரரின் மகனின் மகனின் விதவையையும் முற்றிலுமாக இலாகா மசோதா நீக்கி யுள்ளது. மூல மசோதாவில், அவர்கள் ஒருவரை அடுத்து ஒருவர் மர புரிமை பெற்றிருப்பர். இலாகா மசோதாவில் அவர்கள் நீக்கப்பட் டுள்ளனர். இதற்கு ஒத்த எதுவும் இலாகா மசோதாவில் இல்லை.

அடுத்து, வகுப்பு IV, இனம் 2க்கு வந்தால், அப்பாவின் அப்பா மூல மசோதாவில் மிகவும் கீழே இருக்கிறார். ஆனால் இலாகாக் குழு தயாரித்த பட்டியலில், அவர் ஓர் உயர்ந்த இடத்தில் வைக்கப்படு கிறார்.

அடுத்து ஐயா, அப்பாவின் சகோதரருக்கும் அப்பாவின் சகோ தரிக்கும் வருகிறோம். பட்டியலில் அப்பாவின் சகோதரர் மூன்றாவது இடத்தில் இருக்கிறார். அப்பாவின் சகோதரி பட்டியலில் ஆறாவது இடத்தில் இருக்கிறார். மூல மசோதாவில் இவ்வாறு உள்ளது; அப்பா வின் அப்பாவும் மற்றவர்களும் இருந்தால், அப்பாவின் அப்பா முன் வைக்கப்படுகிறார். அடுத்து வருகிறார்கள் அப்பாவின் சகோதரர், அப்பாவின் சகோதரர் மகன், அப்பாவின் சகோதரரின் மகனின் மகன், அப்புறம் அப்பாவின் சகோதரி. இலாகா மசோதாவில், அப்பாவின் அப்பாவும் அப்பாவின் சகோதரியும் ஒருசேர வைக்கப்படுகின்றனர் - அப்பாவின் சகோதரி மேலே கொண்டு வரப்பட்டுள்ளார்.

அடுத்தபடியாக, வாரிசுகளின் ஒரு நீளமான பட்டியல் முற்றிலுமாக விடப்பட்டுள்ளது. எண்கள் (4), (5), (7), (8), மூல மசோதாவில் உள்ள வாரிசுகள். இலாகா மசோதாவில் அவர்கள் எங்கும் இடம் பெறவில்லை. அவர்கள் முற்றிலுமாக நீக்கப்பட்டுள்ளனர்.

ஐயா, இதைக் குறிப்பிட்டுக் கூறுவது ஒரு தொல்லை பிடித்த வேலை. ஆனால் எனது கடமையை ஆற்றுகிறேன். ஒப்பு நோக்கிப் பார்க்கும் அறிக்கையின் பிரதியை ஒவ்வொரு உறுப்பினருக்கும் வழங்குவதாக நான் பொறுப்பேற்றேன்; அது தயாரிப்பில் உள்ளது. ஒவ்வொரு மாற்றத்தையும் சரிபார்க்கும்படி உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன்; நான் கூறுவது தவறு என்று நிரூபிக்கப்பட்டால், மிகுந்த மகிழ்ச்சியடைவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்கள் அறிக்கை இலவசமாக வழங்கப்படும் என நம்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** நான் ஒரு தர்ம ஸ்தாபனம் என்று அரசாங்கம் கருதினால் அந்த நம்பிக்கையை நிறைவேற்றுவதில் மகிழ்ச்சியடைவேன்.

**திரு. துணை அவைத் தலைவர்:** இது முன்னமேயே வழங்கப் பட்டிருந்தால், இந்த நேரம் முழுவதையும் நாம் இழந்திருக்க மாட்டோம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இதில் பரிதாபம் என்னவெனில் எனது அச்சகம், அரசாங்க அச்சகத்தை விட மிகவும் மோசமானது.

**திரு. துணை அவைத் தலைவர்:** இந்த விஷயத்தை மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டிருந்தால், அதை அச்சடித்து வழங்க ஏற்பாடு செய்திருப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நிச்சயமாக அதை அச்சடிக்க ஏற்பாடு செய்திருப்பேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** கைப்பிரதி என்னிடம் தயாராக உள்ளது. அதை மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் பிரசுரிப்பாராயின் நான் மகிழ்ச்சியடைவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பொழுது அது பலனளிக்காது; ஏனெனில், இதே விஷயத்தை நீங்கள் அவையில் விவரமாகக் கூறியிருக்கிறீர்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இப்பொழுது மூல மசோதாவின் V வகுப்புக்கு வருவோம். அதில் உள்ள எல்லாமே இலாகா மசோதா வில் நீக்கப்பட்டுள்ளது. அதில் ஒன்பது வகைப்பட்ட வாரிசுகளும் நான்கு மற்ற துணை வாரிசுகளும் உள்ளனர். மூல மசோதாவின் வகுப்பு V-ல் இருந்து 13 வாரிசுகள் விடப்பட்டுள்ளன. ஒரு வேளை இது தவறுதலாக நடந்திருக்கலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை, வேண்டுமென்றேதான் நீக்கியிருக்கிறோம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** பின் ஏன் பொறுக்குக் குழு அறிக்கை எந்த கணிசமான மாற்றங்களும் செய்யப்படவில்லை என்று கூறுகிறது? நன்கு சிந்தித்தே அவை விடப்பட்டிருந்தால், இவை கணிச மான மாற்றங்களே ஆகும். ஆனால் அப்படியிருக்கும்போது எந்த விதமான கணிசமான மாற்றங்களும் செய்யப்படவில்லை என்று மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரால் அவைக்கு உறுதியளிக்கப் பட்டது. இவை வேண்டுமென்றே செய்யப்பட்டன என்று இப்பொழுது ஒப்புக் கொள்ளப்படுகிறது, எனவே இங்கு எழும் கேள்வி இவை கணிசமான மாற்றங்களா என்பதே. கணிசமான மாற்றங்கள் எதுவும் செய்யப்படவில்லை என்று நமக்கு உறுதியளிக்கப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இது அவ ரவரது கருத்து பற்றிய விஷயம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அப்படியாயின் இவை கணிசமான மாற்றங்களா என்ற கேள்வி எழுகிறது. சட்டம் இயற்றுபவர் பார்வை யில் அது முக்கியமற்றதாக இருக்கலாம்; ஆனால் வாரிசுக்கு அது முக்கியமானதாக இருக்கக் கூடும். வாரிசு உரிமையின் வரிசைக் கிரமத்தை நீங்கள் மிக சிறிய அளவு குலைத்தாலும் அது ஒரு கணிச மான மாற்றமாகிவிடும். மாற்றங்கள் வரைவுத் தன்மை வாய்ந்தது மட்டுமே என்று இதுவரை நாம் உறுதியளிக்கப்பட்டோம். இலாகா எந்தக் கணிசமான மாற்றங்களையும் செய்யவில்லை என்பது பொறுக்குக் குழுவின் அறிக்கை. இது விஷயத்தில் அறிக்கை மிகத் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் உள்ளது; கணிசமான மாற்றங்கள்

எதுவும் செய்யப்படவில்லை என்றும், எண்கள் மாற்றியமைக்கப் பட்டு சில சொல் வடிய மாற்றங்கள் மட்டுமே செய்யப்பட்டன என்றும், மாற்றங்களை ஓரத்தில் கோடிட்டு காட்டுவது அல்லது அடி வரியிட்டுக் காட்டுவது போன்ற வழக்கமான முறை இலாகா மசோதா வில் அல்லது இறுதி மசோதாவில் கையாளப்படவில்லை என்றும் அறிக்கை வலியுறுத்திக் கூறியுள்ளது.

இப்பொழுது, கடைசியில் கேள்விகளுக்கெல்லாம் கேள்வி யாக ஒரு கேள்வி எழுந்துள்ளது: இவை கணிசமான மாற்றங்களா? இதனை நிர்ணயிக்கும் உரைகல் எது? வாரிசுகளின் பட்டியல்களை நிலைகுலையச் செய்வது ஒரு கணிசமான மாற்றம் அல்லவா? அது கணிசமான மாற்றம்தான் என்று நான் அறுதியிட்டு உறுதியாகக் கூறு கிறேன். நான் அளவுக்கு அதிகமாக வாதிக்கிறேன் என்றும், ஒரு நீதிமன்றத்தில் போல் வாதிக்கிறேன் என்றும் மதிப்பிற்குரிய உறுப் பினர் எவரும் நினைத்தால், மாற்றங்களின் முக்கியத்துவத்தை முழு வதுமாக அவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்றுதான் தோன்று கிறது.

**திரு. தாஜாமுல் உசேன் :** தங்களைத் தவிர.

**திரு. நசிருத்தீன் அகமது :** இது ஒருவரால் மட்டுமே புரிந்து கொள்ளப்படுகிறது என்பது மிகவும் துரதிர்ஷ்ட வசமானது! நிச்சய மாக உயர்ந்த சம்பளம் அளிக்கப்படும் இலாகா இருக்கிறது; மிகச் சிறிய வேறுபாடுகளையும் புரிந்து கொள்ளும் திறமை வாய்ந்த உயர் கல்வி பெற்ற சட்ட அமைச்சர் இருக்கிறார்; அப்படியிருக்கும்போது இவற்றை எல்லாம் கண்டுபிடித்து விளக்கிக் கூற நான் எல்லாக் கஷ்டங்களையும் நேரத்தையும் பணத்தையும் செலவழிக்க வேண்டி யுள்ளது என்பதை மிகவும் வருத்தத்துடன் கூறுகிறேன். இது ஒரு எளிதான விஷயமாக இருக்கவில்லை; இந்த மாற்றங்களைப் புகுத்திய இலாகா நகல் மசோதாவின் ஒரு பிரதியை எனக்குக் கிடைக்கச் செய்யாத தால் கஷ்டம் மேலும் அதிகரித்தது. மிகவும் சிரமப்பட்டுத் தேடி ஒரு பிரதியைப் பெற முடிந்தது. இவ்வாறு தேடுதல் நீடித்தது; பரிசீலனை யும் நீடித்தது; அது எனக்கு மிக மிகச் சிரமமான விஷயமாக இருந்தது. இவற்றை எல்லாம் புரிந்து கொள்ளும் திறமை ஏனைய உறுப்பினர் களுக்கு இல்லை என்று நான் கூறுவதாக இதற்குப் பொருளாகாது. ஆனால் இவற்றை நுணுக்கமாக ஆய்வு செய்யும் ஆர்வமும் விருப் பமும் சிலருக்கே உள்ளன. அவர்கள் ஏன் அவ்வாறு செய்ய வேண்டும்? சட்டத் துறை அமைச்சகத்தை நம்புவது, சாரமுள்ள மாற்றங்கள் எதுவும்

செய்யப்படவில்லை என்று பொறுக்குக் குழு அறிக்கையில் உள்ள வெளிப்படையான உத்திரவாதத்தை நம்புவது ஒவ்வொரு உறுப்பினரின் கடமையும் உரிமையும் அல்லவா? இதை என்னைத் தவிர வேறு எவரும் தெரிந்து வைத்திருக்கவில்லை என்று மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் கூறியது அவர்களது கருத்தை முற்றிலும் நியாயப் படுத்துகிறது; அவரை நான் குறை கூற முடியாது; குறை இலாகாவில் தான் உள்ளது. இந்த மாற்றங்கள் இத்துடன் முடிந்து விடுமா? அவ்விதம் எவ்வகையிலும் சொல்ல முடியாது.

இனி வகுப்பு 5 (அ)க்கு வருவோம். அவர்களது முந்திய மசோதாவில் ஒரு திருத்தம் மூலம் ராவ் குழுவால் அது அறிமுகப்படுத்தப்பட்டது. வகுப்பு 5க்கு பின்னால் 5(அ) என்று அறிமுகப்படுத்த வேண்டும் என அவர்கள் குறித்திருந்தார்கள். 5(அ) முற்றிலுமாக விடப்பட்டுள்ளது. இந்த விடுதல் கவனக் குறைவால் ஏற்பட்டது என்று கூறுகிறது; ஆனால் கவனக்குறைவாலோ அல்லது வேண்டுமென்றோ செய்யப் பட்டதானாலும் இது இந்த மசோதாவின் நேர்மையை முற்றிலும் பாதித்துள்ளது.

அடுத்து வகுப்பு 6க்கு வருகிறோம்.

(குறுக்கீடு)

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடரலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அடுத்து வகுப்பு 6, இனம் (1), (2)க்கு - அதாவது அம்மாவின் அம்மா மற்றும் அம்மாவின் அப்பாவுக்கும் வருகிறோம். மூல மசோதாவில் தாயின் அம்மாவுக்கு தாயின் அப்பாவை விட முதன்மை அளிக்கப்படும். ஆனால் இலாகா மசோதாவில் அவர்கள் ஒருசேர வைக்கப்படுகின்றனர். எனவே இப்பொழுது அவர்கள் சமமாக, கூட்டாக மரபுரிமை பெறுகின்றனர். வகுப்பு 6, இனம் (3)ல் அம்மாவின் சகோதரரும் அம்மாவின் சகோதரியும் உரிமை பெறுகிறார்கள், மூல மசோதாவில் முந்தியவருக்கு அடுத்து பிந்தியவர்; ஆனால், இலாகா மசோதாவில் அவர்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து மரபுரிமை பெறுகின்றனர். இனம் (4) மற்றும் (5)ன் கீழ், சகோதரன் மகன் இலாகா மசோதாவில் முற்றிலுமாக விட்டுவிடப் படுகிறார். இனம் (7), (8) மற்றும் (9) - தாயின் சகோதரியின் மகன், தாயின் சகோதரரின் மகள், தாயின் சகோதரியின் மகள் முற்றிலுமாக விடப்பட்டுள்ளனர்.

அடுத்து வகுப்பு 6, இனம் (3)ம் முழுவதுமாகப் புறக்கணிக்கப்படுகிறது. 20க்குக் குறையாத மாற்றங்கள், கூட்டல்கள், கழித்தல்களுடன் விடப்பட்ட மரபுரிமைப் பட்டியல் முடிகிறது. வாரிசுகள் விரும்பியோ அல்லது வேண்டுமென்றோ நீக்கப்பட்டுள்ளனர்; இதை பொறுக்குக் குழு அறிக்கையிலிருந்து காணமுடியாது. வேறுபாடுகள் எங்கே உள்ளன என்று சுட்டிக்காட்டும்படி மதிப்பிற்குரிய பொறுக்குக் குழு உறுப்பினர்கள் திரும்பத் திரும்ப என்னை கேட்டார்கள். இவற்றை கவனிக்காததற்காக மதிப்பிற்குரிய எந்த உறுப்பினரையும் குறை கூற நான் விரும்பவில்லை. முதலில் இருந்த இடத்திலிருந்து மாற்றி அமைத்தது அல்லது நீக்கப்பட்டது ஆகியவை காரணமாக மாற்றங்கள் தெளிவாகத் தெரிந்திருக்கமாட்டா. கணிசமான மாற்றம் எதுவும் இல்லையென்று பொறுக்குக் குழு அறிக்கையில் உறுதிமொழி இருக்கிறது. இலாகா மசோதாவின் மூலம் கொண்டுவரப்பட்ட மாற்றங்கள் இவை; பொறுக்குக் குழுவின் கவனத்திலிருந்து அவை தப்பியிருக்கலாம். இலாகா மசோதாவிலும் இது அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லை. மிகவும் மரியாதைக்குரிய திறமையான உறுப்பினர் டாக்டர் பக்ஷி தேக் சந்த இருக்கிறார்; பொறுக்குக் குழு தனது கவனத்தை இலாகா மசோதாவில் செலுத்துவதோடு நின்றுகொண்டது என்று அவர் கூறுகிறார். ஏனெனில், எந்தக் கணிசமான மாற்றங்களும் செய்யப்படவில்லை என்று அவர்களுக்கு உறுதியளிக்கப்பட்டிருந்தது. இலாகாவில் அல்லது டாக்டர் அம்பேத்கரால் அவரது கவனம் இந்த விஷயங்கள் மீது திருப்பப்பட்டதா என்று டாக்டர் பக்ஷி தேக் சந்தைக் கேட்கிறேன். கடினமாக உழைக்கும் ஒரு வழக்கறிஞர் போல் இரண்டையும் ஒப்புநோக்கும் கடினமான பணியை எந்த ஓர் உறுப்பினரும் செய்யாவிடில், ஏராளமான எண்ணிக்கையில் விடப்பட்டவற்றையும் இடம் மாற்றி அமைக்கப்பட்டவற்றையும் அவரால் கவனித்திருக்க முடியாது.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்** (கிழக்குப் பஞ்சாப் பொது) : எனது கருத்து வேறுபாட்டுக் குறிப்பு அச்சடிக்கப்பட்டுள்ள அறிக்கையின் பக்கம் 92 கொடுக்கப்பட்டுள்ளது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். எனது கருத்து வேறுபாட்டுக் குறிப்பில், கணிசமான மாற்றங்கள் சிலவற்றை குறைந்த பட்சம் கணிசமான மாற்றங்கள் என்று நான் கருதியவற்றை கொடுத்துள்ளேன். இதன் காரணமாகவே மசோதா பொது மக்கள் கருத்துகளை தெரிந்துகொவதற்காக மீண்டும் சுற்றுக்கு விடப்பட வேண்டும் அல்லது எப்படியும் பொறுக்குக் குழுவிற்கு மீண்டும் அனுப்பப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறியுள்ளேன். மறுவரைவு செய்யப்

பட்ட மசோதாவில் கொண்டுவரப்பட்ட மாற்றங்கள் பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் இன்று தமது உரையில் மிக விரிவாக எடுத்துக் கூறிக் கொண்டிருப்பதுபோல் இல்லாவிடினும், பக்கம் 9ல் பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. பொறுக்குக் குழு உறுப்பினரில் எந்த உறுப்பினரும் இவற்றைக் கவனிக்கவில்லை என்று கூறுவது தவறு; மதிப்பிற்குரிய உறுப்பினர்போல் எவரும் கடும் உழைப்பையும் பொறுமையையும் கொண்டிருக்கவில்லை; ஆயினும் விஷயம் அவர்களது கவனத்திலிருந்து தப்பவில்லை. எனது பெயரை அவர் குறிப்பிட்டதால், இதை அவையின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டியது எனது கடமை என்று உணர்கிறேன். என்னைப் பொறுத்த வரையில் வேறுபாட்டுக் குறிப்பில் கணிசமானவை என்று நான் கருதிய மரபுரிமை வரிசையில் செய்யப்பட்ட மாற்றங்கள் பற்றி நான் குறிப்பிட்டுள்ளேன்; இது விஷயத்தைப் பொறுத்தவரை, மதிப்பிற்குரிய உறுப்பினரோடு நான் முற்றிலுமாக உடன்படுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இதனைத் தெளிவுபடுத்தியமைக்காக நான் மிகவும் நன்றியுடையவனாக இருக்கிறேன். மரியாதைக்குரிய, மிக உயர்வான சட்ட அனுபவம் உள்ள ஓர் உறுப்பினர், இவை கணிசமான மாற்றங்கள் என்று கருதுகிறார்; அந்த மாற்றங்கள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதால் மசோதா மறுசுற்றுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று கருதுகிறார். நான் கேட்கும் விஷயமும் அதுதான். மாற்றங்கள் கணிசமானவை என்று கருதும் பொறுக்குக் குழு உறுப்பினர் ஒருவர் மட்டுமாவது இருக்கிறார்; அவற்றை அவர் கவனித்தார்; ஆனால் அவை அவரது கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

**பண்டிட் தாகூர்தாஸ் பர்கவா** (பஞ்சாப் : பொது) : திரு. பாலகிருஷ்ண சர்மாகூட அதில் கையெழுத்திட்டிருக்கிறார்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** சட்ட ரீதியான அனுபவம் எதுவும் அவ்ருக்குக் கிடையாது.

**பண்டிட் லக்ஷ்மி காந்த மைத்ரா:** அவருக்குச் சமூக அனுபவம் இருக்கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** பண்டிட் பாலகிருஷ்ண சர்மாவும் அதே கருத்தைக் கொண்டிருக்கிறார். டாக்டர் தேக்சந்தின் பெயரும் மேற்கோள் காட்டினால் போதுமானது. மற்ற எந்தப் பெயர்களையும்

சேர்ப்பதால் டாக்டர் தேக்சந்தின் செயல்பாடும், நிலையும் பெருமளவு உயர்ந்துவிடாது. இவை கணிசமான மாற்றங்கள் என்று இந்த மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் நினைத்தனர். அதனால், மசோதா மீண்டும் சுற்றுக்கு அனுப்பப்படவேண்டுமென்று கருதினர். மசோதாவின் பிறபாகங்களிலும் மாற்றங்கள் உள்ளன. அவற்றைக் கண்டுபிடிக்க மிகவும் கடுமையான உழைப்பு தேவைப்படும்.

இலாகாக் குழுவினர் இத்தகைய மாற்றங்கள் செய்திருப்பதாலும், இவை மிகக் கணிசமான மாற்றங்கள் என்று டாக்டர் தேக்சந்த் ஆழமான கருத்து கொண்டிருப்பதாலும் இந்த மாற்றங்களை மறு பரிசீலனை செய்வதற்கு பொறுக்குக் குழுவுக்கு அனுப்ப வேண்டும், அல்லது மறு சுற்றுக்கு அனுப்ப வேண்டும் என்பதில் எந்த சந்தேகத்தையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அதே பொறுக்குக் குழுவிற்கு அனுப்ப வேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அதே பொறுக்குக் குழுவிற்கு அனுப்புவதில் எனக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை. முற்றிலும் நல்ல, உண்மையான மனிதர்களை, நீதி மற்றும் சட்ட அனுபவம் பெற்ற மனிதர்களைக் கொண்டது அந்தப் பொறுக்குக் குழு. அவர்கள் அந்தச் சட்டத்துறைகளில் நிபுணர்கள்: உண்மையில், எல்லாவித திறமைகளும் அந்தப் பொறுக்குக் குழுவில் பிரதிநிதித்துவம் பெற்றுள்ளன. பொறுக்குக் குழுவின்பால் முழுமையான நம்பிக்கை எனக்குள்ளது. அதன்மீது எனது நம்பிக்கையை நான் இழந்து விடவில்லை. நான் கூறுவது என்னவெனில், இந்த விஷயல்கள் கவனமாகப் பரிசீலிக்கப்பட வேண்டும்; ஒவ்வொரு மாற்றமும் கவனமாக ஆராயப்பட்டு, விவாதிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்; கணிசமான மாற்றங்கள் சந்தடியின்றி, வேண்டுமென்றே புகுத்தப்பட்டுள்ளன. எந்தக் கணிசமான மாற்றங்களும் செய்யப்படவில்லையென்று சட்ட அமைச்சராலும்; மீண்டும் பொறுக்குக் குழுவாலும் உறுதியளிக்கப்படுகிறோம்.

இவை கணிசமான மாற்றங்கள் என்று ஒரு புறம் மிக உயர்ந்த சட்டத் திறமை வாய்ந்தவரின் கருத்து உள்ளது; மற்றொரு புறத்தில், தாம் சிந்தித்து வேண்டுமென்றே இந்த மாற்றங்களைச் செய்ததாகவும் அதே சமயம் தாம் கணிசமான மாற்றங்கள் எதையும் செய்யவில்லை என்றும் கூறும் சட்டமேதை டாக்டர் அம்பேத்கரின் கையொப்பமிட்ட

உத்திரவாதம் உள்ளது. எனவே குழுவே பிளவு பட்டுள்ளது. இம் மாதிரியான பரந்த விஷயத்தில் இரு மேதைகள் கருத்து வேறுபாடு கொண்டிருப்பதால் விஷயம் குழுவால் இது பரிசீலனை செய்யப் படுவது அவசியம் என நினைக்கிறேன். நான் கோருவதும் அதுதான். இவை கணிசமான மாற்றங்கள் அல்ல என்று சட்டத்துறை அமைச்சர் நினைத்த போதிலும் விவரம் தெரியாத ஓர் அவைதான் அவர் கூறுவதை நம்பும். மரபுரிமை பெறும் உரிமை ஒரு முக்கியமான உரிமை. அதில் கணிசமான மாற்றங்கள் செய்யப்படவில்லை என்று கூறுவது தவறாகும். எனவே இந்த மாற்றங்கள் கணிசமானவையாக இருப்பதாலும், கணிசமான மாற்றங்கள் எதுவும் செய்யப்படவில்லை என்று உறுதி மொழி இருப்பதாலும், இந்த அடிப்படையிலேயே மசோதா பொறுக்குக் குழவிற்குத் திருப்பி அனுப்பப்பட வேண்டும் அல்லது சுற்றுக்கு அனுப்பப்படவேண்டும்; இந்த மாற்றங்களை உறுப்பினர்கள் உணர்வு பூர்வமாக, விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக்கொள்ள வேண்டும்; அல்லது நிராகரிக்கப்பட வேண்டும். ஆக்கபூர்வமான ஆணையுடன் அனுப்ப வேண்டும். இவையன்றி வேறு சில கணிசமான மாற்றங்களும் உள்ளன.

**திரு. பி.என். முனவல்லி :** *(மும்பாய் சமஸ்தானங்கள்)* : பழைய வாதங்களையே அவர் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறார்.

**திரு. துணை அவைத் தலைவர்:** அவர் தாம் கூற வந்த விஷயத்தைக் கூறி முடித்துவிட்டார் என்று நினைத்தேன். அவருக்கு வேறு விஷயம் எதுவும் இல்லையெனில் அவர் உட்காரலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மற்ற மிக முக்கிய மாற்றங்களும் உள்ளன. கணிசமான மாற்றங்கள் எதுவும் இல்லை என்று மாண்புமிகு அமைச்சர் எவ்வளவு நேரம் திரும்பத்திரும்ப கூறிக் கொண்டிருப்பார்.

**மாண்புமிகு குர்ஷித் லால்:** *(தகவல் போக்குவரத்துத் துறைத் துணை அமைச்சர்)* : தாங்கள் முடிக்கும் வரை.

**திரு. துணை அவைத் தலைவர் :** ஒரு மசோதாவை முன்மொழிந்தவர் தாம் செய்தது தவறு என்று ஒப்புக் கொள்வார் என்று வழக்கறிஞரான மதிப்பிற்குரிய உறுப்பினர் எதிர்பார்க்கிறாரா?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, தங்களின் இந்த உயர்வான கருத்துக்கு தலை வணங்குகிறேன். ஆனால் நாம் கட்சிக்காரர்களின்

நிலையெடுக்க இது ஒரு நீதிமன்றம் அல்ல. கட்சிக்காரர்களாக நாம் நிலையெடுக்காத ஒரு சட்டப்பேரவை இது. நமது கருத்துக்களை நேர்மையாக நாம் வெளிப்படுத்தலாம்; ஆனால், ஊதியத்திற்காக இந்த அல்லது அந்தப் பக்கம் நாம் சேருவதில்லை; ஒரு பக்கம் அல்லது மறு பக்கத்திற்கு நம்மை கட்டுப்படுத்திக் கொள்வதில்லை. சட்டப் பேரவைக்குப் பொறுப்புக் கூறக் கடமைப்பட்டுள்ள சட்டத் துறை அமைச்சர் தாம் தவறு செய்தால் அதை ஒப்புக் கொள்ள வேண்டும். எனவே தாம் கணிசமாக மாற்றங்களைச் செய்துள்ளதாக ஒப்புக் கொள்ள சட்டத்துறை அமைச்சரை இது தூண்டும் என்றும், அதனால் என் வாதத்தை மேலும் வளர்த்திக் கொண்டு போவதை முற்றிலுமாக அவசியமற்றதாக்கும் என்றும் எனக்கு ஓரளவு நம்பிக்கை உள்ளது. ஒரு நல்ல போர் வீரரைப் போல் மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் - தமது வாழ்நாள் முழுவதிலும் இருந்திருக்கிறார்; மனோபலத்திற்கும் நேர்மைப் பண்பிற்கும் அவர் புகழ்பெற்றவர். இத்தகையவரை இறுதியில் ஒப்புக் கொள்ளும்படி செய்யமுடியும் என்ற ஓரளவு நம்பிக்கையுடன் மேலும் மேலும் மாற்றங்களை அவர் முன் நான் சமர்ப்பிக்க வேண்டியுள்ளது.

**திரு. குர்ஷெத்லால் :** இந்த சந்தர்ப்பத்தில் குறுக்கிட நான் விரும்பவில்லை. ஆனால், தாம் ஒரு தவறு செய்துள்ளதாக சட்டத் துறை அமைச்சரை ஒப்புக்கொள்ள வைக்கும்வரை இம்மாதிரியே தொடருவது தான் மதிப்பிற்குரிய உறுப்பினரது நோக்கமா?

**திரு. துணை அவைத்தலைவர்:** ஏன் சட்டத்துறை அமைச்சர் மட்டும்? மற்ற உறுப்பினர்களும் ஒருவேளை ஒப்புக் கொள்ளலாம்; ஏனெனில் அவையை அவர் தமக்கு ஆதரவாகக் கொண்டு வந்திருக்கிறார்.

**திரு. பி. தாஸ் :** இவ்வாறு எப்படிக் கூறுகிறீர்கள் ஐயா? நாங்கள் கூச்சல் போட்டு அவரை உட்கார வைக்க முடியும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அது அவ்வளவு எளிதானதல்ல. ஐயா, கூச்சல் போட்டு உட்கார வைக்கப்போவதாக நான் பயமுறுத்தப் படுகிறேன். இங்கு கூச்சல் போட்டு என்னை உட்கார வைக்கக்கூடிய ஓர் உறுப்பினரை நான் இதுவரை பார்த்ததில்லை; அவரை இனி தான் பார்க்க வேண்டும். என்னைக் கூச்சல் போட்டு உட்கார வைக்க எந்த ஒருவரையும் நான் மரியாதையுடன் அழைக்கிறேன். கூச்சல் களுக்கு இடையிலேயும் நான் பேசுவதை அவையைக் கேட்க வைப்ப தற்கு ஒலிபெருக்கிக் கூட எனக்குத் தேவையில்லை.

**திரு. துணை அவைத் தலைவர்:** அவையில் எந்தச் சவாலையும் ஏற்றுக் கொள்ளத் தேவையில்லை எனக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** அவைக்கு வெளியில் எனக்கு சவால் விடுவது அவருக்கு பாதுகாப்பாக இருக்காது.

**திரு. தாஜாமுல் உசேன்:** நாங்கள் குறுக்கிடுவதைத் தாங்கள் விரும்பவில்லை. எனவே ஒரு தகவலைத் தெரிந்துகொள்ளத் தங்களின் அனுமதியை வேண்டுகிறேன். எனது மதிப்பிற்குரிய நண்பரிடமிருந்து நான் தெரிந்து கொள்ள விரும்பும் விஷயம் என்னவெனில், இன்று ஏப்ரல் 1-ம் தேதி, இந்த மசோதா மீது நாள் முழுவதையும் அவர் எடுத்துக் கொள்வதற்கு இதுதான் காரணமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** முட்டாள்கள் தினத்தன்று தீர்மானத்தை விவாதத்திற்கு கொண்டுவந்தற்காக மாண்புமிகுச் சட்டத் துறை அமைச்சரிடம் இக்கேள்வி கேட்கப்பட்டிருக்க வேணடும்.

**திரு. துணை அவைத் தலைவர்:** அது யாருக்கு பொருந்தினாலும் பொருந்தா விட்டாலும், மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது உரையைத் தொடரட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** அடுத்து, மூல மசோதாவின் பாகம் 2-ன் பிரிவுக்கு வருகிறோம்.

**டாக்டர் மனோ மோகன் தாஸ்** (மே. வங்காளம் - பொது) : ஐயா, மதிப்பிற்குரிய உறுப்பினர் இதற்குத் தயாராக இல்லை போல் தோன்றுகிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** மதிப்பிற்குரிய டாக்டர் கூறியதை நான் கவனிக்கவில்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** அவர் தொடரலாம்; இன்றாவது அவர் தமது உரையை முடித்துக் கொள்வார் என்று நம்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனக்குத் தெரியாது.

**திரு. துணை அவைத் தலைவர் :** இந்த விஷயம் பற்றி அதாவது கணிசமான மாற்றங்கள் பற்றி, இதுவரை போதுமான அளவு

சொல்லப்பட்டுள்ளது என்று மட்டும் நான் கூறமுடியும். எப்படியாயினும், மசோதாவுக்கு பொறுப்பாக உள்ள மாண்புமிகு அமைச்சர் திருப்தியடைந்தால் போதுமானது என்பதல்ல. தமது கருத்தை அவர் கொண்டுள்ளார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவை முடிவு செய்யும்.

**திரு. துணை அவைத் தலைவர் :** முடிவாக அவை முடிவு செய்யும். ஒரு தனி உறுப்பினருக்கு, அவர் எவ்வளவு முக்கியமானவராயினும், அவரைப் புரியவைப்பதற்காக மதிப்பிற்குரிய உறுப்பினர் மேலும் நேரத்தை எடுத்துக் கொள்ளவேண்டியதில்லை. அவையை தமது ஆதரவாகக் கொள்ள அவர் முயற்சி செய்யலாம். நான் ஏற்கனவே கூறியபடி, கணிசமான மாற்றங்கள் பற்றிய விஷயம் சம்பந்தமாக போதுமானது கூறப்பட்டுள்ளது. மற்ற முக்கிய விஷயங்கள் பற்றி, திருமணம், விவாகரத்து, தத்து எடுத்தல் ஆகியவை பற்றி அவர் குறிப்பிடப் போகிறார் என்று நினைத்தேன். மாண்புமிகு அமைச்சர் பிடிவாதமாக இருக்கமாட்டார் என்று நினைக்கிறேன்; இது பற்றி அவருக்கு ஆழமான கருத்துகள் இருந்தபோதிலும், மறுபுறம் வாதங்கள் எவ்வளவு தூரம் உள்ளன என்று பொறுத்திருந்து பார்ப்பார் என்றும், அவரை நம்பும்படி செய்ய முடியும் என்றும் நான் உறுதியாக நினைக்கிறேன். கணிசமான விஷயங்களுக்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் வருவாரென்று நினைத்தேன். இந்த விஷயம் பற்றி நீண்ட நேரம் செலவழிக்கப்பட்டுள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** என் பேச்சைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருப்பதற்காக எனது நன்றியை சட்டத்துறை அமைச்சருக்கு மனம் திறந்து தெரிவித்துக் கொள்கிறேன். மாற்றங்கள் பற்றிய மற்ற விஷயங்கள் என்னிடம் உள்ளன; அவற்றைச் சுருக்கமாக எடுத்துக் கூறுகிறேன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** மாற்றங்களை அப்படியே விட்டுவிடுங்கள். மாற்றங்கள் உள்ளன. இதை பின்வருமாறு முன் வைக்கிறேன். நான் எந்த ரகசியத்தையும் இங்கு வெளியிடவில்லை; நான் புரிந்துகொண்டபடி அவைக்கு தெரியக்கூடாத ரகசியம் எதுவும் இல்லை. பொறுக்குக் குழுவுக்கு அனுப்பிவைக்கப்பட்ட பின் ஒரு விஷயம் அவைக்குமுன் வரும்போது, பொறுக்குக் குழு தவறு செய்திருக்கலாம்; அதைத் தவறு என்று சொல்ல உறுப்பினர்களுக்கு

உரிமையுண்டு; தவறு திருத்தப்பட வேண்டும். ஒன்று இரண்டு விஷயங்களைத் தவிர, உதாரணமாக பொறுக்குக் குழுவில் ஒவ்வொரு உறுப்பினரும் சொன்னதை அவையின் முன் வைக்க வேண்டியதில்லை; காரணம் விஷயங்கள் ஸ்திரமற்ற நிலையில் உள்ளன; அது குழப்பத்தையும் வெறுப்பையும் விளைவிக்கலாம். இதை என்னால் கூற முடியும். பொறுக்குக் குழுவைப் பொறுத்தவரை, எந்த வரைவையும் பரிசீலனை செய்யலாம். இங்கு முன் வைக்கப்பட்டுள்ள வரைவு அமைச்சகத்தின் வரைவாகும். பொறுக்குக் குழுவின் அறைக்கையின் துவக்கத்திலேயே பத்தி 2ல் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

> ''சட்டப்பேரவையில் அறிமுகப்படுத்தப்பட்ட இந்து சட்டத் தொகுப்பின் வரைவு, அறிமுகப்படுத்தப்படும் முன்பு எந்த இலாகாவின் ஆய்வுக்கும் உட்படுத்தப்படவில்லை. சட்டப் பேரவையின் சென்ற கூட்டத்தொடரின் முடிவுக்கும் இந்தக் கூட்டத்தொடரின் முடிவுக்கும் இந்தக் கூட்டத்தொடரின் துவக்கத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் மசோதாவைப் பரிசீலிக்க வாய்ப்புப் பெற்ற சட்டத்துறை அமைச்சகம் (அதன் தலைவராக, உள்ள சட்டத்துறை அமைச்சரையும் நிச்சயமாக அது உட்படுத்துகிறது) இப்பொழுது மாற்றி அமைக்கப்பட்ட வரைவை தயாரித்துள்ளது....''

வரைவு பொறுக்குக் குழுவின் முன் வைக்கப்பட்டது. அவைத் தலைவரின் தீர்ப்பு என்னவெனில், மூல மசோதா அதன் வரைவுடன் அனுப்பப்பட்டது - சட்டத்துறை அமைச்சர் அறிமுகப்படுத்த விரும்பிய எல்லா திருத்தங்களையும் கொண்ட முழுமையான பட்டியல் என்று இதை நாம் எடுத்துக்கொள்வோம் - இவையாவும் பொறுக்குக் குழுவால் பரிசீலிக்கப்பட்டன. மசோதாவும் அதன் அனைத்துப் பிரிவுகளும் தவறு என்றும் இவை சமுதாயத்தைத் தொல்லைக்குள்ளாக்கும் என்றும், மூல மசோதாவில் பொறுக்குக் குழு கொண்டு வந்த மாற்றங்கள் பற்றி போதுமான கவனம் செலுத்தப்படவில்லை என்றும் மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறுவதற்கு உரிமையுண்டு. மசோதா முழுவதும் அல்லது அதில் உள்ள தனிப்பிரிவுகள் அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்தவையா என்பது பற்றி ஒரு முடிவுக்கு அவை வருவதற்கு இது உதவும் என்று நினைக்கிறேன். இந்த விஷயம் பற்றி ஏற்கனவே நாம் மிக அதிக நேரத்தைச் செலவிட்டுள்ளோம். இந்த விஷயம் பற்றி தெளிவுபடுத்துவது அவசியமாக இருக்கலாம். எந்தக் குறிப்பிட்ட விஷயத்திலும் யாரும் வரட்டுத்தனமாக இருக்க விரும்புவார்கள் என்று நான் நினைக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் காலியான மனத்தைக் கொண்டிருக்கவில்லை. திறந்த மனத்தையே கொண்டிருக்கிறேன் என்று பகிரங்கமாகக் கூறுகிறேன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** அதைத்தான் நாங்கள் எதிர் பார்க்கிறோம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அவருக்கு நான் மிகவும் நன்றி யுடையவனாக உள்ளேன். மசோதாவின் மற்றொரு பிரிவுக்கு வரு கிறேன். ஐயா இலாகா மசோதாவின் 102 பிரிவை அவையின் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அது முடிவான மசோதாவின் 101 பிரிவுக்கு ஒத்தது. இலாகா மசோதாவில் இது முதல் தடவையாக அறிமுகப்படுத்தப்பட்டது. பொறுக்குக் குழு சில மாற்றங்களைச் செய்தது; ஆனால் இலாகாக் குழு ஒரு தீவிர மாற்றத்தைச் செய்தது. அதாவது ஒரே மரபு வரிசையில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் இருந் தால், பெண்ணைவிட ஆண் இருமடங்கு பெறுவார் என்று இலாகா மசோதா வழி வகுத்திருந்தது. இறுதி மசோதாவில் அவர்களின் பங்கு கள் சமமாக ஆக்கப்பட்டன. இறுதி மசோதாவின் நியாயம் பற்றிய வரை, அது இங்கு முக்கியமன்று. இது ஒரு புது விலகல் என்று கூறு கிறேன்.

**திரு. துணை அவைத்தலைவர் :** 100 விலகல்கள் இருந்த போதிலும் அவை எல்லாவற்றையும் பற்றி விரிவாகப் பேச வேண்டியது அவசியமா? சுமார் பத்து அல்லது பதினைந்து விலகல் களை - இவையும் கூட அதிகம் - எடுத்துக்காட்டாக கூறினால் போதும், சில விலகல்களை அவர் எடுத்து கொண்டு, அவை பொறுக்குக் குழு விற்கு மீண்டும் அனுப்பப்பட வேண்டும் அல்லது பொதுமக்கள் கருத்தைத் தெரிந்து கொள்வதற்காக சுற்றுக்கு அனுப்பப்பட வேண்டும் என்று அவர் கூறலாம். பல்வேறு விலகல் வகைகளைப் பற்றிக் குறிப் பிட்டு அந்தப் பகுதியை மதிப்பிற்குரிய உறுப்பினர் முடித்துவிட்டார் என்று நான் நினைத்தேன். விலகல்கள் நிச்சயம் உள்ளன; சுற்றுக்கு அனுப்பப்பட்ட 13 பக்கம் கொண்ட பட்டியலில் அவை அடங்கி யுள்ளன. இந்த விலகல்கள் எவ்வாறு செய்யப்பட்டன என்று கூறப் படவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** விலகல்கள் இன்னவை என்று குறிப்பிடப்படவில்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** மாற்றங்கள் செய்யப் பட்ட முறை குறிப்பிடப்படவில்லை என்பது உண்மை; விலகல்களும் ஒப்புக்கொள்ளப்பட்டன; ஆனால் சில முக்கிய விலகல்கள் மட்டும் எடுத்துக்கொள்ளப்படலாம்; இந்த விலகல்கள் காரணமாக இந்த மசோதா

இப்போதைய பொறுக்குக் குழுவிற்கு அல்லது மற்றொரு பொறுக்குக் குழுவிற்கு அல்லது கருத்து அறிவதற்காக நாட்டில் சுற்றுக்கு அனுப்பப் படவேண்டும் என்பதை வலியுறுத்துவதற்காக இது விஷயத்தில் மிக அதிக நேரத்தை நாம் எடுத்துக் கொள்கிறோம் என நினைக்கிறேன்.

**திரு.பி. தாஸ்:** ஐயா, இதைத்தான் நான் நெடுகிலும் சொல்லி வந்துள்ளேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒன்று அல்லது இரண்டு உறுப் பினர்களின் எரிச்சலை நான் நன்கு புரிந்துகொள்ள முடியும்.

**திரு.பி.தாஸ் :** ஐயா, அவர் அதே பதத்தை மீண்டும் உபயோகிக் கிறார்!

**திரு. நசிருத்தீன் அகமது :** இலாகா மசோதாவின் 103வது பிரிவின்பால் அவையின் கவனத்தை ஈர்க்கிறேன். அது 102 பிரிவுடன் ஒத்திருக்கிறது.

**திரு. துணை அவைத்தலைவர் :** இது பற்றி நான் ஏற்கனவே சுட்டிக்காட்டியுள்ளேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இது ஒரு முக்கியமான விஷயம்.

**திரு. துணை அவைத்தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பின ருக்கு நான் ஆலோசனைதான் கூற முடியும். அவரோடு நான் வாதிக்க முடியாது. எடுத்துக்காட்டுகளைப் பெருக்கிக் கொண்டே போக வேண்டியது அவசியமில்லை என்று நான் சொல்ல மட்டுமே முடியும். அவர் கூற்றுப்படி, எடுத்துக்காட்டுகள் போதுமான எண்ணிக்கை யில் உள்ளன; மற்றவற்றைவிட மிக முக்கியமான ஒரு விஷயத்தை அவர் மறந்துவிட்டதாக அவர் நினைத்தால், அதை அவர் சுட்டிக் காட்டலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** முடிவான மசோதாவின் பிரிவு 102க்கு ஒத்திருக்கும் இலாகா மசோதாவின் 103 பிரிவு பங்காளிகளை ஐந்து படி நிலைக்கு உயர்த்துகிறது. வாரிசுகளை ஐந்து படி நிலைக்குத் தாழ்த்துகிறது. இந்த மாற்றம் வரிசைப்படுத்தப்பட்ட வாரிசுகள் விஷ யத்தில் முன்பு இந்து சட்டப்படி, சொத்து ஆண் வழி பங்காளி உறவினர் களுக்கு போகும். ஆனால் வரையறையில் பங்காளி என்பது மிக

அதிகம் கட்டுப்படுத்துப்பட்டு ஐந்து படி நிலைக்குக் குறுக்கப்பட்டுள்ளது. அடுத்தப் பிரிவில், முடிவான மசோதாவின் 103வது பிரிவுக்கு ஒத்ததான இலாகா மசோதாவின் 104வது பிரிவில் ரத்த உறவு உள்ளவர்களையும் அம்மாதிரி ஐந்து படி நிலைக்குக் கட்டுப்படுத்துகிறது. இந்து சட்டக் கண்ணோட்டத்திலும் மூல மசோதா கண்ணோட்டத்திலிருந்தும் இது முக்கியமான விலகலாகும். முன்னுரிமை பெறும் வாரிசு இல்லா விடில், எந்தப் பங்காளி உறவினரும், அவர் எவ்வளவு தூரத்து உறவினராக இருந்தாலும், அவர் வாரிசு ஆவார். இரத்த உறவினர் விஷயத்திலும் கூட, தந்தைவழி உறவினர் இல்லையெனில், எந்த இரத்த உறவினர்கள் அவர்கள் எவ்வளவு தூரத்து உறவினராக இருந்தாலும், வாரிசுகள் ஆவர். இரத்த உறவினர் சம்பந்தப்பட்டவரை மாற்றம் முற்றிலும் புதிது. பங்காளி உறவினர் பொறுத்தவரை மூல மசோதாவின் பிரிவுகளிலிருந்து பெரிதும் விலகிச் செல்லுகிறது. வரிசைப்படுத்தப் பட்ட வாரிசுகள் இல்லையெனில், தந்தை வழி உறவினர்களுக்குப் போகிறது; தந்தை வழி உறவினர்கள் இல்லையெனில் ரத்த உறவினர் களுக்குப் போகிறது என்று மட்டுமே விவரிக்கப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ரத்த உறவினர் களா அல்லது தந்தைவழி உறவினர்களா?

**திரு. நசிருத்தீன் அகமது:** ரத்த உறவினர்கள். இவையெல்லாம் பெருமளவிலான மாற்றங்கள். டாக்டர் அம்பேத்கரின் கூற்றின் படி இவை பெருமளவிலான மாற்றங்களல்ல; ஏனெனில் அந்த மாற்றங் களைச் செய்தவர் அவர்தான்.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** கடுமையான, முக்கியமான மாற்றங்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** தங்கள் கருத்துப்படி கணிசமான மாற்றங்கள் அவை கணிசமான மாற்றங்கள் மட்டுமல்ல, கடுமையான மாற்றங்களுமாகும். கடுமையான என்பது மேலும் ஒரு படி மேலே செல்கிறது. உண்மையில் சிலரின் வாரிசு உரிமையை அது கட்டுப் படுத்துகிறது.

**திரு. துணை அவைத் தலைவர் :** 5 மணிக்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் உரையை முடிக்கப் போவதில்லையா? இது விஷயம் பற்றி போதுமான அளவு கூறப்பட்டுள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** இல்லை ஐயா, சில உறுப்பினர்களை ஒப்புக் கொள்ள வைக்க இது போதுமானதல்ல. அவர்களை முற்றிலு மாகத் திருப்திப்படுத்த விரும்புகிறேன்.

**திரு. குர்ஷெத் லால்:** அப்படியாயின் தாங்கள் என்றென் றைக்கும் வாதித்துக் கொண்டிருக்க வேண்டும்.

**திரு. துணை அவைத் தலைவர் :** இப்பொழுது ஐந்து மணி ஆகிறது. இந்த நேரத்திற்குள் உறுப்பினர்களைத் திருப்திப்படுத்த அவரால் முடியவில்லையெனில், மேலும் ஐந்து மணி நேர முடிவிலும் அவரால் அவர்ளைத் திருப்திப்படுத்த முடியாது.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் காலியான மனத்தை வைத்திருக்கவில்லை. ஒரு திறந்த மனதை வைத் திருக்கிறார். போகப் போக அவரை என் வழிக்குத் திருப்ப முடியும்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இன்று இரவு உங்கள் உரையைப் பற்றிச் சிந்திப்பார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மூல மசோதாவின் 10வது பிரிவு, இலாகா மசோதாவில் முற்றிலுமாக விலக்கப்பட்டுள்ளது-அதுவே மறக்கப்பட்டுள்ளது. உண்மையில் இந்துச் சட்டத்தில், முஸ்லீம் சட்டத்தில் உள்ளது போல, பட்டியலிடப்பட்ட வாரிசுகள் இல்லாதபோது, இரத்த உறவினரல்லாத வாரிசுகள், வாரிசுரிமை பெறுகிறார்கள். அவர்கள் **போதகர்கள், ஆச்சாரியாக்கள், சிஷ்யர்கள், சகப் பிரமச் சாரிகள்,** அதே ஆசிரியரிடம் பயிலும் மாணவர்கள் - இவர்கள் வாரிசுகள் ஆவர். இலாகா மசோதாவின் படி **ஆச்சாரியர்களுக்கு** மரியாதை சக **பிரமச்சாரிகளுக்கு** மரியாதை ஆகியவை தூக்கி எறியப்படுகின்றன. இதுவும் ஒரு முக்கியமாற்றம். இந்த முக்கிய மாற்றங்களின் மற்றும் இதர பல மாற்றங்களின் தாக்கம் சட்டத்துறை அமைச்சரை என்பக்கம் ஈர்ப்பதில் வெற்றி பெறும் என நம்புகிறேன்.

அடுத்து இலாகா மசோதாவின் 109 வது பிரிவுக்கும் முடிவான மசோதாவின் 108வது பிரிவுக்கும் நாம் வருகிறோம். இந்த ஷரத்து முற்றிலும் புதிது. இந்தப் பிரிவில் மூல மசோதாவில் இல்லாத சில புதிய வாரிசுகள் கொண்டு வரப்படுகின்றனர்.

சீதனச் சொத்துக்கான மரபுரிமையில் சில மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன. அடுத்து பாகம் 2ல், பிரிவு 14, இதில் வாரிசுகள் ஒன்றாக இணைக்கப்பட்டு இருக்கின்றனர்.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் விரைவில் முடிப்பார் என்றால் நாம் மேலும் சில நிமிடங்கள் அவையில் இருப்போம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இல்லை ஐயா.

**திருமதி.ஜி. துர்க்காபாய் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் முடித்துக் கொள்வாராயின் அதிகம் ஐந்து நிமிடங்கள் நாம் இருப்போம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** அவைத் தலைவருக்கு நான் இதை விட்டுவிடுகிறேன்.

இப்பொழுது அவை நாளைக் காலை 10.45 வரை ஒத்தி வைக்கப் படுகிறது.

*அவை, சனி, 1949 ஏப்ரல் 2ம் தேதி காலை பத்தேமுக்கால் மணி வரை ஒத்தி வைக்கப்படுகிறது.*

## *இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்ச்சி

**திரு. அவைத் தலைவர் :** இந்து சட்டத்தின் சில பிரிவுகளைத் திருத்தி தொகுப்பிற்கான மசோதாவை, பொறுக்குக் குழு அறிக்கையின் படி மேலும் பரிசீலிப்பதற்கான தீர்மானத்தின் மீது அவை விவாதத்தைத் தொடரலாம்.

**திரு. மகாவீர் தியாகி** (ஐ.மா. : பொது) : இந்த மசோதாவை எவ்வளவு நேரம் வரை நாம் விவாதிக்கப் போகிறோம். ஏனெனில், சில அரசாங்க அலுவல்கள் இருக்கின்றன. எனவே, இந்த மசோதாவின் பரிசீலனை எவ்வளவு நேரம் ஆகும் என்று உறுதி செய்து கொள்ள நாங்கள் விரும்புகிறோம். இந்தக் கட்டத்தில் மசோதா நிறைவேறுவதைத் தடுக்க நீண்ட உரைகள் ஆற்றப்படுகின்றன. எல்லா உறுப்பினர்களும் பேச அக்கறையுடன் உள்ளனர். இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு பேசுவதற்கு அவர்களுக்கு அவகாசம் கிடைக்காமல் போகலாம். இப்போதைக்கு இந்த மசோதாவை எவ்வளவு நேரம் விவாதிக்கப் போகிறோம், ஐயா?

**திரு. அவைத் தலைவர்:** எவ்வளவு நேரத்திற்கு ஒரு மசோதா மீது விவாதம் நடைபெறப் போகிறது என்று கூறுவது எனக்குக் கஷ்டம். அது உறுப்பினர்களையே பெரிதும் பொறுத்துள்ளது. ஒரு நாள் தவிர, அதாவது 4ம் தேதி தவிர, அடுத்த வாரம் முழுவதும் அரசாங்க அலுவலுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது என்று நினைக்கிறேன். எந்த மசோதாக்களை அவர்கள் கொண்டுவர விரும்புகிறார்கள், எவற்றைக் கொண்டுவர அவர்கள் விரும்பவில்லை என்பது அரசாங்கம் கூற வேண்டிய விஷயம். பல்வேறு மசோதாக்களை அவர்கள் எவ்வாறு வரிசைப்படுத்தி முன் வைப்பார்கள் என்பதும் அரசாங்கத்தை பொறுத்த விஷயம்.

**திரு. மகாவீர் தியாகி :** அவசரமான அலுவலை முதலில் எடுத்துக் கொண்டு, இந்த மசோதாவை முதலில் பரிசீலிக்க அனுமதிக்கும்படி அரசாங்கத்தை தங்கள் மூலம் கேட்டுக் கொள்கிறேன். ஐயா, எந்த மசோதாக்கள் முதலில் எடுத்துக்கொள்ளப்படும் என்பதை திட்டவட்டமாக நாங்கள் தெரிந்து கொள்ள முடிந்தால், அடுத்த மசோதாக்களுக்கு நாங்கள் தயாராக வரமுடியும். மற்ற மசோதாக்களின் விவாதங்களிலும் பங்குபெற நாங்கள் அக்கறை கொண்டுள்ளோம்.

---

★ அ.நி.ச (சட்டப்பேரவை) ஈ, III, பாகம் II 1949 ஏப்ரல் 2, பக்கம் 2246 - 89.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா** (மே.வ : பொது) : ஐயா, மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. தியாகி எழுப்பியுள்ள பிரச்சினை உண்மையில் ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்தது. மசோதா மீது எவ்வளவு நேரம் விவாதம் நடைபெற வேண்டுமென்பது கணிசமான பேச்சாளர்களின் எண்ணிக்கையையும் அவர்களது பேச்சின் தன்மையையும் பொறுத்து அவை முடிவு செய்ய வேண்டிய விஷயம் என்று தாங்கள் கூறினீர்கள். இக்கருத்தை நான் பாராட்டுகிறேன். தங்களின் கூற்றின் பொருளை புரிந்து கொண்டேன். எத்தனை நாட்கள் ஒதுக்கப்படும் என்று கூறுவது அவைத் தலைவர் கைகளில் இல்லை என்பதை நன்கு காண்கிறேன். அதே சமயம் உண்மையில் இந்த மசோதா மீது பேச விரும்பும், முழுமையாக அதை விவாதிக்க விரும்பும் உறுப்பினர்களுக்குள்ள சிரமத்தையும் அவைத் தலைவர் புரிந்து கொள்வார் என நம்புகிறேன். இந்தக் கூட்டத்தொடரில் எத்தனை மசோதாக்கள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும் என்பதையாவது அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நேற்று இந்தத் தீர்மானம் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவுடன் துவக்கத்திலேயே, இந்த மசோதா மீண்டும் இந்தக் கூட்டத் தொடரில் எடுத்துக் கொள்ளப்படப் போவதில்லை என்ற எண்ணத்தை மிகப் பெரும்பான்மையான உறுப்பினர்கள் கொண்டிருக்கிறார்களெனக் கூறினேன். உண்மையில் முக்கியத்துவமும் சிறப்பும் வாய்ந்த இந்த மசோதா பரிசீலனைக்காகக் கொண்டு வரப்படும்போது உரியகாலத்தில் போதுமான அறிவிப்பு உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படும் என்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனால் அவ்வாறு செய்யப்படவில்லை. நான் கூறுவதன் முக்கியத்துவம் இம்முறையில் எழுகிறது. இந்த மசோதா மீதான விவாதம் இன்று வரை மட்டுமே தொடரும் என்று அறிவித்திருந்தால் அதை நாங்கள் புரிந்து கொள்ள முடியும். ஆனால் மறுபுறம் இக்கூட்டத் தொடரிலேயே மேற்கொண்டு நாட்கள் விவாதத்திற்கு ஒதுக்கப்படும் என்று கூறப்பட்டது. இதனால் ஒரே குழப்பம். எனவே மசோதாவுக்கு ஆதரவாகவோ அல்லது அதற்கு எதிராகவோ பேச விரும்பும் உறுப்பினர்கள் வந்து விவாதத்தில் கலந்து கொள்ள முடியாது போயிற்று. நேற்று நாம் துவங்கினோம். மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள் ஏற்கனவே கிளம்பிச் சென்றுவிட்டனர்; உதாரணத்திற்கு, திரு. கே.எம். முன்ஷி இந்த மசோதா பற்றிப் பேச வந்தார். அவர் திரும்பிச் சென்றுவிட்டார். இந்த முக்கிய மசோதாவுக்கு ஆதரவாகவோ, எதிராகவோ பேச விரும்பிய உறுப்பினர்கள் பலர் இருந்தனர், இதற்கு மேலும் சில நாட்கள் ஒதுக்கப்படும் என்று அவை தங்கள் மூலம் அறிந்து கொள்ள முடிந்தால் - இது பற்றி தாங்கள்தான் சொல்ல முடியும் - அவ்வாறு செய்வது தங்களுக்குச் சாத்தியம் - அது உதவிகரமாக இருந்திருக்கும்.

தற்போது இந்த முக்கியமான மசோதாபற்றி நாம் எங்கு இருக்கிறோம் என்பது நமக்குத் தெரியவில்லை.

**திரு. அவைத் தலைவர் :** மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் இந்த விஷயம் பற்றி எங்களுக்குத் தெளிவுபடுத்த முடியுமா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (சட்டத்துறை அமைச்சர்): நான் கூறக் கூடியது ஒன்றே ஒன்றுதான்; அதாவது இந்த மசோதா நிச்சயம் விவாதிக்கப்படும். அடுத்த சட்டம் எதுவாக இருக்கும் என்பதை என்னால் சொல்ல இயலாது. ஏனென்றால் அரசாங்கத்தின் அலுவலை நிர்ணயம் செய்யும் பொறுப்பு ஓர் அரசாங்கக் குழு விடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது 'முன்னுரிமைக் குழு' என்று அது அழைக்கப்படுகிறது. இந்த நாட்களை இம் மசோதாவிற்கு அக்குழு தான் ஒதுக்கியுள்ளது. இந்தக் குழு பிற்பகலில் கூடி அதன் சொந்த முடிவுகளை எடுக்கும். இதற்கு மேல் எதுவும் சொல்ல இயலாதவனாக இருக்கிறேன்.

**திரு. லட்சுமி காந்த மைத்ரா :** இந்தத் தீர்மானம் மீண்டும் விவாதத்திற்கு வரும் போது, போதுமான அளவு முன்கூட்டியே அறிவிப்புச் செய்ய வேண்டும். போதிய அறிவிப்பு இல்லாமல் தீர்மானத்தைக் கொண்டுவரும் நடைமுறை கையாளப்படாமல் இருக்க அவைத் தலைவருக்கு போதுமான உள்ளார்ந்த அதிகாரம் உள்ளது என்று மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ''இந்தத் தீர்மானம் வருவதை நான் அனுமதிக்கப் போவதில்லை; ஏனெனில், இந்த முக்கிய விவாதத்தில் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் கலந்து கொள்வதை அது பாதிக்கிறது'' என்று கூற தங்களுக்கு நிச்சயம் உரிமை உண்டு. மாண்புமிகு அமைச்சர் ஒரு முடிவுக்கு வரமுடியாமல் உள்ளார். இந்தக் கூட்டத்தொடரில் இந்த மசோதா அவ்வப்போது பரிசீலிக்கப்படும் முறைபற்றி ஆரம்பத்திலிருந்தே நான் ஆட்சேபம் தெரிவித்து வந்திருக் கிறேன். என்னுடையதும் ஏனைய உறுப்பினர்களது பாதகமான விமர்சனத்திற்கான விஷயம் இதுவாகவே இருந்து வந்துள்ளது. இந்த முக்கியமான மசோதாவுக்கு மேலும் ஏதாவது ஒரு நாள் ஒதுக்கப் படப் போகிறதா, இல்லையா என்று கூறும் நிலையில் இன்று கூட மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் இல்லை. அப்படியாயின், இந்த வாரக் கடைசியில், இந்த மசோதாவைப் பரிசீலிக்கும் தீர்மானம் மிகக் குறுகிய கால அறிவிப்பில் கொண்டு வரப்பட்டால், அதை உறுதியுடன் தாங்கள் எதிர்ப்பீர்கள் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** அந்தத் தீர்மானம் எப்பொழுது என்பது நிச்சயமில்லாதிருக்கிறது. இன்று மசோதா மீது விவாதத்தைத் தொடர்வோம்.

**திரு. பண்டிட் முகுத் பிகாரிலால் பர்கவா** (ஆஜ்மீர் - மேர்வரா) : இன்று கூட ஒரு நிலையை எடுக்க அரசாங்கத்தால் இயல வில்லை என்பது மிகவும் நியாயமில்லாதது. மார்ச் 30ம் தேதி நிலை என்ன என்று அவையில் அரசாங்கத் தலைவரிடம் தாங்கள் கேட்டீர்கள். இந்துச் சட்டத்தொகுப்பு மசோதா எடுத்துக் கொள்ளப்பட போகிறதா, இல்லையா என்று திரு. மைத்ராவால் ஒரு குறிப்பான கேள்வி கேட்கப் பட்டது. அரசாங்கத்தரப்பிலிருந்து இந்தக் கேள்விக்கு பதில் எதுவும் அளிக்கப்படவில்லை; விளைவு என்னவெனில், 31ம் தேதி முதல் தடவையாக, மசோதா எடுத்துக் கொள்ளப்படும் என்று நாங்கள் அறிந்தோம். விவாதத்தில் கலந்து கொள்ள விரும்பிய திரு. சௌத்துரி, அவையின் முன் இந்த மசோதா வராது என்று ஊகித்து, அஸ்ஸா முக்குக் கிளம்பிச் சென்றார். எனவே, இம்முறையில் இது கொண்டு வரப்படுவது நியாயமற்றது என்பது தெளிவு. உறுப்பினர்களின் உரிமைகளைப் பாதுகாக்க அவைத் தலைவருக்கு போதுமான அதிகாரம் உள்ளது.

**திரு. சேத் கோவிந்த தாஸ்** (மத்திய மாகாணம் - பீஹார் : பொது) : அந்தத் தேதியில், நாம் அவையை அநேகமாக ஏப்ரல் 7ம் தேதி ஒத்திவைப்போம் என்று அவையில் அரசாங்கப் பிரதிநிதி அறிவித் தார் என்பதை தாங்கள் நினைவில் வைத்திருப்பீர்கள். ஐயா, இந்தக் கூட்டத் தொடரில் இந்தச் சட்டத்தொகுப்பு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுமா என்ற கேள்வியை நான் எழுப்பினேன். அந்த விஷயம் பற்றி எதுவும் கூறுவது தங்கள் பணி அல்லவென்றும், அவையில் தங்கள் அலுவலை நிர்ணயித்துக் கொள்வது அரசின் பொறுப்பு என்றும் தாங்கள் கூறுனீர்கள். இப்பொழுது இந்தக் கூட்டத் தொடரின் இறுதிக் கட்டத்தில், பல உறுப்பினர்கள் இங்கு இல்லாதபோது, கருத்து வேறுபாடுகள் உள்ள இந்த மசோதாவை தொடர்ந்து பரிசீலிப்பது முறையானதல்ல. இப்பொழுது பேசிய மற்ற உறுப்பினர்களுடன் சேர்ந்து கொண்டு, உறுப்பினர்களின் உரிமைகளையும் சலுகைகளை யும் பாதுகாப்பது தங்கள் பொறுப்பு என்றும் அந்த உரிமை தங்களுக்கு உள்ளது என்றும் பணிவுடன் கூறிக் கொள்கிறோம். எனவே, இந்தக் கூட்டத் தொடரின் இறுதிக் கட்டத்தில் உறுப்பினர்களுக்கு போதுமான முன்னறிவிப்புக் கொடுக்காமல் இந்த மசோதா மீதான விவாதத்தைத் தொடர்வது முறையல்ல என்று அரசாங்கத்திடம் கூறும்படி தங்களைக்

கேட்டுக் கொள்கிறேன். இந்த மசோதாவை இன்று மாலை பரிசீலனை செய்யும் கட்டத்தில், விவாதத்தை ஒத்தி வைக்கும்படி தங்களை வேண்டிக் கொள்கிறேன். அப்பொழுது, வசந்த காலத்தில் நாம் பேரவையின் அடுத்த கூட்டத்தில் சந்திக்கும் போது இந்த அலுவல் எடுத்துக் கொள்ளப்படலாம்.

**திரு. அவைத்தலைவர் :** இப்போதைக்கு இது நிச்சயமற்ற ஒன்று; ஏனெனில், விவாதத்தை தொடரப் போவதாகச் சட்டத்துறை அமைச்சர் கூறவில்லை. தீர்மானம் இப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டால் அது எப்பொழுது மீண்டும் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும் என்பது (குறுக்கீடு), அவர் கூறியது போல, முன்னுரிமைக் குழுவின் முடிவைப் பொறுத்துள்ளது. விவாதத்தின் போது உறுப்பினர்கள் முன் வைக்கும் நியாயமான கோரிக்கைகளை இந்த அவையில் எனக்குள்ள அதிகாரங்களுக்கு ஏற்ப வழங்க என்னால் முடிந்தளவு முயற்சி செய்வேன். அரசாங்க அலுவலை நிர்ணயிப்பது பற்றிய விஷயத்தைப் பொறுத்தவரை, அதில் தலையிடுமாறு என்னைக் கேட்பது முறையல்ல என்று நினைக்கிறேன். அவர்களின் அலுவல்களில் எதற்கு முன்னுரிமை அளிப்பது என்பதை முடிவு செய்யும் அதிகாரம் படைத்தது அரசாங்கமே. இந்தக் குறிப்பிட்ட மசோதாவைப் பொறுத்த வரை அவர்களிடமிருந்து மேற்கொண்டு தெரிந்து கொள்ள வேண்டியது எதுவும் இல்லை. உறுப்பினர்களின் உணர்வுகளுக்கு அவர்கள் செவி சாய்ப்பார்கள் என நம்புகிறேன். இந்த விஷயத்தில் மேலும் எதுவும் கூற வேண்டிய அவசியம் இல்லை. நம் முன் இருக்கும் தீர்மானத்தை பரிசீலிப்பதை நாம் தொடரலாம்.

**திரு. எச்.வி. காமத்** (ம.மா மற்றும் பீஹார்) : இங்கு அலுவல் நடவடிக்கைகளை இறுதியாக முடிவு செய்வது யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமா, ஐயா?

**திரு. அவைத் தலைவர்:** அரசாங்க அலுவல்களைப் பொறுத்தவரை, அரசாங்கம்தான். எதற்கு முன்னுரிமை அளிக்க வேண்டும் என்பதைத் தீர்மானிப்பதில் எனக்கு எந்த சம்பந்தமும் இல்லை.

**திரு. சேத் கோவிந்த் தாஸ் :** இறுதியான அதிகாரம் தங்களுக்கே உள்ளது. அவை முன்பு கொண்டுவர விரும்பும் எந்த அலுவலையும் அவர்கள் கொண்டு வரலாம். ஆனால், அது குறித்து முடிவான அதிகாரம் படைத்தவர் தாங்களே.

**திரு. அவைத் தலைவர் :** இப்பொழுது அதிகாரத்தை என்னிடத்தில் அளிப்பது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு உகந்ததாக இருக்கிறது; அந்தப் பொறுப்பு எனக்கு மிக அதிகம் என்று நான் நினைக்கிறேன். அரசாங்க நிர்வாகத்தின் எல்லா விவரங்களையும் தேவைகளையும் பற்றி எனக்கு அதிகப் பரிச்சயமில்லை. இம்மாதிரி விஷயங்களில் அவரவர்கள் உசிதம் போல் நடந்து கொள்ளலாம். இதில் நான் தலையிட முடியுமென நினைக்கவில்லை. சிறந்த வழி என்னவெனில் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தங்களின் கருத்துக்களின் நியாயத்தை அரசாங்கம் உணரும்படி செய்வதுதான். அப்பொழுது விஷயங்கள் சரிசெய்து கொள்ளப்படும். நான் செய்யக் கூடியது எல்லாம் ஒரு நியாயமான விவாதம் நடக்கும்படி பார்த்துக் கொள்வதுதான். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து நான் செய்யக் கூடியதை நிச்சயமாக செய்வேன்.

**திரு. சேத் கோவிந்ததாஸ் :** தங்கள் மூலமாக நாங்கள் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறோம்.

**திரு. அவைத் தலைவர் :** இவ்வாறு செய்ய உறுப்பினர்களுக்கு எத்தனையோ இதர வழிகள் உள்ளன.

**திரு. அருண் சந்திர குமார்** (மேற்கு வங்காளம் : பொது) : அவை எப்பொழுது ஒத்திவைக்கப்படும் என்பது இப்பொழுது எங்களுக்குத் தெரிவிக்கப்பட வேண்டும். இது செய்யப்படாவிடில் எங்கள் அலுவலுக்கான ஏற்பாடுகளைச் செய்வது எங்களுக்குக் கஷ்டமாக இருக்கும்.

காலை 11 மணி

**திரு. அவைத் தலைவர் :** இதைப் பொறுத்த வரை, நிலைமை என்னால் நேற்று தெளிவாக்கப்பட்டது. தகவலை அளிக்கும்படி மாண்புமிகு பிரதம மந்திரியைக் கேட்டுக் கொண்டேன்; ஒன்று அல்லது இரண்டு நாட்கள் இது நடக்கலாம் என்று அவர் கூறினார். திட்டவட்டமாகச் சொல்வது அவருக்கு சாத்தியமில்லை; ஏனெனில், விவாதத்தை அனுமதித்து அவையில் நிறைவேற்ற அவர்கள் விரும்பும் அவசர சட்டங்கள் இருக்கலாம். எனவே விஷயம் உறுப்பினர்களையும் சார்ந்திருக்கிறது. ஏப்ரல் 9க்குப் பின் நாம் அவையில் உட்காரப் போவதில்லை.

**திரு. அருண் சந்திர குகா:** அப்படியாயின், அவசரமான விஷயங்கள் முதலில் எடுத்துக் கொள்ளப்படலாம்.

**திரு. அவைத்தலைவர் :** அவசரம் என்பது அவரவது கருத்து பற்றிய விஷயம்.

**திரு. மௌலான ஹசரத் மோகனி :** டாக்டர் அம்பேத்கரின் இந்தக் கஷ்டத்தைப் போக்க நான் ஓர் ஆலோசனை கூறுகிறேன். சமூக சீர்திருத்தம் சம்பந்தமான எந்தச் சட்டமும் அரசு அலுவலின் ஒரு பகுதி யாக ஆக்கப்படக்கூடாது. சமூக சீர்த்திருத்தம் சம்பந்தப்பட்ட இத்தகைய ஒரு மசோதா திருமதி துர்க்காபாய் அல்லது திருமதி ரேணுகாரேயால் அறிமுகப்படுத்தப்படுவதை நான் புரிந்து கொள்ள முடியும். விருப்ப மில்லாத பொது மக்கள் மீது இத்தகைய ஓர் அதிகாரபூர்வமான மசோதாவைத் திணிப்பது முற்றிலும் நியாயமற்றது. எனவே, விவேகம் வீரத்திலும் சிறந்தது என்பதை உணர்ந்து துணிச்சலோடு இந்த மசோதாவின் பரிசீலனையை ஒத்திவைத்து, அதிகார பூர்வமான மசோதாவை வாபஸ் பெற்றுக் கொள்ளும்படி எனது மதிப்பிற்குரிய நண்பரை அழைக்கிறேன்; பொது மக்கள் கருத்தைக் கலந்து, பின்பு ஒரு தேதியில் எவரேனும் ஓர் உறுப்பினர் சமூக சீர்திருத்தத்தை உட் படுத்தும் இம்மாதிரியான மசோதாவை முன்மொழியும்படி விட்டு விடலாம்.

**திரு. அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் இதை மேலும் விவாதிக்கத் தேவையில்லை. அவரது ஆலோசனையைக் கூறியது போதும்.

**திரு. முகமது இஸ்மாயில் கான் :** (ஐ.மா:முஸ்லீம்) : இந்த மசோதாவின் முன்னுரிமை அமைச்சரவைக் குழுவில் தீர்மானிக்கப் பட வேண்டும் என்று மாண்புமிகு அமைச்சர் அவைக்கு கூறியதால், இந்த மசோதாவுக்கு முன்னுரிமையை அவர் வற்புறுத்தப் போகிறாரா அல்லது இல்லையா என்பதை அவரிடமிருந்து தெரிந்து கொள்ள நாங்கள் உரிமை பெற்றுள்ளோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மேற்கொண்டு எதையும் கூற நான் விரும்பவில்லை. நான் சொல்ல விரும்புவது எல்லாம், திடீர் வாக்கெடுப்பால் இந்த மசோதாவை நிறைவேற்றும் எண்ணம் எதுவும் அரசாங்கத்திற்கு இல்லை என்பது தான்.

**திரு. அவைத் தலைவர் :** இப்பொழுது திரு. நசிருத்தீன் தமது உரையை முடித்துக் கொள்வார். உரைகள் மீது நேரக் கட்டுப்பாட்டைத் திணிக்க நான் விரும்பவில்லை. அவர் நேற்று முழுவதும் பேசியிருக்

கிறார்; முந்தின சந்தர்ப்பத்திலும் 48 நிமிடங்கள் பேசியுள்ளார். மொத்தத்தில் அவர் எடுத்துக் கொண்ட நேரம் 3மணி 28 நிமிடம். சரியாகச் சொல்ல வேண்டுமெனில் அவர் எடுத்துக்கொண்ட நேரத்தைக் கொண்டு அவரது உரையை நான் அளவிடவில்லை. அவரது கவனத்துக் கொண்டுவர நான் விரும்புவதெல்லாம் மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டுவர வேண்டும் என்ற தீர்மானம் தான் இப்போது கொண்டுவரப்பட்டுள்ளது என்பது தான். எனவே மசோதாவின் ஒவ்வொரு பிரிவின் விவரங்களுக்கும் போவது முறையானதோ சரியானதோ அல்ல. நேற்று நான் புரிந்து கொண்டபடி, மதிப்பிற்குரிய உறுப்பினரின் வாதம் என்னவெனில், மசோதாவில் கணிசமான மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்பதால், இந்த மசோதா புதிதாகப் பரிசீலிக்கப்பட வேண்டும் அல்லது இந்த விஷயம் பற்றிப் பொது மக்களின் கருத்தைக் கண்டறிய வேண்டும் என்பதாகும். ஆதலால் மசோதாவின் ஒவ்வொரு பிரிவையும் அவர் பரிசீலிக்க வேண்டிய அவசியம் இல்லை. எடுத்துக்காட்டாக உண்மையிலேயே கணிசமான சில மாற்றங்களை அவர் சுட்டிக்காட்டினால் போதுமானது. இந்தக் கட்டத்தில் அவரது வாதத்தின் நோக்கத்திற்குப் போதுமானது என்று நினைக்கிறேன். பிரிவு பிரிவாக விவாதத்திற்கு மசோதா வரும்போது அவர் விரும்பும் எந்தத் திருத்தத்தையும் முன்மொழிய அவருக்கு முழு உரிமை உண்டு.

*திரு. நசிருத்தீன் அகமது (மே.வங்கம் : முஸ்லீம்) : ஐயா, இந்த யோசனைக்குத் தங்களுக்கு நன்றியுடையவனாக இருக்கிறேன். நேற்று நான் கணிசமான மாற்றங்கள் பற்றி எடுத்துரைத்தேன். இன்று மேலும் சில கணிசமான மாற்றங்கள் பற்றிக் கூறுவதோடு நிறுத்திக் கொள்கிறேன். (குறுக்கீடு)

**திரு. அவைத் தலைவர் :** குறுக்கீடுகள் பற்றி நான் உணரும் கஷ்டம் ஒன்று உள்ளது. அவை முதலில் கூறிய விஷயத்திலிருந்து கவனத்தைத் திசை திருப்புகின்றன. பேச்சாளரைக் கட்டுப்படுத்தவும் விவாதத்திற்குப் பொருத்தமான விஷயத்திற்கு அவரைக் கொண்டு வரவும் என்னால் முடியவில்லை. எனவே குறுக்கீடுகள் இல்லையெனில், விவாதத்திற்கான நேரத்தைக் குறைக்க முடியும்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** ஆனால் குறுக்கீடுகள் இல்லையெனில் விவாதம் சுவாரசியமற்றதாகி விடுகிறது.

---

★ அ.நி.ச (சட்டப்பேரவை) விவாதங்கள் தொகுதி III, பாகம் II, 1949 ஏப்ரல்2, பக்கம் 2249 - 76.

**திரு. அவைத் தலைவர் :** சுவாரசியமற்ற நிலையிலிருந்து அது மாற்றம் அளிப்பது உண்மையே. ஆனால் குறுக்கீடு அதிகமாவது அவைக்கு அபாயகரமானது. எனவே குறுக்கீடுகள் அல்லது பக்கக் கூற்றுக்கள் இல்லாமல் இருக்கட்டும்; ஏனெனில், அவை விஷயத்தைத் திசைதிருப்புகின்றன.

**திரு. நசிருத்தீன் அகமது :** இலாகா வரைவில் புகுத்தப்பட்ட மேலும் சில கணிசமான மாற்றங்களை எடுத்துக்காட்டுவதோடு என்னைக் கட்டுப்படுத்திக் கொள்வேன் ஐயா.

மூல மசோதாவின் 3ம் பாகத்திற்கு வருகிறேன்; இலாகா மசோதாவின் 126 பிரிவின் துணைப் பிரிவு (2)ன்பால் அவையின் கவனத்தை ஈர்க்கிறேன்; அது முடிவான மசோதாவின் 124 பிரிவின் துணைப்பிரிவு (2)க்கு ஒத்திருக்கிறது. ஒரு புதிய கோட்பாட்டை முன் வைக்கும் ஒரு புதிய துணைப்பிரிவு அது; அந்தக் கோட்பாடு என்ன? எந்த சொத்து மாற்றமும் பராமரிப்புக்கான உரிமையைத் தோற் கடிக்காது என்பதே அந்தக் கோட்பாடு. உண்மையில், பராமரிப்பு என்பது சொத்தின் மீது ஒரு சட்டரீதியான பொறுப்பாக ஆக்கப் பட்டுள்ளது. இது சரியோ தவறோ இந்தப் புதிய விஷயம் பொறுக்குக் குழுவால் அறிமுகப்படுத்தப்படவில்லை. இலாகா குழுவால்தான் அறிமுகப்படுத்தப்பட்டது.

அடுத்து, மூல மசோதாவின் பாகம் 3(அ) ஐ எடுத்துக் கொள் வோம். மரபுரிமையை கையாளும் பிரிவுகள் 1ம் 2ம் இதில் அடங்கி யுள்ளன. மிக முக்கியமான இந்த ஷரத்து இலாகா மசோதாவில் முற்றிலுமாக விடப்பட்டுள்ளது. அதே போல் முடிவான மசோதா விலும் விடப்பட்டுள்ளது. இது பற்றி நான் விரிவாகப் பேசப் போவ தில்லை; மாண்புமிகு அமைச்சரின் பரிசீலனைக்கு அவற்றை விட்டு விடுகிறேன்.

அடுத்து, இலாகா மசோதாவின் பிரிவு 131 (முடிவான மசோதா வின் பிரிவு 130), துணைப் பிரிவு (1)க்கு வருவோம். இது பராமரிப்பு பற்றிய ஒரு புதிய விஷயம். இது கணிசமான மாற்றத்தை புகுத்து கிறது. இலாகா மசோதாவின் 133வது பிரிவு (முடிவான மசோதாவின் 132ம் பிரிவு) சில சோதனைகளைத் தெரிவிக்கிறது. மிகுந்த முக்கியத் துவம் வாய்ந்த ஒரு புது மாறுதலை இவை புகுத்துகின்றன. இந்தப் பிரிவின் துணைப்பிரிவு (2)ன் பாகம் (ஆ) ஒரு புது மாறுதலாகும், மூல மசோதாவின் பிரிவு 6(1) பாகம் 3(அ) ஒத்ததாக உள்ளது.

*மூல மசோதாவில் துணைப் பிரிவு (1) ன், பாகம் 3(அ)ல் பகுதி (எ), (ஏ) ஆகியவை முக்கியமான ஷரத்துக்கள். இலாகா மசோதாவில் அவை முற்றிலுமாக விடப்பட்டுள்ளன - முடிவான மசோதாவிலும் விடப்பட்டுள்ளன. மீண்டும் இலாகா மசோதாவின் பிரிவு 133(2)ன் பகுதி (எ) மற்றும் (ஏ),(ஐ) மிக முககியமானவை; அவை முற்றிலும் புதியவை. மூல மசோதாவில் பிரிவு (6), துணைப் பிரிவு (1), பாகம் 3(அ)ல், உள்ள காப்பு வாசகம் இலாகா மசோதாவில் எந்த விளக்கமுமின்றி விடப்பட்டுள்ளது. இந்த விடுபடல் ஒரு முக்கியமான விஷயமாகும்.*

*இலாகா மசோதாவின் 134வது பிரிவு, துணைப்பிரிவு (2) (முடிவான மசோதாவின் பிரிவு 133), திருமணமாகாத மகளின் திருமணச் செலவு பற்றிக் குறிப்பிடுகிறது. மூல மசோதாவில் இல்லாத ஒரு புதிய ஷரத்து இது.*

*குடும்ப இல்லத்திற்கு வெளியே வசிக்கம் ஒரு விதவையின் ஜீவனாம்சம் பற்றிக் கூறும் மூல மசோதாவின் பாகம் 3(அ)ன் பிரிவு 7க்கு வருகிறேன். இது இலாகா மசோதாவிலும் முடிவான மசோதாவிலும் விடப்பட்டுள்ளது.*

*மூல மசோதாவின் பாகம் 3(அ)ல், முக்கிய விடுபடல்களும் குறைபாடுகளும் உள்ளன. நான் தனித்தனி மாற்றங்களில் கவனம் செலுத்துவதோடு நில்லாமல் இந்த மாற்றங்களின் ஒட்டு மொத்த விளைவுகளிலும் கவனம் செலுத்துகிறேன் என்பதைச் சுட்டிக் காட்டவேதான் இவற்றை எல்லாம் குறிப்பிடுகிறேன்.*

*அடுத்து, திருமணம் மற்றும் விவாகரத்து பற்றிய மூல மசோதாவின் பாகம் 4க்கு முடிவான மசோதாவின் பாகம் 2க்கு ஒத்திருக்கிறது. முக்கிய விஷயங்கள் பற்றி மட்டுமே நான் எடுத்துக் கொள்வேன். திருமணம் பற்றிய ஷரத்துக்கள் முற்றிலுமாக, தீவிரமாக மாற்றப் பட்டுள்ளன. அவை மீது விரிவான பரிசீலனை தேவை. சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணத்தைப் பொறுத்தவரை, இந்து சமுதாயத்தில் பரவலாக உள்ள இத்திருமண முறை நன்கு தெரிந்ததே. இத்தகைய திருமணங்கள் பழக்கவழக்கங்கள் மற்றும் சமுதாய நடைமுறைக்கேற்ப இருக்கும் என மூல மசோதா விட்டுவிட்டது. சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணங்களைச் சட்டரீதியாக்க பதிவு செய்து கொள்ள வேண்டும் என்பது ஒரு நிபந்தனையாக மூல மசோதாவில் எந்த ஷரத்தும் இல்லை. இலாகா மசோதா இத்தகைய மாற்றங்களைச் செய்துள்ளது என்பதை எடுத்துக்காட்ட முயல்வேன்.*

3

இவை தன்னுணர்வில்லாமல் செய்யப்பட்டவையாக இருக்கலாம். ஆனால் எனக்குத் தோன்றும் மாற்றம் என்னவெனில், பதிவு செய்யப் படாவிடில் எந்தத் திருமணமும் சட்டப்படி செல்லாது என்பதாகும். முஸ்லீம்கள் விஷயத்தில் போல, பதிவு செய்து கொள்வது விருப்ப படியானது என்று ஆக்கப்படவில்லை. ஆனால் இலாகா மசோதாவில், விருப்பப்படியான தன்மை கொண்ட பழைய விதிமுறைகளில் தலையீடு உள்ளது. சட்டப்படி செல்லத்தக்கது என்பது பதிவு செய்யப் படுவதைப் பொறுத்ததாக அது ஆக்கப்படுகிறது; இல்லையெனில், திருமணம் சட்டப்படியானதல்ல என்று ஆகும் என்பதைக் காண்பிக்க முயலுவேன்.

மூல மசோதாவின் 4வது பாகம் இந்தப் பொருள் பற்றிக் கையாள் கிறது. பிரிவு 2ல் இந்துத் திருமணங்கள் இரு வழிமுறைகள் கொண் டிருக்கும் என வகுத்துக் கூறுகிறது. அதாவது சடங்குகள் அடிப்படை யிலான திருமணமும் சிவில் திருமணமும் ஆகும். சிவில் திருமணத்தை விட்டுவிடுவோம்; அதைப் பற்றி இப்பொழுது நான் கவலைப்பட வில்லை. ''இருமுறையிலான இந்துத் திருமணங்கள் இருக்கும் - சடங்குப்படியான திருமணமும் சிவில் திருமணமும்.'' மூல மசோதாவில் கொடுக்கப்பட்டிருந்தது இதுதான். இதன் வடிவங் கள் எப்படி இருக்க வேண்டுமென்பது நடைமுறையிலுள்ள பழக்க வழக்கங்கள், தேவைகள் முதலியவற்றால் நிர்ணயிக்கப்படுவதற்கு விடப்பட்டது; பதிவு செய்வதற்கான ஷரத்து எதுவும் இதில் இல்லை. இலாகா மசோதாவில் இடம் பெற்றுள்ள இதற்கு ஒத்த ஷரத்துக் களை அவை தயவு செய்து பரிசீலிக்கட்டும். மதச் சடங்கின்படியான திருமணமுறை திருமணமுறைகளில் ஒன்றாக இருக்கும் என்று மட்டுமே மூல மசோதா கூறியது. இது குறித்த விவரங்கள் சம்பந்தப் பட்டவர்களின் உசிதத்திற்கு விடப்பட்டன.

முடிவான மசோதாவின் பிரிவு 6க்கு ஒத்ததாக உள்ள இலாகா மசோதாவின் 6வது பிரிவில் கீழ்க்கண்ட ஷரத்து உள்ளது:

> ''வேறு வகையில் தெள்ளத் தெளிவாகக் கூறப்பட்டிருந்தாலொழிய எந்த ஒரு திருமணமும் மதச் சடங்குடன் கூடிய திருமணமாகவோ, அல்லது சிவில் திருமணமாகவோ, இந்த பாகத்தின் ஷரத்துப்படி முறையாக நடத்தப்பட்டாலன்றி இந்துக்களுக்கிடையிலான திருமணம் அங்கீகரிக்கப்படமாட்டது.''

மதச் சடங்கு முறைப்படியான திருமணம் இந்து சமுதாயம் நன்கு அறிந்த மத முறைப்படி நடத்தப்படலாம் என்று மூல ஷரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்த பாகத்தில் கூறப்பட்டபடி நடத்தப் படாத எந்தத் திருமணமும் சட்டப்படி செல்லாது என்று இலாகா மசோதாவில் கூறப்பட்டுள்ளது.

இந்தப் பாகத்தின் ஷரத்துக்களை நாம் பரிசீலிப்போம். நாம் உடனே மசோதாவின் அடுத்த பாகத்திற்கு வருகிறோம். மூல மசோதா வின் 4வது பாகம் பிரிவு 6தான் அது. இலாகா மசோதா மற்றும் முடிவான மசோதாவின் 9வது பிரிவுக்கு இது ஒத்தது. (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் : ''டாக்டர் அம்பேத்கர் வெளியில் சென்றிருக்கிறார் என்பதை தயவு செய்து கவனத்தில் கொள்ளவும்.) மதச் சடங்கின் படியான திருமணத்தைப் பதிவு செய்வது பற்றி பிரிவு 9 குறிப்பிடுகிறது. மூல மசோதாவில் பின்வருமாறு கூறப்பட்டது: ''மதச் சடங்கின்படி நடக்கும் திருமணத்திற்கு அறுதிச் சான்று பெறுவதை எளிதாக்க இந்தச் சட்டப் பிரிவு பகுதி 6ன் கீழ் வைக்கப்பட்டுள்ள இந்து சிவில் திருமணச் சான்றிதழ் புத்தகம் வகுத்துள்ள முறையில் அத்தகைய திருமணம் சம்பந்தமான விவரங்களை பதிவு செய்ய விதிகள் வகுக்கப் படலாம்.''

**திரு. பாபு ராம்நாராயண் சிங்** (பீஹார் : பொது) : தகவல் சம்பந்தப்பட்ட ஒரு விஷயம். விவாதத்தை அரசாங்கத்தின் சார்பாக யார் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் தெரிந்து கொள்ள லமா?

**திரு. அவைத் தலைவர்:** யாராவது ஒருவர் நிச்சயம் இருப்பார்.

**திரு. எல். கிருஷ்ண சுவாமி பாரதி** (சென்னை : பொது) : அவருக்காக நான் குறிப்புகள் எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மரியாதைக்காகவாவது அமைச்சர் அவசியம் இங்கு இருக்க வேண்டும்.

**திரு. பி.எல். சோந்தி** (கிழக்கு பஞ்சாப் : பொது) : சட்டத்துறை அமைச்சர் இப்பொழுது வந்து கொண்டிருக்கிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** சான்று பெறுவதை எளிதாக்கும் நோக்கத்தோடு ஒரு பதிவேட்டில் விவரங்களை பதிவு செய்வதற்கான அரசாங்க விதிகளை வகுப்பதற்காக இந்த மூலப் பிரிவு வகை செய்தது. திருமணத்தின் சட்ட பூர்வமான தன்மையை அது முழுவதுமாக உறுதிப் படுத்தியது. சான்று விஷயத்தில், இந்து சிவில் திருமணச் சான்றிதழ் புத்தகத்தில் (பதிவேட்டில்) திருமணம் பற்றிய விவரங்களைப் பதிவு செய்யும் அதிகப்படியான வசதியை அது அளித்தது; விதிகள் மூலம் இதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சான்று பெறுவதை எளிதாக்குவதே

இதன் நோக்கம். ஆனால் இது ஒரு கட்டாய நிபந்தனையாக இருக்க வில்லை; மேலும் இது திருமணத்தின் சட்டபூர்வத்தன்மையைப் பாதிக்கும் நிபந்தனையாகவும் இருக்கவில்லை. செய்யப்பட்டது எல் லாம் ஒரு வழக்கமான விதி; அதுவும் சட்டப்படி தேவையான விதி; அதாவது விவரங்கள் ஒரு பதிவேட்டில் பதியப்படும்; அது விதிகளில் வரையறுக்கப்படலாம். சான்றை எளிதாக்கும் நோக்கத்துக்கு மட்டுமே. திருமணத்தின் சட்டப்படியான தன்மையை அது பாதிக்கவே செய்யாது. விவரங்களை இந்தப் பதிவேட்டில் பதிவு செய்யாத ஒரு திருமணம் சட்டபடி முற்றிலும் செல்லுபடியாகும்; ஆனால் பதிவு செய்வது திருமணம் பற்றிய சான்றைப் பெற உதவும் அல்லது திருமணம் பற்றிய சான்றை தயாராக வைத்திருக்கும் முறையை அளிக்கும். பதிவின் அத்தாட்சி பெற்ற பிரதி நீதிமன்றத்தால் சட்டப்படி ஏற்றுக் கொள்ளப் படும். இதனால் அதிக சான்று தேவைப்படாது. ஆனால் இலாகா மசோதாவில் இதற்கு ஒத்த பிரிவில், பின்வருமாறு உள்ளது:

> ''மதச் சடங்குப்படி நடைபெறும் எந்தத் திருமணத்திற்கும் சான்றை எளி தாக்க, மாகாண அரசாங்கம் விதிகள் மூலம் வகை செய்யலாம். (இங்குதான் கொடுக்கில் விஷம் இருக்கிறது.)
>
> (அ) அத்தகைய திருமணங்கள் சம்பந்தப்பட்ட விவரங்கள் இந்துத் திருமண சான்று பதிவேட்டில் பதிவு செய்யப்படும்....''

உண்மையில் கட்டாயப்படுத்துதல் இன்னமும் முழுமையாக வில்லை; ஆனால் அது இங்கு துவங்குகிறது:

அடுத்து, ஐயா, இலாகா மசோதாவின் பிரிவு (ஆ)க்கு வருவோம். மூல மசோதாவில் பிரிவு(6)ன் துணைப் பிரிவு (3) பின்வருமாறு கூறுகிறது:

> ''அத்தகைய பதிவு செய்வது கட்டாயமாக்கப்பட மாட்டாது.''

ஐயா, இலாகா மசோதாவில் இதற்கு ஒத்த வாசகத்தை பரிசீலிக் கும்படி தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். மூல மசோதாவை தங்கள் அனுமதியோடு மீண்டும் வாசிக்கிறேன்:

> ''அத்தகைய பதிவு செய்வது கட்டாயமாக்கப்பட மாட்டாது.''

**திரு. மகாவீர் தியாகி :** அப்படியாயின், திருமணம் செய்து கொண்டவர்கள் பதிவாளர் அலுவலகத்திற்குச் செல்ல வேண்டுமா?

**திரு. நசிருத்தீன் அகமது :** மூல மசோதாவின்படி, அத்தகைய பதிவுகள் செய்வது கட்டாயமல்ல. அது மிகத் தெளிவாக உள்ளது. இலாகா மசோதாவில் அதற்கு ஒத்த ஷரத்தை நாம் பரிசீலிக்கலாம்:

''அத்தகைய பதிவுகள் செய்ய வேண்டியது கட்டாயமாகும்.''

**திரு. ஜஸ்பாத் ராய் கபூர்** (ஐ.மா : பொது) : எந்த இடத்தில்?

**திரு. நசிருத்தீன் அகமது :** அதற்கு நான் பின்னால் வருகிறேன். 'எந்த இடம்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. அவை மிகவும் அசௌகரியமான இடங்கள்!

எனவே மூலச் சட்டம், விதிப்படி சான்றை எளிதாக்கும் நோக்கத்திற்காக திருமணங்கள் பற்றிய விவரங்கள் பதிவேட்டில் பதிவு செய்யலாம்; ''ஆனால் பதிவு கட்டாயமல்ல.'' எனினும் இலாகா மசோதாவிலுள்ள திருத்தப்பட்ட பிரிவில் விவரங்கள் பதிவு செய்யப் படலாம்; அந்த விஷயங்களைப் பதிவுகள் செய்வது கட்டாயம் ஆகும்.

அடுத்து, அதற்கு மேல், இலாகா மசோதாவில், பிரிவு 9ன் துணைப் பிரிவு (2) பின்வருமாறு கூறுகிறது :

''துணைப்பிரிவு 1ன் கீழ் விதிகளை வருக்கும் போது, ஒரு மீறலுக்கு ரூ. 100 வரைக்கும் அபாரதம் விதிப்பதற்கு அரசாங்கம் வழிவகை செய்யலாம்.''

கட்டாயமாகப் பதிவு செய்வது அதிகாரியின் பொறுப்பா அல்லது திருமணத் தம்பதியரின் பொறுப்பா என்பது சற்றும் தெளிவில்லாமல் உள்ளது. ஆனால் இது பற்றி மேலும் பின்னர் பேசுகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** எந்தப் பிரிவைப் பற்றித் தாங்கள் குறிப்பிடுகிறீர்கள்?

**திரு. நசிருத்தீன் அகமது :** இலாகா மசோதாவின் பிரிவு 9(2); அதேபோல் முடிவான மசோதாவின் பிரிவு 9(2). பதிவு செய்யா விட்டால் அபராதம் விதிக்க மாகாண அரசாங்கத்திற்கு அது அதிகாரம் வழங்குகிறது. பதிவு செய்யத் தவறியவர்கள் அல்லது பதிவு செய் தாலும், இந்த ஷரத்தின் தொந்தரவுக்கு உட்படவும் செய்யலாம். ஆனால் விஷயம் சந்தேகத்திற்கு விடப்படவில்லை; பின்பு அது தெளிவாகிறது.

**திரு. அவைத் தலைவர்:** திருமணத்தின் செல்லத்தக்க தன்மை என்பது பாதிக்கப்படவில்லை; அப்படியாயின் கணிசமான மாற்றம் எங்கிருக்கிறது? இது விவரங்கள் பற்றிய விஷயம் மட்டுமே; மசோதா பிரிவு, பிரிவாகப் பரிசீலிக்கப்படும் போது, மதிப்பிற்குரிய உறுப்பினர் பேசலாமே.

**திரு. மகாவீர் தியாகி:** அது ஒரு முக்கியமான விஷயம் ஐயா. இவ்வகையில் இதனை ஒரு முக்கிய மாற்றம் எனலாம். மாமனார் வீட்டுக்குப் போவதற்குப் பதில் தம்பதியர் பதிவாளர் அலுவலகத் திற்குப் போகும்படி ஆணையிடப்படுவர்.

**திரு. அவைத் தலைவர் :** இப்போதைய விவாதத்தின் வீச்சு, ராவ் குழு முன்வைத்து பொறுக்குக் குழு ஏற்றுக் கொண்ட அடிப்படைச் சட்டத்தில் மாற்றங்கள் பற்றியது. பதிவு செய்வது கட்டாயம் என்பது ஒரு சிறிய விவரம். திருமணத்தின் சட்டபூர்வத் தன்மையைப் பொறுத்தவரை, அது பாதிக்கப்படவே இல்லை. அது பற்றி எந்த விவாதத்தையும் நான் விரும்பவில்லை. மாற்றம் விரும்பத்தக்கதா அல்லது இல்லையா என்பது பற்றி எதுவும் நான் கூறவில்லை. ஆனால், இப்போதைய நோக்கங்களின் வீச்சுக்கு விவாதம் அப்பாற்பட்டது.

**திரு. நசிருத்தீன் அகமது :** இது சம்பந்தமாகவும் முடிவான மசோதா குறித்தும் ஒன்றிரண்டு வார்த்தைகள் பேச விரும்புகிறேன். பிரிவு 138-விதிகளை வகுக்க அதிகாரம் - (2) துணைப்பிரிவு (ii) பின்வருமாறு கூறுகிறது :

> ''மதச் சடங்குப்படியான திருமணங்கள் பற்றிய விவரங்கள் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டும் என்ற எந்த மீறலுக்கும் தண்டனை வழங்க வேண்டுமென்ற வழக்குகளில்''.

கட்டாயப் பதிவிற்கு இது வகை செய்கிறது. அது திருமணத்தை எவ்வாறு பாதிக்கிறது என்ற கேள்விக்கு நான் வருகிறேன். (**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** 'அது மாகாண அரசாங்கத்தின் உசிதத்தைப் பொறுத்தது') மாகாண அரசாங்கத்தின் உசிதத்தைப் பொறுத்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், அரசாங்கத்திற்கு ஒரு புதிய அதிகாரம் அளிக்கப்படுகிறது; அதை அது அமுல்படுத்தலாம்.

இலாகா மசோதாவின் பிரிவு 6க்கு மீண்டும் வருகிறேன். முடிவான மசோதாவின் பிரிவு 6க்கு ஒத்தது அது.

''இந்தப் பாகத்தின் ஷரத்துக்களுக்கு இணங்க மதச் சடங்குப்படி செய்யப் பட்ட திருமணமாக அல்லது சிவில் திருமணமாக இல்லாமல் இந்துக் களிடையே நடைபெறும் எந்தத் திருமணமும் சட்ட ரீதியானது என்று அங்கீ கரிக்கப்பட மாட்டாது''.

மூல மசோதாவின் பிரிவின்படி இந்த சம்பிரதாயமான நடை முறைகள் தேவைப்படுவதில்லை. இலாகா மசோதாவில் ''இந்தப் பாகத்தின் ஷரத்துக்கள்'' திருமணம் கட்டாயப் பதிவு செய்யப்படு வதைக் கோருகின்றன. உண்மையில், மதச் சடங்குப்படியான திருமண மும் சிவில் திருமணமும் ஒன்றோடொன்று சமநிலையில் வைக்கப்படு கின்றன. நிச்சயமாக சிவில் திருமணம் பதிவு செய்யப்படுவது கட்டாய மாகும். இலாகா மசோதாவின் பிரிவு 6ல் பதப்பிரயோகத்தின் மாற் றமும், பதிவு செய்வது கட்டாயமாக்கப்படுவதும் பதிவு செய்யப் படாத ஒரு திருமணம் - அதன் விவரங்களை பதிவு செய்வதை இந்தப் பிரிவு கட்டாயமாக்குகிறது - சட்டரீதியாக அங்கீகரிக்கப்படாத திருமணம் ஆகிவிடும் என்று தோன்றுகிறது. இந்தப் பாகத்தில் குறிப் பிட்டுள்ளபடி செய்யப்படாத எந்தத் திருமணமும் சட்ட ரீதியான தாக இருக்காது.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** அது எங்கிருக்கிறது?

**திரு. நசிருத்தீன் அகமது:** அவையின் பரிசீலனைக்காக நான் சமர்ப்பிக்கும் வியாக்யானமாகும் இது. உண்மையில் இதன் விளைவு மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரின் சிந்தனைக்கு மிகவும் அப்பாற்பட்டதாக இருக்கலாம். திருமணம் சம்பந்தப்பட்ட ஷரத் துக்கள் கட்டாயமானதல்ல, உண்மையில் விருப்பத்தைப் பொறுத்தது என்று தமது உரையில் அவர் மிகவும் தெளிவாக்கியுள்ளார். விளைவு நோக்கம் எதுவும் கொண்டதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் விளைவு அதுதான். இந்தப் பாகத்தின்படி நடைபெறாத எந்தத் திருமணமும் சட்டரீதியாக இருக்காது. எந்த விடுபடலும் அபாரத்துக்கு உள்ளாகும். அவை எவ்வளவு தயக்கம் கொண்டிருந்தாலும், இந்த வியாக்கியானத்தை ஏற்க இந்த மசோதாவை ஆக்கியவர் எவ்வளவு தயக்கம் காட்டி னாலும், அது ஒரு கருத்து விளக்கமே தவிர உணர்ச்சி வசப்படும். விஷயமல்ல. இந்தப் பொருள் விளக்கம் சரியானதா என்பதுதான் கேள்வி; சரியானதெனின் அது ஒரு மிக முக்கிய மாற்றத்தைக் கொண்டு வருகிறது. ஒரு திருமணம் பதிவு செய்யப்படாததால் சட்டரீதியான தாகக் கருதப்படாதிருக்க நேரடியாக இல்லாவிட்டாலும் வழிவகை

செய்வது ஓர் ஆபத்தான கருத்தாகும். ஏராளமான சட்ட மீறல்களுக்கு அது இட்டு செல்லும். எளிதில் அணுகமுடியாத வட்டாரங்களில் வசிக்கும் திருமணம் செய்பவர்களுக்கு பல மைல்களுக்கு அப்பால் பதிவு செய்யும் அதிகாரி வாழலாம். நமது நாட்டின் நாகரிகத்தின் இந்தக் கட்டத்தில் குறிப்பாகப் பின்தங்கியுள்ள மக்களுக்கு, இந்த ஷரத்து மிகவும் கொடுமையானது அர்த்தமற்றது.

**திரு.எல் கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, என்னை நீங்கள் பேச அனுமதித்தால்.....

**திரு. அவைத் தலைவர் :** வாதத்தின் தராதரம் பற்றி எந்த சர்ச்சையும் வேண்டாம்.

**திரு.எல் கிருஷ்ணசாமி பாரதி:** சில விளக்கங்கள் பெறுவதற்காகவே நான் எழுந்தேன்.

**திரு. அவைத் தலைவர் :** விளக்கத்திற்கும் மேலும் விவாதத்திற்கும் நாம் சென்றால், அது ஒரு முடிவில்லாத உரையாகத்தான் இருக்கும். விஷயம் என்னவெனில் மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது விளக்கத்தை முன்வைக்கிறார். திருமணத்தில் சட்டரீதியான தன்மையை அது பாதிக்கவில்லை என்ற விஷயத்தை அவரது கவனத்திற்குக் கொண்டுவந்தேன். அப்படியும் அவர் தமது வாதப்போக்கில் விடாப்பிடியாக இருக்கிறார் என்றால், அவர் அவ்வாறே செய்யட்டும். அது உரையின் நேரத்தைக் குறைக்கும்.

**திரு.எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, தாங்கள் என்னை அனுமதித்தால், அவர் தெளிவுபடுத்த வேண்டிய ஒரே விஷயம்தான் இருக்கிறது. அந்த சட்டப் பிரிவு பின்கண்ட பதங்களில் தொடர்கிறது; ''மதச் சடங்கின்படியான எந்தத் திருமணத்திற்கும் சான்றை எளிதாக்கும் நோக்கத்திற்காக....''

**திரு. அவைத் தலைவர் :** என் மனதிற்கு அந்த விஷயம் மிகத் தெளிவாக இருக்கிறது. அதை நான் எடுத்துக் கூறினேன். திருமணத்தின் சட்டரீதியான தன்மையை இது பாதிக்கவே செய்யாது என்று நான் அவருக்குச் சுட்டிக்காட்டினேன். இல்லை, இல்லை அது பாதிக்கவே செய்கிறது என்று அவர் நினைக்கிறார். அவரை நாம் எவ்வாறு திருப்திப் படுத்த முடியும்? இப்பொழுது அவர் தொடரட்டும். நம் முன் அவர் தமது வாதத்தை வைப்பதற்கு சுருக்கமான வழியாக அது இருக்கும்,

இல்லையெனில், ஒவ்வொரு ஷரத்துப் பற்றியும் நாம் அவரோடு விவாதிக்க வேண்டிவரும். அதன் மீது அவர் தமது ஊகங்களை அளிப்பார். மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அவரது உரையை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்றால், அவரது பொருள் விளக்கத்தை அவர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள் என்று பொருள் ஆகாது. அடுத்த விஷயத்திற்கு அவர் செல்லலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இலாகா மசோதாவின் பிரிவு 8க்கு வருகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** அவையின் முன் உள்ள முடிவான மசோதாவை பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டு மாற்றத்தைச் சுட்டிக் காட்டினால் உசிதமாக இருக்கும். இல்லையெனில், என்னால் புரிந்து கொள்ள முடியாது. அவர் மூன்று அல்லது நான்கு மசோதாக்களைக் குறிப்பிடுகிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மூல மசோதாவிலிருந்து நான் தொடங்குகிறேன். முடிவான மசோதாவிலும் அது பிரிவு 8 ஆகும். மூல மசோதாவில் பாகம் 4ன், பிரிவு 4ல், பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

> ''மதச் சடங்கின்படியான ஒரு திருமணம் தம்பதிகள் எவர் ஒருவரின் வழக்கமான வழிபாட்டு முறைகள், சடங்குகள் ஆகியவற்றிற்கேற்ப முறையாகச் செய்யப்படலாம்''

மாற்றியமைக்கப்பட்ட வரைவின் பிரிவு 8ன் துணைப்பிரிவு (1) பின்வருமாறு கூறுகிறது:

> ''மதச் சடங்கின் படியான ஒரு திருமணம், அத்தகைய திருமணத்திற்கு அத்தியாவசியமான இருவரில் ஒருவரின் சடங்குகள் மற்றும் வழிபாட்டு முறைகளின்படி நடத்தப்பட்டாலன்றி அது முழுமையானதாகாது, மற்றும் சம்பந்தப்பட்ட இருவரையும் அது கட்டுப்படுத்தாது.''

ஐயா, இது வாதிக்க வேண்டிய ஒரு விஷயம் என்று நான் நினைக்கவில்லை. தவறால் ஏற்பட்டது இது. ஆனால் நான் எடுத்துக் கூற விரும்பும் விஷயம் என்னவெனில், ஓர் அவசியமான, தர்க்க ரீதியான விளைவாக இந்தப் பொருள் விளக்கத்தை நான் வற்புறுத்தவில்லை. ஆனால் சிந்தனையில்லாமலே அது அறிமுகப்படுத்தப் பட்டது என்று நம்புகிறேன். திருமணங்களின் சட்டரீதியான தன்மை பற்றி ஓரளவு சந்தேகம் ஏற்படுகிறது. ஒவ்வொரு வழக்கறிஞர், நீதிபதி, ராஜீயவாதி முதலியோரின் உணர்வு பதிவு செய்ய வேண்டிய

காரணத்தால் அது சட்டரீதியானதல்ல என்ற கருதுவதற்கு எதிராக இருக்கும் என்பதை நான் அறிவேன். ஆனால் இது அரசியல் தன்மை யானது, அணுகுமுறை முற்றிலுமாக சட்டரீதியாகவும் அரசியல் சாசன ரீதியாகவும் இருக்க வேண்டும். இதன் பொருள் என்ன? இந்தப் புதிய ஷரத்துக்களின் படி நீங்கள் உங்கள் திருமணத்தை நடத்தாவிடில் திருமணம் சட்டப்படி செல்லாது. எனவே, இதிலிருந்து எழுவது, இந்த ஷரத்தின் நியாயத் தன்மையை நாம் ஒப்புக் கொள்கிறோமா அல்லது இல்லையா என்பதுதான். எனது மனத்திற்கு தோன்றுவது என்னவெனில், திருமணம் பற்றிய விவரங்கள் பதிவேட்டில் பதிவு செய்யப்படாவில், திருமணமே சட்டப்படி செல்லாது. அவையின் பரிசீலனைக்கு அதைச் சமர்ப்பிக்கிறேன்.

விவரங்களை பதிவு செய்வது சம்பந்தமான ஷரத்துகள் பற்றி - விவரங்களைப் பதிவு செய்வது கட்டாயமாகும் - நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன்.

**திரு. அவைத் தலைவர் :** அவர் ஏற்கனவே கூறிவிட்டார். அதைத் திரும்பவும் கூற வேண்டிய அவசியம் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** கட்டாயம் என்பது தம்பதிகளுக்கா அல்லது பதிவு செய்யும் அதிகாரிக்கா?

**திரு. அவைத் தலைவர் :** இது விவரங்கள் பற்றிய விஷயம்; இப்பொழுது அதை பற்றி நாம் எடுத்துக் கொள்ள வேண்டாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நல்லது ஐயா.(குறுக்கீடு).

**திரு. அவைத் தலைவர்:** தனியாகப் பேசிக் கொள்ள வேண்டாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஆனால், ஐயா எனக்கு கூர்மையான காது; நல்ல விவாதத்திற்கு இது உகந்ததல்ல. அனுபவம் வாய்ந்த சட்டமன்ற இயல் அறிஞரான எனது கற்றறிந்த நண்பர் உரைகளை உற்சாகமிழக்கச் செய்யக்கூடாது. பிரிட்டிஷார் இங்கு இருந்தபோது பழைய கவுன்சிலில் உரையாற்றிக் கொண்டிருந்ததை அவர் மறந்தாக வேண்டும். இப்பொழுது ஆட்சி செய்து கொண்டிருக்கும் கட்சியை அவர் சார்ந்துள்ளார் என்பதை அவர் நினைவில் கொள்ள வேண்டும்; நான் எந்தக் கட்சியையுமே சார்ந்தவனல்ல. எதிர்ப்புத் தெரிவிக்கும் ஒருதனி நபர் நான்.

**திரு. அவைத் தலைவர் :** இந்த விவாதத்தை நாம் தொடர வேண்டாம்.

**திரு. பி.தாஸ்** (ஒரிஸ்ஸா : பொது) : நாங்கள் எங்கள் வாயை மூடிக் கொண்டிருக்க வேண்டும் என்று தாங்கள் விரும்புகிறீர்களா?

**திரு. அவைத் தலைவர் :** திரு. தாஸ் அவர்களே, இதற்குப் பரிகாரம் உள்ளது. இத்தகைய சமயங்களில் காதைச் செவிடாக நாம் வைத்துக் கொண்டு மேலே செல்ல வேண்டும். விவாதம் நடந்து கொண்டிருக்கும் போது பல குசுகுசுப்புகளை நானும் கேட்கிறேன். அவற்றை நான் பொருட்படுத்துவதில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, தங்களை அதிர்ஷ்டசாலிகள் என்றுதான் சொல்ல வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நாம் தொடரலாம். அடுத்த முக்கியமான விஷயம் என்ன?

**திரு. நசிருத்தீன் அகமது :** இப்பொழுது மற்றொரு பாகத்திற்கு வருகிறேன் - சிறுபான்மையினர் மற்றும் பாதுகாவலர் சம்பந்தப்பட்ட மூல மசோதாவின் பாகம் 5 அது. அதிலுள்ள பிரிவு 3 முடிவான மசோதாவிலும் இலாகா மசோதாவிலும் முற்றிலுமாக விடப்பட்டுள்ளது. அந்தப் பிரிவின் விவரங்களை இங்கு நான் கூற வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் இது ஒரு முக்கியமான பிரிவு. இது நீக்கப்பட்டுள்ளது. இது ஒரு முக்கிய மாற்றத்தைப் புகுத்துவதாகும். வேறு பல முக்கியமில்லாத மாற்றங்கள் உள்ளன. அவை பற்றி நான் எடுத்துக்கொள்ளப் போவதில்லை.

இப்பொழுது தத்து எடுப்பது சம்பந்தமான பாகத்திற்கு வருகிறேன். அது மூல மசோதாவின் பாகம்6. அதிலுள்ள பிரிவுகள் 1ம் 2ம் விடப்பட்டுள்ளன. இலாகா மசோதாவின் பிரிவு 55- முடிவான மசோதாவின் பிரிவு 55(1)ம் ஆகும் - ஒரு துணைப் பிரிவு(3) உள்ளது. இது புதிது. மறுபடியும் மூல மசோதாவின் பாகம் 6ல் துணைப்பிரிவு (1) விடப்பட்டுள்ளது. முற்றிலும் வேறுபட்ட நிபந்தனைகளுடன் ஒரு **புதுப் பிரிவு** கொண்டு வரப்பட்டுள்ளது. இலாகா மசோதாவில், பிரிவு 68 -முடிவான மசோதாவில் இதற்கு ஒத்த பிரிவு 68 -துணைப்பிரிவு (1) புதியது. இரு மசோதாக்களின் இந்தத் துணைப் பிரிவுக்கான காப்பு வாசகமும் புதிது. மீண்டும் மூல மசோதாவின் பிரிவு 19ன் இரு

நிபந்தனையுடன் கூடிய துணைப்பிரிவு (3) முற்றிலுமாக முடிவான மசோதாவில் விடப்பட்டுள்ளது. இந்த பிரிவின் துணைப்பிரிவு 5 விடப்பட்டுள்ளது. மூல மசோதாவின் பிரிவு 21ம் பாகம் 4- விடப் பட்டுளளது. மூல மசோதாவின் பாகம் 6ன் பிரிவு 25, இரு துணைப் பிரிவுகளுடன் மற்றும் மற்ற இரு பாகங்களும் முற்றிலுமாக புறக்கணிக் கப்பட்டுள்ளன.

இலாகா மசோதாவில் செய்யப்பட்ட மிக முக்கியமான மாற்றங்கள் இவை என்று கூற விரும்புகிறேன். பொறுக்குக் குழுவின் சில உறுப்பினர்கள் இவை கணிசமான மாற்றங்கள் என்று உணர்கிறார்கள் என்ற போதிலும் கணிசமான மாற்றங்கள் எவையும் செய்யப்பட வில்லை என்ற உறுதிமொழி அளித்ததன் காரணமாக, அது பிந்தி வந்த உணர்வாக இருக்கலாம். இது பற்றி குறிப்பாக அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை என்பது உண்மையே; அவர்களால் இந்த விவரங்கள் எல்லாம் முழுவதும் பரிசீலிக்கப்படாத ஓர் அபாயம் உள்ளது. மூல மசோதாவில் அவர்களின் கவனத்தைச் செலுத்தி பிரிவு, பிரிவாக பரிசீலிக்கத் துவங்கியிருந்தால் அல்லது அவர்கள் முதலில் கூடி இலாகாவிற்கு தயாரிக்க உத்திரவிட்டிருந்தால், இவ்வாறு நடந்திருக்காது.

**திரு. அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏற் கனவே பேசியதையே மீண்டும் பேசுகிறார். இதை நேற்றே அவர் பேசி முடித்துவிட்டார்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, என் வாதத்துக்கான ஆதாரங் களைத் திரும்பச் சொல்ல நான் விரும்பவில்லை. இந்த சூழ்நிலைமை களில், நான் சுட்டிக்காட்ட விரும்புவதெல்லாம் இது ஒரு மிக முக்கிய மான விஷயம் என்பதுதான். ஆனால் பொறுக்குக் குழு மசோதாவை நேர்மையாகவும் முழுமையாகவும் பரிசீலிக்கத் தவறிவிட்டது.

பொறுக்குக் குழு உறுப்பினர்கள் மீது பழி எதுவும் சுமத்த நான் விரும்பவில்லை. பிரிவை ஒப்பு நோக்கிப் பார்க்காமல், எல்லா மாற்றங் களையும் தெரிந்து கொள்வது பொறுக்குக் குழு உறுப்பினர்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும்.

இந்த மசோதாவோடு சம்பந்தப்பட்ட மற்ற விஷயங்களுக்கு அடுத்து வருவோம். வாரிசு உரிமை பிரச்சினை நீண்டகாலமாக நாட்டின் மனதைக் கலக்கி வருகிறது. மசோதாவில் நான் காணும்

மிகவும் சர்ச்சைக்குரிய ஷரத்து மகளின் நிலைமை பற்றியதாகும். எனது முஸ்லீம் சகோதரிகளுக்கு நான் அளித்துள்ளதை இந்து சகோதரிகளுக்கு அளிக்க நான் ஏன் மறுக்கிறேன் என்று என்னிடம் கேட்கப் பட்டது. பதில் மிக எளிதானது. முஸ்லீம் சட்டத்தின் கீழ் மகளுக்கு ஒரு பங்கு அளிக்கப்படுகிறது. அந்தச் சட்டத்தின் விவேகத்தைப் பற்றி எத்தகைய ஐயப்பாடும் எழுப்ப நாங்கள் அனுமதிக்கப்படவில்லை. அதை நியாயப்படுத்தும் பல்வேறு வரலாற்று சமூக சூழ்நிலைமைகளின் பகைப்புலனிலில் அந்தச் சட்டம் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஒரு வகையான நீதி அதில் உள்ளது. 1350 வருடங்களாக முஸ்லீம் சமுதாயத்தால் அது சகித்துக் கொள்ளப்பட்டும் ஏற்றுக் கொள்ளப் பட்டும் வந்துள்ளது. ஆனால் முற்றிலும் வேறுபட்டதொரு அமைப்பு முறையின்கீழ் சுமார் மூன்றுஆயிரம் அல்லது நான்காயிரம் ஆண்டுகளாக தங்கள் விதிப் பயனை இந்து சகோதரிகள் சகித்துக் கொண்டு வந்துள்ளனர். மகளின் நிலையைப் பொறுத்தவரை, இரு அமைப்பு முறைகளையும் ஒப்பு நோக்கி பார்ப்பது உசிதமாகாது. உண்மையில், இரு சட்ட அமைப்பு முறைகளும் விஷயத்தை இரு வேறுபட்ட கண்ணோட்டங்களில் அணுகுகின்றன. மேலும் அவை வேறுபட்ட வரலாற்று நிகழ்வு போக்குகளைப் பொறுத்துள்ளன. முஸ்லீம் சட்டத்தின் கீழ் வாரிசுரிமை பழைய அரபியப் பழக்க வழக்கங்களிலிருந்து எடுக்கப்பட்டது. புரிந்து கொள்ளக்கூடிய தவிர்க்க முடியாத சூழ்நிலைமைகளில் அது உருவாயிற்று. அரேபியாவில், அசையாச் சொத்துக்கள் எவையும் இருந்ததில்லை, எல்லாமே பாலைவனமாக இருந்தது. சொத்துக்கள் அசையும் சொத்துகளாகவே இருந்தன. ஒரு மனிதன் இறக்கும் போது.....

**திரு. தாஜ்முல் உசேன்** (பீஹார் : முஸ்லீம்) : இங்கு நான் ஒரு கேள்வி கேட்கலாமா? அரேபியாவில் அசையாச் சொத்துக்கள் எவையும் இருக்கவில்லை என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறுகிறார். வீடுகள் பற்றி அவர் என்ன சொல்கிறார்?

**திரு. நசிருத்தீன் அகமது :** இந்தக் கேள்வி தேவையற்றது. வான் கிரீமரின் அரிய நூலைப் படிக்கும்படி மதிப்பிற்குரிய உறுப் பினரைக் கேட்டுக் கொள்கிறேன். ''கலிபாக்களின் ஆட்சியில் கீழ்த் திசை நாடுகள்'' என்பதே அந்த நூல். அந்த ஆசிரியர் சிறந்த ஜெர்மானிய நிபுணர். நாம் விரும்பும் தகவலை அந்த நூல் அளிக்கிறது. காலம் சென்ற திரு. குடா பக்ஷ் இந்த நூலை மொழி பெயர்த்துள்ளார். இதுதான் இந்தப் பொருள் பற்றிய ஒரே நூல். இந்த நூல் முழுவதும் ஒரு நிபுணரின் கண்ணோட்டத்தில் எழுதப்பட்டுள்ளது. இந்த நூலைப்

படிக்கும்படி எனது மதிப்பிற்குரிய நண்பரை வினயத்துடன் கேட்டுக் கொள்கிறேன். இது பற்றி அவையில் முழு விவரங்களையும் அளிப்பது என் பணியல்ல. ஏனெனில் இது உசிதமாக இருக்காது.

அங்கு அசையாச் சொத்துகள் இருக்கவில்லையா என்ற எனது கற்றறிந்த நண்பரின் கேள்வி உண்மையில் எழவில்லை. ஏனெனில் அரேபியா நிச்சயமாக அசையாச் சொத்துக்களையும் கொண்டிருந்தது. ஆனால் மிகப் பெரும்பான்மை மக்களிடம் அசையாச் சொத்துக்கள் இருக்கவில்லை (குறுக்கீடு). மேலும் குறுக்கீடு வேண்டாம். குறுக்கீடு கள் பற்றி பொருட்படுத்த வேண்டாமென மாண்புமிகு அவைத் தலைவர் என்னிடம் கூறினார். ஆனால் என்ன நிகழ்ந்து கொண்டிருக் கிறது என்பது பற்றி ஒருவரின் காதுகளைப் பொத்திக் கொள்வது கஷ்டமாக உள்ளது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** உங்கள் வாயை மூடிக் கொள்ளுங்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது:** எனது கடமையை ஆற்றி விட்டேன் என்று நான் திருப்தியடையும் போது, பெரும்பான்மை யினர் நான் கூறுவதைக் கேட்க விரும்பவில்லை என்று நான் உணரும் போது என் வாயை மூடிக் கொள்வேன், அதை நிச்சயமாக செய்வேன்.

ஐயா, அந்த நூலில் வரலாறு முழுவதும் கொடுக்கப்பட்டுள் ளது. ஒரு மனிதன் இறந்த போது, ஒரு கட்டில் அல்லது கொஞ்சம் துணிமணி அல்லது ஒரு குதிரை அல்லது ஒட்டகம் மற்றும் இது போன்ற வற்றை விட்டுச் சென்றான்; பழைய அரேபியப் பழக்க வழக்கங் களின்படி நெருக்கமான உறவினர்களிடையே அவை பிரித்துக் கொடுக்கப்பட்டன. சிக்கல் எதுவும் எழவில்லை. ஒவ்வொரு தனி நபருக்கும் எந்தக் குறிப்பிட்ட பங்கையும் குரான் அளிக்க வில்லை. பழைய அரேபியப் பழக்க வழக்கத்தின் தொடர்ச்சியே இன்றைய வாரிசு உரிமை முறை. முஸ்லீம் இறைமைத் துறை அறிஞர்களால், குறிப்பாக சிறந்த முஸ்லீம் சட்ட வல்லுநர்களால் அபு ஹனிபா போன்ற பிரபல முஸ்லீம் சட்ட நிபுணர்களால் அது திருத்தப்பட்டு, மாற்றப்பட்டது. அது பற்றி நான் கூறவேண்டிய தேவையில்லை. நான் கூற விரும்புவது எல்லாம் முஸ்லீமின் கண்ணோட்டம் வரலாறு சம்பந்தப்பட்ட விஷயம் என்பதுதான்அது நல்லதா, கெட்டதா என்பதல்ல இங்கு பிரச்சினை. இந்து மகளுக்கு பங்களிப்பதை நான் எதிர்ப்பது, எனது முஸ்லீம் சகோதரிகளுக்கு நான் கொடுக்கக்கூடியதை எனது இந்து சகோதரிகளுக்கு கொடுக்க விருப்பமில்லதால் அல்ல.ஒரு முஸ்லீமுக்கு எது நல்லது என்பது

புராண பழக்க வழக்கங்களையும் உணர்வுகளையும் பொறுத்தது. ஓர் இந்துவுக்கு நல்லது எது என்பது இந்துக்களின் புராதன பழக்க வழக்கங்களையும் உணர்வுகளையும் பொறுத்தது. மத்தியதரக் கடலை சுற்றியுள்ள இடங்களை அரேபியர்கள் வென்று பிடித்த போது, சிரமங்கள் எழுந்தன; ஏனெனில் அவர்கள் அசையாச் சொத்துக்களை அடைந்தனர். ஏராளமான பங்குதாரர்கள் சொத்திற்கு வாரிசு உரிமை பெற்ற போது கஷ்டத்தை அவர்கள் உணர்ந்ததும், இவ்வாறு சீர்குலைவுக்கு இட்டுச் சென்றதும் வரலாறு சம்பந்தப்பட்ட விஷயம். அப்பொழுது **வாக்ப்** என்று இன்று நாம் காணும் அமைப்பு முறை சிந்திக்கப் பட்டது. புனித நூலின் சில வாசகங்கள் முஸ்லீம் ஞானிகளால் வளர்க்கப் பட்டன. மேலும் **வாக்ப்** சட்டத்தையும் அபிவிருத்தி செய்ய அவர்கள் முயன்றனர். அப்பொழுதுதான் பிரிவினையின் தீங்கான விளைவுகளை மட்டுப்படுத்த அவர்கள் விரும்பினர். இந்தியாவில் **வாக்ப்** சட்டம் இந்திய நீதி மன்றங்களால், குறிப்பாக பிரிவிக் கவுன்சிலால் மேலும் வளர்ச்சி பெற்றது; **வாக்ப்** சட்டத்தை வீட்டுக் காரியங்களுக்காக பயன்படுத்துவதை பெரும் அளவுக்கு இது தடை செய்தது. திரு. ஜின்னா 1913ல் அவையில் ஒரு மசோதாவைக் கொண்டு வந்து, அதைச் சட்டமாக, **வாக்ப்** சட்டமாக நிறைவேற்றினார் என்பது நன்கு அறிந்த ஒன்றாகும்; முஸ்லீம்களிடையே முறையாக நடைமுறைப் படுத்தப்பட்ட சில **வாக்ப்**களைச் சட்டரீதியானவை என அது அங்கீகரித்தது. சொத்து துண்டு துக்காணியான முறையில் பங்கு போடப் படுவதன் பாதக விளைவை மட்டுப்படுத்தும் ஒரு முயற்சி இது. சொத்துப் பிரிவினை பற்றிய முஸ்லீம் அணுகுமுறை முற்றிலும் வேறு. ஒரு முஸ்லீமின் கண்ணோட்டம் தனிப்பட்ட விருப்பாற்றலைப் பொறுத்தது. துண்டு துண்டாகச் சொத்தைப் பிரிவினை செய்வது, பிரிவினைப் போக்குகளைத் தூண்டி விடுகிறது. கூட்டுக் குடும்பத்தில் சகோதரர்கள் நீண்டகாலம் வாழ்வதில்லை. விரைவில் அவர்கள் பிரிந்து செல்லுகின்றனர். அண்மைக்கால இந்திய வரலாற்றில் பிரிவினைப் போக்கு பெருமளவு வளர்ந்துள்ளதைக் காண்கிறோம். எனவே, ஒரு முஸ்லீமின் அணுகுமுறை தனிமனிதத் தன்மை கொண்டதாக இருக்கும் போது, இந்துவின் அணுகுமுறை குடும்பக் கண்ணோட்டம் கொண்டதாக உள்ளது. இந்து ஒரு குடும்பத்தில் வாழ்கிறார். அங்கு குடும்பம் தான் அடிப்படைக் கூறு. எனவே குடும்பக் கண்ணோட்டத்தோடேயே மகளிரின் உரிமைகளை அவர்கள் அணுகுகிறார்கள். முஸ்லீமின் அணுகுமுறை வேறானது. உண்மையில், ஓர் இந்துக் குடும்பத்தில் பெண் ஆணைவிட சமத்துவமற்ற நிலையில் இல்லை. சிலரால் சுட்டிக்காட்டப்பட்ட சமத்துவமின்மை என்ற கேள்வியே உண்மையில் இங்கு எழவில்லை, எல்லாவழியிலும் அவர்கள் ஆண்களுக்குச்

சமமாக உள்ளனர். இந்துக் குடும்பத்தின் பொருளாதாரத்தில், ஒவ்வொருவருக்கும் ஒரு அங்கீகரிக்கப்பட்ட பங்கு உள்ளது. பிரச்சினையை அணுக வேண்டிய முறை அது. எந்த விஷயத்திலும் சட்டமியற்ற இந்த அவைக்கு அதிகாரம் உள்ளது என்பதில் ஐயமில்லை. ஆனால், இந்து நாகரிகம் வாழ்ந்து வந்துள்ள அமைப்புமுறை பற்றி விவாதிக்காமல், விவரங்களுக்குள் செல்லாமல் சட்டமியற்றுதலில் அவை இறங்குவதற்குள்ள தகுதியைப் பற்றித்தான் எனக்கு ஐயம் உள்ளது. இந்தக் கோணத்திலிருந்துதான் ஓர் இந்து விதவையின் நிலையைப் பரிசீலிக்க வேண்டும். அந்த அமைப்புமுறை அழுகிப் போய் விட்டது என்று போதுமான பரிசீலனைக்குப் பிறகு தோன்றினால், அதை மாற்ற வேண்டியது இந்து சமுதாயமே தவிர அந்தப் பணி என்னுடையதல்ல. இந்தச் சட்டப் பேரவையின் ஓர் உறுப்பினன் என்ற முறையில் என் மனத்தில் பட்ட விஷயங்களைச் சுட்டிக் காட்டுவது மட்டுமே என்னுடைய பணி. என்னுடைய வாக்கு இதனை முடிவு செய்யாது. பெரும்பான்மை வாக்குகள்தான் முடிவு செய்யும். என் மனதுக்குத் தோன்றுகிற சிலவற்றை சமர்பிப்பது எனது கடமை. எனவே இந்துச் சட்டம் பெண்களுக்கு அநீதியானதல்ல என்று கூறுகிறேன். குடும்ப அமைப்பின் ஒரு பிரிக்க முடியாத பகுதி என்று பெண்ணைக் கருதி, பெண்ணுக்கு முழு நியாயம் வழங்கியுள்ளது அது; அதில் பெண் ஒரு பங்கை ஆற்ற வேண்டும். உண்மையில், இந்தச் சட்டப் பேரவையில், நாம் வகிக்க வேண்டிய வெவ்வேறு பாத்திரங்கள் உள்ளன. சமத்துவமின்மை அல்லது பாரபட்சம் என்ற பிரச்சினை எதுவும் இதில் இல்லை. நாம் ஆற்ற வேண்டிய பாத்திரங்கள் பல உள்ளன. இச்சூழ்நிலைகளில் இந்தக் கண்ணோட்டத்திலிருந்து இந்துப் பெண்ணின் நிலையைப் பரிசீலிக்க வேண்டுமென பணிவுடன் கூறிக் கொள்கிறேன். முஸ்லீம்களிடையே பாகப் பிரிவினை வெகு தூரம் சென்றுள்ளது. மகளுக்குப் பங்கு என்பது எவ்வாறு குடும்பத்தின் சீர்குலைவுக்கு இட்டுச் செல்லுகிறது என்பது பரிசீலிக்கப்பட வேண்டிய ஓர் அம்சமாகும். மகன்களையும் மகள்களையும் விட்டு விட்டு ஒரு மனிதன் இறக்கும்போது, உடனே மகள்கள் தங்கள் பங்கிற்கு மரபுரிமை பெறுகின்றனர். அவர்கள் திருமணம் செய்து வைக்கப்படுகிறார்கள்; பெரும்பான்மையான நிகழ்வுகளில் வேறு குடும்பங்களுக்கு அவர்கள் அனுப்பி வைக்கப்படுகிறார்கள். உண்மையில், முஸ்லீம் சட்டத்தில், கலப்பு மணம், பாகப் பிரிவினையை சிறிதளவு கட்டுப்படுத்தும் ஒரு சாதனமாக இருக்கிறது. பாகம் உள்ள ஒருவர் சொத்தை ஒரு வெளி நபருக்கு மாற்றுகிறார் எனில், மூல கூட்டு உரிமையாளர், விலைகொடுத்து அந்தப் பாகத்தை மறுபடியும் வாங்கும் உரிமை அளிக்கப்படுகிறார். ஆனால், முன்பின்

ஆராயாது மேற்கொள்ளப்படும் இந்த செயல் பல சட்டரீதியான சிக்கல் களுக்கு இட்டுச் செல்வதோடு, அபூர்மாகவே அது வெற்றி பெறுகிறது என்பதை ஒவ்வொரு வழக்கறிஞரும் அறிவார். இந்தப் போக்கை மட்டுப்படுத்தும் மற்றொரு முயற்சியே வாக்ப். முஸ்லீம் மகளுக்குத் தரப்படும் பங்கு குடும்பச் சொத்தை சிதறிப் போகாமல் பாதுகாப் பதற்கு உகந்ததாக இருப்பதில்லை.

**திரு. தாஜாமுல் உசேன் :** உண்மையில் இந்த சந்தர்ப்பத்தில் குறுக்கிட நான் விரும்பவில்லை; ஆனால் இது முஸ்லீம் சட்ட விஷயமாதலால், அது பற்றி நான் அக்கறை கொண்டிருக்கிறேன். முஸ்லீம் சட்டத்தில் வகுக்கப்பட்டுள்ள மரபுரிமையை மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏற்றுக்கொள்ளவில்லையா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்தப் பிரச்சினை இங்கு எழவில்லை என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன்.

**திரு. தாஜாமுல் உசேன் :** அது எழுகிறதா இல்லையா என்று கூற வேண்டியது அவைத் தலைவரின் பொறுப்பு.

**திரு.நசிருத்தீன் அகமது :** அப்படியாயின் இந்த வாக்கு வாதத்தில் நான் பங்கு கொள்ள மாட்டேன். முஸ்லீம் குடும்பம் எவ்வாறு படிப்படியாக மோசமாகி சிதைவுறுகிறது என்பது நமது நீண்ட அனுபவத்தில் கண்ட விஷயம்; தங்களைப் போன்ற பல வழக் கறிஞர்களுக்கும் அனுபவம் அதுவாகவே இருக்குமென நம்புகிறேன். ஒரு மகள் திருமணம் செய்விக்கப்பட்டதும், சிறிது காலத்திற்குக் குடும்பத்தில் நல்லிணக்கம் நிலவுகிறது; ஆனால், மகள் தனது தந்தை யின் வீட்டிற்கு வரும் சந்தர்ப்பம் வருகிறது; மகளுக்கும் சகோதரனின் மனைவிக்கும் இடையே மனஸ்தாபம் தோன்றுகிறது. மிக அற்ப விஷயங்களில்கூட ஆண்களைவிடப் பெண்கள் கருத்து வேறுபாடு கொள்கின்றனர். அவர்கள் அதிகம் உணர்ச்சிவசப்படுவதால் நிலைமை மோசமாகிறது.

**திரு. மகாவீர் தியாகி :** பெண்கள் மீது தாங்கள் அவதூறு கூறு கிறீர்கள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அது அவதூறு கூறுவதாகாது. அவர்களின் குணப்பண்பைதான் விவரிக்கிறேன். பெண்களின் உணர்ச்சி பூர்வமான தன்மை அவர்களை அதிகம் கவர்ச்சிகரமானவர்களாக,

அதிகம் அக்கறையுள்ளவர்களாக, அன்புடையவர்களாக ஆக்குகிறது. நம்மைப் போல் பெண்கள் கடின உள்ளம் படைத்தவர்களாக, பலம் வாய்ந்தவர்களாக, முரட்டுத் தனமானவர்களாக இருந்தால், வாழ்க்கை சாத்தியமாகியிருக்காது. உண்மையில் பெண்மைத் தன்மையின் அழகால்தான் அவர்கள் ஆண்களிடமிருந்து அவ்வளவு வேறுபடுகிறார்கள். இவ்விரண்டு வேறுபாடுகளின் ஐக்கியம்தான் வாழ்க்கையை சகித்துக் கொள்ளத்தக்கதாகவும் மகிழ்ச்சிகரமானதாகவும் ஆக்குகிறது. எனவே, பெண்களைப் பற்றி நான் கூறியது எவ்வகையிலும் அவர்களை இழிவுபடுத்தும் தன்மை கொண்டதல்ல. மகள் தனது சகோதரரின் மனைவியால் புண்படுத்தப்படும்போது, அவள் தனது கணவர் வீட்டுக்குச் சென்று கூறுகிறாள் : ''என் பங்கு எனக்கு வேண்டும்''. பிறகு இதனைத் தொடர்ந்து கடுமையான சிக்கல் துவங்குகிறது. இது ஒவ்வொரு வீட்டிலும் நடக்கிறது. சகோதரியின் கணவர் தனது மைத்துனர் வீட்டிற்கு வருகிறார்; ஒரு பங்கைக் கோருகிறார்; அது மறுக்கப்பட்டால், தனது பங்கை சகோதரருக்கு விற்க விரும்புகிறார்; சகோதரர் நிச்சயம் ஒப்புக் கொள்ளமாட்டார்; அல்லது கோரும் விலை முழுவதையும் கொடுக்க முடியாமல் இருக்கலாம். எனவே இந்த மனிதர் கிராமத்தில் மற்றொருவரிடம் சென்று ஒரு சிறு தொகையை வாங்கிக் கொண்டு சொத்தை விற்கிறார்; சிக்கல் தீர்ந்ததும் 'அதிகம் கொடுப்பதாக வாக்குறுதி அளிக்கிறார். புதிய உரிமைக்காக அடிதடிகள் துவங்குகின்றன. குற்றவியல் அல்லது சிவில் வழக்கு போடப்படுகிறது. சாதாரண காயத்திலிருந்து கொலை வரை நடைபெறுகிறது. பதிவு செய்யும் நடவடிக்கையைத் தொடர்ந்து பாகப்பிரிவினை நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. எனவே, இந்நிலைமையில் இந்த மசோதா நிறைவேற்றப்பட்டால் வழக்கறிஞர்கள் நன்றி செலுத்துவர். ஏனெனில் அவர்களுக்கு கணிசமான தொழில் கிடைக்கும். வழக்கு துவங்குகிறது. ஐந்து அல்லது பத்து அல்லது இருபது ஆண்டுகளுக்கும் அதிகமாக வழக்கு நடைபெறுகிறது. வழக்குகள் மாற்றி வழக்குகள் பயங்கரமாகத் தொடர்கின்றன. கிராமம் முழுமையுமே கட்சிப் பூசல்களில் சிக்குகிறது. சில சகோதரர்கள் மட்டுமே இருந்தால், அவர்கள் ஒன்றாக வாழ்ந்து சொத்துக்களைப் பராமரிப்பார்கள். சகோதரர்கள் அநேகமாக சண்டைபோட்டுக் கொள்வதில்லை. இவ்வாறாக, இந்து கூட்டுக் குடும்ப அமைப்புத் தொடர்கிறது. இதைத் தவிர, ஒரு முஸ்லீம் குடும்பத்துக்கும் ஓர் இந்து குடும்பத்துக்கு இடையே உள்ளார்ந்த வேறுபாடு எதுவும் இல்லை. பாகப் பிரிவினைக்கும் தனி மனித வாழ்க்கைப் போக்குக்கும் முஸ்லீம்கள் பழக்கப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். கூட்டுக் குடும்ப

நண்பகல் 12 மணி

வாழ்க்கைக்கு இந்து பழக்கப்பட்டிருக்கிறார். மகளின் பங்கினால் எழக் கூடிய உண்மையான கஷ்டத்தை மதிப்புக்குரிய எனது இந்து நண்பர் கள் சிலரே சிந்தித்துப் பார்க்க முடியும் போலும். உண்மையில் அது ஒருபோதும் மகளுக்கு லாபமல்ல. இந்த லாபத்துக்கு இணையான நஷ்டமும் உள்ளது. வழக்காலும் ஒரு பங்காலும் மகள் அந்த அளவு லாப மடைகிறாள் என்று வைத்துக் கொள்வோம். அவள் தனது சகோதர னிடமிருந்து பெறுவதை எடுத்துக் கொண்டு கணவனது வீட்டிற்குப் போகிறாள்; அவளுக்குச் சொந்த மகன்களும் மகள்களும் இருக் கிறார்கள். தனது சகோதரனிடமிருந்து அவள் பெறுவதையெல்லாம் அவளது மகன்களிடமிருந்து அவளது மகள் எடுத்துக் கொள்வாள். பெண்களைத் தனித்தனியாகவும் வெவ்வேறாகவும் பரிசீலிப்பதற்குப் பதிலாக, குடும்ப வாழ்க்கையின் ஒரு பகுதியாக அவளைக் கருதினால், நஷ்டத்தைவிட லாபமே அதிகமாக இருக்கும். குடும்ப சொத்தில் மகளுக்குப் பங்கு தருவது முடிவுற்ற சிக்கல்களையும் தாவாக்களை யும் தப்பெண்ணங்களையும் பிறவற்றையும் ஏற்படுத்தும். எந்த வசதியான முஸ்லீம் குடும்பமும் மூன்று தலைமுறைகளுக்கு நீடித்ததில்லை என்பது எனது மனம் கசந்த அனுபவம். இதுவும் மற்ற விஷயங்களும் அவர்களை ஓட்டாண்டிகளாக ஆக்குகின்றன. இந்த அமைப்பு முறை நல்லதா, கெட்டதா என்பதல்ல இங்கு பிரச்சினை. முஸ்லீம்கள் அதைத் தங்கள் மதத்தின் ஒரு பகுதியாக ஏற்றுக் கொண்டுள்ளனர்; அது கெட்டது என்று பெரும்பான்மையினர் நினைக்காதவரை, அதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். இந்துக்களைப் பொறுத்தவரை அவர்கள் தங்களின் அமைப்பு முறையை ஏற்றுக் கொண்டுள்ளனர். அவர்கள் தாங்கள் கடைப்பிடித்து வந்த, பிரதானமாக ஆக்கப்பட்ட அமைப்பை வெளி நாட்டு படையெடுப்புகளால் ஏற்பட்ட அழிவை எல்லாம் சமாளித்து நீடித்த அமைப்பை அவர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். அது கெட்டது என்று பெரும்பான்மையினர் கருதினாலொழிய அதில் அவர்கள் தலையிடமாட்டார்கள். நான் கூறும் விஷயம் என்னவெனில், இந்து சகோ தரியையும் முஸ்லீம் சகோதரியையும் ஒப்பிட்டுப் பார்ப்பது மிகவும் ஆபத் தானது, அவர்களது நிலைகள் ஒத்திசைவானவை அல்ல. உண்மையில் வேறுபடுத்தும் அம்சங்களை அவை கொண்டுள்ளன. அவை வேறு பட்ட வரலாறுகள், பரிசீலனைகள், சூழ்நிலைமைகள் ஆகியவற்றி லிருந்து எழுகின்றன. எனவே, இந்து சகோதரிக்கும் முஸ்லீம் சகோதரிக் கும் இடையே எளிமையான ஒத்ததன்மை எதுவும் இல்லை. சொத்தில் ஒரு மகளுக்கு பங்கு அளிப்பதன் விளைவை விருப்பு வெறுப்பின்றி சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதன் எல்லா அம்சங்களையும் பரிசீலிக்க வேண்டும். அதில் மகளுக்கு எந்த நிகரலாபமும் இல்லை. மாறாக சொத்து துண்டு துண்டாக்கப்படுவதற்கு அது இட்டுச் செல்கிறது.

ஏப்ரல் 9-ல் பொறுக்குக் குழுவிற்கு மசோதா அனுப்பப்பட்டபோது, இந்த விஷயம் பற்றி விரிவாக குறிப்பிட்டேன். சொத்தில் மகளுக்கு பங்கு அளிப்பது ஓயாது வழக்குகள் நடைபெறுவதற்கும் சொத்து துண்டு துண்டாக்கப்படுவதற்கும் இட்டுச் செல்லும் என்று நான் கூறியதைக் கேட்டு திருமதி ஹன்சா மேத்தா ஆச்சரியத்தை வெளிப் படுத்தினார். நாங்கள் அனுபவிக்கும் தொல்லைகளை அதிர்ஷ்ட வசமாக இந்து சமுதாயம் அனுபவிக்காதது இதற்குக் காரணமாக இருக்கலாம். இக்காரணத்தால் தப்பபிப்ராயம் ஏற்படும் சாத்தியப் பாட்டிற்கு இடமிருந்தது. அதனால்தான் இந்த விஷயம் பற்றி நான் குறிப்பிட்டேன். இந்துக் கருத்துக்கள் இந்துக் குடும்பங்கள் என்ற பகைப்புலனில் மகளின் நிலைபற்றி பரிசீலிக்கப்பட வேண்டு மென்று கூறுகிறேன் ஐயா. எல்லோரும் அவளிடம் அன்பு கொண்டிருக் கிறார்கள். அவள் நன்கு திருமணம் செய்து வைக்கப்படுகிறாள்; திருமணத்தின் போது பல வெகுமதிகள் அளிக்கப்படுகின்றன; வரதட்சணையும் உள்ளது; இதற்கு மேலும் சில சமயங்களில் ஏராளமான சொத்துக்களும் அளிக்கப்படுகின்றன. அவளது தகப்பனார் இல்லத்தில் வரவேற்கப்படும் ஒரு விருந்தினராக அவள் திகழ்கிறாள். ஆனால் அவளுக்கு நீங்கள் ஒரு பாகத்தை அளித்தால், சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் இடையேயான உறவு பாசமிக்க உறவாக இருக்காது; மாறாக அது ஒரு வியாபாரமாக, பரஸ்பரம் விரோதம் கொண்டு ஒருவருக்கொருவர் மோதிக் கொள்ளும் அவலமாக அது மாறும். உண்மையில், இந்து சமுதாயத்தில் மகள்களுக்கு சொத்தில் பங்கு தரும் முறையை அனுமதித்தால் பாசம் மறைந்துவிடும். ஐயா, இவை விருப்பு, வெறுப்பின்றிப் பரிசீலிக்கப்பட வேண்டிய விஷயம் என்று நம்புகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி :** தங்கள் அனுபவம் என்ன?

**திரு. அவைத் தலைவர் :** ஒழுங்கு, ஒழுங்கு.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனது அனுபவம், நாங்கள் ஏழ்மை யாக்கப்பட்டோம். ஏழ்மையாக்கப்பட்டது ஒரு நல்ல விஷயம் என்று இந்து சமுதாயம் நினைத்தால், இந்த அமைப்பு முறையை அவர்கள் தாராளமாக ஏற்றுக் கொள்ளலாம். முற்றிலும் சமத்துவம் கொண்ட வர்க்க பேதமற்ற சமுதாயத்தை ஏற்படுத்தப் போவதாக கூறப்படுவதை நாம் கேட்கிறோம். வறுமை மற்றும் ஏழ்மையின் சமத்துவமாகவே அது இருக்கும். ஆனால் எங்கள் அமைப்பு முறை பற்றி நான் புகார் கூறவில்லை. எப்படியாயினும், அதைப் பற்றி விவாதிக்கும் இடமல்ல இது. சகோதரனுக்கும் சகோதரிக்குமிடையேயான சமத்துவம் என்ற

கண்ணோட்டத்தில் மட்டுமே பார்க்காமல், விஷயம் முழுவதும் இந்து சமுதாயத்தால் ஆழமாக பரிசீலிக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்து கிறேன். ஒரு கோஷத்தைவிட இது அதிகமானது. இந்த அவையில் ஈடுபாட்டுடன் செயல்படும் சட்டப் பேரவை உறுப்பினர்களாகிய நாம் கோஷங்களை கண்டு ஏமாறக் கூடாது. பிரச்சினைகளில் சிலவற்றை ஓரளவு சூசகமாக எடுத்துக்காட்ட மட்டுமே செய்துள்ளேன். இன்னும் எத்தனையோ மற்ற விஷயங்களும் இருக்கின்றன. எல்லா அம்சங் களையும் இங்கு எடுத்துக் கூறுவது என்பது எனக்குச் சாத்தியமல்ல. சில முக்கியமற்ற அம்சங்களை நான் மிகைப்படுத்திக் கூறியிருக்கலாம். மற்றவற்றை விட்டுவிட்டுமிருக்கலாம். ஆனால் இவையெல்லாம் என் மனத்தில் ஊற்றெடுத்துள்ள சில கருத்துக்கள் மட்டுமே; மகள்கள் விஷயத்தைப் பொறுத்தவரை இக்கருத்துக்கள் மக்களைச் சிந்திக்க வைக்கும்; அவர்கள் விஷயத்தில் அவசரப்படாமலிருக்கச் செய்யலாம்.

இப்பொழுது, சமத்துவம் என்ற விஷயத்திற்கு வருகிறேன். சில அம்சங்களில், சில சமயங்களில் பெண்கள் ஆண்களைவிட உயர்வான நிலையில் இருக்கவில்லையா? பல துறைகளில் அவள் உயர் நிலையில் இருக்கிறாள் என்று நம்புகிறேன். வீட்டில் அவள்தான் எஜமானி; அவனது சொத்து அவனது விருப்பங்கள் அவனது சித்தங் கள் ஆகியவற்றின் எஜமானி அவள்; எல்லா விஷயங்களும் அவள் கட்டுப்பாட்டில் உள்ளன. எனவே சொத்தில் பங்கு அளிக்கப்பட வில்லை என்பதாலேயே, தாங்கள் புறக்கணிக்கப்படுவதாக பெண்கள் கருதக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன். உண்மையில், அவளது நிலை அசைக்க முடியாதது. குடும்பத்தில் மதிக்கப்படாத, நேசிக்கப் படாத எந்தப் பெண் இருக்கிறாள்? தனிப்பட்ட முறையில் அவளுக்கு எதுவும் தேவைப்படுகிறதா? தனது கணவன் நலன் அல்லாமல் அவளது குழந்தைகள், அவளது சகோதரர்களின் குழந்தைகள் நலன் அல்லாமல் வேறு எதுவும் அவளுக்குத் தேவைப்படுகிறதா? இதுதான் இந்து அமைப்பு முறை. அது நல்லதா, கெட்டதா என்பது நான் விவாதிக்க வேண்டிய விஷயமல்ல.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** நீங்கள் கூறுவது மிகவும் சரி.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்து சமுதாயம் சொல்ல வேண்டியது அது. நான்கு ஆயிரம் ஆண்டுகள் நிலைத்து நின்ற அமைப்பு முறை ......

**திரு. பாபு ராம் நாராயண்சிங் :** அதைவிட அதிகம்.

**திரு. நசிருத்தீன் முகமது:** அது உண்மையில் இந்து சமுதாயம் அழுகிப் போய்விட்டதா, சரிந்து கொண்டிருக்கிறதா என்பதை அவர்கள்

தான் கூறவேண்டும். டாக்டர் அம்பேத்கர் கூறியது போல், பழுதுபார்க்க வேண்டியது அதற்குத் தேவைப்படுகிறதா, உடைத்து மாற்றி அமைக்கப் படுவது தேவையா என்ற பிரச்சினை உண்மையில் நிவாரணமும் மறுசீரமைப்பும் இந்து சமூகத்திற்கு அவசியமா என்பதற்கு ஒப்பானது. அந்த மாதிரி எதுவும் இல்லை என உணர்கிறேன். இங்கு பிரச்சினை அறிவாற்றல் சார்ந்த எழுச்சி மட்டுமேயாகும். சட்டக் கோட்பாட்டின் ஒரு பொழிப்புறை மட்டுமே அது. இந்தக் கருத்து வேறுபாடுகளுக்கும். விவாதங்களுக்கும், விரோதத்திற்கும், பிரிவினைக்கும் சமத்துவம் எனும் சித்தாந்தமே பிணி தீர்க்கும் மருந்து. இது ஒன்றும் சிக்கலானதல்ல, எளிமையானதே. உங்கள் குடும்ப அமைப்பு முறை பற்றி நீங்கள் திருப்தியடைகிறீர்களா? ஆண்டாண்டுக் காலமாக அழிவுகளிலிருந்தும் இந்த அமைப்பு முறை உங்களைக் காப்பாற்றவில்லையா?

**டாக்டர் மோனோ மோகன் தாஸ்** (மேற்கு வங்காளம் : பொது): நாட்டில் முஸ்லீம்களின் எண்ணிக்கையை மேலும் அது அதிகரித்துள்ளது.

**திரு. அவைத் தலைவர் :** ஒழுங்கு, ஒழுங்கு.

நம்முன் உள்ள பொருள் சமுதாயத்தின் கட்டமைப்பு பற்றியதல்ல. இந்துச் சட்டத்தொகுப்பின் சில ஷரத்துகள் பற்றியே நாம் விவாதித்துக் கொண்டிருக்கிறோம். எனவே மிக அதிக விவரங்கள் பற்றி அல்லது ஏனைய விஷயங்கள் பற்றி நாம் விவாதித்துக் கொண்டிருக்க வேண்டாம். இல்லையெனில், உரையை நிறுத்தும்படி மதிப்பிற்குரிய உறுப்பினரை நான் கேட்க வேண்டியிருக்கும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** பாகத்தை மகளுக்கு நீங்கள் அனுமதித்தால், பெரும் அளவிலான சூழ்ச்சிகள் நிகழும்; உயில்கள் சம்பந்தமாக ஏராளமான வழக்குகள் வரும். தகப்பனார் இறக்கும் போது, பல உயில்கள் இருக்கும். ஏராளமான நீதிமன்ற வழக்குகளுக்கு இது இட்டுச் செல்லும். தங்கள் ஆதிக்கத்தில் சொத்துக்களை வைத்துக் கொள்ள மகன்கள் முயற்சிப்பர். மரணமடையும் தறுவாயிலுள்ள தகப்பனார் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகி உயில் எழுத வைக்கப்பட்டிருக்கலாம். அல்லது உயில்கள் தயாரிக்கப்படலாம். இம்மாதிரி விஷயங்கள் நிகழ்கின்றன. உண்மையில் பரிசீலிக்க வேண்டிய முக்கியமான விஷயங்கள் இவை.

ஐயா, அடுத்து வாரிசுரிமைப் பிரச்சினை இருக்கிறது. உண்மையில், இந்த விஷயம் மிகவும் கவனமாகப் பரிசீலிக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

அடுத்து, மசோதாவின் மற்றொரு பாகத்தை அதாவது திருமணம் விஷயத்தை எடுத்துக் கொள்வோம். முக்கியமாக ஒரு தார மணத்தை, (ஒரு வாழ்க்கைத் துணைவர் கோட்பாடு) பொறுத்தவரை, அது தத்துவரீதியாகவும் நடைமுறையிலும் நல்லது என்று பணிவுடன் கூறுகிறேன். ஏராளமானவர்கள் இரு மனைவிமார்களை பெற்றிருக்க மாட்டார்கள் என்றும் நம்புகிறேன். இதனால் ஒன்று அதிகம் செலவாகிறது; மேலும் சிக்கல்களும் அதிகரிக்கின்றன. உண்மையில் இரு மனைவியரைக் கொண்டிருப்பது பொது வழக்கமாக இருப்பதை நான் காணவில்லை. அது மிகவும் ஆபூர்வம். மிக விதிவிலக்கானதாக மட்டுமே அது உள்ளது. அரசியல் அல்லது பொருளாதார நெருக்கடி நிலைமைகள் காரணமாக எவரும் இரு மனைவியரை மணந்து கொள்வதைச் சாத்தியமற்றதாக்குகின்றன. ஆனால் சட்டமியற்றல் மூலமோ அல்லது பொதுஜனக் கருத்து மூலமோ நாம் ஒருதார மணக் கோட்பாட்டை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சி செய்ய வேண்டும் என்பதுதான் இங்கு பிரச்சினை. இரு மனைவியரைத் திருமணம் செய்து கொள்ளும் போக்கு சில மனிதர்களிடம் இருக்கலாம். பாலின நப்பாசையைவிட தனக்குப் புத்திரப் பேறு வேண்டும் என்ற ஆசை இதற்கு காரணமாக இருக்கக் கூடும். இந்துக்கள் கருத்துப்படி, **புத்** என்ற **நரகத்திலிருந்து** தகப்பனாரைக் காப்பாற்ற ஒரு மகன் தேவைப்படுகிறான். இந்தப் **புத்திலிருந்து** உங்களைக் காப்பாற்றுபவனே புத்திரன் என்று அழைக்கப்படுகிறான். இல்லாவிடில் **புத்** என்ற நரகத்திற்கு மனிதன் போகிறான். இந்துக்களின் தத்துவப்படி, மகனைப் பெற்றிருப்பது மதரீதியான தேவை; ஒரு மகனைப் பெற்றுத் தர முடியாதபடி மனைவி மலடாக இருந்தால், மற்றொருவளை மணந்து கொள்ள அவன் முயலுகிறான். என்னுடைய அனுபவத்தில் இவ்வாறு நிகழ்ந்துள்ளது. மற்ற பலரின் அனுபவத்திலும் நிகழ்ந்திருக்கலாம். அதாவது, மனைவி மலடாக இருப்பதால், கணவனது இரண்டாவது திருமணம் நடைபெறுகிறது. குழந்தை இல்லாத மூத்த மனைவி இரண்டாவது மனைவியைத் திருமணம் செய்து கொள்ளும்படி கணவரை உண்மையில் தூண்டி அல்லது நிர்ப்பந்தித்த மகிழ்ச்சிகரமான குடும்பங்களையும் நான் பார்த்திருக்கிறேன்; மூத்த மனைவி குடும்பத்துடன் தான் மகிழ்ச்சியாக இருப்பதாகக் கருதுகிறாள். ஒரு மகனைப் பெற்றிருப்பது விரும்பத்தக்கது என்ற இம்மாதிரியான நம்பிக்கை வங்காளத்தில் இந்திய முஸ்லீம்களிடையே பரவலாக இருக்கிறது.

**திரு. தாஜாமுல் உசேன் :** என் சார்பிலும் மதிப்பிற்குரிய மற்ற உறுப்பினர்கள் சார்பிலும் ஒரு கேள்வியை முன்வைக்க விரும்புகிறேன். ஓர் இந்துத் தந்தை ஒரு மகனை தனது சொந்த விமோசனத்

திற்காக அடைந்திருக்க வேண்டும் என்பதை நான் புரிந்து கொள்கிறேன். அதே போல் ஓர் இந்துத் தாய்க்கும் தனது விமோசனத்திற்காக ஒரு மகன் தேவைப்படுகிறானா? அப்படி அவளுக்கு தேவையெனில் ஒன்றுக்கு மேற்பட்ட கணவனை மணக்கும் உரிமை அவசியம் அவளுக்கு இருக்க வேண்டுமல்லவா?

**திரு. அவைத் தலைவர் :** அவைக்கு வெளியே நாம் ஏராளமான தகவலைப் பெறலாம். அவையில் இந்துச் சட்டத் தொகுப்பை தொடர்ந்து விவாதிப்போம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனவே, தர்க்கரீதியிலும் சட்டரீதியிலும் பார்த்தால் பலதார மணம் என்பது பலர் நினைப்பது போல், அவ்வளவு ஆபத்தானதல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு குறிப்பிட்ட சூழலில் அதைப் பரிசீலிக்க வேண்டும். குழந்தை வேண்டுமென ஓர் இந்துக் கணவன் மீண்டும் திருமணம் செய்ய விரும்பினால், முதலாவது மனைவி இருக்கும் வரை அவனால் அதைச் செய்ய முடியாதெனில், அது விவாகரத்து நடவடிக்கைகளுக்கு இட்டுச் செல்லும். ஒரு தார மண ஷரத்து முதலாவது மனைவியின் வாழ்நாளில், அல்லது முதல் மனைவியோடான திருமணம் அமுலில் இருக்கும் போது இரண்டாவது திருமணத்திற்கு தடைவிதிக்கப்பட்டால், அது விவாகரத்துக்களுக்கு இட்டுச் செல்லும். அதை விளையாட்டாக நாம் கருதக்கூடாது. நமது வரலாற்றுக் காலத்தில் உண்மையில் இது மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் நிகழ்ந்தது. நெப்போலியன் போனபார்ட் காதலித்து மணந்து கொண்டார். அவருக்கு குழந்தைகள் இல்லை. அபூர்வமான தமது சொந்தத் திறமையால் கட்டி வளர்த்த பரந்த சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்திற்கு ஒரு வாரிசை அவர் விரும்பினார். அவர் என்ன செய்தார்? தமது முதல் மனைவி மீது அவருக்கிருந்த காதல் ஆழமானதாக இருந்தது என்பது உண்மையே. எனினும் குடும்ப சந்ததியைப் பாதுகாக்க ஒரு மகன் வேண்டுமென்ற அவர் விருப்பம் அந்தக் காதலையும் மீறிச் சென்றது. ஒரு ராஜ குமாரியை அவர் திருமணம் செய்து கொண்டார். ஆஸ்திரிய ராஜகுமாரியுடனான ராஜ குடும்ப உறவு அவரது அதிகாரத்தைக் காலகாலத்திற்கும் நிலைப்படுத்தும் என்றும், இரு மனைவிகளுடனும் தாம் சந்தோஷமாக இருக்கலாம் என்றும் அவர் எண்ணினார். இது வரலாற்று ரீதியான ஓர் எடுத்துக்காட்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நெப்போலியனுக்கு என்ன நிகழ்கிறது?

**திரு. நசிருத்தீன் அகமது :** செயின்ட் ஹெலினாவில் மரண மடைந்தார் - மகிழ்ச்சியற்ற மனிதராக.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஒரு சாம்ராஜ் யத்தை நிறுவ வேண்டுமென்ற பேரவா அவருக்கு இல்லாதிருந்தால் அவர் வேறுவிதமாக வாழ்ந்திருப்பார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, வரலாற்றிலிருந்து இது ஒரு எடுத்துக்காட்டு. ஒரு மகனை அடையும் நோக்கத்திற்காக திருமணம் செய்வதிலிருந்து ஓர் இந்து தடுக்கப்பட்டால், மகன் அவசியம் என்று அவர் நினைத்தால், தனது மனைவி தனக்கு ஒரு மகனை அளிக்க மாட்டாள் என்று அவர் நம்பினால் அவர் தாழ்ந்த நிலையில் உள்ள ஒரு பெண்ணைக்கூட மணக்கலாம். அவளுக்கு பிறக்கும் குழந்தைகள் சட்டப்படியானவர்களாக கருதப்பட்டாலும் அவர்களுக்கு தகப்ப னாரின் சொத்தில் உரிமை கிடையாது; அல்லது சட்ட நுணுக்கப்படி குற்றம் என்று கருதப்படுவதை - தன் சொந்த உணர்வின் படி நியாய மானதும் சரியானதும் என்று முழு மத நம்பிக்கையில் - அவர் செய்ய லாம். இத்தகையவர்கள் மீது நடவடிக்கை எடுப்பது மத சிந்தனை யில் ஆழமாக ஊறிப்போனவர்களின் உணர்வில் தலையிடுவதாகும். எனவே இந்த விதிவிலக்கான விஷயங்களை சட்டமியற்றுவதன் மூலம் கையாளக்கூடாது; பொது மக்கள் கருத்தின் மூலம் செய்ய வேண்டும். பலதார மணம் இயல்பாகவே குறைந்து வருகிறது. அந்தப் போக்கைத் துரிதப்படுத்த செயற்கையான முறையில் நடவடிக்கை மேற்கொண்டால் அதனால் ஏமாற்றம்தான் மிஞ்சும். பலதார மணத்தை முற்றிலும் தடை செய்வது உகந்ததல்ல ஒரு மனிதனுக்கு இரண்டாவது மனைவி தேவையெனில், நமது எல்லையைத் தாண்டி அவன் பாகிஸ் தானுக்குச் செல்வதை எது தடுக்க முடியும்? (**திரு. மகாவீர் தியாகி :** இரண்டாவது கணவர் பற்றி என்ன?) இரண்டாவது கணவரும் சில இடங்களில் பரவலாக உள்ளது. திரு. தியாகி இதை நன்கு அறிவார். பலதார மணம் இந்தியாவில் தடை செய்யப்படும்; அதை அங்கீ கரிக்க நீங்கள் மறுப்பீர்கள்; ஆனால், மனிதனுக்கு மகன் அவசியம் வேண்டும்; திருமணம் செய்து கொண்ட மனைவியை - பாகிஸ்தானில் திருமணம் செய்து கொண்ட இரண்டாவது மனைவியை - கொண்டு வருவதை எது தடுக்கமுடியும்? மேலும், முதல் மனைவியும் இதற்கு ஒத்துக் கொள்ளலாம். இந்துக்களில் ஆழமாக வேரூன்றியுள்ள உணர்வுகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் எதிரான ஒரு சட்டத்தை அப்பொழுது இயற்றுவீர்களா? இவ்வாறு பரிசீலிக்கப்பட வேண்டிய முக்கிய விஷயங்கள் உள்ளன. இந்துக்களின் கோட்பாடுகளுக்கும் அடிப்படைக் கருத்துக்களுக்கும் எதிராக கடினமான இத்தகைய பொருத்த

மானதல்ல. இம்மாதிரியான தீவிர சட்டமியற்றுவதற்கு இறங்கும் முன் பிரச்சினையை மிக ஜாக்கிரதையாக பரிசீலிக்க வேண்டும். இரண்டாவது திருமணம் செய்து கொள்வோருக்கு எதிரான வழக்கில் அபாரத்திற்கும் தண்டனைக்கும் வழிவகை செய்யப்பட்டுள்ளது. பொது மக்களின் ஆதரவைப் பெற முடியாத ஒரு சட்டத்தை நாம் இயற்றக்கூடாது; இது தவிர்க்க முடியாத சட்டமீறல்களுக்கும் ஏய்ப்பு களுக்கும் இட்டு செல்லும். சாரதா சட்டத்திற்கு ஏற்பட்ட கதியை நாம் அறிவோம். சாரதா சட்டத்தின் முதல் விளைவு என்ன? அந்தச் சட்டம் அமுலுக்கு வரும் முன்பு பல லட்சக்கணக்கான குழந்தைத் திருமணங்கள் நடத்தப்பட்டன. எந்தத் தீங்கைத் தடுப்பது அந்தச் சட்டத்தின் நோக்கமோ, அதே தீங்கைத்தான் அது கொண்டுவந்தது; இன்று கதை என்ன? திருமணம் செய்துவைக்கத்தக்க மகள்-சாரதா சட்டம் நிர்ணயிக்கும் வயது அளவுக்கு இல்லாவிடினும் - இருக்கிறாள் என்று வைத்துக் கொள்வோம். ஒரு பொருத்தமான மணமகன் கிடைப் பதாக வைத்துக் கொள்வோம். உரிய வயதுவராத ஒரு மைனர் மகளுக்கு அந்தத் தகப்பனோ அல்லது காப்பாளனோ திருமணம் நடத்தி வைத்தால், தார்மீகரீதியில் அந்த தகப்பன் மீது குற்றம் கூறமுடியுமா? ஒரு மனிதனின் தத்துவ ரீதியான அல்லது அரசியல் ரீதியான உணர்வை அது புண்படுத்துகிறது என்பதனாலேயே அந்தச் செயலை நியாயப் படுத்த முடியாதா? தற்கால நடைமுறைகளைத் திடீரென சட்டத்தால் சாத்தியமற்ற தாக்கக் கூடாது. மக்களின் நம்பிக்கை, மற்றும் விருப்பங் களுக்கு உகந்தவையாக உள்ளன பழைய நடைமுறைகள். இதனா லேயே சாரதாச் சட்டம் பெருமளவு தோல்வியுற்றது. இது பற்றி வெகுஜன கருத்து அவ்வளவு பலமாக இருப்பதால் இன்று சாரதாச் சட்டத்தை மீறியதாக் கூறப்படும் குற்றங்களுக்கு எதிரான வழக்கு அநேகமாக எதுவும் இல்லை. உண்மையில், திருத்தம் மூலம் சட்டம் திணிக்கப்பட்டது. புகார் செய்யும் ஒருவரின் வழியில் சில கஷ்டங்கள் உள்ளன. முதலாவது கஷ்டம், செலவு தொகையை (முதலில்) கட்ட வேண்டும்; வழக்கில் அவர் தோற்றால் அந்தத் தொகையை அவர் இழந்து விடுகிறார்; இதே போன்று இதர பல சிரமங்களையும் அவர் சந்திக்க வேண்டியுள்ளது. சாரதா சட்டம் இயற்றிய பிறகு என்ன நிகழ்ந்தது? குழந்தைத் திருமணங்கள் இன்னமும் பரவலாக உள்ளன. குழந்தை திருமணங்களை எவரும் ஆதரிப்பதில்லை. ஆனால் குற்ற வியல் வழக்குகள் மூலமோ, பலத்தைக் கொண்டோ, வெகுஜன உணர்வின் பின்பலம் இல்லாமல் அதை நிறுத்திவிட முடியது. படித்த மேல்தட்டு வர்க்கங்களிடையே, குழந்தைத் திருமணம் நடைமுறையில் சாத்தியப்படாது. ஆனால் ஏழை மக்களைப் பாருங்கள். ஏழை வர்க் கங்களைச் சேர்ந்த திருமணமாகாத பெண்கள் - திருமண வயதை

அடையாதவர்கள் - கணவன்மார்களின் கவனிப்பும் பாதுகாப்பும் இல்லாமல் விடப்பட்டால், அவர்களது நிலை பாதுகாப்பானதாக இருக்காது. கணவன்மார்களின் பாதுகாப்பு இல்லாமல் அந்தப் பெண்கள் விடப்பட்டால் அவமானங்களும் கஷ்டங்களும்தான் அவர்களுக்கு ஏற்படும். விளைவு என்னவாக இருக்குமென்றால், சட்டப்படியான கல்யாண வயது வரும் வரை காத்திருக்க அவள் நிர்ப்பந்திக்கப்பட்டால், ஒரு கணவன் சுலபமாகக் கிடைக்க மாட்டான்; அவளைச் சுலபமாக கல்யாணம் செய்து வைக்க முடியாது. எல்லா விதமான பழிக்கும் ஆளாவாள். ஐயா, சாரதாச் சட்டத்திற்கு ஏற்பட்ட கதியை நினைவில் கொண்டு எல்லா சூழ்நிலைகளிலும் கடுமையான முறையில் விதிவிலக்குகள் இல்லாமல் சட்டம் கொண்டு வரும் கருத்தை நாம் பரிசீலிக்க வேண்டும். ஐயா, இது ஆழமான, நடைமுறை ரீதியான பரிசீலனை தேவைப்படும் விஷயமாகும். தத்துவங்களும் கோஷங்களும் கொண்ட விஷயமல்ல இது. இப்பொழுது விவாகரத்து விஷயத்து வருகிறேன். எல்லாக் குடும்பத் துயரங்களுக்கும் விவாகரத்து சஞ்சீவி மருந்து அல்ல. தனது மனைவியுடன் அபிப்பிராயபேதம் கொள்ளாத மனவருத்தம் கொள்ளாத ஒரு மனிதன் இருக்க முடியாது. இவ்வகையில் பார்க்கும்போது சிரமத்திற்குள்ளாகாத ஒரு குடும்பம் அநேகமாக இருக்காது. கணவனுக்கும் மனைவிக்கும் இடையே வாழ்க்கை எல்லாம் இன்பமயமாக இருந்தால் அது சகிக்க முடியாததாகிவிடும். அத்தகைய மகிழ்ச்சி மகிழ்ச்சியே அல்ல. மகிழ்ச்சி என்பது மன வருத்தங்களோடு, சச்சரவுளோடு இணைந்து இல்லாவிடில் அது மகிழ்ச்சியாக இருக்காது. உண்மையில், இந்த மன வருத்தங்களைத் தொடர்ந்துதான் அவர்கள் மீண்டும் இணைவது வருகிறது. மன வருத்தங்கள் சில சமயங்களில் அவசியமாகின்றன. அனுபவம் வாய்ந்த எல்லா மனிதர்களுக்கும் இதைக் கூறுகிறேன். ஒரு பைத்தியம்தான் அவன் வாழ்நாள் முழுவதிலும் மகிழ்ச்சியாக இருப்பான். ஒருவன் புத்திசாலியாக இருந்து, ஆளுமையும் கொண்டிருந்தால் அங்கு கருத்து வேறுபாடுகள் இருக்கும். ஆனால் காலப்போக்கில் மனைவிதான் வெற்றி பெறுவாள். எனவே தம்பதியர் ஒன்றாக வாழ வழிவகை செய்தால் வசந்தகால மேகங்கள் போல் மன வருத்தங்கள் சிதறிப்போகும். எனவே அவசரப்பட்டு விவாகரத்துக்கு வழிவகை செய்யக்கூடாது எனக் கேட்டுக் கொள்கிறேன்.

இப்பொழுது, முஸ்லீம் பழக்க வழக்கங்களுடன் இவற்றை எல்லாம் ஒப்பிட்டுப் பார்ப்போம். ''ஒரு முஸ்லீம் தனது மனைவியை விவாக ரத்து செய்யலாம். அப்படியிருக்கும் போது ஏன் ஓர் இந்து அதே உரிமையை பெற்றிருக்கக் கூடாது? ஒரு கிருஸ்தவர் தனது மனைவியை விவாக ரத்து செய்யலாம்; இந்து ஏன் அவ்வாறு

செய்யக் கூடாது?'' மூன்று அமைப்பு முறைகளும் முற்றிலும் வேறு பாடானவை; இந்த விஷயங்களில் அவை அடிப்படையில் வேறுபடு கின்றன. நடைமுறைக் காரணங்களால், ஒரு முஸ்லீம் விவாக ரத்து செய்ய முடியது. விவாகரத்துச் செய்ய தங்கு தடையற்ற உரிமை அவனுக்கு இருக்கிறது. ஆனால் வழக்கமாக மணக்கொடை பணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். பொதுவாக அவனது வசதிக்கு அப்பால் இருக்கும் அது. ஏனெனில் அதன் மதிப்பு ரூ.10,000 என்றிருந்தாலும், அவன் கொடுக்க வேண்டிய மணக்கொடை ரூ. 50,000 அல்லது 1 லட்சமாக இருக்கும். முஸ்லீம் சட்டத்தில் இதற்குத் தெளிவாக வழிவகை செய்யப்பட்டுள்ளது. விவாகரத்திற்கு கணவனுக்குள்ள கட்டுப்பாடற்ற உரிமைக்கு இது ஒரு தடங்கல். ஒரு முஸ்லீம் கணவன் தனது மனைவி மீது அதிருப்தியடைந்துள்ள போதிலும் அவளை விவாகரத்து செய்வதற்கு நடைமுறை தடங்கல் இருக்கிறது. ஒரு விவாகரத்துக்கு முயற்சி செய்யம் பல துணிச்சலான முஸ்லீம் கணவர்களுக்கு அதைப் போதுமான அளவு தடைசெய்யக் கூடிய ஒரு நிபந்தனையாக அது உண்மையில் கருதப்படுகிறது. ஓர் இந்துக் கணவன் தன் மனைவி மீது அதிருப்தி கொண்டிருந்தால், அந்த அதிருப்தி மறைந்து போவதற்கு சிறிது காலத்தை நாம் அனுமதிக்க வேண்டும். நீங்கள் கதவை விரிவாகத் திறந்து வைத்து விவாகரத்தைச் சுலபமாக்கினால், வாதி பிரதிவாதிகள் நீதிமன்றங்களுக்கு விரைந்து செல்வர்; இதனால் இந்த அவையின் ஒரு பகுதியினரின் வெறுப்புள்ளாகியிருக்கும் வழக்கறிஞர்களே பயனடைவர். நீதிமன்றத்தில் விவாகரத்து நடவடிக்கைகள் பற்றி அனுபவம் உள்ளவர்கள் எத்தகைய இழிவான விஷயங்கள் அங்கு எடுத்துக் கூறப்படுகின்றன என்பதை அறிவர். ஒரு கண்ணியமான மனிதன் கேட்கக் கூடாதவையாக அவை இருக்கின்றன. கூடா ஒழுக்கத்தை- கணவன் மனைவிக்கோ அல்லது மனைவி கணவனுக்குத் துரோகம் செய்வது - முற்றிலும் சரியாக நிரூபிக்க வேண்டும். இல்லையெனில் விவாகரத்து அனுமதிக்கப்பட மாட்டாது. விவாகரத்தான குடும்பங்களின் துன்பம் அளிப்பரியது. குடும்ப மகிழ்ச்சியின்மைக்கு சஞ்சீவி மருந்து விவாகரத்தல்ல. இந்த மனைவி அல்லது கணவன் நீதிமன்றத்துக்கு விரைந்து செல்வதற்கு உரிமை வழங்கப்பட்டால், விளைவு என்னவாக இருக்குமெனில், காலத்தில் தீரவேண்டிய தப்பெண்ணங்கள் வாழ்நாள் முழுவதுக்குமான நீண்ட மகிழ்ச்சியின்மையை ஏற்படுத்தும். தற்போது நிலவும் பிரச்சினை களுக்குத் தீர்வு காண முயன்று புதுப்புதுப் பிரச்சினைகளுக்குத்தான் வித்திடுவீர்கள்.

*(இந்தக் கட்டத்தில் திரு அவைத்தலைவர் தமது இருக்கையிலி ருந்து எழுந்தார்; அவை தலைமையை துணை அவைத் தலைவர் (திரு. எம். அனந்தசயனம் ஐயங்கார் ஏற்றார்.)*

நீதிமன்றத்திற்குச் செல்வதற்கு வழிவகை செய்தால், என்ன நடக்கும் தெரியுமா? பெண்ணைவிட ஆணுக்குத்தான் அது அனுகூல மாக அமையும்; விவாகரத்து நடவடிக்கையால் பாதிக்கப்பட்ட பெண் நிவாரணம் பெறுவாள் என்று வாதிப்பது சுத்த முட்டாள்தனம். அவளே பலிகடாவாக அநேகமாக ஆகலாம். மசோதாவில் குறிப்பிடப்பட்டுள்ள படி பல்வேறு தவறுகளை மனைவி செய்ததாகக் குற்றம் சாட்டி கணவன் அடிக்கடி நீதிமன்றத்திற்கு செல்வான்; ஒரு பக்கச் சார்பான விவாகரத்தை அவனால் பெற முடியும். நமது சமுதாயத்தை அறிந்தவர்கள், தன் மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுகள் உண்மையல்ல என்று நிரூபிக்க ஒரு பெண்ணுக்கு எத்தகைய சாத்தியக்கூறு இருக்கிறது என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம். கணவனால் ஒதுக்கப்படும் ஒரு பெண்ணின் வழக்கை யார் வாதிடுவர்? அடிக்கடி நீதிமன்றத்திற்கு விரையக்கூடியவன் கணவன்தான். மேலும் மனைவி மலடியாக இருந்து, மற்றொரு திருமணத்தின் மூலம் ஒரு மகனை அடையும் விருப்பமும் இருந்தால் அவன் நீதிமன்றத்துக்கு விரையும் போக்குத் தீவிரமடையும். இப்பொழுது தன் மனைவிக்கு எதிராக ஒரு மனிதன் விவாகரத்துப் பெறுகிறான் என்று வைத்துக்கொள்வோம்; அந்தப் பெண்ணிற்கு என்ன நிகழும்? அவள் எங்கு செல்வாள்? விவாகரத்துச் செய்யப்பட்டபின், அவளுக்கு ஒரு கணவன் இருக்கமாட்டான்; தார்மீக ரீதியில் அல்லது உழைப்பு மூலம் வாழ வகையில்லாமல் இருப்பாள்? அந்தப் பெண்ணுக்கு யார் உதவ முன்வருவர்? இந்த மசோதாவின் மூலகர்த்தாக்களா? அவர்கள் முன்வருவார்கள் என நான் நினைக்கவில்லை. அவள் தன் சகோதரனிடம் செல்வாளா? இல்லை. இப்பொழுது தன்னை ஒதுக்கித்தள்ளிய தனது அதே கணவன் நலனுக்காகக் குடும்பச் சொத்தில் ஒரு பாகத்தை எடுத்துக் கொண்டதால், தனது சகோதரனை அவள் விரோதித்துக் கொண்டிருப்பாள் இல்லையா? விளைவு என்னவாக விருக்கும்? அவனது துயரங்கள் பற்றி அவளது தகப்பனாரின் உறவினர்கள் முற்றிலுமாக அக்கறை காட்ட மாட்டார்கள். பிறகு அவள் தன்னை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வாள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நசிருத்தீன் அகமதை அவள் திருமணம் செய்து கொள்வாள்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, நான் அவ்வாறு நினைக்க வில்லை. எந்த நய நட்பு உணர்வுடைய விவாகரத்துச் செய்யப்பட்ட எந்தப் புத்திசாலியானப் பெண்ணும் என்னைத் தேர்ந்தெடுப்பாள் என்று நான் நினைக்கவில்லை. மாண்புமிகு அமைச்சர் என்னைவிட நல்ல தேர்வாக இருப்பார் என்று நினைக்கிறேன்.

**திரு. துணை அவைத்தலைவர் :** அவ்வாறு எதுவும் நிகழாமல் கடவுள் காப்பாற்றட்டும். தனிப்பட்டவர் பற்றி நாம் குறிப்பிடாமல் இருப்பது நலம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அவைத் தலைவர் அக்கறையுடன் கேட்க வேண்டும் என்று அது கூறப்படவில்லை.

**திரு. துணை அவைத் தலைவர்:** நான் இதனை விளையாட்டாக அல்லாமல் பொறுப்புணர்ச்சியோடு எடுத்துக் கொள்கிறேன். 'அந்தப் பெண் எங்கு செல்வது?' என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் வினவியதன் விளைவாகத்தான் மாண்புமிகு அமைச்சர் அப்படிக் கூறினார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவர் அவ்வளவு பரிவிரக்கத்தை வெளிப்படுத்தியதால் அவரது ஆத்ம திருப்திக்காக இவ்வாறு நான் ஆலோசனை கூறினேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அதை நான் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை. தமாஷை முற்றிலுமாக ரசித்தேன். தமாஷ் ஒருபுறம் இருக்கட்டும். நான் மீண்டும் மிகவும் வினயத்தோடு அதே கேள்வியைக் கேட்கிறேன்: அவள் எங்கு செல்வது? விவாகரத்துச் செய்யப்பட்ட ஓர் ஐரோப்பியப் பெண் விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அவளுக்கு வசதிகள் உள்ளன. அவள் கல்வி அறிவு பெற்றிருக்கிறாள். அவள் ஏதேனும் வேலையைப் பெற முடியும். சுருக்கெழுத்து தட்டச்சு பணியாளராக அவள் இருக்க முடியும். நமது தூதரகங்கள் ஒன்றில் ஒரு வேலையை அவள் பெற முடியும். விமானத்தில் இனாமாக பயணம் செய்ய முடியும். சம்பளமும் படியும் பெற முடியும். இத்தகைய பெண்கள் முற்றிலும் சுதந்திரமாக இருக்கிறார்கள். முன் அறிமுகமில்லாத அன்னியர்களைக்கூட அவர்கள் நண்பர்களாக ஆக்கிக் கொள்ள முடியும். தங்களைத் தாங்களே சார்ந்து இருக்கும்படி அவர்கள் பயிற்சி பெற்றிருக்கின்றனர்; பழக்கப்பட்டுள்ளனர்.

எனவே, நாகரிகமடைந்த ஐராப்பியப் பெண் இவ்விதம் தன் சொந்தக் கால்களிலேயே நிற்க முடியும். நம் பெண்களைவிட அவள் நிலை மாறுபட்டது. முன்னேறிய நவநாகரிக நடையுடை பாவனைகள் கொண்டவர்களை இங்கு நான் குறிப்பிடவில்லை. கணவனாலும் தகப்பனாரின் உறவினர்களாலும் புறக்கணிக்கப்பட்ட ஓர் அபலையான ஏழைப் பெண்ணைத் தான் இங்கு குறிப்பிடுகிறேன். சட்டத் துறை அமைச்சர் தமாஷாகக் குறிப்பிட்டது போல், விவாகரத்துச்

செய்யப்பட்ட பெண் மீண்டும் ஒரு கணவனைப் பெறுவது சுலபமான தல்ல. அவள் விருப்பப்பட்டாலும், பொருத்தமான ஒரு கணவன் அவளுக்குக் கிடைப்பது இல்லை. எனவே, அவளது நிலை மிக மிக மோசமானது; இத்தகைய பெண்கள் விவாகரத்து முறைக்குப் பலி கடாக்களாகி சொல்லொண்ணா துன்பதுயரத்திற்குட்படுகின்றனர். இத்தகைய வழக்குகளில் நீதிமன்றத்தில் செய்யப்படும் குற்றச்சாட்டு கள் எண்ணிப்பார்க்க முடியாத அளவுக்கு மிக மோசமாக இருக்கும். இத்தகைய வழக்குகளின் நீதிமன்ற நடவடிக்கைகள் மிகவும் இழி வானவையாக இருக்கும். நமது சமுதாயம் இன்றுள்ள நிலையில் கணவனையும் மனைவியையும் நீதிமன்றத்திற்கு விரைய அனு மதிப்பது நமக்குச் சாத்தியமற்றதாகும்.

மேலும், இதில் மற்றோர் அம்சமும் உள்ளது. மலைவாழ் மக்கள் போன்றோரிடையே ஒரு வகையான விவாகரத்து முறை நடைமுறை யில் இருந்து வருகிறது. இது சம்பந்தப்பட்ட சம்பிரதாயங்கள் மிக எளிமையானவை. அவர்கள் மிகச் சிக்கனமாகவும் அதிவிரைவாக வும் விவாகரத்துப் பெறுகின்றனர்; ஆனால் நீதிமன்றத்திற்கு போக அவர்கள் கட்டாயப்படுத்தப்பட்டால், பணச்செலவு போன்ற கார ணங்களால் அவர்கள் விவாகரத்து பெற முடியாது; அவர்களின் சொந்த பழக்க வழக்கப்படி அவர்கள் சுலபமாகப் பெறக் கூடிய விவாக ரத்து அவர்களுக்கு மறுக்கப்படுகிறது. விவாகரத்து முறை ஒரே சீராக இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பும் போது விஷயங்களைப் பெரிதும் சிக்கலாக்குகிறீர்கள். தத்துவார்த்தப்படி சட்டம் ஒரு சீராக இருக்கலாம். ஆனால் மிக ஏழ்மையில் உள்ள மக்களுக்கு எதிராக அது கடுமையாக செயல்படும். காலப்போக்கில் முரண்பாட்டை நீக்கி இணக்கத்தை ஏற்படுத்திக் கொடுப்பதற்கு வழி இருக்கும் போது சுலபமான விவாகரத்து என்ற பேரில், மக்கள் நீதிமன்றத்திற்கு விரைவர். அப்போது குடும்ப மகிழ்ச்சி சிதைந்து போகும். வழக்கில் ஈடுபட்டவர்களும் சமுதாயமும் கால காலத்திற்கும் வருந்த நேரும். எளிமையான முறையில் வாழ்ந்துவரும் இந்த ஏழை மக்கள் மீது செயற்கைத் தன்மை வாய்ந்த சட்டத்தைத் திணிப்பது மிகவும் கொடுமையாகும். அவர்களுக்கு அதிகச் செலவைதான் ஏற்படுத்தும். ஒவ்வொரு வழக்கிலும் நீதிபதியின் தீர்ப்பும் உயர்நீதிமன்றத் தீர்ப்பால் உறுதிசெய்யப்பட வேண்டும். அது அதிக செலவாகக் கூடிய விஷயம். அதற்குப் பதிலாக சம்பந்தப்பட்டவர்களுக்கே அதை விட்டு விட வேண்டுமென பணிவுடன் கூறிக் கொள்கிறேன். விவாகரத்தை இவ்வகையில் அறிமுகப்படுத்துவது, அதுவும் நாகரிகத்தின் பல்வேறு கட்டங்களில்உள்ள பல்வேறு வர்க்கங்களைச் சார்ந்த மக்கள்

எல்லோருக்கும் ஒரே மாதிரியாகப் பொருந்துவதாக்குவது மிகவும் விஷமத்தனமானதாகும். தங்கள் வாதங்களை ஆதரிக்க அல்லது பலப்படுத்த சமஸ்கிருத சுலோகங்களை மேற்கோள்காட்டுவது மக்களுக்கு வழக்கமாக உள்ளது. நானும் ஒரு முயற்சி செய்கிறேன்.

*''அஜா ஜிடே, கிருஷின் ஸ்ரத்தே, பிரபாட்டே மேகரம்பரா*
*தம்பதி கலகஷ்வைபா, பாபாரம்பே லகுகினயா*

இரண்டு வெள்ளாடுகள் சண்டையிடும்போது, அவை தங்களின் பின் கால்களின் மீது நிற்கின்றன. கொம்புகளின் கடுமையான மோதல் உடனே நிகழப்போகின்றது என்று எதிர்ப்பார்க்கிறோம். ஆனால் உண்மையான மோதல் மிகக் குறைவாகவே உள்ளது. 10 லட்சம் ரிஷிகள் சிரார்த்தத்திற்காக, மாபெரும் சடங்கில் கூடும்போது ஒரு கைப்பிடி அளவு தானியத்தை அவர்கள் எடுத்ததும் காலை மேகங்கள் திரண்டு ஊழிப் பிராயத்தை உண்டு பண்ணுவது போல் பயமுறுத்து கின்றன. ஆனால் மழை பெய்வதில்லை. இதே போல் தம்பதியரிடையே சச்சரவுகள் பயங்கரமாகத் துவக்கப்பட்டாலும், முடிவு கடுமையான தாக இருப்பதில்லை.

குடும்பச் சண்டைகளில் இணக்கத்தைக் கொண்டு வருவதற்காக சமூக சக்திகள் செயல்பட அனுமதிக்கப்பட வேண்டும்.

விவாகரத்துக்குப் பதில், அவர்களுக்கு அவகாசம் கொடுக்க வேண்டும். விவாகரத்து ஒரு வழிப்பாதையல்ல. எல்லாவித கண் ணோட்டங்களிலும் இது பரிசீலிக்கப்பட வேண்டும். மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் ஒரு விசித்திரமான வாதத்தை முன்வைத்தார். அதாவது 90 சதவிகித மக்கள் சூத்திரர்கள்; இந்த 90 சதவிகித மக்கள் விவாகரத்தை நடைமுறைப்படுத்துகின்றனர், இவ்வாறு பெரும் பான்மை மக்களுக்கு பொருந்தும் ஒரு சட்டத்தை எஞ்சியுள்ள 10 சதவிகிதத்திற்கும் அமுல் படுத்தப்பட வேண்டும் எனக் கூறினார். இது சட்டரீதியான வாதமுறை அல்ல. இது ஏற்றுகொள்ளப்படத் தக்கதல்ல. இந்தியாவில் பூதக் கண்ணாடியில் பார்க்கக் கூடியதான சிறுபான்மையினர் முஸ்லீம்கள். எல்லா முஸ்லீம்களையும் இந்துக் களாக மாற்றுவதற்கும் அல்லது இந்து சட்டத்தை அவர்கள் மீது திணித்து இந்துச்சட்டப்படி இறந்தபின் அவர்களது உடலை எரிப் பதற்கும் இது காரணமாக இருந்த முடியுமா? அல்லது வேறு ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். பாகிஸ்தானில் இந்துக்கள் சிறுபான்மையினர். முஸ்லீம் சட்டம் அவர்கள் மீது திணிக்கப்பட்டு பெரும்பான்மையினரின் வழக்கப்படி, அவர்களில் இறந்தவர்களை புதைக்கும்படி வற்புறுத்துவது நியாயமானது என்று இந்துக்கள் கூறுவார்களா? எனவே பெரும்பான்மையினர் என்ற வாதம் கவைக்கு உதவாதது.

90 சதவிகிதம் மக்கள் விவாகரத்து முறையைக் கொண்டிருக் கிறார்கள் என்ற கூற்றைப் பொறுத்தவரை, சென்னை ''ஹிந்து'' பத்தி ரிக்கை தனது தலையங்கத்தில் இது ''சுத்தப் பொய்'', சென்னையில் ஷெட்யூல்டு வகுப்பினர் அல்லது சூத்திரர்களுக்கு இது முற்றிலுமாக பொருத்தாது என்று எழுதிற்று.

வங்காளத்தில் எனது அனுபவம் பற்றி இப்பொழுது கூறலாமா? பிரபலமான உறுப்பினர்கள் பலர் உள்ளனர் - குறிப்பாக பண்டிட் மைத்ரா. நான் கூறுவது தவறு என்றால் அவர் என்னைத் திருத்தலாம். வங்காளத்தில் 90 சதவிகிதம் சூத்திரர்களிடையே இதுதான் பழக்கமா?...

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** அது சுத்த அபத்தம்!

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அவர் சூத்திரர் அல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மைத்ரா, ஒரு சூத்திரரா?

**திரு. நசிருத்தீன் அகமது:** நாம் அவர்களிடையே வாழ் கிறோம். விவாகரத்திற்குப் போவது சூத்திரர்களில் பெரும்பான்மை யினரிடையே உள்ள வழக்கமா?

**திரு. பாபு ராம்நாராயணன் சிங் :** சிலரிடம் உள்ளன.

**திரு. நசிருத்தீன் அகமது:** நிச்சயமாக சூத்திரர்களில் ஒரு சதவிகிதத்தினரின் பழக்கமாக இது ஆகிவிடாது. அது அப்படித்தான் என்று சில அஸ்ஸாம் உறுப்பினர்கள் பின்னால் இருந்து குசுகுசுக் கிறார்கள். தேயிலையையும் விவாகரத்தையும் அஸ்ஸாம் வளர்க்கிறது என நான் நம்புகிறேன். ஆனால் விவாகரத்து இல்லாமலே வங்காளம் தேயிலையை வளர்க்கிறது. பெரும்பான்மை என்ற வாதம் தவறான கருத்தைக் கொண்டது ஐயா, என்று நான் கூறுகிறேன். இந்த வாதங்கள் உண்மையல்ல. பம்பாயில் ஒரு வேளை இது மிகவும் பரவலாக இருக்கலாம். இந்தத் தத்துவத்தை இந்தியாவின் மற்ற பகுதிகளுக்கு விஸ்தரிக்க மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரை ஊக்குவித்ததற்கு பம்பாய் நிலவரம் காரணமாக இருக்கக்கூடம். எனவே மக்களில் 90 சதவிகிதம் பேர் விவாகரத்தை ஏற்றுக் கொள்ளுகின்றனர் என்று அறுதி யிட்டுக் கூறுவது உண்மையை அடிப்படையாகக் கொண்டதல்ல. அது உண்மையாக இருந்தாலும், அந்த அமைப்பு முறையை அனுசரிக்

3

காதவர்கள் மீது அதைத் திணிக்கக் கூடாது. அந்த வாதம் தோல்வியுறும்; இதன் விளைவை முட்டுத் தாங்க அதை உபயோகிக்கக் கூடாது. நேரடியான விவாகரத்து அல்லது ஒரு சீரான விவாகரத்து எளிதான விவாகரத்து முறை வழக்கமாக பரவலாக உள்ள நிகழ்வுகளில் கஷ்டத்தை ஏற்படுத்தும். விவாக ரத்து பரவலாக இல்லாத குடும்பங்களில் துன்பத்தையும் சீர்குலைவையும் ஏற்படுத்தும். சட்டமன்றங்களை சுலபமாக அணுகக்கூடிய இந்த நாட்களில் அனுகூலங்கள் என்பவற்றை ஏழைவர்க்கத்தினரைவிட செல்வம் படைத்த வர்க்கங்களே பெறும். எனவே விவாகரத்திற்கு வழிவகை செய்தால் அது மக்களின் சம்மதத்தோடு மட்டும்தான் செய்ய வேண்டும். அப்படியும், விசேஷ சூழ்நிலைகளில், முதல் மனைவின் அனுமதியோடு இரண்டாவது திருமணம் அனுமதிக்கப்படலாம். பலதார மணம் வேகமாக மறைந்து கொண்டிருக்கிறது; சட்டமியற்றுவதன் மூலம் அதைத் துரிதப்படுத்தக் கூடாது. இது விவாகரத்து நடவடிக்கைகளுக்கு இட்டுச் செல்லும் அல்லது ஒருவன் பாகிஸ்தானிக்கோ, பர்மாவிற்கோ, மலேசியாவுக்கோ அல்லது வேறு இடங்களுக்கோ சென்று இரண்டாவது மனைவியை மணம் செய்து கொண்டு திரும்பி வரலாம். போதுமான அளவு முன்னேற்றம் அடையாமல், கல்வி அறிவு பெறாமல் ஒரு தாரமணம் மற்றும் விவாகரத்தின் தேவையை போதுமான அளவு உணராவிடில், அவர்களால் இத்தன்மை வாய்ந்த ஷரத்து ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. பல சந்தர்பங்களில் தட்டிக் கழிப்பதற்கே இட்டுச் செல்லும். ஆதலால் நீதி மன்ற நடவடிக்கைகளுக்கு ஊக்கமளிக்கக் கூடாது. மேலும் விவாகரத்து நடவடிக்கைகள் அடிக்கடி நடந்தால், கணிசமாக துன்பத்தை ஏற்படுத்தும்.

**மாண்புமிகு திரு. குர்ஷெத் லால்** (போக்குவரத்துத் துறை துணை அமைச்சர்) : ,விவாகரத்து அவ்வளவு மோசம் என்றால், முஸ்லீம் சட்டத்தில் விவாகரத்தை நீக்குவதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் ஆதரவு தருவாரா?

**திரு. நசிருத்தீன் அகமது :** பொறுக்குக் குழுவில் ஒரு உறுப்பினராக இருந்தும் இந்த விஷயம் முன்பு விவாதிக்கப்பட்ட போது மதிப்பிற்குரிய உறுப்பினர் அவையில் இருக்கவில்லை. அரைகுறையாக விவாதத்தில் பங்கெடுப்பதற்குப் பதில் அஞ்சல் அட்டையின் விலையை மேலும் உயர்த்துவதில் மதிப்பிற்குரிய உறுப்பினர் அக்கறை கொள்ள வேண்டுமென நினைக்கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் அவையில் இல்லாத போது இந்த விஷயம் விவரமாக ஏற்கனவே விவாதிக்கப்பட்டது.

**திரு. குர்ஷெத் லால் :** ''அஞ்சல் அட்டைகள்'' விஷயம் இதில் சம்பந்தப்பட்டுள்ளதா?

**திரு. துணை அவைத் தலைவர் :** அஞ்சல் அட்டை விஷயத்திலிருந்து நம்மைக் கத்தரித்து கொள்வது நல்லது.

**திரு. ராமநாத் கோயங்கா** (சென்னை : பொது) ஷரியத் சட்டத்தை மாற்ற தாங்கள் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

**திரு. துணை அவைத் தலைவர் :** தனிப்பட்டவர்களைக் குறிப்பிட்டுப் பேச வேண்டாம். அம்மாதிரியான ஒரு கூற்று எப்பொழுதும் மற்றொன்றிற்கு இட்டுச் செல்கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது: ஷரியத்** சட்டத்தை நீக்குவதென்பது நடைமுறையில் உள்ள சட்டத்தில் தலையிடுவதாகிறது. இந்துக்கள் மத்தியில் ஒரு தார மணமும் விவாகரத்தும் கொண்டு வருவது இன்று நிலவும் சட்டத்தில் குறுக்கிடுவதாகும். இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடு இதுவே. உண்மையில் ஏற்றுக் கொள்ளப்பட்ட சட்டத்தில் நீங்கள் தலையிடக் கூடாது. எனவே இது முஸ்லீம் சட்டத்துடன் ஒத்த தன்மை கொண்டது என்ற வாதம் பொருந்தாது.

**திரு.எச்.வி.காமத் :** எல்லாம் இருக்கிறது என்று அவர் ஏற்றுக் கொள்கிறாரா? அல்லது எதிலாவது ஒரு மாற்றத்தை அவர் விரும்புகிறாரா?

**திரு. துணை அவைத்தலைவர் :** மசோதாவில் மட்டுமின்றி மற்றவற்றில் மாற்றங்களை பற்றி அவை அக்கறை கொண்டிருக்கவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** மாற்றம் என்பது கோட்பாட்டிலளவிலான பிரச்சினை. சட்டத்தை மாற்றும் விஷயம் வரலாறு போலவே பழைமையானது. உண்மையில் மாற்றம் என்பதற்காகவே மாற்றங்களை விரும்பும் உளப்பாங்குடையோர் உள்ளனர். மாற்றம் வேண்டும் என்ற காரணத்திற்காக மட்டுமே அவர்கள் ஒரு மாற்றத்தைச் செய்வர். எந்த மாற்றத்தையும் ஒருபொழுதும் ஏற்றுக் கொள்ளாதவர்களும் இருக்கிறார்கள். ஏனெனில், எந்த மாற்றமும் ஒரு புதுமை. மக்காலேயின் ஒரு சிறந்த இலக்கிய வாசகத்தில் இது விவாதிக்கப்

படுகிறது; சிறந்த மூளைகள் இரு தீவிரங்களுக்கும் இடையேயான எல்லைக் கோட்டில் உள்ளன. எனவே மாற்றம் வேண்டும் என்பதற் காகவே, சட்டத்தில் ஒரு மாற்றத்தை ஏற்றுக் கொள்ளக் கூடாது. மேலும் எல்லாப் பரிசீலனைகளும் இருந்த போதிலும், பழைய சட்டத்தை அப்படியே கறாராகப் பின்பற்றுவதும் அதே போல் மோசமானது. காலத்தையொட்டி நடைபோட வேண்டும் என்பது கோட்பாடு. மறு பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமெனில், நீங்கள் உங்களுடன் மக்களை அழைத்துச் செல்ல வேண்டும். தார்மிக உரிமை பற்றியே இங்கு குறிப்பிடுகிறேன். சட்டப்படியான உரிமை நமக்கு உள்ளது. எந்தச் சட்டத்தையும் மாற்ற நமக்குப் போதுமான சட்டரீதியான உரிமை உள்ளது. அதே போல் நாம் விரும்பும் எந்தச் சட்டத்தை ஆக்கவும் நமக்கு உரிமை உள்ளது. இது ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கோட்பாடாகும். நான் ஐயம் ஏதும் எழுப்பவில்லை. ஒரு மாற்றத்தை ஏற்படுத்த உங்களுக்கு எந்த தார்மிக உரிமையும் உள்ளது. .....

**திரு. பாபு ராம்நாராயண் சிங் :** இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு கோடி மக்களைப் பாதிக்கும் ஒரு மாற்றத்தை அவர்கள் சம்மதமின்றி மேற்கொள்ள முடியுமா? எல்லா மாற்றங்களையும் எதிர்க்க இங்கு நான் வரவில்லை. பொது மக்கள் கருத்தால் அங்கீகரிக்கப்படாத எந்த மாற்றத்தையும் எதிர்க்கவே நான் இங்கு உள்ளேன். அவர்களின் ஒப்புதல் இல்லாமல் தீவிரமான மாற்றங்களைக் கொண்டு வர உங்களுக்கு எந்தத் தார்மிக உரிமை உள்ளது?

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி:** அவர்கள் சம்மதம் நமக்கு உள்ளது. நாம் அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறோம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அப்படியாயின் ஒரு மிக முக்கிய மான அரசியல் சாசனப் பிரச்சினையை நீங்கள் எழுப்புகிறீர்கள். அரசியல் சாசனத்தை தயாரிக்கும் நோக்கத்துடன்தான் இந்த அவை தேர்ந்தெடுக்கப்பட்டது.

**திரு. அவைத் துணைத் தலைவர்:** அரசியல் சாசன விஷயத்தைப் பொறுத்தவரை, அவைத் தலைவரின் தீர்ப்பு ஏற்கனவே உள்ளது என்று நினைக்கிறேன். இறையாண்மை கொண்ட அமைப்பு இது; எது பற்றியும் இது சட்டமியற்றலாம். மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு வேறு விஷயங்கள் இருந்தால் அவர் மேலும் பேசலாம்.

***திரு. நசிருத்தீன் அகமது:*** இந்த அவையின் அதிகாரத்தை நான் மறுக்கவில்லை; இந்து சமுதாயத்தை அல்லது முகமதிய சமுதாயத்தை சிதைக்கவோ, மதம் சம்பந்தப்படாத ஏதாவது ஒன்றாக அவற்றை உருவாக்கவோ நமக்கு உரிமை உண்டு. அந்த உரிமை ஒரு வினாடி கூட மறுக்க முடியாத ஒன்று. கேள்வி என்னவெனில், மக்கள் இந்தச் சட்டத்திற்கு பின்னால் உள்ளனரா என்பதே.

***மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:*** இல்லை, இல்லை.

***மதிப்பிற்குரிய வேறு சில உறுப்பினர்கள்:*** ஆம், ஆம்.

***திரு. நசிருத்தீன் அகமது:*** அவர்கள் இந்தச் சட்டத்திற்கு ஆதரவாக இல்லை என்று நம்புகிறேன். அவர்கள் அதற்கு எதிராக உள்ளனர். (***மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:*** 'அவர்கள் அதற்கு ஆதரவாக உள்ளனர்') அவர்கள் அதற்கு ஆதரவாக உள்ளனர் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? முக்கியத்துவம் வாய்ந்த இந்த விஷயம் வாக்காளர்கள் முன் வைக்கப்பட வேண்டும். அதுதான் அரசியல் சட்ட நடைமுறை. விஷயங்கள் குறிப்பாக வாக்காளர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டு அவர்களின் அனுமதி அளிக்கப்பட்டாலொழிய, அவற்றை சேர்ப்பதை தாம் ஒத்துக் கொள்ள முடியாது என்று நேற்று முன்தினம் திரு. ஓஸ்போர்ன் எங்களிடம் கூறினார். உண்மையில் அவர்கள் அத்தகைய எதையும் செய்யமுடியாது. வாக்காளர்களின் சம்மதமின்றி, அரசியல் சாசன ரீதியிலான நடவடிக்கைகளில் இறங்க தாங்கள் தகுதி பெற்றவர்கள் அல்ல என்று அவர்கள் கருதுகின்றனர். ஆனால் நாம் வாக்காளர்களின் கருத்தை அலட்சியப்படுத்தலாம் என்னும் அளவுக்கு முன்னேறியுள்ளோம்; எனவே, ஒரு சமயம், தாமதப்படுத்தும் முறை கையாளப்பட்டது. நோக்கத்தையே தோற்கடிப்பதே அதன் குறிக்கோள் என்று வாதிக்கப்பட்டது. ஏதாவது தேர்தல் நடந்தால், வாதிக்கப்பட்டது. ஏதாவது தேர்தல் நடந்தால், இந்துச் சட்டத் தொகுப்பு நிறைவேற்றப்பட மாட்டாது. இந்தக் கூட்டத் தொடரில் விவாதம் தலைகீழாக இருந்தது. வாக்காளர்கள் எங்கள் பக்கம் இருக்கிறார்கள், அவர்களின் சம்மதத்துடனேயே நாங்கள் இந்த மசோதாவைக் கொண்டு வந்தோம் என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் உண்மையில் அவர்களது ஒப்புதலுடனோ அல்லது அவர்களின் சம்மதத்துடனோ இந்த சட்ட மசோதா கொண்டு வரப்படவில்லை.

இந்தச் சட்டம் எப்படித் துவங்கியது? அன்னிய அரசாங்க அதிகாரத்தின் கீழ் அது வரையப்பட்டது; அப்பொழுது அது தனது உயிருக்காக போராடிக் கொண்டிருந்தது. ஆங்கில ஆட்சி முற்றிலுமாக அஸ்மித்துவிடும் அபாயம் இருந்தது. பிரிட்டிஷ்காரர்களுக்கு அது வாழ்வா, சாவா என்ற மிக நெருக்கடியான கட்டம். ஐயா, இத்தகைய சமயத்தில்தான் ராவ் குழுவை ரெஜினால்ட் மாக்ஸ்வெல் நியமித்தார். உலக யுத்த நிர்ப்பந்தத்தினால் இங்கிலாந்தின் வாழ்வே ஆபத்திலிருந்தபோது இது கருத்தரித்தது. மசோதா தயாரிக்கப்பட்ட சமயம் இடைக்கால அரசாங்கத்தின் சட்டத்துறை அமைச்சராக இருந்த ஜோகேந்திர நாத் மண்டலால் இது அறிமுகப்படுத்தப் பட்டது. அந்த சமயம் அழிவை உண்டாக்கும் போராட்டங்களால் நாடு சீர்குலைந்து கொண்டிருந்தது, ஏராளமான உயிர் நஷ்டமும் சமாதானத் திற்குப் பங்கமும் முன்என்றும் கண்டிராத அளவு ஏற்பட்டுக் கொண்டிருந்தன. தாம் அமைச்சராக இருப்பது தற்காலிகத் தன்மை கொண்டது என்பதை அவர் அறிவார். அப்பொழுது அவரது சிந்தனைகள் பாகிஸ்தான் மீதுதான் குவிந்திருந்தன. அந்த மசோதா மீது அக்கறை கொண்டிருக்கவில்லை. இத்தகைய சூழ்நிலைமைகளில் தான், அவையில் மசோதா முன்மொழியப்பட்டது. அச்சமயம் கருத்தளவிலிருந்த பாகிஸ்தான் ஏற்கனவே ஒரு யாதார்த்தமாகி விட்டது. அப்போதுதான் மசோதா சட்டப் பேரவையில் அறிமுகப்படுத்தப்பட்டது.

**திரு. துணை அவைத் தலைவர்:** உரை நிகழ்த்த காத்திருப்போர் பட்டியலில் பல பேர் இருப்பதை காண்கிறேன். மதிப்பிற்குரிய உறுப் பினர் ஏற்கனவே 1 1/2 நாட்கள் எடுத்துக் கொண்டுள்ளார். அவர் முடிக்கப் போவது எப்பொழுது? அது பற்றி அவருக்கு கருத்து ஏதாவது இருக்கிறதா?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இந்த அவையில் யாருக்கும் எந்தக் கருத்தும் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** சட்டத்துறை அமைச்சருக்குக்கூட கருத்து எதுவும் இல்லை. குறுக்கீட்டின் காரணமாக இந்தக் கூற்று எழுந்தது. இனி நான் கொஞ்ச நேரம் மட்டுமே எடுத்துக் கொள்வேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** எவ்வளவு நேரம்? இது பற்றி அவை அக்கறை கொண்டுள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** இந்த மசோதாவைப் பரிசீலிக்க எவ்வளவு அவகாசம் ஆகும் என்று தெரிந்து கொள்ள அவைக்கு உரிமை யுள்ளது;. பதில் எதுவும் இல்லை. எனவே நான் மிகவும் இக்கட்டான நிலையில் இருக்கிறேன்.

*பிற்பகல் 2.30 மணி வரை அவை ஒத்திவைக்கப்பட்டது.*

---

*சட்டப்பேரவை மதிய உணவு இடைவேளைக்குபின் பிற்பகல் 2.30 மணிக்கு மீண்டும் கூடியது. (அவைத் தலைவர் மாண்புமிகு திரு. ஜி.வி.மாவலங்கர்) தலைமை தாங்கினார்.*

---

**திரு.எச்.வி.காமத் :** அவையில் ''கோரம்'' இல்லையென்று தோன்றுகிறது.

**திரு. அவைத்தலைவர்:** ''கோரம்'' இருக்கிறது என்று நினைக்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, மதிய உணவுக்கு நாம் கலையும் முன், இந்த மசோதாவை நிறைவேற்றுவது இந்த அவைக்கு முறையாகும் என்பது பற்றி நான் கூறிக் கொண்டிருந்தேன். இந்த அவையின் அரசியல் சாசன ரீதியான அதிகாரத்தைப் பொறுத்தவரை, இந்த மாதிரியானச் சட்டத்தை நிறைவேற்ற அரசியல் சாசன ரீதியான தகுதி நமக்கு உள்ளது என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆனால், உண்மையில், நமக்குத் தார்மிக உரிமை உண்டா என்பதும், இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவது தார்மிக ரீதியாக முறையாக இருக்குமா என்பதும் தான் இங்கு கேள்வி. எது எவ்வாறிருப்பினும் இந்தச் சட்டத்தை ஒப்புக் கொள்வதற்கு நமது தொகுதிகள் நேரடியாகவோ மறைமுகமாகவோ இந்த அவைக்கு அதிகாரம் அளித்துள்ளனவா? இந்த மசோதாவுக்கு மக்கள் ஆதரவு இருப்பதாக மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் சொல்கிறார்கள். எனது உணர்வு என்னவெனில், மக்கள் இந்த மசோதாவுக்கு ஆதரவாக இல்லை என்பதே. ஏற்கனவே பதிவாகியுள்ள ஆட்சேபங்களின் எண்ணிக்கை அதிகம். சட்டப் பேரவை இலாகாவில் ஆட்சேபங்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன என நம்புகிறேன். அவற்றின் எண்ணிக்கை இவ்வளவு அதிகமாக இருப்பதால், அவற்றை வகைப்படுத்துவதோ, பதிவுப்பட்டியலில் பதிவு செய்வதோ, எந்த முறைப் படியான வகையிலும் கையாள்வதோ இயலாது. எதிர்ப்புகள் அபரிமிதமான அளவில் குவிந்து வருகின்றன. பொது மக்களின் உணர்வின் தீவிரத்தை அது எடுத்துக்காட்டுகிறது. கேள்வி என்னவெனில், ஒரு ஜனநாயக சமுதாயத்தில் உள்ள நாம், ஜனநாயக அடிப்படையில் நிறுவப்பட்ட ஒரு சட்டப் பேரவையில், பொது மக்களின் கருத்தை தெரிந்து கொள்ளாமல் இந்த சட்டத்தை நிறைவேற்ற வேண்டுமா

என்பதுதான். நான் ஏற்கெனவே எடுத்துக்காட்டியது போல் அதன் உரு வாக்கம் அன்னிய அரசாங்கத்தால் செய்யப்பட்டது. அது அப்பொழுது தன்னைப் பாதுகாத்துக் கொள்ளப் போராடிக் கொண்டிருந்தது; அதன் கவனம் மிகுதியும் வேறுபக்கம் இருந்தது. இடைக்கால அரசாங் கத்தின் அமைச்சராக இருந்தவரால் இது அவையில் சமர்பிக்கப் பட்டது. அந்த அமைச்சர் அப்பொழுது பாகிஸ்தானிக்கு போய்விடத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார். இந்த மசோதா மீது எத்தகைய அக்கறையும் அவர் கொண்டிருக்கவில்லை.

**திரு.எச்.வி. காமத் :** அவர் காலையில் கூறுயதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இந்தியா ஏராளமான முக்கிய பிரச்சினைகளைச் சமாளிப்பதில் பெரிதும் ஈடுபட்டிருக்கும்போது, இப்போதைய மசோதா மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரால் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அவரே ஒப்புக்கொண்டபடி இப்போதைய மசோதா போதுமான சிந்தனையின்றி சமர்ப்பிக்கப்பட்டிருப்பதாகவே தோன்று கிறது. அது பொறுக்குக் குழுவிற்கு அனுப்பப்பட்ட பொழுதுதான், அது முறையாக வரையப்படவில்லை யென்பதும் அதற்குத் திருத் தங்கள் தேவையென்பதும் தெரியவந்தது. இந்த மசோதா முக்கிய மானதா இல்லையா என்பது வேறு விஷயம். நெடுகிலும் அதற்குப் பல திருத்தங்கள் தேவைப்படுகின்றன என்பது சட்டத்துறை அமைச் சருக்குத் தோன்றியிருக்கிறது. எனவே இந்த மசோதாவை மறு வரைவு செய்யும் பணியில் அவரே இறங்கினார். அந்த குழு தயாரித்தது ''இந்துச் சட்டத் தொகுப்பு'' என்ற புத்தகம். மாற்றி அமைக்கப்பட்ட இன்றைய மசோதா அநேகமாக அதனை அப்படியே ஒத்திருக்கிறது. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தயாரித்த ''இந்துச் சட்டத்தின் சில கிளை களைத் திருத்தித் தொகுக்கும் மசோதா'' என்று இது பெயரிடப் பட்டுள்ளது.

திரு. ஜோகேந்திர நாத் மண்டலால் சமர்ப்பிக்கப்பட்ட மசோதா டாக்டர் அம்பேத்கரால் ஏனோதானோவென்று மாற்றி அமைக்கப் பட்டது. நான் வலியுறுத்திக் கூறும் விஷயம் என்னவெனில் இந்த மசோதா ஒரு பொழுதும் எந்தப் பரிசீலனையும் பெறவில்லை. இந்த மசோதாவை முன்மொழியும் முன் அரசாங்கம் எந்த ஆலோசனை யையும் பெறவில்லை. இந்த மசோதா முறையாக வரையப்பட வில்லை என்றும், அதை மொத்தமாக மாற்றி எழுத வேண்டிய தேவை உள்ளது என்றும், பெரும் அளவிலான விவரங்கள் மாற்றப்படும்

அவசியம் உள்ளது என்றும் தெளிவான உடனே மசோதாவை வாபஸ் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அதை வாபஸ் பெறுவதற்குப் பதிலாக, சட்டத்துறை அமைச்சர் ஏராளமான மாற்றங்களைச் செய்து புதிய மசோதாவை அறிமுகப்படுத்தினார். மசோதா ஒரு போதும் விரிவாகப் பரிசீலிக்கப்படவில்லை என்பதையே இது காண்பிக்கிறது. மசோதாவின் பிரதான பகுதியில் முக்கிய மாற்றங்கள் செய்வது அவசியம் என்று அரசாங்கம் நியாயமாகவே முடிவு செய்திருக்க வேண்டும். உண்மையில் ஏராளமான வசதிகளையும் ஆதாரங்களையும் கொண்டுள்ள அரசாங்கம் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. அவ்வாறே நாடும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

இப்பொழுது ஐயா, தற்போதைய அரசியல் நிர்ணயசபை ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

**திரு. தாஜாமுல் உசேன் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் அதே விஷயத்தை திருப்பித் திருப்பி கூறுகிறார்.

**திரு.அவைத் தலைவர்:** அவர் அதைச் சொன்னாரா என்பது எனக்குத் தெரியாது.

**திரு. நசிருத்தீன் அகமது:** அதை நான் துவக்கக் கூட இல்லை. இந்தச் சட்டத்தை நிறைவேற்றும் நோக்கத்திற்காக இந்த அவை தேர்ந்தெடுக்கப்படவில்லை.

**திரு. தாஜாமுல் உசேன்:** ஐயா, இதையேதான் அவர் சொன்னார் தாங்கள் அவையில் இல்லாத பொழுது.

**திரு. நசிருத்தீன் அகமது :** என் கருத்தைக் கூற அனுமதியுங்கள். இந்த வழியில் போக நாம் அதிகாரம் பெற்றுள்ளோமா என்பதே இங்குள்ள பிரச்சினை. இந்த அவையின் அதிகாரம் மறைமுகத் தேர்தலை அடிப்படையாகக் கொண்டது. நேரடித் தேர்தலால் அல்ல.

**திரு.எச்.வி. காமத் :** இந்த விஷயத்தைத்தான் அவர் முன்பு சொன்னார். துணை அவைத் தலைவர் இந்த விஷயம் குறித்துத் தீர்ப்பும் அளித்தார்.

**திரு. அவைத் தலைவர் :** அவர் சொன்னரா என்பது எனக்குத் தெரியாது; இதை மதிப்பிற்குரிய உறுப்பினருக்கே விட்டு விடுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, அதை விளக்கிக்கூற விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** விளக்கம் எதுவும் தேவையில்லை. அவர் அடுத்த விஷயத்திற்குச் செல்லலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** மதிய உணவுக்காக நாம் அப்பொழுது கலைந்தோம்.

**திரு. அவைத் தலைவர் :** விஷயம் தெள்ளத்தெளிவு என்று தோன்றுகிறது. அதை விவரிக்க வேண்டிய தேவை இல்லை. நேரடித் தேர்தல் மூலம் இந்த அவை தேர்ந்தெடுக்கப்படவில்லை, தேர்தல் நேரடியாக இல்லை, அது ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக அதாவது அரசியல் சாசனத்தை அமைப்பதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்த அவை இம்மாதிரியான சட்டத்தை இந்தக் கட்டத்தில் பரிசீலிக்கக் கூடாது. இதுதான் விஷயம். நீண்ட நேரம் பேச அவர் எண்ணம் கொண்டிருந்தால், அவரை ஆதரிப்பதற்கு என்னால் இயலாது.

**திரு.நசிருத்தீன் அகமது:** விஷயம் என்னவெனில், நான் துவங்கியவுடனே திரு. கிருஷ்ணசுவாமி பாரதி என் பேச்சில் குறுக்கிட்டார்....

**திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** தனிப்பட்ட முறையில் விளக்கம். ஐயா, அந்த சமயம் நான் வாய் திறக்கவே இல்லை.

**திரு. அவைத் தலைவர் :** ஒரு குறிப்பிட்ட உறுப்பினர் ஒரு குறிப்பிட்ட விஷயத்தை உறுதிப்படுத்துகிறார் அல்லது மறுக்கிறார் என்பது உண்மையை எவ்வகையிலும் பாதிக்காது. அவருக்கு அதிகாரம் உள்ளதா எனில் உள்ளது. அல்லது அவருக்கு இல்லையா. ஓர் உறுப்பினர் இப்படி அப்படிப் பேசுவது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. விவரங்களுக்குச் செல்லாமல் அவர் கருத்தை அவர் சொல்லட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** விஷயம் என்னவெனில் அது அவ்வளவு தெளிவானதல்ல.

**திரு. அவைத் தலைவர் :** அது தெளிவாக உள்ளது.

**திரு. நசிருத்தீன் அகமது :** இல்லை ஐயா, திரு. பாரதிக்கு அது அவ்வளவு தெளிவாக இல்லை.

**திரு. அவைத் தலைவர் :** ஒப்புக்கொள்ள மறுப்பவரை ஒப்புக் கொள்ள வைக்க மதிப்பிற்குரிய உறுப்பினர் கவலைப்பட வேண்டிய தில்லை. இந்த அவை முழுவதுக்கும் அவர் பேசுகிறார். ஓரளவு புரிந்து கொள்ளும் திறமைகொண்ட நிலையில் உள்ள உறுப்பினர்களைக் கொண்டது இந்த அவை என்பதை அவர் தெரிந்துகொள்ளவேண்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** புரிந்து கொள்வதை நான் மறுக்க வில்லை. மனதை மூடிக்கொள்வது என்பது வேறு விஷயம். அதுதான் கஷ்டம். வாதத்தை ஏற்றுக் கொள்வதற்கு சிலர் விருப்பம் கொள்ளாமல் இருக்கின்றனர்.

**திரு. அவைத் தலைவர் :** ஏற்றுக் கொள்ளும்படி அவர் களைச் செய்ய முடியாது. அவர்களை ஏற்றுக் கொள்ளும்படி செய்ய நமது நேரத்தை நாம் எடுத்துக் கொள்ள வேண்டாம். மதிப்பிற்குரிய உறுப்பினர் அடுத்த விஷயத்தை எடுத்துக் கொள்ளட்டும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனவே, இந்தச் சட்டத்தை நிறை வேற்ற நமக்கு தார்மிக அதிகாரம் இல்லை என்பதை தாங்கள் தயவு செய்து பரிசீலியுங்கள். அரசாங்கம் ஒரு மசோதாவை வரைந்து பின்பு அதைக் கருத்துக்காக சுற்றுக்கு அனுப்பியது. இந்தச் சட்டக் குழு அறிக்கையின் இணைப்பு II பக்கம் 41ஐக் குறிப்பிடுகிறேன். ''ராவ் குழு உருவாக்கிய மசோதா சுற்றுக்கு அனுப்பப்பட்டது. ஏராள மான பொதுமக்கள் அமைப்புகளுக்கும் சக்திவாய்ந்த மற்றும் செல்வாக்குள்ள தனி நபர்களுக்கும் அனுப்பப்பட்டு அவர்களின் கருத்துக்கள் கோரப்பட்டன.'' 1944 ஆகஸ்ட் 5ம் தேதியிட்ட அறிவிப் பில் கோரப்பட்டுள்ள பொதுமக்கள் எழுத்து மூமாகவோ நேரடி யாகவோ அளிக்கும் கருத்துக்களின் வெளிச்சத்தில் வரைவை மாற்றி யமைக்க சட்டக்குழு விரும்புகிறது என்பது மிகத் தெளிவாக கூறப் பட்டது. இத மிக முக்கியமானது. இன்றைய விஷயத்தை வெளிக் கொண்டுவர இது ஒரு கருவியாகும். பொது மக்களின் கருத்துக்களை அறிய மசோதா சமர்பிக்கப்பட்டது. பொதுமக்களின் கருத்திற்கேற்ப மசோதா மாற்றி எழுதப்படும் என்று தெளிவாகக் கூறப்பட்டது. பொது மக்களின் கருத்து யாது? பொது மக்கள் கருத்து ''இந்த சட்டக் குழு விற்கு சமர்ப்பிக்கப்பட்ட எழுத்துமூலமான அறிக்கை - தொகுப்பு I மற்றும் IIல்'' கொடுக்கப்பட்டிருந்தது. அவையின் உறுப்பினர்களால் அல்லது பல உறுப்பினர்களால் பொதுமக்களின் இந்தக் கருத்து ஒருபோதும் போதுமான அளவு பரிசீலிக்கப்படவில்லை என்று நான் கருதினேன். கருத்துக்கள் பெறப்பட்டதும் அவை பகுத்துப் பார்க்கப்

பட்டன; அடுத்து வாய்மூலமான சாட்சியங்களும் வரவேற்கப் பட்டன; பெரும் எண்ணிக்கையில் சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். ''1945ல் இந்து சட்டக் குழுவுக்கு அளிக்கப்பட்ட வாக்குமூலங்கள்'' என்பதில் அதைக் காணலாம். படித்துப் பார்த்தால் கோரப்பட்ட பொதுமக்களின் கருத்து பெரும்பான்மையாக இந்துச் சட்டத் தொகுப் பிற்கு எதிராக உள்ளதைக் காணலாம். அப்படியிருக்கும்போது என்ன நடந்துள்ளது? இந்துச் சட்டக் குழு பொது மக்களின் கருத்துக்கு ஏற்ப அல்லாமல் தனது சொந்தக் கருத்துக்கேற்ப மசோதாவை இங்கும் அங்கும் மாற்றி அமைத்துள்ளது.

இந்த சாட்சியத்தின் தாக்கம் பற்றி பொறுக்குக் குழு உறுப் பினரும் கல்கத்தா உயர் நீதிமன்றத்தின் முன்னாள் நீதிபதியுமான திரு. டி.என். மிட்டர் கவனமாகப் பகுப்பாய்வு செய்து தமது மாற்றுக் கருத்தை விரிவாக வெளியிட்டுள்ளார். இந்த விஷயம் பற்றி நான் பேச விரும்பவில்லை; ஆனால் பல்வேறு தலைப்புகளில் அவர் பகுத்தாய்வு செய்துள்ளார்; அதாவது இத்தகைய ஒரு சட்டத் தொகுப்பு நமக்கு வேண்டுமா, வேண்டா, திருமணச் சட்டம் மாற்றப்பட வேண்டுமா, விவாகரத்து இருக்க வேண்டுமா முதலான கருத்துக் களையும் சாட்சியங்களையும் சாதகமானவை மற்றும் எதிர்ப்பானவை என்று ஒவ்வொரு தலைப்பிலும் அவர் பகுத்தாய்வு செய்துள்ளார். அவரது அறிக்கை அவையின் கவனமான பரிசீலினக்குத் தகுதி வாய்ந்தது. பொருள்களுக்கு ஏற்பவும் மாகாணங்கள் வாரியாகவும் கருத்துக்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. டாக்டர் டி.என். மிட்டரின் கூற்றுப்படி, சாட்சியங்களின் விளைவு ஒவ்வொரு விஷயத்திலும் சட்டத் தொகுப்பு, விவாகரத்து நடவடிக்கைகள் மற்றவை பற்றிய பெரும்பாலோரின் கருத்து எதிர்ப்பாக இருந்தது. சாட்சியங்களும் பெரும்பான்மையாக மசோதாவின் கோட்பாடுகளுக்கு எதிராக இருந்தன. இந்தச்சட்ட குழுவின் அறிக்கை ஒரு பெரும்பான்மைக் கருத்தின் அறிக்கையே. அதை டாக்டர் டி.என். மிட்டர் நிச்சயமாக எதிர்த்தார். மற்றவர்கள் மூல மசோதாவிற்கு ஆதரவாக நின்று, இங்கும் அங்கும், பொது மக்கள் கருத்துக்கு ஏற்ப அல்லாமல் தங்கள் கருத்துப்படி திருத்தங்கள் செய்தனர். எனவே, இந்த மசோதா பொது மக்களின் கருத்தையும் மீறி உருவாக்கப்பட்டது என்று குற்றம் சாற்றுகிறேன். எனது வாதம் இதை அடிப்படையாகக் கொண்டது. பொது மக்களின் கருத்து இந்த மசோதாவுக்கு ஆதரவாக உள்ளது என்று திரு. கிருஷ்ணசுவாமி பாரதி கூறிய போதிலும், பொதுமக்கள் கருத்து அதற்கு எதிராகத்தான் உள்ளது எனத் துணிந்து கூறுகிறேன்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் :** கேள்வி.

**திரு. தாஜாமுல் உசேன்:** இல்லை. இல்லவே இல்லை. அது மசோதாவுக்கு ஆதரவாக.

**திரு. நசருத்தீன் அகமது:** எழுத்து மூலமான கருத்தைப் பொறுத்தவரை, அது நிச்சயமாக மசோதாவுக்கு எதிராக உள்ளது. எனவே ஒரு ஜனநாயக அரசாங்கம் செய்திருக்க வேண்டியது போல், பொது மக்களின் கருத்து முறையாக கலந்தாலோசிக்கப்படவில்லை எனக் கூறுகிறேன். உண்மையில் இந்த மசோதா ஜனநாயகத்திற்கு ஒரு மறுப்பாகும்; இன்று நிலவாத சூழ்நிலைகளில் இது எண்ணப் பட்டது. ஒரு முழுமையான ஜனநாயகம் இன்று செயல்படுகிறது. சட்டமியற்றும் யோசனைகளை நடைமுறைப்படுத்தும்போது, பொதுமக்களின் கருத்து கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். எனவே, எழுத்துப்பூர்வமான கருத்தைப் பொறுத்தவரை, அது மசோதா வுக்கு எதிராக உள்ளது எனக் கூறுகிறேன்; எழுத்து மூலம் அளிக்கப் படாத கருத்து என்ன? உங்கள் அலுவலகத்திலேயே பெரும்பாலான எண்ணிக்கையில் கண்டனம் தெரிவிக்கப்பட்டதை நாம் பார்க்கிறோம். பெரும் எண்ணிக்கையில் கூட்டங்கள் நடப்பதுபற்றிக் கேள்விப் படுகிறோம். உண்மையில் நகரத்தின் மையப் பகுதியிலேயே நாங்கள் கூட்டங்கள் நடத்தினோம். அவற்றில் ஏராளமானவர்கள் கலந்து கொண்டனர். மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பலரும் மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரும் அழைக்கப்பட்டனர். சில உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். ஆனால் அமைச்சர் கலந்து கொள்ளவில்லை.

**திரு. பாபு ராம்நாராயண் சிங்:** கலந்து கொள்ள அவருக்குத் துணிச்சல் இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** கலந்து கொள்வது அவசியம் என அவர் நினைக்கவில்லை. ஏனெனில் இந்த மசோதாவைப் பொறுத்த வரை, மக்கள் கருத்து அவருக்கு ஓர் அளவுகோலாகவோ, அல்லது வழிகாட்டியாகவோ இல்லை என்று தோன்றுகிறது. உண்மையில் மக்களின் கருத்து பற்றி ஒரு தெளிவான பகுத்தாய்வை அளித்திருந்தார். டாக்டர் டி.என். மிட்டர் அவர் கூறியதை மறுத்துக் கூற அவர் முன்பு கூறியதைத் தாம் மேற்கோள் காட்டுவதாக மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் கூறினார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் என்ன சொன்னார்? நான் புரிந்து கொள்ளவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** டாக்டர் டி.என். மிட்டரின் இன்றைய அறிக்கையை மறுதலிக்க அவரது முந்திய எழுத்துக்களி லிருந்து மேற்கோள்காட்டலாம் என அவர் கூறினார். அவர் முன்னர் எழுதியதையும் இப்போது எழுதியதையும் நான் பரிசீலனை செய் துள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவர் பிந்தி எழுதியதை நான் பார்க்கவில்லை. அது என்ன?

**திரு. நசிருத்தீன் அகமது :** அவர் பிந்தி எழுதியது அறிக்கை யில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அதைத் தாங்கள் பிந்தி எழுதியதாகக் கூறுகிறீர்களா? இதற்குப் பிந்திய ஒன்று என்று நினைத்தேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** பிரச்சினை என்னவென்றால் அவர் முந்தி எழுதியது என்ன, இப்பொழுது எழுதியது என்ன, அதில் மாற்றம் ஏதும் உள்ளதா, அப்படியாயின் அந்த மாற்றம் யாது? கொஞ்ச காலத்திற்கு முன்பு அவர் ஒரு பிரசுரத்தை எழுதியிருந்தார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஒரு பிரசுரமா?

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு நூல்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சிறிது முன்பு ஒரு பிரசுரம் என்று தாங்கள் கூறினீர்கள் என்று நினைத்தேன்.

**திரு. நசிருத்தீன் அகமது :** என்ன பெயர் வேண்டுமானாலும் கொடுத்துக் கொள்ளுங்கள். பெயர் பற்றி நான் சர்ச்சை செய்யவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த நூல் எவ்வளவு பெரியது, அதுபற்றி ஏதாவது தங்களுக்குக் கருத்து உள்ளதா?

**திரு. நசிருத்தீன் அகமது:** நான் குறுக்கு விசாரணைச் செய்யப்பட வேண்டுமெனில் என்னை சாட்சிக் கூண்டில் வைக்க வேண்டும். அப்பொழுது நான் பதில் கூறுவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவற்றைப் பற்றிக் குறிப்பிடும் போது உண்மைகளை எனது நண்பர் கண்டறிந் தாரா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அது ஒரு பிரசுரம் என்றால் நான் மிகவும் ஆச்சரியப்படுவேன். அந்த நூல் சுமார் 700 பக்கங்கள் கொண்ட ஒரு நூலாகும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நூலின் பக்கங்கள் முக்கியமல்ல, அதில் கூறப்பட்டுள்ள கருத்துதான் முக்கியமானது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஆம். அந்தக் கருத்து என்ன?

**திரு. நசிருத்தீன் அகமது:** அதில் கூறப்பட்ட கருத்து என்ன வெனில் இந்து பெண்களின் உரிமைகள் மேலும் நன்கு பாதுகாக்கப் பட வேண்டும். அவர்களுக்கு மேலும் அதிக உரிமைகள் அளிக்கப்பட வேண்டும். மாண்புமிகு அமைச்சருக்கு எல்லாவற்றையும் நான் திருப்பிக் கூற முடியாது. ஏனெனில் அவைக்குச் சிரமமளிக்க நான் விரும்பவில்லை. மேலும் நான் இப்பொழுது செய்வதைவிட அதிகம் உரத்த குரலில் பேச விரும்பவில்லை. இன்றைய நிலையில் அவர் மசோதவை எதிர்க்கிறார். அவரது முந்திய நூலை மாண்புமிகு அமைச்சர் கவனத்தில் கொண்டிருந்தார் என்பதும், பெரும்பாலான உறுப்பினர் கள் அதைச் சாதகமாக எடுத்துக் கொண்டனர் என்பதும் தெளிவு. கருத்து மாற்றத்திற்கான காரணத்தையும் டாக்டர் டி.என். மிட்டரே அளித்துள்ளார் என்பதைக் கூறிக் கொள்கிறேன். காரணத்தோடு கூடிய கருத்து மாற்றம் என்பது குற்றமானால், தவறு என்று நிரூபிக்கப் பட்டக் கருத்தைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவது அதைவிட மோசமான குற்றமாகும். பெண்களுக்கு அதிக உரிமைகள் வழங்கப் பட வேண்டும் என்பதற்கு ஆதரவான ஒரு கருத்தை டாக்டர் மிட்டர் தெளிவாக வெளிப்படுத்தினார். இணைப்பு II ல் உள்ள வாசகத்தை நான் படித்தேன். பொது மக்கள் கருத்திற்கேற்ப மசோதா மாற்றி அமைக்கப்படும் என்ற வாக்குறுதி அளிக்கப்பட்டுள்ளது அதில். அதுதான் டாக்டர் மிட்டரின் சிரமம். அவரது சொந்தக் கருத்து இந்திய நாட்டு பொதுமக்கள் கருத்திற்கு நிச்சயமாக எதிராக இருந்தது. தமது கருத்து மக்கள் கருத்துக்கு மேலும் முன்னால் உள்ளது என அவர் கண்டார்.

எனவே, பொதுமக்கள் கருத்திற்கேற்ப சட்டம் மாற்றியமைக்கப் படும் என்ற அரசாங்கத்தின் உத்தேசத்தை வெளியிடும் அறிவிப்பின்

இந்த வாசகத்தைக் குறிப்பாகப் பார்த்தார். மசோதாவிற்கு எதிராகப் பெரும் அளவில் அபிப்பிராயம் உருவாக்கியிருப்பதைக் கண்டு தமது கருத்தை மாற்றிக் கொண்டார். இந்தச் சட்டமியற்றல் நாடு முற்றிலும் யும் பாதிக்ககூடியது. இக்காரணம்தான் மசோதாவிற்கு எதிரான நிலையை எடுக்க அவரைத் தூண்டியது. ஏனெனில் இது பொதுமக்கள் கருத்து. பொது மக்கள் கருத்துக்கு மதிப்பளித்து ஒருவர் தமது சொந்தக் கருத்தைக் கைவிடுவது தர்க்கரீதியற்றதல்ல. மாண்புமிகு அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் கூட தங்கள் சொந்தக் கருத்துக்களைக் கொண் டிருக்கிறார்கள் என நம்புகிறேன். பொது நன்மைக்காக அவற்றை அவர்கள் கீழ்ப்படுத்தியாக வேண்டும். தங்கள் சொந்த அபிப்பிராயத் திற்கு எதிராக அமைச்சர்கள் பேசுவதை நாம் அடிக்கடி கேட்டிருக் கிறோம். அது முறையற்றது அல்லது தவறு ஆகாது. இது முழுவதும் இயல்பானது. பொதுமக்கள் கருத்தை தெரிந்து கொண்டு அதற்கு உகந்தாற்போல் மசோதாவை மாற்ற அல்லது திருப்பி எழுத வேண்டு மென்ற மாபெரும் பொது நலப் பொறுப்பை இங்கு டி.என். மிட்டர் ஏற்றுக் கொண்டார். நான் கேட்கிறேன்: டி.என். மிட்டர் தமது கருத்தை மாற்றிக் கொண்டதில் முறையற்றது ஏதாவது உள்ளதா? ஒரு முக்கிய மானப் பணியை அவர் ஏற்றுக் கொண்டார். அது என்ன? பொது மக்களின் கருத்தைக் கண்டறிவதே அந்தப் பணி. பொதுமக்கள் கருத்து மசோதாவுககு எதிராக இருந்தது. சாட்சியம் எடுக்கப்பட்டபோது அவரே அங்கு இருந்தார். வாய் மூலம் அளிக்கப்பட்ட சாட்சியத்தின் ஒரு வாசகம் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. அது சிறப்பாகக் குறிப் பிடப்பட்டிருந்தது. லாகூரில் குழு சாட்சியங்களை எடுத்துக் கொண் டிருந்த போது.....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கருப்புக் கொடி களால் அவர்கள் வரவேற்கப்பட்டார்களா?

**திரு. நசிருத்தீன் அகமது :** அதற்கும் மேலே. பெரும் எண் ணிக்கையில் மாதர்கள் - ஆயிரக்கணக்கில் - சரியான எண்ணிக்கை எனக்கு நினைவில் இல்லை - கறாரான எண்ணிக்கை பற்றி அவைக்குத் தொந்தரவு அளிக்க நான் விரும்பவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** எந்த ஆண்டில்?

**திரு. நசிருத்தீன் அகமது :** விசாரணை சம்பந்தமாக 1945ல் அவர்கள் லாகூர் சென்றனர். சாட்சியம் பெறப்படுவதை ஏராளமான மகளிர் முற்றிலுமாகத் தடுத்தனர். அவர்கள் கூறினார்கள்: ''நாங்கள்

இதை விரும்பவில்லை. அது எங்கள் நன்மைக்கு உதவாது. எங்கள் கருத்துக்கு எதிரானது அது.''

**திரு. பாபு ராம்நாராயண் சிங் :** சபாஷ், சபாஷ்!

**திரு. நசிருத்தீன் அகமது :** உண்மையில் நிலைமை மிக மோசமாக இருந்தது. ஆயிரக்கணக்கான மகளிர் மசோதாவை எதிர்க்கும் காட்சியை அவர் எதிர் கொண்டார். அவர்களையும் அவர்களின் உணர்வுகளையும் அடக்குவது கஷ்டம் என்பதால், மேற்கொண்டு பணியை தொடர முடியவில்லை. சாட்சியம் முற்றிலுமாக நிறுத்தப்பட்டது. இதுதான் அவர் குறிப்பிட்டிருந்தது. அவர் முரணான நிலையை எடுத்ததாகக் குற்றம் சாட்டப்பட்டால், ஓரளவாவது நேர்மையாக இருந்தார் என்று அவரைப் பாராட்டலாம்.

**திரு. பாபுராம் நாராயண் சிங் :** சபாஷ்! சபாஷ்!

**திரு. நசிருத்தீன் அகமது :** ஒரு கருத்து தவறு என்று நிரூபிக்கப்பட்ட பின்பும் அந்த கருத்தையே விடாப்பிடியாகக் கொண்டிருப்பது முரணற்றதா? இது முரணானது; இது விடாப்பிடியானது. இது நல்லதுமல்ல, நியாயமானதுமல்ல. ஆண்கள் கருத்து மட்டுமல்லாமல் பெண்கள் கருத்தும் முற்றிலும் தனக்கு எதிராக இருப்பதைக் கண்ட இந்த கனவான். தாமும் அதை எதிர்ப்பதாகக் கூறினார். எப்பொழுதோ கூறப்பட்ட ஒருவருடைய சொந்தக் கருத்தை மேற்கோள் காட்டுவது நியாயமானதாக, அல்லது முறையானதாக இருக்குமா? அப்படியாயின், மாண்புமிகு அமைச்சரின் உரைகளிலிருந்தும் எழுத்துக்களிலிருந்தும் அவருக்கு எதிராக மேற்கோள் காட்டமுடியும். அது நியாயமாகாது. என்ன எழுதப்பட்டாலும் அல்லது பேசப்பட்டாலும் அது சூழ்நிலைக்கேற்ப எடுத்துக் கொள்ளவேண்டும். பொதுமக்கள் நன்மைக்காக நாம் பல சமயங்களில் செயல்பட வேண்டிவரும். அந்த நோக்கத்திற்காக நாம் சொந்தக் கருத்தை விட்டுவிட வேண்டும். எனவே மக்களின் கருத்திற்கு உகந்ததாக டாக்டர் மிட்டர், தம் சொந்தக் கருத்தை விட்டுவிட்டதன் மூலம் தேசபக்த உணர்வோடும் துணிச்சலாகவும் நடந்து கொண்டார். இதில் டாக்டர் மிட்டர் தமது தேசபக்தக் கடமையை ஆற்றினார். இது குறித்து எந்தப் பழியையும் அவர்மீது சுமத்தக்கூடாது.

இதே சமயம் மரியாதைக்குரிய மற்ற உறுப்பினர்கள் என்ன செய்தார்கள்? அவர்களைக் கடுமையாக சாட நான் விரும்பவில்லை.

ஆனால், பொதுமக்கள் கருத்தின் வெளிச்சத்தில் மசோதா பரிசீலிக்கப்படும் என்று அவர்கள் வாக்குறுதி அளித்துவிட்டு, தங்கள் சொந்த கருத்திலேயே நின்றனர். உண்மையில் தமது கருத்தை மாற்றிக் கொண்டதற்காக டாக்டர் மிட்டரைக் கேலி செய்தனர். ஐயா, நமது கருத்துக்களை ஒருபொழுதும் மாற்றிக் கொள்ளக் கூடாதா? அப்படியாயின் மனித சமுதாயம் விவேகமான பாதையிலிருந்த விலகிப்போய்விடும். நாம் நமது கருத்துகளை மாற்றிக் கொள்ள வேண்டும்.

பிற்பகல் 3 மணி

**திரு. அவைத் தலைவர் :** அமைதி, அமைதி மதிப்பிற்குரிய உறுப்பினர் பொது கோட்பாடுகள் போன்ற விஷயங்களை அவசியமின்றி பேச வேண்டியதில்லை என நான் அவருக்குக் கூறலாமா? தான் கூற வந்த விஷயத்தின்பால் அவையின் கவனத்தை ஈர்த்து அடுத்த விஷயத்திற்கு அவர் செல்லவேண்டும். இவ்வாறு அவர் தொடர்ந்து உரையாற்றிக் கொண்டிருந்தால் - அவர் இப்பொழுது இரண்டு நாட்களாகப் பேசியுள்ளார் - விவாதத்திற்கு முடிவே இருக்காது. இம்மாதிரியே அவரை தொடர்ந்து அனுமதிக்க நான் விருப்பப்படவில்லை. ஒரு நியாயமான நேரத்திற்குள் அவர் தமது உரையை ஒரு முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். மேலும் 15 நிமிஷங்கள் போதுமானது என்று நினைக்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** தங்கள் முடிவுக்கு நான் தலை வணங்குகிறேன். ஐயா, இந்த 15 நிமிஷங்களும் முற்றிலுமாக என்னுடையதாக இருக்கும் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** ஆம் 3-15 மணிக்கு அவர் முடிக்கலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அடுத்து, நாம் ஒரு ஜனநாயக அமைப்பு என்ற உண்மையை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஒரு ஜனநாயக அமைப்பாக நாம் செயல்பட்டு வருகிறோம். நமது சமுதாயத்திற்கு ஜனநாயகம் பொருத்தமற்றது என்று நாம் கூற முடியாது. ஜனநாயகம்தான் நம்மை இந்த நிலைக்கு உருவாக்கியது. பிரிட்டிஷ் அரசாங்கத்திலிருந்து அதிகாரத்தை பெற ஜனநாயகம் நமக்கு உதவிற்று. நமது அரசியல் சாசனத்தை உருவாக்க ஜனநாயகம் நமக்கு அதிகாரம் வழங்கிற்று. இதே போல் இந்துச் சட்ட விஷயத்திலும் ஜனநாயகம் தனது நலன்களைப் புரிந்து கொள்வதில் போதிய அறிவாற்றலும் திறமையும் பெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை. எனவே பொதுமக்கள் கருத்தை அலட்சியப்படுத்துவதோ, தவிர்ப்பதோ,

மீறுவதோஇருக்கக்கூடாது. பொது மக்கள் கருத்தை அறிந்து கொள்வதில் தீங்கு என்ன இருக்கிறது? உண்மையில், மசோதா சிதைக்கப்பட்டுள்ளது என்று கூறுகிறேன். அதில் இடைச்செருகல் செய்யப்பட்டுள்ளது. நேர்மையற்ற இடைச் செருகல்கள் இருக்கின்றன என்று இதற்குப் பொருள் அல்ல. ஆனால், நேர்மையான இடைச் செருகல்களின் எண்ணிக்கை குறைந்தது அல்ல. பைபிளிலும் இடைச் செருகல்கள் - நேர்மையான இடைச் செருகல்கள்- இருந்துள்ளன. இதே போல் மசோதாவிலும் இடைச் செருகல்கள் இருந்தன என்று கூறுகிறேன். என்றாலும், கணிசமான மாற்றங்கள் எதுவும் இருக்காது என்ற உத்திரவாதத்துடன், பொறுக்குக் குழுவுக்கு மசோதா அனுப்பப்பட்டது. அதில் மேற்கொள்ளப்பட்ட மாற்றங்கள் உறுப் பினர்களின் பார்வைக்கு வந்தது. என்றாலும், ஐயா, எவர் உதவியும் இல்லாமல் எல்லா மாற்றங்களையும் கவனிப்பது எவர் ஒருவருக்கும் சாத்தியமானதா? நடைமுறைக்கு உட்பட்டதா? உண்மையில் எல்லா மாற்றங்களையும் கவனத்தில் கொள்வது சாத்தியமானதல்ல. இலாகா மசோதா மூலமசோதாவின் மறுபதிப்பு மட்டுமே என்றும், அதில் எந்த கணிசமான மாற்றமும் செய்யப்படவில்லை என்றும் பொறுக்குக் குழுவிற்குக் கூறப்பட்டது. அதை அப்படியே பரிசீல னைக்கு எடுத்துக் கொள்ளும்படி கோரப்பட்டது. எனவே, மாற்றங் களைத் தங்கள் கவனத்தில் கொண்டுவரவும் அவற்றை பரிசீலிக்கவும் அவர்கள் தவறிவிட்டனர். அது அவர்களின் தவறு அல்ல. இத்தகைய சூழ்நிலைகளில், பொறுக்குக் குழு உறுப்பினர்கள், அவர்களால் சாத்தியமான அளவு முயன்றும், உணர்வு பூர்வமாக இல்லாமலே உத்திரவாதத்தின் காரணமாக பல முக்கிய மாற்றங்களை கவனிக்கத் தவறிவிட்டனர். பின்பு, ஐயா, இது எப்படியாயினும், இவ்வளவு அதிகம் மாற்றங்கள் இருந்தால் இந்த மாற்றங்கள் கணிசமானவையாக இருந்தால், மீண்டும் பிரசுரிக்கத் தேவைப்படும் அளவுக்கு மாற்றம் செய்யப்படவில்லை என்று அளிக்கப்பட்டுள்ள உத்திரவாதம் வழக்கமான உத்திரவாதம் மட்டுமே. நிலையாணை 41(5) ன் கீழ் மறுபடியும் பிரசுரிக்க தேவைப்படும் அளவுக்கு மசோதா மாற்றப்படவில்லையென்றும், பொறுக்குக் குழு திருத்தம் செய்தபடி மசோதா நிறைவேற்றப்படலாம் என்றும் அவர்கள் கூறினர். இது வழக்கமாக அளிக்கப்படும் சான்றிதழ். எல்லாவித அக்கறையுடன் நான் கேட்கிறேன். செய்யப்பட்ட மாற்றங்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ள நிலையில், மசோதா கணிசமானஅளவு மாற்றப்படவில்லை என்று கூறப்படுகிறதா? மூலமசோதா மீது பொது மக்களின் கருத்தை நாம் பெற்றோம். பொது மக்கள் கருத்து பெறப்பட்டபோது அந்தக் கருத்து அதற்கு எதிராக இருந்தது. எனவே, பொது மக்கள் கருத்தை நாம் கண்டறிய வேண்டும்.

மேலும் பல்வேறு மாகாண அரசாங்கங்களுக்கு அவற்றின் கருத்தறிய அனுப்பப்பட்டது. பல்வேறு மாகாண அரசாங்களின் கருத்து அவையில் குறிப்பிடப்படக் கூடவில்லை. அவை தொகுக்கப்பட்டு உறுப்பினர் களுக்கு அனுப்பப்பட்டன. எனினும் வங்காள அரசாங்கத்தின் கருத்தோடு மட்டும் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறேன். வங்காளத்தில் எதிர்ப்பு மிக அதிகம் என்று எத்தகைய பயமுமின்றி அடித்துக் கூறுகிறேன். **மிதாக்ஷரா** வாரிசுரிமை முறைமையை நீக்கிவிட்டு குடும்ப வாழ்க்கை என்ற அவர்களின் தத்துவத்தை ஏற்றுக் கொண்டு, வங்காளத் திற்கு மரியாதை செய்யத் தாங்கள் உத்தேசித்திருக்கிறீர்கள். இதற்கு வங்காளத்தில் மிக அதிக எதிர்ப்பை நீங்கள் சந்திப்பீர்கள்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** ஆட்சேபம் எல்லா இடத் திலிருந்தும்தான் வருகிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** நிச்சயமாக, ஒவ்வொரு இடத் திலிருந்தும் ஆட்சேபம் வருகிறது. ஆனால் மிக அதிக ஆட்சேபம் வங்காளத்திலிருந்துதான் கிளம்புகிறது. அது மிக விடாப்பிடியானது, ஆதார அடிப்படையிலானது. கல்விகற்ற மற்றும் பண்பாடுடைய பெண்கள் உட்பட, வங்காளம் முழுவதிலும் இந்த மசோதா விரும்பப் படவில்லை என்பது தெள்ளத் தெளிவு. உண்மையில், அமரர் அசுடோஷ் முகர்ஜியின் துணைவியார், டாக்டர் முகர்ஜியின் தாயார் லேடி ராணி முகர்ஜி போன்ற ஏராளமான இதர பெண்மணிகள் இந்த முயற்சியை எதிர்க்கின்றனர்.

**டாக்டர் மனோ மோகன் தாஸ் :** மற்றப் பெண்மணிகள் யார்? அவர்களின் பெயர்களைக் கூற முடியுமா?

**திரு. நசிருத்தீன் அகமது:** விரைவில் முடிக்க வேண்டுமென்று அவைத் தலைவரின் வேண்டுகோளை நான் மதிக்க வேண்டும். மதிப்பிற் குரிய என நண்பருக்கு அவைத் தலைவரின் வேண்டுகோளுக்கு மேலாக முன்னுரிமை நான் கொடுக்க முடியாது. ஐயா, அறிக்கையில் பெயர்கள் உள்ளன. அவர்களின் பெயர்களைக் குறிப்பிடும்படி கோரும் எனது மதிப்பிற்குரிய நண்பரின் வேண்டுகோளைப் பார்த்தால் அதை அவர் படிக்கவில்லை என்பதையே காட்டுகிறது. இந்தக் கருத்துத் தொகுப்பு படிக்கப்படவில்லை என்பது அனுதாபப்பட வேண்டிய விஷயம். அறிக்கை எல்லோருக்கும் (உறுப்பினர்களுக்கும்) வழங்கப் படவில்லை என்பது வருந்தத்தக்கது. தகவலை சேகரித்து அதை அவைக்கு அளிக்க தனி நபர்கள் உழைப்பையும் பணத்தையும் செலவழிக்க

வேண்டியுள்ளது வருந்தத்தக்கது. ஆனால் பெயர்கள் ஆவணத்தில் உள்ளன. ஆவணத்தில் உள்ள விவரங்கள் பற்றி எந்த ஓர் உறுப்பினரும் கேள்விகேட்பது பயனற்றது. இந்த விஷயம் பற்றி நான் குறிப்பிட வேண்டியிருப்பது வருந்தத்தக்கது.

நல்லது, ஐயா, வங்காளத்தில் பெருமளவில் எதிர்ப்பு உள்ளது. கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் ஐந்து உயர்நீதிமன்ற நீதிபதிகள் உள்ளனர். அவர்களில் ஒருவர் பெடரல் நீதிமன்றத்தை அலங்கரிக்கிறார். அவர்கள் கருத்தையும் அறிக்கையில் காணலாம். அது டாக்டர் மிட்டரின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் கல்கத்தா உயர்நீதி மன்றத்தின் முன்னாளைய நீதிபதிகள் உள்ளனர். அவர்களில் ஒருவர் திரு.என்.சி. சட்டர்ஜி. அவர் உயர்நீதிமன்றத்தில் நீதிபதியாக இருக்கிறார். அதற்கு எதிராக உள்ளார் அவர்.அப்பொழுது இந்து மகாசபை டாக்டர் சியாமபிரசாத் முகர்ஜியின் தலைமையில் இருந்தது. தலைவர் டாக்டர் முகர்ஜியின் சம்மத்துடன்தான் ஒரு முக்கிய விஷயம் பற்றிய இந்த மசோதாவை இந்து மகாசபை எதிர்த்து என்பது தெளிவு. அடுத்து, இந்தியத்துணைக் கண்டமெங்கிலும் புகழ்பெற்ற சட்ட நிபுணரான டாக்டர் ஆர்.பி.பால் இதை எதிர்க்கிறார். அவர்களின் கருத்துக்கள் நம் முன்னால் உள்ளன. வங்காளத்தில் உள்ள இந்தக் கருத்தை கண்டும் வங்காளத்திலிருந்த வந்துள்ள ஓர் உறுப்பினர் பெயர்களைக் கேட்டிருப்பது கண்டு நான் அதிசயப் படுகிறேன்.

எனவே, ஐயா, பொது மக்களின் கருத்தை பெறுவதற்காக இந்த மசோதா பொது மக்களுக்கு அனுப்பப்பட வேண்டும் என பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். இந்துக்களின் கருத்து அதற்கு எதிராக இருந்தால், அவர்கள் விரும்பாத ஒரு சட்டத்தை நீங்கள் ஏன் அவர்கள் மீது திணிக்க வேண்டும்?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அது சர்வாதிகாரம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஆம். அது சுத்த சர்வாதிகாரம், தேர்தல்களுக்கு முன் இது பொது மக்களுக்கு அனுப்பப்பட்டால், அது ஒருவேளை சிக்கல்களுக்கு இட்டுச் செல்லும் என்ற பயம் உள்ளது. ஆனால் தேர்தல்களுக்கு முன்பு இதை நீங்கள் நிறைவேற்றிவிட்டால் என்ன சிக்கல்கள் எழும் என்பதைத் தாங்கள் அறிவீர்களா? படிப் பறியாத மக்கள் சீற்றமும் ஆத்திரமடைவர். இந்த மசோதா அவர் களின் வாழ்க்கையைக் குலைக்கும். சர்வாதிகாரியின் ஆணையின்படி

உடனேயே தங்களது வாழ்க்கையை மாற்றிக் கொள்வது அவர்களுக்கு எளிதல்ல. பொதுமக்கள் கருத்தை முற்றிலுமாக அலட்சியப்படுத்தி நாம் இங்கு சென்று கொண்டிருப்பது போல, ரஷ்யாவில் கூட லெனின் இவ்வளவு விரைவாகவும் மனச்சாட்சி உறுத்தல் இல்லாமலும் போகவில்லை. பொதுமக்கள் கருத்தை மதிக்கும் ஒரு விருப்பமும் மற்றும் ஒரு பாவனையும் ரஷ்யாவில் இருக்கிறது. ஆனால் அம்மாதிரி விஷயங்கள் எதுவும் இங்கு இல்லை. மசோதா பொது மக்களிடம் போனால் அது நிராகரிக்கப்படும் என்ற பயத்தில் தோன்றிய அப்பட்டமான சர்வாதிகாரமே இது. பொதுமக்கள் இதற்கு சாதகமாக இருப்பதாக அறுதியிட்டுக் கூறப்படுவதை நான் பார்க்கிறேன். அப்படியாயின் இந்தச் சட்டத்தை நிறைவேற்ற பொது மக்கள் ஏன் உங்களுக்கு அதிகாரமளிக்கவில்லை? ஐயா, இது இந்துக்களுக்கு பொதுவாக தீங்கிழைக்கக் கூடியது; மாதர்களின் பரந்த நலன்களுக்கு தீங்கிழைக்கிறது; பெருமளவில் பொதுமக்களுக்குத் தீங்கானது. விருப்பமில்லாத பொது மக்கள் மீது உங்கள் கருத்தை கட்டாயமாகத் திணிப்பதில் பயன் எதுவும் இல்லை. மக்களின் சொந்த நலன் சம்பந்தப்பட்ட ஒரு விஷயமாக இது இருப்பதால் தமது கருத்தை வலியுறுத்த அவர்களுக்கு உரிமைஉண்டு. ஒரு ஜனநாயக அரசாங்கத்தில் சட்டத்துறை அமைச்சராக இங்கு வந்து, பொதுமக்களின் கருத்தை தங்கள் அதிகாரத்திற்கு ஆதாரமாக அவர்கள் கொண்டிருக்கும்போது, அந்தப் பொது மக்களின் கருத்தை அவமதிப்பதும் அல்லது தவிர்ப்பது அல்லது ஏமாற்றுவதுஅலட்சியப்படுத்துவது அவர்களுக்கு நியாயமாக அல்லது முறையாக இருக்குமா? இது ஒரு தவறான முறை, ஒரு சுற்றி வளைக்கும் போக்கு, எந்த ஜனநாயக அரசாங்க முறைக்கும் தேவைப்படாதது. மக்களால் இந்தச் சட்டம் ஆதரிக்கப்பட்டால் அவர்களிடம் நீங்கள் ஏன் போகக்கூடாது? தங்களுக்கு எது நல்லது அல்லது கெட்டது என்று தீர்மானிக்கமுடியாதபடி மக்கள் தங்கள் கருத்துக்களில் அவ்வளவு பின்தங்கியவர்களாக இருக்கிறார்களா? கேள்வி என்னவெனில் பொதுப்படையாக எது நல்லது என்பதல்ல; சூழ்நிலைமைகளில் எது நல்லது என்பதுதான். அது ஸ்தல நிலைமைகளை பொறுத்துள்ளது. நல்லவை என்று கருதப்படும் சில நடைமுறைகள் உள்ளன; நல்லதல்லாத மற்ற சிலவும் உள்ளன. எல்லோரையும் ஒரு சீராக்குகிறீர்கள்; எல்லா மக்களையும் ஒரு சீராக ஆக்க நீங்கள் முயலுகிறீர்கள்.தம்மைப் போலவே ஒவ்வொருவரையும் அறிவாற்றல் கொண்டவராகவும் ஆற்றல் நிறைந்தவராகவும் ஆக்க மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் முயற்சிக்க வேண்டும். சமத்துவமின்மையோடு ஏன் நீங்கள் நிறுத்திக் கொள்ள வேண்டும்; சமநிலையின்மை மோசமானதல்ல. சமத்துவமின்மையும்

வேறுபாடுகளும் நிலவுவது இயல்பு, இந்தியா ஒரு கண்டம் போன்ற பெரிய நாடு. அது தன்னுடைய சொந்த இயல்பாய் அமைந்த தனித்திறமைக்கேற்ப வளர்ச்சியடைந்துள்ளது. ஒவ்வொரு மாகாணமும் தனித்தன்மை வாய்ந்த சொந்த கலாசாரத்தைக் கொண்டுள்ளது. இவையெல்லாவற்றையும் ஒரே நொடியில் என் நீக்கி சட்டத்தை ஒன்றாக ஆக்குகிறீர்கள்? உண்மையில் இந்துச் சட்டத்தை வகுத்தவர்கள், அவர்கள் மிக அதிகமாக .....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நீங்கள் செய்வது வார்த்தை ஜாலமே தவிர வாதமல்ல.

**திரு. நசிருத்தீன் அகமது:** அவர்கள் சகிப்பு தன்மை கொண்டிருந்தனர்; பலத்தைக் கொண்டு தங்கள் சட்டத்தை அமுல் நடத்தவில்லை. மனுஸ்மிருதியை படித்துப்பார்த்தால் மனு தமது சட்டத்தை ஏற்றுக் கொள்ள எவரையும் கட்டாயப்படுத்தவில்லை என்பதைக் காணலாம். ஸ்தலத்திலுள்ள பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப சட்டம் அமுல் செய்யப்படவேண்டுமென அவர் கூறினார். அதைப் படித்தவர் எவரும் இந்த உண்மையை அதில் காண முடியும்; எனவே இந்துச் சட்டத்தை வழங்கியவர்கள் அது ஒத்ததன்மை கொண்டதாக இருப்பதை விரும்பவில்லை. அவர்களது சட்டம் பற்றிய அவர்களது பிரசார முறையும் அவர்களது நாகரிகமும் நிர்பந்தத்தைக் கொண்டவையல்ல. பதிலாக இணக்குவித்தல் மூலம் சுதந்திரமான செயல் உரிமையை அனுமதித்தனர். எல்லாவற்றையும் நான் படித்துள்ளேன், எனவே, ஆதாரபூர்வமாகப் பேசுகிறேன்; தங்கள் சட்டங்கள் அவற்றின் சொந்த தகுதிக்கேற்பப் பரவ அவர்கள் அனுமதித்தனர்; அவர்களின் நிர்ப்பந்தத்தின் மூலமல்ல. இப்பொழுது ஸ்தல பழக்கவழக்கம் ஒரு முக்கிய பங்கை ஆற்றுவது மட்டுமல்ல, மனுவின் காலத்திலும் அவை ஒரு முக்கிய பங்கை ஆற்றின. இன்று சட்டம் வேறாக உள்ளதற்கு அதுதான் காரணம். ஸ்தல சூழ்நிலைகளுக்கு ஏற்ப அது ஒரு உள்ளார்ந்த முறை; அது கருத்து வேறுபாட்டிற்கு இட்டுச் செல்கிறது. உண்மையில் கருத்து வேறுபாடுகள் மோசமானவை அல்ல. பல்வகைத் தன்மையில் ஏற்றத் தாழ்வுகள் இருப்பது இயல்பானதே. இந்தியா ஒரு சிறிய நாடல்ல. அது ஒரு பெரிய தேசம் - ஒரு கண்டத்தின் தன்மைகளைக் கொண்டது. உண்மையில் இந்தப் பல்வகைத் தன்மையை தகுந்த காரணமின்றி நமது சிந்தனையிலிருந்து அகற்றக் கூடாது.

ஐயா, இந்த மசோவை ஒரு புது ஸ்மிருதி என்று அதாவது டாக்டர் அம்பேத்கருடைய 138வது ஸ்மிருதி என்று திரு. காமத் ஒப்

பிட்டார். இது ஒரு ஸ்மிருதியே அல்ல என்று கருதுகிறேன். ஸ்மிருதி, ஸ்ருதியிலிருந்து துவங்குகிறது. இந்த ஸ்ருதியின் கோட்பாடுகளோடு உடன்படுவதாக ஒரு பாவனை உள்ளது. இந்த மசோதா ஒரு ஸ்மிருதி அல்ல. ஆனால் ஒரு புதிய வேதம் (பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா : 'இது ஒரு விஸ்மிருதி') அது விஸ்மிருதி அதாவது சென்ற காலத்தை மறப்பது, எல்லாப் புனிதமான சட்டங்கள், வழக்கங்கள், விதிகள், சட்டங்கள், முடிவுகள், பிரிவு கவுன்சிலின் கோட்பாடுகள் எல்லாம் ராவ் குழுவின் அறிக்கையையும் மீறி, அம்பேத்காராலேயே ஒதுக்கித் தள்ளப்படுகின்றன. எல்லாம் போய்விட்டது. பண்டிட் மைத்ரா நல்ல நகைச்சுவையுடன் கூறியதுபோல் அது விஸ்மிருதி. அது விஸ்மிருதி அதாவது முற்றிலும் மறக்கும் இயல்புடையது. அது ஒரு புதிய வேதம். நான்கு வேதங்கள் உள்ளன. சாமவேதம் ரிக்வேதம், யஜுர் வேதம் மற்றும் அதர்வண வேதம்; புதியவேதம், டாக்டர் அம்பவேதம் என்று அழைக்கப்பட வேண்டும். இது ஐந்தாவது வேதம் - எல்லா நான்கு வேதங்களையும் அலட்சியப்படுத்தும் வேதம். இந்த வேதம் மற்ற வேதங்களை அகற்றி அவற்றின் இடத்தில் அமர்கிறது ஐயா. நான் தங்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

***பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:** ஐயா, அவைத் தலைவர் அவர்களே, நேற்றிலிருந்து இந்துச் சட்டத் தொகுப்பைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கிறோம். பிப்ரவரியிலும் அதை நாம் விவாதித்தோம். மிகவும் கருத்து வேறுபாட்டுத் தன்மை கொண்ட இந்து சமுதாயத்தின் கட்டமைப்பையே முற்றிலுமாகத் தகர்க்கும் தன்மை கொண்ட இந்த சட்டமியற்றல் நடவடிக்கையின் சிறப்பு அம்சங்களைப் பற்றி நான் விவாதிக்க முனையும் முன், ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த சட்டமன்றச் செயல் முறை சம்பந்தமாக இந்து சமுதாயத்திற்கு வாழ்வா, சாவா என்ற விஷயத்தைக் கையாள அரசாங்கம் மேற்கொண்டுள்ள முறை சம்பந்தமாக எனது உறுதியான கண்டனத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். அநேகமாக கடைசி நாளன்று அதாவது 1948 ஏப்ரல் 9ம் தேதி, இந்த மசோதா சட்டப் பேரவையில் அவசரம் அவசரமாக விவாதிக்கப்பட்டது என்பது நன்கு அறிந்த ஒன்றே. இந்த அவையில் மிக மிகச் சாதாரணமாக சட்டமியற்றுவதற்கான மசோதா வழக்கமாக எந்த அளவுக்கு விவாதிக்கப்படுமோ, அந்த அளவுக்குக் கூட அது விவாதிக்கப்பட வில்லை. மேலும் இந்தக் கூட்டத்தொடரில் இந்த விஷயத்தை முரண்பாடில்லாத முறையில் பரிசீலனை செய்ய வகை செய்வதற்குப்

★ அ.நி.ச (சட்டப்பேரவை) விவாதங்கள், தொகுதி 3, பாகம் 2, 1949 ஏப்ரல் 2ம் தேதி, பக்கங்கள் 2276-89.

பதிலாக, வரவு செலவு பற்றிய விவாதம் காரணமாக நேரம் இல்லை என்று சாக்குபோக்குக் கூறி இந்த அவையில் விரைவாக இச் சட்டத்தை நிறைவேற்ற அரசாங்கம் விரும்புகிறது. இத்தகைய அதி முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மசோதாவை - சட்டப் பேரவை வரலாற்றில் இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ஒரு மசோதா பரிசீலிக்கப்பட்ட தில்லை - இவ்வளவு விரைவாக நிறைவேற்ற முயல்வது இந்த அவைக்கு நியாயமாகுமா என்பதைப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த அவையின் பணி அதன் துவக்க காலத்திலிருந்து ஒரு போதும் இம்மாதிரி நடந்ததில்லை. எனினும் இதில் முடிவு செய்ய வேண்டியது அரசாங்கமே. மிக முக்கியமான அவசர சட்டங்கள் இருக்கும்போது, இந்த விஷயத்திற்கு இவ்வளவு அவசரம் ஏன், இதற்கு முன்னுரிமை ஏன் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று அரசாங்கத்தை எச்சரிக்கை செய்வது எனது கடமை என்று நினைக்கிறேன். நூற்றாண்டுகளாக அன்னிய ஆக்கிரமிப்பின், அன்னியர் ஆட்சியின் தாக்குதலை சமாளித்து தொடர்ந்து வாழ முடிந்திருக்கும் இந்துச் சமுதாயத்திற்கு என்ன ஏற்பட்டுவிடும் எனக் கேட்கிறேன். இந்தச் சட்டத்தை சட்டத் தொகுப்பு ஏட்டில் கொண்டு வராவிடில் அது மடிந்துவிடுமா? எனது கற்றறிந்த நண்பர் திரு. நசிருத்தீன் அகமது சூசகமாக எடுத்துக்காட்டியதுபோல, இந்த மசோதாவுக்கு ஆதரவாக பொது ஜனக் கருத்து உள்ளது என்று சட்டத்துறை அமைச்சர்கருதுவதுதான் வழக்கத்திற்கு மாறான இந்த அவசரத்திற்கும், வேகத்திற்கும் காரணம் என்று கூறிக்கொள்கிறேன் ஐயா. பொதுமக்களின் கருத்து இந்த மசோதாவுக்கு எதிராக உள்ளது என்று துணிந்து கூறுகிறேன். இந்த மசோதாவுக்கு சாதகமாகப் பொதுமக்களின் கருத்துஉள்ளதை நிர்ணயிக்கும் அளவுகோல் எது? இது விஷயத்தில் கையாளக் கூடிய சாத்தியமான அளவுகோல் எது? பொதுமக்களின் கருத்துதான் இந்த அளவு கோலாகும். ராவ் குழுவால் கண்டறியபட்ட கருத்து இந்த மசோதாவின் ஒவ்வொரு பிரிவுக்கும் பெருமளவு எதிராக இருந்தது என மிகத் தன்னடக்கத்துடன் சுட்டிக்காட்டு கிறேன். எனவே, ஐயா, பொதுமக்களின கருத்தை எந்தப் புது கண்டறிதலுமில்லாமல், இந்தச் சட்மியற்றுலுக்கு நாட்டில் பொது மக்களின் ஆதரவு உள்ளது என்று சட்டத்துறை அமைச்சர் உட்பட எவரும் உரிமை கொண்டாடுவது தகாதத் துணிச்சலேயாகும். இந்து சட்டம் தொகுக்கப்படுவதற்கு அவசியம் எங்குள்ளது? அதன் பயன் பாடு எவ்வாறு இருக்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. இந்துச் சட்டம் தொகுக்கப்படுவதைக் கோரியது யார்? இந்து சட்டம் தொகுப்பது இரு நிலைகளில்தான் அத்தியாவசியமாகும் என்பதை நாம் அறிவோம். ஒரு குறிப்பிட்ட விஷயத்தில், நீதிமன்றக் கருத்தில்

ஒரு முக்கிய முரண்பாடு இருந்தால், சட்டப்பேரவை தலையிட்டு தெளிவுபடுத்துவது அத்தியாவசியமாகிறது. மற்றொரு நிபந்தனை என்னவெனில், சட்டத்தில் மாற்றம் செய்யப்படுவதை பொது மக்களின் கருத்து விரும்புவதாகும்.இந்துச் சட்டத்தொகுப்பை நியாயப்படுத்தக் கூடியது இந்த இருநிலைகள் தான். இந்த குறிப்பிட்ட விவகாரத்தில் இந்த இரு நிலைகளில் எதுவும் நிலவவில்லை எனக் கூறுகிறேன். இந்துச் சட்டத்தின் பிரதானக் கோட்பாடுகள் சம்பந்தப் பட்டவரை, அவை நன்றாகப் புரிந்துகொள்ளப்படுகின்றன, மற்றும் நன்றாக நிலைப்படுத்தப் பட்டுள்ளன என்று கூற விரும்புகிறேன். இந்துச் சட்டம் குறித்த பல பாட நூல்கள், அதன் கோட்பாடுகள் **ஸ்மிருதி**களிலிருந்தும் நிபந்தாக்களிலிருந்தும் ஊகித்து உணரக் கூடியவை; வாய்மூலம் வியாக்யானம் செய்யப்பட்டு, இந்தியாவின் நீதி மன்றங்களால் விளக்கப்பட்டு அவை பிரசுரிக்கப்பட்டுள்ளன. இந்துச்சட்டத்தின் ஒவ்வொருச் சிக்கலான விஷயத்தையும் பற்றியும் தெள்ளத் தெளிவான கருத்து விளக்கங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்த மசோதாவைப் பரிசீலனைக்காக முன்மொழியும் போது, தமது உரையில், இந்துச் சட்டத்தில் ஆதியில் உருப்பெற்ற இந்து சமுதாயம் அல்லதுக் கூட்டுக் குடும்பங்களின் சிறப்புப் பண்புகள் நீதிமன்ற கருத்துக்களால் சிதறடிக்கப்பட்டன என்று சட்டத்துறை அமைச்சரால் சுட்டிக்காட்டப்பட்டது. ஆனால் அது இந்தச்சட்டத் தொகுப்பை நியாயப் படுத்துகிறதா? பிரிவுகவுன்சில் மற்றும் உயர்நீதிமன்றகளின் சட்டவிளக்கங்கள் இந்த சட்டக் கோட்பாடுகளை சந்தேகத்திற்கும் இடமில்லாமல் வகுத்துக் கூறியுள்ளன. அப்பாவாக இல்லாத ஒருவர் ஓர் இந்துக் கூட்டுக் குடும்பத்தின் கர்த்தர் அல்லது நிர்வாகி யாக இருக்கும் போது அவரது அதிகாரங்களாகட்டும் தகப்பனராக ஒரு கூட்டுக் குடும்பத்தின் நிர்வாகியாக அவரது செயல்பாடுகள், உரிமைகளாகட்டும், இந்துச் சட்டத்தில் நன்றாக வகுக்கப்பட்டுள்ளன. சர்ச்சைக்குரியவையாக இருந்த ஆன்மீகக் கடமைகள் பற்றிய கோட்பாடு சில காலத்திற்கு பல்வேறு உயர்நீதிமன்றங்கள் மற்றும் பிரிவு கவுன்சிலுக்கிடையே கடுமையான கருத்து வேறுபாட்டு விஷய மாக இருந்தது;அதுவும் தீர்த்து வைக்கப்பட்டது. மகனின் கடமைகள் என்ன என்பதை நாம் அறிவோம்; அவனது தகப்பனாரின் கடன்களில் எந்த அளவுக்கு அவனுக்கு பொறுப்பு உள்ளது என்பதை நாம் அறிவோம். அது போலவே, திருமணம் முதலான விஷயங்கள் பற்றியும் இந்துச் சட்டம் திட்டவட்டமாக உள்ளது. இவ்வாறெல்லாம் இருக்கும் போது இங்கு ஒரு கேள்விஎழுகிறது; இந்துச் சட்டம் தொகுக்கப்பட வேண்டும் என்று அரசாங்கத்தைக் கோரும் அபரிமிதமான மக்கள் கருத்து எதுவும்உள்ளதா? அம்மாதிரி எதுவும் இல்லை என்பதே என் பணிவான கருத்து. இந்துச் சட்டத்தைத் தொகுக்கும் முயற்சிக்கு எந்த நியாயமும் இல்லை.

தொகுப்பின் வரலாற்றைப் பொறுத்தவரை, இவ்வாறு முயற்சி செய்வது இதுதான் முதல் தடவையல்ல. பிரிட்டிஷ் ஆட்சியின் போது, இந்துச் சட்டத்தை தொகுப்பதற்கு பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டதை அவையின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். அப்படிப் பட்ட ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நியாயமான, ஆழமான காரணங் களால் விஷயம் ஒத்தி வைக்கப்பட்டு வந்தது என்பனக் கூறிக் கொள் கிறேன். 1833ம் ஆண்டிலேயே, அரசர் ஆணையுடன் ஒரு கமிஷன் அமைக்கப்பட்டது. 1853ம் ஆண்டு ஒரு சட்டக் கமிஷன் நியமிக்கப் பட்டது. 1856ம் ஆண்டு பிரசுரிக்கப்பட்ட இந்தக் கமிஷன்களின் அறிக்கைகள், இந்தச் சட்டத் தொகுப்பு முயற்சி பயனற்றதாகும் என்று கூறின இந்து சட்ட வளர்ச்சியை இது பாதிக்கும் என்ற காரணத் தால் இந்த யோசனை நிராகரிக்கப்பட்டது. மீண்டும், இதே போல், 1861ம் ஆண்டிலும் 1921ம் ஆண்டிலும், முந்திய விஷயத்தில் இந்திய விவகார அமைச்சரும், பிந்தியதில் இந்திய விவகார அமைச்சரின் அனுமதியுடன் இந்தியாவின் கவர்னர் - ஜெனரலும் சட்டக் கமிஷன் களை நியமித்தனர். சட்டத் தொகுப்பு விஷயம் பற்றிய அவற்றின் முடிவு சட்டக் கமிஷன்களின் முடிவுக்கு ஒத்ததாக இருந்தது. 1921 மார்ச் 23ம் தேதி, இந்த அவையின் புகழ்பெற்ற உறுப்பினர், இந்துச் சட்டத்தை தொகுக்கும் நோக்கத்திற்காக ஒரு கமிஷன் நியமிக்கக் கோரும் அரசு சார்பற்ற ஒரு தீர்மானத்தை அவையின் முன் வைத்தார். அந்தத் தீர்மானம் அவையில் விவாதிக்கப்பட்ட போது, இந்துச் சட்டத்தில் புகழ்பெற்ற சட்ட நிபுணரும், நீதித்துறை வல்லுனருமான டாக்டர் தேஜ் பகதூர் சாப்ருவின் பொறுப்பில் இருந்தது சட்ட இலாகா. இந்து சட்டத்தைத் தொகுப்பது அத்தியாவசியமா இல்லையா, அவசியமா அல்லது இல்லையா, இந்து சமுதாயத்திற்கு நல்லதா அல்லது இல்லையா என்று காரசாரமாக வாதிக்கப்பட்டது. மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் சர்.டி.பி.சாப்ரு - அவரே இந்து சட்டநிபுணர் - அரசாங்கத்தின் சார்பாக அளித்த பதிலை அவையின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். சமுதாயத்தின் தனி மனிதர் சம்பந்தப்பட்ட சட்டங்களைத் தொகுப்பது எளிதான காரியமல்ல; ஒரு பிரமாண்டமான பணியாகும் அது; அதற்கு பல நூற்றாண்டு காலத்திற்கு முந்திய சட்ட வல்லுநர்களின் சட்டத் திறமைகளும் சக்திகளும் தேவைப்படும் என்று அவர் சுட்டிக் காட்டினார். 1834முதல் 1896வரை 50 ஆண்டுகள் உழைப்புக்குப் பிறகு குறைந்தது மூன்று கமிஷன்களால் வரையப்பட்ட ஜெர்மன் சட்டத் தொகுப்பு பற்றி அவையின் கவனத்திற்குக்கொண்டுவந்தார். இது தொகுக்கப்படுவதற்கு ஆதரவாகவும் எதிராகவும் பிரபல நிபுணர்களின் இரு பிரிவுகளுக்கிடையே தொடர்ந்த கடினமான போராட்டத்திற்குப் பிறகு ஒரு பிரிவு சவோக்ரியால் பிரதிநிதித்துவப்படுத்தப்பட்டது.

மற்றது தீபாட்டால் பிரதிநிதித்துப் படுத்தப்பட்டது. இந்த போராட்டம் அப்பொழுது 4 ஆண்டுகளை எடுத்துக் கொண்டது - 1896ல்தான் ஜெர்மன் சட்டத் தொகுப்பு இறுதி வடிவம் பெற்று எழுத்து உருவம் பெற்றது. 50 ஆண்டுக்கால தொடர்ந்த உழைப்பிற்குப்பின் 1900ல் தொகுப்பு வரையப் பெற்று ஜெர்மன் பேரரசின் சர்க்காருடைய ஒப்புதல் பெற்றது. ஐயா, ஐரோப்பாக் கண்டத்தில் சுவிட்சர்லாந்து நாட்டு சட்டத்தொகுப்பும் இதரச் சட்டத் தொகுப்புகளும் அந்தந்த நாட்டின் மிகச்சிறந்த சட்ட நிபுணர்களின் முயற்சியின் விளைவாக வரையப்பட்டன. இந்த நாடுகளின் நிலைமையை இந்தியாவின் நிலைமைகளோடு ஒப்பிட்டுப் பாருங்கள்; இந்தியாவின் புராதன வரலாறு, புராதன காலத்திலிருந்து இன்று வரை இந்துச் சட்டத்தின் வளர்ச்சியில் தொடர்ந்து பங்காற்றி வந்தன. இந்துக்களின் தனி மனிதச் சட்டங்களைத் தொகுப்பது வீணானதாகும். இந்த சட்டத்தின் தோற்றுவாய் எது என்று பணிவுடன் கேட்கிறேன். அது மனிதத் தன்மை கொண்டதல்ல; எந்தப் பொருளில் எனில், இந்துச் சட்டத்தைப் பிரகடனப்படுத்த எந்த மனித சக்தியும் ஒரு போதும் முயன்றதில்லை. சட்டத்தின் அங்கீகாரத்திற்குப் பின்னால் உள்ளது இறையாண்மை அதிகாரம் அல்ல. ஆனால் கற்றறிதலின் பிரமாணமும் ரிஷிகளின் தபமுமாகும். அவற்றின் தோற்றுவாயைக் கண்டறிவது கடினம். **ஸ்மிருதி**க்காரர்கள் 138 பேர்கள் என்று கூறப்படுகிறது. சட்டங்களின் மூலக்கருத்துக்களை உண்டாகக்க அவர்கள் முயலவில்லை. அவர்கள் தங்கள் **ஸ்மிருதி**களுக்கு வேதங்களை ஆதாரமாகக் கொண்டனர். **ரிக் வேதம்** உலகத்தின் அதிமிக புராதன நூல் என்று நாம் அறிவோம். இந்தியாவில் பிரபலமடைந்து இருந்த ஆய்வு நூல்களை ஆக்கிய அறிஞர் களான **விக்னேஸ்வரர்** மற்றும் **ஜிமித வாகனா**வும் கூட இந்துச் சட்டத்தைத் தொகுக்க முயற்சி செய்யவில்லை; அதேபோல் சமுதாயத் திற்காக புதிய சட்டத்தை சிருஷ்டிக்கவுமில்லை. **ஸ்மிருதிகள்** மீது ஆதாரமாகக் கொண்டவை அவர்களின் கருத்துரைகள். நீண்ட ஆண்டுகள் நிலவிய பிரிட்டிஷ் மற்றும் முஸ்லீம் ஆட்சியின் போது, செய்யப்பட்டது என்னவெனில், இந்துச் சட்ட கோட்பாடுகள் பற்றிய ஒரு எளிய வியாக்யானமே. இந்துச் சட்டத்தின் தொகுப்பு இப்பொழுது ஏன் வேண்டும்? ஜெர்மனியும் சுவிட்சர்லாந்தும் இந்தியாவோடு ஒப்பிடத்தக்க முக்கியத்துவம் வாய்ந்தவை. அந்த நாடுகள் தங்கள் உறவு களை கட்டுக்குள் வைக்க திருப்திகரமான சட்டத்தொகுப்பை உரு வாக்க 50 அல்லது 60 ஆண்டுகள் எடுத்துக் கொண்டன என்றால், இந்தியாவில், அதுவும் இந்து சட்டத்தின் மூலமும் தோற்றுவாயும் புதிராக இருக்கும் போது, சட்டத்தைத் தொகுக்க நாம் ஏன் முயல வேண்டும்? வேறுபாடுகள் கொண்ட இந்த நாட்டில் ஒருமைப்

பாட்டைப் புகுத்த முயலுவதாக நமக்குக் கூறப்படுகிறது. மேலும் ஆண்டாண்டுக் காலமாக ஆண்களின் கொடுங்கோன்மையால் இந்து சமுதாயத்தில் பெண்கள் நசுக்கப்பட்டு வருகிறார்கள் என்றும் அதிலிருந்து அவர்கள் விடுவிக்கப்பட வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. ஒருமைப்பாட்டைப் பொறுத்தவரை, சட்டமியற்றும் இப்போதைய முயற்சியிலும் அது சாதிக்கப்படவில்லை, சாதிக்கவே முடியாது என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

*(இந்தக் கட்டத்தில் திரு. அவைத் தலைவர் தமது இருக்கையிலிருந்து எழுந்து சென்றார். அதில் திரு. துணை சபா நாயகர் திரு .அனந்த சயனம் ஐயங்கார் அமர்ந்தார்)*

வாரிசுரிமைச் சட்டத்தைப் பொறுத்தவரை கூட, வழக்கத்தால் முந்து பிறப்புரிமை விதி நிலவும் வழக்குகளில் அல்லது மானியம் அல்லது இனாம் பற்றிய வழக்குகளில் இந்தச் சட்டமியற்றலில் வகுக்கப்பட்ட வாரிசுரிமை பொருந்தாது என்று அவர்கள் கூறியுள்ளார்கள். அதுபோலவே, பிரிவால், சபிண்டா அதாவது ஆண்வழி முறை உறவுகளுக்கிடையே திருமணம் தடைசெய்யப்பட்டிருந்தாலும், அது ஸ்தல வழக்கத்திற்கு உட்பட்டு இருக்கும். அந்த வழக்கம் நிலவும் இடத்தில் திருமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படும். ஒரு சீரான தன்மை என்பது இந்த சட்டமியற்றுதலை வரைந்தவரை ஆவியாக இன்னமும் சுற்றிக் கொண்டிருக்கிறது. மேலும் அடிமைத்தனத்திலிருந்து பெண்கள் விடுதலை என்று சொல்லப்படுவது எதிலும் முடிவதில்லை. இந்துச் சட்டம் பற்றியும் சமுதாயத்தில் பெண்களின் இடத்தைப் பற்றியும் ஆராய விரும்புகிறவர்கள் அந்த விஷயத்தை மேற்கத்திய கண்ணாடி மூலம் பார்க்காமல் நமது சொந்த நாகரிகம் என்ற கண்ணாடி மூலம் பார்க்க வேண்டும் என்று கூறுகிறேன். நமது சொந்த சட்ட மூலவர்கள் இந்த மிகக் கஷ்டமான, சிக்கலான விஷயங்களை எவ்வாறு அணுகினார்கள் என்று நாம் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டும். இந்தப் பிரச்சினைகள் பற்றி கீழை மற்றும் மேலைய நாடுகளில் நிலவும் கருத்துக்கள் நேர்மாறானவை. நமது வாழ்க்கை சென்ற காலத்தோடு தொடர்புள்ளது என்றும், நமது எதிர்கால வாழ்க்கையோடு தொடர்புள்ளதாக இருக்கும் என்றும் நாம் நம்புகிறோம். எனவே, நமது சட்டவிதிகள் ஒரு விசேஷ அடிப்படையில் நிலவும், அதனால் தான், இந்த விஷயங்களை இந்து சமுதாயம் முழுவதன் நலன் என்ற கண்ணோட்டத்திலிருந்து நமது முனிவர்கள், ஞானிகள் அணுகினார்கள். நமது சட்டத்தை ஒரு குறிப்பிட்ட முறையில் வகுப்பதற்கு ஊக்குவிக்க லட்சியங்களை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். இதை நலம் செய்யாவிடில், அதன் மதிப்பை நாம் மதிப்பீடு செய்ய முடியாது.

ஐயா, இந்தச் சட்டமியற்றல் தனது சொந்தச் சிறப்புத் தகுதிகளை அடிப்டையாகக் கொண்டிருக்கிறது என்றும் இன்றைய இந்து சமுதாயம் குறித்த அவரது கருத்துக்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்டது என்றும் சட்டத்துறை அமைச்சர் அறிவித்திருந்தாராயின் நான் கவலைப்பட்டிருக்க மாட்டேன். ஆனால் எனக்கு வேதனையளித்தது எதுஎனில், சட்டத்தின் அங்கீகரிக்கப்பட்ட கோட்பாடுகளுக்கு உகந்ததாக அதன் ஷரத்துகள் உள்ளன என்று அவர் கூறியதுதான். சாத்தான் பைபிளை மேற்கோள் காட்ட முடியும் என்பது நன்கு தெரிந்ததே. இந்தச் சட்டமியற்றலின் ஒவ்வொரு ஷரத்தும் - அது திருமணம் சம்பந்தமானதாக இருந்தாலும் அல்லது விவாகரத்து, தத்தெடுப்பு அல்லது வாரிசுரிமை சம்பந்தமானதாக இருந்தாலும் - இந்துச் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கு எதிராக உள்ளது. இதில் நான் எதிர்நோக்கும் விளைவு மகிழ்ச்சிகரமான ஒன்றாக இருக்காது. உண்மையில், இந்து சமுதாயத்தின் ஒவ்வொரு இல்லமும் ஒரு நரகமாக மாற்றப்படும், அதில் சகோதரனுக்கும் மனைவிக்கும் இடையே, குழந்தைகளுக்கும் அவர்கள் தந்தைக்கும் இடையே சச்சரவு ஏற்படும், இந்து சமுதாயத்தின் அடிப்படைக் கோட்பாடுகளையே இந்தச் சட்டத்தைக் கொண்டு தகர்த்தெறிய முயற்சிக்கப்படுகிறது. இது மிக முக்கியமான ஒரு விஷயம். இது குறித்து அவசியம் ஒரு வாக்கெடுப்பு நடத்தப்பட வேண்டும். அல்லது இந்தச் சட்டமியற்றலுக்கு பொதுமக்கள் கருத்து சாதகமாக உள்ளதா, அதற்கு எதிராக உள்ளதா என்று கண்டறிய ஒரு கருத்துக் கணிப்பு மேற்கொள்ளப்பட வேண்டும்.

இந்துச் சட்டம் தொகுக்கப்படுவதற்கு அவசியம் எதுவுமில்லை என்பதை நான் பணிவுடன் கூறிக் கொண்டிருந்தேன். இந்த மசோதா சட்டமாக ஆக்கப்படுவதன் மூலம் ஏற்படுத்த விரும்பும் ஒரேசீரான தன்மையை நிர்ப்பந்தத்தால் சாதிக்க முடியுமா என்ற கேள்வி எழுகிறது. கட்டாயமாக்கப்படும் சட்டத்தின் அனுபவம் என்ன? 1923ம் ஆண்டில் இந்திய அரசாங்கம் சிவில் நீதிக் குழுவை நியமித்தது. பல்வேறு சட்டங்களை ஆய்ந்து பார்த்தபின் அது ஒரு சிபாரிசு செய்தது. சொத்து மாற்றுச் சட்டம், ஒப்பந்தச் சட்டம் மற்றும் சான்றுச் சட்டம் ஆகியவற்றில் மாற்றங்கள் செய்யப்பட வேண்டும் என்பதும், விரைவிலேயே அந்த மாற்றங்களை சட்டப்பேரவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதுமே அந்த சிபாரிசு. அதற்குச் சட்டப் பேரவைக்கு நேரம் கிடைத்ததா? விளைவு என்ன? அச்சட்டம் கொண்டு வரப்பட்டதற்கான பயன்பாடு தீர்ந்துவிட்டது என்பது அதிகாரபூர்வமான கருத்தாக இருந்தும், சட்டம் அதன் ஷரத்துகளுக்கு ஏற்ப நடைமுறைப்படுத்தப்பட்டு வந்தது. இந்துச் சட்டத்தொகுப்பு சட்டத்தொகுப்பு ஏட்டில் கொண்டுவரப்பட்டு, மக்களின் உரிமைகளைப் பொறுத்து அது கண்டிப்பானதாக ஆக்கப்பட்டால், நிலைமை அதுவாகத்தான்

இருக்கும். இந்து சட்டம் அதன் ஆற்றலை, நெளிவு சுளுவானத் தன்மையை நிலவும் சூழ்நிலைக்களுக்கேற்ப தகவமைத்துக் கொள்வதை இழந்துவிடும்; கடுமையானதாக மாற்றிவிடும். இந்தச் சட்டத்தை தொகுப்பதன் மூலம் முரண்பாடுகளை குறைத்துவிட முடியுமா? கருத்து வேறுபாடுகளுக்கு முடிவு காணும் குறிக்கோளை சாதிக்க முடியுமா? அது சாதிக்காது என்று துணிச்சலுடன் கூறுகிறேன். பல்வேறு சட்டங்கள் பற்றிய நமது அனுபவம் எனது முடிவுக்கு ஆதரவாக இட்டுச் செல்கிறது.

உதாரணத்திற்கு இந்து மறுவிவாகச் சட்டத்தை எடுத்துக் கொள்வோம். அது 1871-ல் சட்டமாக இயற்றப்பட்டது. அது ஒரு எளிமையான சட்டம். அந்தச் சட்டத்தின் பல்வேறு ஷரத்துக்களின் வாசக அமைப்பு பற்றி ஒரு ஏகோபித்த கருத்து இருந்துள்ளதா?

**திருமதி ஜி. துர்க்காபாய்** (சென்ன : பொது): விதவைத் திருமணச் சட்டத்தையும் தாங்கள் எதிர்க்கிறீர்களா?

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:** நான் கூறுவதை எனது நண்பர் பொறுமையாக செவி மடுத்துக் கேட்பார் என நம்புகிறேன். எதிர் கருத்துகள் பால் சகிப்புத் தன்மையும் பொறுமையும் காட்ட நாம் கற்றுக் கொள்ள வேண்டும். நான் கூறுவது என்னவெனில், ஒரு சட்டத்தை இயற்றுவதால் மட்டுமே அது ஒரு சீரான தன்மைக்கும் கருத்து முரண்பாடுகளைக் தீர்ப்பதற்கும் இட்டுச் சென்றுவிடாது. 1872ம் ஆண்டு இந்து விதவை மறுமணச் சட்டத்தின் ஷரத்துகளது வாசக அமைப்பிலும் பொருள் விளக்கத்திலும் பகுதி 2ன் அமைப்பு குறித்து பல்வேறு உயர் நீதிமன்றங்களுக்கிடையே கடுமையான கருத்து வேறுபாடு உள்ளன. வழக்கத்திலுள்ள சட்டப்படி மறுவிவாகம் செய்து கொள்ளும் ஒரு பெண் அவளது கணவரின் சொத்தின் மீதுள்ள தனது உரிமையை இழக்கிறாளா என்ற கேள்வி எழுகிறது. இது தான் விஷயம். அவள் வழக்கப்படியான சட்டப்படி மறுமணம் செய்துகொள்வதாலேயே அவளது முந்திய கணவரின் சொத்தில் அவளுக்குள்ள உரிமையை இழந்து விடுவதில்லை என்று அலகபாத் உயர்நீதிமன்றம் மற்றும் அயோத்தி பிரதான நீதிமன்றங்களின் கருத்து நம்முன் உள்ளது. மற்ற உயர்நீதிமன்றம் மாற்றுக் கருத்தை எடுத்துள்ளது. அது போலவே, இந்தச் சட்டத்தில் வரும் ''சகோதரி'' எனும் சொல் குறித்த வியாக்யானம் பற்றியும் கடுமையான கருத்து வேறுபாடு உள்ளது. ''சகோதரி'' என்ற சொல் ''அரை சகோதரி'' ஐ உட்படுத்தாது என்று சில உயர்நீதி மன்றங்கள் கூறுகின்றன. அதே

சமயம், அந்தச் சொல் பற்றிய விரிவான பரிசீலனைக்குபின், அது உட்படுத்துகிறது என்ற முடிவுக்கு நாக்பூர் உயர் நீதிமன்றம் வந்தது. நான் சமர்பிப்பது என்னவெனில், மேற்கூறியுள்ளபடி, இந்துச் சட்டத்தை கட்டமைத்ததில் உள்ள கஷ்டம் இந்துச் சட்டத்தொகுப்பு உள்ளதால் முடிவுக்கு வந்து விடாது.

**திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** முரண்பாடு தொடர அனுமதிக்கப்பட வேண்டுமென்று தாங்கள் கூறுகிறீர்களா?

**திரு. பண்டிட் முகுத்பீஹாரி லால் பர்கவா :** இந்த மசோதா சட்டமாக ஆனாலும், முரண்பாடு இருக்குமென கூறுகிறேன். அதனுடைய பல்வேறு ஷரத்துக்களுக்கு ஒரு மாறுபட்ட முறையில் பொருள் விளக்கம் கூறும் பொறுப்பு உயர் நீதி மன்றத்திடம் உள்ளது. இந்துச் சட்டத்தைப் பொறுத்து, மாறுபட்ட கருத்துகளையும் பல்வேறு விஷயங்களையும் தீர்த்து வைக்க முடியாது. எந்தக் குறிப்பிட்ட ஒரு ஷரத்துபற்றி தங்கள் வியாக்யானத்தை அளிப்பது உயர்நீதிமன்றங்களிடமும் உச்ச நீதிமன்றத்திடமும் உள்ளது. முந்திய சட்டமியற்றல் பற்றிய நமது அனுபவம் காண்பிப்பது போல் முரண்பாடு எழவே செய்யும். எனது பணிவான முறையீடு என்னவெனில், இந்துச் சட்டத்தை தொகுப்பது ஒரு வீணான பயனற்ற முயற்சியாகும். அந்தத் திசையில் செய்யப்படும் எந்த முயற்சியும் இந்துச் சட்டம் தனது இயங்கும் தன்மை, நெளிவுசுளிவு மற்றும் அதன் ஆற்றலையும் இழக்கும், இன்றைய சூழ்நிலைமைகளில், எந்தக் கற்பனையிலும் விரும்பத்தக்கதல்ல.

எனது அடுத்த விஷயம் மிக முக்கியமான ஒன்றாகும். இந்த மசோதாவின் தோற்றமும், எந்த சூழ்நிலைமைகளில் அது தோன்றியதும், அதை மேலும் எடுத்துச் செல்வதை எவ்வாறு நியாயப் படுத்துகிறது? பின்கண்ட விஷயத்தை தங்கள் கவனத்திற்கு பணிவுடன் கொண்டுவர விரும்புகிறேன். அதாவது 1941ம் ஆண்டு இந்துச் சட்டக்குழு நியமிக்கப்பட்டது; இந்துச் சட்டத்தைத் தொகுக்கும் விஷயத்தை அது பல பகுதிகளாகப் பரிசீலித்தது; இரு மசோதாக்கள் தயாரிக்கப்பட்டன அந்தக் குழுவால். ஒரு மசோதா உயில் இல்லாமல் இந்துச் சொத்துக்கு வாரிசுரிமை சம்பந்தப்பட்டது. மற்றது விவாகம் சம்பந்தப்பட்டது. இரு சட்டமன்றங்களின் (அந்தக் காலத்தில் சட்டப் பேரவை ஒரு இரு - அவைத் தன்மையைக் கொண்டிருந்தது) கூட்டுக் கூட்டத்தில் இந்த இரு மசோதாக்களும் வந்தபோது, பகுதி பகுதியாக அல்லாமல் முழுமையானதாக இந்து சட்டம் சட்டமாக்கப்படுவது நன்றாக இருக்குமென்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த நோக்கத்தைக் கொண்டுதான், இன்றைய ராவ் குழு தோன்றியது.

இப்பொழுது, ஐயா, ஒரு பெண் உறுப்பினர் அவையில் உரையாற்றிய போது-நிச்சயமாக இந்த மசோதாவுக்கு சாதகமாக உள்ள தீவிர உற்சாகம் கொண்டவர் அவர் - இந்த மசோதா நாட்டிற்கு முன் பல ஆண்டுகளாக, அதாவது 10 ஆண்டுகளாக இருக்கிறது என்று கூறினார். குழு உறுப்பினர்கள் ஆயிரக்கணக்கானவர்களின் சாட்சியங்களைப் பரிசீலனை செய்தனர். மேலும் நாடு முழுவதும் ஒரு விரிவான சுற்றுப் பிரயாணத்தை குழு மேற்கொண்டது. அந்தப் பெண்மணியின் அறிவிப்பில் உண்மை மிகக் குறைவே எனக் கூறுகிறேன். ஏனெனில் குழுவினால் பரிசீலிக்கப்பட்ட சாட்சியத்தின் அளவு என்ன? அந்த சிறிய அளவிலான சாட்சியத்தின் பலம் என்ன? 1944 ஜனவரி 20ம் தேதி ராவ் குழு அமைந்தது; அது வரைந்த மசோதா புகழ்பெற்ற வழக்கறிஞர்களிடம் கருத்துக்காக அனுப்பப்பட்டது. அவர்களது கருத்து கிடைத்தபின், தாங்கள் தயாரித்த வரைவு நாடு முழுவதன் கருத்துத் தெரிந்து கொள்ள அனுப்பப்பட வேண்டுமென முடிவு செய்தது. மசோதா எல்லா இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டது. சுமார் 6000 பிரதிகள் வினியோகிக்கப்பட்டன. 1944 ஆகஸ்டு 5ஆம் தேதியன்று கருத்துக்கள் வரவேற்கப்பட்டன. கருத்துக்கள் 1944 டிசம்பர் 31ம் தேதிக்குள் சமர்பிக்கப்பட வேண்டுமென கோரப்பட்டது. கருத்துக்கள் பெறப்பட்டதும், குழு நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்தது. இந்த குழு மேற்கொண்ட சுற்றுப்பயணத்தின் விரிவான தன்மையை அவை கவனத்தில் கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். மாகாணங்களின் முக்கிய பட்டணங்களுக்கும் நகரங்களுக்கும் அது விஜயம் செய்தது. அது ஒரு டஜனுக்கு மேலாக இருக்காது - அலஹாபாத், பம்பாய், கல்கத்தா, புனா, பாட்னா, லாகூர் மற்றும் மற்றவை. இதுதான் அந்த குழு மேற்கொண்ட விரிவான சுற்றுப் பிரயாணம். நாட்டின் மொத்த மக்கட் தொகையோடு ஒப்பிட்டால், இந்த பட்டணங்கள், நகரங்களின் மக்கள் தொகை எவ்வளவு? இந்த நகரங்களில் சாட்சிகளை விசாரணை செய்ய மேற்கொண்ட சுற்றுப்பயணம் இந்த மசோதா குறித்த உண்மையான உணர்வை எடுத்துக்காட்டுமா?

பதிவு செய்யப்பட்ட சாட்சியங்கள் எந்த அளவுக்கு இருந்தது? நாம்பார்க்கலாம். மொத்தத்தில் 121 சாட்சிகள் மற்றும் 201 அமைப்புகளின் சார்பில் 257 பேர்கள் சாட்சியம் அளித்தனர். இதுதான் எடுக்கப்பட்ட மொத்த சாட்சியம். ஒரு பொருத்தமான கேள்வியை இங்கு நான் கேட்கலாமா? விரிந்து பரந்த இந்தியா, இந்து இந்தியா நகரில் வசிக்கவில்லை, கிராமங்களில்தான் அது வசிக்கிறது என்ற உண்மையைக் கணக்கில் எடுத்துக் கொண்டால், எவ்வகையிலும் இது போதுமான சாட்சியம் ஆகுமா? அதிலும் கிராமங்களில் வசிப்பவர்களில் 90 சதவிதத்தினர் விவசாயிகள், இந்தக் குழுவால் பெறப்பட்ட சாட்சியம்

மிகப்பரந்த அளவிலான நாட்டையும் பல்வேறு மாகாணங்களில் பெருமளவு நிலவும் கருத்து வேறுபாடுகளையும் கணக்கில் கொண்டால் குழுவிசாரித்த சாட்சியம் எவ்விதத்திலும் பொருத்தமாகுமா? நான் பணிவுடன் கூறிக் கொள்கிறேன் அது இல்லை என்று.

சாட்சியத்தின் பலனை நாம் மேலும் ஆராயலாம். இப்போதைய சட்டத் தொகுப்புக்கு அடிப்படையாக விளங்கும் ஒவ்வொரு விஷயத்திலும் எந்த மாற்றத்திற்கும் எதிராக பெருமளவில் கருத்து நிலவுகிறது. இந்தச் சட்ட இயற்றலின் நான்கு எல்லைக்குள் தெளிவாக்கப்பட்ட ஓர் அடிப்படைச் சித்தாந்தத்தை உதாரணமாகப் பார்க்கலாம் - ஒரே நேரத்திலேயே மகன்களுக்கும், மகள்களுக்கும், விதவைகளுக்கும் மற்றவர்களுக்கும் வாரிசுரிமையை அறிமுகப் படுத்துவதுதான் அது.

**திரு. துணை அவைத் தலைவர் :** இன்று அமுலிலிருக்கும் சட்டத்தின் கீழ், ஏக காலத்தில் ஒரு விதவை வாரிசாக ஆகிறார்.

**திரு.எஸ். கிருஷ்ணசாமி பாரதி :** அதையும் கூட அவர் இப்பொழுது எதிர்க்கிறார். ஒரு வேளை அதை ரத்து செய்ய வேண்டு மென அவர் விரும்புகிறார் போலிருக்கிறது.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஒரே சமயத்தில் மகனுடன் மகள் வாரிசுரிமை பெறுவதை அறிமுகப்படுத்துவதற்கு சாட்சிகள் 78 பேர்களே,எதிராக 215பேர். பெண் வாரிசாக விதவைக்குள்ள ஒரு எல்லைக்குள் உள்ள சொத்தை முற்றிலுமானதாக மாற்றுவதற்கு ஆதரவாக 49, எதிராக 107. விவாகரத்துக்கான உரிமைக்கு ஆதரவாக 112, எதிராக 119. சுவிகார விஷயத்திலும் கொண்டுவரப்பட்டுள்ள மாற்றத்திற்கு ஆதரவாக 36, எதிராக 38. மற்ற மாற்றங்களுக்கு ஆதரவை விட எதிர்ப்பு பெருமளவில் இருந்தது. இந்த சட்டமியற்றலை முன் கொண்டு செல்வதற்கு நியாயம் எங்கே இருக்கிறது என்று கேட்கிறேன்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** நியாயம் எதுவுமில்லை.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** பொது மக்கள் கருத்து இந்தச் சட்டமியற்றுவதற்கு மிகப் பெருமளவு சாதகமாக உள்ளது என்று இந்த அவையின் பல உறுப்பினர்களால் உரிமை கோரப்பட்டது.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** ஒரு தார மணம் பற்றி என்ன?

**திரு. பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா:** சரியான சமயத்தில் அதற்கும் நான் வருவேன். நான் வினயமாக கூறுவது

என்னவெனில் இந்தச் சட்டப் பேரவை ஜனநாயகச் சட்டப் பேரவையாயின், நாட்டில் உள்ள பொது மக்கள் கருத்துக்கு இணங்க சட்டம் இயற்றுவதாக இந்தச் சட்டப் பேரவை உரிமை கொண்டாடி னால், அதற்குள்ள ஒரேவழி, இந்த மசோதாவைத் தூக்கி எறிவது தான். நாட்டில் எத்தகைய பொதுமக்கள் கருத்து இருந்தாலும், அது இதற்கு எதிராகவே உள்ளது. சட்ட அமைச்சரின் கருத்தை வெளி யிட்ட ஒரு குறிப்பிட்ட செய்தித்தாள் என்னிடம் இல்லை என்பதற்காக வருந்துகிறேன். இந்த சட்டமியற்றும் முயற்சியை பிப்ரவரியில் நாம் பரிசீலிக்கத் துவங்குவதற்கு ஒரு சில நாட்களுக்கு முன்பு அது வெளி வந்தது. சாட்சியம் அவருக்கு சாதகமாக இருந்த அடிப்படையில் அவர் முடிவெடுக்கவில்லை அல்லது பொதுமக்கள் கருத்து அவருக்கு சாதகமாக இருந்த அடிப்படையில் அவர் முடிவு எடுக்கவில்லை. பொது மக்களின் கருத்தின் பலம், எண்ணிக்கையைப் பொறுத்தவரை அவருக்கு எதிராக இருந்தது என்பதை வேறு யாராலும் அல்லாமல், சட்டத்துறை அமைச்சராலேயே பகிரங்கமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. சில தனி நபர்கள் அவர்கள் எவ்வளவு பிரபலமானவர்களாக இருந்த போதிலும், அவர்கள் இந்தச் சட்டத்தை நாட்டின் மீது திணிக்க விரும்பு கிறார்கலெனில், அதை ஏற்றுக் கொள்ள முடியாது. பொதுமக்கள் கருத்துக்கு ஒரே அளவுகோல் ராவ் குழுவால் பெறப்பட்ட பொது மக்கள் கருத்தே. பொது மக்கள் கருத்து இந்த சட்டமியற்றல் முயற்சிக்கு ஆதரவாக உள்ளது. அதற்கு எதிராக அல்ல என்று இந்த அவையின் எந்த உறுப்பினரும் கூறுவதற்கு வேறு எந்த அளவுகோலும் நிச்சய மாக இல்லை. இம்மாதிரி, பல்வேறு அமைப்புகளிடமிருந்து பல எதிர்ப்புகளை நாம் பெற்றுக் கொண்டிருக்கிறோம்.

**திரு. பாபு ராம் நாராயணன் சிங் :** தினசரி.

***பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:*** புகழ்பெற்ற பல்வேறு உயர்நீதிமன்றங்கள், சிவில் நீதிபதிகள் நாட்டின் பல்வேறு பாகங் களிலுள்ள வழக்கறிஞர்களின் சங்கங்கள் போன்றவற்றின் கருத்தை நான் பார்த்த அளவில், இந்த மசோதாவுக்கு வெகு சில நபர்களே சாதகமாக இருக்கின்றனர். பெருமளவில் பொது மக்கள் கருத்து இதற்கு எதிராக உள்ளது.

அடுத்த விஷயம், இதுவரை பொது மக்கள் கருத்து தீர்மான மான தன்மை கொண்டிருக்கவில்லை என்று எடுத்துக் கொண்டா லும், இந்த மசோதாவை இன்றுள்ள சட்டப் பேரவையில் சட்டமாக்க அவசியம் எங்குள்ளது? ஏற்கனவே சுட்டிக்காட்டியபடி, வாதத்தை நான் திரும்பக் கூறமாட்டேன். ஆனால் நான் பணிவுடன் கூறிக்

கொள்வது இந்தச் சட்டப்பேரவை அரசியல் சாசனத்தை உருவாக்கவும். முற்றிலும் அத்தியாவசியமான அவசர விஷயங்கள் குறித்து சட்டமியற்றவுமே உள்ளது. நாட்டில் பொதுமக்களின் எதிர்ப்பை புறக்கணித்து இந்து சட்டத் தொகுப்பு என்ற இந்த மசோதாவை நிறை வேற்ற அரசாங்கம் முயலக்கூடாது.

பிற்பகல் 4 மணி

இப்பொழுது, இந்த மசோதாவில் இடம் பெற்றுள்ள பலவேறு ஷரத்துகள் பற்றி ஆராயத் துவங்குகிறேன். நான் குறிப்பிட்டது போல், இந்தச் சட்டத்தில் இடம் பெற்றுள்ள ஷரத்துக்களின் அடிப்படைகள் நமது ஞானிகள் சிந்தனை செய்த இந்து சமுதாயம் நிலை நிறுத்தப்படுவதற்கே அபாயமாக உள்ளன என்று எண்ணுகிறேன். உண்மையாகவே இவ்வாறு எண்ணுகிறேன். எனவே இந்த மசோதாவில் உள்ள ஒவ்வொரு ஷரத்தையும் எதிர்ப்பது என கடமையாக கருதுகிறேன். இந்த மசோதா மூலம் இந்து சமுதாயத்தில் எத்தகைய அடிப்படை மாற்றங்கள் கொண்டுவர முயற்சிக்கப் படுகிறது என்ற கேள்வி எழுகிறது. இந்து சமுதாயத்தின் தத்துவம், லட்சியங்களுக்கு உகந்ததாக உத்தேசிக்கப்பட்ட மாற்றங்கள் உள்ளனவா? இது விஷயத்தில் என் பணிவான கருத்து ஓர் இந்து சட்டத் தொகுப்பு என்பதற்குப் பதில் இஸ்லாமியச் சட்டத்தொகுப்பு என்று அழைக்கப் படலாம்.

திரு. ஏ.கருணாகர மேனன் (சென்னை : பொது) : எனது நண்பர் திரு.நசிருத்தீன் அகமது இதை எதிர்ப்பதற்கு இதுதான் காரணம்.

**பண்டிட் முகுத் பிஹாரி லால் பர்கவா:** நிச்சயமாக இந்தக் கூற்று எனக்குப் பொருந்தாது. கற்றறிந்த நண்பர் போல் நானும் உறுதி யாக நினைக்கிறேன். இப்பொழுது ஐயா, பிரதான விஷயம் என்ன வெனில், திருமணம் மற்றும் விவாகரத்துத் தலைப்பின் கீழ் பிரிவு 5 முதல் 51வரை உட்படுத்தப்பட்டுள்ள இந்த மசோதாவின் இரண்டாவது பாகமேயாகும். இந்த மசோதாவின் இந்த ஷரத்துக்களில் குறிப்பிடப்பட் டுள்ள திருமண முறை எந்த அளவு திருமணம் பற்றிய இந்துக் கண் ணோட்டத்திற்கு ஒப்பாக உள்ளது என்பதைப் பார்ப்போம். இந்த மசோதாவின் பிரிவு 7ல் வழிவகை செய்யப்பட்ட சடங்கு ரீதியான திருமணம் இந்து திருமணம் பற்றிய கண்ணோட்டத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட தன்மை கொண்டதாக உள்ளது. திருமணத்தின் உண்மையான இயல்பை மறைப்பதற்கான ஓர் ஏமாற்று வித்தையே இது. இல்லையெனில் பிரிவுகள் 10லும் 21லும் இணைக்கப்பட்டுள்ள ஷரத்து அங்கு இருந்திருக்காது. இந்துக்களுக்கு - இந்த விஷயம் பற்றி

எந்தத் தாவாவும் இருக்க முடியாது என நினைக்கிறேன் - இது பற்றி இரு கருத்துக்கள் இல்லை. இந்து லட்சியங்களையும் தத்துவங்களையும் எதிர்க்க நாம் துணிந்தால், அவற்றிற்கு விடைகொடுத்து அனுப்ப நாம் கருதினால், நிச்சயமாக அது மற்றொரு விஷயம். இந்துக்களுக்கு திருமணம் என்பது புனிதமானது. எனவே கலைக்க முடியாதது. தம்பதியருக்கிடையே ஒரு மத ரீதியான பிணைப்பு அது. எந்த நேரமும் முடிவுக்கு கொண்டுவரக் கூடிய இணைப்பு அல்ல அது. ஓர் ஒப்பந்த அடிப்படையிலான உறவும் அல்லது அது. ஆன்மீக இணைப்பு கொண்ட உறவு அது. எவரது நப்பாசைக்கும் சபலத்திற்கும் ஏற்ப அதை முடிவுக்கு கொண்டுவர முடியும் என்று கற்பனையிலும் கூட நினைக்க முடியாது. இந்துத் திருமணத்தின் கண்ணோட்டம் அது. இந்துத் திருமறையைப் பொறுத்தவரை சடங்கு முறையிலான இந்தப் புனிதத் திருமணத்தைப் போல் வேறு எந்த வகையான திருமணத்தைப் பற்றியும் எடுத்துக்கூறும் எந்த **ஸ்மிருதி**யையாவது அல்லது திருமறையையாவது குறிப்பிட்டுக் கூற முடியுமா என்று சவால் விடுகிறேன். எனவே, திருமணம் மற்றும் விவாக ரத்து பற்றிய இந்த அத்தியாயத்தில், சிவில் திருமணத்திற்கும் விவாகரத்திற்கும் பிரிவு 10ல் இணைக்கப் பட்ட ஷரத்தைப் பொறுத்தவரை, அது இந்துச் சட்டத்திற்கு முற்றிலும் அன்னியமானது என்பது எனது பணிவான கருத்து; அதில் இடம் பெறக்கூடாதது இது. 1872ம் ஆண்டின் சட்டம் 3 (III) 1872ல் அமுலுக்கு வந்ததிலிருந்து இந்த நாட்டில் சிவில் திருமணம் நடைமுறையில் இருந்து வருகிறது. 1929ல் அது மேலும் திருத்தப்பட்டது. அந்தச் சட்டத்தில் கருதப்பட்ட சிவில் திருமணம் அவசியம் தொடர வேண்டும். ஆனால் எவ்வகையிலும் அது இந்துச் சட்டத் தொகுப்பில் இடம் பெறக்கூடாது. இந்துச் சட்டத் தொகுப்பில் சிவில் திருமணம் ஓர் இடத்தைப் பெறுவது ஏன் என்று கேட்கிறேன். எந்த **ஸ்மிருதி**க்கும் உகந்ததாக அது உள்ளதா? இந்தக் கேள்வியை நான் எழுப்பக் காரணம், இந்த மசோதாவில் புரட்சிகரமானது எதுவுமில்லை, தீவிரமானது எதுவுமில்லை, மேலும் உண்மையில் ஒவ்வொன்றும் இந்து கண்ணோட்டம், தத்துவம், லட்சியங்களுக்கு ஏற்ப உள்ளது என்று நீங்கள் உரிமை கொண்டாடுகிறீர்கள். இது அபத்தமானது. இந்த வாதத்தை நான் நிராகரிக்கிறேன் இந்த மசோதாவின் பிரிவு 10ல் இணைக்கப்பட்டுள்ள மாதிரியான ஷரத்துகுறிப்பிடும் சிவில் திருமணமுறை இந்து லட்சியங்கள் முற்றிலுமாக அறியாதது, அவற்றிற்கு அன்னியமானது என்று கூறுகிறேன். முன்பு, இந்த மாதிரியான புனிதத் திருமண முறை இதர வகையான திருமண முறையின் ஒரு ஏமாற்று வடிவமே என்று ஏற்கெனவே உறுதிபடக் கூறினேன்; பிரிவுகள் 7,10,21ல் இந்த ஷரத்துகள் பற்றி குறிப்பிட்டிருப்பது தெளிவு.

பிரிவு 7ஐப் பொறுத்தவரை, சடங்கு முறையிலான திருமணங்களுக்கு அது நிபந்தனைகள் விதிக்கிறது. பிரிவு 6ஐ அவையின் கவனத்துக்குப் பணிவுடன் கொண்டு வருகிறேன். தரப்பினர் சபிண்டாக்களாக அதாவது ஆண்வழிமுறை உறவினர்களாக இருந்தால் அவர்கள் எந்தத் திருமணத்தையும் ஒப்பந்தம் செய்து கொள்ள கூடாது என்று அது கூறுகிறது. பிரவு 10க்கு நாம் சென்றால், அது ஒரு சட்டரீதியான சிவில் திருமணத்திற்கு தேவையான நிபந்தனைகளை வகுத்தளிக்கிறது; அதிலுள்ள பிரிவு 7ன் துணைப்பிரிவு 6ல் இருந்த ஷரத்தை அது விட்டுவிடுகிறது; பிரிவு 7 மற்ற ஐந்து துணைப் பிரிவுகளாடு நிறுத்திக் கொள்கிறது. இதன் மூலம், சபிண்டாக்களுக்கிடையேயான திருமணம், அது பிரிவு 10ன் கீழ் சிவில் திருமணமாக இருந்தால் அது முற்றிலும் சட்டப்படியாகும். மதச்சடங்கின்படியான திருமணத்தின் சட்டபூர்வ தன்மைக்கும் சிவில் திருமணத்தின் சட்டபூர்வத் தன்மைக்கும் இடையே உள்ள வித்தியாசம் அல்லது இடைவெளி இதுதான். பிரிவு 21 எந்த நிபந்தனையை விதிக்கிறது? பிரிவு 7ல் கருதப்பட்ட மதச் சடங்குப்படியான திருமணம் செய்து கொண்ட தம்பதியர், பின்பு பதிவாளரிடம் சென்று அதை ஒரு சிவில் திருமணமாகப் பதிவு செய்ய அவரைக் கோரலாம். அப்பாவி பதிவாளருக்கு வேறு விருப்பத்திற்கு இடம் எதுவும் கிடையாது. இந்த மூன்று ஷரத்துக்களையும் ஒன்றாக வாசித்தால், சட்டரீதியான விளைவு என்ன? மத சடங்கின்படி செய்யப்பட்ட திருமணத்திற்கு எவ்விதப்புனிதத் தன்மை இருந்ததோ அது அகற்றப்பட்டது. மதச்சடங்குபடியான திருமணத்தின் சட்டபூர்வமான தன்மைக்கு நிபந்தனை என்னவெனில், சபிண்டாக்களுக்கு இடையே திருமணம் எதுவும் இருக்கக் கூடாது என்பதுதான். இந்த நிபந்தனை பிரிவு 10ல் இல்லை. இதன் காரணமாக, மதச்சடங்கின் படியான திருமணம் செல்லுபடியாகாத திருமணமாகிறது. அப்பாவிப் பதிவாளர் அதைச் சிவில் திருமணம் என்று பதிவு செய்ய வேண்டும். எனவே இது சுத்த ஏமாற்றுவித்தையாகும். மதச்சடங்கின் படியான திருமணத் திரை விலக்கப்படுகிறது. அது சபிண்டாக்களிடையேயான திருமணமானதால் அதன் செல்லாத்தன்மை இந்த தந்திரத்தால் சமாளிக்கப்படுகிறது. திருமணம் பற்றிய இந்து தத்துவங்களுக்கு உகந்ததாக இது உள்ளதா என்று கேட்கிறேன். எல்லோரும், அவர்கள் எங்கு தேர்ந்தெடுத்தாலும் **சபிண்டாக்**களிடையே ஒரு திருமணத்தைக் கொண்டாட விருப்பம் கொள்ள மாட்டார்களா? அதை மதச் சடங்கின்படியான திருமணமாகச் செய்துகொண்டு அதன் பின் அதன் செல்லாத் தன்மையை ஒரு சிவில் திருமணம் செய்து கொள்வதன் மூலம் போக்கிக் கொள்ள முடியும்.

அடுத்து, பிரிவு 9ன் ஷரத்துக்களுக்கு வருகிறோம். மதச் சடங்கு படியான திருமணமும் கூட ஒரு திருமணச் சான்றிதழ் ஏட்டில் அவசியம் பதிவு செய்யப்படவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அவ்வாறு பதிவு செய்யப்படாவிடில், பதிவு செய்யத் தவறியவர் சட்டப்படி தண்டிக்கப் படுவார். அது செல்லும்படியாவதைப் பொறுத்தவரை, அது செல்லுபடி யாகுமா அல்லது இல்லையா என்பது மிகவும் சந்தேகத்திற்குரிய தாகிறது. நிச்சயமாக, ராவின் மசோதா இந்த அளவிற்குச் செல்ல வில்லை. ஏட்டில் பதிவு செய்ய வேண்டுமா அல்லது இல்லயா என்பதை தம்பதியரின் விருப்பத்திற்கு ராவின் மசோதா விட்டிருந்தது. ராவின் மசோதாவில் அத்தகைய ஷரத்து இணைக்கப்பட்டது திருமணத்திற்கான ருசுவை இலகுவாக்குவதற்காகவே. ஆனால், இந்த மசோதாவில் இந்த நோக்கம் கைவிடப்பட்டுள்ளது. இங்கு கூறப்பட் டுள்ளது என்னவெனில், மதச் சடங்குப்படியான திருமணத்தை பதிவு செய்வதை கட்டாயமாக்குவதை மாகாண சர்க்கார்களுக்கு விட்டு விட்டது. பிரிவு 6ன் ஷரத்து பின்வருமாறு கூறுகிறது: ஒரு திருமணம் செல்லுபடியாவதற்கு இந்த மசோதாவின் ஷரத்துக்கேற்ப இருக்க வேண்டும். அப்படி இல்லையெனில் அது செல்லுபடியாகக் கூடிய திருமணமாகாது. பிரிவுகள் 6,7,10,21 ஐ படித்துப் பார்ப்பதிலிருந்து நாம் பெறும் முடிவு என்னவெனில், திருமணத் தம்பதியர்களால் சான்று பதிவேட்டில் பதிவு செய்யப்படாத எந்தத் திருமணமும் செல்லுபடியாகாது என்பதே. இம்மாதிரியான ஷரத்திலிருந்து எழும் சட்டரீதியான விளைவுகள் என்ன என்று தெரிந்து கொள்ள விரும்பு கிறேன். இது இந்து சமுதாயத்தின் லட்சியத்திற்குப் புறம்பானது என்றும், புனிதத்தன்மையுடன் செய்யப்பட்ட திருமணம் உடைக்க முடியாத பிணைப்பு கொண்டது என்றும் அதை முடிவுக்கு கொண்டுவர முடியாது என்றும் வகுத்துள்ள சாஸ்திரங்களின் கட்டளைகளுக்கு வெறுப்பூட்டுவதாக இல்லையா? இங்கு திருமணமான தம்பதியர் பதிவேட்டில், அதுபற்றி பதிவு செய்யாமல் விவேகமற்ற முறையில் நடந்து கொண்டால், அவர்கள் திருமணம் செல்லுபடியாகாது.

இந்த மசோதாவின் அடுத்த முக்கிய ஷரத்துக்கு, அதாவது விவாகரத்து பற்றிய ஷரத்துக்கு வருவோம். சென்றகால நடைமுறை பற்றிய கேள்வி இங்கு எழுகிறது. இந்து சமுதாயத்தில் விவாகரத்து இருந்தது என்பதை நிரூபிக்க, நாரதரின் மற்றும் பராசரரின் ஸ்மிருதி யிலிருந்து மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரால் நமக்கு மேற்கோள் காட்டப்பட்டது. ராவ் குழுவின் மாற்றுக் கருத்தைத் தெரிவித்த உறுப் பினர் திரு. துவாரகநாத் மிட்டரால் சுட்டிக்காட்டப்பட்டதை நான் பணிவுடன் தெரிவிக்கிறேன். அவர் முன்பு இதே திருமறைகள் வைக்கப்

பட்டன. அவர் சமஸ்கிருதம் பற்றிய தமது சொந்த ஞானத்தின்படி மட்டுமல்லாமல் கற்றறிந்த பண்டிதர்களின் ஞானத்தின் மீதும் சார்ந்து அவை பற்றி வியாக்கியானம் அளித்தார். நாரதர் மற்று பராசரரின் **ஸ்மிருதிகள்** பற்றிய நியாயமான வியாக்யானம் என்னவெனில், நிச்சயதார்த்த கட்டம் வரை மட்டுமே உறவுகளை முறித்துக் கொள்ள லாம், உண்மையில் திருமணம் நடந்த பின்பு அல்ல என்று அவர் கூறு கிறார். எனவே விவாகரத்து நடைமுறையில் இருந்தது என்று நிரூபிக்க ஸ்மிருதிகளை நம்பியிருப்பதில் எந்தப் பயனும் இல்லை.

மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரால் முன்வைக்கப்பட்டு பண்டிட் தாகூர் தாஸ் பர்கவாவால் மறுபடியும் கூறப்பட்ட வாதங் களில் ஒன்று எதுவெனில், இந்து சமுதாயத்தின் 90 சதவிகிதத்தின ரிடையே விவாகரத்து ஏற்கனவே நிலவியது என்பதாகும். பண்டிட் தாகூர் தாஸ் பர்காவாவின் கூற்றுப்படி, இந்து சமுதாயத்தில் 90 சத விகிதத்தினரிடம் மட்டுமின்றி, 95 சதவிகிதத்தினிரிடம் கூட விவாகரத்து நிலவியது. மரியாதையுடன் நான் கேட்கிறேன்: தாங்கள் கூறுவது உண்மையெனில் விவாகரத்துப் பற்றி இத்தகைய ஒரு சட்டத்தை நிறைவேற்றுவதற்கான அவசியம் எங்கே உள்ளது? பெரும்பான்மை யினருக்காக, உபயோகமற்ற சிறுபான்மையினருக்காக அல்ல, சட்ட மியற்றும்படி தாங்கள் எதிர்பார்க்கப்படுகிறீர்கள். இந்த மசோதாவில் தாங்கள் புகுத்தியுள்ள விவாகரத்து முறை இந்து சமுதாயத்தின் 90 அல்லது 95 சதவிகிதத்தினரின் வாழ்க்கையைத் துன்பத்தில் ஆழ்த்தும் - இவர்களிடையேதான் விவாகரத்து ஏற்கனவே நிலவியதாகத் தாங்கள் கூறுகிறீர்கள்; ஏனெனில் இப்போதைய மசோதாவின் ஷரத்துக்களின் படி, திருமணம் செய்து கொள்ளும் ஒவ்வொருவரும், விவாகரத் துக்கு முயற்சி செய்வதற்கு முன்பு, விவாகத்தை ரத்து செய்வதற்காக முறையான அதிகாரம் பெற்ற நீதிமன்றத்தின் முன் செல்ல வேண்டும் என்பது கட்டாயமாகும். பொறுக்குக்குழுவின் அறிக்கையில் மாற்றுக் கருத்தை எழுதிய ஒரு கனவான் சுட்டிக் காட்டியது போல, நாட்டின் மிகப்பெரும்பான்மையான பகுதிகளில், கிராமப் பஞ்சாயத்தின் முன் னிலையில், பத்திரத்தில் கையெழுத்திடல் மூலமோ அல்லது வேறு எந்த முறையிலோ, விவசாயிகள் மத்தியில் மிக எளிமையான முறை யில் விவாகரத்து நிறைவேற்றப்படுகிறது. உங்கள் மக்கள் தொகையில் 90 சதவிகிதத்தினராக உள்ள விவசாயிகள் மீது தங்களின் சட்டம் எத்தகைய விளைவை ஏற்படுத்தும் என்பதை தாங்கள் பரிசீலனை செய்ய வேண்டும். சட்டப் பதிவேட்டில் பிரிவு 34 கொண்டு வரப்பட்டால் விளைவு என்னவாக இருக்கும்? ஒவ்வொரு தம்பதி யரும், ஒவ்வொரு உறுப்பினரும், திருமணத்தில் சம்பந்தப்பட்ட

ஒவ்வொருவரும் நீதிமன்றக் கதவைத் தட்டக் கட்டாயப்படுத்தப் படுவர். மாவட்ட நீதிமன்றத்திற்குச் செல்லவும் மேல் முறையீட்டுக்கு செல்லவும் நேரிடும். அது நிகழும் வரை எந்த விவாகரத்தும் அமுலுக்கு வராது. எவர்கள் மத்தியில் விவாகரத்துச் செய்து கொள்ளும் வழக்கம் நடைமுறையில் உள்ளதாக தாங்கள் கூறிகிறீர்களோ அந்த மிகப்பெரும்பான்மையான மக்களுக்கு இது சாதகமாக இருக்கப் போவதில்லை என்றும், மாறாகப் பெரிது பாதகமாகவே இருக்கும் என்றும் கூறிக் கொள்கிறேன். எனவே, இந்த ஷரத்துக்களை சட்டமியற்றல் மூலம் நம்பிக்கையற்றிருக்கும் 5 சதவிகிதத்தினருக்கு தாங்கள் உதவவில்லை. ஆனால், பெரும்பான்மை 90 சதவீதத்தினரைப் பாதகமான நிலையில் வைக்கிறீர்கள். எனவே, தங்களது ஷரத்துக்கள் தீவிரமாக மாற்றப்பட்டு திருத்தப்பட்டாலொழிய சட்டப் பதிவேட்டில் அவற்றை கட்டாயம் கொண்டுவரக் கூடாது. இப்பொழுது நான் சுவீகாரம் பற்றிய விஷயத்துக்கு வருகிறேன். இங்கும் இந்த மசோதாவை ஆக்கியவரும் அதை வரைந்தவர்களும் இந்துச் சட்டத்தில் சுவீகாரத்திற்கு ஆதாரமாக உள்ள அடிப்படைக் கண்ணோட்டத்தைப் புறக்கணித்து விட்டனர். எனது சிற்றறிவுக்கு ஏற்ப, எந்த மற்ற சட்டமும் சுவீகாரத்தை அங்கீகரிக்க வில்லை. முஸ்லீம் சட்டத்தில் அது நடைமுறையில் இருந்தது; ஆனால் அதுவும் சட்டம் மூலம் ஒரு முடிவுக்குக் கொண்டவரப்பட்டது. இந்துக் கருத்தின்படி, ஓர் இந்துவின் வாழ்க்கை அவனது மதரீதியான கருத்து மற்றும் மதத்துடன் வெகுவாக இணைந்து, பிணைந்து உள்ளதால், இரண்டையும் பிரிப்பது சாத்தியமற்றது.

**திரு.எச்.வி.காமத் :** மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறாரா? அல்லது சிந்தனையில் மூழ்கிப் போய் இருக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மதிப்பிற்குரிய உறுப்பினரின் உரையைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பார்கவா :** இந்துச் சட்டத்தில தத்தெடுத்தல் மத நம்பிக்கையை ஆதரமாகக் கொண்டுள்ளது என்று நான் கூறிக் கொண்டிருந்தேன். காலமான ஒரு மனிதனின் ஆத்மா விமோசனம் பெற அவருக்கு ஒரு மகன் இருப்பது அவசியம் என்று அந்த நம்பிக்கை கூறுகிறது; அந்த மனிதன் மோட்சம் எய்துவதற்கு மகன் அவருக்கு திருப்படையல் அளிக்க வேண்டும். எனவே, தத்து எடுத்தல் பற்றி சட்டமியற்றப் போகிறீர்களெனில், இந்த விஷயங்களை

எல்லாம் தாங்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். இல்லையெனில் அதை நீக்கிவிடுங்கள். அதை நீங்கள் வைத்திருந்தால், தத்து எடுக்கும் சித்தாந்தத்திற்கு அடிப்படையாக உள்ள அதன் மெய்ப்பொருளை வைத்துக் கொள்ளுங்கள்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** 'அந்த மெய்ப்பொருள் எது'?

தத்து எடுத்தல் செல்லுபடியாவதற்கு மசோதாவில் எந்த அளவுகோல்களை நீங்கள் நிர்ணயித்திருக்கிறீர்கள்? மூத்த ஒரே மகனை தத்து எடுக்க முடியாது என்று இந்துச் சட்டம் கூறுகிறது. இந்தச் சிறப்பான கோட்பாட்டை இருத்திக் கொள்ளாமல் அதை மாற்றத் தாங்கள் விரும்புகிறீர்கள். மூத்த ஒரே மகன் கூட தத்து எடுத்துக் கொள்ளப்படலாம் என்று தாங்கள் கூறுகிறீர்கள்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அது நியாயமல்ல.

**திரு. பாபு ராம்நாராயண் சிங் :** அது அறியாமையால் நிகழ்ந்தது.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா:** தத்து எடுத்தல் என்னும் கோட்பாட்டின் வேரையே அது வெட்டிச் சாய்க்கிறது. ஏனெனில், இந்துச் சட்டத்தின்படி, மறைந்த தனது தந்தையின் ஆத்மா சாந்தியடைய திருப்படையல் சாத்தும் சடங்கைச் செய்ய மூத்த அல்லது ஒரே மகன் அவசியம் இருக்க வேண்டும்.

அதேபோல, ஒரு பையனைத் தத்து எடுத்துக் கொள்வதற்கு தாங்கள் நிர்ணயித்துள்ள தகுதிகள் என்ன? இவ்வகையில் பின்வரும் மூன்று தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன: அவனது வயது 15க்குக் குறைவாக இருக்க வேண்டும்; அவனுக்கு திருமணமாகியிருக்கக்கூடாது: அவன் ஓர் இந்துவாக இருக்க வேண்டும். நான் மரியாதையுடன் கூறிக் கொள்கிறேன்:இம்மாதிரி ஒரு ஷரத்தை ஏற்படுத்துவதன் மூலம் இந்துக்களை மாபெரும் கஷ்டத்திற்குள்ளாக்குகிறீர்கள். ஏனெனில், தத்து எடுப்பது சம்பந்தமாக, இந்து சமுதாயத்தின் நன்கு அறியப்பட்ட கருத்துப்படியும் வழக்கப்படியும் திருமணம் ஒரு தகுதியின்மையாகாது அல்லது வயது ஒரு தகுதியின்மையாகாது. இந்தக் கட்டுப்பாடுகளை ஏன் திணிக்கிறீர்கள் எனக் கேட்கிறேன். சென்ற காலத்தில் சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் உள்ள தங்கள் அனுபவம், இந்தக் கட்டுப்பாடுகள் அவசியம் எனத் தங்களை ஏற்க வைத்ததா?

சட்டம் பற்றி எனக்குள்ள குறைவான அறிவுப்படி, எந்தக் கஷ்டமும் எங்கும் வந்ததாக எந்த வழக்கும் இல்லை. உண்மையில், ஒரு திருமணமான பையனைத் தத்து எடுப்பது செல்லும் என நடைமுறையிலுள்ள சட்டம் அங்கீகரித்துள்ளது. அது போலவே, அவனது வயது என்னவாய் இருந்தாலும், தத்து எடுப்பது செல்லுபடியாகும். அமுலில் இருக்கும் சட்டத்தை மாற்றுவதை அவசியமாக்கிய கஷ்டங்கள் யாவை? எந்த ஒரு மாற்றத்தைச் செய்யும்போதும் அதற்கான நம்பத்தக்கக் காரணங்கள் உங்களிடம் இருக்க வேண்டும் என்பதை மறுக்க முடியாது; அல்லது இப்பொழுது நிலவும் சட்டத்தை தாங்கள் அங்கீகரிக்க வேண்டும்.

தத்து எடுப்பது சம்பந்தமாக சட்டத்தில் தாங்கள் செய்திருக்கும் மாற்றத்தின் விளைவு என்ன? நன்கு நிலைநிறுத்தப்பட்ட இந்துச் சட்டத்தின் வழக்கத்துக்கு நீங்கள் விடைகொடுத்து வழியனுப்பி வைத்து விட்டீர்கள், தத்து எடுக்கப்பட்டதன் பலனாக வழங்கப்படும் சொத்துரிமையை தத்து எடுத்த மூன்று ஆண்டுகளுக்குள் அடையலாம் என்று ராவ் குழு ஆலோசனை கூறியது. இந்த மசோதா அதற்கு மேலும் செல்கிறது. தத்து எடுப்பது நிகழ்ந்த உடனேயே சொத்து உரிமையை எடுத்துக்கொள்ளும் பிரச்சினை எதுவும் இருக்காது என்று அது கூறுகிறது. அந்த தேதியிலிருந்து பாதிச் சொத்து விதவைக்கோ அல்லது அந்த மனிதனுக்கோ போகும்; மற்றப்பாதி பையனுக்குக் கிடைக்கும். எனது பணிவான வேண்டுகோள் : முன்பு அறிந்திராத, வியப்பளிக்கும் தத்து எடுக்கும் தத்துவத்தை கொண்டுவர தாங்கள் ஏன் விரும்புகிறீர்கள்? அதற்கான காரணம் எங்குள்ளது? சென்ற காலத்தில் இது சம்பந்தமாக கஷ்டம் எதுவும் ஏற்பட்டதா?

அடுத்தது கூட்டு இந்துக் குடும்பத்தின் சீர்குலைவுப் பிரச்சினை. இது விஷயத்தில் மிகவும் ஜீவாதாரமான அடிப்படையான மாற்றத்தைக் கொண்டுவர முயற்சிக்கப்படுவதாக எனக்குத் தோன்றுகிறது. காலம் காலமாக மதிக்கப்பட்டு வந்த கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பு தங்களது கண்களை ஏன் உறுத்த வேண்டும்? ஆரம்பத்தில் எண்ணப்பட்ட இந்துக் கூட்டுக் குடும்ப முறை மரபுச்சட்ட குவியலால் அதனுடைய உண்மையான சிறப்பு அம்சங்கள் சிதறடிக்கப்பட்டன என்று கூறப்படுகிறது. இதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இந்தக் கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பு முறை மதிக்கப்படத் தகுதி பெற்றது எனில், அன்னிய ஆட்சியால் அது இடிபாடுகுட்பட்டு பாழான நிலையில் உள்ளது என்பதால், தங்கள் கடமை அதை முடிவுக்குக் கொண்டு வருவதல்ல; மாறாக, இந்துக் கூட்டுக் குடும்ப அமைப்பில் ஏற்பட்ட கஷ்டங்களையும் குறைபாடுகளையும் அகற்றச் சட்டமியற்றி அதை

முந்திய நிலைக்குக் கொண்டு வர வேண்டியதுதான் கடமை. அதனை அதன் முந்திய சக்தி வாய்ந்த நிலைக்கு நாம் கொண்டு வந்திருக்க வேண்டும். அது செய்யப்படவில்லை. கூட்டுக்குடும்ப அமைப்பின் கடுமையான குறைபாடுகளில் எதையும் மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் சுட்டிக்காட்டியதை நான் கேட்டதில்லை. அவரது ஒரே வாதம் என்னவெனில், வாரிசுரிமை சட்டத் தீர்ப்புக்களால் அதன் உண்மையான சிறப்பு அம்சங்கள் சிதறடிக்கப்பட்டதால் அந்த அமைப்பு முறை முடிவுக்குக் கொண்டு வரப்பட வேண்டும் என்பது தான். நான் கூறுகிறேன்: அது மனக்கிலேசம் வாய்ந்த ஆலோசனை யாகும். குறைந்தபட்சம் என்னைப் பொறுத்தவரை, நான் ஆதரவு அளிக்க முடியாது. என்னைப் பொறுத்தவரை கூட்டுக் குடும்ப அமைப்பு உலகில் உள்ள எந்த தேசமும் பெருமைப்படக் கூடிய ஓர் அமைப் பாகும். நம் காலத்திற்கு, நூற்றாண்டுகளுக்கு முன்பே, சோசலிச அல்லது கம்யூனிச அமைப்பு வடிவத்தை எதிர்நோக்கிய அமைப் பாகும் அது. ஐயா, பலமுள்ள அல்லது பலஹீனமான குடும்ப உறுப் பினர்கள் குடும்ப சேமிப்பு நிதியில் சமத்துவ உரிமை பெறுவர். அந்த அமைப்பு.....

**திரு. சிர்ஜிட் குலாதர் சாலிகா** (அஸ்ஸாம் பொது) : வங்காளத் தில் அது பிரபலமாக இல்லை.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** எனக்குத் தெரிந்தவரை வங்கத்தில் ஒரு பகுதி **மிதாக்ஷரா** அமைப்பாகவும், மிகுதி **தாயபாகா** அமைப்பாகவும் அமைந்துள்ளது..

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** இல்லை எல்லாம் தாயபாகா அமைப்பாகத்தான் உள்ளது.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** எனவே, ஐயா, நமது மூதாதையர்கள் காலத்தில் அத்தகைய உறுதியான, பலமான அடிப்படையில் அது அமைக்கப்படாமல் இருந்தால், கற்றறிந்த சட்டத்துறை அமைச்சர் சட்டமியற்றல் என்ற கோடலியை அவர் பயன்படுத்தியிருக்கக் கூடாது. அதைப் பாதுகாக்க சட்டமியற்றலைக் கையாண்டிருக்க வேண்டும். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் அன்னிய ஆட்சிக்கு உட்பட்டிருந்ததன் காரணமாக, காலம் காலமாகப் போற்றப் பட்டு வந்த அமைப்புகளைப் பாதுகாப்பதில் அவர்கள் அக்கறை எதுவும் கொண்டிருக்கவில்லை. உண்மையில் அவை மீது அவர்கள் அவமதிப்பே கொண்டிருந்தனர். நமது சொந்த தேசிய அரசாங்கம் அதிகாரத்திற்கு வந்ததும், காலம் காலமாகப் போற்றப்பட்டு வந்த

அமைப்பை அழிப்பதற்கு மாறாக அதை புதுப்பித்து அதன் முந்திய புகழ்பெற்ற நிலைக்கு கொண்டுவந்திருக்க வேண்டும் என்று எதிர்ப் பார்ப்பது தவறா? ஐயா, இந்துக் கூட்டுக் குடும்பம் இந்த மசோதா வால் சிதைக்கப்படுகிறது என்று கூறுகிறேன். ராவ் குழு முன் வைத்த ஷரத்துக்கள் இந்த மசோதாவின் ஷரத்துகள் போன்று அத்தனை ஆபத்தானவையல்ல. இப்போதைய மசோதாவின் பிரிவுகள் 86, மற்றும் 87ஐ நான் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். ராவ் குழு, பாகம் III-அ ன் பிரிவு 1,2ல் வகுத்தது என்னவெனில் குடும்பத்தில் கூட்டுரிமையாளரின் மறைவுக்குப்பின், சொத்துரிமை எச்ச உரிமை யாளருக்கு மாற்றம் செய்யப்படாது; மாறாக வாரிசுரிமையாள ருக்குத்தான் மாற்றித் தரப்பட வேண்டும் என்பதேயாகும். ஒரு தலைமுறைக்காவது கூட்டு உரிமையாளரின் உரிமை பழுதுபடாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இதைக்கூட சட்டத்துறை அமைச்சர் உட்பட இப்போதைய பொறுக்குக் குழு உறுப்பினர்கள் சிலரால் சகித்துக் கொள்ள முடியவில்லை அல்லது விரும்பவில்லை. இதன் விளைவு என்ன? பிரிவுகள் 86 மற்றும் 87 வழி வகுத்துள்ளதுபடி இந்தச் சட்ட அமுலாக்கத்துடன் சேர்ந்தே இந்தியாவில் உள்ள ஒவ்வொரு கூட்டுக் குடும்பத்திலும் தானாகவே சீர்குலைவு ஏற்படும்.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி:** கூட்டுக் குடும்பத்திற்கும் கூட்டுச் சொத்திற்கும் வேறுபாடு உள்ளது.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:** அந்த விஷயத் திற்கு வருகிறேன்.

**திரு. லட்சுமி காந்த மைத்ரா:** தங்களைத் திசைதிருப்ப அவர்கள் முயற்சிக்கிறார்கள். தயவு செய்து நீங்கள் தொடர்ந்து பேசுங்கள்.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** பிறப்பு அடிப் படையில் உரிமை கோருதல் எதையும் நீதிமன்றம் கவனத்தில் எடுத்துக் கொள்ளாது என்று பிரிவுகள் 86, 87ல் மசோதா வழி வகை செய்கிறது. இந்த மசோதா அமுலுக்கு வரும் நாளில் அதற்குப் பின்பும் ஒவ்வொரு கூட்டுக் குடும்பமும் சீர்குலைக்கப்பட்டதாக எடுத்துக் கொள்ளலாம். இதனால், கூட்டு அனுபவ உரிமை, இந்த சட்டமியற்றப்படும் அதே சமயம் பொது அனுபவ உரிமையாக்கப்படும். ஆனால் இதைத் தாங்கள் ஏன் விரும்புகிறீர்கள் எனக் கேட்கிறேன். இன்றைய சட்டத்தில், இன்று நிலவும் இந்துக் கூட்டுக்குடும்பச் சட்டத்தில்

நிச்சயமற்றது எதுவும் உள்ளதா? எதுவும் இல்லை என்று நான் பணிவுடன் கூறுகிறேன். கூட்டுடைமையில் பங்குரிமை என்றால் என்ன என்பதையும், அத்தகைய சொத்தில் நிகழ்வுகள் எவை என்பதையும் எல்லோரும் அறிவர். அது பிரிவினை செய்யப்படுவதை தாங்கள் ஏன் விரும்புகிறீர்கள்? ராவ் குழு வகை செய்ததுக்கும் எதிராக இது உள்ளது என்பது என் பணிவான கருத்து. பொது மக்கள் கருத்து இன்றைய உருவில் உள்ள இந்த மசோதா குறித்து சேகரிக்கப்படவில்லை. ராவ் குழு வரைந்த மசோதா குறித்தே சேகரிக்கப்பட்டுள்ளது. எனவே இன்று கொண்டு வரப்பட்டுள்ள மசோதாவின் கட்டுமானத்தில் இத்தகைய ஜீவாதாரமான மாற்றம் செய்யப்பட்டது ஏன் என்பதற்கு தகவல் எதுவும் இல்லை.

இப்பொழுது ஓர் இந்து கூட்டுக் குடும்பத்தின் சாதகங்கள் யாவை? கூட்டுரிமை சொத்து வைத்துக் கொள்ளுவதன் சாதகங்கள் என்ன? நான் கூறுகிறேன்...

**திரு.பி.என். முனவல்லி** (பம்பாய் : மாகாணம்) : இதில் பாதகங்கள் எவையும் இல்லையா?

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:** ஒவ்வொருவரும் உறவினர்கள் பற்றி எந்த அக்கறையும் இல்லாமல் சுயநலத்துடன் வாழ்ந்து கொண்டு இருக்க வேண்டுமென விரும்பினால், பாதகங்கள் நிச்சயமாக உள்ளன. ஆனால் **ஸ்மிருதிகள்** எவ்வாறு நாம் இருக்க வேண்டுமென்று விரும்புகின்றனவோ அவ்வாறு சமுதாயத்தை நீங்கள் பார்த்தால், மற்றவர்களுக்காகவும், மற்ற உறுப்பினர்களுக்காகவும் சிலவற்றை நாம் துறக்க வேண்டும். குடும்பத்திற்காக, கூட்டுக் குடும்பத்திற்காக சிலவற்றைத் தியாகம் செய்ய வேண்டும். இதனால் எந்தப் பாதகமும் இல்லை. ஒவ்வொரு இந்துக் குடும்பமும் இதை ஏற்றுக் கொள்வது சாத்தியமில்லாமலிருக்கலாம் எனக் கூறுகிறேன்.

வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் **மிதாக்ஷரா** அமுலில் இல்லை என்று எனது நண்பர்களில் ஒருவர் எனக்கு ஞாபகப்படுத்தினார். ஆனால், ஐயா, நாடு முழுவதையும் தங்கள் முன்பு வைத்துக் கொள்ள வேண்டும்; மேலும் ......

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** ஆனால் அங்கு கூட்டுக் குடும்பமும் உள்ளது.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:** 30 கோடி மக்கள் தொகையை தாங்கள் சமாளித்துக் கொள்ள வேண்டும் - அந்த மக்கள் தொகை காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை, குஜராத் முதல் நாட்டின் தூரக் கிழக்கு வரை பரந்துள்ளது. கூட்டுக் குடும்ப அமைப்பின் அந்தஸ்தைச் சீர்குலைக்கத் தாங்கள் விரும்புகிறீர்கள். அது ஏராளமான மக்களின் பெரும்பான்மையை பாதிக்கும். இந்தச் சட்டமியற்றலில், குடும்பத்தைச் சீர்குலைக்க தாங்கள் விரும்பு கிறீர்கள். அது தளர்வுற்றிருந்தால், அது சிதைந்திருந்தால், ஓர் உறுப் பினர் கூறியது போல, அத்தகைய ஒரு நிலையில் உள்ளதற்காக நாம் கண்ணீர்விடக்கூட வேண்டிய தேவையில்லை; அது இயற்கையாகவே மரணமடையட்டும். நாசகரமான கோடாலியை ஏன் உபயோகித்து அதை முடிவுக்குக் கொண்டு வரவேண்டும்?

ஐயா, அடுத்து வாரிசுரிமை விஷயத்தை எடுத்துக் கொள் கிறேன். இது விஷயத்தில்தான் எனக்கு மிக அதிகமான மனக் குறை உள்ளது. எனது நண்பர் திரு. நசிருத்தீன் அகமது கூறியது போல, ராவ் குழு மசோதாவிற்கு பதிலாக இலாகா மசோதா வந்தது; இந்த இலாகா மசோதாவில் புதுமைகள் புகுத்தப்பட்டன. இந்த மசோதாவில் வரை யறுக்கப்பட்ட வாரிசுரிமைக்கான விதிகள் சொத்து விஷயத்தில் சேர்த்துக் கொள்ளப்படமாட்டாது. விவசாயச் சொத்தின் ஒவ்வொரு பகுதியும் அங்கு வரையறை செய்யப்பட்ட வாரிசுரிமை விதிகளுக்கு உட்படாது என்று ராவ் மூல மசோதாவில் இருந்தது; ஏனெனில் இந்திய அரசாங்க சட்டத்தின் கீழ் மத்திய அரசாங்கத்தின் அதிகார எல்லைக்கும் கட்டுப்பாட்டிற்கும் இது உட்படாது. இந்திய அரசாங் கத்தின் நேரடிக் கட்டுப்பாட்டிற்கும் மேற்பார்வைக்கும் கீழ் உள்ள மத்திய நிர்வாகப் பிரதேசங்கள் விஷயத்தில் எந்த விதிவிலக்கும் இருக்குமென ராவ் மசோதா சொல்லவில்லை.

இப்பொழுது ஐயா, இலாகா மசோதாவில், ''ஆளுநர்களின் மாகாணம்'' என்ற சொற்கள் நுழைக்கப்பட்டுள்ளன. இதன் விளைவாக மத்திய நிர்வாகப் பிரதேசங்களான எனது மாகாணம் ஆஜ்மீர் - மேர்வாரா, டில்லி மற்றும் கூர்க்கில் உள்ள விவசாயச் சொத்தும் இங்கு வாரிசுரிமை விதிகளுக்கு உட்படும். இந்தச் சட்டமியற்றலில் முறை யற்ற தன்மையை நிரந்தரமாக திணிக்கப்படுவதைப் பாருங்கள். ஆளுநர்களின் மாகாணங்களில் சொத்துக்களின் பெரும் அளவை பராமரிக்கும் சட்டம் மத்திய நிர்வாகத்தால் ஆளப்படும் பிரதேசங் களைப் பொறுத்தவரையான சட்டம் முற்றிலும் மாறுப்பட்டதாகும். இந்தச் சட்டமியற்றல் ஒரு சீரான தன்மையை ஏற்படுத்தும் நோக் கத்தைக் கொண்டதா? ஒரு சீரான தன்மைக் கோட்பாட்டிற்கு இது உகந்ததாக இருக்குமா அல்லது அதற்கு எதிராக இருக்குமா? மசோதா வின் ஷரத்துக்களில் தாங்கள் வரையறை செய்துள்ள வாரிசுரிமை

விதிகள் எல்லாம் எனது மாகாணத்தின் விவசாயச் சொத்திற்கு நடை முறைப்படுத்தப்பட்டால் - எனது மாகாணம் பற்றியும் அதல் வாழும் மக்கள் பற்றியும் நான் தெரிந்து கொண்ட அளவு என்னால் பேச முடியும் - சட்டம் ஏற்றுக் கொள்ளப்படுவதை விட அதிகம் மீறப்படும் எனக் கூறுகிறேன். ஏனெனில் வாரிசுரிமை பற்றித் தாங்கள் வரையரை செய்துள்ள விதிகள் வழக்கமாக நடைமுறையிலுள்ள மக்களின் பழக்கத்திற்கு மாறாக இருக்கும்; தங்களது உயிர்களை பணயம் வைத்துக்கூட தங்களைச் சட்டப்படி கட்டுப்படுத்தும் விதியாக அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. பாகம் 7 அத்தியாயம் 2 அட்டவணை 7ல் தாங்கள் உட்படுத்தியுள்ள மரபுரிமை விதிகள் எவை? அங்கீகரிக்கப்பட்ட இந்து கோட்பாடுகளுக்கு **மிதாக்ஷராவால்** அல்லது **தாயபாகா**வால் முன்மொழியப்பட்ட கோட்பாடுகளுக்கு ஏற்புடையதாக அவை உள்ளதா? அதற்கான அறிகுறி எங்கே உள்ளது? வாரிசுரிமைக்கு தாங்கள் எடுத்துக் கொண்ட அடிப்டை எது? அது 'இயல்பான அன்பு அல்லது பாசம்' என்று தாங்கள் கூறுகிறீர்கள். வாரிசுரிமை விஷயத்தில் ரத்த உறவு மற்றும் வழித்தோன்றல் பொறுத்த வரை இந்துச் சட்டத்தின் ஓர் அடிப்படையான கோட்பாடு மீறப் படுகிறது. இந்துச் சட்டத்தில் வாரிசுரிமை அடிப்படைக் கோட்பாடு களில் ஒன்று என்னவெனில், வழித் தோன்றல்கள் தங்கள் பெற்றோர் களுக்கு சிரார்த்தம் செய்யும் தகுதியையும் கடமையையும் பொறுத்தது. இதை வாரிசுரிமை பற்றிய எந்தச் சட்டமும் கணக்கில் கொள்ள வேண்டும். இந்துச் சட்டம் பற்றி நாம் கவலைப்படப் போவதில்லை என்ற கருத்து இருந்தால் நிச்சயமாக அது வேறு ஒரு விஷயமாகும். அப்பொழுது 'இந்து' என்ற சொல்லை அங்கிருந்து எடுத்துவிடுங்கள். எனக்கு ஆட்சேபனை எதுவும் இல்லை. ஆனால் இந்துச் சட்டத்தின் அடிப்டைக் கோட்பாடுகளைத் தாங்கள் இணைக்கிறீர்கள் என்றால், வாரிசுரிமைக் கோட்பாடுகளில் தாங்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய முதல் விஷயம் தங்கள் மூதாதையர்களுக்கு **சிரார்த்தம்** செய்ய வழித் தோன்றல்களுக்கு உள்ள தகுதியும் கடமையுமாகும். **தாயபாகா**வின் அடிப்படை இதுதான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்கள் எல் லோரும் தங்களுக்குச் சிரார்த்தம் செய்து சொத்தைப் பெற முடியும். அப்படித்தானே?

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** இத்தகைய புது மையான வாரிசுரிமை விதியைப் பிரகடனப்படுத்தக் காரணம் என்ன? சகோதரரும் சகோதரர் மகனும் மிக மிகக் கீழான நிலைக்குத் தள்ளப் பட்டுள்ளனர். சகோதரரும், சகோதரரின் மகனும் மகளின் மகள், மகளின் மகன், மகனின் மகள் ஆகியவர்களுக்குப் பின்னால் வரு

கிறார்கள். இது ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள இந்துச் சட்டக் கோட்பாடு களுக்கு ஏற்றதாக உள்ளதா? (பல குரல்கள் : 'இல்லை, இல்லை') இது குடும்பத்தைச் சீர்குலைக்காதா? குடும்ப உறுப்பினர்களிடையே நீங்காத குழப்பத்தையும் சச்சரவுகளையும் இது ஏற்படுத்தாதா? இது எண்ணிப்பார்க்க முடியாதது. இந்து சமுதாயம் நூற்றாண்டுக்காலமாக பல்வேறு அட்டூழியங்களுக்கு உட்படுத்தப்பட்ட போதிலும், இன்னும் சகோதரருக்கும் சகோதரருக்குமிடையே அன்பும் பாசமும் உள்ளன. சிலவற்றை நான் குறிப்பிடும்போது, விவசாய மக்களை கவனத்தில் வைத்திருக்கிறேன். தாங்கள் எந்தக் கிராமத்திற்கு போனாலும், 10 குடும்பங்களில் 9 குடும்பங்கள் கூட்டாக வாழ்வதைக் காண்பீர்கள். சகோதரர், சகோதரருடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் தனியாக இல்லை. சகோதரர், சகோதரர் மகன் ஆகியோரைவிட மகளின் மகனுக் கும் மகளின் மகனுக்கும் வாரிசுரிமையில் முன்னுரிமையை நீங்கள் அளிக்கும் பொழுது, எனது பணிவான கருத்து என்னவெனில் சமுதாயம் இதைச்சகிக்காது; அல்லது அது சகித்துக் கொண்டாலும், தற்போது நிலவிவரும் சமாதானமும் நிதானமும் விரைவில் மறைந்துவிடும். எனவே ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்துச் சட்டக்கோட்பாடுகளுக்கு முற்றிலும் வேறுபட்ட, வெறுப்பூட்டுகிற எந்தப் புதுமையான விதிகளையும் வகுக்கும்முன் நீங்கள் அதிகம் விவேகத்துடன் நடந்து கொள்ள வேண்டும்.

இப்பொழுது ஐயா, மகனுடன் அதே சமயத்தில் மகளையும் வாரிசாகக் கொண்டு வரப்படும் விஷயத்தை இப்போது எடுத்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுபற்றி அவர் ஏற்கனவே சில விஷயங்களைக் கூறியுள்ளார் என்று நினைக் கிறேன். இதற்கு மேல் விளக்கம் எதுவும் தேவையில்லை.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** இப்பொழுது ஐயா, திருமறை நூல்களின்படி அவளது தகப்பனாரிடமிருந்து பெறும் வாரிசுரிமையில் மகளுக்கு ஒரு குறிப்பிட்ட பங்கு இருப்பதாக வாதிக்கப் பட்டது. மனுவும் யாக்னவல்கியரும் இதற்கு ஆதரமாகக் கொள்ளப் பட்டனர். இந்த இந்துச் சட்ட மூல வாசகங்கள் பற்றிய எனது மேம் போக்கான ஞானத்தின் படி, எந்த பாகம் ஒதுக்கப்பட்டாலும் அது திருமணமாகாத மகளின் விஷயத்தில்தான் பொருந்தும்; அதுபற்றி எங்களுக்கு ஆட்சேபம் எதுவுமே இல்லை. இன்று கூட ஒரு திருமண மாகாத மகளுக்கு பாகம் ஒதுக்கப்படுகிறது. இன்றும் எழும் கேள்வி: இது சம்பந்தமான நிலை என்ன? இதை யாரும் மறுக்கமுடியுமா? ஆயிரத்தில் ஒரு மகள் கூட திருமணமாகாமல் இருப்பதில்லை. குடும்பத்

தின் அந்தஸ்துக்கு ஏற்ப, மகளுக்கு சிறந்த கல்வி அளிக்கப்படுகிறது. பையன்களுக்கு சமமான அளவில் அவள் நடத்தப்படுகிறாள். அவளது திருமணம் நடைபெறும் போது, குடும்பத் தகுதிக்கேற்ப அவளுக்கு வர தட்சிணை அளிக்கப்படுகிறது. திருமணமானதும் சகோதரர்களுடனான அவள் உறவு துண்டிக்கப்படுவதில்லை. எனது அனுபவத்தின்படி, குடும்பத்தின் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் அவள் அழைக்கப்படுகிறாள். அவளது பெற்றோர் குடும்பத்தில் திருமண நிகழ்வுகளின் போது வழக்கப்படி அவளுக்கு ஒரு 'கோட்டா' ஒதுக்கப்படுகிறது. நீதிமன்றத் திற்கு செல்வதால் குடும்பத்தில் சமாதானமும் அமைதியும் நிலவும் என்று யாராவது கூறமுடியுமா? இத்தகைய ஒரு நடவடிக்கை நிலை மையை மோசமாக்கவே செய்யும். நீதிமன்றத்தை அணுகுவதற்கான மசோதாவின் ஷரத்துக்கள் முற்றிலும் வெட்கக்கேடானவை. நமது மகள்களும் சகோதரிகளும் நீதிமன்றத்திற்கு போயாக வேண்டுமென் பதை நாம் விரும்பவில்லை. அவர்கள் சட்டத்தின் உதவியை நாட வேண்டிவரும் என்று நமது ஞானிகள் ஒரு போதும் சிந்தித்துப் பார்த்த தில்லை. குடும்பத்தில் நமது மகள்கள் பெற்றுள்ள நிலை தன்னிகரில் லாத தன்மை கொண்டது. அதற்கு இணையானதை எங்காவது காண்பது கஷ்டம். நான் ஏற்கனவே கூறிக் கொண்டிருந்தபடி, திருமணத்திற்குப் பின் பும்கூட, விழாக்காலங்களில் குடும்பச் செலவில் மகளுக்கு ஒரு திட்ட வட்டமான பங்கு உள்ளது. இங்கு ஒரு கேள்வி கேட்கப்படுகிறது: தனது உரிமைகளை நிலை நாட்ட அவள் நீதிமன்றத்திற்கு போகலாமா? ஐயா, ஒரு குடும்பத்தில் ஒரு பெண்ணின் தந்தை அல்லது சகோதரர் அவள்பால் தனக்குள்ள கடமைகள் பற்றி கவலைப்படவில்லை யெனில், சமூகம் அவரை ஏளனமாப் பார்க்கும். நன்கு நிலைநிறுத்தப்பட்ட வழக்கத்தின்படி, குடும்பத்தின் ஒவ்வொரு மகளும் அவளது சகோ தரனின் திருமணத்தின்போது அவசியம் ஆஜராகியிருக்க வேணடும். மணமகனும், மணமகளும் வீட்டிற்குள் நுழையும் முன், சகோதரி யாலும் அவளது கணவனாலும் நிகழ்த்தப்படவேண்டிய ஒர பிரத்தி யேக சடங்கு உள்ளது என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு நான் கூறிக் கொள்கிறேன். இவை காலம் காலமாகப் பின்பற்றப்பட்டு வரும் வழக்கம். மகள்களுக்கு ஒரு திட்டவட்டமான நிலையை நாம் வழங்குகிறோம். குடும்பச் சொத்தில் ஒரு பாகத்தை அவளுக்கு அளிப் பதன் மூலம் நீங்கள் பெறும் லாபம் என்ன? ஒரு மகனுக்கும் ஒரு மகளுக்கும் இடையே முற்றிலுமான சமத்துவம் இருக்க வேண்டும் என்பது இந்தச் சீர்திருத்தத்தை நியாயப்படுத்தும் அம்சங்களில் ஒன்று. உண்மையில் மகளுக்கு தாங்கள் அளிப்பது ஒரு போலித்தனமான சமத்துவமல்லவா? நிலைமைகள் முற்றிலும் மாறுபட்டவை. ஒரு குறிப்பிட்ட காலத்தில் மகள் வேறொரு குடும்பத்திற்கு சென்றாக வேண்டும். மகன் அவ்வாறு போக வேண்டியதில்லை. சூழலின்

உள்ளார்ந்த நிலைமைகள் இவை. எனவே தாங்கள் செய்யும் சட்டம் நிலைமைகளுக்கு உகந்ததாக இருக்க வேண்டும். இவற்றை மீறுவதாக இருக்கக்கூடாது. இவற்றை எல்லாம் மீறி நீங்கள் சட்டத்தை இயற்றினால், சமுதாயம் சிதறிப்போகும்.

இப்பொழுது, இன்று இந்து சமுதாயத்தில் சொத்து உடைமையாளர்களின் சதவிகிதம் என்ன? இந்தப் பிரச்சினைக்கு இது மிகவும் தொடர்புடையது; ஏனெனில், இன்று நிலவும் வழக்கப்படி, தமது மகளின் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யும் தார்மீக கடமை தகப்பனாருக்கு மட்டுமல்ல சகோதரருக்கும் உண்டு. பிதிரார்ஜித சொத்து தமக்குக் கிடைக்கிறதோ இல்லையோ, தனது தகப்பனார் இல்லாத போது, தனது சகோதரியின் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டியது தனது தார்மீகக் கடமை என்று அவர் கருதுகிறார்.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** தனது சகோதரிக்கு ஒரு பங்கை அனுமதித்தால், அவர் தனது தார்மீகக் கடமையை நிறைவேற்ற மாட்டார் என்று தாங்கள் கருதுகிறீர்களா?

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஒரு பங்கைப் பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் பேசிக் கொண்டிருக்கிறார். நானோ சொத்து இல்லாத ஒரு குடும்பத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். அத்தகைய ஒரு குடும்பத்தில் சகோதரியின் நிலை என்ன ஆகும்? எந்தக் கிராமத்திற்கோ பட்டணத்திற்கோ போய் பாருங்கள். தகப்பனார் இறந்து போய், திருமணமாகாத சகோதரி தனது சகோதரருடன் வாழ்ந்து கொண்டிருக்கும் பல நிகழ்வுகளை தாங்கள் பார்க்கலாம். தனது சகோதரிக்கு திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டியது தனது தார்மீகக் கடமை என்று இந்தச் சகோதரன் நினைக்கிறான். மேலும் இதற்காக கடனாகப் பணமும் வாங்குகிறான். அந்தப் புனிதமான நம்பிக்கையை நிறைவேற்றி முடிக்கும்வரை அவன் தன்னைப் பற்றியே சிந்திப்பதில்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் விரைவில் தமது உரையை முடித்துக் கொள்ள முடியுமா?

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஐயா, எனக்கு மேலும் ஒரு மணி நேரம் தேவைப்படும்.

**திரு. துணை அவைத் தலைவர் :** அப்படியாயின் அவை ஒத்திவைக்கப்படுகிறது.

*1949 ஏப்ரல் 4, திங்கள் கிழமை முற்பகல் 10 3/4 மணிவரை அவை ஒத்திவைக்கப்பட்டது.*

## *இந்துச் சட்டத் தொகுப்பு - விவாதம் தொடர்கிறது.

***திரு. துணை அவைத் தலைவர் :*** *இந்துச் சட்டத்தின் சில கிளைகளைத் திருத்தித் தொகுப்பதற்கான மசோதாவை பொறுக்குக் குழு அறிக்கையின்படி பரிசீலிக்கும் பணியில் இப்பொழுது முன் செல்வோம். திரு. முகுத் பீஹாரி லால் பர்கவா தமது உரையைத் தொடர்வார்.*

***திரு. ஆர்.கே. சித்வா*** *(மத்திய மாகாணம் மற்றம் பீரார் : பொது) : இந்த மசோதாவை மேற் கொண்டு பரிசீலனை செல்வதற்கு நாம் முன் செல்லும் முன்பு, இதுபற்றிய நிகழ்ச்சி நிரல் என்னவாக இருக்கப் போகிறது என்பதை தெரிந்து கொள்ள நாங்கள் விரும்புகிறோம். முடிவில்லாமல் அது போயக் கொண்டிருக்குமா? உறுப்பினர்களின் உரைகளுக்கு பொது ஒப்புதல் மூலம் ஒரு கால வரையறை நிர்ணயிக் கலாம் என யோசனை தெரிவிக்கிறேன். அதன் மூலம் இந்த விவா தத்தில் எவ்வளவு அதிகம் முடியுமோ அவ்வளவு அதிக உறுப்பினர்கள் கலந்து கொள்வது சாத்தியமாகக்கூடும்.*

***திரு. துணை அவைத் தலைவர் :*** *இது ஓர் அதிகார பூர்வமான மசோதா என்பதை அவைக்கு தெரிவிக்கிறேன். அவர்கள் இரு நாட்கள் ஒதுக்கியிருக்கிறார்கள். இதில் அவைத் தலைவருக்கு எந்த சம்பந்தமு மில்லை.*

***பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா*** *(ஆஜ்மீர் - மேர்வாரா): ஐயா, இந்துச் சட்டத் தொகுப்பு பற்றிய முடிக்கப் பெறாத எனது உரையை நான் தொடர வேண்டும். ஆனால் ஐயா அதை நான் செய் வதற்கு முன்பு, இந்தச் சிறப்புமாக்க அவையின் தொடரை துவங்கி வைத்த நாளில், மாண்புமிகு பிரதம மந்திரி செய்த அறிவிப்பை தங்கள் கவனத்திற்கு மரியாதையுடன் நான் கொண்டுவர வேண்டியுள்ளது.*

*ஐயா, இந்தச் சட்டமியற்றல் எளிமையானதும் அத்தியவசிய மானதுமாகும் என்று மாண்புமிகு பிரதம மந்திரி மனமுவந்து வருணித் தார். இந்த அவை முன் பரிசீலனையில் உள்ள இந்த மசோதா எளிமை யான ஒன்று அல்ல என்று மரியாதையுடன் ஆட்சேபிக்கிறேன். இந்த மசோதாவை எதிர்ப்பவர்களில் சிலர் தாமதப்படுத்தும் தந்திரத்தைக் கையாளுவதாக மாண்புமிகு பிரதம மந்திரியால் குற்றம் சாட்டப் பட்டனர் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த மசோதா*

போதுமான அளவு விவாதிக்கப்படவில்லை என்பதை இந்தச் சட்டப் பேரவை பற்றியும் இங்கு நடைபெற்று வரும் நடவடிக்கைகள் பற்றியும் நன்கு அறிந்தவர்கள் தயக்கமின்றி ஒப்புக்கொள்வர். இந்தச் சட்ட மியற்றுதல் இந்து சமுதாயத்தின் வாழ்வையும் சாவையும் பாதிக்கும் ஜீவாதாரமான நடவடிக்கை என்று கூறுகிறேன். ஒரு குறுகிய காலத் திற்கே இது சட்டப்பேரவையின் ஆய்வுக்கு உட்பட்டிருக்கிறது. சாரதாச் சட்டம் சொத்தின் மீது பெண்களுக்குள்ள உரிமை சட்டம் ஆகியவை இந்தச் சட்டப்பேரவைக்கு முன் கொண்டுவரப்பட்ட சந்தர்ப்பங்களை தாங்கள் நினைவுகூர்ந்தால், அவை எந்த அளவு வாதப் பிரதிவாதங்களைக் கிளப்பின என்பதைத் தாங்கள் காண முடியும். அந்த மசோதாக்களோடு இந்த மசோதாவை ஒப்பிட்டால், இந்த மசோதா பெருமளவு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. இந்த சமுதாயத்தின் கட்டுமானம் முழுவதையுமே இது பாதிக்கிறது. ஐயா, இந்த மசோதா சட்ட ஏட்டில்வைக்கப்பட்டால் - இதில் என்னுடன் கருத்து வேறுபாடு கொள்பவர்கள் இருக்கலாம்; பிரதம மந்திரி என்னுடன் உடன்படாமல் இருக்கலாம் - இந்து சமுதாயத்தின் முழு அழிவில் என்று எண்ணுகிறேன். 30 கோடி இந்துக்களும் அழிந்து விடுவார்கள் என்ற பொருளில் கூறவில்லை. இந்து சமுதாயத்தின் சீரும் சிறப்பும் பண்புகளும் நிலைபெறாமல் முடிவுக்கு வரும்.

இது ஒரு எளிமையான சட்டமியற்றல் அல்ல. ஆனால் உண்மை என்னவெனில், இந்து சமுதாயத்தின் கட்டமைப்பையும் கலாசாரப் பண்பையும் முற்றிலுமாக இடித்தழிப்பதை நோக்கமாகக் கொண்டது இந்த மசோதா. திருமணச் சட்டத்தை, விவாகரத்துச் சட்டத்தை, சுவீகாரச் சட்டத்தை, சிறுபான்மையினர் மற்றும் காப்பாளர் சட்டத்தை, இந்துக் கூட்டுக் குடும்பச் சட்டத்தை, வாரிசுரிமைச் சட்டத்தை, இந்து சமுதாயத்தின் சிறந்த பண்புகளாக விளங்கும் எல்லாவற்றையும் மாற்றுவதை இது நோக்கமாகக் கொண்டுள்ளது. இந்து சமுயத்தைத் தாங்கி நிற்கும் அடித்தளத்தையே - அதைத் தாங்கி நிற்கும் ஒரு தூண் மட்டுமின்றி எல்லாத் தூண்களையும்.- இது ஆட்டங்காணச் செய்கிறது. எனவே, மக்களின் நலன்களைக் காப்பவர்களான, சட்டப் பேரவை யின் உறுப்பினர்களான நாம் நமது கமையை எவ்வளவு சிறப்பாகச் செய்ய வேண்டுமோ அவ்வளவு சிறப்பாகச் செய்வதும் இந்த நாட்டின் பொதுமக்கள் கருத்து நாம் பரிசீலிக்கும் இந்த மசோதாவை எந்த அளவுக்கு விரும்புகிறது என்பதைக் கண்டறிவதும் சரியானதும் நேர்மையானதுமாகும். ஐயா, இந்தச் சட்டமியற்றலை எளிமை யானது என்று வர்ணிப்பது நியாயமற்றது என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன்.

நான் மேலும் சமர்ப்பித்துக் கொள்வது என்னவெனில், இதை ஒரு எளிமையான சட்டமியற்றல் என்று வர்ணிப்பது பொருத்தமற்றது என்று கூறும் அதே சமயத்தில் அத்தியவசியமானது என்று வர்ணிப்பதும் உகந்ததல்ல. இந்த மசோதாவுக்கு தேவை என்ன என்று பணிவுடன் கேட்கிறேன். புதிய சட்டமன்றம், சுதந்திர இந்தியாவின் வயது வந்தோர் வாக்குரிமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும் இறையாண்மை கொண்ட நாடாளுமன்றம் தேர்ந்தெடுக்கப்படும் வரை இந்த மசோதா சட்ட ஏட்டில் ஏறாமல் இருந்தால் என்ன நிகழும்? உயிர் பெற்றிருக்க முடியாத அளவுக்கு இந்து சமுதாயம் ஒரு நோக் காட்டிற்கு உட்பட்டுள்ளதா? இந்த மசோதாவை நிறைவேற்றிச் சட்டத் தொகுப்பு ஏட்டில் இல்லாமல் சில மாதங்களானால் சமுதாயம், முழுவதும் இடிந்த சரிந்துவிடுமா? எவ்வகையில் பார்த்தாலும் இது அத்தியவசியமானதல்ல என்று வலியுறுத்திக் கூறுகிறேன். இன்னமும் ஓரிரு ஆண்டுகளுக்கு நாம் பொறுத்துக் கொள்ள முடியும். நூற்றாண்டுகளின் சோதனையை, பல நாகரீகங்களுக்கிடையே ஏற்பட்ட மோதுதலை, அந்நிய ஆக்கிரமைப்பு மோதுதலை, நூற்றாண்டு காலமாக அரசியல் ரீதியில் அடிமைபடுத்தப்பட்டதை வெற்றிகரமாகச் சமாளிக்க முடிந்த இந்து சமுதாயம் இந்த மசோதா இல்லாமலே ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு சமாளித்து நிற்க முடியும்.

ஐயா, நாம் காத்திருந்தால் ......

**திரு.எஸ் நாகப்பா** (சென்னை : பொது): ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. இந்த விஷயத்தை கையாள இந்த அவை தகுதிவாய்ந்ததல்ல; புதிய அவை தேர்ந்தெடுக்கும் வரை காத்திருக்கலாம் என மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறி அவை மீது பழிசுமத்துகிறார்.

**திரு. துணை அவைத் தலைவர் :** திரு. நாகப்பா கூறியதில் ஒழுங்குப் பிரச்சினை எதுவும் இல்லை.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஐயா, மதிப்பிற்குரிய என்னுடைய நண்பரின் குறிக்கீடு இருந்தபோதிலும் இப்போது அமைக்கப்பட்டுள்ள இந்த அவை, ஜீவாதாரத் தன்மைக் கொண்ட இந்த சட்டமியற்றலை கையாள முற்றிலுமாகத் தகுதியற்றது என்று மீண்டும் உறுதியுடன் கூறுகிறேன். கேள்வி என்னவெனில் ......

**திரு. தாஜாமுல் உசேன்** (பீஹார் : முஸ்லீம்) : ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. இந்த மசோதாவைப் பரிசீலிக்க இந்த அவை

தகுதி பெற்றது என்று அவைத் தலைவரால் முடிவு செய்யப்பட்டுள்ளது. அந்தத்தீர்ப்பிற்குப்பின், இந்த அவைக்கு தகுதியுள்ளதா இல்லையா என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கேட்கலாமா?

**திரு. துணை அவைத் தலைவர் :** இதில் தீங்கு எதுவும் இல்லை. இந்த மசோதாவைப் பரிசீலிக்க இந்த அவை தகுதி பெற்றுள்ளது என்பது அவை தலைவரின் தீர்ப்பு, அதன்படிதான் மசோதா பரிசீலிக்கப்படுகிறது. வேறு கேள்விகளை எழுப்ப, அல்லது பிற காரணங்களை எழுப்ப மதிப்பிற்குரிய உறுப்பினர் விரும்பினால் சட்ட நுணுக்கங்களை தவிர - அவர் செய்து கொள்ளலாம். முன்னர் பேசிய பேச்சாளர்களில் அநேகமாக எல்லோரும் இந்த விஷயத்தை எழுப்பியுள்ளதால், மீண்டும் அதைப் பற்றியே பேசுவது சலிப்பூட்டுவதாக உள்ளது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஐயா, இங்கு எனது நண்பரின் குறிக்கீடுதான் இந்த கூற்றைக் கூறும்படி என்னைத் தூண்டியது. இந்த ஜீவதாரமான சட்டமியற்றலை நிறைவேற்று. வதற்கு இந்த சட்டப்பேரவைக்குள்ள அரசியல் சட்ட தகுதி பற்றி நான் ஐயம் எழுப்பவில்லை. இங்கு ஒரு முக்கிய பிரச்சினை எழுகிறது. முழுஅதிகாரம் படைத்த சட்டப் பேரவையின் செயல்பாடுகளை நீங்கள் பறித்துக் கொளளலாமா? இந்தியாவின் அரசியல் சாசனத்தை வரையும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக விசேஷமாய் உருவாக்கப்பட்ட இந்த அவை அதைச் செய்ய முடியுமா? எனவே, பிரச்சினையின் அரசியல் சாசன அம்சத்தின் சார்பின்றி, சட்டப் பேரவையின் சட்ட ரீதியான அதிகாரத்தின் சார்பின்றி, அது ஒரு தகைமை பிரச்சினையாகும். தகைமை அபரிமாதமான முக்கியத்துவம் வாய்ந்தது. கற்றறிந்த எனது நண்பரின் தலையீடு ஏற்பட்ட போதிலும், இத்தகைய ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த சட்டமன்ற செயலை கையாளும் முன் இந்த அவை மூன்று தடவை சிந்திக்க வேண்டும் என்று அறுதியிட்டுக் கூற எனக்கு உரிமையுண்டு என்று நினைக்கிறேன். எனது சமர்ப்பணம் என்னவெனில், இந்த சட்டமியற்றல் அத்தியாவசியமில்லை என்பதாகும். மேலும் இந்த விஷயத்தை அவை முன்பு நம்பிக்கை பிரச்சினை என்பதான தன்மை கொண்ட பிரகடனமாக அரசாங்கம் கருதத் தேவையில்லை. இந்தப் பிரச்சினை நிதான மனதுடன் கையாளப்பட வேண்டும். மேலும், இந்தச் சட்டமியற்றல் இந்து சமுதாயத்தின் மொத்த கட்டமைப்பின் மீதும், கலாசாரப் பண்பாட்டின் மீதும் ஏற்படுத்தும் நாசகார விளைவையும் நாம் பரிசீலனையில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

இப்பொழுது, எனது உரையை விட்ட இடத்திற்கு வந்தால், இந்த சட்டமியற்றலில் புதுமை புகுத்தப்பட்டிருக்கும் பிரச்சினைக்கு வந்தால் அதாவது மகளை மகன் வரிசையில் வைத்து ஒரே சமயத்தில் அவளுக்கு வாரிசுரிமை அளிப்பது பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். நான் பணிவாக கூறிக் கொள்வது இந்தப் புதுமை முற்றிலும் தேவையற்றது என்பது; இந்தப் புதுமை இந்து சமுதாயத்தின் கட்டமைப்பையே இடித்துத்தள்ளும். இது எவ்வாறு சாத்தியம் என்று கேட்கிறேன். இந்து சமுதாயத்தின் உண்மை நிலை என்ன? ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான வித்தியாசம், மகனுக்கும் மகளுக்கும் இடையிலான வித்தியாசம், இயல்பாகவே உள்ளார்ந்த அம்சமாகும். மகன் எந்த குடும்பத்தில் அவன் பிறந்தானோ அத்துடன் அவன் வாழ்நாள் முழுவதும் அவனது தோற்றத்திலிருந்து மரணம் வரை இருந்தாக வேண்டும். மகள் ஒரு அன்னியரின் குடும்பத்திற்குச் செல்ல வேண்டும். இந்த உள்ளார்ந்த நிலைமையிலிருந்து எழும் விளைவுகள் எவை? இந்துச் சட்டத்தை வழங்கியவர்கள், திருமறையை நமக்கு அளித்தவர்கள், பெண்பாலர்களுக்கு எதிராக இழிநிலையை மேற்கொண்டவர்களா? சமத்துவமின்மையை அல்லது அநீதியைப் பெண்களுக்கு எதிராக சுமத்தினார்களா? திருமறைகளையும் இந்துச் சட்டத்தையும் தவறாகப் புரிந்து கொண்டதன் விளைவு இது என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன். உண்மையில், தந்தை வழிச் சொத்தின் மீது மகளுக்கு வாரிசுரிமை அளித்தால், அதன் விளைவுகளைப் பற்றி நினைக்க நடுநடுங்கிறேன். சட்டத்துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் தமது உரையில், பின்வருமாறு குறிப்பிட்டார்: ஓர் இந்துவுக்கு பன்னிரண்டு மகன்களும் ஒரு மகளும் இருந்தால், அவரது மரணத்திற்குப்பின் அவரது சொத்து பன்னிரண்டு பங்காகப் பிரிக்க முடியுமெனில், அதை பதிமூன்று பங்காகப் பிரித்தால் என்ன? அதனால் வானமே இடத்து விழுந்துவிடுமா? இதற்கு எதிராக ஓர் இந்துவுக்கு ஒரு மகனும் பன்னிரண்டு மகள்களும் இருந்தால் என்னவாகும் என்பதைப் பரிசீலித்துப் பார்க்கும்படி மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரை பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த விஷயத்தில் என்ன நிகழும்?

**மாண்புமிகு திரு. ஜெகஜீவன்ராம்** (தொழில் துறை அமைச்சர்): சொத்து பதின்மூன்று பாகங்களாகும்.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பார்கவா :** குடும்ப வீடு பதின்மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட வேண்டுமா? ஐயா, கிராமப்புற

இந்தியாவை நினைத்துப்பாருங்கள் - அரண்மனைகளில் வாழும் நகர்ப்புற இந்தியாவைப் பற்றி நினைத்து பார்க்காதீர்கள். ஒரு மிகச் சிறிய வீட்டை உடைய கிராமப்புறக் குடும்பத்தைப் பற்றி நினைத்துப் பாருங்கள். தந்தையின் மரணத்திற்குப் பின், அந்த வீடு பதின் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டால், பன்னிரண்டு மருமகன்களும் அந்த வீட்டில் தங்கவைக்கப்பட வேண்டும் எனில் என்ன நிகழும் ஐயா, உத்தேசிக்கப்பட்டுள்ள சட்டத்தின் கீழ், தான் விரும்பும் எந்த நபரையும் மகள் திருமணம் செய்து கொள்ள முடியும். இந்துவல்லாத ஓர் கணவருடன் திருமண ஒப்பந்தம் செய்து கொள்ளும் துணிச்சல் அவளுக்கு இருந்தாலும் அதற்கு தடையில்லை. வாரிசுரிமை பெறுவதற்கு அது தகுதியின்மை ஆகாது. விளைவு என்னவாகும்? ஒவ்வொரு வீடும், ஒவ்வொரு குடும்பமும் பூசல் நிறைந்த குடும்பமாகும். அதில் சர்ச்சைகள், ஏன் அதைவிட மோசமாக கொலைகளும் கூட நிகழும். எனவே, ஒரு சட்டத்தை இயற்றும்போது மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரால் இந்த அவையின் கவனத்தை ஈர்த்த ஒரு வழக்கின் உதாரணத்தை மட்டும் கவனத்தில் எடுத்துக் கொள்ளக் கூடாது. ஆனால் கற்பனை செய்யக்கூடிய ஒவ்வொரு வகையான வழக்கு பற்றியும் பரிசீலனை செய்ய வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன். அந்த அடிப்படையில்தான் தாங்கள் சட்டத்தை வகுக்க வேண்டும்.

நண்பகல் 12 மணி

இந்து சமூகத்தில் மகளுக்கு உள்ள அந்தஸ்து பற்றி ஏன் இந்தத் தாழ்வு மனப்பான்மை? உண்மையில் இந்து சமூகத்தில் மகள் மிக மேன்மை வாய்ந்த உயர் நிலை பெற்றிருக்கிறாள். பழக்கமில்லாத ஒரு அன்னியர் குடும்பத்தில் நடைபெறும் அவளது திருமணம் தகப்பனார் குடும்பத்துடன் உள்ள அவளது இயல்பான தொடர்பை அறுத்துவிடுவதில்லை. ஒவ்வொரு நிகழ்வின் போதும், பிறப்புகள், இறப்புகள், திருமணங்கள், மற்ற விசேஷங்கள் ஒவ்வொன்றின் போதும் அவள் வந்து சில அத்தியாவசியச் சடங்குகளை நிறைவேற்ற வேண்டியுள்ளது. அச்சமயங்களின் போது இந்துக் குடும்பம் மகளுக்கு அன்பளிப்புகள் வழங்க வேண்டும். அவளுடைய இயல்பான குடும்பத் தொடர்புகள் நெடுகத் தொடர்கின்றன. அவள் ஒரு குழந்தையைப் பெற்றால் அவளுடயை சகோதரர்கள் அவளுக்கு பரிசுகள் வழங்கியாக வேண்டும். ஐயா, மேலும் கூறமுடியுமானால், சகோதரி குடும்பத்தில் நடக்கும் ஒவ்வொரு திருமணத்தின் போதும், ஆண் அல்லது பெண் குழந்தையின் திருமணத்தின் போதும், சகோதரர்கள் அன்பளிப்புகள் வழங்க வேண்டும். ஒவ்வொரு நிகழ்வின் போதும் அன்பளிப்புகள் அத்தியாவசியமானவை. அது இவ்வாறு இருக்க, ஐயா,

சொத்திலிருந்து மகள் எதுவும் பெறவில்லை என்று எவ்வாறு கூற முடியும்? இந்து நாகரீகம், இந்து லட்சியங்கள், இந்துக் கருத்துகள் ஆகியவற்றின் நெறி முறை கண்ணோட்டத்திலிருந்து பரிசீலித்தால் இந்த விஷயம் அணுகப்பட்ட முறை, மனக் கண்ணோட்டம் முற்றிலும் நேரெதிரான தன்மை கொண்ட தவறே என்பது தெளிவு. நாம் கடைப் பிடிக்கும் நெறிமுறை நமது நாட்டை சார்ந்ததாக இல்லையெனில், அது இந்துவாக, இந்தியனாக இல்லையெனில் இந்து எதிர்ப்பு, இந்திய - எதிர்ப்பாக இருந்தால், நிச்சயமாக நீங்கள் எதிரான நிலையைத்தான் மேற்கொள்ள வேண்டும்.

இப்பொழுது, தந்தைவழிச் சொத்தில் மகளுக்கு ஒரு பங்கு கொடுப்பதன் விளைவு என்னவாக இருக்கும் என்பதை நாம் பரிசீலிக்க லாம். முஸ்லீம் குடும்பத்தை எடுத்துக் கொள்ளுங்கள். தந்தைவழிச் சொத்தில் ஒரு பங்கு அளிப்பதன் தவிர்க்க முடியாத விளைவு, தந்தை அல்லது தாயுடன் பிறந்தவர்களின் மகன் அல்லது மகளிடையே நடை பெறும் திருமணம் முற்றிலும் சாதாரணமாகிவிடும். விரைவில் சிறிது காலம் சென்று, தடை செய்யப்பட்ட திருமணங்கள் கூட நீங்கள் விரும்பி னாலும் இல்லாவிட்டாலும் நடைபெறும். தவிர்க்க முடியாத விளை வாக இது இருக்கும். தந்தைவழிச் சொத்தில் மகளுக்கு பங்கு என்பதன் வரலாற்றைத் தேடிப்பார்த்தால், பல நாடுகளில் எகிப்தில், கிரீஸில், ரோமில், அல்லது இஸ்லாமியச் சட்டத்தின் கீழ் நீங்கள் ஒரு முடிவுக்கு வருவீர்கள். ஒரே முடிவு என்னவெனில் : ஒரு பங்கு அளித்தால் தந்தை அல்லது தாயுடன் பிறந்தவர்களின் மகன் அல்லது மகளிடையே திருமணப்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளும் உரிமையை அவசியம் நீங்கள் விரிவுபடுத்தியாக வேண்டும். இந்தக் கண்ணோட்டத்தைப் பொறுத்தவரை, அது பேரிடராகும். இதை எந்த இந்துவும் சகித்துக் கொள்ள முடியாது.

நான் இப்பொழுது அடுத்த விஷயத்தை எடுத்துக் கொள்கிறேன். மகனோடு, மகளுக்கும் சமபங்கு உண்டு என்று இந்தச்சட்டத்தில் வழிவகை செய்தால், நீங்கள் செய்ய நினைப்பதை நிறைவேற்றி விடுவீர்களென நினைக்கிறீர்களா? அதாவது மகளுக்கு சொத்தின் மீது உரிமை வழங்குவதாக நீங்கள் கருதுகிறீர்களா? ஐயா, அது அவ்வாறு இல்லை என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன். அதற்கு மாறாக பல தீங்குகளுக்கு இதன் மூலம் பாதை திறந்துவிடுகிறீர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். இந்து சட்டத்தொகுப்பில் உட்படுத்தப் பட்டுள்ள சட்டத்தின் கீழ் எந்த தந்தையும் தனது மகன்களில் ஒருவ னுக்கு சாதகமாக நல்லெண்ணக் கொடையாக சொத்தை வழங்கலாம்.

அல்லது முழுசொத்தையும் ஓர் உயில் மூலம் ஒழுங்குபடுத்தலாம். இதற்கு ஏதாவது தடை உள்ளதா எனக் கேட்கிறேன். தடை இல்லையெனில், மகளுக்கு ஒரு சமபங்கை அளிப்பதற்கு சமூகம் தயாராகும் வரை, இந்தச் சட்டமியற்றலின் ஒரே விளைவு உயில் ஆவணம் மூலம் சொத்தை தீர்வுசெய்வதேயாகும் அல்லது தந்தையால் மகன்களுக்கு சொத்து முழுவதையும் நல்வெண்ணக் கொடையாக வழங்குவதாகும். ஒரு வழக்கறிஞர் என்ற முறையில் நீதி மன்றங்கள் பற்றி எனக்கு ஓரளவு அனுபவம் உள்ளது - நீதிமன்றங்கள் பற்றி முழுமையான அனுபவம் உள்ள மற்ற நண்பர்களும் இங்கு இருக்கிறார்கள். உயில் அல்லது உயில் அனுபந்தம் சம்பந்தப்பட்ட வழக்குகளில் பத்துக்கு ஒன்பது வழக்குகள் நீதிமன்றத்திற்கு போகின்றன என்பதும் இது நீண்டகால வழக்காடுதலுக்கு இட்டுச் செல்கிறது என்பதும் உண்மையல்லவா? சொத்தை தீர்வு செய்வதற்கான திறமை பற்றிய கேள்விகள் மட்டுமல்லாமல், உயில் அல்லது உயில் அனுபந்தம் நிறைவேற்றுபவர் சுதந்திர ஏஜெண்டாக இருந்தாரா என்பது பற்றிய கேள்விகளும் எழுப்பப்படுகின்றன. உயில்போன்ற சிக்கலான ஆவணத்தின் வெவ்வேறு பிரிவுகளின் வாசக அமைப்பும் வியாக்யானமும் பற்றிய சிக்கலான கேள்விகள் எழுப்பப்படுகின்றன. வழக்கு ஒரு நீதிமன்றத்தில் மட்டுமல்ல, உச்சநீதிமன்றமான பிரிவு கவுன்சிலுக்கும் எடுத்துச் செல்லப்படுகிறது. இதுதான் சூழ்நிலை எனில், மகளின் நலன்களைத் தாங்கள் எவ்வாறு பாதுகாக்கப் போகிறீர்களென நான் கேட்கலாமா? இந்த நாசகரமான சட்டத்தை இயற்றுவதன் மூலம் மகளின் நலனை நீங்கள் பாதுகாக்க மாட்டீர்களென பணிவுடன் கூறுகிறேன். அவளுக்குத் திட்டவட்டமான தீங்கைத்தான் நீங்கள் இழைக்கிறீர்கள். அதைச் சரிசெய்வதற்கு உங்களுக்கு கஷ்டமாக இருக்கும். இந்துக் குடும்பத்தின் உளரீதியான கண்ணோட்டமே மாறும். தந்தை வழிச் சொத்தில் ஒரு மகளுக்கு ஒரு பங்கு உண்டு என்று சட்டத்தில் வழிவகை செய்யப்பட்ட உடனே, தனது சகோதரிக்குப் பாதுகாப்பளித்து அவளது திருமணச் செலவிற்கு ஏற்பாடு செய்ய வேண்டிய தனது கடமையிலிருந்து தான் முற்றிலும் விடுபட்டு விட்டதாக சகோதரன் நினைப்பான். இந்துக் குடும்பங்களின் இன்றைய நிலை என்ன? அசையாச் சொத்துக்கள் வைத்திருக்கும் குடும்பங்களின் சதவிகிதம் என்ன? அது நாற்பது சதவிகித்திற்கு மேல் இருக்காது என்பது எனது கருத்து. மீதி 60 சதவிகிதக் குடும்பங்களின் நிலைமை என்ன? இதை சிந்திக்கவே நடுநடுங்குகிறேன். **மிதாக்ஷரா** சட்டத்தின் கீழ் வரும் சொத்து எதுவுமில்லாத 60 சதவிகிதக் குடும்பங்கள் நிலை என்னவாகும்? ஏனெனில் சட்டப்படி சகோதரி, சகோதரனுக்கு சமமாக ஆக்கப்படுகிறாள். சகோதரியை அவள் திருமணச்

சமயம் வரை வளர்க்கும் கடமையும் வரதட்சணை கொடுப்பது, அவளுக்கு எல்லாவற்றையும் கொடுக்க வேண்டுமெனக் கருதும் அக்கறையுள்ள சகோதரன், தனது பொறுப்பிலிருந்து விடுபட்டதாகக் கருதுவான். இந்த ஷரத்தின் விளைவு இதுவாகத்தான் இருக்கும்; அதை ஈடுகட்டும்படியாகப் பயன்தரத் தக்கது எதுவும் மகளுக்கு இல்லாமல் போகும். எனவே, எனது பணிவான வேண்டுகோள் மகள், மகனுக்கு சமத்துவமானவள் அல்ல என்ற அடிப்படையில்லாமல், மகளிருக்கு எதிராக எந்தவித தப்பெண்ணமும் இல்லாமல்; மகளின் நலனுக்காக, இந்த ஷரத்து நிறைவேற்றப்படக் கூடாது. தனது நலன் களைப் பாதுகாக்க மகளுக்கு மற்ற வழிகள் நிச்சயமாக உள்ளன. தங்களின் கணவரின் சொத்தில் தங்கள் மாமனாரின் சொத்தில் மதிக்கத்தக்க உரிமைகளை அவர்கள் பெறமுடியும்.

***திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி*** (சென்னை : பொது) அதை நாங்கள் ஏற்கனவே அளித்துள்ளோம்.

***பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா:*** அது ஏற்கனவே அளிக்கப்பட்டிருந்தால், தந்தைவழிச் சொத்தில் அவளுக்கு ஒரு பங்கு கொடுப்பதற்கு முற்றிலுமாக எந்த அவசியமும் இல்லை. சட்டத்தை நான் புரிந்துகொண்டபடி ஒரு குறுகிய அளவிலான ஓர் உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. அதை நீங்கள் நிச்சயமாக விரிவுபடுத்தலாம். அவளது மாமனார் சொத்தில் அவளது கணவனுக்கு சமமான உரிமையை மகளுக்கு அளிக்கலாம். அது மிக நல்ல ஆலோசனை; அதை நாம் பரிசீலிக்கலாம்.

இப்பொழுது, ஐயா, இந்தப் புரட்சிகரமான சட்டமியற்றலில் உள்ள மற்ற முக்கியமாகன மாற்றத்திற்கு வருகிறேன். அதாவது கூட்டுக் குடும்ப அந்தஸ்தின் சீர்குலைவு பற்றியது. இதில் ஒரு முக்கிய மான அம்சம் என்னவெனில், இந்த மசோதாவின் 86வது பிரிவின் கீழ், பிறப்பினால் ஏற்படும் உரிமையை சட்டரீதியாக இனி எந்த நீதி மன்றமும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளாது. இந்த ஷரத்தின் விளைவாக எழும் தீங்கான விளைவுகளை நினைக்க நடுக்கமுறு கிறேன். வங்காளமும் அஸ்ஸாமும் ஏற்கனவே ***தாயபாகா*** சட்ட அமைப்பிற்கு உட்பட்டுள்ளன என்று கூறப்படுகிறது. கூட்டுக் குடும்ப அந்தஸ்தை அது அங்கீகரிப்பதில்லை. அதன் கீழ், ஒவ்வொரு குடும்ப உறுப்பினரும் சமத்துவ நிலை பெறுகிறார். அதன் பொருள், இந்த அமைப்பு முறை இந்தியா முழுவதற்கும் விரிவாக்கப்பட வேண்டுமா? ஐந்து கோடி மக்களை இந்த அமைப்பு முறை கட்டுப்படுத்துகிறது

என்றால், மற்ற அமைப்பு முறை இருபது கோடி மக்களைக் கட்டுப் படுத்துகிறது. ஐந்து கோடியின் சட்டம் மற்ற இருபது கோடிக்கும் விரிவுபடுத்த வேண்டுமா? இது முற்றிலும் தவறு என்று கூறுகிறேன். பிறப்பால் அடைகிற உரிமை ஓர் இந்து மகனின் மிகவும் மதிக்கத்தக்க உரிமையாகும். தகப்பனாரின் ஊதாரித்தனம் மற்றும் வீண் செலவு செய்யும் இயல்புக்கு எதிராக வழிவகை செய்யும் உரிமை இது. பல்லாயிரக்கணக்கான இந்துக் குடும்பங்களின் சொத்துக்களை பாதுகாத்தது இந்த மதிப்புமிக்க உரிமை. கேடு விளைவிக்கும் இந்த சட்டமியற்றல் அதன் 86வது பிரிவில் இந்த உரிமையை எடுத்து விடுகிறது. அது மட்டுமல்ல, இந்த தன்னிகரில்லா சட்டமியற்றலின் 87வது பிரிவு அது அமுலுக்கு வரும்போது ஒவ்வொரு கூட்டுக் குடும்பமும் சீர்குலைவதற்கு வழிவகை செய்கிறது. ஒரு கட்டாயப் பாகப்பிரிவினை ஏன் அவசியம் இருக்க வேண்டும்? இந்த ஷரத் துக்கள் எளிமையான தன்மை கொண்டவையல்ல, அவை ஒரு புரட்சிகர மற்றும் தீவிரத் தன்மை கொண்டவை. இந்த அபரிமிதமான தன்மைகொண்ட மாற்றங்களைக் கொண்டு வருவதற்கு நிச்சயமாக காரணம் எதுவும் இல்லை.

அடுத்து, மசோதாவில் உட்படுத்தப்பட்டுள்ள மிக முக்கியமான ஷரத்திற்கு வருகிறேன். திருமண உறவு முறிதல் என்று அந்தப் பிரிவு அழைக்கப்படுகிறது. இது பற்றி கையாளும் பிரிவு 30. திருமண உறவு முறிவு ஏற்படுவதற்கான காரணங்களை அது வகுத்துரைக்கிறது. இதோடு பொருத்தமான மற்றொரு பிரிவு 33. இது திருமணத் தம்பதி யரில் ஒருவர் நீதிமன்ற ஆணை மூலம் பிரிந்திருப்பதற்குக் கோரு வதற்கான காரணங்களை வகுத்துரைக்கிறது. ஒரு திருமணத்தை செல்லாது அல்லது செல்லதக்கதாகாது என்று பிரகடனப்படுத்து வதற்கும் ஷரத்துகள் அதில் உள்ளன. இந்து சட்டம் மற்றும் இந்து சமுதாயத்தைப் பொறுத்தவரை, இவை முற்றிலும் அசாதாரண மானவை ஆகும். உண்மையில், இந்தச் சட்ட ஷரத்துக்களும் மற்றும் இந்த மசோதாவில் இணைக்கப்பட்டுள்ள மற்ற ஷரத்துக்களும் வழக் கறிஞர்களுக்கு ஒரு சுவர்க்கத்தையே உருவாக்கியுள்ளன. ஒரு திருமணம் செல்லாது என்று அறிவிக்க தம்பதியர் ஒரு நீதிமன்றத்திற்குச் செல்லலாம். திருமணத்தை ரத்து செய்வதற்கு தம்பதிகள், ஒரு நீதி மன்றத்திற்குச் செல்லலாம். நீதிமன்ற ஆணை மூலம் பிரிந்து வாழ் வதற்கு அவர்கள் ஒரு நீதிமன்றத்திற்குப் போகலாம். பல ஐரோப்பிய நாடுகளில் மண உறவு முறிவு வழக்குகளிலிருந்து கற்றுக்கொண்ட பாடங்கள் எவை? ஒவ்வொரு ஆறு திருமணங்களில் ஒன்று முறிவு பெறுகிற மேற்கத்திய நாடுகளின் மற்றும் அமெரிக்கா, இங்கிலாந்து நாடுகளின் அனுபவம் நமதுக்கு எந்தப் பாடத்தையும் போதிக்கவில்லை என்பது ஆச்சரியமானதாகவும் திகைப்பூட்டுவதாகவும் உள்ளது. நமது

சமுதாயத்தில், நமது சமுதாயத்தின் எந்தக் கட்டத்திலும் நமக்கு இந்த நிலை இருந்ததில்லை. நீதி மன்றத்திற்குச் செல்வதை நாம் கட்டாய மாக ஏன் புகுத்த வேண்டும்? ஒவ்வொரு திருமண முறிவும் மாவட்ட நீதிமன்றங்கள் மூலமே இருக்க முடியும் என பிரிவு 34 வகை செய்கிறது. ஒவ்வொரு முறிவும் தானாகவே பிரிவு 44ன் கீழ் ஊர்ஜிதத்துக்காக உயர் நீதிமன்றத்திற்குப் போக இந்தப் பிரிவு வகை செய்கிறது. இது வழக்கறிஞர்களின் செல்வச் செழிப்புக்காக கதவைத் திறந்து விடுவ தாகாதா என்று கேட்கத் தோன்றுகிறது. சமுதாயம் நீதிமன்றத்தில் அதிகம் வழக்காடுவதை இந்த சட்டமியற்றல் துவக்கி வைக்கிற தல்லவா? எனவே நீதிமன்ற ஆணை மூலம் பிரிந்து வாழ்வதற்கும் மண உறவு முறிவிற்கும் இணைக்கப்பட்டுள்ள பிரிவுகள் 30ம் 33 ஆகும். இப்பிரிவுகள் இந்து சமுதாய லட்சியங்களுக்கு எதிரானவை மட்டு மல்ல, நமது நாகரீகத்திற்கும் கலாசாரத்திற்கும் நேர்மாறானவை என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன். புனித சமயச் சடங்குகள் முறை யிலான புனித திருமணத்திற்கு இவை நேர் முரண்பட்டவை. ஏனெனில் தம்பதிகள் சலனப்புத்தியோடும் மனம்போன போக்குப்படியும் முடிவுக்கு வரக்கூடிய ஒப்பந்த உறவு அல்ல அது. ஆனால் அது புனிதமான பிணைப்பு. அதனுடைய மூலவேர் சென்ற காலத்தில் உள்ளது. எதிர்காலத் திலும் அதன் தாக்கம் இருக்கும். இந்து திருமணத்தின் கருத்தாகும் அது. நீதிமன்ற ஆணைப்படி பிரிந்து வாழ்வது மற்றும் திருமண முறிவு ஆகியவற்றிற்கான ஷரத்துக்கள் நேர் எதிரானவை. இம்மாதிரியான திருமண உறவுகளுக்கு பழக்கப்பட்டுப் போன - விவாகரத்து போன் றவை எல்லாம் - மேற்கத்திய நாடுகளில் அவர்கள் இவை பற்றிச் சலிப் படைந்து வரும் போது அவர்களில் சிந்தனையாளர்கள், நிதானஸ் தர்கள் இந்த அமைப்பு முறை சமுதாயத்திற்கு நாசகரமானது என்று சிந்தித்து வரும்போது, அதை ஒரு முன்மாதிரியாக பின்பற்ற நாம் முயன்று வருவது நிச்சயமாக விசித்திரமானது. எனது வேண்டுகோள் என்ன வெனில், நீங்கள் அவசியம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். நீதி மன்ற ஆணை சார்ந்து பிரிந்து வாழ்வதற்கு காரணங்கள் யாவை? கணவன் மனைவிக்கோ, மனைவி கணவனுக்கோ துரோகம் இழைத்தல் சம்பந்தமான வழக்கு திருமண உறவுகள் நீதிமன்ற ஆணைப்படி பிரிந்து வாழ்வதன் மூலமோ அல்லது மண உறவு முறிவு மூலமோ முடிவுக் குக் கொண்டுவரப்படலாம் என்று சட்டம் கூறுகிறது. ஜீவ அணுக்கள் தம்பதிகள் முன்னால் இருக்கின்றன. அவையின் கவனத்திற்கு அவற்றைப் பணிவுடன் கொண்டுவர விரும்புகிறேன். ஒரு சண்டை இருந்தால் - குடும்பங்களில் பல சந்தர்பங்களின் சச்சரவு ஏற்படுவது இயல்பே. இந்த மசோதாவில் இந்த ஷரத்துக்கள் இருந்தால், சண்டை

அல்லது குடும்ப கைகலப்பு கூட நிகழும், எந்த சமயத்திலும் நீதிமன்றத்தின் தீர்வைத்தேட தம்பதிகளுக்கு ஊக்கமளிக்கும்; ஐயா, இது மிக மலிவாகிவிடும். ஏனெனில், துரோகக் குற்றச்சாட்டை பெண் தனது கணவனுக்கு எதிராகவோ அல்லது கணவன் மனைவிக்கு எதிராகவோ எளிதாகக் கொண்டுவர முடியும். குடும்பங்களை சீர்குலைப்பதில் அக்கறைகொண்டவர்கள் எல்லா இடங்கிலும் இருக்கிறார்கள். விளைவு என்னவெனில் அற்பமான காரணங்களுக்காக, விவாகரத்து வழக்குகள் வரும். எனவே அது இந்து சமுதாயத்திற்கு நாசகர விளைவை ஏற்படுத்தும். பல நூற்றாண்டுகளாக நமது சமுதாயம் பலவித தாக்குதல்களைச் சமாளித்து நிலை நின்றுள்ளது. தாக்குதல்கள் இருந்த போதிலும் உள்ளார்ந்த **பதிவிரதா பக்தி** அமைப்பு முறையின் காரணமாக அது பின்பற்றத்தக்க ஒரு குறிக்கோளாக உலகில் வெற்றிகரமாக நிலைத்து நின்றுள்ளது. விவாகரத்தை வழக்கமாக கையாண்டு வரும் சமூகங்களுக்கும் கூட இந்த ஷரத்துக்கள் உதவவில்லை. அவை ஒரு பெரும் தடையை எழுப்பி நீதிமன்றத்திற்கு செல்லும்படி அவர்களை நிர்பந்திக்கிறது. நமது கலாசாரத்திற்கும் நாகரீகத்திற்கும், ஏற்றுக் கொள்ளப்பட்ட குறிக்கோளுக்கும் திருமண வாழ்க்கை என்ற உயர்வான கருத்துக்கும் அது எதிராக உள்ளது. ஒரு வாதம் அடிக்கடி திரும்பத்திரும்பக் கூறப்படுகிறது. இந்த சட்டமியற்றலில் தீவிரமான அல்லது புரட்சிகரமானது எதுவும் இல்லை என்றும் திருமணம், விவாகரத்து சம்பந்தமான ஷரத்துக்கள் கட்டாய வற்புறுத்தல் இல்லாத தன்மை வாய்ந்தவை என்றும் சொல்லப்படுகிறது. அது அப்படி எனின், பிரிவு 5 முதல் 51 வரையிலான ஷரத்துக்களை எல்லாம் நீக்கிவிட்டு, மசோதாவில் ஒரே பிரிவு மட்டுமே, அதாவது ஒவ்வொரு இந்துவும் அவர் விரும்பும் எந்த நபரையும் திருமணம் செய்துகொள்ளத் தகுதி பெறுவார் என்பதை மட்டும் விதி ஆக்கலாமே. ஏனெனில் அது மட்டுமே செயல்படுவதற்கு உரிமை அளிக்கும் ஷரத்து ஆகும். அவர் தனது சொந்தத் துணிச்சலில் தனது சகோதரியையே கூடத் திருமணம் செய்து கொள்ளலாம். இவ்வளவு பல பிரிவுகள் கொண்ட வியாகபகமான மசோதாவை அளிப்பதில் பயன் எதுவும் இல்லை. எல்லாவற்றையும் நீக்கிவிட்டு ஒரு பொதுவான பகுதியையே ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? அது எளிமைக்கு முன் மாதிரியாக இருக்கும். மேலும் நாம் கடந்து கொண்டிருக்கும். கலாசாரத்திற்கும் கட்டத்திற்கும் முன்மாதிரியாகத் திகழும் . எனது பணிவான கருத்து என்னவெனில், ஓர் இந்து மற்றும் கீழைய நாடுகளின் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், இந்த ஷரத்துக்கள் வெறுக்கத் தக்கவை. இத்தன்மை வாய்ந்த மசோதாவில் அவை இணைக்கப்பட முடியாதவை, சகித்துக்கொள்ளப்பட முடியாதவை.

நான் அடுத்த விஷயத்திற்கு வருகிறேன். இந்த மசோதாவின் ஷரத்துக்களின்கீழ் பிரிவு 31 தொடர்புடைய பிரிவு தந்தையிடமிருந்தோ அல்லது மாமனாரிடமிருந்தோ அல்லது வேறு நபரிடமிருந்தோ வாரிசுரிமையாக ஒரு பெண்மணிக்கு வரும் ஒவ்வொரு சொத்தும் அவளுக்கு முழுமையான சொந்தச் சொத்து ஆகும். பெண்ணின் சொத்து உரிமையை மாற்றிக் கொடுக்கும் விதிகள் பிரிவு 106 முதல் 109ல் அளிக்கப்பட்டுள்ளன. குடும்ப வாழ்வில் அமைதியை அடைவதற்கு உகந்ததாக இல்லை இந்த ஷரத்துக்கள். நாசகரமான தன்மை கொண்டவை இவை. இந்துக் கருத்து பற்றிய கண்ணோட்டத்திற்கு எதிராக ஒவ்வொரு ஷரத்தும் உள்ளது. ஒரு பெண் உரிமை பெறும் சொத்து, பிரிவு 91 படி பெண்ணின் முழு உரிமை பெற்றச் சொத்தாகும் என்பதை காண்பீர்கள். அது எந்த வரிசைப்படி சென்றடையும் என்பது 106முதல் 109 பிரிவுகளின் கீழ் வரையறுக்கப்பட்டுள்ளது. முதல் உரிமை பெறுபவர்கள் கணவனும் பிள்ளைகளும்; கணவனோ குழந்தைகளோ இல்லையெனில், அப்பொழுது மசோதாவின் கீழ் சொத்தில் உரிமை பெறுபவர்கள் தாயார், தகப்பனார் மற்றும் கணவரின் உறவினர்கள். மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினரையும் பணிவுடன் கேட்டுக்கொள்வது, இந்துக்களின் நாட்டில் தனது மகளிடமிருந்து சொத்தை பெறுவதில் ஆர்வம் காட்டும் எந்தத் தகப்பனோ அல்லது தாயாரோ இருக்கிறார்களா?

**திரு.எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஏன் இல்லை? அதில் தீங்கு என்ன?

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** ஒரு வேளை எனது மதிப்பிற்குரிய நண்பர் இந்தியாவிலிருந்து வரவில்லை. எங்கோ ஒரு வெளிநாட்டிலிருந்து வந்திருப்பார்பால் தோன்றுகிறது.

**திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** நான் தென்னிந்தியாவிலிருந்து வருகிறேன்.

**பண்டிட் முகுத் பீஹாரிலால் பர்கவா :** இந்தியாவில் எந்த தந்தையும் அல்ல தாயும் மகளிடமிருந்து எதையும் பெற்றுக்கொள்ள ஒருபோதும் நினைக்கமாட்டார்கள்.

**திரு. எல். கிருஷ்ணசுவாமி பாரதி:** பஞ்சாபில் அவ்வாறு இருக்கலாம்.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** வட இந்தியா முழுவதிலும் அவ்வாறு அல்ல. தென்னிந்தியாவைப் பற்றி ஆதார அடிப்படையில் என்னால் கூறமுடியாது. வட இந்தியாவைப் பொறுத்த வரை அந்த எண்ணம வெறுப்பூட்டுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக பணத்தையும் சொத்தையும் பற்றி எண்ணுகிறவர்கள் நிச்சயமாக இந்த விதிக்கு விலக்காகும். அவர்களுக்கு தர்மம் என்பது அவர்கள் அக்கறை கொள்ள வேண்டிய விஷயமல்ல. விதிவிலக்குள் பற்றி நான் பேசிக் கொண்டிருக்கவில்லை. வட இந்தியாவின் சாதாரண தகப்பனார் அல்லது தாயாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். தங்களின் மகளிடயிருந்து எதையும் ஏற்றுக் கொள்ளும் எண்ணத்தையே அவர்களது ஆத்மாக்கள் வெறுக்கும். **கன்யாதானத்தில்** ஒரு தகப்பனாரும் மற்ற தரப்பாரும் ஒன்றாக அமர்ந்து மணமகனுக்கு தங்கள் மகளை அளிக்கிறார்கள். மேலும் வரதட்சணையும் நகைகளையும் அளிக் கிறார்கள். அதற்குப் பின்பு தாயாரோ அல்லது தகப்பனாரோ மகளின் வீட்டில் தண்ணீர்கூட அருந்த மாட்டார்கள்.

**திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** நாட்டின் எங்கள் பாகத் தில் அது இவ்வளவு மோசமாக இல்லை.

**பண்டிட் முகத் பீஹாரி லால் பர்கவா :** நாட்டின் உங்கள் பகுதியில் இது ஒரு பழக்கமாக அல்லது நடைமுறையாக இருக்கலாம். மிகப்பெரும்பான்மையோர் இந்தக் கருத்திற்கு எதிராக இருப்பர். மகளிடமிருந்து எந்த சொத்தையும் பெற்றுக்கொள்வது என்பதை அவர்கள் கற்பனை செய்துகூட பார்க்க முடியாது. சொத்துடைமை கைமாறுதல் அமைப்பு முழுவதன் விதிகள் இந்து கருத்திற்கு எதி ரானதை இருப்பர். மகளிடமிருந்து எந்த சொத்தையும் பெற்றுக் கொள்வது என்பதை அவர்கள் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. சொத்துடைமை கைமாறுதல் அமைப்பு முழுவதின் விதிகள் இந்து கருத்திற்கு எதிரானதை அடிப்படையாகக் கொண்டவை. நாட்டின் எனது பக்கத்தின் கிராம பகுதிகளுக்கு செல்லும் சிரமத்தை திரு. பாரதி மேற்கொள்வாரேயாகின், தகப்பனார் அல்லது தாயார் இருக் கட்டும், ஒரு கிராமத்தில் வாழும் மக்கள் அவர்களின் கிராமத்தைச் சேர்ந்த மகள் திருமணம் செய்து கொடுக்கப்பட்ட மற்றொரு கிரா மத்தில் தண்ணீர்கூட அருந்த மாட்டார்கள் என்பதை காண்பார்.

**திரு.எல். கிருஷ்ணசுவாமி பாரதி :** அத்தகைய கிராமத்தின் வழியாகக்கூட அவர்கள் செல்ல மாட்டார்கள் என நான் கேள்விப் படுகிறேன்.

**பண்டிட் முகுத் பீஹாரிலால் பார்கவா:** உரிமை கைமாறுதல் பற்றிய விதிகளின் கீழ் தகப்பனாருக்கும் தாயாருக்கும் அடுத்து ஒரு பெண்ணின் சொத்தின் மீது உரிமை பெறுபவர்கள் யார்? கணவரின் உறவினர்களுக்கு அது போவதற்கு வழிவகை செய்யப்பட்டால் அது வெறுக்கத்தக்கதாகும். மேலும் அது குடும்பப்பூசல்களைக் கிளப்பும். சொத்து தகப்பனிடமிருந்து மகளுக்கு வந்தது என்றால், அது ஏன் கணவரின் உறவினர்களுக்குப் போக வேண்டும்? அதனால்தான் நமது சட்ட மூலவர்கள் பல்வேறு வகைப்பட்ட சீதனத்தை கொடுத்துள்ளார்கள். அது பல்வேறு வகைப்பட்டவர்களுக்குச் சிறுகச் சிறுகச் சென்று சேரும். நமது சட்ட மூலவர்களின் உயர்வான நோக்கங்களைப் புரிந்து கொள்ள நீங்கள்தகுதி வாய்ந்தவர்களல்ல. அவர்கள் முக்கியமாகன வழிவகைகளைஆக்கியிருக்கிறார்கள. அவர்களின் லட்சியங்களை எளிமை என்ற பலிபீடத்தில் தியாகம் செய்யப் பார்க்கிறீர்கள். சீதனம் பற்றிய ஏற்றுக் கொண்ட நமது எண்ணங்களின் படி, சொத்து தகப்பனார் பக்கத்திலிருந்து வந்தால், அதற்கு உரிமை பெற்றவர்கள் தகப்பனாரின் உறவினர்களே. இம்மாதிரி தன்மை கொண்ட ஒரு ஷரத்தை பிரிவுகள் 106 முதல் 109ல் ஏன் இணைக்கக் கூடாது? இந்து தத்துவதற்கு அதிகம் ஏற்புடையதாக இருக்கும் அது.

இப்பொழுது நான் மசோதாவின் மற்ற ஷரத்துக்களுக்கு வருகிறேன். (சட்டத்) தொகுப்பு அமுலுக்கு வரும் நாளில் கூட்டு - குடியிருப்பு உரிமை பொதுக் குடியிருப்பு உரிமை என்று மாற்றப்பட்டதாகக் கருதப்படும். 115 பிரிவில் உள்ள மசோதாவின் ஷரத்துப்படி, குடும்பச் சொத்தை பிரிக்கும்படி கோரி ஒவ்வொரு வாரிசும் நீதிமன்றத்திற்குச் செல்லமுடியும். குடும்பத்தில் சுமூகமான நிலையைப் பாதுகாக்க இந்த ஷரத்து உகந்ததாக உள்ளதா? தகப்பனாரின் மரணத்திற்குப் பின் மகள், மகன் மற்றும் மறைந்த மகனின் விதவை மற்றவர்களும் நீதிமன்றத்திற்கு விரைந்து சென்று 115வது பிரிவின்படி பிரிவினைக்கு உரிமை கோரலாம். இது இஸ்லாம் சட்டம் போன்றிருக்கும். இந்துத் தத்துவதற்கு முற்றிலும் ஒவ்வாததாக இருக்கும். மசோதாவில் இம்மாதிரியான ஷரத்தை அனுமதிக்க முடியாது.

இந்தத் தொகுப்பு கருத்து மோதுதல்களைத் தீர்த்து வைக்கும் என்றும், இந்து தருமத்திலுள்ள எல்லாக் கோளாறுகளுக்கும் பரிகாரம் காணும் பரந்த தன்மை கொண்டது என்றும் கூறப்படுகிறது. விடுபட்டுப்போனவை எதுவும் இல்லையா இந்த மசோதாவில்? அவை நிரப்பப்பட்டாலன்றி அது இந்து சமுதாயத்தை சிதறடித்து விடாதா?

பிரிவுகள் 88 மற்றும் 89ன் கீழ் புனிதமான கடமைகள் என்ற சித்தாந்தத்தை நீங்கள் வழக்கொழியச் செய்கிறீர்கள். கூட்டுக் குடும்பத்தில் இன்று நிலவும் இறைமுறைக் கடன்களை செலுத்த குடும்ப உறுப்பினர்கள் கடமைப்பட்டிருப்பதாக 89 வது பிரிவு கூறுகிறது. தந்தை இறந்ததும் செய்ய வேண்டியவை பற்றி என்ன வழி வகை செய்திருக்கிறீர்கள்? சவ அடக்கச் செலவை ஏற்றுக் கொள்வது யார்? சிரார்த்தம் மற்றும் அம்மாதிரியான சமய சடங்குகள் சம்பந்தப்பட்ட தர்ம காரியங்களுக்கு யார் பொறுப்பு ஏற்பது? சட்டத் தொகுப்பு ஏட்டில் இந்த மசோதா சட்டமாகக் கொண்டு வரப்பட்டால், பல்வேறு பட்ட வாரிசுகளிடையே சண்டை, சச்சரவுகள் எழாதா? ஒரு தந்தை இறந்ததும் ஒவ்வொரு மகனும் மகளும் தந்தையின் சொத்தை தன் வயப்படுத்துவதில் ஈடுப்பட்டிருப்பர். சுயகௌரத்தை மதிக்கும் எந்த ஒரு குடும்பத்திற்கும் அத்தியாவசியமான சிரார்த்தத்தை நடத்த வேண்டிய அவர்களது கடமையை மறந்து விடுவர். இது பற்றி இந்த மசோதாவில் எவ்வித ஏற்பாடும் இல்லை.

சட்டத்தொகுப்பு இந்துக் கூட்டுக் குடும்பத்திற்கு வகை செய்கிறதா? இந்துச் சட்டத்தில் இணை உரிமைச் சொத்திற்கும் கூட்டுக் குடும்பச் சொத்திற்கும் இடையே வேறுபாடு உள்ளது. தொழில் நடத்தும் குடும்பங்களின் எண்ணிக்கை இந்தியாவில் எவ்வளவு? அதற்கு மசோதாவில் ஏதாவது ஒரு ஷரத்து உள்ளதா? கூட்டுக் குடும்பத்தின் தொழிலில் வாரிசுரிமை எவ்வாறு செயல்படும்?

இந்த மசோதா சர்வவியாபகத் தன்மை கொண்டது என்று நீங்கள் உரிமை கொண்டாடுகிறீர்கள். தத்தெடுக்கப்பட்ட மகனுக்கு ஏதாவது வழிவகை செய்திருக்கிறீர்களா? பிரிவு 52 மற்றும் 54ன் கீழ், பதினெட்டு வயதை அடைந்த எந்த ஆணும் தனது மனைவியின் சம்மதத்துடன் மகனைத் தத்தெடுக்க உரிமை பெறுகிறார். தத்து எடுத்தபின், தந்தை தன் சொந்த மகனை பெற்றால், தந்தை வழிச் சொத்தில் மகனின் உரிமைகள் யாவை? தங்களின் இந்தச் சட்டத் தொகுப்பு இந்தப் பிரச்சினைக்கு ஏதாவது தீர்வு தருகிறதா? நமது இந்து சட்ட மூலவர்கள் அல்லது **ஸ்மிருதிக்காரர்கள்** நாட்டின் பல்வேறு பாகங்களுக்கும் ஏற்ப போதுமான வழிவகை செய்துள்ளனர். தந்தையால் ஒரு மகன் தத்து எடுக்கப்பட்டபின் பிறக்கும் மகனின் நிலை என்ன?

**தாயபாகா**வில் அவன் ஒன்றில் பாதியைப் பெறுகிறான்; **மிதாக்ஷரா**வின் கீழ் அவன் மூன்றில் ஒரு பங்கைப் பெறுகிறான். பம்பாய் மாகாணத்தில் நான்கில் ஒரு பங்கை அவன் பெறுகிறான்.

இதற்காக ஷரத்து எதையும் ஏற்படுத்தியிருக்கிறீர்களா? அவ்வாறு செய்யாவிடில், அது குழப்பத்தை, அதுவும் மோசமான குழப்பத்தை ஏற்படுத்தாதா? கூட்டுக் குடும்பச் சொத்தை பாகப் பிரிவினை செய்வதற்கு ஷரத்து கொண்டு வந்திருக்கிறீர்களா? இது போலவே இன்னும் எவ்வளவோ அத்தியாவசியமான விஷயங்கள். அவை இந்துச் சட்டத்தின் சிக்கலான கிளைகள். எனவே நான் பணிவுடன் கூறிக் கொள்வது என்னவெனில் பதில் அளிக்க மிகவும் கஷ்டமான பிரச்சினைகளை இது தோற்றுவிக்கும்.

அடுத்து எழும் கேள்வி, கூட்டுக் குடும்பச் சொத்தில் எந்த பங்கும் இல்லாத ஒரு மகனின் உரிமைகளும் கடமைகளும் யாவை என்பதாகும். இன்றைய சூழ்நிலைமைகளில் பிறப்பு காரணமாக மகன் சொத்தில் உரிமைகள் பெற்றிருக்கிறான். அவனது வாழ்க்கை ஆதாரத்திற்கும் கல்விக்கும் மற்றவற்றிற்கும் அவை அவனுக்கு கவசமாக இருக்கும். பிரிவு 126மற்று 128 உள்ள ஷரத்துக்களை நீங்கள் எனக்குச் சுட்டிக்காட்டலாம். ஒவ்வொரு கணவனின் கடமை அவனது மனைவியின் வாழ்க்கைக்கு பொறுப்பேற்க வேண்டும் என்பதற்கும் தொழு நோய் முதலிய உடல்நலமின்மை அடிப்படையில் தனியாக வாழப் பாதுகாப்புத் தொகையை மனைவி கோரலாம் என்பதற்கும் அவை வழிவகை செய்கின்றன. இங்கும் இது மீண்டும் நீதிமன்ற வழக்குகளுக்கு கதவைத் திறந்துவிடுகிறது. வழக்கறிஞர்களுக்கு ஒரு சுவர்க்கத்தைத் தோற்றுவிக்கிறது. குழந்தைகள் மற்றும் வயதான பெற்றோர்களின் பாதுகாப்பிற்கு பிரிவு 128ல் வகை செய்யப்பட்டுள்ளதாக நீங்கள் கூறுவீர்கள். பிரிவுகள் 126 மற்றும் 128ன் கீழ் வாழ்க்கைப் பாதுகாப்பிற்கு வகை செய்வதன் மூலம் அவர்களின் உரிமைகளை பயனுள்ள வகையில் பாதுகாக்கிறீர்களா? நீங்கள் பாதுகாக்கவில்லை என்று பணிவுடன் கூறிக் கொள்கிறேன். இன்றைய இந்துச் சட்டத்தின் கீழ் அவர்கள் பெற்றுள்ள நிலையைவிட மோசமான நிலையில் அவர்களை வைக்கிறீர்கள். இன்றைய இந்துச் சட்டத்தின் கீழ், குடும்பச் சொத்திலிருந்து பராமரிப்பப் பெற ஒரு மகனுக்கு உள்ளார்ந்த உரிமை இருக்கிறது. தகப்பனார் அல்லது குடும்பத்தின் நிர்வாகி அல்லது **கர்த்தா,** அவனது நலன்களை கவனித்துக் கொள்ளும் கடமையை ஆற்றவில்லையெனில், நீதிமன்றத்தின் மூலம் அவன் பரிகாரம் பெறலாம். பாகப்பிரிவினையைக்கூட அவன் கோரலாம். இந்துச் சட்டத்தில் பாசப்பிரிவினை கோர ஒரு மைனருக்கு வரையறைப் படுத்தப்பட்ட உரிமை இருந்தபோதிலும், ஒரு மைனருக்கு, பாதகமான தீங்கு விளைவிக்கும் வகையில் தகப்பனார் அல்லது குடும்ப நிர்வாகி அல்லது கர்த்தா தமது அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தினால்,

பாகப் பிரிவினைக்குள்ள தனது உரிமையை நிலை நாட்ட அந்த மைனருக்கு சட்டரீதியான பரிகாரம் உண்டென்பதையும் அந்த உரிமையை செயலாக்க நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கலாம் என்பதையும் இந்து சட்டத்தின் ஒவ்வொரு மாணவரும் அறிவார். அது மதிப்புள்ள உரிமை; மதிப்புள்ள அந்த உரிமையை நீங்கள் எடுத்து விடுகிறீர்கள்.

அதுபோலவே, 126வது பிரிவு மனைவியின் பராமரிப்புக்கு வகை செய்துள்ளது, மற்றும் 128வது பிரிவு குழந்தைகள் மற்றும் வயதான பெற்றோர்களின் பராமரிப்பிற்கு வகை செய்துள்ளது என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஒரு கணவர் பணவசதி இல்லாதவராக இருந்தால், அவர் சம்பாதிக்க முடியாமலிருந்தால் தம்மை பாதுகாக்கவே எந்த ஆதாரமும் இல்லாமல் அவர் இருந்தால், அவர் தமது மனைவியை எவ்வாறு பராமரிக்க முடியும்? எனவே மனைவிக்கு வழங்கப்பட்டுள்ள இந்தப் பொய்யான உரிமை ஒரு போலித்தன மான, காகிதத்தில் மட்டும் இருக்கிற உரிமை என்று கூறுகிறேன். இன்றைய இந்துச் சட்டத்தில் ஒவ்வொரு பெண்மணியும் தங்குவதற்கு இடம் பெறவும் பராமரிக்கப்படவும் உரிமை பெற்றுள்ளாள். நிர்வாகியோ அல்லது **கர்த்தாவோ** உரிமையைத் தவறாகப் பயன் படுத்தினால், ஒரு நீதிமன்றத்தின் மூலம் உரிமையை அவள் நிலை நிறுத்த முடியும்.

**திரு.எல். கிருஷ்ணசாமி பாரதி :** அவளது கணவர் பணம் எதுவும் இல்லாதவராக இருந்தாலுமா?

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** கூட்டுக் குடும்பச் சொத்து பற்றி நான் கூறிக் கொண்டிருக்கிறேன். ஒரு சட்டத் தின் மூலம் ஒவ்வொரு நிலச்சொத்தும் மறைந்துவிடும் எல்லாச் சொத்தும் சோஷலிசமயமாக, தேசியமயமாக ஆக்கப்படும் என்று நீங்கள் முடிவு கட்டினால் அது வேறு விஷயம். கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பை அப்படியே வைத்துக் கொள்வதால் இப்போதைய இந்து சட்டத்தின் கீழ் விதவைகள் மற்றும் பெண்கள் ஆகியோர் பெற்றுள்ள அவர்களது உயர்வான உரிமைகளை இழக்கச் செய்கிறீர் கள். போலித்தனமான, காகிதத்தில் மட்டும் இருக்கிற சமத்துவம் என்ற பெயரால், ஒரு தவறை செய்யும் குற்றத்திற்குள்ளாகிறீர்கள். இதற்குப் பரிகாரம் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டமானதாகிவிடும். எனவே எனது பணிவான கருத்து என்னவெனில், எந்த ஒரு கண்ணோட் டத்திலிருந்து பரிசீலித்தாலும் இந்த சட்டமியற்றுவதற்கான மசோதா இந்துச் சட்டக் கோட்பாடுகளுக்கு எதிரானது மட்டுமல்ல இந்து

சமுதாயத்தில் சமாளிக்க முடியாத அல்லது பரிகாரம் காணமுடியாத குழப்பத்தையும் ஏற்படுத்தும்.

ஐயா, உரையை நான் முடிக்கும் முன்பு ஏப்ரல் 2ம் தேதியும் இன்றும் நான் கூறியதைப் பொதுமைப்படுத்திக் கூற வேண்டியுள்ளது. இந்துச் சட்டத்தை தொகுப்பதற்கான அவசியம் எதுவும் இல்லை, விரும்பத்தக்கதுமல்ல. நாட்டில் **சட்டப்படியான** கருத்து இதை விரும்பவில்லை. சட்டப் பேரவை தலையிட வேண்டிய அளவுக்கு கடுமையான தன்மை வாய்ந்த சட்டரீதியான முரண்பாடு எதுவும் இல்லை. ஏப்ரல் 2ம் தேதி எனது உரையில், ராவ் குழு ஆதாரமாகக் கொண்ட சாட்சியங்களின் இயல்பைப் பற்றி நான் ஆராய்ந்தேன். ராவ் குழு பதிவு செய்த சாட்சியங்களின் மிகப் பெரும்பான்மையான கருத்து, ஒவ்வொரு புதுமாதிரியான மாற்றத்திற்கு எதிராக இருந்தது என்பதை நான் சுட்டிக் காட்டினேன். ராவ் குழுவின் மசோதாவுடன் இணைக்கப்பட்ட ஆய்வுக் குழுவிலிருந்துவெளிவந்த இப்போதைய இந்துச் சட்டத் தொகுப்பு மசோதாவில் அவை மேலும் மோசமாக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு விஷயத்திலும், விவாகரத்துப் பிரச்சினையில் மதச் சடங்கு ரீதியான சிவில் திருமணப் பிரச்சினையில் பிரிவு 21ன் கீழ் ஒருவர்இஷ்டம் போல் மதச்சடங்குப் படியான திருமணத்தை சிவில் திருமணமாக மாற்றக் கூடிய விஷயத்தில் எதிர்ப்பு உள்ளது. எல்லாப் பக்கமும் இருந்து எதிர்ப்பு உள்ளது. கூட்டுக் குடும்ப அந்தஸ்தை முடிவுக்கு கொண்டு வருவதற்கு எதிரான கருத்து எல்லாப் பக்கத்திலும் அபரிமிதமாக இருந்தது. எனவே ஒவ்வொரு ஜீவாதார விஷயத்திலும் ராவ் குழுவின் மசோதாவுக்கு அபரிமிதமான எதிர்ப்பு இருந்தது. இப்பொழுதுகூட, நாட்டின் எல்லாப் பக்கங்களிலிருந்தும்நீதித் துறை சார்ந்த வழக்கறிஞர்கள் அமைப்புகளிலிருந்தும், மற்றும் பொது மக்களிடமிருந்தும் வந்து குவியும் கருத்து நிலைகுலைக்கும் தன்மை வாய்ந்த இந்தச் சட்டமியற்றல் தேவையில்லை என்பதைப் பிரதி பலிக்கிறது. எனவே நான் சமர்பித்தப்படி, மீண்டும் திரும்பவும் கூறுகிறேன் இந்துச் சட்டத் தொகுப்பு விரும்பத்தக்கதுமல்ல, அவசியமானதுமல்ல.

மசோதாவில் இடம் பெற்றுள்ள திருமண ஷரத்துக்கள் திருமணத் திற்கு ஒரு தவறான அர்த்தத்தைத் தருகிறது. உண்மையில் மதச் சடங்கின்படியான திருமணம் என்ற போர்வையில் இஸ்லாமிய, கிருஸ்தவ கோட்பாடுகள் திணிக்கப்படுகின்றன. அது போலித்தன மானது. இத்தன்மை வாய்ந்த திருமணத்தை செய்து கொள்வது - ஒருவர் இஷ்டபடி சிவில் திருமணமாக மாற்றிக் கொள்ளக் கூடியது - எந்த இந்துவிற்கும் அவமானகரமானது. இதை அனுமதிக்க முடியாது.

**திரு.எஸ். நாகப்பா :** மதச் சடங்கு முறையிலான திருமணங்களை இந்த மசோதா தடை செய்யவில்லை.

**திரு. பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** தங்களின் இந்த வாதத்திற்கு ஏற்கனவே நான் பதிலளித்துள்ளேன். இந்த வாதம் அவைக்குள்ளும் வெளியிலும் அடிக்கடி திரும்பத்திரும்பக் கூறப்படுவதாகும். இது அதிகாரம் தருகிற நடவடிக்கையாகும். இசைவு தருகிற நடவடிக்கையாகும. அது அவ்வாறாயின், எல்லாவற்றையும் நீக்கிவிடுங்கள். பல வழிகளில் பயன்படுகிற ஒரு பிரிவை மசோதாவில் வைத்துக் கொள்ளுங்கள். ஒவ்வொருவரும் யாரையும் திருமணம் செய்து கொள்ள உரிமை தாருங்கள். மதச் சடங்கு முறையிலான திருமணத்திற்கு நீங்கள் ஏன் அதிக மரியாதை கொடுக்கிறீர்கள்? மசோதாவில் மதச்சடங்கு முறையிலான திருமணத்திற்கு தாங்கள் அளித்துள்ள அந்தஸ்து கேலிக்கூத்தானது தவிர வேறல்ல. காலம் காலமாக மதிக்கப்பட்ட மதச்சடங்கு முறையிலான திருமணத்திற்கு இது ஓர் இழிவாகும். மக்களை ஏமாற்றுவதற்காக, நிலைபேற்றிலுள்ள நடைமுறையிலிருந்து மாறுபாடு ஏதும் இல்லை என்று அவர்களை நம்பவைக்கிற தவறான சொல் பிரயோகம் இது. இந்து சமுதாயத்தின் மீது இழிவை ஏற்படுத்தும் போலித்தனமான செயலாகும். இம்மாதிரி நிகழ்வுகளை சுயமரியாதையுள்ள எந்த இந்துவும் சகித்துக் கொள்வது சாத்தியமல்ல.

பிரிவுகள் 5 முதல் 52வகையான இந்த ஷரத்துக்களை நீக்கிவிடுவது நல்லது. இந்து தத்துவத்திற்கு, இந்துக் கலாசாரத்திற்கு, இந்து நாகரீகத்திற்கு இவை முற்றிலுமாக எதிரானவை. திருமணம் சம்பந்தமான ஷரத்துக்கள் பற்றிய தாழ்மையான எனது கருத்து இது. விவாகரத்து பற்றி நான் எனது கருத்தை ஏற்கனவே கூறியுள்ளேன். சுவீகாரத்தைப் பொறுத்தவரை நான் ஏற்கனவே கூறியதை மீண்டும் கூறுகிறேன். அதாவது சுவீகாரம் என்ற கண்ணோட்டமே இந்துச் சட்டத்தின் ஒரு சிருஷ்டியேயாகும். இந்த நவீன காலத்தில் முன்னோடியான கருத்துக்கள் என்று நீங்கள் கூறிக் கொள்வதன் காரணமாக சுவீகாரம் என்ற தத்துவத்தை ஏற்றுக் கொள்ள உங்களால் முடியவில்லையெனில், சுவீகாரம் என்பதையே முற்றிலுமாக நீக்கிவிடுங்கள். நீங்கள் மசோதாவில் குறிப்பிட்டுள்ளபடி ஒரு குழப்பமான சுவீகாரத்திற்கு வழிவகை செய்யாதீர்கள். மசோதாவின் ஷரத்துக்களின்படி, ஒவ்வொருவரும், ஒவ்வொரு இந்துவும் ஒருவரை மகனாக சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம். கோத்திரம் என்ற கட்டுப்பாடு எதுவும் இல்லை. அந்தஸ்து என்ற கட்டுப்பாடு எதுவும் இல்லை. சம்பந்தப்பட்ட நபர்

எந்த நபரையும் சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம். குடும்பத்தில் ஒரு அன்னியரை சுவீகாரம் எடுப்பது எவ்வாறு நீதிமன்ற வழக்குகளுக்கு தோற்றுவாயாகும் என்பது இந்த சட்ட ஒழுங்குமுறை பற்றி நன்கு அறிந்தவர்களுக்குத் தெரியும். நன்கு நிலை நிறுத்தப்பட்ட வழக்கங்களும் நடைமுறைகளும் உள்ளன. அவற்றிற்கு ஆதரவான புனிதத் தன்மையும் நீதிமன்ற அறிவிப்புகளின் சட்டரீதியான உரிமைகளும் உள்ளன. அவற்றின்படி, அதே கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு குடும்பத்தின் ஓர் உறுப்பினரைத் தான் சுவீகாரம் எடுத்துக் கொள்ள முடியும். இந்த எல்லா நடைமுறைகளும் நன்கு நிலைநிறுத்தப்பட்ட வழக்கங்களும் சுலபமாகத் தூக்கி எறியப்படுகின்றன. இந்தச் செயலின் நாசகரமான விளைவுகளைப் பற்றி சிந்திக்கக்கூட இல்லாமல் அது மேற்கொள்ளப்படுகிறது. இத்தன்மை வாய்ந்த ஷரத்திலிருந்து தோன்றும் பயங்கரமான விளைவுகளைப் பற்றி சிந்திக்க நான் நடுக்க முறுகிறேன். இம்மாதிரியான தன்மை வாய்ந்த சுவீகாரத்திற்கு வழிவகைசெய்வதைவிட, சுவீகாரம் என்ற ஏற்பாட்டையே கைவிட்டு விடுவது மேலானது. உண்மையில் - நான் கூறப் போவதை அனுமதிக்க வேண்டும் - முழுப்பொறுப்பையும் நான் ஏற்றுக் கொள்கிறேன். அதாவது இந்த மசோதாவின் தயாரிப்புக்கு பின்னால் உள்ளவர்கள் இந்துக் கலாசாரம் சம்பந்தப்பட்ட ஒவ்வொன்றிற்கும் எதிராக உள்ளார்ந்த வெறுப்பை கொண்டிருக்கிறார்கள். எனவேதான், சுவீகாரத்திற்கு வகை செய்த இந்துச் சட்ட மூலவர்களின் நோக்கங்கள் எவை என்பதன் மதிப்பை உணராமல் அல்லது அறிந்து கொள்ளாமல் இத்தன்மையான ஷரத்துக்கள் புகுத்தப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். இந்துச் சட்டத்தின் கீழ் ஏற்றுக்கொள்ளப்பட்ட சுவீகாரத்தின் ஒரே நோக்கம் ஒரு மனிதரின் ஆன்மீகத் தேவைகளை நிறைவேற்ற, அவரது மரணத்திற்கு பின் திருப்படையல் போன்றவை அளிக்க அவருக்கு ஒரு மகன் இருக்கலாம் என்பதுதான். சுவீகாரம் என்ற எண்ணத்தின் ஒரே நோக்கம் இதுதான்; எந்த சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம் என்ற ஷரத்தை கொண்டுவருவதன் மூலம் அந்தச் சிந்தனையின் வேரையே நீங்கள் வெட்டிவிடுகிறீர்கள். எனவே, அத்தகைய ஒரு வழிவகை செய்யாதீர்கள். சுவீகாரத்தையே விட்டு விடுங்கள். பல சமுதாயங்களில் அது நிலவவில்லை. உங்களுக்கு அதன் மீது விருப்பமின்மை இருந்தால், அதை இழிவுபடுத்துவதற்கு அவசியம் எங்குள்ளது? சுவீகாரம் என்ற சிந்தனையை ஒரு கேலிக் கூத்தாக ஆக்காதீர்கள்.

ஐயா, இந்த மசோதாவின் ஒவ்வொரு ஷரத்தும் ஒரு கலங்கத்தைக் கொண்டுள்ளது. அது இந்து - எதிர்ப்புத் தன்மையது; எனவே

எந்த இந்துவும் ஏற்றுக் கொள்ள முடியாதது. என்னைப் பொறுத்த வரை, இந்துக்களை அவர்களின் இந்திய நங்கூரங்களிலிருந்து அகற்றி அரேபியா மற்றும் ஜெரூசலேம் கடல்களில் மிதக்க விடும் வஞ்சக நோக்கம் கொண்டதே இந்த மசோதாவை தயாரித்தவர்களின் முயற்சி என்று கருதுகிறேன். இந்து சட்டத் தொகுப்பிற்கு அவசியம் என்ன? 1925ம் ஆண்டின் இந்திய மரபுரிமைச் சட்டத்தின் ஷரத்துக் களை இந்து சமுதாயம் முழுமைக்குமாக ஏன் நீங்கள் விரிவு படுத்தக் கூடாது? இந்த மிக சௌகரியமான, - எளிதான சட்டத்தால் நாம் அதிகம் வசீகரிக்கப்படுவோம் - இந்து சமுதாயம் முழுவதற்கு மாக வழிவகை செய்தால் அது மிகவும் சுலபமாக இருக்கும்.

உரையை நான் முடிக்கும் முன், ஒரு எச்சரிக்கையை விடுப்பது எனது கடமை. இதனை ஒரு நேர்மையான கடமையென்று நான் நினைக்கிறேன். இந்துச் சட்டம் வெளியிலிருந்து வழிகாட்டப்பட்ட தல்ல என்பதை நீங்கள் எல்லோரும் நன்கு அறிவீர்கள். மேலிருந்து திணிக்கப்பட்ட ஒன்றல்ல அது. ஒரு மேலாண்மை அதிகாரம் சிருஷ் டித்ததல்ல அது. எந்த ராஜாவின் அல்லது எந்தச் சட்டப் பேரவை யின் மேலிட உத்தரவல்ல அது. அதன் மிக மேலான சிறப்பம்சம் இதுவே. பல நூற்றாண்டுக் கால யதேச்சையான வளர்ச்சி அது. **ஸ்மிருதி கள்** மற்றும் **நிபந்தாக்களின்** மூலவாசகங்கள் சட்டங்களைப் படைக்க வில்லை. இந்துச் சட்டத்தின் ஏற்றுக் கொள்ளப்பட்ட கோட்பாடுகளை விளக்கி மேற்கோள்களுடன் எடுத்துரைக்க மட்டுமே அவை செய்தன. ஆனால் கற்றறிந்த மூல வாசகங்களின் கோட்பாடுகள் இந்து சமுதாயத்தின் ஆளுமை சக்தியாக ஒரு போதும் இருந்ததில்லை. சமுதாயத்தின் பல்வேறு பிரிவுகளை நெறிப்படுத்தும் நடைமுறைகள் மற்றும் வழக்கங்களை முரணற்று வளர்ப்பதே இந்து சமுதாயத்தின் ஆளுமை சக்தியாக இருந்து வந்துள்ளது. வளர்ச்சி யதேச்சையானது. உண்மையில், யதார்த்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், தொடர்ந்து செயல்படும் சட்டப்பேரவையே இந்து சமுதாயமாகும். ஆனால் அது இந்த அவையைப் போல், தேர்ந்தெடுக்கப்பட்ட சில நபர்களை கொண்டதல்ல. மாறாக அது சமுதாயம் முழுவதன் சட்டப் பேரவையாகும். அது அதன் தேவைகளுக்கு ஏற்ப அதன் சட்டத்தை மாற்றம் செய்து வார்த்து எடுக்கிறது. இந்துச் சட்டத்தின் உன்னத மான அழகே அதுதான். அதன் ஆற்றல் தன்மை, மீள் சக்தித் தன்மை. எளிதாக இயங்கும் தன்மை, தானாகச் செயல்படும் தன்மை, சமுதாயத் தின் மாறிக் கொண்டே இருக்கும் சூழ்நிலைமைகளுக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளும் தன்மை - ஆகிவற்றை அதனிடமிருந்து எடுத்துவிட்டு அதை

நீங்கள் இந்த சட்டமியற்றல் மூலம் திருத்திக் கூறுகிறீர்கள்; உருச் சிதைவு செய்கிறீர்கள். இந்து சட்டத்தில் மாற்றம் செய்வதற்கு முன் நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று கூறும் கடமை இந்த அவையின் பணிவான உறுப்பினர் என்ற முறையில் எனக்குள்ளது. நூற்றாண்டுக்காலமான வளர்ச்சியின் விளைவாக வந்துள்ளது. இந்துச் சட்டம் காலம் காலமாக மதிக்கப்பட்ட அமைப்புகள், பழக்க வழக்கங்கள், நடைமுறைகள் ஆகியவற்றில் தலையிட்டு அவற்றை மாற்றும் முன் ஒரு விஷயத்தை உங்கள் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். நமது உண்மையான இந்தியா அலகாபாத், டெல்லி போன்ற நகரங்களில் வாழவில்லை. உண்மையான இந்தியா ஐந்து லட்சம் கிராமங்களில் வாழ்கிறது. கிராமவாசிகளின் வாழ்க்கை அவர்களின் சமுதாயத்தின் இழை நயத்தோடு பின்னிப் பிணைந்துள்ளது.

இந்தச் சட்டத்தின் மூலம் எத்தகைய மாற்றங்களையும் நீங்கள் செய்தால், மக்கள் நூற்றாண்டுகள் நூற்றாண்டுகளாக, காலம் காலமாக மதிக்கப்பட்ட எந்த நடைமுறைகள், பழக்க வழக்கங்களுக்கு இயல்பாகவே தங்களை உட்படுத்தி கொண்டிருக்கிறார்களோ அவற்றை அவர்களிடமிருந்து நீங்கள் எடுக்கும் முன்பு தங்களுக்குள்ள முழுபலத்தையும் கொண்டு அவர்கள் எதிர்ப்பார்கள். இந்து சமுதாயத்திற்கு எந்த அனுகூலமும் செய்யாமல் இந்தப் புதுமை வாய்ந்த சட்டத்தை தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்த விரும்பும் ஒரு சில அதிருப்தியாளர்களுக்கு நீங்கள் கதவைத் திறந்துவிடுகிறீர்கள்.

**டாக்டர் மனோ மோகன்தாஸ் :** (மேற்கு வங்காளம்) : இந்த அவையின் உறுப்பினர் சிலர் மீது அவர் அவதூறு பொழிகிறார். அதே விஷயத்தை பல தடவை திரும்பத் திரும்பச் சொல்லிவருகிறார்.

**பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா :** இந்த அவையின் எந்த உறுப்பினரையும் பற்றி நான் குறிப்பிடவில்லை. எதிர் கருத்துக் களைக் கேட்க மதிப்பிற்குரிய எனது நண்பர் பொறுமையும் சகிப்புத் தன்மையும் கொண்டிருக்க வேண்டும். இந்துச் சட்டத்தின் இயல்பான முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் இந்த சட்டத்தின் மூலம் ஒரு தடையை நீங்கள் போட முடியாது என்பது எனது கருத்து. இந்த மசோதாவை நீங்கள் நிறைவேற்றினால் இந்துச் சட்டத்தின் அழகுக்கு மேலும் அழகு சேர்ப்பதற்குப் பதிலாக அதை பாழ்ப்படுத்தி விடுவீர்கள். இந்தச் சட்டத்தின் இயல்பு அவ்வளவு கீழ்த்தரமானது; நாசகர மானது. எனவே இது குறித்து ஓர் ஆக்க பூர்வமான அணுகுமுறையைக்

கையாளலாம் என்று கற்பனை செய்வது கடினம். சனாதன கண்ணோட்ட முடையவர்களும் சனாதனக் கண்ணோட்டம் இல்லாதவர்களும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு சமரசத்தை எய்துவற்காக சம்பிரதாயபூர்வ அல்லது சம்பிரதாய பூர்வமில்லாத குழுவில் நாம் சந்திக்க வேண்டும் என்று மாண்புமிகு பிரதமரும் அவைத் தலைவரும் அன்று ஆலோசனை கூறினார்கள். அவரது ஆலோசனையை நான் எதிர்க்கிறேன். ஆனால் இந்து தத்துவதற்கு முற்றிலும் முரணானதும் ஏற்றுக் கொள்ள முடியாததுமான கண்ணோட்டத்திலும் உளப்பாங்கிலும் இந்த மசோதா உருவாகியிருக்கிறது என எண்ணுகிறேன். எனவே இந்த சட்டமியற்றல் பற்றி ஒரு ஆக்கபூர்வமான அணுகுமுறையை எய்த வேண்டும் என்று தீவிரமுயற்சி நாம் மேற்கொண்டாலும் அதை அடைவது மிகக் கஷ்டம்.அரசாங்கம் கடைப்பிடிக்க வேண்டிய மிகப் பாதுகாப்பான வழி என்னவெனில், இந்த மசோதாவை நிறுத்தி வைத்து, மிகப் பொருத்தமான நேரத்திற்கு காத்திருப்பதுதான் அதாவது இந்து சமுதாயத்தின் அமைப்பு முறை முழுவதையும் மாற்றுவதற்கு அதிகாரம் அளிக்கும், வயது வந்தவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சட்டப் பேரவைக்காகக் காத்திருப்பது தான். மக்களின் அத்தகைய அதிகாரத்தைப் பெறும்வரையிலும், இந்து சமுதாயத்திற்கு ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சட்டமியற்றலை பரிசீலிக்க இந்தச் சட்டப் பேரவைக்கு தகுதியில்லை என்று வலியுறுத்திக் கூறுகிறேன்.

இந்த வார்த்தைகளோடு, ஐயா என் இருக்கையில் அமர்கிறேன்.

**திரு.லோகநாத் மிஸ்ரா :** ஓர் உரிமைப் பிரச்சினை. இந்த மசோதாவைப் பரிசீலிப்பதை எதிர்க்க வேண்டும் என்று நான் விரும்பா விடினும், நாம் அண்மையில் நிறைவேற்றிய அரசியல் சாசனமே அதன் பரிசீலனையை முற்றிலுமாக தடுத்து கதவை மூடியுள்ளது என்று நினைக்கிறேன். அரசியல் சாசனம் இன்னமும் அமுலுக்கு வரவில்லை என்று வாதிக்கப்படும் என்பது நிச்சயம். ஆனால் இந்தத் தடவை இந்த மசோதாவை நிறைவேற்றப் போவதில்லை என்று நாம் நிச்சயமாக இருக்கிறோம். இந்த மசோதா நிறைவேற்றப்படும் சமயத்தில் அரசியல் சாசனம் அமுலும் அவசியம் வந்துவிடும். என்னை தாங்கள் அனுமதித்தால், இந்த மசோதா அரசியல் சாசனத்திற்கு எதிரானது என்று கூறுவதற்கான எனது காரணங்களை நான் விரிவாகக் கூறுவேன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** உரிமைப் பிரச்சினையை நான் போதுமான அளவு பரிசீலனை செய்தேன். புதிய அரசியல் சாசனம் இன்னும் நடைமுறைப் படுத்தப்படவில்லை. அது அமுலுக்கு வரவில்லை. அது அமுலுக்கு வந்தால் இந்த மசோதா சட்டமாக நிறை வேற்றப்படுவதற்கு தடங்கலாக இருக்குமா என்ற கேள்விக்கு எந்தப் பதிலும் அளிக்கும் உத்தேசம் எனக்கில்லை. இன்று அமுலில் இருக்கும் அரசியல் சாசனத்தின் கீழ், இந்த மசோதாவை பரிசீலிப்பதற்கு இந்த அவை முற்றிலும் தகுதி பெற்றிருக்கிறது.

**திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை : பொது) இந்த சட்டமியற்றலின் முக்கியத்தின் காரணமாகவும், பேச விரும்புவர் களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதாலும் பேசும் நேரத்தை வரையறைப்படுத்துவதை அவைத் தலைவர் பரிசீலிப்பாரா?

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** இல்லை, இல்லை.

**மதிப்பிற்குரிய வேறு சில உறுப்பினர்கள் :** ஆம், ஆம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** அமைதி, அமைதி.

**திரு.எம்.திருமல் ராவ்** (சென்னை : பொது) : இந்த விஷயம் திரு. சித்வாவால் எழுப்பப்பட்டு தங்களால் பைசல் செய்யப்பட்டது.

**திரு. துணை அவைத்தலைவர் :** திரு. சித்வா வேறு விஷ யத்தை எழுப்பினார். இந்த அவை இவ்விவாதத்தை நாளைத் தொடருமா, இதற்கு எவ்வளவு நேரம் ஒதுக்கப்படும் என்று அவர் தெரிந்து கொள்ள விரும்பினார். இது அதிகாரபூர்வமான மசோதா, எத்தனை நாட்கள் என்று நேரம் ஒதுக்குவது அரசாங்கம்தான் என்று பதிலளித்தேன். ஒரு குறிப்பிட்ட மசோதாவின் மீது நடந்த விவாதம் போதுமானதா அல்லது இல்லையா என்று கூறுவது மட்டுமே அவைத் தலைவருக்குள்ள அதிகாரம். இந்த மசோதாவைப் பொறுத்தவரை, எந்த நேர எல்லையும் திணிக்க முடியாது என்பதை மதிப்பிற்குரிய உறுப் பினர்கள் நன்கு அறிவார்கள்.

மதிப்பிற்குரிய உறுப்பினர் தயவு செய்து பொறுத்திருந்து பார்க் கட்டும். இந்த மசோதா மீதான பொது விவாதம் 1949 பிப்ரவரி 24ம் தேதியே துவங்கியது. 25, 26, 28 மற்றும் மார்ச்1லும், ஏப்ரல் 1,2லும் அது தொடர்ந்தது. மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் 6 மணி எட்டு நிமிடங்

கள் எடுத்துக் கொண்டார். எல்லாமாக 6 நாட்கள் 9 மணி 20 நிமிடம் நாம் செலவழித்துள்ளோம். அதேசமயம் இது வரை மதிப்பிற்குரிய 14 உறுப்பினர்களே பேசியுள்ளார்கள். இப்பொழுது பண்டிட் முகுத் பீஹாரி லால் பர்கவா 2-4-'49ம் தேதி பிற்பகல் 3-15க்கு துவக்கினார். அன்று 5 வரை தொடர்ந்தார். 13/4 மணி நேரம். இன்று 11-50 முதல் 12-57 வரை தொடர்ந்தார். இந்த ரீதியில் போனால் எல்லா உறுப்பினர்களுக்கும் பேசச் சந்தர்ப்பம் அளிக்க சுமார் ஓர் ஆண்டுக் காலம் நாம் உட்கார வேண்டும். உரைகளில் கூறப்பட்ட பல விஷயங்கள் மிகவும் தெளிவூட்டின. உரைகளுக்கு எதிராக நான் எதுவும் கூறவில்லை. பேசுவதற்குச் சந்தர்ப்பங்கள் கோரி பெரும் எண்ணிக்கையான உறுப்பினர்களிடமிருந்து எனக்கு வேண்டுகோள்கள் வந்துள்ளன.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா** (மே. வங்காளம் : பொது) : நாம் எல்லோரும் பெருமளவு இருளில் இருக்கிறோம். எல்லாப் பக்கத்திலிருந்தும் வெளிச்சத்தை நாம் விரும்புகிறோம்.

**திரு. துணை அவைத் தலைவர் :** வெளிச்சம் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் வந்து கொண்டிருக்கிறது. ஆனால் நாம் இந்த வேகத்தில் சென்றால் பல பக்கங்களிலிருந்து வெளிச்சம் வராது. எனவே தங்கள் உரைகளை சாத்தியமான அளவு 1/2 மணி நேரத்திற்குள் கட்டுப் படுத்திக் கொள்ளும்படி மதிப்பிற்குரிய உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். எல்லாத் தீர்மானங்கள் மீதும் பேச மதிப்பிற்குரிய உறுப்பின்களுக்கு 15 நிமிடம் அளிக்கப்படுகிறது. தங்களின் கருத்துக் களை முழு நிறைவாக அந்த நேரத்திற்குள் அவர்களால் முன்வைக்க முடியும். இரண்டு மடங்கு நேரத்தை நான் அளித்துள்ளேன். ஆனால் அது பற்றிக் கட்டாயப்படுத்தவில்லை. இது அவைக்கு எனது ஆலோசனை மட்டுமே. மற்றப்படி, விவாதத்தை நாளை முடிக்க வேண்டுமெனில், அதற்குள் பல உறுப்பினர் உரையாற்றியிருக்கலாம். சில சமயங்களில், திட்டமிட்டோ அல்லது திட்டமிடாமலே, விவாதத்தை முடிவுக்கு கொண்டு வருவதற்குச் சாதகமாக அவை இருந்தால், அதை ஏற்றுக் கொண்டாக வேண்டும். முன் கூட்டியே ஒரு எச்சரிக்கையை நான் கொடுக்கிறேன்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்** (போக்குவரத்துத்துறை மற்றும் ரயில்வேத் துறை ராஜாங்க மந்திரி) : தங்களால் நிர்ணயிக்கப் பட்ட கால அவகாசத்திற்குள் எனது உரையை முடித்துக் கொள்வேன் என்று உறுதி கூறுகிறேன்.

**திரு. துணை அவைத் தலைவர்:** அதை முன் கூட்டியே சொல்ல வேண்டியதில்லை. முடிவு செய்ய மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு விட்டுவிடுகிறேன். அதனால் எல்லா உறுப்பினர்களுக்கும் சம நேர அவகாசம் கிடைக்கும். அவை ஏற்றுக் கொண்டால் ஒவ்வொரு உறுப்பினரும் பேசுவதற்கு அரைமணி நேரம் ஒதுக்குகிறேன்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** ஏற்றுக் கொள்ளப் பட்டது.

**மதிப்பிற்குரிய வேறு சில உறுப்பினர்கள்:** இல்லை, இல்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :**அமைதி, அமைதி. திரு. சாகு ஏதோ கூற விரும்புகிறார்.

**திரு. லட்சுமி நாராயண் சாகு :** (ஒரிஸ்ஸா: பொது) ஐயா, ஐந்து, ஏழு, பத்து நிமிடங்களுக்குள் தங்கள் உரையை கட்டுப்படுத்திக் கொள்ள விருப்பமுள்ள உறுப்பினர்களுக்கு பேச முன்னுரிமை அளிக்கப்படுமா என்று அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** இந்த யோசனையை நான் ஏற்றுக் கொள்ள வேண்டுமெனில், தாங்கள் எத்தனை நிமிடங்கள் எடுத்துக் கொள்ளக்கூடும் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தங்கள் கடிதங்களில் குறிப்பிடுவார்கள் என நம்புகிறேன். அந்த நேரம் முடிந்தவுடன் நான் மணியை அடிப்பேன்.

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** நீங்கள் (அவையை) ஒத்திவைக்கும் முன், ஒரு விஷயம் மட்டும் நான் கூற விரும்புகிறேன். விவாதத்தை முடிவுக்குக் கொண்டு வருவதற்கான தீர்மானத்தை முன்மொழிய உறுப்பினர்களுக்கு உரிமை உள்ளது என்று இப்பொழுது நீங்கள் சொன்னீர்கள். ஆனால் நாடாளுமன்ற நடைமுறைப்படி, போதுமான அளவு விவாதம் நடந்துள்ளதா, இல்லையா என்பதை அல்லது முடிவுக்கு கொண்டு வருவது நியாயமானதா அல்லது இல்லையா என்பதை தீர்மானிக்கும் உரிமை அவைத் தலைவருக்கு உண்டு. அது நன்கு நிலை நிறுத்தப்பட்ட நடைமுறை, அந்த நடைமுறையை தாங்கள் பின்பற்றுவதாகவும் தாங்கள் வற்புறுத்திக் கூறினீர்கள். அந்தக் கூற்றின்படி, நாளை விவாதத்தை முடிவுக்கு கொண்டு வருவதை முன் கூட்டியே, இன்றே கூட தாங்கள் ஏற்றுக் கொண்டாக வேண்டுமா?

**திரு. துணை அவைத் தலைவர்:** முன் கூட்டியே முடிவு செய்வதற்கு அவைத் தலைவருக்கு அதிகாரம் எதுவும் கிடையாது. இப்பொழுது பிற்பகல் 1மணி. அவை 2-30 மணிவரை ஒத்திவைக்கப் படுகிறது.

*2 மணி 30நிமிடங்கள் வரை சட்டப் பேரவை ஒத்திவைக்கப் பட்டது.*

---

*அவை (பிற்பகல்) 2 மணி 30 நிமிடத்திற்கு மீண்டும் கூடியது. திரு. துணை அவைத் தலைவர் (திரு.எம். அனந்த சயனம் ஐய்யங்கார்) தலைமை தாங்கினார்.*

## இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்கிறது.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** பொறுக்குக் குழுவால் பரிசீலித்து அனுப்பப்பட்ட இந்துச் சட்டத்தொகுப்பிற்கு எனது முழு மனதான ஆதரவை அளிக்க நான் எழுந்து நிற்கிறேன். ஐயா, இந்த சட்டம் ஆக்கலின் முன்னேற்றத்தை அதன் ஆரம்ப நிலையிலிருந்து நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன். ராவ் குழுவின் முன் சாட்சியம் அளிக்கும் சலுகையும் எனக்கு இருந்தது. அந்த குழுவிடமிருந்து வந்த பின் அது பல மாற்றங்களுக்கு உட்பட்டுள்ளது; எனது கருத்தில் அது உறுதியான முன்னேற்றம் கண்டுள்ளது.

ஐயா, அரசியல் சாசனத்தை உருவாக்கும் அமைப்பு என்ற நமது தகுதியின்படி நாம் அன்று முடிவு செய்த மகத்தான அரசியல் சாசனத்தின் ஒரு தொடர்ச்சி மட்டுமே இந்த இந்துச் சட்டத் தொகுப்பு என்று நான் எண்ணுகிறேன். ஐயா, அரசியல் சாசனத்தின் அடிப்படை அம்சங்கள் யாவை? ஓர் அரசியல் அமைப்பாக ஐக்கியப்படுத்துதல், முழுமைப்படுத்துதல், பலப்படுத்துதல் ஆகியவற்றை அது அடிப்படையாகக் கொண்டுள்ளது. அது போலவே, இந்து சமுதாயத்தை ஐக்கியப்படுத்துதல், ஒருமைப்படுத்துதல், பலப்படுத்துதல் ஆகிய கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது இந்த மசோதா. ஐயா, இந்து சமுதாயம் ஐக்கியப்படுத்தப்பட்டு, முழுமைப்படுத்தப்பட்டு, பலப்படுத்தப்பட்டாலன்றி நாம் ஆக்கிய மகத்தான அரசியல் சாசனத்தை எவ்வாறு வெற்றிகரமாக நடைமுறைப்படுத்த முடியும் என்பதை நான் அறியேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** விவாகரத்து மூலம் ஐக்கியப்படுத்துவதா?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** அரசியல் ரீதியாக நீங்கள் நன்கு முன்னேற்றம் அடையலாம். பொருளாதாரத் துறையில் சோசலிசத்தை நீங்கள் போதிக்கலாம். ஆனால், சமுதாய தேக்க நிலையில் நம்பிக்கை உள்ளவராக இருப்பது யதார்த்தமற்றது. இந்தியா எல்லாத் துறைகளிலும் முன் செல்ல வேண்டும்; அரசியல் மற்றும் பொருளாதாரத துறைகளில் நமது முன்னேற்றம் எவ்வாறு அத்தியாவசியமோ அவ்வாறே சமூகத் துறையிலும் மாற்றமும் சீர்திருத்தமும் அத்தியாவசியமாகும் என நினைக்கிறேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** திருமணத்திலும் ஜனநாயகமா?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** இந்து சமுதாயத்திற்கு மட்டும் ஓர் ஒருங்கிணைக்கப்பட்ட தொகுப்பை தயாரிப்பதைவிட நாம் ஏன் நாடுமுழுவதற்கும் ஒரு தொகுப்பை தயாரிக்கக் கூடாது என்று மதிப்பிற்குரிய நண்பர்கள் கேட்கலாம். நல்லது ஐயா, அரசியல் சாசனத்தை நாம் உருவாக்கிக் கொண்டிருந்த பொழுது, மாகாணங்களை ஏன் தொடர்ந்து வைத்திருக்க வேண்டும் இந்திய அரசாங்க சட்டத்தின் மீது ஏன் கட்டமைப்பை உண்டாக்க வேண்டும், ராஜப் பிரமுகர்களை ஏன் நாம் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று கேட்டுக் கொண்டிருந்தவர்கள் பலர் இருந்தனர். ஐயா, பதிலுக்கு எங்களது வாதம் எதுவாக இருந்ததெனில், மாற்றமும் சீர்த்திருத்தமும் நாம் விரும்பிய அதே சமயம், எவ்வளவு சாத்தியமோ அந்த அளவுக்கு நிலவும் அஸ்திவாரத்தின் மீது அந்த மாற்றத்தை கட்ட விரும்பினோம். நிலவும் சக்திகளையும் மாற்றம் மற்றும் சீர்திருத்தம் விளைக்கிற சக்திகளாயும் (புத்திசாலித்தனமாக) கூர்மதியுடன் பழுதில்லாமல் பாதுகாக்க விரும்பினோம். அதே கோட்பாட்டை அடிப்டையாகக் கொண்டதுதான் இந்த மசோதா. இந்துச் சட்டத்தில் நவீன தேவைகள், கருத்துக்களுக்கு முரணில்லாதவற்றில் எவ்வளவு அதிகம் பேணிப் பாதுகாக்க முடியுமோ அவற்றைப் பாதுகாக்க இந்த மசோதா முயல்கிறது. எங்கெல்லாம் மாற்றங்கள் அவசியமோ அங்கு மாற்றங்களைக் கொண்டு வர முயலுகிறது. இந்த ஒரே வழியில்தான் நாடு முழுவதும், இந்து சமுதாயமும் எந்தவித உள்நாட்டுச் சீர்குலைவும், பலாத்காரப் புரட்சிகள் இல்லாமலும் முன்னேற முடியும் என நான் கருதுகிறேன். ஐயா, சமாதானபூர்வமானதும் தன்னார்வபூர்வமானதுமான மாற்றமே

எங்கள் கொள்கை. சமூகத்துறையில் சமாதானபூர்வமான மாற்றத்துக்கு வழி கோலும் முயற்சியே இந்த மசோதா.

ஐயா, மசோதாவின் பிரிவுகளைப் பற்றி நான் பேச விரும்ப வில்லை. அதற்கான நேரம் இன்னும் வரவில்லை. பிரிவு பிரிவாக நாம் எடுத்துக் கொள்ளும்போது, குறிப்பிட்ட ஷரத்துக்களை பரிசீலிப் பதற்கான நேரம் அதுவேயாகும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** அந்தக் கட்டம் வராது.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம் :** நல்லது. நாம் பார்க்கலாம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** விரிவான அளவில் வெளியில் லத்தித் தாக்குதல் நடக்கும் வரையில் இல்லை.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** அரசியல் சாசனம் ஒரு போதும் நிறைவேற்றப்படமாட்டாது என்று ஜோதிடம் கூறியவர் களும் இருந்தனர். ஆனால் நாம் அதை நிறைவேற்றி விட்டோம். அதே போல், சட்டப் பதிவேட்டில் இந்த மசோதாவையும் சேர்க்கப் போகிறோம்.

ஐயா, குறிப்பிட்ட பிரிவுக்கும் பாகங்களும் சில பல மாற்றங் களுக்கு உட்படாதவை என்று நான் கூறவில்லை.

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** சில.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** இந்த மசோதாவில் உள்ள பரந்த கோட்பாடுகளை மட்டும் நான் எடுத்துக் கொள்கிறேன். எதிர்காலத்தில் ஒரு சந்தர்ப்பத்திற்கு இதர விவரங்களை விட்டுவிடுகிறேன்.

ஐயா, இந்த மசோதா நான்கு அம்சங்களைக் கொண்டுள்ளது - அதாவது தொகுப்பது - ஒன்றிணைப்பது, அறிவுக்குப் பொருத்தமாக இருப்பது மற்றும் சீர்திருத்துவது ஆகியவையே அந்த நான்கு அம்சங்கள்.

**திருமதி ரோகிணி குமார் சௌதுரி** (அஸ்ஸாம் : பொது): மோசடியும் கூட.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** நல்லது. அந்தப் பாகத்தைத் தங்களுக்கு விட்டுவிடுகிறேன். சுவீகாரம், சிறுபான்மையினர். காப்பாளர்

மற்றும் ஜீவனாம்சம் பற்றிய பாகங்களைப் பொறுத்தவரை, அவை இப்பொழுது நிலவும் இந்துச் சட்டத்தின் தொகுப்பே. **(மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்) :** கேள்வி? நீங்கள் கேள்வி கேட்கலாம். ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினரைவிட அதிக திறமை வாய்ந்தவர் சட்ட வல்லுநர் திரு.பி.என். ராவ் என்று நினைக்கிறேன்.

**திரு. பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அது நிச்சயமாகச் சரியான வாதமல்ல. அவர் இருக்கலாம், அல்லது இல்லாமல் இருக்கலாம். ஒரு வாதத்தை நான் புரிந்து கொள்ள முடியும் - ஆனால் இம் மாதிரிப் பேச்சை நான் சகித்துக் கொள்ள முடியாது.

**திரு. துணை அவைத் தலைவர் :** அமைதி, அமைதி.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** இங்குள்ள எவரையும் விட ஒரு மனிதர் மிக உயர்வானவர் என்று வாதிப்பதன் பொருள் என்ன?

**திரு.துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய எல்லா உறுப்பினர்களும் ஒரே நேரத்தில் பேசுவதில் அர்த்தமில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு அவரது நேரம் வரும்; இந்த அவை விரும்புகிறவரை நான் உட்கார்ந்திருக்கத் தயார்.

சர்.பி.என். ராவ் பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டதைப் பொறுத்தவரை, அவர் கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் ஒரு நீதிபதியாக இருந்தார் என்பதை ஒரு வேளை குறிப்பிட்டிருக்கலாம். ஒரு குறிப்பிட்ட நபரின் கருத்து மிக உயர்வானது என்று கூறுவது நாடாளுமன்ற முறையை மீறியதல்ல. ஒரு தனி நபர் என்ற முறையில், அவையின் மற்ற உறுப்பினரைவிட அவரைத் தாம் அதிகம் தெரிந்திருப்பதாக ஒருவேளை பொருள்படுத்தியிருக்கலாம்.

**மாண்புமிகு திரு.கே.சந்தானம்:** ஐயா, கேள்வி கேட்டவரைவிட சர் பி.என். ராவ் சிறந்த சட்ட நிபுணர் என்று மட்டுமே நான் கூறினேன்.

**திருமதி ரோகிணி குமார் சௌதுரி :** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. இந்து சட்டம் முற்றிலுமாகவும் மிக நெருக்கமாகவும் இந்து மதத்தோடு சம்பந்தப்பட்டது. இந்த சட்டக் கோட்பாடுகள் பற்றிய நிபுணராக ஓர் இந்து அல்லாதவர் இருப்பதை எவரும் சகித்துக் கொள்ள முடியுமா?

**திரு. துணை அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர்களிடையே கருத்துவேறுபாடுகள் இருப்பதை நான் நன்கு புரிந்து கொள்ள முடியும். கூச்சலிடுவதற்கும், உணர்ச்சி வசப்படுவதற்கும் இடமே இல்லை. முதலில் பொறுமை வேண்டும். எல்லா உறுப்பினர்களும் சுமுகமான சூழ்நிலையில் விவாதித்து நிச்சயமாக தங்கள் பங்கை ஆற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

**திரு.எல். கிருஷ்ண சுவாமி பாரதி:** இப்பொழுது குறுக்கிட்டுப் பேசிய மதிப்பிற்குரிய உறுப்பினர், திரு. பி.என்.ராவ் ஓர் இந்துவல்ல என்று கூறுவதாகத் தோன்றுகிறது. இது அவமானப் படுத்துவதாகும். இதை அனுமதிக்க முடியாது. திரு.பி.என்.ராவ் இங்கு இல்லை. ஐயா, அவரைப் பாதுகாக்க வேண்டியது தங்களது கடமை.

**திரு. துணை அவைத்தலைவர் :** ஒரு குறிப்பிட்ட நபர் எந்த மதத்தைச் சார்ந்தவர் என்று கூறும் நிலையில் நான் இல்லை. தனிப்பட்ட முறையில் எனக்கு அது தெரியாது. ஆனால் உறுப்பினர்கள் ஓர் எல்லைக்குள் தங்களை வைத்துக் கொள்ள வேண்டும். அவர்களுக்கு சில உரிமைகள் இருப்பதன் காரணமாக மற்றவர்களை இழிவுபடுத்தக் கூடாது. மதிப்பிற்குரிய எந்த ஓர் உறுப்பினரும் அவதூறாகப் பேசுவது தவறாகும்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** ஐயா, குறுக்கீடுகளை நான் பொருட்படுத்தவில்லை. ஆனால் இந்த மசோதாவிற்கு எதிர்ப்பாக இருப்பவர்கள் இம்மாதிரி தந்திரோபாயங்களில் தங்களுக்கு ஏகபோகம் இருப்பதாக நினைத்தால், அவர்கள் தவறு செய்கிறார்கள். நான் எல்லா வித அழுத்தத்துடன் திரு.பி.என். ராவ் இந்த அவையில் உள்ள எவரையும் போல் ஒரு நல்ல இந்து என்று அறுதியிட்டுக் கூறுகிறேன். என்னைப் பொறுத்தவரை எனது முன்னோர்கள் மிகவும் சனாதன இந்துக்களிலிருந்து வந்தவர்கள். இந்த நேரம் வரை, ஒரு சிறிய மீன் துண்டு கூட நான் உண்டதில்லை. நான் அதிகம் சமயக் கோட்பாடு கொண்டவன் என்று உரிமைகோர முடியும்.

**திரு.எச்.வி.காமத் :** மீன் சாப்பிடுவது அல்லது சாப்பிடாதது சமய மரபு மாறாததற்கு ஒரு பரிசோதனையா?

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** நாட்டின் எனது பாகத்தில் மீன் அருந்துவது அதிகமாக புறக்கோட்பாடாகக் கருதப்படுகிறது.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** நாட்டின் என் பாகத்தில் இட்லியும் ரசமும் சாப்பிடுவது மிகவும் ஆட்சேபகரமானவை.

**திரு. துணை அவைத் தலைவர் :** இட்லிகளையும் மீனையும் விட அதிகம் நீடித்திருக்கும் விஷயங்களான திருமணம், விவாகரத்து ஆகிய விஷயங்களுக்கு மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் வரலாம்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** நான் மீண்டும் கூறுகிறேன். அதாவது, தத்தெடுப்பது பாதுகாப்பாளர், சிறுபான்மையினர் முதலியவற்றைப் பொறுத்தவரை, அவையாவும் நிலவும் சட்டத்தின் ஒழுங்குபடுத்தல்தான்; பிரிட்டிஷ் நீதிமன்றங்களின் தீர்ப்புகளிலிருந்து இதனைக் கண்டு கொள்ளலாம். மனு எழுதியுள்ளது எதுவாகயிருப்பினும், யாக்ஞவல்கியர் எழுதியுள்ளது எதுவாயிருப்பினும், இன்றுள்ள இந்து சட்டம் கடந்த நூற்று ஐம்பது வருங்களாக பிரிட்டிஷ் நீதிமன்றங்களில் வியாக்யானம் செய்யப்பட்டவைதான். இந்த வியாக்யானங்களுக்கு எதிராக வாதிட மனுவும் யாக்ஞவல்கியரும் முற்றிலும் சக்தியற்றவர்கள். எனவே இப்பொழுது இந்துச் சட்டம் இந்த நாட்டில் பிரிட்டிஷ் நீதிபதிகளால் விளக்கி வகைப்படுத்தப்பட்டதுதான்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** பிரிட்டிஷ் நீதிபதிகளா?

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** பிரிட்டிஷ் அல்லது பிரிட்டிஷ் மயமாக்கப்பட்ட நீதிபதிகள். ஐயா, புராதனச் சட்டத்தை இன்றைய இந்துச் சட்டமாக பிரிட்டிஷ் நீதிபதிகள் மாற்றியது போல அந்த சட்டத்தை மாற்ற குறைந்த பட்சம் அவர்கள் போல் நாமும் தகுதி பெற்றிருக்கிறோம்.

ஐயா, இந்து சட்டத் தொகுப்பின் அடுத்த அம்சத்திற்கு - ஒன்றிணைக்கப்படும் பகுதிக்கு - இப்பொழுது வருகிறேன். சட்டத்தைப் பொறுத்தவரை, ஒன்றிணைக்கப்படுவது எதுவும் தேவையில்லை என்றும், நாட்டின் ஒவ்வொரு பாகமும் வட்டாரச் சட்டத்தை வைத்துக் கொள்ளலாம் என்றும், எதிர்காலத்தை நோக்கும் எந்த இந்துவும் கூற முடியும் என்பது பற்றி நான் ஆச்சரியப்படுகிறேன். வங்காளத்தில் நமக்கு **தாயபாகாச்** சட்டம் உள்ளது. மலபாரில் அவர்கள் **மருமக்கதாயச்** சட்டத்தை வைத்துக் கொள்ளலாம். இதன் பொருள் என்ன? அதாவது புராதன நாட்களில் இருந்தது போல ஒவ்வொரு விஷயமும் இருக்கவேண்டும். அரசியலிலும் பொருளாதாரத்திலும் நாம் கி.பி. 1950ல்

இருப்போம். ஆனால் சட்டத்தைப் பொறுத்தவரை நாம் கி.மு. 1950ல் இருப்போம் என்று கூறும் மனிதர்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இவ்வாறு கூறுவது முற்றிலும் ஒரு சீர்குலைக்கும், நாசகரமான கூற்றேயாகும். இந்துக்கள் ஒரு சமுதாயமாக இருக்க வேண்டுமெனில், அவர்களுக்கு ஆற்றல் இருக்க வேண்டுமெனில், அவர்கள் எல்லோரும் ஒரு சட்டத்தின் கீழ் - அது **தாயபாகா** அல்லது **மிதாக்ஷரா** - அவசியம் வந்தாக வேண்டும். சிலர் ''நாம் **மிதாக்ஷரா**வை வைத்துக் கொள்வோம்'' அல்லது ''வங்காளம் **மிதாக்ஷரா**வின் கீழ் வரட்டும்'' என்று கூறுவதை நான் புரிந்து கொள்ள முடியும். எல்லோரும் **தாயபாகா**வின் கீழ் வரட்டும் என்று மற்றவர்கள் சொல்வதை நான் புரிந்து கொள்ள முடியும். பல்வேறு பட்ட பிராந்திய குழுக்களாக ஒவ்வொன்றும் தனது சட்டத்தை வைத்துக் கொண்டு துண்டு துண்டாக சிதறி போக வேண்டும் என்று கூறுவது - அப்படியாயின் ஒரு வங்காளி மலபாருக்குச் சென்றால் மூன்றுவிதமான இந்து சட்டங்களுக்கு நீதிமன்றங்கள் வியாக்யானம் செய்ய வேண்டும் - இந்து சமுதாயத்தின் அழிவைப் பிரகடனப்படுத்துவதாகும் என்று நான் கருதுகிறேன். ஐயா, இந்து சமுதாயத்தின் எதிரிகளுக்கு இதைவிட நல்லது - அதாவது இந்துக்கள் ஒரு டஜன் வட்டாரச் சட்டங்களால் ஆட்சி செய்யப்பட வேண்டும் என்பது - இருக்க முடியாது. ஐயா, இந்த மசோதாவால் இப்பொழுதாவது இந்து சமுதாயத்தை ஓர் ஒன்றிணைக்கப்பட்டச்சட்டத்தின் கீழ் கொண்டுவருவோம். எந்தச்சட்டமாகவும் இருக்கட்டும், ஆனால் இந்து சமுதாயம் முழுமைக்கும் ஓர் ஒன்றிணைந்த சட்டமாக அது இருக்க வேண்டும். ஐயா, இந்த மசோதா......

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. மதிப்பிற்குரிய உறுப்பினர் அவையில் வகுப்புவாதம் பேசுகிறார். எல்லா இந்துக்களையும் ஒன்றிணைப்பது பற்றி - ஒரு வேளை முஸ்லீம்களுக்கும் மற்றவர்களுக்கும் - எதிராக - அவர் பேசுகிறார். இந்துக்களுக்கு ஒரு சட்டத்தை அவர் விரும்புகிறார். எனவே அவர் வகுப்புவாதத்தை போதிக்கிறார்.

**திரு. துணை அவைத்தலைவர் :** இந்த ஒழுங்குப் பிரச்சினை விவாதத்திற்கு உயிர்த்துடிப்பூட்டவே செய்கிறது. ஆனால் அது உண்மையில் எந்த ஒழுங்கு பிரச்சினையுமல்ல.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** ஐயா, இந்து மசோதா சட்டப்பதிவேட்டில் வைக்கப்படும் நாளில் நாடு ஒன்றுபட்டு இணையும்

முழு நடைமுறை துவங்குகிறது. இந்த நாட்டில் உள்ள மற்ற இந்தியர்களும் இந்தச் சட்டத்திற்கு ஒத்துவர அதிக காலம் ஆகாது. அவசியமாயின் அவர்களுகாக சில சிறிய மாற்றங்களைச் செய்யலாம். அதனால், நாடு முழுவதும் ஒரு சிவில் சட்டத் தொகுப்பின் கீழ் வரும். இந்தப் படிப்படியான வளர்ச்சி துண்டு துண்டாகப் போகும் போக்கல்ல; மாறாக ஓர் ஒன்றிணைக்கும் வளர்ச்சிப்போக்கு. இந்த வளர்ச்சிப்போக்கு தொடரட்டும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அது வெளியில் போய் கொண்டிருக்கிறது.

**திருமதி ஜி.துர்க்காபாய் :** இல்லை, இல்லை. அது உள்ளே வந்து கொண்டிருக்கிறது.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** உங்களால் ஊக்குவிக்கப் பட்டு.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** இந்த அவையில் அதிக காலம் இருந்திருக்கிறேன். இந்த குறுக்கீடுகளைப் பற்றி நான் கவலைப் படவில்லை.

இப்பொழுது கேள்வி என்னவெனில், **தாயபாகா** சட்டத்திற்கு நாம் முதன்மை அளிக்க வேண்டுமா அல்லது **மிதாக்ஷராவுக்கா?** எனது நண்பர் பண்டிட் முகுத் பீஹாரிலால் கூறினார் **மிதாக்ஷராவை** இருபது கோடி மக்கள் பின்பற்றுகிறார்கள், **தாயபாகாவை** ஐந்து கோடி பேர்தான் பின்பற்றுகிறார்கள் என்று. இருபது கோடி மக்களின் சட்டத்தை விட்டுவிட்டு ஐந்து கோடி பேர்களின் சட்டத்தை நாம் ஏன் தேர்ந்தெடுக்கவேண்டும்? ஒப்பு நோக்கில் **மிதாக்ஷராச்** சட்டம் புராதன கிராம சமூகங்களின் தேவைகளுக்கு பயன்படுத்துவதற்காக உத்தேசிக்கப்பட்டது. அந்த சமூகங்களின் பிரதான சொத்து விவசாய நிலமாக இருந்தது. அந்த அடிப்படையில்தான் பிறப்புரிமையும் மற்றும் எந்த ஓர் உரிமையும் வகுக்கப்பட்டன. நாகரீக முதிர்ச்சியற்ற அந்த சமுதாயத்திலிருந்து நவீன காலத்திற்கு நாம் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறோம். இதில் சொத்து அசையா சொத்திலிருந்து அசையும் சொத்தாகப் போய்க் கொண்டிருக்கிறது. அசையாச் சொத்துக்கள் குறைந்து கொண்டும் அசையும் சொத்துக்கள் அதிகரித்தும் வருகின்றன. அசையாச் சொத்துக்கள் கூட அசையும் சொத்தாக, பங்குகளாக, சேமிக்கும் வைப்புக் தொகைகளாக, பிணை

வைப்புத் தொகைகளாக மாற்றப்பட்டு வருகின்றனர். எனவே, உணரத்தக்க அசையாச் சொத்திலிருந்து உணர முடியாத மற்றும் நினைவியலான சொத்துக்குச் செல்லும் இந்த மாற்றங்களுக்கு ஏற்ப நமது அமைப்பை நாம் மாற்றிக் கொள்ள வேண்டும். சொத்து உணரமுடியாததாக உள்ளதால், பிறப்பு உரிமை என்பது உண்மையில் நடைமுறை சாத்தியமானதல்ல. அதை உங்களால் வலியுறுத்தி நடைமுறைப்படுத்த முடியாது. உறுதியீட்டு ஆவணங்களையோ அல்லது பங்குகளையோ அல்லது அசையும் சொத்தையோ விற்பனை செய்ய தந்தைக்கு எப்பொழுதும் சாத்தியமே. பங்குகளின் வாரிசுரிமை பெற ஒரு மகனுக்குச் சாத்தியமல்ல. விவசாயத் சொத்தில் ஒரு பங்கை வாரிசுரிமையாகப் பெறுவது மகனுக்குச் சாத்தியமே. பண உறுதியீட்டு ஆவணங்களில் அல்லது அசையும் சொத்துக்களில் வாரிசுரிமை பெறுவது அவனுக்குச் சாத்தியமல்ல. எனவேதான், **மிதாக்ஷரா** அமைப்புச் சட்டத்தைவிட **தாயபாகா** அமைப்புச் சட்டத்திற்கு இந்த மசோதா முன்னுரிமை அளித்துள்ளது. **மிதாக்ஷரா** சட்டத்தின்படி இருபது கோடி மக்களை அவமதிப்பதாலல்ல; அல்லது **தாயபாகா** அமைப்புச் சட்டத்திற்கு எந்த விசேஷ முன்னுரிமையும் உள்ளதால் அல்ல. இப்பொழுது, பிறப்பினால் வாரிசுரிமை பெறுவது எஞ்சுநர் உரிமை பெறுவது ஆகியவை எல்லாம் பழைமையானவையாக, நடைமுறை சாத்தியமற்ற ஏற்பாடுகளாக ஆகிவிட்டன.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** பழைமையானது.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** ஒன்று சட்டத்தின் மூலம் அவற்றை கைவிட்டு விடுகிறோம் அல்லது முறையற்ற, குழப்பமான முறையில் அவை முடிவுக்குக் கொண்டுவரப்படும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** மற்ற எல்லாவற்றிலும் வங்காளத்தைப் பின்பற்றுங்கள்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** அமைதி, அமைதி.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** ஓர் உரிமைப் பிரச்சினை. ஐயா, 'அமைதி, அமைதி' என்று கூற ஓர் உறுப்பினருக்கு என்ன உரிமை உள்ளது.

**திருமதி ரேணுகா ரே :** (மேற்கு வங்காளம் : பொது) இது ஓர் உரிமைப் பிரச்சினையா?

**திரு. துணை அவைத் தலைவர் :** அவைத் தலைவரின் உரிமையை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் என்னுடன் பகிர்ந்து கொள்வது குறித்து மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** (எழுந்திருக்கிறார்).

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** மதிப்பிற்குரிய எனது நண்பருக்கு வழிவிடுவது எனக்குச் சாத்தியமல்ல என்று அஞ்சுகிறேன்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** நல்லது, நான் வாய் மூடியிருக்கிறேன். பெண்களின் கொடுங்கோன்மையில் துன்புறத் தாங்கள் விரும்பினால், அப்படியே தாராளமாக செய்யுங்கள்.

**திரு. துணை அவைத் தலைவர் :** அமைதி, அமைதி.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** ஐயா, புனிதமானது என்று போற்றப்படும். கூட்டுக் குடும்ப அமைப்பு பற்றி அதிகம் கூறப்பட்டது. இடை நிலைக் காலத்திலும் மற்றும் புராதானக் காலங்களிலும் கூட்டுக் குடும்ப முறை மிக பயனுள்ள நோக்கத்திற்குப் பயன் பட்டிருக்கக்கூடும். அதை நான் மறுக்கவில்லை. ஆனால் இன்று கூட்டுக் குடும்ப முறை கருத்து வேறுபாடுகளில் மட்டுமே நிலவுகிறது. விவசாயிகளை நான் அறிவேன். உங்களில் பலரைவிட மிக அதிகமாக கிராமப் புறங்களில் நான் இருந்திருக்கிறேன். கிராமப் புறங்களில் தொடர்ந்து பத்துவருடங்கள் நான் பணியாற்றியுள்ளேன். ஐயா, ஒரு விவசாயியின் மகன் திருமணம் செய்து கொண்டால், விவசாயி செய்யும் முதல் காரியம் பூர்வீக நிலத்தில் மகனுக்கு அவனது பங்கை அளிப்பதுதான் என்பது எனக்குத் தெரியும். அது ஒரு ஏக்கர் அல்லது அரை ஏக்கர் அல்லது கால் ஏக்கராகக்கூட இருக்கலாம். மகன் தனிக்குடும்பம் நடத்த தந்தை ஏற்பாடு செய்கிறான். இவ்வாறு செய்யாவிடில் தனது குடும்பம் சீர்குலைவுக்கு உட்படும் என்பதை விவசாயி அறிவான். சில மிகப் பணக்காரர்கள் விஷயத்தில் வேண்டுமெனில் கூட்டுக் குடும்பமுறை தொடரலாம். வருமான வரியை ஏய்ப்பதற்கும் மற்ற நோக்கங்களுக்காகவும் இரட்டை கணக்கு வைப்பதற்கு இவ்வாறு செய்யப்படுகிறது. சாதாரணமாக, இன்று கூட மத்தியதர வர்க்கக் குடும்பங்களில் என்ன நிகழ்கிறது? ஒரு மகன் கிராமத்தில் வசிக்கிறான்; மற்றொரு மகன் டில்லியில் அரசுப் பணியில் இருக்கிறான்; பிறிதொரு மகன் சென்னையில் ஏதோ பணியில் இருக்கிறான்.

இந்நிலையில் கூட்டுக் குடும்பத்தையும் பூர்வீகச் சொத்தையும் பாது காப்பது என்பதன் பொருள் என்ன? இத்தகைய பகைப்புலனில் பாகப்பிரிவினை செய்து கொள்ள அவர்களை அனுமதிப்பது நல்லது. பின்பு, சுய விருப்பப்படி திரும்பி வந்து கூட்டாக வாழ அவர்கள் விரும்பினால் அவர்கள்ஒரு கூட்டுறவு அமைப்பாக செயல்படட்டும். நவீன நிலைமைகளுக்கு ஏற்ப அவர்கள் எந்தவிதமான சட்ட ரீதியான நிலையையும் மேற்கொள்ளட்டும். மூதாதையர் வழி பாட்டுக்காக கூட்டுக்குடும்பத்தை இன்றைய சூழ்நிலையில் தொடர்வது மாறுதலை விரும்பாத வெறித் தனமான, அப்பட்டமான மிதவாத போக்கு என்றுதான் கருதுகிறேன்.

**திரு. ராஜேஸ்வர் பிரசாத்** (பீஹார் : பொது): ஒரு டேனியல் கடைசி நாள் தீர்ப்புக்கு வந்திருக்கிறார் போலிருக்கிறது!

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** பீஹாரைச் சேர்ந்த மதிப் பிற்குரிய நண்பர் டேனியலின் மறு அவதாரம் என்று நினைக்கிறேன். அரசியல் சாசனம் உருவாக்குவதில் அவர் அதை நிரூபித்தார். இங்கும் அவர் நிரூபிப்பார் என்று உறுதியாக நம்புகிறேன்.

**திரு. ராஜேஸ்வர் பிரசாத் :** நீங்களும் கூடத்தான்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** நான் பின்வாங்கப் போவதில்லை.

**திரு. துணை அவைத் தலைவர் :** அவையில் நீங்களே ஒருவ ருக்கொருவர் பேசிக் கொண்டிருக்க வேண்டாம். அதற்காகப் பெரிதும் வருந்துகிறேன். நான் சற்றுச் சகிப்புத் தன்மையுடன் நடந்து கொண்டேன். கசப்புணர்வுடன் கூடிய வாக்குவாதம் நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. நல்ல நகைச்சுவை உணர்ச்சி இருக்கும்வரை தீங்கு எதுவும் இல்லை. எவ்வாறாயினும், மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடர்ந்து பேச அனுமதிக்கப்பட வேண்டும். அவரது சிந்தனையோட்டத்தை இழக்கும்படிச் செய்யக்கூடாது. மேலும் தொந்தரவு விளைவிப்பது அசௌகரியத்தை ஏற்படுத்தும்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** மாண்புமிகு திரு. சந்தானம் நல்ல மனநிலையில்தான் இருக்கிறார்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** ஏனெனில் நான் எடுத்துக் கொண்ட விஷயம் எளிமையானதும் குழப்பமற்றதும் நேரடியானது மாகும். எந்தப் பூச்சாண்டிகளாலும் நான் நிதானத்தை இழக்க மாட்டேன்.

இப்பொழுது நான் அடுத்த அம்சத்திற்கு அதாவது அறிவார்ந்த விளக்கத்துக்கு வருகிறேன். மிகக் கடுமையான எதிர்ப்பைக் கிளப்பிய ஒரு விஷயம் எது எனில், தகப்பனாரின் சொத்தில் மகளுக்குப் பங்களிப்பது சம்பந்தமானதாகும். பழைய சொத்து அப்படியே இருக்கும் போது, சொத்து விவசாய நிலங்களாக மட்டுமே இருக்கும்போது ஒரு வெளி நபரை குடும்பத்திற்குள் கொண்டு வருவது மிகவும் அசௌகரியத்தை ஏற்படுத்தும் என்று கூறுபவர்கள் மீது நான் அனுதாபப்படுகிறேன். சொத்து, அசையா சொத்திலிருந்து அசையும் சொத்தாக மாறிக் கொண்டிருக்கிறது என்று ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக் :** மத்திய மாகாணம் மற்றும் பீஹார் : பொது) அது எப்படி முடியும்? எல்லா நிலச் சொத்தையும் கலைத்துவிட முடியாது. இந்துச் சட்டத் தொகுப்பு மசோதா நிலங்களை ஆவியாக மாற்றிவிடாது.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** விவசாய சமூகத்தை பொறுத்தவரை, திருமணத்துடன் அவர்கள் தாங்களாகவே பிரிவினை செய்கிறார்கள். கிராமத்திற்கு வந்து வசிக்க மருமகன் விருப்பமாக இருந்தால் அவரை ஏன் அனுமதிக்கக்கூடாது என்பதை என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக் :** இனிமேல் பிரித்து ஆளுங்கள் என்பது சட்டமாக இருக்கும்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** மகன்கள் பிரிவினை செய்து கொள்ள முடியுமெனில், மகளும் பிரிவினை செய்து கொள்ளலாம். எதிர்காலத்தில் சொத்து பண உறுதியீட்டு ஆவணங்களாகவும் ஏனையவையாகவும் இருக்கும். எனவே, மகன் போலவே மகளும் அதே உரிமையை ஏன் பெற்றிருக்கக் கூடாது என்பதற்குக் காரணம் எதுவுமில்லை. முறைப்படுத்துதல் சம்பந்தமாக ஓரிரு கருத்துக்களை எடுத்துரைக்க தயாராக இருக்கிறேன். ஒரு குடும்பத்தில் திருமணமான மகள்களின் சொத்தைக் கணிப்பதில் அவர்களின் திருமணத்திற்காக செலவழிக்கப்பட்டிருக்கும் எந்தத் தொகையையும் கணக்கில் எடுத்துக் கொள்வது அநியாயமாகாது. பல மத்தியதர வகுப்புக் குடும்பங்களில் திருமணத்திற்காகச் செலவழிக்கப்பட்ட தொகை பல சந்தர்ப்பங்களில் மகள் பெறக்கூடிய பங்கை விட அதிகமாக இல்லாவிடினும்

அதற்குச் சமமாக இருக்கும். அது ஒரு நியாயமான ஈடு என நினைக்கிறேன். அது போலவே, ஒரு வசிக்கும் வீடு மட்டும் இருந்தால், விவசாய நிலம் சிறிய அளவில் மட்டுமே இருந்தால், மகளின் பங்கைப் பொறுத்த வரை வீட்டை அல்லது அசையாச் சொத்தை பிரிவினை செய்ய வேண்டுமென்று வற்புறுத்தாமல் பணமாகவோ அல்லது மற்ற அசையும் சொத்தையோ எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கூறுவது நியாயமானது என்றே நினைக்கிறேன்.

**திரு. ரன்பீர்சிங்** (கிழக்கு பஞ்சாப் : பொது): பணத்தை எங்கிருந்து கொண்டு வருவது?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** உங்களுக்குக் கடன் கொடுப்பவர் ஒருவர் இருந்தால் அவரிடமிருந்து தானே கடன் வாங்குவீர்கள்? அது சாத்தியமல்லவா? ஆண்டுதோறும் எளிதாக குறிப்பிட்ட காலம் வரை கொடுக்கும் முறையில் அல்லது அம்மாதிரி வேறு ஏதேனும் முறையில் கடனைத் திருப்பிக் கொடுக்கலாம் அல்லவா? ஒரு சுமூகமான குடும்பத்தில் சரி செய்து கொள்வது எளிது; சுமூக சூழ்நிலை இல்லாத ஒரு குடும்பத்தில் யாருக்கும் அநியாயம் இல்லாத முறையில் நீதிமன்றங்கள் மூலம் பிரச்சினைக்கு தீர்வுகாணும் வழிகளைக் காணலாம். இம்மாதிரி சரி செய்து கொள்வதற்கு உட்பட்டு, மகனைப் போன்று அதே அடிப்படையில் மகள் நடத்தப்படக் கூடாது என்பதற்கு எந்த முகாந்தரமும் இருப்பதாக நான் பார்க்கவில்லை. இதில் எந்த விதமான கஷ்டமும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. எல்லா விதமான பூச்சாண்டிகளும் கிளப்பப்பட்டன. எப்படியாயினும், மகள் ஒரு மருமகளாகிறாள். மகள் ஒரு பங்கைப் பெறுகிறாள் எனில், அதே போல் இன்னொரு வீட்டுக்குச் சென்றிருக்கும் மகளும் ஒரு பங்கு பெறுகிறாள். எனவே நாளாவட்டத்தில், ஆணுக்கும் பெண்ணுக்கு இடையே சம மதிப்பும் மற்றும் சமூக சமத்துவமும் சட்ட ரீதியான உரிமைகள் சரி செய்து கொள்ளப்படுவதைத் தவிர, சொத்தை ஏற்பாடு செய்து கொள்வதும் அது போலவே இருக்கும். ஏனெனில், இப்பொழுது, அப்பாவின் வீட்டிலிருந்து மகள் அதிகம் எடுத்துக் கொள்வதில்லை. அவள் தனது மாமனார் வீட்டில் அதிகம் பெறுகிறாள்.இனி இந்த மசோதாவின் கீழ், தகப்பனார் வீட்டிலிருந்து மகள் சிறிது எடுத்துக்

கொள்வாள். மாமனார் வீட்டிலிருந்து அதற்கும் குறைவாக எடுத்துக் கொள்வாள். நாளாவட்டத்தில் சொத்தை விநியோகிப்பதில் அதிக வித்தியாசம் இருக்காது. இதில் பின்பற்றப்படும் நடைமுறை சம்பந்தப் பட்ட எல்லோருக்கும் திருப்தியளிப்பதாகவும் சுயமரியாதை மிக்கதாகவும் இருக்கும். சகோதரனும் தானும் ஒன்றுதான் என்று மகள் எண்ணுவாள். இந்த நாட்டில் நாம் உற்சாகப்படுத்தி வளர்க்க வேண்டிய உணர்வு இது என்று நான் நினைக்கிறேன். கொள்கை அளவில் நாம் எல்லா சமூக ஏற்றத்தாழ்வுகளையும் அகற்றி விட்டோம். ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சமத்துவ வாக் குரிமையை அளித்துள்ளோம். அப்படியிருக்கும் போது வாரிசுரிமை மற்றும் மரபுரிமை விஷயத்தில் மட்டும் பாலின அடிப்படையில் நாம் ஏன் பாகுபாடு காட்ட வேண்டும்? இந்தப் பாரபட்சப் போக்கை நாமே முன் வந்து எவ்வளவு விரைவில் அகற்றுகிறோமோ அந்த அளவுக்கு நமது நாட்டின் வலு அதிகரிக்கும். இல்லையெனில், வயது வந்தவர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டிருப்பதன் காரணமாக மாற்றத்தைச் செய்யும்படி நம்மை நிர்ப்பந்தம்படுத்தும் அளவுக்கு என்றாவது ஒரு நாள் நாடு முழுவதும் பெண்களிடையே பெருமளவில் விழிப்புணர்ச்சி ஏற்படும். அப்பொழுது இந்தியாவின் ஆண்களுக்கு அது ஒரு அவமானமாக இருக்கும். வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அமுலுக்கு வருவதற்கு முன்பே நாம் இதைச் செய்வது நல்லது; அதன் மூலம் ஒரு வேளை வாக்காளர்களாக ஆகப்போகும் ஐந்து அல்லது ஆறு கோடி பெண்கள் முன்னால் சென்று நாம் இவ்வாறு கூற முடியும்: ''பாருங்கள், நீங்கள் விரும்புவதற்கு முன்பே நாங்கள் சரியான காரியத்தைச் செய்துள்ளோம். உங்களுக்கு நாங்கள் வாக்குரிமை அளித்துள்ளோம். உங்களுக்கு நாங்கள் சொத்துரிமை அளித்துள்ளோம். நீங்கள் ஆண்களுக்குச் சமம்; ஆண் - பெண் என்ற பால் அடிப்படையிலான மோதல்கள் இனி இருக்காது''.

பிற்பகல் 3 மணி

நான் பரிசீலிக்க வேண்டிய கடைசி விஷயம் சீர்த்திருத்தம் பற்றியாகும். திருமணத்துறையில் சீர்த்திருத்தத்திற்கு உண்மையான முயற்சி செய்யப்படு கிறது. இந்த முயற்சி ஓரளவு சுய விருப்பமானது, ஓரளவு கட்டாயமானது. கட்டாயமானது ஒரு தார மணம். எனது எல்லா நண்பர்களும் மற்றும் இந்த அவையின் உறுப்பினர்களும் இந்த

சீர்திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறார்களா அல்லது இல்லையா என்று கூற வேண்டுமென்று விரும்புகிறேன். அவர்கள் மூன்று மணி நேரம் உரையாற்றிய போதிலும் அவர்கள் இந்த விஷயம் பற்றி சாதுரியமாக பேசாமல் இருக்கிறார்கள். ஏன் இந்த விஷயத்தைத் தவிர்க்கிறார்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு தார மணத்தை நிலைநாட்ட அவர்கள் விரும்புகிறார்களா அல்லது இல்லையா?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஒரு தார மணம் ஏற்கனவே நிலை நிறுத்தப்பட்டுள்ளது.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** சிலர் உண்மையிலேயே இரண்டு அல்லது மூன்று மனைவியரோடு ஆடம்பர வாழ்க்கை வாழ்கிறார்கள். மற்றவர்கள் அதிக மனைவியரை பெறும் சாத்தியப்பாடு பற்றி இன்பக் கனவு கண்டு வருகிறார்கள்.

**திரு.எச்.வி. காமத்:** ஒன்றுக்கு மேற்பட்ட கணவர்களை மணப்பது பற்றி என்ன?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** பழைய ஆரியப் பாரம் பரியம் செய்த மாபெரும் தவறு இது எனக் கூறுகிறேன். சிறந்த ஆரியர்களின் புகழ்பெற்ற வழித் தோன்றல்கள் என்று கருதிக் கொள்ளும் நாம் இப்பொழுது அது தவறு என்று ஒப்புக்கொண்டு நாமாகவே ஏகோபித்து திருத்திக் கொள்ளும் காலம் வந்துவிட்டது. பல தார மணம் அவசியம் போயாக வேண்டும். ஆனால் கடினமான வழக்கு களில் விவாகரத்துக்கு நியாயமான வசதிகளை நீங்கள் செய்து கொடுக்காவிடில் ஒருதார மணமும் ஒரு சட்டரீதியான கற்பனைக் கதையாகிவிடும். அத்தகைய ஒரு வழிவகை செய்யாவிடில் அது தீங்கை விளைவிக்கும்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி:** கணவனுக்குத் துரோகம் செய்யும் பெண்கள் மீது குற்ற வழக்குகள் தொடரப்பட வேண்டுமென்பதைத் தாங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** இதே குற்றங்களுக்காக இதே தண்டனைகளுக்கு பெண்கள் உட்படுத்தப்பட வேண்டுமென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அஸ்ஸாமிலிருந்து வரும் எனது நண்பர் இது பற்றி இளகிய மனம் கொண்டிருக்கலாம். ஒரு தார மணம் மற்றும் விவாகரத்து பற்றிய ஷரத்துக்கள் ஒரே தொடராக உள்ளன. ஒன்றிணைக்கப்பட்ட சட்டமாக அவை எடுத்துக் கொள்ளப்படவேண்டும். இது விஷயத்தில் இந்த மசோதா ஒரு சீர்த்திருத்தத்தை முன் வைக்கிறது. இது சாஸ்திரங்களால் அங்கீகரிக்கப்பட்டதல்ல; ஆனால் இது ஒரு சீர்திருத்தம்.

**பண்டிட் கோவிந்த மாளவியா :** விவாகரத்து அங்கீகரிக்கப்படாவிடில் மாண்புமிகு உறுப்பினர் ஒரு தார மணத்தை எதிர்ப்பார் என்று நான் புரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** எப்படியாயினும் ஒரு தார மணத்தை நான் ஆதரிப்பேன். ஆனால் அதை பகுத்தறிவு பூர்வமான உருவில் ஆதரிப்பேன். பகுத்தறிவற்ற முறையில் அல்ல. எனது நண்பர் ஒரு தார மணத்தை விரும்பி, அதே சமயம் ஒரு கணவர் ஆண்மையற்றவராக அல்லது குற்றவாளியாக இருந்தால் விவாகரத்து இருக்கக்கூடாது என்று வாதித்தால் பகுத்தறிவுக்கு ஒவ்வாத முறையில் ஒரு தார மணத்தை அவர் விரும்புகிறார் என்றே நான் பொருள் கொள்வேன். ஒரு தார மணத்தை அறிவுபூர்வமான முறையில்தான் நான் விரும்புகிறேன். அது தான் நமக்கிடையே உள்ள வித்தியாசம்.

மற்றொரு அம்சத்துக்கு இப்போது வருகிறேன். இந்த மசோதாவின் மற்றொரு சிறப்பு எதுவெனில், சாதி அமைப்பு முறையிலிருந்து எல்லா சட்டரீதியான தடையையும் அது நீக்கி வருகிறது. அரசியல் சாசனத்தில் தீண்டாமையை நாம் நீக்கிவிட்டோம். இப்பொழுது சமூக சீர்திருத்தத்தை மேலும் முன் கொண்டு சென்று சாதி சம்பந்தப்பட்ட எல்லாச் சட்டபூர்வத் தடையையும் அகற்றிவிடுகிறோம். இங்கு இந்த மசோதாவில் திருமணத்திற்காக என்றாலும், வேறு ஒரு நோக்கத்திற்கென்றாலும், எல்லா இந்துக்களும் தீண்டாதவர்கள் என்று கூறப்படுபவர்களிலிருந்து ஆச்சாரிய பிராமணர்கள் என்று கூறப்படுபவர்கள்வரை அவர்கள் எல்லோரும் ஒன்றே.

***மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:*** *சாதி இல்லாத இந்து யார்?*

***மாண்புமிகு திரு.கே. சந்தானம்:*** *எனது நண்பர் கேட்கிறார் ''சாதி இல்லாமல் ஓர் இந்து யார்?'' என்று. என்னை பொறுத்தவரை சாதியுடன் கூடிய ஓர் இந்து ஒரு வேதாளமாவார் எனக் கருதுகிறேன். (சபாஷ், சபாஷ்) இந்த நாட்டில் சாதியற்ற ஓர் இந்து சமுதாயத்தை நிறுவ நாங்கள் விரும்புகிறோம். ஒன்று முற்றிலுமாக இந்துக்கள் அல்லாதவர்களாக ஆகிவிட வேண்டும் அல்லது சாதி இல்லாத இந்து மதத்தை நிறுவ வேண்டும். நமக்கு மாற்று எதுவும் இல்லை.*

***திரு. லட்சுமி நாராயண் சாகு :*** *முகமதியர்களையும் இந்துக்கள் என்று அழைக்கலாமா?*

***மாண்புமிகு திரு.கே. சந்தானம் :*** *எப்பொழுது முஸ்லீம்கள் கீதையையும் வேதாந்தத்தையும் ஏற்றுக் கொள்கிறார்களோ அப்பொழுது அவர்களை இந்துக்களாக ஏற்றுக் கொண்டு அவர்கைளக் கட்டித் தழுவ நான் தயாராக இருக்கிறேன்.*

***திரு.எம். திருமலராவ் :*** *கீதைகூட சாதி பற்றிக் குறிப்பிடுகிறது.*

***திரு. துணை அவைத் தலைவர் :*** *குறுகிடுவது குறைவாக இருக்கட்டும். அம்பேத்கர் தொடர்ந்து பேசலாம். ஒவ்வொருவரும் மற்றவரை தம் பக்கம் இழுக்க முயன்று கொண்டிருக்கிறார்கள்.*

***மாண்புமிகு திரு.கே. சந்தானம் :*** *குறுக்கீடுகள் இருந்தாலும், எனது நண்பர் சிலைரை நான் கூறுவதை ஒப்புக் கொள்ளச் செய்ய முயற்சி செய்யப்போகிறேன். எனது நண்பர் திரு. திருமல்ராவ், நான் கீதை மீது பிரமாணம் எடுத்துக் கொள்கிறேன் என்று குறிப்பிட்டார். நான் கூறுவது என்னவெனில் எல்லா இந்துக்களுக்கும் குறைந்தபட்ச சமயக் கோட்பாடுகளாக அவை அமைகின்றன. எனவே, இந்த மசோதா நிறைவேறிய பின்பு, இந்துக்கள், முஸ்லீம்கள் மற்றும் கிருஸ்தவர்களுக்கிடையே பாகுபாடுகள் இல்லையெனில் அது நாடு*

முழுமைக்கும் நல்லது. அர்த்தமற்ற அல்லது அறிவுபூர்வமற்ற பாகுபாடுகளை நீடித்து வைத்திருப்பதில் நாம் பெருமையடைய வில்லை. அறிவுபூர்வமற்ற அத்தகைய பாகுபாடுகளை முஸ்லீம்களும் அகற்றிவிட்டால், அறிவுபூர்வமற்ற எல்லாப் பாகுபாடுகளையும் கிருஸ்தவர்கள் அகற்றிவிட்டால், விரைவில் - நம்மை நாம் எப்படி அழைத்துக் கொண்டாலும் - ஒரே மேடையில் நாம் சந்திப்போம். அரசியல் சாசனத்திலும் இந்த மசோதாவிலும் நமது நோக்கம் என்ன வெனில் இந்த நாட்டின் பெரும்பான்மை சமூகத்தை பல பிரிவு களாகப் பிளவுபடுத்திய தவறான எண்ணங்களையும் நடைமுறை களையும் களைந்து அது பலம் வாய்ந்ததாக, ஐக்கியப்பட்டதாக ஆவதையும், எதிர்கால இந்தியாவின் புகழும் பலமும் நிலைநாட்டப் படுவதற்கு வெல்ல முடியாத அடிப்படையாக ஆவதையும் பார்ப்பது தான். இந்த மசோதா இல்லாவிடில், இந்த மசோதா முன்வைக்கும் மாற்றங்கள் இல்லாவிடில், இந்து சமூகம் ஒரு பலவீனமான, சிதறிய, முற்போக்கற்ற சமுதாயமாக இருக்கும். பெரும்பான்மையான மக்கள் அதே நிலையில் நீடித்தால், அரசியல் சாசனமும் கடவுளும் நமக்கு அளித்துள்ள அரசியல், பொருளாதார சந்தர்ப்பங்களை நன்கு பயன் படுத்த முடியாது போய்விடும். எனவே இந்த மசோதா நாம் நிறை வேற்றியுள்ள அரசியல் சாசனத்தை ஆக்கிய அதே அமைப்பே இந்த இந்துச் சட்டத்தொகுப்பை சட்டமாக நிறைவேற்றப்போவது சாலப் பொருத்தமானதாகும். இந்து சட்டத்தை ஏட்டில் ஏற்றினார்கள் என்றும் இந்த அவையோர் அரசியல் சாசனத்தை ஆக்கியதோடு இந்துச் சட்டத்தையும் சீர்திருத்தம் செய்தார்கள் என்றும் நம்புகிறேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அரசியல் சாசனத்தை நாசம் செய்தார்கள் என்று கூறுவார்கள்!

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** நமது மூதாதையர் நம்மைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், நமது சாதனைக்காக நம்மை ஆசிர்வதித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நம்புகிறேன்.

**திரு. லோகநாத் மிஸ்ரா :** தகவலுக்காக. இப்பொழுதான் எனது நண்பர் வேதாந்தம் மற்றும் பகவத்கீதை மீது பிரமாணம் எடுத்துக்

கொண்டார். இவற்றின் கோட்பாடுகளுக்கு எதிராக போகும் ஷரத்துக் களை நிராகரிக்க அவர் தயாராக உள்ளாரா?

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** தவறான ஆதாரக் கூறு களை அவை அடிப்படையாகக் கொண்டிருந்தால், நான் அவற்றை நிராகரிக்கக் கடமைப்பட்டவன்.

**திரு. துணை அவைத் தலைவர் :** இனியும் இந்த வாதத்தைத் தொடர்வது அவசியமற்றதாகும்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** ஐயா, அவையை களைப்பு றச் செய்ய நான் விரும்பவில்லை. எனது மனதில் தோன்றிய பிரதான விஷயங்களையே எடுத்துக்கூறியுள்ளேன். புராதனத் தப்பெண்ணத் தால், இந்த மசோதாவை எதிர்ப்பது தங்கள் கடமையென்று எண்ணுகிற வர்கள் தங்கள் கண்ணோட்டத்தை மறு பரிசிலனை செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். ஒரு புதிய காட்சியை சாதியற்ற, பாகுபாடுகள் அற்ற எல்லோரும் ஒரு மனிதனாக இணைந்த ஓர் இந்து சமுதாயக் காட்சியை காண நாம் எல்லோரும் பாடுபட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சீர்குலைந்திருக்கும் பலஹீனமான, ஆயிரம் ஆண்டு களாக அடிமைத் தனத்தில் உழன்ற இந்து சமுதாயத்தை ஒரு பலமான, ஆரோக்கியமான, மகத்தான சமூகமாக நாம் மாற்ற முடிந்தால், நமது புதல்வர்களும் பேரன்களும் பெருமைபடத் தக்க ஒரு பணியை நாம் செய்தவர்களாவோம்.

**திரு.எச்.வி. பதாஸ்கர்** (பம்பாய் : பொது) ஐயா, இந்து சமுதாயத்தின் கட்டமைப்பையே புரட்சிகரமாக்கக் கூடிய ஒரு மசோதாவை நாம் பரிசீலித்துக் கொண்டிருக்கிறோம். இப்பொழுது இந்த சமுதாயம் 25 கோடி மக்களைக் கொண்டதாக உள்ளது. எனவே சாமானிய மக்கள் கூட என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதில் அக்கறை காட்டத் துவங்கியிருப்பது இயல்பானதே. எல்லாப் பகுதி யினரின் நலன்களுக்குச் சிறந்ததைக் கணக்கில் கொண்டு இந்து சமுதாயத்தின் மொத்தக் கட்டமைப்பையே நாம் புரட்சிகரமான தாக்கிக் கொண்டிருக்கும்போது, இந்த மசோதாவில் உட்படுத்தப் பட்ட ஷரத்துகள் பற்றி பொது மக்களிடம் எழுந்துள்ள உணர்வுகளைப் புறக்கணிப்பது விரும்பத்தக்கதல்ல.

பொது மக்கள் இப்பொழுது கல்வியறிவு பெற்றிருக்கவில்லை. தமக்கும் தம்மைச் சார்ந்திருப்பவர்களுக்கும் உணவுக்கு வகை செய்ய வேண்டிய பிரச்சினையில் ஆழ்ந்து போயிருக்கிறார்கள். வேறு எதற்கு இல்லாவிடினும் பணம் இல்லாததால் உடை நெருக்கடியை அவர் எதிர் கொண்டிருக்கிறார்கள். பொதுவாக வாழ்க்கை மிகவும் கஷ்டமாக இருப்பதைக் காண்கிறார்கள். அப்படி இருந்தும் இந்தச் சட்டம் இயற்றல் பற்றி அவர்கள் அக்கறை காட்டத் துவங்கியுள்ளார்கள். ஏனெனில் சென்ற பல நூற்றாண்டுக் கால வளர்ச்சியின் விளைவான இந்து சமுதாயத்தின் கட்டமைப்பையே இந்த மசோதா பாதிக்கப் போகிறது என்று கருதுகிறார்கள். எனவே, அவர்கள் சார்ந்துள்ள சமுதாயத்தின் மொத்தக் கட்டமைப்பை மாற்றும் முக்கிய கடமையை நாம் மேற்கொள்ளும் முன்பு நாம் அவர்களை இது பற்றி புரிய வைக்க வேண்டியது அவசியம். மசோதாவின் பல ஷரத்துக்களை நான் எதிர்க்கவில்லை என முதலாவதாகத் தெளிவுப்படுத்திக் கொள்கிறேன். ஆனால் இந்த நோக்கத்திற்காகத் தேர்ந்து எடுத்த சமயம் மிகவும் அனுகூலமற்றதுஎன்று என் மனதுக்குத் தோன்றுகிறது. 20 நிமிடங்கள் மட்டுமே எடுத்துக்கொள்ள விழைகிறேன். குறுக்கீடுகள் இல்லாமல் எனது கருத்துக்களைக் கூற நான் அனுமதிக்கப்பட்டால், அந்த அவகாசத்திற்குள் நான் முடித்துக் கொள்ள முடியும். ஏனெனில் இந்த அவையில் இந்த பக்கம் அல்லது அந்தப் பக்கம் அக்கறை கொண்டுள்ள, விவாதத்தில் பங்கு பெற விரும்புகிற பல உறுப்பினர்கள் உள்ளார்கள் என்பதை நான் அறிவேன்.

இந்த மசோதா பற்றி பொது ஜனத்தின் பிரதிபலிப்புகளை நான் புரிந்து கொண்டவரை, அரசாங்கம் முக்கிய கவனம் செலுத்த வேண்டியவை அவரைப் பாதிக்கும் பிரச்சினைகளான அவரது உணவு, உடை, பணவீக்கம், மற்றும் பல விஷயங்கள் பற்றி அவர் என்ன நினைக்கிறார், அவரது அன்றாடத் தேவைகள் பற்றி அவர் கவலைப் பட்டுக் கொண்டிருக்கும் போது அவருக்கு வேண்டுவது உணவு மற்றும் ஆதாரத் தேவைகளாக இருக்கும் போது, அவரது திருமணம் எம்மாதிரி முறையில் இருக்க வேண்டும், ஒரு மனைவியையே வாழவைக்க வசதியில்லாத போது அவர் ஒன்று அல்லது ஒன்றுக்கு அதிகமான மனைவியரை பெற்றிருக்க வேண்டுமா என்பது பற்றி ஏன் அரசாங்கம் அக்கறை கொண்டுள்ளது என்று இயல்பாகவே அவர் கேட்கிறார்.

இந்த விஷயங்களெல்லாம் அவசியப்படலாம். மேலும் நான் சீர்திருத்த திற்கு எதிரல்ல. மிக நெருக்கடியான நேரங்களை நாம் கடந்து கொண் டிருக்கிறோம் என்று நமது தலைவர்கள் சொல்லிக் கொண்டிருப்பது ஒப்புக் கொள்ளப்படுகிறது. மக்களின் கஷ்டங்களை நாம் அறிவோம். உணவு, உடை மற்றும் வாழ்க்கையின் பிற அத்தியாவசியத் தேவை களில் பற்றாக்குறை இருக்கிறது. பொது ஜனத்தோடு ஒப்பிட்டால், நாம் இங்கு வசதியான வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிறோம். தலைவர்கள் அதிக கூர்மையான கவனத்தைச் செலுத்த வேண்டியது, திருமணம் மரபுரிமை முதலியன சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை விட தமது அன்றாடப் பிரச்சினைகளின் தீர்வுக்கு என்று அவர் இயல்பாக நினைக்கிறார். இந்த விஷயங்கள் கடந்த பல நூற்றாண்டு களாக இருந்து வந்துள்ளன. இன்னமும் பல மாதங்கள் அல்லது வரு டங்கள்கூட அவை அதே முறையில் சென்றாலும் பாதகமில்லை.

இந்த மசோதா பற்றி உற்சாகத்தை காண்பிக்கும் நமது சகோ தரிகள் அல்லது இந்து சட்டத்திருத்தமும் சட்டத்தொகுப்பும் உடனடி யாக அமல்படுத்தப்பட வேண்டுமென்று ஆரவாரம் செய்து கொண் டிருப்பவர்கள் கிராமப்புறத்தில் உள்ள பொது ஜனத்தை அணுகி னால், அவர் மற்ற பல விஷயங்கள் பற்றி அதிகம் கவலைப்படுவதை, இந்த அவையில் இம்மாதிரியான சட்டமியற்றலுக்கு நீங்கள் ஏன் அவசரப்பட வேண்டுமென்று அவர் ஆச்சரியப்படுவதை அவர்கள் காணமுடியும். இது இப்போதைக்கு நிறுத்திவைக்கப்பட வேண்டு மென்று இயல்பாகவே அவர் கருதுகிறார். நாட்டில் ஏராளமான அதிருப்தி நிலவுகிறது. நாட்டின் பிரிவினைக் காரணமாக, அகதிகள் பிரச்சினை உள்ளது; அவர்களை நிரந்தரமாக குடியேற வைத்து பாதுகாக்க வேண்டும். நமது திருமணங்கள் எம்முறையில் இருக்க வேண்டும் என்பதைவிட இப்பொழுது மேற் சொன்ன விஷயத்தில் ஆழமான அக்கறை கொள்ள வேண்டியது அவசியம். இந்த மசோதாவை அவசரப்படுத்தி நிறை வேற்றுவதற்கு காலம் மிகவும் பொருத்தமற்றது. கஷ்டங்களைத் தீர்ப்பதற்குப் பதிலாக கஷ்டங்கள் அதிகரிக்கும்.

இந்தச் சட்டத் தொகுப்பு எடுத்துக் கொள்ளும் விஷயங்கள் யாவை? திருமணம், மரபுரிமை மற்றும் தத்து எடுத்தல். திருமணத்தைப்

பொறுத்தவரை இப்பொழுது சிவில் திருமணச் சட்டம் கூட உள்ள தால், அதன் கீழ் ஏற்புடைய மதச் சடங்குத் திருமணம் செய்து கொள்ள விரும்பாதவர்கள் அச்சட்டத்தின் கீழ் செய்து கொள்ளலாம். யதார்த்தத் தில் பலர் அதைச் செய்து கொண்டிருக்கிறார்கள். எனவே இந்த சட்ட நடவடிக்கை எடுத்துக்காட்டப்பட்டது போல் அவ்வளவு அவசர மானது என்று தோன்றவில்லை.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அந்தச் சட்டத்தின் கீழ், நீங்கள் எந்த மதத்தையும் சார்ந்தவர் அல்ல என்று அறிவிக்க வேண்டும்.

**திரு.எச்.வி. பதாஸ்கர்:** எனது அருமை நண்பரே, அது போய்விட்டது. அது நீண்டகாலத்திற்கு முன்பே அது வழக் கொழிந்து போய்விட்டது. சிவில் திருமணச் சட்டத்தின்கீழ், எந்த சாதி அல்லது சமூகத்தைச் சேர்ந்த எந்த இரு இந்துக்களும், எந்த மதத்தையும் அவர்கள் சார்ந்திருக்கவில்லை என்று அறிவிப்பு செய்யாமலே அவர்கள் திருமணம் செய்து கொள்ளலாம். அவ்வாறு செய்வதனிற்றும் அவர்களை தடுப்பதற்கு எதுவும் இல்லை.

மரபுரிமைப் பிரச்சினை பற்றி கிளர்ச்சி அதிகம் உள்ளது. றஆண், பெண் இருபாலருடைய சமஉரிமையை நமது அரசியல் சாசனத்தில் நாம் ஒரு கோட்பாடாக வகுத்துள்ளோம். இதிலிருந்து, எவரும் பின்வாங்குவது சாத்தியமல்ல. ஆட்சேபம் எழுப்பப்பட்டது இரு பாலருக்கும் உள்ள சமத்துவம் பற்றியல்ல. ஒரு மகனும் ஒரு மகளும் உள்ள ஒரு தகப்பனார் இருவரையும் சமமாகவே நேசிக்கிறார். அதுபற்றி எந்த வேறுபாடும் இருக்க முடியாது. ஆனால் மரபுரிமை யைப் பொறுத்தவரை, அது வேறு கோணத்தில் அணுகப்பட வேண்டும். அதற்கு நமது சமுதாயத்தின் இன்றையக் கட்டமைப்பின் வளர்ச்சியை நீங்கள் பார்க்க வேண்டும். கடந்த பல நூற்றாண்டுகளின் வளர்ச்சிப் போக்கின் வழியாக இந்தக் கட்டமைப்பு உருவாகியுள்ளது. கிருஸ்தவ மதம் ஒரு மதம், பார்ஸி ஒரு மதம் அல்லது இஸ்லாம் ஒரு மதம் என்ற பொருளில் இந்து மதம் ஒரு மதமல்ல.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் :** அப்படியாயின் மதம் என்றால் என்ன?

**திரு.எச்.வி. பதாஸ்கர் :** கிருஸ்தவ மதம் என்பது கிருஸ்துவை நம்பி பைபிளில் உள்ள அவரின் போதனையைப் பின்பற்றுபவர்கள்; பார்ஸிகள் ஸொவிஸ்டரைப் பின்பற்றுபவர்கள். இஸ்லாம் என்பது நபிகள் நாயகத்தையும் அவர்களது புனித நூலான குரானையும் நம்புகிறவர்களின் மதம். ஆனால் இந்து மதம் என்றால் என்ன?

இந்து மதம் யாரையெல்லாம் உட்கொள்ளுகிறது? வேதங்களைப் பின்பற்றுபவர்கள் அல்லது ராமர் கிருஷ்ணர் அல்லது சிவன் அல்லது பல்வேறு உருவங்களை அல்லது வடிவங்கள் கொண்ட எண்ணற்ற கடவுள்களைப் பின்பற்றுபவர்கள் மட்டுமல்லாமல், இயற்கையை வழிபடுபவர்கள் மற்றும் எந்தக் கடவுளையும் நம்பாதவர்கள் அல்லது கடவுளின் ஒருமை தன்மையை ....... நம்பாதவர்களும் கூட இந்து மதத்தில் உட்படுகிறவர்கள் வழிபாடு இடங்கள். வழிபாடுமுறைகள் மற்றும் வழிபடும் இலக்கு.

பல நூற்றாண்டுகளாக நடைமுறையிலுள்ள சமூக மற்றும் சமய நம்பிக்கைகளின் பல்வேறு போக்குகளை உட்கிரகித்து வளர்ந்தது தான் இந்து மதம், कृण्वन्तोविश्वमार्यम. என்ற உயர்ந்த கோட்பாட்டிற்கு இணங்க எல்லாவற்றையும் அணைத்துக் கொண்டுள்ள சமய நம்பிக்கை தான் அது. வாழ்க்கையின் பல்வேறு நீரோட்டங்களை தன்னில் ஒருங்கிணைக்கப் பாடுபடும் ஒரு வளர்ச்சி தான் இன்றைய இந்து மதம், தற்பொழுது ஓர் இரும்புச் சட்டத்தினுள் கட்டுப்பட்டிருப்பது போல் இந்து மதம் தோற்றமளிப்பினும், அது எல்லாக் காலங்களிலும் அப்படி இருந்ததில்லை. ஒரு குறிப்பிட்ட நூலின் அடிப்படையிலோ இயங்குவதல்ல இந்து மதம், ஆனால் அது தர்மத்தின் அடிப்படை யிலானது, மேலும் தர்மம் என்பது धारयते अनेन इति धर्मः अल्லது धारणात् धर्मम इत्यादुह : சமுதாயத்தின் ஆதார சுருதியாக எது உள்ளதோ அதுதான் தர்மம் ஆகும். அதாவது சமுதாயத்தைக் கட்டிக் காப்பதற்கும் அதன் வளர்ச்சிக்கும் எது இன்றியமையாததாக உள்ளதோ அந்த இலட்சியத்தின் அடிப்படையில் தான் இந்து சமுதாயம் கட்டப்பட்டுள்ளது.

தற்காலத்திய இந்து சமுதாயத்தின் நிலை மகிழ்ச்சிகரமானதல்ல என்பதை நிச்சயமாக ஏற்றுக்கொள்கிறேன். எல்லாக் காலங்களிலுமே அது அவ்வாறு இருந்ததில்லை. இந்த மசோதாவிற்கு எதிர்ப்பு ஏன் உள்ளது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள இந்த விஷயத்தை உங்களுக்குக் கூறுகிறேன். சமுதாயம் நசித்து அழிந்துவிடாமல் இருப்பதற்கு ஆதாரம் சமயந்தான். சமுதாயம் அழியாமல் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருப்பதுதான் நமது லட்சியம். தற்பொழுது நமது சமுதாயம் ஒரு தேக்க நிலையை அடைந்து விட்டதாகத் தோன்றலாம். ஆனால் உண்மையிலே அது அப்படியல்ல. இந்து சமயம் அதன் பரிணாம வளர்ச்சியில் பெரும் மாற்றங்களுக்குள்ளாகியிருக்கிறது. மாற்றங்களைக் கண்டு மருள்பவன் அல்ல நான். கடந்த காலத்தில் அது பல மாற்றங்களைச் சந்தித்திருக்கிறது. ஒரு காலத்தில் புத்த மதம் இந்நாட்டில் மட்டுமல்ல பாரத நாட்டின் எல்லைகளுக்கு அப்பாலும் செல்வாக்குடன் விளங்கியது. ஆனால் இன்று ஒரு சில புத்த மதத்தினரையே நாம் இங்கு காணமுடிகிறது. அவர்களுக்கு என்ன நேர்ந்தது? இந்து மதம் அவர்களை தன்னகத்தே இணைத்துக் கொண்டு விட்டது. அவர்கள் உருமாற்றம் பெற்றுவிட்டனர். அவர்களுடைய வழித்தோன்றல்கள்தான் நாம். தேங்கி நிற்கும் சமுதாயம் அல்ல நம் சமுதாயம் என்பதை இது எடுத்துக் காட்டுகிறது. சமுதாய மாற்றங்களுக்கான தேவைகளுக்கு ஏற்றபடி நாம் மாற்றமடைந்துள்ளோம். நான் மாற்றத்தை ஆதரிப்பவன். இந்து மதத்தின் உண்மை தன்மை மாற்றத்தை ஏற்காததல்ல. இந்து மதச் சட்டத்தை மாற்றக்கூடாது என்ற குழுவைச் சேர்ந்தவன் அல்ல நான். பிரிட்டிஷ் டொமினியன் ஆட்சி காலத்திலேயே நமது சட்டங்கள் மாற்றப்பட்டுள்ளன.

பரம்பரைச் சொத்துரிமை, தத்தெடுத்தல், திருமணம் ஆகியவைகள் பற்றிய பல்வேறு சட்டங்களின் மூலக் கோட்பாடுகளில், அதிக பரிச்சயமில்லாத நீதிமன்றங்களின் நீதித்துறை விளக்கங்கள் நமது சமூக பொருளாதார வாழ்க்கை ஓட்டத்தை மாற்றியதுடன் பல்வேறு முரண்பாடுகளையும் உருவாக்கியுள்ளன என்ற உண்மையை, முன்னால் பேசிய மாண்புமிகு திரு. சந்தானம் சரியான முறையில் எடுத்துரைத்தார். அந்த முரண்பாடுகள் நீக்கப்படுவது நிச்சயமாக வரவேற்கப்பட வேண்டியதுடன், மாறிவரும் நம் சமுதாயத் தேவைகளுக்கேற்ப நமது சட்டங்கள் உருவாக்கப்பட

வேண்டும். இந்த உலகம் வெகு வேகமாக மாறிவருவதால் வேறு பல இடங்களில் நடக்கும் நிகழ்ச்சிகள் நம்மைப் பாதிப்பதி லிருந்து நாம் தப்ப முடியாது. உலகின் மற்ற பகுதிகளிலிருந்து ஒதுங்கி வாழ்வதை நாம் விரும்பவில்லை, அது நம்முடைய நோக்கமுமல்ல. சட்டக் கோட்பாடுகளைத் தொகுப்பது ஒரு விஷயம், அதற்குத் திருத்தங்கள் செய்வது வேறு விஷயம், இரண்டு விஷயங்களையும் மசோதா செயல்படுத்த விரும்புகிறது. நாம் சட்டத்தை முறைப்படுத்தித் தயாரிப்பதுடன், அதிலுள்ள சட்டவிதிகளுக்கு திருத்தங்கள் செய்யவும் விரும்புகிறோம். சட்டங் களை முறைப்படுத்தித் தொகுப்ப தென்பதை அதிலுள்ள முரண் பாடுகளைக் களைவது என்று நான் புரிந்து கொண்டுள்ளேன், இந்நாட்களில் பல்வேறு சட்ட நடைமுறைகளைக் காண முடிகிறது. சில பகுதிகளில் **தாயபாகா**வும் வேறு சில பகுதிகளில் **மிதாக்ஷரா** வும் பம்பாய் நடைமுறைகள் அதற்கே உரிய தனிப்பட்ட அம்சங் களுடனும் வழக்கத்திலிருக்கின்றன. தென் இந்தியாவின் சில பகுதிகளில் மருமக்கள் தாயம் என்றழைக்கப்படும் வழக்கமும் உள்ளது. இவைகள் வழக்கத்திலிருக்கும் பகுதிகள் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. அதற்கு நிரந்தரத் தன்மையும் காணப் படுகிறது. எனவே நன்கு வரையறுக்கப்பட்ட இந்தப் பகுதிகளில் தற்போது நடைமுறையிலிருக்கும் சட்டத்தை தொகுத்தளிக்கத் தொடங்குவது சட்டத்தை ஒரே சீராக்குவதுடன், பிற்காலத்தில் அதில் பல திருத்தங்கள் செய்வதற்கும் வழிவகுக்கும். தற்பொழுது நடைமுறையிலுள்ள சட்டங்களை ஒழுங்குபடுத்தி முறைப்படுத்து வதில் மட்டும் நாம் ஈடுபட்டால் அது அதிக விவாதங்களைக் கிளப்பாது, ஏனெனில் அவை ஏற்கெனவே வழக்கத்திலிருக்கும் சட்டங்கள். பிரிட்டிஷ் நீதிபதிகள் பணியாற்றிய நீதிமன்றங்கள் அதில் பல மாற்றங்களைக் கொண்டு வந்திருப்பினும் அதில் ஒரு நிரந்தரத் தன்மை காணப்படுகிறது. எனவே, சட்டங்களை முறைப் படுத்தி தொகுக்கும் பணியில் மட்டுமே ஈடுபட்டால் இன்று நாம் காணும் இவ்வளவு எதிர்ப்பைச் சந்திக்க வேண்டியிருக்காது. அது மட்டுமல்ல, நாம் சட்டத் தொகுப்பில் மட்டும் ஈடுபட்டால், மக்களின் நன்னம்பிக்கையைப் பெறுவதுடன், சில காலம் கழித்து இந்தச் சட்டத்திலும் வேறு சில விஷயங்களிலும் படிப்படியாகத் திருத்தங்கள் செய்வதற்கு ஏதுவாக இருக்கும் என்று நம்புகிறேன். ஆனால் இன்று சமூகத்தில் நடைமுறையிலுள்ள சட்டங்களில்

மாற்றம் கொண்டு வர நாம் மேற்கொண்டுள்ள வழிமுறை முற்றிலும் மாறுபட்ட விஷயம். சட்டத்தை முறைப்படுத்தும் பணியும் தொகுப்பும் சட்டத் திருத்தமும் கடந்த பல ஆண்டு களாக நிறைவேற்றப்படாமல் கிடப்பில் உள்ளன. சட்டத்தை முறைப்படுத்தும் பணியை மட்டும் முதலில் எடுத்துக் கொண் டிருந்தால் பல ஆண்டுகளுக்கு முன்பே, சட்டம் தொகுக்கப் பட்டு இப்பொழுது திருத்தம் செய்வதற்கு ஏற்ற நிலைக்கு வந்திருப் போம். ராவ் குழு நியமிக்கப்பட்ட நாளிலிருந்தே சாட்சியங்கள் சேகரிக்கப்பட்டு, பல அறிக்கைகளும் மசோதாக்களும் தயாரிக்கப் பட்டன. சட்டத் தொகுப்பு மற்றும் சட்டத் திருத்தம் ஆகிய இரண்டையும் ஒரே நேரத்தில் நிறைவேற்ற இவை விரும்பின. எனவேதான், இரண்டுமே நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அவர்கள் சட்டத்தை முறைப்படுத்தி தொகுப்பதில் மட்டும் ஈடுபட் டிருந்தால், அது நீண்ட காலத்துக்கு முன்பே முடிந்திருக்கும். சட்டத் திருத்தத்துக்கான நேரம் வந்திருக்கும். இந்த விஷயத்தைப் பற்றிய என் கருத்து இதுதான்.

நான் ஏற்கெனவே கூறியபடி, இந்த மசோதா மூன்று தனிப் பட்ட விஷயங்களை அதாவது திருமணம், வாரிசுரிமை, மரபுவழி உரிமை ஆகியவைகள் சம்பந்தப்பட்டவை. நமது சமுதாயத்தின் அடிப்படை லட்சியம் என்ன என்பதைப் பார்ப்போம். புதிய சாதனை கள், புதிய கல்வி முறைகள், புதிய வாழ்க்கை முறைகள் ஆகிய வற்றின் தாக்கத்தினால், மக்களின் உள்ளத்திலே ஆண், பெண் சமத்துவத்துவம் குறித்த பிரச்சினை முக்கியமாக நாட்டின் படித்த பெண்களின் மனதை வாட்டிக் கொண்டிருக்கிறது. நம்முடைய அரசியல் சாசனத்திலும் நாம் சமத்துவத்தை ஏற்றுக் கொண்டுள் ளோம். எனவே மேலெழுந்தவாரியாகப் பார்த்தால், வாரிசுரிமை சம்பந்தமாக மகனுக்கும் மகளுக்கும் இடையே ஏன் வேறுபாடு இருக்க வேண்டும் என்ற கேள்வி ஒருவருக்குத் தோன்றக் கூடும். ஆனால் இது அவ்வளவு சாதாரணமான கேள்வி அல்ல. தன் மகன் அல்லது மகளின் நல்வாழ்வில் ஒரு தகப்பனாருக்கு உள்ள அக்கறை யில் வித்தியாசம் இருக்க முடியாது. உண்மையில் அவருடைய அன்பும் பாசமும் சமமாகத்தான் இருக்க முடியும். மகன் எல்லாம் பெற வேண்டும், மகளுக்கு ஒன்றும் கிடைக்க வேண்டாம் என்று

எந்த புத்திசாலித் தகப்பனும் நினைக்க மாட்டார். உண்மையில் அவ்வாறு நடைபெறுவதில்லை. குறைந்த எண்ணிக்கையிலுள்ள பணக்காரக் குடும்பங்களை விட்டுவிடுங்கள். மத்தியதரக் குடும்பங்களில் கூட தன் மகளின் திருமணத்திற்காக, அவள் தனக்குக் கிடைக்கும் என்று நம்பிக் கொண்டிருக்கும் தொகையை விட அதிக அளவில் செலவழிக்கப்படுகிறது. 'பல சந்தர்ப்பங்களில்' மகன்களுக்கு கல்வி அளிப்பதைக் கூடப் புறக்கணித்து விடுகிறார்கள். ''பல சந்தர்ப்பங்களில்'' என்று நான் கூறுகிறேன். நான் இந்த விஷயத்தைப் பற்றிப் புரிந்து கொண்டது இதுதான், அப்படியெனில் வாரிசுரிமை பற்றி எதிர்ப்பு ஏன் கிளம்புகிறது? சனாதனிகள் கூட தங்களுடைய மகனை நேசிப்பது போலவே மகளையும் நேசிக்கிறார்கள். இந்த எதிர்ப்பு உருவாவதற்கு ஒரு முக்கிய காரணம் உள்ளது. அதைப் பரிசீலிப்பதற்கு இந்து சமூகத்தின் முழுக் கட்டமைப்பையும் நாம் நோக்க வேண்டும்.

எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் முகுத் பீகாரி லால் இதைப் பற்றிக் குறிப்பிட்டார், என்னால் முடிந்த அளவு குறைந்த நேரத்தில், இந்த விஷயத்தை விளக்க விரும்புகிறேன். நமது இந்து சமுதாயத்தின் கட்டமைப்பு பல ஆண்டுகளாக படிப்படியாக பரிணாம வளர்ச்சி அடைந்து வந்துள்ளது. நமது சமுதாய அமைப்பில் குடும்பமே அடிப்படைக் கூறாகும். உண்மையிலே நமது சமுதாயத்தின் நிரந்தரத் தன்மை, குடும்பத்தின் தொடர்ச்சியையே சார்ந்திருக்கிறது. தனிப்பட்ட நபரை அது அடிப்படைக் கூறாகக் கொண்டிருக்கவில்லை, குடும்பமே சமுதாயத்தின் மொத்த கட்டமைப்பிற்கும் அடிப்படைக் கூறாக இருந்தது. அவ்வப்பொழுது நிறைவேற்றப்பட்ட சட்டங்களும், பழக்க வழக்கங்களும் குடும்பத்தின் தொடர்ச்சியைப் பேணிப் பாதுகாப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தன. சமுதாயக் கட்டமைப்பின் அடிப்படைக் கூறாக இருந்த குடும்பமே எல்லாவற்றிற்கும் மையமாக இருந்தது. திருமணங்களினால் மகள்கள் இயற்கையாகவே வேறு ஒரு குடும்பத்திற்குச் செல்கிறார்கள். ஆனால் மகன்கள் அந்தக் குடும்பத்திலிருந்து கொண்டு பரம்பரையைத் தொடர்கிறார்கள், குடும்பத்தின் தொடர்ச்சியை உறுதி செய்யவும், அது உடைந்து போவதிலிருந்து தடுக்கவும் கூட்டுக் குடும்ப முறை உருவாயிற்று. இந்து சமுதாயத்தின் சிறப்பு அம்சமாக கூட்டுக் குடும்பம்

கருதப்படுவது ஏன்? ஏனெனில் இந்து சமுதாயம் குடும்பத்தின் தொடர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. எனவேதான் தனிநபரின் அடிப்படையில் உள்ள இதர சட்ட நடைமுறைகளில் காணமுடியாத கூட்டுக் குடும்பமுறை இந்துச்சட்டத்தின் சிறப்பம்சமாக விளங்கு கிறது. ஒன்றிரண்டு தலைமுறைக்கு முன்புவரை இந்தக் கூட்டுக் குடும்ப முறை நன்கு செயல்பட்டுவந்தது. கடந்த பல நூற்றாண்டு களாக நமது சமுதாயக் கட்டமைப்பின் ஸ்திரத்தன்மையையும் மற்றும் தொடர்ச்சியையும் அது பாதுகாத்துவந்தது. அதனால் வாரிசுரிமையை மகள்களுக்கும் அளிக்கும் முயற்சிக்கு எதிர்ப்பு கிளம்பியுள்ளது, இந்த எதிர்ப்பு அரசியல் அல்லது சமூகக் காரணங்களினால் எழுந்தது அல்ல. ஏனெனில் மகளுக்கும் வாரிசுரிமையை விரிவுபடுத்தினால் கூட்டுக்குடும்ப அடிப்படையிலான சமுதாயக் கட்டுக்கோப்பு முழு வதும் இதன் விளைவாக நொறுங்கிப் போய் விழுந்து விடும்.

இன்றைய உலகில், தனிநபருக்கு முக்கியத்துவம் அளிக்கும் போக்கே காணப்படுகிறது. பல இடங்களில் கூட்டுக் குடும்ப முறை யில் கீறல் விழுந்துவிட்டது. நவீனச் சூழ்நிலைகளில் கூட்டு குடும்ப வாழ்க்கை முறை எல்லாக் காலங்களுக்கும் தொடர்ந்து இருக்க முடியாது என்றுகூடச் சொல்வேன். இது இவ்வாறு இருப்பதால், நமது சமுதாயத்தை தனி நபர் அடிப்படையில் படிப்படியாக மாற்றுவதா அல்லது இப்பொழுது கொண்டுவரப்படவுள்ள சட்ட நடவடிக்கைகள் மூலம் அதைச் சுக்குநூறாக உடைத்துவிடுவதா என்பதே கேள்வி. நாம் உடனடியாக இந்து சமுதாயத்தை உடைக்க விரும்பினால், அதன் மூலம் சமுதாயத்தின் ஆணிவேரையே பிடுங்கி எறிந்து விடுவோமோ என அஞ்சுகிறேன். இதன் விளைவுகள் எதிர்பாராதவை யாகவும் முன்கூட்டியே சிந்தித்துப் பார்க்க முடியாதவையாகவும் இருக்கும், மகள்களுக்கு வாரிசுரிமை அளிப்பதுதான் பெரும் ஆபத்து என்று கூறமுடியாது. ஆனால் இந்த நடவடிக்கை சமுதாயத்தின் அடிப்படையை உள்ளடக்கியது. எனவேதான் இதற்கு எதிர்ப்பு உள்ளது, பல்வேறு பொருளாதார சமூகக் காரணங்களால் கூட்டுக் குடும்ப முறை உடைய ஆரம்பமாகிவிட்டதால், படிப்படியாக அதன் மாற்றத்துக்கு உதவ முயற்சிப்பதன் மூலம் நாம் எதிர்பார்க்கும் விளைவுகளைக் காணமுடியும். எதிர்பாராத விதத்திலோ திடீரென்றோ அல்ல. தொகுப்புச் சட்டம் நடைமுறைக்கு வரும் நாளிலிருந்து கூட்டுக் குடும்பமுறை மறைந்துவிடும் என்று மசோதாவின் ஒரு விதி குறிப் பிடுகிறது. நீங்கள் அதைத் திடீரென்று நிறைவேற்ற முயற்சிக்கிறீர் கள், ஆனால் அது உண்மையிலே நமது சமுதாயத்தின் அடிப்படை யையே தகர்த்துவிடும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படையாகக்

கூட்டுக் குடும்பமுறை இருந்து வந்துள்ளது. இந்த நிலை சந்தேகத் துக்கு இடமின்றி மாற்றப்படவேண்டும், இந்த உலகம் இன்று இருக்கும் நிலையில், அதை நீண்ட காலத்துக்கு தூக்கி நிறுத்த முடியாது என்பதில் நான் அவர்களுடன் ஒன்றுபட்டவன். என்றாலும், என் சீர்திருத்த ஆர்வமிக்க நண்பர்களை நான் கேட்டுக்கொள்வதெல்லாம் இதுதான்: இதைப் படிப்படியாக செய்வதா, மக்களையும் நம்முடன் அழைத்துச் செல்வதா, அல்லது முடிந்தவரை அவர்களையும் இழுத்துச் செல்வதா அல்லது சட்டத்தின் மூலம் ஒரே வீச்சில், பேனாவின் ஒரே கோட்டின் மூலம், இந்தக் கூட்டுக் குடும்ப முறையை ஒழித்துக் கட்டுவதா என்பதே கேள்வி. அசாதாரண சூழ்நிலைகளால் இன்றைய நாட்களில் பல பிரச்சினைகளால் மக்கள் கவலை கொண்டிருந்தாலும் இந்தக் கேள்வி அவர்களின் கவனத்தை அதிகம் கவர்ந்துள்ளது. எனவே எந்தவிதத் திடீர் நடவடிக்கையும் சீர்திருத்தவாதிகளுக்கும் அல்லது மற்றவர்களுக்கும் விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்தும். நாம் தேக்க நிலையில் வாழ்ந்து கொண்டிருக்க முடியாது என்பதை ஏற்றுக்கொள்கிறேன். கடந்த காலத்தில், முற்றிலும் மாறுபட்ட வழி களில் இந்து சமுதாயத்தில் பல மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. ஆனால் படிப்படியாக நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகளை வலுக்கட்டாய மாக நிகழவைத்தால், அதனால் கிட்டும் விளைவு மகிழ்ச்சிகரமாக இருக்காது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

ஐயா, ஒரு விஷயம் எனக்கு மிகுந்த ஆச்சரியத்தை அளிக்கிறது. தத்து எடுத்துக்கொள்ளும் முறையைத் தொடர்ந்து வைத்துக் கொள்ள விரும்புகிறோம். இது எதற்காக என்று எனக்குப் புரியவில்லை, தத்தெடுப்பது என்பது இந்து சட்டத்தின் ஒரு விசேஷத்தன்மை கொண்ட நடைமுறை, மற்ற சமுதாயங்களிலும், குழந்தைகள் தத்து எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள். குழந்தைகளை வளர்க்க வேண்டும் என்ற மனித உள்ளத்தின் இயற்கையான வேட்கையைத் திருப்திப் படுவதற்காகத்தான் அன்றி குடும்பத்தைத் தொடர வேண்டும் என்ற நோக்கத்தினாலல்ல. அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் மக்கள் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்கிறார்கள் என்று எனக்குச் சொன்னார்கள். ஆனால் அங்கு தத்தெடுப்பதின் நோக்கம் வேறு. தற்போது வழக்கத்திலிருக்கும் இந்துச் சட்டத்தில் உள்ள தத்து எடுக்கும் கொள்கை விசேஷத் தன்மை கொண்டது, ஏனெனில் இந்துக் கூட்டுக்குடும்பத்தின் கட்டமைப்பு அந்தக் குடும்பத்தின் தொடர்ச்சியை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இந்தச் சட்டத் தின் மூலம் நீங்கள் முயற்சி செய்யும் கூட்டுக் குடும்பங்களின் சிதைவுக்குப் பிறகு தத்தெடுக்க விதிமுறைகள் செய்ய வேண்டிய

அவசியம் என்ன? வேறு ஒரு கோணத்தில் இதைப் பார்ப்போம். தத்தெடுப்பது இந்து சமயத்தின் விசேஷத்தன்மை என்று ஏன் கருதப் படுகிறது? ஏனெனில் இந்து சமுதாயத்தின் முக்கிய அம்சம் அதன் அடிப்படையான கூட்டுக்குடும்பம். அதன் தொடர்ச்சிக்கு சுவீகாரம் அவசியமாக இருந்தது. கூட்டுக் குடும்ப அமைப்பு உடைந்து தனி நபர் கொள்கைக்கு முக்கியத்துவம் வந்த பிறகு இந்த சுவீகாரத் தத்துவத்தை மேலும் பாதுகாக்க நாம் ஏன் நேரத்தை வீணாக்க வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. சவீகாரக் கொள்கையை நான் தீர்மானமாக எதிர்க்கிறேன். இப்பொழுது தத்தெடுக்கப்படும் நிகழ்வுகளில் 100க்கு 99 சதவீதம் நீதிமன்றங்களில் வழக்குகளுக்கு உள்ளாகியிருக்கின்றன. ஏனெனில் இந்தக் கொள்கை பெரும் மாற்றத்திற்குள்ளாகியிருக்கிறது. கணவனை இழந்த பெண் ஒருத்தி சிறுவன் ஒருவனைத் தத்தெடுக்கிறாள். தனது சொத்து விவகாரங் களை இலவசமாக நிர்வாகம் செய்யக் கிடைத்த பையன் என அவள் எண்ணுகிறாள். தன்னை சுவீகாரம் எடுத்துக்கொண்டவரிடமிருந்து தனக்கு ஏதாவது கிடைக்குமாவென்று அவன் நினைக்கிறான். முற்றி லும் சுயநல நோக்குடனேயே இன்றைக்கு தத்தெடுக்கும் முறை செயல்படுகிறது, பண்டைய நாட்களில் தத்தெடுப்பதற்கு இருந்த அடிப்படை மறைந்து கொண்டிருக்கிறது. ஓரளவு அனுபவமிக்க வழக்குறைஞர் என்ற முறையில் 100க்கு 99 சுவீகாரங்கள் வழக்கு களில் முடிகின்றன என்பதை கண்டுள்ளேன். ஏனெனில் சுவீகாரத்தின் மூல நோக்கம் முற்றிலும் மாறிவிட்டது. இந்த மசோதாவின் வழிமுறைகள் நடைமுறைக்கு வரும்போது கூட்டுக்குடும்ப முறை முற்றிலுமாக மறைந்து போகும். உலகின் மற்ற பகுதிகளில் உள்ளது போல தனியார் சமுதாயம் உருவாகி வருகிறது. எனவே சுவீகாரம் சம்பந்தமாக எந்தவித சட்டவிதிகளையும் உருவாக்குவது அவசிய மில்லை. அப்படிச் செய்வது குழப்பத்தில்தான் முடியும். நாம் செய்யும் கரியங்கள் தர்க்கரீதியானதாகவும், உறுதியானதாகவும் இருந்தால், சுவீகாரத்தை முற்றிலுமாக நீக்கிவிடலாம்.

இப்பொழுது திருமணம் மற்றும் விவாகரத்தைக் குறித்துப் பேச வேண்டும். மாண்புமிகு திரு. சந்தானம் உறுப்பினர்களிடையே ஒரு கேள்வியை எழுப்பியுள்ளார். ஒருதார வழக்கத்தை ஆதரிக் கிறீர்களா அல்லது எதிர்க்கிறீர்களா என்பதே அந்தக் கேள்வி. இந் நாட்களில் ஒருதார வழக்கமே முற்றிலும் அவசியம் என்று நான் கூறுவேன். இதற்கு எதிரான கருத்துடைய எவரும் அவையில் இருக்க மாட்டார் என நம்புகிறேன். ஆனால் இந்த நோக்கத்தை நிறைவேற்ற இந்து தொகுப்புச் சட்ட மசோதா அவசியமா? பம்பாய் மாகாணத்தில்

ஒரு தார திருமண நடைமுறை உள்ளது. அதன்படி அந்த மாகாணத்தைப் பொறுத்தவரை ஒருதார வழக்கமே அமலிலுள்ளது. அதைத் தொடர்ந்து சில நேர்வுகளில் விவாகரத்தும் அனுமதிக்கப்படுகிறது. இந்த விஷயங்களில் நாம் அந்த நடவடிக்கையை விட அதிக தூரம் செல்லவில்லை. நம்முடைய நோக்கம் ஒருதார முறையை அமல் செய்வது என்றால், அதற்கு எந்த எதிர்ப்பும் இருக்காது எனக் கூறுகிறேன். கொள்கை ரீதியான காரணங்களைத் தவிர நடைமுறைக் காரணங்களும் அதற்குச் சாதகமாக உள்ளன. இந்நாட்களில் ஒரு மனைவியைவிட அதிக மனைவிகளை யாரும் விரும்புவதில்லை. இதற்கு விதி விலக்காக சில லட்சாதிபதிகளையும் கோடீஸ்வரர்களையும் தவிர இந்த ஆடம்பர வாழ்க்கையை வேறு யாரும் அனுபவிக்க முடியாது. மாண்புமிகு திரு. சந்தானம் கூறியது போல் இது மனோரீதியான ஆடம்பர வாழ்க்கை மட்டுமல்ல. ஏனெனில் ஒரு மனைவி மற்றும் குழந்தைகளுடன் வாழ்க்கையைச் சமாளிப்பதே ,மிகுந்த மன உளைச்சலை கொடுக்கிறது. இந்தச் சூழ்நிலைகளில் ஒரு மனைவியுடன் மேலும் ஒரு மனைவியை மணந்து கொள்வதால் எவ்வித மனோரீதியான சுகபோகமும் கிடைக்கப் போவதில்லை. உண்மையில் அது ஒரு எளிய நடைமுறைக் கொள்கை. எனவே ஒரு தார வழக்கமே இருக்க வேண்டுமென்று இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

விவாகரத்துச் சம்பந்தமான உண்மையான பிரச்சினையைக் குறித்து நாம் குழும்பிவிடக்கூடாது. ஒரு தார வழக்கத்தின் போது தம்பதியரில் ஒருவர் தொழுநோயால் பாதிக்கப்பட்டிருந்தால், மற்றவருக்கு அந்தத் திருமணச் சுமையிலிருந்து விடுபட வகை செய்யப்பட வேண்டும். இல்லையென்றால் நீங்கள் அவருக்கு இல்லற சுகத்தை மறுப்பதாகும். சில வகைகளில் விவாகரத்து என்பது ஒரு தார நடைமுறையின் தொடர்பயனாகும். சட்டங்களின் ஆசானான மனுவும் கூட இந்த மாதிரி நேர்வுகளுக்கு வகைசெய்துள்ளார்.

**नष्टे मृते प्रव्रजिते क्लीबे च पतिते पतौ पंचत्सु आपत्सु सुनारीणा पतिरन्यो विधीयते।**

என்னைப் பொறுத்தவரையில் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஒரு தார திருமணத்தை அமல்படுத்துகிறார்களோ இல்லையோ 10000 பேரில் 9999 பேர் இந்த நியதியையே பின்பற்றப் போகிறார்கள். இந்தப் பிரச்சினையில் நாம் கலக்கமுறத் தேவையில்லை. ஐயா, இந்தக் கருத்துக்களையெல்லாம் விட கடைசியாக வேறு ஒரு விஷயம் உள்ளது. ஏற்கெனவே நாம் நிறைவேற்றியுள்ள

அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதி எண் 44-ன் படி ஒரு சீரான உரிமையியல் தொகுப்புச் சட்டமே நமது குறிக்கோளாக இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. இந்தியா முழுவதிற்கும் ஒரே சீரான (சிவில்) உரிமையியல் தொகுப்புச் சட்டம் கொண்டுவர அரசு நடவடிக்கை எடுக்கும் என்று அரசியல் அமைப்புச் சட்டத்தில் நெறியுறுத்துக் கோட்பாடு ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. இந்துக்களுக்கு மட்டுமான இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் அந்த லட்சியத்தை நோக்கி முன்னேறிச் செல்கிறோமா என்பதை நீங்கள் ஆழ்ந்து பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன் முன்னேறிச் செல்வதற்குப் பதிலாக பின்நோக்கிச் செல்வதாகவே எனக்குத் தோன்றுகிறது. அந்த 44-ஆம் எண் விதியை நிறைவேற்றிய பிறகு இந்துக்களை ஒன்றுபடுத்தும் நோக்கத்திலான இந்த நடவடிக்கை யின் மூலம் நாம் லட்சியத்தை நோக்கி முன்னேறிச் செல்கிறோம் என்று என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. சந்தானம் கருதுகிறார். அது அப்படி இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம். நமது நாட்டின் பாதுகாப்பிற்கு இந்துக்களை மட்டும் ஒன்றுபடுத்துவது போதாது. இந்நாட்டின் எல்லா மக்களையும் ஒன்றுபடுத்த வேண்டும். உலக முழுவதும் உள்ள நாடுகளில் திருமணம், வாரிசுரிமை போன் றவைகள் (சிவில்) உரிமையியல் சட்டத் தொகுப்பில் இடம்பெற் றுள்ளன. இந்தியாவிலும் அவ்வாறே செயல்படுத்தப்பட வேண்டும். இந்துக்கள், கிருஸ்தவர்கள், பார்சிகள் அல்லது முஸ்லீம்கள் ஆகிய எல்லோரும் இந்தச் சட்டத்திற்குட்பட்டவர்களாக இருக்க வேண்டும். அந்த நோக்கில் பார்த்தால் நாம் நேர்மாறான திசையில் சென்று கொண்டிருக்கிறோம். இது எவ்வாறு எனக் கூறுகிறேன். மதம் மற்றும் ஓரளவு மதசம்பந்தமான விவகாரங்களில் தலையிடாமை என்ற கோட்பாடு வெளிநாட்டு அரசினால் உருவானது. அவர்களுடைய நலனுக்காக இது நம்மீது திணிக்கப்பட்டது நம்முடைய நலனுக்காக அல்ல. இந்த விஷயங்களையெல்லாம் ஒரே சீரான (சிவில்) உரிமை யியல் தொகுப்பு சட்டத்தில் சேர்ப்பதை எது தடுக்கிறது? தற்போ தைய இந்தத் தொகுப்புச் சட்டம் மாறுபட்ட சூழ்நிலைகளில் ஒரே மாதிரியான (சிவில்) உரிமையில் தொகுப்புச் சட்டம் தேவை என்ற நோக்கம் இல்லாத காலகட்டத்தில் உருவானது. ஆனால் அந்த கால கட்டத்திற்குப் பிறகு நிலைமையில் பெரும் மாற்றங்கள் ஏற்பட் டுள்ளன. முக்கியமாக பாகிஸ்தானின் பிரிவுக்குப் பிறகு நமது நாட்டி லுள்ள பல்வேறு சக்திகளை, அது இந்துக்களாகவோ, கிருஸ்தவர் களாகவோ முஸ்லீம்களாகவோ அல்லது பார்சிகளாகவோ இருப்பினும் அவர்களை ஒன்றிணைப்பதே நமது முயற்சியாக இருக்கவேண்டும். இந்த மாதிரி விஷயங்களில் இந்துக்களுக்கு மட்டும் ஏதாவது செய்வதை

நான் விரும்பவில்லை. நமது நாட்டு மக்கள் அனைவரையும் ஒன்றாக இணைப்பதற்காக கூட்டுத் தேர்தல் முறையை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். ஒரு சீரான (சிவில்) உரிமையியல் தொகுப்புச் சட்டத்தின் மூலம் மேலும் மக்களை ஒன்றிணைக்க முடியும். அந்த நடவடிக்கைகளைத்தான் நாம் தொடரவேண்டும். நம் எல்லோருடைய அக்கறையும் கவனமும் அதன் பால் இருக்க வேண்டும். மற்ற மதங்களைச் சேர்ந்தவர்களின் சமூக விஷயங்கள் மற்றும் வாரிசுரிமை சம்பந்தப் பட்ட சட்டங்களில் தலையிடமுடியாது என்ற கொள்கையை விட்டு விட வேண்டும். அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். நன்கு பின்னிப் பிணைந்த சமுதாயமாக நமது சமுதாயம் உருவாக வேண்டிய இத் தருணத்தில் நம்மைப் பிளவுபடுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் உருவாக்கப்பட்ட பழைய கருத்தைப் படித்துக் கொண்டு நாம் தொங்கிக் கொண்டு நிற்க விரும்புகிறோம். நமது மக்களின் பாதுகாப்பிற்கும் நல்வாழ்விற்கும் ஒரே சீரான உரிமையியல் (சிவில்) தொகுப்புச் சட்டம் தேவைப்படுகிறது. சில பழைமைவாத நண்பர்களின் உணர்ச்சிகளை புண்படுத்துவது பற்றிக்கூட நான் கவலைப்படாமல் திறந்த மனத்துடன் என் கருத்துக்களைக் கூறுகிறேன். நம்முடைய செயல்கள் எல்லாம் சரியான முறையில் நிறைவேற்றப்படவேண்டும். சில விஷயங்களில் பழைய கொள்கைகளில் தொங்கிக் கொண்டு புதிய கொள்கைகளைக் கொண்டு வரமுடியாது. இது சம்பந்தமாக, கோவா முழுமைக்கும் ஒரே சீரான சிவில் சட்டம் நடைமுறையில் உள்ளதை நான் குறிப்பிட வேண்டும். சட்ட அமைச்சருக்குக்கூட அது தெரிந்திருக்கக் கூடும். வாரிசுரிமை சட்டம் மற்றும் இதர சட்டங்கள் போர்ச்சுக்கீசியரின் கீழ், கிருஸ்தவர்கள், இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய அனைவருக்கும் ஒரே ரீதியில் நடைமுறைப் படுத்தப்படுகின்றன. அது அப்படியென்றால், நாம் ஏன் அஞ்ச வேண்டும்? அதாவது மதம் மற்றும் ஓரளவு மத சம்பந்தமான விஷயங்களில் தலையிடக்கூடாது என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டதன் விளைவுதான் அந்த அச்சம். நம்மைப் பிரித்தாள வேண்டும் என்ற எண்ணத்தில் வெள்ளையர்கள் தங்கள் நலனுக்காக இதைப் பின்பற்றினர். தேசத்தின் எல்லா மக்களையும் ஒன்றுபடுத்துவதே நமது இன்றையக் கொள்கையாக உள்ளது. இப்படிப்பட்ட மசோதாவை கொண்டு வருவதற்குப் பதிலாக, நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் 1950 ஜனவரி 26க்குப் பிறகு உடனடியாக இந்தியா முழுவதற்குமான, மக்கள் அனைவருக்கும் பொதுவான உரிமையியல் (சிவில்) சட்டம் ஒன்றை, நமது சட்ட அமைச்சர் கொண்டு வரவேண்டும். நான் பேச எழுந்தவுடன், அவை உறுப்பினராக உள்ள என் உற்சாகமிக்க சகோதரிகள் நான் இந்த மசோதா

வுக்கு எதிரி என எண்ணினர். சமத்துவம் மற்றும் அதுபோன்ற விஷயங்களை முற்றிலும் ஆதரிப்பவன் நான், ஒன்றை அழித்துவிட்டு மற்றொன்றில் கஷ்டத்தை உருவாக்குவதாக நம் பாதை இருக்கக் கூடாது. ஒரே மாதிரியான உரிமையியல் (சிவில்) சட்டத்தை உருவாக்க, நமது இந்து நண்பர்களிடம் சென்று, கூட்டுக் குடும்பமுறை இனி தேவையற்றது, அதற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும், அதுதான் நமது தேச நலனுக்குச் சிறந்தது என்று கூறலாம். ஆனால் நமது செயல்பாடுகளோ அதற்கு முற்றிலும் மாறாக உள்ளது. சற்றும் விரும்பப்படாத, முற்றிலும் எதிர்பாராத விளைவுகளுக்கு அது நம்மை இட்டுச் செல்லும் என அஞ்சுகிறேன். உதாரணம் ஒன்று கூறலாம் என நினைக்கிறேன். பம்பாய் மாகாணத்தின் அகமத் நகரைச் சார்ந்த ஓர் இளம் விதவைப் பெண் முஸ்லீம் வாலிபர் ஒருவனை மணக்க விரும்பினாள். அது ஒரு காதல் விவகாரமோ என்னவோ என்பது எனக்குத் தெரியாது. அவள் ஒரு முஸ்லீமை மணக்க விரும்பினாள். நெருக்கடியான நாட்களைக் கடந்து கொண்டிருந்த காலம் அது என்பது உங்களுக்குத் தெரியும். எங்கும் ஒரே குழப்பங்கள். கலகங்கள் நடைபெற்றதில் பல உயிர்கள் பலியாயின. எனவே இந்த முஸ்லீம் இளைஞன் தன் பாதுகாப்பைப் பற்றி கவலைப்பட்டதுடன், தன்னுடைய சமூகத்தின் பாதுகாப்பைப் பற்றியும் அச்சமடைந்திருந்தான். அவளைத் திருமணம் செய்து கொள்ளவோ, அந்த மாதிரி நினைப்போ தனக்கு இல்லை என்று அந்த முஸ்லீம் இளைஞன் கூறினான். அந்த முஸ்லீம் இளைஞனுக்கு ஏற்கெனவே மனைவியும் குழந்தைகளும் இருந்ததால், இஸ்லாம் மதத்திற்கு மாறாது அந்தப் பெண்ணால் அவனை மணம் செய்து கொள்ள முடியாது. முஸ்லீம் மதத்திற்கு மதம் மாறினால்தான் அவளால் அவனை மணம் புரிய முடியும். பம்பாய் மாகாணத்தில் இந்துக்கள் ஒரு மனைவிக்கு மேல் மணம் புரியக் கூடாதென்று சட்டம் ஒன்று இயற்றப்பட்டுள்ளது. ஆனால் முஸ்லீம்கள் அப்படி நடந்து கொள்வதை அது தடுக்கவில்லை. தற்போதைய மசோதாவின்படி ஒரு முஸ்லீம் தம் விருப்பம்போல் எத்தனை மனைவிகளை வேண்டுமானாலும் திருமணம் செய்து கொள்ள, அதாவது குறைந்தபட்சம் நான்கு மனைவிகளையாவது திருமணம் செய்துகொள்ள அனுமதிக்கப் பட்டுள்ளார். இப்பொழுது ஒருவன் பணக்காரனாக இருந்தால் ஒரு மனைவிக்கு மேல் மனைவி வேண்டும் என்று விரும்பினால், முஸ்லீம் மதத்திற்கு மாறி எவ்வளவு பெண்களை வேண்டுமானாலும் மணந்து கொள்ள முடியும். ஆக இந்தக் கருத்தோட்டங்களின்படி பார்த்தாலும் எல்லா மக்களுக்குமான ஒரே சீரான உரிமையியல் (சிவில்) தொகுப்புச் சட்டத்தை உருவாக்க இனியாவது எவ்விதத்திலும்

மாக நடத்துவதை விரும்ப மாட்டார். மாறாக அவளுக்கு அதிகமாகக் கொடுப்பதையே அவர் விரும்புவார்.

**பாபு ராம்நாராயண் சிங் (பீகார்: பொது) :** பெருமளவிற்கு இது முற்றிலும் சரிதான்.

**திரு. ராம் சகாய் :** தன்னைவிட அதிக வசதியுள்ள வீட்டில் தான் தன் மகளை மணம் செய்து கொடுக்க தகப்பனார் விரும்பு கிறார். தகப்பனார் மட்டுமல்ல, ஓர் இந்து சகோதரன்கூட தன் சகோதரி வசதிமிக்க குடும்பத்தில் வாழ்க்கைப்பட வேண்டும் என்று நினைக்கிறான் என்பதை உறுதியாகக் கூறுகிறேன். ஆயிரத்தில் அல்லது லட்சத்தில் ஒன்று இதற்கு விதிவிலக்காக இருக்கலாம். இந்த மாதிரியான நேர்வுகள் இல்லையென்றே நான் நினைக்கிறேன். வாரிசுரிமை சம்பந்தமாக மகன்களுக்கும் மகள்களுக்குமிடையே யான சமத்துவத்தை நாம் எதிர்கொள்ள வேண்டிய அவசியம் என்ன என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நமது மத்திய தர வகுப்பு மக்களிடையே சொத்துப் பிரிவினை சம்பந்தமாக ஏற்படும் தகராறுகளினால், நான் அவ்வாறு கூறுகிறேன். ஒரு மகள் தன் கணவர் குடும்பத்தில் தன் பங்கைப் பெறுகிறாள். தகப்பனாரின் சொத்திலும் பங்கு வேண்டும் என்று அவள் எண்ணலாமா? நிச்சயமாக இது நமது சமூகக் கட்டமைப்பைச் சீர்குலைக்கும் என்பதே என் கருத்து. இந்த அடிப்படையில்தான் இந்தக் கருத்துகளை அவைமுன் வைக்க முன்வந்துள்ளேன். சகோதரன் மற்றும் சகோதரிக்கிடையேயான பாசப்பிணைப்பு, இந்த நடவடிக்கைகளினால் ஓரளவு பாதிக்கப்படும் என்பதே என் கருத்து. சொத்துப் பிரிவினையில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த சகோதரர்களிடையே தகராறு ஏற்பட வாய்ப்புகள் உள்ள போது, வேறு குடும்பத்தில் வாழ்ந்து வரும் மகளுடன் பயங்கரத் தகராறுகள் உருவாகலாம். தங்களுக்கிடையே பாசத்துடன் வாழும் சகோதரர்களுக்கிடையே இம்மாதிரி தகராறுகள் எழக்கூடிய நிலை யில், மகள் குடிபுகுந்து வாழும் வீட்டில் சகோதர பாசத்தை வளர்க்க யாரும் இருக்க மாட்டார்கள். மாறாக சகோதரர்களுடன் தகராறு செய்ய, வழக்குத் தொடுக்கத் தூண்டி விடும் நபர்களே இருப்பார்கள். நமது சமூகக் கட்டுக் கோப்பை சீர்குலைக்கச் செய்யும் நடவடிக்கை களை நாம் ஏன் உணர்வுபூர்வமாக மேற்கொள்ள வேண்டும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அதேபோன்று இந்து கூட்டுக் குடும்பத்தைக் குறித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவு சங்கங்களை நிறுவ

நாம் தீர்மானித்துள்ளோம். நாட்டில் இந்தக் கூட்டுறவுக் கொள்கையைப் பரப்ப மக்களின் ஒத்துழைப்பைக் கோருகிறோம். கூட்டுறவுக் கொள்கை அடிப்படையில் செயல்படும் கூட்டுக் குடும்ப முறையை மட்டும் ஒழிக்க நாம் ஏன் இவ்வளவு துடிதுடிப்புடன் இருக்கிறோம்? இந்த இரு விஷயங்களையும் கணக்கிலெடுத்துக் கொண்டு, இரண்டையும் திருப்தி செய்யக்கூடிய ஒரு வழிமுறையைக் காண வேண்டும். மக்களின் சில பகுதியினரிடையே காணப்படும் பதட்டத்திற்கும், இந்த மசோதாவை சர்ச்சைக்குரியதாக்கியிருப்பதற்கும் காரணமாக இருப்பது முக்கியமாக வாரிசுரிமை பற்றிய விதிமுறைதான். வாரிசுரிமை பற்றிய பிரச்சினைக்கு ஒரு முடிவுக்கு வந்தால் இந்துத் தொகுப்புச் சட்டத்தை சரியான முறையில் பரிசீலித்து ஒருமனதுடன் நிறைவேற்றலாம். அவையின் நேரத்தை மேலும் எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. தகப்பனாரின் சொத்தில் மகளுக்குப் பங்கு கிடைக்கக் கூடாது என்பதல்ல, அது நமது சமூக அமைப்பை எந்த விதத்திலும் சீர் கெடுத்து விடக்கூடாது என்ற கருத்தை கணக்கிலெடுத்துக் கொண்டு பொறுக்குக் குழுவுக்கு நியமிக்கப்படும் உறுப்பினர்கள் இதைப் பரிசீலிக்க வேண்டும்.

மேலும் சர்ச்சைக்குரிய ஒரு விஷயம் உள்ளதாக எனக்குத் தோன்றுகிறது. ஒருவேளை நான் கூறுவது தவறாகக்கூட இருக்கலாம். ஆனால் நான் புரிந்துகொண்டவரையில், ஒரு மகன் மற்றும் மகளின் தனிப்பட்ட நிலையைப் பார்த்தால், இந்த மசோதாவின்படி மகனுக்கு தகப்பனாரின் சொத்தில் பங்கு கிடைக்கிறது. ஆனால் ஒரு மகள் தனது மாமனாரின் சொத்திலும்கூட பங்கு பெறுகிறாள். இந்த முரண்பாட்டிற்கான காரணம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. இந்த விதிமுறை ஏன் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இந்த விவாதத்திற்குப் பதிலளிக்கையில் மாண்புமிகு சட்ட அமைச்சர் இந்த விதிமுறை ஏன் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது என்பதை விளக்குவார் என்று நம்புகிறேன்.

இந்த அவையின் நேரத்தை மேலும் எடுத்துக் கொள்ளாமல், நான் பணிவுடன் கூறவேண்டியது இவ்வளவுதான்.

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா** *(உ.பி: பொது)* : ஐயா, விவாதத்தை மிகவும் கவனமாகச் செவிமடுத்தேன். பெரியவர்கள் பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா மற்றும் பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா கூறிய

★ அ.நி.வி. (சட்டமன்ற) டி., தொகுதி VI, பிரிவு II 12 டிசம்பர் 1949 பக். 499 - 502.

கருத்துகளைப் பெரிதும் மதிக்கிறேன். நமது கலாசாரத்தின் மற்றும் நாகரீகத்தின் செயல்பாடுகளில் இந்து தொகுப்புச் சட்டம் குறுக்கிடுகிறது என்றும், இது சட்டமாக நிறைவேற்றப்பட்டால் நமது மத அமைப்புகளுக்கு மற்றும் கலாசாரப் பின்னணிக்கு தேவையற்ற, முறையற்ற குறுக்கீடு ஏற்படும் என்பதுடன் சமுதாய கட்டமைப்பு சீர்குலைந்துவிடும் என்ற அவர்களது குற்றச்சாட்டிற்கு ஆதாரம் தேடினேன். துரதிர்ஷ்டவசமாக எந்தவித ஆதாரமும் கிட்டவில்லை. எந்த விதத்திலும், எந்த விஷயத்திலும், நம்மடைய மத நடவடிக்கைகளில் குறுக்கிடும் எதுவும் இந்தச் சட்டத்தொகுப்பில் இல்லை. இந்தச் சட்டத்தொகுப்பு சரியானதா, இல்லையா என்பது வேறு விஷயம். கொண்டுவரப்பட்டுள்ள மசோதாவுக்கும் இந்து மதத்திற்கும் எந்தச் சம்பந்தமுமில்லை. எனவே அது நிறைவேற்றப்பட்டால் அது இல்லாமல், இந்து மதம் எவ்வளவு நன்றாக அல்லது மோசமாக இருந்ததோ அப்படியேதான் தொடர்ந்து இருக்கும்.

கலாசாரந்தான் இரண்டாவது பிரச்சினை. ஒரு வீடு ஏ அல்லது பி-க்கு சொந்தமா என்பதே கேள்வி. அது ராம்குமாருக்கோ அல்லது கிருஷ்ணகுமாருக்கோ சொந்தமாக இருக்கலாம். அத்துடன் விமல் குமாரியின் பெயரையும் இணைத்துக் கொள்வதால் இந்துக் கலாசாரத்திற்கு எந்த பாதிப்பும் ஏற்படாது.

*மாலை 4 மணி*

என்னைக் குறுக்கீடு செய்வதற்கு முன்பு கலாசாரத்தின் அடிப்படை என்ன என்பதை நண்பர்கள் புரிந்து கொள்ளவேண்டும். சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கும், பரிணாம வளர்ச்சிக்கும் உறுதுணையாகச் செயல்படாத கலாசாரம் கலாசாரமல்ல. கலாசாரம் தேக்க நிலையிலிருந்தால் அது நீண்டகாலம் தொடர முடியாது. இந்து கலாசாரம் தேக்க நிலையிலிருந்தால், இவ்வளவு நீண்டகாலம் நிலைத்து நிற்க முடியாது. பரிணாம வளர்ச்சி தொடர்பான செயல்பாடுகளில் கலாசாரத்துக்கு தொடர்பு இருக்க வேண்டும். பரிணாம வளர்ச்சியடைந்துவரும் சமுதாயத்துடன் ஏதாவது ஒரு வகையில் தொடர்பு இருக்க வேண்டும். கலாசாரத்திற்கு ஆபத்து என்று கூக்குரலிடுவதற்கு முன்பு இதைப் புரிந்து கொள்ள வேண்டும். கலாசாரம், மதம், மற்றும் இன்றைய இந்து சமுதாயம் அல்லது இந்துச் சட்டம், ஏன் இந்து மதம் கூட வேத காலத்தில் இருந்தது போன்று இன்றில்லை. கிரேக்கர்கள் இங்கு வந்தார்கள்; ரோமானியர்கள் வந்தார்கள். இந்த ஊடுறுவல்களுக்குப் பிறகும் நாம் எந்தவித மாற்றமுமின்றி இருக்கிறோம் என்பதை நம்ப வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? நமக்கு இதயமில்லையா, மனமில்லையா, கிரகித்துணரும் சக்தியில்லையா? பிறவற்றை ஏற்றுக் கொள்ளும் சக்தியும், பரிணாம

வளர்ச்சிக்கான சாத்தியமும் இருந்ததால்தான் நமது பெருமை நிலைத்து நிற்கிறது. பிறவற்றை ஏற்றுக் கொள்ளும் சக்தியில்லை யென்றால் இவ்வளவு காலம் நாம் நிலைத்து நின்றிருக்க முடியாது. இதுவே என் பதில். எனவே பகுத்தறிவு பூர்வமான பாதையைத் தேர்ந் தெடுப்போம். விஷயங்களை அறிவு பூர்வமாக, அறிவியல் பூர்வமாக நோக்குவோம். ஸ்மிருதியில் கொடுக்கப்பட்டுள்ள இந்துச் சட்டம், ஸ்மிருதியை உருவாக்கியவர்களின் காலத்திற்கு முன்பு வழக்கத்தி லிருந்த பழக்கவழக்கங்கள் மற்றும் நியதிகளின் தொகுப்புதான். பல வகையிலான ஸ்மிருதிகள் உள்ளன. பல விஷயங்களில் மாறுபட்ட கருத்துகளை கொண்டிருப்பதுடன், ஒரே விஷயத்தைக் குறித்து அதை எழுதியவர்கள் மாறுபட்ட கருத்துகளைத் தெரிவித்துள்ளனர். அவர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்ட கருத்துகளைக் கொடுத்தாலும் அந்த விளக்கங்கள் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்று பிரிவி கவுன்சில் கூறியுள்ளது. ஏனெனில் ஸ்மிருதியில் அவை கொடுக்கப் பட்டதனால் அல்ல, அது உண்மையினை அடிப்படையில் இருப் பதனால் அல்ல, அது வேதத்திலிருந்து பெறப்பட்டதால் அல்ல, அது ஸ்மிருதியில் பதிவு செய்யப்பட்டுள்ளதால், அந்த காலகட்டத்திற்கு முன்பு நிலவி வந்த பழக்க வழக்கங்களாகத்தான் அவை இருந் திருக்க முடியும் என்பதால்தான். இந்துச் சட்டத்தின் கண்ணோட் டத்தின்படி எழுதப்பட்ட சட்டத்தை, வாசகத்தை நடைமுறை வழக்கம் ரத்து செய்துவிடுகிறது. இது ஒரு மத சம்பந்தமான பிரச்சினையா, கலாசார சம்பந்தமான பிரச்சினையா, ராம்குமார் மற்றும் கிருஷ்ண குமாருடன் விமலா என்ற பெயரையும் கொள்வதால் இந்து சமுதாயம் கீழே விழுந்து நொறுங்கிவிடுமா என்று இந்தக் கண்ணோட்டத் தில் பாருங்கள். எனவே இந்தப் பிரச்சினையில் மதத்தை இழுக் காதீர்கள். கலாசாரத்தையும் இழுக்காதீர்கள். வேறு விஷயங்களையும் இழுத்துக்கொண்டு இந்து சமுதாயம் சிதறிவிடும் என்று கூறாதீர் கள். இந்தச் சட்டத்தையோ அல்லது அந்தச் சட்டத்தையோ நிறை வேற்றுவதன் மூலம் இந்து சமுதாயம் விழுந்துவிடும் அளவுக்கு அவ்வளவு பலவீனமாக இருந்ததில்லை; இந்து கலாசாரமும் அவ்வளவு பலவீனமாக இருந்ததில்லை. இதையும் மீறிய பலம் அவற்றுக்குள்ளது.

மேலும், கடவுளிடமிருந்து வந்தவர்கள் நாம் என்று நாம் மட்டும் கூறிக் கொள்ளவில்லை. புகழ் பெற்ற ஆறு நாகரிகங்கள் உள்ளன. ஒவ்வொரு நாகரிகமும் கடவுளிடமிருந்து வந்ததாக கூறு கிறது. முஸ்லீம்கள் அவ்வாறு கூறுகிறார்கள்; கிருஸ்தவர்களும் அவ்வாறே கூறுகிறார்கள்; 'நான் கடவுளின் புதல்வன்' என்று

ஜப்பானியர் கூறுகிறார்கள். 1559ல் மூன்றாம் ஜார்ஜுக்கு சீனச் சக்கர வர்த்தி எழுதிய கடிதத்தில் சீனக் குடியரசு கடவுளிடமிருந்து பெறப் பட்டது, ஆங்கில வர்த்தகத்திற்கும் குடியரசுக்கும் எவ்வித சம்பந்தமு மில்லை, வெளிநாட்டினர்களால் அது கறைபட்டு விடக் கூடாது'' என்று எழுதியிருந்தார். நாற்பத்தொன்பது வருடங்களுக்குப் பிறகு ஆங்கிலேயர்கள் சீனாவுடன் போர்தொடுத்தார்கள். கஞ்சா வியாபாரி ஏற்றுக் கொள்ளப்பட்டார். அப்பொழுது கடவுளின் புதல்வரின் நாடு எங்கே போயிற்று? ஆங்கிலேயர்களின் பீரங்கி வாயிலின் முன் கடவுளின் புதல்வர் எங்கே போய்விட்டார்! ஆங்கிலேயர்கள் கூட இப்படித்தான் கூறிக்கொள்கிறார்கள். இந்தியா மற்றும் ஆப்ரிக்கா வுக்குச் சென்று அங்குள்ள மக்களை நாகரிகப்படுத்த வேண்டிய சுமை வெள்ளையர்களுக்குள்ளது; அது அவனுடைய விதியாக உள்ளது என்கிறார்கள். இந்த மாதிரியான கூற்றுகள் எல்லாம் பொய் யானவை. நாங்கள் கூறுவது மட்டுமே உண்மையானது என்று கூறுவது எவ்வளவு பொய்யானதோ, அது போன்றதுதான் இந்தக் கூற்றுகளும். நான் ஓர் இந்து, நான் ஒரு பிராமணன். ஓர் இந்து வாக, பிராமணனாக இருப்பதில் பெருமை கொள்கிறேன். ஆனால் உண்மை என்பது என் ஏகபோக உரிமை என்றோ என்னுடைய மூதாதையர்கள் மட்டுமே உண்மையின் பாதுகாவலர்கள், மற்றவர் எவரும் அல்ல என்றோ கூற நான் விரும்பவில்லை. எனது மூதாதை யர்களுக்கு மட்டும் உண்மையை அளித்துவிட்டு கடவுள் மற்றவர் களுக்கு அதை அளிக்கவில்லையென்றால் அது நியாயமற்றது. இந்த உலகில் மற்ற மனிதர்களைப் படைத்தது முட்டாள்தனமும் ஆகும். ஓர் இந்து சிறுவன் பெரியவர்களிடம் கேட்டுக் கொள்வது போல், நான் மிகப் பணிவன்புடன் கேட்டுக் கொள்வதெல்லாம், சமயத்தைக் கொண்டு வராதீர்கள், கலாசாரத்தை எடுத்துக் கொள்ளாதீர்கள். இந்து சமுதாயம் சீரழிந்துவிடும் என்று சொல்லாதீர்கள் ஓர் அறிவு பூர்வமான, அறிவியல் பூர்வமான கண்ணோட்டத்தில், பொது அறிவின் அடிப்படையில் நவீன உலகில் அமலிலுள்ள சட்டத்தின் அடிப்படையில் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். ஒரு நாட்டின் பொரு ளாதார மற்றும் சமூக நிலைமைகளின் விளைவுகள் மற்றும் அந்த நிலைமைகளுக்கு தீர்வு காணும் அறிவாற்றலின் வெளிப்பாடுதான் அந்நாட்டின் சட்டம் என்பது.

இப்பொழுது நான் அடுத்த விஷயத்துக்கு வருகிறேன். உலகத் திலிருந்து நீண்டகாலமாக தனிமைப்பட்டு இருந்துவிட்டோம். நான் ஆறு நாகரீக சமுதாயங்களைப் பற்றிக் கூறினேன். சீன அரசு, ஜப் பானின் சக்கரவர்த்தி, ஆங்கில அரசர், ரஷ்யாவின் ஜார், இந்தியாவின்

பாபர் ஆகிய அனைவரும் கடவுளிடமிருந்து வந்தவர்கள் என்று கூறிக்கொண்டனர், ஏனெனில்..........

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** இந்து தொகுப்பு சட்டத்தின் எந்தப் பிரிவை மதிப்பிற்குரிய நண்பர் குறிப்பிடுகிறார்?

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா:** உங்கள் கேள்விக்கு வருகிறேன். சரி, அவர்கள் எல்லோரும் தாங்களே மிக உயர்ந்தவர்கள் என்றும், மிகவும் சக்தி வாய்ந்தவர்கள் என்றும் கூறிக் கொண்டிருந்தார்கள் என்பதைக் குறிப்பிட்டேன். ஏனெனில் அவர்கள் மற்றவர்களைப் பற்றி புரியாமலிருந்தார்கள்; ஏனையோர்களைப் பற்றித் தெரியாமல் இருந்தார்கள். எனவே அவர்கள் தங்கள் மதத்தை மிகச் சிறந்த மதம் என்றனர். ஆனால் இப்பொழுது ஆகாய விமானங்கள், கப்பல் கள், இலக்கியங்கள், அச்சகங்கள், வெளியீடுகள் மூலம் இந்த உலகின் எல்லா மக்களுடனுமான தொடர்பு பெருகி விட்டது. இதர மக்களை அறிந்து கொள்வதுடன் புரிந்து கொள்ளவும் செய்கிறீர்கள். உங்கள் மீது அவர்களின் தாக்கம் ஏற்படுகிறது. உங்கள் குழந்தையின் மேசை யைப் பார்த்தால் அங்கே பெர்னார்ட்ஷா மற்றும் ஷேக்ஸ்பியரின் நூல்களைக் காண்கிறீர்கள். அங்கே கங்காலெஹ்ரியைக் காண முடியாது, அவனுடைய மேசையில் பெர்னார்ட்ஷா, ஷேக்ஸ்பியர் மற்றும் பியர்ல் பக் இருப்பதால், அந்தக் குழந்தை இந்துவல்ல என நீங்கள் முடிவு செய்வதில்லை. எல்லாச் சிந்தனை ஓட்டங்களும், நடவடிக்கைகளும் உலகின் எல்லா நாடுகளையும் பாதிக்கவும், தாக்கத்தை ஏற்படுத்தவும் செய்கின்றன. மற்றவர்களின் சிந்தனை களால் பாதிக்கப்படாத எந்தவிதச் சட்டத்தையும் நீங்கள் பார்க்க முடியாது. அது சக்திமிக்கதாக, வலுவானதாக இருக்கும்போது மக்களின் நல்ல எதிர்காலத்திற்கு அது துணை நிற்கும். பிற உலகுடன் சம்பந்தப்படாது தனிமைப்பட்டிருந்தால் அது வலிவிழந்திருக்கும். அறிவியல் அடிப்படையில் நமக்குச் சட்டங்கள் அவசியம். ஒரு காலத் தில் தவறான கண்ணோட்டங்கள், பல்வேறு பழக்கவழக்கங்கள் வேறு பல விஷயங்கள் இருந்திருக்கலாம். ஆனால் இன்று மதம் என்பது ஓர் அறிவியல் பூர்வமான அறிவாகும். நீங்கள் நம்புவதை யெல்லாம் மதம் என்று கூறிவிட முடியாது. அதை யாரும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. மானுட நிலையிலிருந்து, பரந்த இந்த மானுட நிலையிலிருந்து தெய்வீக நிலைக்கு, மானுட நிலையிலிருந்து இறைநிலைக்கு எது மானுட வர்க்கத்தை இட்டுச் செல்லுகிறதோ அதுதான் மதமாகும். நீங்கள் தப்பித்துக் கொள்ள முடியாத ஏற்றுக் கொள்ளப்பட்ட சில கோட்பாடுகள் உள்ளன. எனவே இந்த இருபதாம்

நூற்றாண்டில் எல்லாமே மதமாகி விடவோ, கலாசாரமாகிவிடவோ, அல்லது சமுதாயத்தின் அடித்தளமாகவோ ஆகிவிட முடியாது. சமுதாயத்தின் அடித்தளமாக, கலாசார்த்தின் அடிப்படையாக, மதத்தின் அடிப்படையாக உலகின் பல மகான்களால் மத போதகர்களால், சட்ட நிபுணர்களால், உலகம் முழுவதும் ஏற்றுக் கொள்ளப் பட்ட சில கோட்பாடுகள் உள்ளன. நீங்கள் பேசுவது மற்றும் நம்புவது எல்லாம் மதமோ அல்லது கலாசாரமோ அல்லது சமுதாயத்தின் அடித்தளமோ ஆகாது.

நான் எதைக் குறிப்பிடுகிறேன் என என் நண்பர் கேட்டார். முல்லாவின் இந்துச் சட்டத்தில் முதல் பக்கத்தில் ஜாதியைப் பற்றி விளக்கப்பட்டுள்ளது. இந்து சமுதாயத்தில் நான்கு ஜாதிகள் இருப்பதாக அது கூறுகிறது. காயஸ்தர்கள் சூத்திரர்களா என்பதை இரண்டாவது பத்தி விளக்குகிறது. மராத்தியர்கள் சூத்திரர்களா அல்லது ராஜபுத்திரர்களா என்பதை மூன்றாவது பத்தி விளக்குகிறது. நான் மிகவும் பணிவன்புடன் கேட்கிறேன், இதில் ஏதாவது பண்பாடோ, மதமோ இருக்கிறதா? உலகு தழுவிய அன்பிலிருந்து தெய்வீகம் பேரானந்தத்திற்கு இட்டு செல்வதுதான் மதம். ஒளியையும் இனிமையையும் தருவதுதான் கலாசாரமாகும். மக்களை ஜாதிகளாகப் பிரித்து வைப்பது பண்பாடல்ல. மதத்திற்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** விவசாயம் மட்டுமே.

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா:** விவசாயத்தினால் நீங்கள் உணவு பெறுகிறீர்கள். உங்கள் கருத்தோட்டம் உங்களைச் சீர்குலைத்து விடும்.

இப்பொழுது, இந்து சட்டத்தின் தோற்றுவாயை உங்களுக்கு விளக்குகிறேன். எனது மதிப்பிற்குரிய நண்பர் ஒரு வழக்குரைஞர். எனவே இதை அவர் பாராட்டுவார் என நினைக்கிறேன். ஸ்ருதிகள், ஸ்மிருதிகள், மற்றும் சட்டத்தின் வலிமைபெற்ற நடைமுறைகள், விளக்க உரைகள், பிரிவி கவுன்சில் மற்றும் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்புகளே இந்து சட்டத்தின் ஆதாரங்கள் ஆகும்.

ஸ்மிருதிகளைப் பொறுத்தவரையில் அவைகளைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. பண்டைக் கால அரசியலில் மிகப்பெரும் வல்லுநரான ஜெயஸ்வால் கூறியதை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்பு

கிறேன். ஸ்மிருதிகள் எழுதப்படுவதற்கு முன்பு நிலவிவந்த பழக்க வழக்கங்களை ஒழுங்கு படுத்தி தொகுத்து வழங்கப்பட்டவைகளே ஸ்மிருதிகள் ஆகும் என்பதே அவர் கருத்து. ஸ்மிருதிகள் ஒரே விஷயத்தில் மாறுபட்ட கருத்துகளைத் தெரிவிக்கின்றன. இவைகளுக்கு விளக்க உரை எழுதியவர்கள் ஏற்றுக் கொள்ளப்படுகிறார்கள். சட்டம் என்ன என்பதை அவர்கள் எடுத்துரைத்ததாலல்ல, அக்காலத்தில் வழக்கத்திலிருந்த சில விஷயங்களை எடுத்துரைத்ததாலேயே அவர்கள் வல்லுனர்களாகக் கருதப்படுகிறார்கள். இந்துச் சட்டத்தைப் பொறுத்தவரையில் எழுதப்பட்ட சட்டத்தை நடைமுறை பழக்க வழக்கங்கள் ரத்து செய்து விடுகின்றன. பழக்க வழக்கங்களே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. பிரிவி கவுன்சில் மற்றும் உயர்நீதிமன்றங்களின் தீர்ப்புவழி சட்டங்களைக் குறிப்பிட வேண்டும். தீர்ப்பு வழி சட்டங்கள் எவ்வாறு இயற்றப்பட்டன? 1868-ஆம் ஆண்டுவரை நிலைமை இதுதான். இந்து பண்டிட்களின் உதவியுடன் ஆங்கில நீதிபதிகள் இந்து சட்டத்தை நிர்வகித்து வந்தார்கள். பண்டிட்கள் நீதிமன்றங்களில் அதிகாரபூர்வ மத்தியஸ்தர்களாக செயல்படுவது 1868-ஆம் ஆண்டு நிறுத்தப்பட்டது. பண்டிட்களின் உதவியுடன் ஆங்கிலேயர்கள் அளித்த தீர்ப்புகள்தான் இந்தத் தீர்ப்பு வழிச் சட்டங்களாகும். ஆக்கிரமிப்பாளர் ஒருவர், படையெடுத்தவர் ஒருவர் நாட்டை ஆளும்போது எந்தத் தன்மானமுள்ள மனிதனும் அதுவும் படித்தவர் எவரும் அவனுடன் அமர்ந்து பணிபுரியமாட்டான். எனவே இந்த பண்டிட்கள் யாராக இருந்தாலும் அவர்கள் பண்பற்ற பிறவிகள் அவர்கள் இந்துக்களின் பிரதிநிதிகள் அல்ல. இந்துச் சட்டம் ஏதோ புனிதமானது என்பதால், அதை மாற்றி எழுத நீங்கள் விரும்பவில்லையா? அந்த இந்துச் சட்டந்தான் என்ன? நெறி பிறழ்ந்த பிறவிகளின் உதவியுடன் ஆங்கிலேயர்களின் முடிவுகள்தான் அவை. இதுதான் உங்கள் இந்துச் சட்டம். இதற்கு என்ன புனிதத் தன்மை உள்ளது? இதுதான் என் வாதம். தற்போதைய சட்டத்தை அதன் சாதக பாதகங்களை வைத்து முடிவு செய்யுங்கள். சட்டவியல் கோட்பாடுகளின் அடிப்படையில் இந்தத் தொகுப்புச் சட்டத்தைப் பற்றி முடிவு செய்யுங்கள். ஒரு சட்டம் தேவையானதா, சிறந்ததா என்பதை தீர்மானிக்கும் கொள்கைகளின் அடிப்படையில் இதை பரிசீலியுங்கள்.

இந்தத் தொகுப்புச் சட்டத்தைப் பொறுத்தவரை முதலாவதாக அது திருமணம் மற்றும் விவாகரத்தைப் பற்றி எடுத்துரைக்கிறது. கடந்த இரண்டு மூன்றாண்டுகளாக நிறைவேற்றப்பட்ட பல்வேறு சிறுசிறு சட்டங்களின் தொகுப்புத்தான் இது. சமயச் சடங்கு

களின் அடிப்படையில் நடைபெறும் திருமணம் மற்றும் பதிவுத் திருமணம் ஆகியவை உள்ளன. பல்வேறு ஜாதிகளில் மணம் செய்து கொள்ளும் இந்துக்களைப் பார்க்கிறோம். இந்து மதத்திற்கு அப்பால் செல்பவர்களும் உள்ளனர். அவர்கள் இந்துக்களாகவே இருக்கின் றனர். ஜாதியைவிட்டு விலக்கப்படவில்லை. எனவே எது நடைமுறை யிலுள்ளதோ, எது ஏற்கெனவே உண்மையாக உள்ளதோ அதையே சட்டமாக எடுத்துக் கொள்கிறோம். நீங்கள் எதையும் மாற்றுவதாக எனக்குத் தோன்றவில்லை. தீர்ப்புவழி பிரிந்துறைதல் மற்றும் மண உறவின் கலைப்பின் அடிப்படைகள் என்ன? தரப்புகளில் ஒன்று பாலினத் தன்மையற்றிருத்தல்; கணவன் ஒரு பெண்ணையோ ஆசை நாயகியையோ வைத்திருத்தல், மறுதரப்பு இந்து மதத்திலிருந்து விலகிவிடுதல், ஏதாவது ஒரு தரப்பு மனநிலை சரியாக இல்லா திருத்தல், ஒருதரப்பு குணப்படுத்த முடியாத தொழுநோயால் பாதிக்கப் பட்டிருத்தல் ஆகியவைகளாகும். இப்பொழுது நான் ஒரு எளிய கேள்வியைக் கேட்க விரும்புகிறேன். இந்த நிபந்தனைகளை **ஸ்ருதிகள்** மற்றும் **ஸ்மிருதி**களிலுள்ள எந்தச் சட்ட வாசகமாவது தடை செய்துள்ளதா? நான் மனு **ஸ்மிருதி**யைப் பார்த்துள்ளேன். இதற்கு மாறுபட்ட எதையும் அதில் காணோம். எனது மதிப்பிற்குரிய நண்பர் எதையாவது கண்டுபிடித்தால் திருத்தம் எதையாவது அவர்கள் கொண்டுவரலாம். நான் **ஸ்மிருதி**களுக்கு எதிரானவன் அல்ல. அதைக் குறித்து நான் பெருமை கொள்கிறேன். அதன் வாசகங்களை நான் படித்துள்ளேன். இதற்கு முரண்பாடாக அதில் எதுவும் இல்லை. நடப்பிலுள்ள சமூக நீதியின் கருத்துகளுக்கு இந்த நிபந்தனைகள் ஒத்திருக்குமானால், இதை ஏற்றுக் கொள்ள மறுப்பதற்கு காரணம் ஏதும் இல்லை. நீங்கள் பெண்களின் விரோதியா? உங்கள் தாயாருக்கும் மகளுக்கும் நீங்கள் எதிரியா? நம் தாயார் மதிப்பிற்குரியவர், மகளோ நமது வாழ்க்கையின் ஒரு பகுதி, நம் இரத்தம். அப்படித்தானே? இந்தச் சட்டம் இந்துஸ்தானையே குட்டிச் சுவராக்கிவிடும், இந்து சமுதாயத்தையே சுக்கல் சுக்கலாக நொறுக்கிவிடும் என்று ஏன் கூச்சல் போடுகிறீர்கள்? இந்த நிபந்தனைகளுக்கு எதிராகவோ முரண் பாடாகவோ மதத்திலோ, கலாசாரத்திலோ, இந்து சமுதாயத்தின் அடிப்படைகளிலோ எதுவும் கிடையாது.

தத்தெடுக்கும் விஷயத்தைப் பார்ப்போம். நமது சமுதாயத்தின் இன்றைய பரிணாம வளர்ச்சியில் அதற்கு எந்த அவசியமுமில்லை என்பதுடன் அது அர்த்தமற்றது என்பதே என் சொந்தக் கருத்து. தத்தெடுத்தலுக்கு அடிப்படையாக மனுவின் வாசகம் ஒன்றுள்ளது.

அதாவது மகனில்லாத தகப்பனுக்கு சுவர்க்கத்தில் இடமில்லை என்பதாகும் அது. இந்த வாசகத்தின் அடிப்படை இதுதான்: அக்கால கட்டத்தில் ஆரியர்கள் பூர்வீகக் குடிகளுடனோ அல்லது ஆரியரல்லாதவர்களுடனோ மோத வேண்டியிருந்தது. எனவே, இயற்கையிலே தங்கள் எண்ணிக்கையை அதிகரிக்க அவர்கள் விரும்பினார்கள். அதை இப்படி வகுத்துக் கொண்டார்கள்: ஓர் இந்துவுக்கு மூன்று **ரீனாக்கள்** உள்ளன. கடவுளுக்கான **ரீன,** ரிஷிகளுக்கான **ரீன,** பிதிர்களுக்கான ரீன, அதாவது இனத்திற்கான **ரீன,** அதாவது அந்த இனத்தின் பரம்பரை அறுந்துவிடாமல் பாதுகாப்பது. மனு, ஸ்மிருதி எழுதிக் கொண்டிருந்தபோது இனத்தைப் பெருக்குவது அவசியமாக இருந்தது. ஆனால் இன்று அது அவசியமில்லை. இன்று குழந்தைகள் இல்லை என்பதல்ல பிரச்சினை. மாறாக உணவும் உடையும் இல்லை என்பதுதான் நம் பிரச்சினை. எண்ணிக்கையில் நாம் குறைவாக இருந்தால், பொருள்கள் நமக்கு அதிகமாகக் கிடைக்கும். எனவே இந்த நிலையில், தத்தெடுப்பதற்கான காரணம் எதுவும் எனக்குத் தெரியவில்லை. சுவர்க்கத்துக்கு செல்வதைப் பொறுத்த வரையில், தானங்கள் மற்றும் இதர விஷயங்கள் தரும சிந்தனையை சமூகத்தில் வளர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஏற்பட்டதுதான். இந்த உலகில் சமூக சேவைக்கும், தாராள மனப்பான்மைக்கும், தான தர்மத்திற்கும் வாய்ப்புகள் போதுமான அளவு இருக்குமளவுக்கு சமுதாயம் நன்கு வளர்ச்சி பெற்று ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. இந்த உலகைவிட்டு அப்பால் சென்றுள்ள நமது மூதாதையர்களுக்கு ஏதாவது கொடுப்பது அவசியமற்றதாகிவிட்டது. இந்தப் பரந்த உலகில் பணி செய்து கிடப்பதே சிறந்தது. முன்பிருந்த அமைப்பிற்கு எந்த அர்த்தமும் இல்லை. தற்காலத்திய சமூகத்தில் அதற்கு பயன் ஏதும் இல்லை. மதச் சம்பந்தமற்ற நோக்கத்துடன் பார்த்தாலும், ஒரு பையனைத் தத்தெடுத்தால் அவன் ஒரு முதியவரையும் மூதாட்டியையும் காப்பாற்றுவான். அது பயனற்றது என்றே நினைக்கிறேன். இன்று நோயுற்றவர்களுக்கான இல்லங்களும், மருத்துவ நிலையங்களும் வேறு பல இல்லங்களும் செயல்பட்டு வருகின்றன. உங்களுக்குச் சொத்து எதுவும் இல்லையென்றால், ஒரு குழந்தையை தத்தெடுத்துக் கொள்வது பயனற்றது. நீங்கள் தத்தெடுத்து கொள்வதால் மட்டுமே யாரும் உங்களைக் கவனிக்கப் போவதில்லை. உங்களுக்குச் சொத்து இருந்தால், முதுமைப் பருவத்தில் உங்களைக் கவனித்துக் கொள்ள ஏராளமான அமைப்புகள் உள்ளன. சமுதாயம் இன்றிருக்கும் நிலையில் தத்தெடுத்தல் என்ற நடைமுறை அர்த்தமற்றது என்பதே என் வாதம்.

உரிய வயதை எட்டாதவர்கள் மற்றும் காப்பாளர்களைப் பொறுத்த வரையில் இந்துச் சட்டத்தில் உள்ளதிலிருந்து எந்த வேறுபாடும் இல்லை. வாரிசுரிமை சட்டத்தைப் பொறுத்தவரையில் அதைப்பற்றி அதிகம் கூறப்படவில்லை என்று வருத்தத்துடன் கூறிக் கொள்கிறேன். தற்போதைய வாரிசுரிமை சரியா தவறா என்பதை என்னால் உறுதியாகக் கூற முடியவில்லை. ஒரு விஷயத்தை நான் சொல்ல முடியும், மகனுடன் மகளையும் இணை வாரிசுதாரராக்குவது கொள்கைரீதியாகத் தவறானதல்ல. ஏனெனில் 1937-ஆம் ஆண்டு பெண்கள் சொத்துச் சட்டம் பிரிவு 3-ன் படி மகனுடன் தாயாரும் பங்கு பெறுகிறாள். அவ்வாறிருக்கும்போது சகோதரனுடன் சகோதரியும் பங்கு பெறுவதில் என்ன ஆட்சேபனை இருக்க முடியும்? மகனுடன் தாயார் வாரிசுரிமை பெற முடியுமானால், சகோதரனுடன் சகோதரியும் வாரிசுரிமைப் பெறக்கூடாது என்று கூறக் காரணம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. மருமகன்கள் வந்து வீட்டில் தகராறுகளைக் கிளப்புவார்கள் என்று பண்டிட் பர்கவா ஆட்சேபனை எழுப்பினார். இரண்டு சகோதரர்கள் தகராறுகளைக் கிளப்ப முடியாதென்றால் மருமகன்கள் மட்டும் தகராறுகளை ஏன் கிளப்ப வேண்டும்? கானாட் பிளேசுக்கு சென்று பாருங்கள் மனைவிக்குப் பின்னே செல்லும் கணவன், அவளது மேலங்கியைச் சுமந்து செல்கிறான். பில்லுக்குரிய பணத்தைக் கட்டுவதுதான் அவனது தலையெழுத்தாக உள்ளது. எனவே மனைவி விரும்பாதபோது கணவன் என்ன தகராறைக் கிளப்ப முடியும்?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அது வட இந்தியாவில்தான்.

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா:** அதுதான் மனிதனின் பரிணாம வளர்ச்சி. மனித குலத்தின் பரிணாம வளர்ச்சி இவ்வாறுதான் உள்ளது. உங்களுடைய மீசை எங்கே போய்விட்டது? பெண் அணுக்கள் வளர்ச்சி பெற்று, பிறகு பிரிந்து சென்று, பெண்ணாக பரிணாம வளர்ச்சி பெற்றது என்பது சாதாரண உயிரியல் கொள்கையாகும். அவள் மிகவும் அழகாக, நளினமாக கவர்ச்சிகரமாக இருக்கிறாள். அதுதான் முன்னேற்றத்தின் பாதை, மேலும் சிறப்பான, அழகான வாழ்க்கைக்கு செல்வது, நீங்கள் வேறு விதமாக எண்ணினால், மனிதத்தன்மை குறைந்தவர்கள் நீங்கள் என்று நினைக்கிறேன்.

அடுத்து இந்து கூட்டுக் குடும்பத்திற்கு வருவோம். இதைக் குறித்து பல வல்லுநர்களின் கருத்துகளைப் பார்த்தேன். சமுதாயம் மேய்ச்சல் நிலையில் இருந்தபோது இந்த இந்துப் பழக்கம் வழக்கத்

திற்கு வந்ததாக எல்லா வல்லுநர்களும் கூறுகின்றனர். தற்போது இந்து கூட்டுக் குடும்ப நடைமுறையை மாற்றம் செய்ய பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அதிக வர்த்தகமும், வியாபாரமும் இல்லாத காலகட்டத்தில் இது தோன்றியது. ஒரு விவசாயி ஒரு பசுவை 100/- ரூபாய் மதிப்புள்ள பொருளாக மதிக்க மாட்டான். வாழ்க்கையில் அவனோடு சம்பந்தப்பட்ட ஓர் உயிருள்ள பொருளாக, புனிதமான ஒன்றாக அவன் எண்ணுவான். எனவே ஒரு பசுவை அவன் பசுவாகவே எண்ணினான். அவன் மகன் வீட்டைவிட்டுப் பிரிந்து சென்றால் மகனிடமிருந்து பணம் வசூலிப்பதில்லை. ஏனெனில் பசு புனிதமானது. இவ்வாறுதான் பசுவைத் தாய் பசுவாகக் கருதுகிறோம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஏதாவது தகப்பன் பசு உள்ளதா?

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா:** இப்பொழுது காலம் மாறி விட்டது. இந்து கூட்டு குடும்ப முறை காலத்திற்கு ஒவ்வாதது. ஆரிய சமுதாயம் இந்தியாவில் நிறுவப்பட்டபோது இந்தப் பழக்கங்கள் நடைமுறைக்கு வந்தன. அவை இப்பொழுது புனிதமானதென்றோ தவிர்க்க முடியாததென்றோ கருத வேண்டியதில்லை.

இரண்டாவது கருத்து என்னவென்றால் இது விவசாய நிலங்களுக்குப் பொருந்தாது. விவசாய நிலங்களைப் பொறுத்தவரையில், புதிய சட்டங்கள் அமலுக்கு வந்துள்ளன வாரிசுரிமை அந்தச் சட்டங்களின் அடிப்படையில் ஏற்படும்.

இந்த வார்த்தைகளுடன் இந்த மசோதாவை ஏற்றுக் கொள்ளும்படி அவையைக் கேட்டுக் கொள்கிறேன்.

***திரு. பி.எம். குப்தே** (பம்பாய் : பொது) : ஐயா, அவையின் முன் வைக்கப்பட்டுள்ள மசோதாவிற்கு நிபந்தனையுடன் கூடிய என் ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறேன். இங்கு முன் வைக்கப்பட்டுள்ள பல்வேறு சீர்திருத்தங்களுக்கு நான் எதிரி என்பதல்ல அதன் பொருள். மாறாக சில மாற்றங்கள் மற்றும் திருத்தங்கள் செய்யப் படின் அவை சரியான திசையில் செல்கின்றன என்று கூறத் தயாராக உள்ளேன். சில மாற்றங்கள் அவசியமாக உள்ளன. ஓர் உதாரணத்தை எடுத்துக் காட்டுகிறேன். வழக்கத்திலுள்ள விவாகரத்து

★ அ.நி.வி. (சட்) பி , தொகுப்பு VI, பிரிவு II 12 டிசம்பர் 1949 பக்கம் 502-504.

நடைமுறைக்கு முற்றுப்புள்ளி வைத்திருப்பது பம்பாய் மாகாணத்தின் கிராமப்புற மக்களுக்கு பெரும் பாதிப்பை ஏற்படுத்தும். ஏனெனில் அங்குள்ள மக்களிடையே விவாகரத்து பரவலாக உள்ளது. பம்பாய் மாகாண விவாகரத்துச் சட்டம் கூட வழக்கமான விவாகரத்துக்கு விலக்களித்துள்ளது. எனவேதான் சில திருத்தங்கள் தேவை எனக் கூறுகிறேன். விவாகரத்து, திருமணம் பராமரிப்பு, மைனர்கள் குறித்த விதிகளை பரிசீலித்து சட்டமாக ஏற்றுக்கொள்ளலாம். அவை குறித்து எனக்கு எவ்வித கருத்து வேறுபாடும் இல்லை. ஆனால் பிரிவு 5, 6 மற்றும் 7ல் உள்ள விதிமுறைகளுக்கு நான் ஆதரவளிக்க முடியாது. அவை அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. உண்மையில் இந்து சமுதாயத்தின் வாரிசுரிமை சட்டம் முழுவதையும் மாற்றிவிடுகின்றன. இந்தப் பொதுவான மாற்றங்களுக்கு இது பொருத்தமான தருணமா என்ற கேள்வி எழுகிறது. கலவரம் குழப்பம், துயரம், பிரிவினை போன்ற அரசியல் மற்றும் பொருளாதாரச் சூழ்நிலையில் இருக்கும்போது நாட்டின் சமூக அமைப்பு முழு வதையும் பாதிக்கக்கூடிய புரட்சிகரமான மாற்றங்களை அறிமுகப் படுத்துவதன் மூலம் நிலைமையை மேலும் சிக்கலாக்க வேண்டுமா என்பதே கேள்வி. இந்த நெருக்கடியான காலகட்டத்தில் முதலில் செயல்படுத்த வேண்டிய விஷயங்களை முதலில் செயல்படுத்தப்பட வேண்டும் பிளவை ஏற்படுத்தும் விஷயங்களுக்கு இது தருணமா என்று நமது பிரதம மந்திரி நியாயமாக அடிக்கடி வலியுறுத்திக் கூறுவார்.

இதே அளவுகோலுடன் இந்த நடவடிக்கையையும் பார்த்தால் அதன் முடிவு என்ன? இவை அவ்வளவு அவசரமானவையா என்று கேட்கிறேன். ஏற்கெனவே மிகவும் கஷ்டமான நிலைமையை மேலும் அதிகச் சிக்கலாக்கும் ஆபத்தைச் சந்திக்க வேண்டுமா? பதில் தெளிவானதுதான். பல ஆண்டுகளாக இந்துச் சட்டம் வழக்கத்தில் இருந்து வருகிறது. அதை மறு பரிசீலனை செய்ய வேண்டுமென்றால் அல்லது அதை ஒழுங்குபடுத்தி தொகுக்க வேண்டுமென்றால் இந்தக் காலகட்டத்தில் அதற்கு அவ்வளவு அவசரமில்லை. ஏற்கெனவே நடைமுறையிலுள்ள சட்டத்தை முற்றிலுமாக மாற்றம் செய்வதற்கு இது பொருத்தமான சமயமல்ல. பொது மக்கள் கருத்திற்கு அப்பாற் பட்ட சமுதாயச் சட்டங்கள் தாமாகவே தோற்றுவிடுவதை நாம் அனுபவத்தில் கண்டுள்ளோம். இந்தப் பொது மக்கள் கருத்து என்பதில் எப்பொழுதும் குரல் எழுப்பும் நகர்ப்புற மக்களுடன் கிராமங்களி லுள்ள லட்சக்கணக்கான மக்களையும் சேர்த்துக் கூறுகிறேன். இந்தச்

சட்டம் காலத்திற்கு முந்தியதா என்பதையும் கவனிக்க வேண்டும். சாரதா சட்டம் இதில் நமக்கு நல்ல அனுபவம் எனலாம். கண்டிப்பான விதிமுறைகள் அதில் இருந்தும்கூட சட்டம் செயலிழந்து இருந்தது. இந்தச் சட்டத்தைப் பொறுத்தமட்டில் அது அமுலாக்கப்படாத சட்டமாக மட்டும் இருக்காது. V, VI, மற்றும் VIIம் பகுதிகளில் உள்ள விதிமுறைகள் விஷமத்தனமான விளைவுகளை ஏற்படுத்தும்.

சட்ட நுணுக்கங்களை நன்கு அறிந்துள்ள கிராமத்திலுள்ள குண்டர்கள் கிராமவாசிகளின் அறியாமையை தவறாகப் பயன் படுத்திக் கொண்டு அவர்களை ஏமாற்றி பல வழக்குகளில் இழுத்தடிக் கிறார்கள். ஏற்கெனவே இந்தத் தீமை பரவலாக உள்ளது. நீண்ட காலமாக வழக்கத்திலிருப்பதால் வாரிசுரிமைச் சட்டத்தை கிராம மக்கள் நன்கு தெரிந்து வைத்திருக்கின்றனர். கிராம மக்களின் அறியாமையைத் தவறாகப் பயன்படுத்திக் கொள்ள கிராமக் குண்டர் களுக்கு இப்பொழுது மேலும் ஓர் ஆதாரம் கிடைத்ததுதான் இதன் பலன். சீர்திருத்தங்களை நான் எதிர்க்காவிட்டாலும் இந்த மாதிரியான ஒரு நடவடிக்கை எடுக்க இது சரியான தருணமல்ல என்பதைக் கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.

மக்களின் கல்வி அறிவு இன்றிருக்கும் நிலையில், இங்கு அல்லது மாகாணத் தலைநகர்களில் எந்த முடிவுகளை எடுத்தாலும், இம்மாதிரியான சட்டங்களைக் கிராமங்களுக்குக் கொண்டு செல்வது மிகக் கடினம். உணவை பெருக்கும் திட்டத்தின் அனுபவம் ஏற் கெனவே நமக்குள்ளது. ஏராளமான சலுகைகளையும் உதவிகளை யும் அளிக்க எங்கள் மாகாண அரசு முன் வந்துள்ளது. விவசாயி களுக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது. இந்தச் சட்டத்தின் முடிவு என்னவாக இருக்கும்? இந்த விஷயத்தில் கிராமக் குண்டர்கள் விவசாயிகளின் அறியாமையை தங்கள் சுய நலத்துக்கு பயன்படுத்திக் கொள்வர்.

ஒரு விஷயத்தைப் பொறுத்த வரையில் நகர்புற மக்களின் நிலைமையைவிட கிராமப்புற மக்களின் நிலைமை படுமோசமாக இருக்கும், இன்றைய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி விவசாய நிலங்களை இந்தச் சட்டம் பாதிக்காது. இறந்துபோன விவசாயி ஒருவரின் சொத்துக்கு இரு வகை வாரிசுதாரர்கள் இருப்பார்கள் என்பதுதான் இதன் பொருளாகிறது. அவருடைய விவசாய நிலங்கள் ஒருவகை வாரிசுதாரர்களுக்குக் கிடைக்கும். அவருடைய சொத்தின் எஞ்சிய பகுதி மற்றொரு பிரிவு வாரிசுதாரர்களுக்குக் கிடைக்கும். இது

பயங்கர குழப்பத்தை ஏற்படுத்தும். ஒரே சீராக்க வேண்டும் என்ற நோக்குடன், இந்தச் சட்டத்தைக் கொண்டு வருகிறோம். ஆனால் சீரான தன்மை மற்றும் எளிமைக்கும் பதிலாக இந்தச் சட்டத்தால் சிக்கலையும் குழப்பத்தையுந்தான் சந்திக்க வேண்டியிருக்கும் இம் மாதிரியான குழப்பங்களைத் தவிர்க்க, புதிய அரசியல் அமைப்புச் சட்டம் அறிமுகம் ஆகும் வரையில் நாம் காத்திருக்கலாம். நாம் அவசரப்படத் தேவையில்லை. ஒன்றிரண்டு பொதுத் தேர்தல்கள் நடந்து முடிந்த பிறகு, இந்த மசோதாவை அறிமுகப்படுத்திப் பரிசீலிக்கலாம் என்பதே என் தனிப்பட்ட கருத்து. இந்தப் பொதுத் தேர்தல்கள் கிராமவாசிகளின் அரசியல் உணர்வை துரிதப்படுத்தும். சட்டமன்றப் பணிகளுடன் அவர்களுக்கு அதிகத் தொடர்பு ஏற்படும். தமக்கு அக்கறையுள்ள விஷயங்கள் சம்பந்தமான சட்டங்களை உருவாக்குவதில் அவர்கள் சிறப்பாக பங்கு கொள்ள முடியும். எனவே அந்த நேரம் வரும் வரையில், மக்களிடையே அரசியல் உணர்வு பெருகும் வரையில், இந்தச் சட்டத்தை மக்கள் மீது திணிக்காமல் இருக்க வேண்டும்.

இறுதியாக, நமது அதிகப்படியான உற்சாகம் நமது நோக்கத்தையே தோற்கடித்து விடக்கூடாது என்று இந்த மசோதாவின் பெரும் ஆதரவாளர்களான, உற்சாகமிகுந்த என் நண்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

*திரு. ஏ. கருணாகரமேனன் (மெட்ராஸ்: பொது): ஐயா, இந்த மசோதாவை, அது இருக்கும் நிலையில் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். இந்து சமுதாயத்தை ஒன்றுபடுத்த இந்த மசோதா மிகவும் உதவும் என்பதில் சந்தேகமில்லை. பல்வேறு சட்ட வழிமுறைகளின் கதம்பமாக இன்றைய இந்துச் சட்டம் உள்ளது. இந்தியப் பிராந்தியம் முழுவதற்கும் பொதுவான உரிமை இயல் (சிவில் தொகுப்புச் சட்டத்தை உருவாக்குவதே நமது நோக்கம் என்று நமது அரசியல் அமைப்புச் சட்டத்தில் அறிவித்துள்ளோம். ஒரே சீரான, உரிமை இயல் சட்டத்தை உருவாக்குவதற்கு இந்த இந்து தொகுப்புச் சட்டம் பேருதவியாக இருக்கும். முகமதிய சட்டத்தையும் ஒழுங்கு படுத்தி தொகுக்க, முஸ்லீம் நண்பர்கள் ஒரு சட்டத்தைக் கொண்டு வருமாறு அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். கிருஸ்தவர்கள் ஒரு சட்டத்தை தொகுத்து வைத்துள்ளார்கள். இந்த மூன்று தொகுப்புச் சட்டங்களும் நடைமுறைக்கு வந்தபிறகு இந்த மூன்றிலுமுள்ள

★ அ.நி.வி. (சட்) பி, தொகுப்பு VI, பிரிவு II 12 டிசம்பர் 1949 பக்கம் 504-506.

ஒரேமாதிரியான விதிமுறைகளை ஒருங்கிணைத்து நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின் குறிக்கோளை நிறைவேற்றுவோம். பெண்களின் உரிமைகளை அதிகரிப்பதாலும், இந்த மசோதா வரவேற்கத் தக்கதாக உள்ளது.

ஆனால், சில குற்றச்சாட்டுகளைக் கூற வேண்டியுள்ளது. மக்கள் விரும்பும் அளவுக்கு இந்த மசோதா முற்போக்கானதாக இருக்கவில்லை. நாட்டின், என் பகுதியில் வழக்கத்திலிருந்து வரும் மருமக்கத்தாயச் சட்டத்தைவிட இது பல அம்சங்களில் பின்தங்கியுள்ளது. இப்பொழுதுள்ள நிலையிலிருந்து எங்களைக் கீழே இழுத்துச் சென்றுவிடக்கூடாது. இந்த மசோதாவுக்கு சில திருத்தங்கள் செய்ய முடியுமானால், இந்த மசோதாவை நாங்களும் உபயோகப்படுத்த முடியுமானால், எங்களைவிட மகிழ்ச்சியுள்ளவர்கள் வேறு யாரும் இருக்க முடியாது.

மசோதாவின் தற்போதுள்ள விதிகள் தந்தைவழிச் சமுதாயப் பார்வையில் உருவாக்கப்பட்டுள்ளது. தாய்வழி சமுதாயச் சட்ட விதிகளில் முற்போக்கானவைகளை, இந்த மசோதாவில் எங்கு சாத்தியமோ அங்கு சேர்த்துக் கொள்ளலாம். இந்தக் கருத்து கணக்கிலெடுத்துக் கொள்ளப்படவில்லை. 1947ல் தயாரிக்கப்பட்ட மூல மசோதாவில் மருமக்கள்தாயம் மற்றும் அலியா சந்தானம் ஆகியவைகளுக்கு விலக்களிக்கப்பட்டிருந்தன என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். இந்த மசோதா ஏன் அவ்வளவு முற்போக்காக இருக்கவில்லை, அதை ஏன் முற்போக்கானதாக மாற்றவேண்டும் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

மருமக்கதாயச் சட்டத்தின் அடிப்படையில் திருமணம் முற்றிலும் உலக வாழ்க்கைச் சம்பந்தப்பட்ட விஷயம். இதில் எந்தவித மத சம்பந்தமும் இல்லை. இதில் எந்த புனிதத் தன்மையோ சபிண்டா முறையோ கிடையாது. இந்துச் சட்ட மசோதா இரு வகை திருமணங்களையே அங்கீகரிக்கிறது. அதாவது சமயச் சடங்கு அடிப்படையிலான திருமணம்; மற்றும் சட்டப்படியான பதிவுத் திருமணம். பதிவுத் திருமணம் சர்வசாதாரணமாக நடைபெறுகிறது. அதற்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லை. அதன் விதிகளுக்குக் கட்டுப்பட தயாராக உள்ளோம்.

மருமக்கதாய திருமணங்கள் சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணங்கள் என்று இந்த மசோதாவைத் தயாரித்தவர்

கள் தவறாகக் கருதியுள்ளனர். மலபார் திருமணங்கள் மத அடிப் படையிலான திருமணங்கள் என்று மசோதாவின் 51-ஆவது பிரிவில் குறிப்பிட்டுள்ளதை படித்தாலே இது தெளிவாகத் தெரிகிறது. அந்த அடிப்படையில்தான் இந்தப் பிரிவு தயாரிக்கப்பட்டுள்ளது. மலபார் திருமணங்கள் மதத்துடன் எவ்வித சம்பந்தமுமற்றது. 51-ஆவது பிரிவு இவ்வாறு கூறுகிறது:

*"இந்தத் தொகுப்புச் சட்டம் அமுலுக்கு வருவதற்கு முன்போ அல்லது பிறகோ சமயச் சட்டங்கள் அடிப்படையில் நடைபெற்ற திருமணத்திலிருந்து, 1932-ஆம் ஆண்டு மெட்ராஸ் மருமக்கதாயம் சட்டப்படி (மெட்ராஸ் சட்டம் XXII 1932) விவாகரத்துப் பெறும் உரிமையை, இந்தப் பிரிவிலுள்ள எதுவும் பாதிக்காது.''*

எங்களைப் பொறுத்தவரையில், வேறு ஒரு வகையிலும், இந்த மசோதாவுக்குத் திருத்தம் கொண்டுவர விரும்புகிறோம். எங்கள் தகப்பனாரின் மருமக்களையோ அல்லது எங்கள் தாய்வழி மாமனின் மகளையோ மணந்து கொள்ள எங்கள் சட்டம் அனுமதிக்கிறது. உண்மையில், மாமன் மகளை அல்லது அப்பாவின் மருமகளை மணந்து கொள்வதை சிறப்புரிமையாக எங்களில் பலர் நினைக் கிறார்கள். ஆனால் தடுக்கப்பட்ட உறவுமுறைகள், சபிண்டாமுறை சம்பந்தமான விதிகள் மூலம் இது தடுக்கப்படுகிறது. எங்கள் உரிமையை இவ்வாறு பறிப்பதை எங்கள் பகுதி மக்கள் ஆதரிக்க மாட்டார்கள்.

சட்ட வழிப் பிரிவு அல்லது மணவாழ்வுரிமை மீட்டளிப்பு சம்பந்தப்பட்ட விதிகள் எங்கள் சட்டத்தில் கிடையாது. ஒரு திருமணம் நடப்பிலிருக்கிறது அல்லது விவாகரத்து மூலம் அது முடிவு பெற்று விடுகிறது. இடைப்பட்ட பாதை ஒன்றும் கிடையாது. விவாகரத்துக் கான விதி மிகவும் எளிமையானது. பாதிக்கப்பட்ட தரப்பு அருகி லுள்ள உரிமையியல் நீதிமன்றத்திற்குச் சென்று பன்னிரெண்டு அணா முத்திரை ஒட்டிய விண்ணப்பத்தைக் கொடுக்கிறார். ''இந்தக் காரணங்களுக்காக நாங்கள் சேர்ந்து வாழ முடியவில்லை. எனவே விவாகரத்து வழங்கப்படவேண்டும்'' என்று அதில் கேட்டுக் கொள் கிறார். ஆறு மாத காலத்திற்கு, அந்த விண்ணப்பம் கிடப்பில் போடப் படுகிறது. இந்த ஆறுமாத காலத்தில் சமரசத்திற்கான வாய்ப்பு ஏற்படலாம் என்று சட்டத்தைத் தயாரித்தவர்கள் விரும்பியிருக்க லாம். இந்த ஆறுமாதக் காலக்கெடு முடிந்த பிறகு, எதுவும் நடைபெற வில்லை என்றால், விவாகரத்து தானாகவே அளிக்கப்படுகிறது.

இது ஓர் எளிமையான விதி. மசோதாவைத் தயாரித்தவர்களின் கவனத்தை இது கவர்ந்துள்ளது என்பது 51-ஆவது பிரிவிலிருந்து தெரிகிறது. இந்த விதி மசோதாவில் உள்ளது. மற்ற இந்துக்களுக்கும் இந்த விதியின் பலன் ஏன் அளிக்கப்பவில்லை என்பது எனக்குப் புரியவில்லை.

திருமணக் கலைப்பு சம்பந்தமான விதிகள் இந்த அவையின் பல உறுப்பினர்களைக் கோபத்திற்குள்ளாகியுள்ளது. 1942லிருந்து விவாகரத்துக்கான வழிமுறைகள் மலபாரில் நடைமுறையிலிருந் தாலும், யதார்த்தத்தில் ஒரு டஜன் விவாகரத்துக்கு மேல் நடைபெற் றிருக்காது என நம்புகிறேன். பெட்ரண்ட் ரஸ்ஸல் என்ற பேரறிஞர் கூறியதை இது நிரூபிக்கிறது எனலாம். ''விவாகரத்துக்கான விதிகள் எளிய முறையில் இருப்பதால் அதிக எண்ணிக்கையிலான விவாக ரத்துகள் ஏற்படும் என்று அர்த்தமல்ல.'' விவாகரத்துக்கு வாய்ப் புள்ள இடங்களில், விபசாரம் குறைவாக இருப்பதுடன் ஒழுக்க நெறிகளும் சிறப்பாக உள்ளன.

தத்தெடுத்தலைப் பொறுத்தவரை, நாட்டின் எங்கள் பகுதி யில் நிலவிவரும் நடைமுறைகளை ஒப்பிடுகையில் மசோதாவின் விதிகள் திருப்திகரமாக இல்லையென்றே கூறவேண்டும்.

மசோதாவைப் பொறுத்தவரையில், தத்தெடுத்தல் மத சம்பந்த மான விஷயமாகவுள்ளது. மருமக்கள்தாயம் வழக்கத்திலுள்ள மக்க ளிடையே உலக வாழ்க்கைக்குரிய விஷயமாகும் இது. இந்துத் தொகுப்புச் சட்டத்தின்படி ஓர் ஆணோ அல்லது விதவையோதான் தத்தெடுத்துக்கொள்ள முடியும். ஆனால் எங்கள் சட்டப்படி ஆணோ பெண்ணோ யார் வேண்டுமென்றாலும் தத்தெடுத்துக் கொள்ள முடியும். இந்துச் சட்டப்படி ஓர் ஆணைத்தான் தத்தெடுக்கமுடியும். எங்கள் சட்டப்படி ஆணையோ, பெண்ணையோ தத்தெடுத்துக் கொள்ளலாம். இந்துச் சட்டப்படி ஒரே ஒருவனைத்தான் தத்தெடுத்துக் கொள்ள முடியும். ஆனால் ஒன்றோ, இரண்டோ ஏன் ஒரு குடும் பத்தையே கூட எங்கள் சொத்துக்கு வாரிசாக தத்தெடுக்க முடியும். எனவே இதைப் பொறுத்தவரையில் எங்கள் சட்டத்திற்கும் இந்து சட்டத்திற்கும் நிறைய வேறபாடுகள் உள்ளன. இந்த மசோதாவைத் தயாரிக்கும்போது இந்த விஷயங்களெல்லாம் ஏன் கணக்கி லெடுத்துக் கொள்ளப்படவில்லையென்றால் தந்தைவழி சமுதாய நோக்கின் அடிப்படையில் மசோதா தயாரிக்கப்பட்டுள்ளதால்தான்

என்று எனக்குத் தோன்றுகிறது; தாய்வழி சமுதாயக் கண்ணோட்டத் திலல்ல. அந்தக் கருத்தோட்டத்தையும் அவர்கள் கணக்கிலெடுத்துக் கொண்டிருந்தால் இந்த வேறுபாடுகள் குறைந்திருக்கவோ அல்லது தீர்க்கப்பட்டிருக்கவோ கூடும்.

கூட்டுக் குடும்பச் சொத்தைப் பொறுத்த வரையில், கூட்டு நிலச் சொத்துரிமைக்குப் பதிலாக பொது நிலச் சொத்துரிமை மசோதா வில் அளிக்கப்பட்டிருப்பதைக் குறிப்பிட வேண்டும். நான் இந்த விதியை வரவேற்கிறேன். சட்டத்தின் இந்தப் பகுதியும்கூட தந்தை வழி சமுதாய நோக்கில்தான் தயாரிக்கப்பட்டுள்ளது. பகுதி V-ல் எந்தப் பிரிவை வேண்டுமென்றாலும் படித்துப்பாருங்கள். நான் அவைக்குச் சங்கடத்தைக் கொடுக்க விரும்பவில்லை. மாண்புமிகு சட்ட அமைச்சரின் கவனத்திற்குக் கொண்டுவர மட்டுமே விரும்பு கிறேன். இந்து தொகுப்புச் சட்டம் எல்லா மக்களுக்கும் பொதுவான தாக இருந்தாலும் கூட பகுதி V-ல் உள்ள எந்தப் பிரிவும் மருமக்கள் தாயமுறையைப் பின்பற்றுபவர்களுக்குப் பொருந்தாமலிருப்பதைக் காண்பீர்கள்.

மலபாரிலுள்ள கூட்டுக் குடும்பங்களில் அறிமுகப்படுத்தப் பட்டுள்ள பொதுநலச் சொத்துரிமைக்கு பிரிவு 86, 87, 88 எதுவும் பொருந்தாது.

வாரிசுரிமையைப் பொறுத்தவரையில், மகன் மற்றும் மகளுடன் தாயாரையும் ஏன் ஒரு வாரிசாகச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. ஒருவர் இறந்துவிட்டார் என வைத்துக் கொள்வோம் - நானே இறந்து விடுவதாக வைத்துக் கொள்வோம். என்னை வளர்த்து ஆளாக்கி, வாழ்நாள் முழுவதும் எனக்காகப் பாடுபட்ட எனது தாயாரும் ஒரு வாரிசாக இருக்க என் இயற்கையான அன்பும் பாசமும் விரும்பு கிறது. ஆனால் இங்கே நாம் காண்பது, பிரிவு I-ல் தாயாரின் பெயர் சேர்க்கப்படவில்லை.

முன்னமேயே இறந்து போன மகனின் மகன் அல்லது முன்னமேயே இறந்து போன மகனின் மகனின் மகன் முதல் பிரிவில் ஏன் சேர்க்கப்படவேண்டும் என்பதே என் இரண்டாவது குற்றச் சாட்டு. அவர் பிரிவு II-ல் தான் சேர்க்கப்படவேண்டும். பிரிவு I-ல் அவர்களை முன்னுரிமை வாரிசுதாரர்களாகச் சேர்த்திருப்பதை எங்களால் ஜீரணிக்க முடியவில்லை. மலபார் வாசிகள் எவரிடமும், அவருடைய சொத்துக்கள் இறந்துபோன மகனின் மகளின் மகனுக்கு,

மகனின் மகனுக்கு அல்லது சகோதரிக்கு அல்லது சகோதரியின் குழந்தைகளுக்குச் செல்ல வேண்டுமா எனக் கேட்டால் தன் சகோதரனுக்கு செல்வதைவிட சகோதரிக்கும் சகோதரி குழந்தைகளுக்குமே செல்ல வேண்டுமென்று நிச்சயமாகக் கூறுவார். VII அட்டவணை பிரிவு II-ல் சகோதரிக்கும் சகோதரியின் குழந்தைகளுக்கும் தரப்பட்டுள்ள அந்தஸ்தை உயர்த்தி அவர்களுக்கு அதிக முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும் என்று கூறுகிறேன். சகோதரியும் சகோதரி குழந்தைகளும் வரிசைப்பட்டியலில் கீழே மட்டத்தில் உள்ளனர்; VII பட்டியலில் மகனின் மகளின் மகன், மகனின் மகனின் மகள், மகனின் மகளின் மகள் ஆகியவர்களுக்குப் பிறகே இவர்கள் வருகிறார்கள். இந்த நபர்கள் எல்லோருக்கும் பிறகுதான் சகோதரனும் சகோதரியும் வாரிசுதாரர்கள் பட்டியலில் வருகிறார்கள். ஒரே வயிற்றில் பிறந்த சகோதரனுக்கும் சகோதரிக்கும் வாரிசு வரிசையில் முன் னுரிமை ஏன் அளிக்கக் கூடாது என்பது எனக்குப் புரியவில்லை. வாரிசுரிமை சம்பந்தமான விதிகளைப் பொறுத்தவரையில் இயற்கையான அன்பும் மற்றும் பாசத்தின் அடிப்படையில் நோக்கினால் சகோதரனுக்கும் சகோதரிக்கும் அதிக முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும்.

*(இந்தக் கட்டத்தில் துணை சபாநாயகர் நாற்காலியை காலி செய்கிறார். திருமதி ஜி. துர்க்காபாய் (அவைக்குத் தலைமை தாங்கும் குழுவில் ஒருவர்) நாற்காலியில் அமர்கிறார்.)*

இப்படிப்பட்ட பல்வேறு அம்சங்களிலிருந்து பார்க்கும்போது பெரும்பான்மை மக்கள் பின்பற்றும் மலபாரைத் தவிர்த்து நாட்டின் பிறபகுதிகளிலுள்ள சட்டங்களைத்தான் மசோதா கணக்கிலெடுத்துக் கொண்டுள்ளது. மசோதாவை உருவாக்குவதில் தாய் வழிச் சமுதாயச் சட்டங்கள் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படவில்லை. நாம் பெண்களுக்கு அதிக உரிமைகள் அளிக்க விரும்புகிறோம். பெண்களின் உரிமைகளைப் பொறுத்தவரையிலோ, அல்லது பொதுவான கண்ணோட்டத்தின் அடிப்படையிலோ, மசோதா போதுமான அளவு முற்போக்கானதாக இருக்கவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்த மசோதாவின் நோக்கெல்லைக்குள் வர நாங்கள் மிகவும் ஆவலாக உள்ளோம். ஒரு சீரான சட்டம் வேண்டுமென்பதுதான் எங்கள் விருப்பம். இந்தியாவிலுள்ள எல்லா இந்துக்களுக்கும் ஒரே மாதிரியான சட்டம் இருக்கவேண்டுமென்றே நானும் என் பகுதி மக்களும் விரும்புகிறோம். அதே நேரத்தில், எங்கள் மக்கள் பின்பற்ற

முடியாததாகவோ, வெறுக்கத்தக்கதாகவோ அது இருக்கக்கூடாது. ஆர்வத்துடன் பின்பற்றக் கூடியதாக அது இருக்க வேண்டும். சட்டத்தைத் தயாரிக்கையில் தாய்வழி சமுதாயச் சட்டத்தையும் கணக்கி லெடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். தேவை யான திருத்தங்கள் செய்வதன் மூலம் நாங்களும் இந்த மசோதாவின் கீழ் வரமுடியும். ஏதாவது காரணத்தினால் திருத்தங்கள் எதுவும் கொண்டு வரமுடியாத அளவிற்கு நமது இரு முறைகளும் வேறுபட் டிருப்பின், எங்களைத் தனியே விட்டுவிடும்படி அவையைக் கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது அறிமுகப்படுத்தப்பட்டுள்ள இந்து தொகுப்புச் சட்டத்தை விட, அன்பு பாசம் போன்றவைகளில் உயர் மட்டத்தில் இருக்கும் எங்கள் சட்டத்தையே பின் பற்ற எங்களுக்கு அனுமதி கொடுங்கள், என்னைப் பொறுத்தவரையில் இந்து தொகுப்புச் சட்டம் மதச் சார்பற்றது என்று கூறமுடியவில்லை அது ஒரு பகுத்தறிவு நடவடிக்கையல்ல. இன்னும் சமயத்தின் மணம் அதில் வீசுகிறது. மசோதா முற்றிலும் ஒரு பகுத்தறிவு நடவடிக்கை யாக இருக்க வேண்டும். மத சம்பந்தமற்ற, இயற்கையான கண்ணோட் டத்தில் மசோதா தயாரிக்கப்பட்டிருந்தால் எனக்கு எந்தவித ஆட் சேபனையும் இருக்க முடியாது. அந்த மாதிரியான ஒரு மசோதா அறிமுகப்படுத்தப்பட்டால் எங்கள் மக்கள் அதை மனதார வரவேற் பார்கள். இப்பொழுது தயாரிக்கப்பட்டிருக்கும் மசோதா பெருமள விற்கு மதச் சார்புடையதாக இருக்கிறது என்பதைக் காண்கிறோம். அதன் கடுமை ஓரளவிற்குக் குறைக்கப்பட்டிருந்தாலும், அது இன்னும் போதுமான அளவிற்கு மதச்சார்பற்றதாக இல்லை. திருமணம், தத்தெடுப்பு, வாரிசுரிமை போன்றவைகளில் மதம் ஏன் குறுக்கிட வேண்டும். எங்கள் பகுதியிலுள்ளது போல அது ஏன் அதிக அளவில் மதச்சார்பில்லாமல் இருக்கக்கூடாது. இம்மாதிரி உலக விஷயங் களில் மதக்கலப்பு இல்லாத முறையைப் பின்பற்றும் எங்கள் வாழ்க்கையில், மதச் சார்புடைய இந்த மசோதாவை ஏன் திணிக்க வேண்டும்.

***திரு. தலைவர் :** இன்னும் பத்து நிமிடங்களே உள்ளன. உறுப்பினர் யாராவது பத்து நிமிடத்தில் தங்கள் பேச்சை முடித்துக் கொள்வாரா என்பதை அறிய விரும்புகிறேன்.

***சில மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:*** எழுந்து நிற்கின்றனர்.

★ அ.நி.வி. (சட்) பி , தொகுப்பு VI, பிரிவு II *12 டிசம்பர் 1949 பக்கம் 506-508.*

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு** (மத்திய பாரத்): பத்து நிமிடத்தில் என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

இந்த இந்து தொகுப்புச் சட்டத்தை முழு மனதுடன் ஆதரிக்கிறேன் என்பதை முதலில் நான் தெளிவுபடுத்தியாக வேண்டும். பழைய தலைமுறையைச் சேர்ந்த அனேகமாக எல்லா உறுப்பினர்களும் மசோதாவுக்கு எதிராகப் பேசியிருக்கையில், நான் தயக்கத்துடன் உங்கள் முன் நிற்கிறேன். அவர்களுடைய இருதயத்திற்கு நான் சவால் விடவில்லை, ஆனால் இந்துத் தொகுப்புச் சட்டத்தைப் பொறுத்தவரை அவர்களுடைய இதயங்கள்தான் கிழடுதட்டி பழமையாகிவிட்டன.

**திரு. எம். திருமல ராவ்** : பழைய தலைமுறையைச் சேர்ந்த மகளிர்கூட உங்களை ஆதரிக்கிறார்கள் என்று எடுத்துரைக்கலாமா?

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு** : ஆம். ஏனென்றால் அவர்கள் முற்போக்காளர்கள். அவர்கள் முன்னுக்குச் செல்ல விரும்புகிறார்கள். என் நண்பர் திரு. கிருஷ்ண சந்திர சர்மாவின் சொற்களில் கூறுவதென்றால் ஆண்கள் பின்னோக்கிப் போய்கொண்டிருக்கும் வேளையில் அவர்கள் முன்னுக்குச் செல்வதுடன் மிகவும் முற்போக்காளர்களாகவும் உள்ளனர். எப்படியிருப்பினும், இந்து தொகுப்புச் சட்டம் தற்போது இருக்கும் நிலை குறித்து கவலை கொண்டுள்ளேன்.

அம்மையார் அவர்களே, இங்குள்ள இளைய தலைமுறையினரின் கருத்துகளை பிரதிநிதித்துவப்படுத்த முடியும் என்ற காரணத்தினாலேதான் இங்கு பேசுகிறேன். இந்நாட்டின் இளைய தலைமுறையினர் இந்து தொகுப்புச் சட்டத்தை ஆதரிக்கிறார்கள் என்று நான் உறுதியாகக் கூறமுடியும். இந்திய சமஸ்தானங்களிலுள்ள மக்களின் கருத்துகளை அறிந்துகொள்ள அங்கு இந்த மசோதா சுற்றுக்கு விடப்படவில்லை என்ற பெரும் கூச்சல் கிளம்பியது. இந்த அவையில் நிறைவேற்றப்பட்ட பல மசோதாக்கள் இந்திய சமஸ்தானங்களின் மக்கள் கருத்தை அறிந்துகொள்ள சுற்றுக்கு விடப்படவில்லை என்று யாரும் குரல் எழுப்பவில்லை.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்களில் சிலர்:** ஆனால் இது பெரிதும் விவாதத்திற்குரிய ஒரு மசோதாவாக உள்ளது.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜூ :** எத்தனையோ விவாதத்திற்குரிய மசோதாக்களைச் சந்தித்திருக்கிறோம். சிரோகிப் பிரச்சினை மிகவும் சிக்கலான ஒன்று. அதைக்குறித்து சமஸ்தானங்களைக் கலந்தாலோ சிக்கவில்லை.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட்** (பம்பாய் மாகாணங்கள்) : அம்மையார் அவர்களே, சிரோகி சம்பந்தமாக எந்த மசோதாவும் கிடையாது.

**திரு. தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் குறுக்கிடாமல் பேச்சாளரைப் பேச அனுமதிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**சர்தார் ஹுக்கம் சிங் :** இளைய தலைமுறையினர் பாதை தவறிச் செல்லும்போது அவர்களைத் திருத்தி வழி நடத்திச் செல்வது பெரியவர்கள் கடமையல்லவா?

**திரு. சீதாராம் எஸ். ஜஜூ:** இளைய தலைமுறையினரைக் கட்டுப்படுத்தி வழிநடத்திச் செல்ல அவர்களுக்கு உரிமை நிச்சயம் உண்டு. ஆனால் முன்னேற்றத்திற்காக அது இருக்கவேண்டும், பின்னோக்கிச் செல்லும் போக்காக அது இருக்கக்கூடாது.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர் :** நாங்கள் 80 ஆண்டு களுக்கு மேலான அனுபவம் உள்ளவர்கள்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜூ:** 80 ஆண்டு அனுபவம் இருக்கலாம். தேசப்பிதா மகாத்மா காந்தியின் அனுபவத்தையும் பார்க்க வேண்டும். இந்துப் பெண்களின் வளர்ச்சியை ஆதரித்து பல நேரங்களில் அவர் எழுதியுள்ள கட்டுரைகள் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இந்து தொகுப்புச் சட்டத்தைப் பொறுத்தவரையில், இதைக் கடுமையாக எதிர்ப்பவர்கள்கூட வாரிசுரிமை மற்றும் மகள்களுடனும் சகோதரி களுடனும் சொத்தைப் பங்கிட்டுக் கொள்ளும் விதிகளைத் தவிர்த்து இந்து தொகுப்புச் சட்டம் முழுவதையும் நிறைவேற்ற ஒப்புக் கொள் கிறார்கள், நான் சேர்ந்துள்ள சமுதாயமான மார்வாரி சமுதாயத்தைச் சேர்ந்தவர்களே பெரும்பாலும் இதை எதிர்க்கிறார்கள். ஆனால் மார்வாரி இளைஞர்கள் இந்து தொகுப்புச் சட்டத்தை ஆதரிக் கிறார்கள். அனுபவம் மிக்க வயது முதிர்ந்தவர்கள் இருக்கிறார்கள் என நாம் கூறினாலும், இந்து சமுதாயத்தில் ஒரு மனைவியின் நிலை பரிதாபமானது என்று மகாத்மா காந்தி தமது சுய சரிதையில் கூறி யுள்ளார்.

**பண்டிட் முகுத் பீகாரி லால் பர்கவா :** மகாத்மா காந்தியின் பெயரை உங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளக் கூடாது.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு :** என்னை விட ஒரு வேளை நீங்கள் மகாத்மா காந்தியின் பெயரை உங்களுக்குச் சாதகமாக உபயோகித் திருக்கக்கூடும். நான் என் வாழ்க்கையை இப்பொழுதுதான் தொடங்கி யிருக்கிறேன். மகாத்மா காந்தியின் பெயரில் ஆணையிட்டு கூற எனக்கு எந்த சந்தர்ப்பமும் கிடையாது. ஆனால் இங்கு வயது நிரம்பிய பலர் நரைத்த தலையுடன் கூடியவர்கள் அவர் பெயரைத் தங்களுக்குச் சாதகமாக நூற்றுக்கணக்கான தடவைகள் பயன்படுத்தி யிருக்கக்கூடும்.

அம்மையார் அவர்களே, இந்து மனைவிமார்களின் நிலைமை யைப் பொறுத்தவரையில் அது மிகவும் பரிதாபகரமானது என்று மகாத்மா காந்தி எழுதியுள்ளார். எஜமானர் ஒருவர் வேலைக்கார னிடம் கோபம் கொண்டால் வேலைக்காரன் எஜமானரைவிட்டு சென்றுவிடலாம். ஒரு தகப்பனாரிடம் மகனுக்குக் கோபம் என்றால் அவன் அவரிடம் பாகப்பிரிவினை கேட்கமுடியாமல் போகலாம். ஒரு தகப்பனாருக்கு மகனிடம் கோபம் என்றால் அவனை வெளியே போ என்று அவர் கூறலாம். ஆனால் இந்து மனைவிமார்களைப் பொறுத்தவரையில் அவர்கள் எங்கேயும் போகமுடியாது. மகாத்மா காந்தியிடம் கஸ்தூரிபாயின் நிலையே இவ்வாறு என்றால் சாதாரண நம்மைப் போன்ற மனிதப் பிறவிகளின் கைகளில் இந்தப் பெண் களின் நிலை எவ்வாறு இருக்கும்?

அரசு அமைப்புச் சட்டத்தைப் பொறுத்தவரை, ஆண் பெண் சம உரிமையை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். ஆனால் இங்கு நமது மகளிருக்கும் சகோதரிகளுக்கும் மகள்களுக்கும் அதே சம உரிமையை அளிக்க அஞ்சுகிறோம். உங்களுடைய கோத்திரத்தைச் சேர்ந்தவனாகவோ அல்லது குடும்பப் பெயரைக் கொண்டவ னாகவோ உள்ள ஒரு பையனை நீங்கள் சுவீகாரம் எடுத்துக் கொள்ள லாம். ஆனால் உங்களுடைய மகளையோ அல்லது சொந்த சகோதரி யையோ நீங்கள் பொறுத்துக்கொள்ளத் தயாரில்லை, ஏனென்றால் அவர்கள் பெண்கள், இதுதான் நிலைமை.

இந்து மதத்திற்கு இது ஓர் அவமானம் என்று இந்த மசோதா விற்கு எதிராகப் பெரும் கூக்குரல் கிளம்பியுள்ளது. என்னுடை நண்பர்கள் முன் இந்தக் கேள்வியை வைக்க விரும்புகிறேன். இந்து

மதம் மாற்றங்களை ஏற்றுக் கொள்ளாத வறட்டுத்தனமான மத மல்ல. வெகு நீண்ட காலமாக மாறக்கூடிய சூழ்நிலைகளுக்கேற்ப அது மாற்றங்களை ஏற்றுக் கொண்டுள்ளது. 137 அல்லது 138 ஸ்மிருதி கள் இருப்பதே இதற்கு நல்ல எடுத்துக்காட்டாகும். மாற்ற முடியாத விதிமுறைகளுடன், எந்த வித மாற்றங்களும் இந்து மதத்தில் எதிர் பார்க்கப்படாமல் இருந்தால் 138 ஸ்மிருதிகளுக்கு அவசியம் என்ன? ஏன் மேலும் ஒரு ஸ்மிருதியை நாம் ஏற்றுக் கொள்ளக்கூடாது? ஒரு புதிய இந்து சட்டத் தொகுப்பை ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது? அந்த ஸ்மிருதிகளில் உள்ள சிறந்தவை யாவற்றையும் நவீனகால அறிவியல் வளர்ச்சி பெற்ற சமுதாய வளர்ச்சிக்குத் தேவையானவை களையும் அதில் சேர்த்துக் கொள்ளலாம். இதையெல்லாம் ஒன்றாக இணைத்து ஒரு தொகுப்பாகத் தயாரித்தால் என்ன பாதகம் விளையும்? நினைவிலிருந்து எழுதப்பட்டவைகளை ஸ்மிருதி என்ற சொல் குறிக் கிறது, கேட்டவைகளிலிருந்து எழுதப்பட்டவைகளை ஸ்ருதி என்ற சொல் குறிக்கிறது. ஒரு குறிப்பிட்ட முனிவராலோ, ஒரு குறிப்பிட்ட ரிஷியினாலோ அவை எழுதப்பட்டதாக எந்த இடத்திலும் குறிப் பிடப்படவில்லை. இந்தத் தொகுப்புச் சட்டத்தை நிறைவேற்று வதில், உருவாக்குவதில் எந்தத் தயக்கமும் வேண்டியதில்லை. மேலும் இந்த இந்துத் தொகுப்புச் சட்டம் நிறைவேற்றப்படுவதால் எவருடைய மனச்சாட்சியும் சிதைந்துவிடாது என்று நான் நினைக் கிறேன். அரசியல் மேடையிலிருந்து எப்பொழுதும் சுதந்திரத்தைப் பற்றி பேசிக் கொண்டிருக்கிறோம். அரசியல் சுதந்திரத்தைப் பெற்று விட்டோம். நாம் சுதந்திரம் அடைந்துவிட்டாலும், நாட்டில் சமூக மாற்றங்களும் நடைபெற நாம் அக்கறை கொள்ளவேண்டும். சமூக அமைப்பு மாற வேண்டுமென்று நாம் விரும்பினால் அதற்குச் சரியான தருணம் இதுதான். சீர்திருத்தங்களைப் பொறுத்த வரையில் மறைந்த ராஜாராம் மோகன் ராய் கூட எதிர்ப்பைச் சந்திக்க வேண்டிவந்தது என்பதை கூறிக் கொள்கிறேன். மற்ற பல சீர்திருத்த வாதிகளும் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருந்தது. யாருக்கு அவர்கள் உதவ விரும்பினார்களோ, யாருடைய வாழ்க்கை மேம்பட அவர்கள் பாடுபட்டார்களோ, யாருடைய விடுதலைக்காக போராடி னார்களோ அவர்களின் கைகளால் சீர்திருத்தவாதிகள் பலர் எதிர் பாராத விதமாக மரணத்தைத் தழுவினர். நம்முடன் இணைந்து செயல்படும் நமது தலைவர்கள் இங்குள்ளனர். சாத்தியப்படு மானால் அதிக அளவிலான பொது உடன்பாடு ஒன்றையே தாம் விரும்புவதாகக் கூட்டத் தொடரின் துவக்க நாளன்று நிகழ்த்திய உரையில் பிரதமர் கூறினார். இதைக் கேட்டபிறகு எந்த விவாதத் திற்கோ அல்லது இந்தப் பிரச்சினையின் மீது எந்தப் போராட்டத்

திற்கோ அவசியமில்லை என நான் நினைக்கிறேன். விட்டுக்கொடுத்து மற்றவர்களுடன் நாம் சமரச இணக்கத்துக்கு தயாராகிவிட்டால் அப்பொழுது இது ஒரு முற்போக்கு நடவடிக்கையாக இருக்காது என நினைக்கிறேன். அது வலுவிழந்துவிடும். ஆனால் நான் நமது பிரதம மந்திரியின் மதிநுட்பத்தில் நம்பிக்கை கொண்டுள்ளேன். என்னை விடவும் அல்லது எனது இளம் நண்பர்களைவிடவும் அவர் அறி வாற்றல் பெற்றவர் என்பதை உணர்வேன். எனக்கு அவரிடம் நம்பிக்கை உள்ளது. அவர் சமரசம் செய்து கொள்ள விரும்பினால் அல்லது அரசு சமரசத்தை விரும்பினால் சமரசம் செய்து கொள் ளட்டும். ஆனால் இளைஞர்களைப் பொறுத்தமட்டிலும் சமரசத்தை நாங்கள் விரும்பவில்லை. ஆனால் நாங்கள் எங்கள் தலைவர்களிடம் முழுமையான நம்பிக்கை கொண்டுள்ளோம், அவர்கள் ஆணை களுக்கு அடிபணிவோம்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** ஆனால் அவர்கள் யாரும் இங்கு இல்லையே.

**திரு.சீதாராம் எஸ். ஜாஜு :** அவர்கள் இங்கு இல்லையென் றாலும், மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் இங்குள்ளார்கள். அவர்தான் இந்த மசோதாவை முன்மொழிந்தவர். அரசின் சார்பாக அவர் இந்தப் பணியில் ஈடுபட்டுள்ளார். இந்த அரசின் மீது வசை பாடு வதில் எந்தப் பயனும் இல்லை. இந்த மசோதாவின் தோற்றத்தை ஆராய்ந்தோமானால் இது முந்தைய அரசினால் கொண்டுவரப் பட்டது என்பதை நாம் காணலாம். (குறுக்கீடு)

அம்மையார் அவர்களே, குறுக்கீடுகள் இருந்ததால் மேலும் ஒரு பத்து நிமிட நேரம் பேச விரும்புகிறேன். நீங்கள் விரும்பினால் நாளைக்குத் தொடர்கிறேன். நான் பத்து நிமிடங்களுக்கு மேல் எடுத்துக் கொள்ள மாட்டேன்.

**திரு. அவைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் பத்து நிமிடமே எடுத்துக் கொள்வதாக உறுதி அளித்துள்ளதால் அவர் தமது உரையை முடித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு:** ஆனால் நீங்கள் என் இடர்ப் பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும். அம்மையார் அவர்களே, என் பேச்சை அதிகம் இடைமறித்து விட்டார்கள். உங்களுக்கு ஆட் சேபம் இல்லையென்றால் நாளை பத்து நிமிடம் பேச விரும்பு கிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் அவர் உரையை மூன்று நிமிடத்தில் முடித்து விடுவாரா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது அவருக்கு மூன்று நிமிடம் அனுமதிக் கிறேன்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு:** அம்மையார் அவர்களே, அது எனக்குத் தெரியும். நீங்கள் விரும்பினால் நான் அமர்ந்து விடு கிறேன். மூன்று நிமிடங்கள் அதிகமாக ஒதுக்கியதற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. அம்பேத்கர் இங்குள்ளார்கள் என்று கூறிக் கொண்டிருந் தேன். நமது கருத்துகளை அவர் எடுத்துரைப்பார். இந்த மசோதா வுக்கு பொறுப்பு அவர்தான். இன்றைய அரசை வசைபாடுவதிலும் குற்றம் சாட்டுவதிலும் பயன் ஏதும் இல்லை. இந்த மசோதாவின் சரித்திரத்தைப் பார்த்தால், இதற்கு முந்திய அரசான ஓர் அன்னிய நாட்டு அரசு இந்த மசோதாவைக் கொண்டுவந்தது. அந்த நேரத்தில் இந்த மசோதாவை எதிர்க்க நமக்கு தைரியம் இல்லை. சமூகம் சம்பந்த மான நடவடிக்கைகளை அன்னிய அரசு எடுக்கும்போது........

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** வரலாற்றைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.

**திரு. சீதாராம் எஸ். ஜாஜு :** நிச்சயமாக நான் வரலாற்றைப் பார்க்கத்தான் வேண்டும். ஆனால் இப்பொழுது என் உரையைத் தொடர் கிறேன். இந்துச் சட்டத்தைப் பாதிக்கக்கூடிய சில நடவடிக்கைகளை பிரிட்டிஷ் அரசாங்கம் எடுத்தபோது நாம் அவற்றை ஏற்றுக் கொண் டோம். ஏனெனில் அது முதலாளிகளை, பணமுள்ளவர்களைப் பாதிக்கவில்லை. இது பொருளாதார ரீதியாக பாதிப்பதால் நமக்கு வலிக்கிறது. இந்த அவையில் ஆண் உறுப்பினர்கள் பெரும்பான்மை யாக உள்ளனர். அவையில் சிறுபான்மையினராக இருக்கும் பெண் உறுப்பினர்கள் மீது பெரும்பான்மையினரின் ஆதிக்கம் இருக்கக் கூடாது என்று நான் விரும்புகிறேன். பொதுவாக நாட்டில் உள்ள பெரும்பான்மையான பெண்கள் படிப்பு அறிவில்லாதவர்கள். ஆகையால் அவர்களைச் சுரண்டக்கூடாது. இந்த மசோதா ஒரே ஒரு விஷயத்தைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. அதாவது விவாக ரத்தை மட்டுமே என்று மசோதாவைக் குறித்து பயங்கரப் பிரசாரம் நடைபெற்று வருகிறது. இந்துத் தொகுப்புச் சட்டம் நிறைவேற்றப் பட்டபின்பு அவர்கள் கணவன்மார்கள் அவர்களை விவாகரத்து

செய்துவிடுவார்கள் என்று எல்லாப் பெண்களிடமும் பலவகைகளில் போதிக்கப்பட்டு வருகிறது. இந்து தொகுப்புச் சட்டத்தின் விதிகளை இவ்விதமாக தவறுதலாக விளக்கிக் கூறும் செயல் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இவர்கள் எல்லோருக்கும் ஒன்றே ஒன்றைக் கூறிக்கொள்கிறேன். தேவையில்லாமல் விவாக ரத்து செய்து கொள்பவர்கள் ஒருவர் கூட இருக்கமாட்டார், அதே போன்று இந்து மகளிரும் அவசியமற்று விவாகரத்து நடவடிக்கைக்கு செல்லமாட்டார்கள். நமது நீதிமன்றங்களும் நியாயபூர்வமாகவும் அறிவுபூர்வமாகவும் செயல்படுவதுடன் ஒவ்வொரு வழக்கும் முழுமையாக விசாரணைக்குட்படுத்தப்பட்டு நீதி வழங்கப்படும். நான் கூற விரும்பியது இவ்வளவுதான்.

*சட்டமன்றம் 1949 டிசம்பர் 13 தேதி செவ்வாய்க் கிழமை 10.45 வரை ஒத்திப்போடப்பட்டது.*

---

## இந்து தொகுப்புச் சட்டம் - தொடர்ச்சி

[1]**திரு. துணை சபாநாயகர் :** இந்து சட்டத்தின் சில பிரிவுகளை முறைப்படுத்துவதற்கும் திருத்துவதற்குமான மசோதாவை மேலும் பரிசீலிப்பதற்கான நடவடிக்கைகளை அவை இப்பொழுது எடுத்துக் கொள்ளும்.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் :** (மதராஸ், பொது) பொறுக்குக் குழுவிலிருந்து வந்துள்ள மசோதாவின் பல்வேறு அம்சங்களைப் பற்றிப் பேசுமுன்பு சில பொதுவான கருத்துகளை உங்கள் அனுமதியுடன் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்துச் சட்டங்கள் சம்பந்தமான விஷயங்களில் மாற்றங்கள் கொண்டு வருவதையோ, சட்டத் தலையீடுகளையோ எதிர்க்கும் பிரிவைச் சார்ந்து நான் இல்லை என்பதை இங்கு முதலில் தெரிவித்துக் கொள்ள வேண்டும். சட்டத்தின் உள்ளார்ந்த இயல்பு மாறாத ஒன்றாக இருக்க முடியாது. சமுதாய முன்னேற்றத்திற்கு துணைபுரியும் சாதனமாகவும், அளவுகோலாகவும் அது செயல்பட வேண்டுமென்றால் ஒவ்வொரு காலத்தின் முற்போக்கு சிந்தனைகளுக்கேற்ப அதன்

---

★ அ.நி.வி. (சட்) பி, தொகுப்பு VI, பிரிவு II 13 டிசம்பர் 1949, பக்கம் 510-519.

வேகமும் இருக்க வேண்டும். சமுதாயத்தில் சட்டத்தின் இந்தச் செயல்பாட்டைக் குறித்து நமது முன்னோர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள். சமுதாயத்தில் சட்டத்தின் இந்தச் செயல்பாட்டைக் குறித்தும், அவ்வப்போது அதில் மாற்றங்கள் அவசியம் என்பதையும் ஸ்மிருதிகளும் மற்றும் அது குறித்த சிறப்பான வியாக்கியானங்களும் அழகாக எடுத்துக் காட்டுகின்றன. நாட்டின் பல பாகங்களிலும் சட்டத்தின் அதிகாரபூர்வ விளக்கங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்ட இந்த விளக்க உரைகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உள்ள சமுதாய நிகழ்வுப் போக்குகளை குறிப்பிடும் வெளிப்பாடாக மட்டுமே இருந்தன. ஆனால் முறையான சட்ட நடைமுறைகள் உருவாக்கப்பட்டுள்ள இந்த நவீன உலகில் எந்த வழக்குரைஞரும் சட்ட விளக்க நடவடிக்கையின் மூலம் சட்டத்தில் மாற்றம் கொண்டுவர முடியாது. நீதிமன்றங்கள், இந்தியாவின் உயர்மட்ட தீர்ப்பாயங்கள், பிரிவி கவுன்சிலின் நீதிக்குழு ஆகியவைகள் கடந்த சில நூற்றாண்டுகளாக இந்தப் பணிகளை ஓரளவுக்கு நிறைவேற்றிவருகிறார்கள். எனினும், சட்டத்தில் மாற்றம் கொண்டு வருவது அதன் வழக்கமான பணி அல்ல. அது சட்டத்திற்கு விளக்கம் அளிக்கிறது. சட்டத்தை அலசி ஆய்ந்து விளக்கம் செய்யும் முந்தைய முடிவுகளின் கொள்கையை மேம்படுத்தவும் அல்லது அதிலிருந்து எடுக்கப்பட்ட சில கோட்பாடுகளின் மூலமும் அல்லது இந்துச்சட்ட வாசகங்களிலிருந்து எடுக்கப்பட்ட கொள்கைகளின் அடிப்படையில் சில நுணுக்கமான மாற்றங்களை உருவாக்கலாம்.

ஆனால், அதன் உள்ளார்ந்த, இயல்பின்படி சட்ட நடவடிக்கைகள் கட்டுப்பாட்டிற்குள் அடங்கியிருக்கின்றன. சட்ட வல்லுநரின் பாத்திரத்தை ஒரு நீதிபதி உணர்வுபூர்வமாகவோ அல்லது அவ்வாறின்றியோ எடுத்துக் கொள்ளும் அபாயம் உள்ளதை மறுப்பதற்கில்லை. ஒரு கேள்வியை பரிசீலனை செய்கையில் ஒரு குறிப்பிட்ட நீதிபதி அல்லது பெஞ்ச் வைதீக அல்லது பழமைவாத அடிப்படையில் அணுகலாம். வேறொரு நீதிபதி தமக்குப் பிடித்தமான சமூக சீர்திருத்த கருத்தோட்டங்களை தமது நீதி வழங்கும் பணியில் பயன்படுத்தலாம். இந்தியாவுடனான நீண்டகால தொடர்புகளின்போது இந்நாட்டின் உயர் மட்ட தீர்ப்பாயங்களும் மற்றும் பிரிவி கவுன்சிலின் நீதிக் குழுவும் வழங்கிய தீர்ப்புகள் மேலே குறிப்பிட்ட கூற்றுக்கு சாட்சியங்களாக உள்ளன. அதே நேரத்தில், நீதிமன்றங்களின் தீர்ப்புகள் சட்டமன்றக் குறுக்கீட்டிற்கு பெருமளவில் வழிவகுத்துள்ளது என்பதையும் மறுப்பதற்கில்லை. மாற்றம் தவிர்க்க முடியாதது என்பதுடன் சமுதாய வளர்ச்சி நியதியின் பகுதியாகவும்

அது இருக்கிறது. ஆனால் மாற்றங்கள் என்பது சமுதாயத்தின் அடிப் படையையே தகர்த்து நொறுக்குவதல்ல.

சட்ட திருத்தத்தின் இந்த அம்சங்களையெல்லாம் கவனத்தில் எடுத்துக்கொண்டு இந்த மசோதாவை அவை பரிசீலிக்க வேண்டு மென்று விரும்புகிறேன். இந்த அவையில் விவாதத்தில் இருக்கும் மசோதாவைவிட வேறு எந்தப் பொருளிலும் இந்நாட்டின் எந்த ஓர் ஆணும் பெண்ணும் அக்கறை கொண்டிருக்கவில்லை. எனவேதான் நம் பொறுப்பு மேலும் அதிகமாகிறது. எவ்வளவு உயர்ந்த நிலையி லிருந்தாலும் அல்லது தாழ்ந்த நிலையிலிருந்தாலும் மாறுபட்ட கருத்துக்களை ஏற்றுக் கொள்வதுடன் இந்நாட்டு மக்களின் நலன் கருதி சார்பற்ற ஒரு நல்ல தீர்ப்பை அளிக்க வேண்டும். இக்கருத்தில் அந்த அளவிற்கு அதை ஒரு முற்றிலும் ஒரு கட்சி நடவடிக்கை யாகவோ, ஓர் இரகசிய நடவடிக்கையாகவோ எடுத்துக் கொள்ளக் கூடாது.

முதலில், உங்கள் அனுமதியுடன், திருமணம் மற்றும் விவாக ரத்து சம்பந்தமான பிரிவை எடுத்துக் கொள்கிறேன். இந்தப் பிரிவை எடுத்துக்கொள்கையில் ஏற்கெனவே இந்திய சட்டமன்றத்தின் பல சட்டங்களால் திருமணச் சட்டத்தில் மாற்றங்கள் பல செய்யப்பட் டுள்ளதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்தச் சட்டங்களில் கடைசியாக நிறைவேற்றப்பட்டது 1946 இந்து திருமணச் சட்டம் (குறைபாடுகள் நீக்கம்) (1946-ஆம் ஆண்டு XXIII சட்டம்) ஆகும். மணமக்கள் ஒரே கோத்திரத்தை அல்லது பிரவா கத்தைச் சேர்ந்தவர்கள் என்பதாலோ அல்லது வெவ்வேறு சாதி களை அல்லது சாதிகளின் உட்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் என்ப தாலோ ஒரு திருமணம் செல்லாது என்பதை இந்தச் சட்டம் ரத்து செய்கிறது. ஒரு தார மணவாழ்க்கையை மதராஸ் சட்டமன்றம் கட்டாயமாக்கியுள்ளது. சில மாகாண சட்டமன்றங்கள் விவாகரத்து சம்பந்தமான சில சட்டங்களைக் கொண்டுவந்துள்ளன. திருமணத் துக்கு இணக்கம் தெரிவிக்கும் வயது சம்பந்தமான சட்டங்களிலும் மாற்றம் செய்யப்பட்டுள்ளது. இந்தக் கண்ணோட்டத்தில் இந்த மசோதாவை பரிசீலனை செய்தால் இந்த மசோதாவில் செய்யப்பட் டுள்ள மாற்றங்கள் முதலில் காணப்பட்டதுபோல் அவ்வளவு புரட்சி கரமானதாக இல்லை எனலாம். மணவாழ்க்கை உரிமைகளை மீட்டளித்தல், தீர்ப்பு வழிப் பிரிவு, வாழ்க்கைப்படி, குழந்தைகள் பராமரிப்பு, நீதிமன்றங்களின் நடைமுறைகள் மற்றும் சட்ட வரம்பு களைக் குறித்துச் சேர்க்கப்பட்டுள்ள சில விதிகளே மூல மசோதாவில்

செய்யப்பட்டுள்ள முக்கியமான மாற்றங்கள் என்று பொறுக்குக் குழு உறுப்பினர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

மசோதாவின் விதிகளைப் பொறுத்தவரையில் ஒரு முக்கிய மான கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். சமய சடங்குகளின் அடிப் படையிலான திருமணங்களுக்கும் பதிவுத் திருமணங்களுக்கும் இடையேயான வேறுபாடுகள் வெளிப்படையாகக் காணப்படுகின் றனவே தவிர உண்மையானதாகத் தெரியவில்லை. இந்த விஷ யத்தைப் பொறுத்தவரை மசோதாவை சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஏனெனில் விவாகரத்து, மணவாழ்க்கை உரிமை களை மீட்டளித்தல், திருமணக் கடமைகள் மற்றும் ஜீவனாம்சம் சம்பந்தமான விதிகள் பதிவுத் திருமணத்திற்கும் சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணங்களுக்கும் முற்றிலும் ஒரே மாதிரி யாகவே உள்ளன. சமயச் சடங்குகளின் அடிப்படையில் நடைபெறும் திருமணங்கள் சம்பந்தமாக ''விலக்கப்பட்ட படிநிலைகளுக்கும்'' இதரத் தடைகளுக்கும் இடையேயான வேறுபாடுகளை இந்த மசோதா எடுத்துக்காட்டியுள்ளது. சமயச் சடங்குகளின் அடிப்படை யில் நடைபெறும் திருமணங்களில் மசோதாவில் குறிப்பிடப்பட் டுள்ள சபிண்டா உறவு முறைகள் திருமணத்தடைக்கு அடிப்படை யாக இருக்கும் என்ற விதி சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் பதிவுத் திருமணங்களில் விலக்கப்பட்ட படி நிலைகளே திருமணத் தடைக்கு அடிப்படையாக உள்ளன. ஆனால் அதே நேரத்தில் சமயச் சடங்கு களின் அடிப்படையில் திருமணம் செய்து கொள்பவர்கள், அதைப் பதிவுத் திருமணமாக மாற்றும் வாய்ப்பு மசோதாவில் அளிக்கப் பட்டுள்ளது ஏன் என்று எனக்குப் புரியவில்லை. இறுதியாக இந்த மசோதா நிறைவேறும் முன்பு இந்த வேறுபாடுகள் எதாவது பயன் அளிக்கிறதா என்பதை மாண்புமிகு சட்டத் துறை அமைச்சர் பரிசீலிக்க வேண்டும்.

குழந்தைகளின் உரிமை, வாரிசு உரிமை, தம்பதியர்களுக் கிடையேயான கடமைகள் போன்ற எல்லா விஷயங்களிலும் எந்த வேறுபாடும் இல்லை. பதிவுத் திருமணங்கள் மற்றும் சமயச் சடங்கு கள் அடிப்படையிலான திருமணங்கள் ஆகியவைகளின் நிலைப் பாடுகள் முற்றிலும் ஒன்றாகவே உள்ளன. எனவே சமயச் சடங்கு களின் அடிப்படையில் நடைபெறும் திருமணங்களுக்கு சில விதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. சில தரப்புகளின் உணர்வுகளைத் திருப்திப் படுத்துவதற்கான முயற்சியாக இது இருக்கலாம். அதுவே உண்மை யான நோக்கமாக இருந்தால் சமயச் சடங்கு முறை திருமணங்களி

லிருந்து பதிவுத் திருமணங்களாக எளிதாக மாற்ற உதவும் விதிமுறைகளைப் பிற்பகுதியில் இணைத்திருக்கத் தேவையில்லை. ஏதாவது ஒன்றையோ அல்லது மற்றொன்றையோ தேர்ந்தெடுங்கள். உதாரணமாக சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணங்களுக்குச் சில சடங்குகள் தவிர்க்க முடியாது. பதிவுத் திருமணங்களில் சில சடங்குகள் நடைபெற வேண்டிய அவசியமில்லை. ஒரு வழக்கறிஞர் என்ற கண்ணோட்டத்தில் இந்த மசோதாவின் விதியின்படி பதிவு திருமணத்திற்கும், சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணத்திற்குமிடையே உண்மையான வேறுபாடு ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. மசோதாவின் அடிப்படையான கோட்பாடுகள் எதையும் நான் தொடவில்லை. ஆனால் மாண்புமிகு சட்ட அமைச்சரின் பரிசீலனைக்கு அதை வைக்கிறேன்.

மேலும் விலக்கப்பட்ட உறவினர்கள் சம்பந்தப்பட்டவரை எதிர்கால சந்ததிகளைப்பற்றி ஆய்வுசெய்யும் அறிவியல் அறிஞர்கள் உறவினர்களுக்கிடையேயான திருமணத்தை எதிர்க்கிறார்கள். எப்படியிருப்பினும் இந்தக்கோட்பாட்டிற்கு பெரும் ஆதரவுள்ளது. இந்தச் சூழ்நிலையில் இந்த விதியைப் பொறுத்தமட்டில் நாம் முன்னோக்கிச் செல்கிறோமா அல்லது பின்னோக்கிச் செல்கிறோமா? இந்தப் பிரிவைப் பொறுத்தமட்டில், சிலர் திருமணம் செய்து கொள்வதை தடைசெய்யும் தற்கால சிந்தனைகளை நமது முன்னோர்கள் எதிர்பார்த்திருக்கலாம் எனக் கருதுகிறேன். முற்போக்கு மற்றும் முற்போக்குச் சிந்தனைகள், நாகரிகம் என்பதன் அடிப்படையில் ஏன் பின்னோக்கிச் செல்லவேண்டும் என்று கேட்கிறேன். தூரத்து சபிண்டர உறவு அல்லது அதே பிரவாரா அல்லது அதே கோத்திரத்திலுள்ளவர்களிடையே எந்த வித தடையும் அவசியமில்லை என்று நிச்சயமாக உணர்கிறேன். அது முற்றிலும் வேறு அடிப்படையில் உள்ளது. நெருக்கமான உறவு முறை இருக்குமிடத்தில் விதியை ஏன் தளர்த்த வேண்டும்? அண்மையில் நெருங்கிய உறவினர்களுக்கிடையேயான திருமணங்களின் தகுதிகளைக் குறித்து நீண்ட விவாதங்கள் நடைபெறுவதை பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் நான் படித்து வருகிறேன். அறிவியல் மற்றும் வரலாற்று மாணவரான மாண்புமிகு சட்ட அமைச்சர் இந்த அம்சத்தை நிச்சயமாகப் பரிசீலனை செய்வார் என்பது எனக்குத் தெரியும். மக்களின் மத உணர்ச்சிகளுக்கு இது எதிரானது. அறிவியல் கோட்பாடுகள் மத மற்றும் மக்களின் உணர்வுகளை கணக்கிலெடுத்துக் கொண்டால் விதியைத் தளர்த்துவதற்கு முகாந்திரம் எதுவும் இல்லை. சமுதாயத்தின் நலனுக்கு அது நிச்சயமாக ஏற்றதல்ல (பொறுத்தமானதல்ல). வருங்கால

நண்பகல் 12 மணி

தலைமுறையின் நலனுக்காக, நமது இனத்தின் முன்னேற்றத்திற்காக நெருங்கிய உறவினர்களிடையே திருமணம் அவசியமானால் எல்லாவிதத்திலும் அதை நீங்கள் ஊக்கப்படுத்துங்கள். நாம் ஒரு தெளிவான நிலையை எடுப்போம். இந்த விஷயத்தை குறித்து தீர்மானமான நிலையை எடுப்போம். அடிப்படையான கோட்பாடாகக் கருதப்படும் இந்த விஷயங்களில் வழவழ என்று இருப்பதை நான் விரும்பவில்லை. பழைய கோட்பாடுகளை பின்பற்றுங்கள் அல்லது உங்கள் கருத்துக் கேற்ப அதிக சீர்திருத்தமான, நவீன கருத்துக்களை பின்பற்றுங்கள். தனிப்பட்ட முறையில் பழைய விதிகளை விடாமலிருப்பதையே நான் மிகவும் விரும்புவேன். தெளிவாகக் கூறுகிறேன்: உதாரணமாக சில சமூகங்களைப்பொறுத்தமட்டில், இந்தியாவின் சில பகுதிகளில் சில வழக்கங்கள் பழக்கத்தில் இருக்கலாம், வேறு ஒரு பிரிவில் அதற்கு வகை செய்துள்ளீர்கள். சபிண்டா உறவினர்களுக்கிடையே திருமணம் நடைபெறுவதற்கு தடை இருக்க வேண்டுமென்பதே பொதுவான விதியாக இருக்க வேண்டும், இதைப் பொறுத்தவரையில் சரியான நோக்கில் செயல்கள் நடைபெறவில்லை.

விவாகரத்துச் சட்டத்தைப் பொறுத்தவரையில் அதை ஒரே சீராகக்கொண்டு வரவேண்டுமென்ற முயற்சியில், சர் தேக் சந்த் தமது குறிப்பில் குறிப்பிட்டுள்ளபடி, தற்போது கட்டுப்பாடுகள் இல்லாத சமூகங்களிலும், வகுப்புகளிலும் விசேஷக் கட்டுப்பாடுகளைத் திணிப்பது அர்த்தமற்றதாகும். தென் இந்தியாவில் சில பகுதிகளில் கிராமத்தலைவர் அல்லது பஞ்சாயத்துத் தலைவர் முன்னிலையில் பரஸ்பர சம்மதத்துடன் இன்றும் விவாகரத்துப் பெறுவது வழக்கத்திலுள்ளதை நான் அறிவேன். வட இந்தியாவிலும் இது வழக்கத்திலுள்ளது. சில பிரிவினரின் கருத்துப்படி திருமணச் சட்டத்தின் சாராம்சமே விவாகரத்துதான் என்று தோன்றுகிறது. ஆனால், திருமணத்தைப் பற்றி சிந்திக்கு முன் விவாகரத்தைப் பற்றித்தான் சிந்திக்க வேண்டுமா? அதுதான் உங்கள் சிந்தனைப்போக்கு என்றால், நீங்கள் அதை ஊக்கப்படுத்த விரும்பினால் அல்லது எளிய விவாக ரத்துக்கு வழி வகை செய்ய வேண்டுமென்றால், உண்ண உணவுக்கே வழியின்றி வாடிக் கொண்டிருக்கும் சமூகங்கள் அல்லல்பட்டுக் கொண்டிருக்கும்போது எதற்காக இந்த நீதிமன்றங்கள், விவாகரத்து நீதிமன்றங்கள், மூன்று நீதிபதிகளைக்கொண்ட மேல்முறையீட்டு நீதிமன்றங்கள் எல்லாம்? இது சரியான பாதையில் செல்லும் போக்கு இல்லை என்றுதான் நினைக்க வேண்டும். குறிப்பிட்ட சாதிகளில், சில சமூகங்களில் விவாக ரத்துக்கு அனுமதியளிக்கும் வழக்கம் இருக்கும் அளவுக்கு அது தொடர

வேண்டும். விவாகரத்தை ஒரே சீராக அமைக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அதை அதிகச் செலவுள்ளதாகச் செய்துவிடக்கூடாது. நிச்சயமாக எனது வழக்குரைஞர் தொழிலுக்கு அது அதிக வருமானத்தை அளிக்கும். எனவே நான் அதற்கு எதிர்ப்பல்ல. எனது நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரை நன்கு அறிவேன். இந்தக் குறிப்பிட்ட பிரச்சினையில் ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்பு பிரச்சினையின் இந்த அம்சங்களையெல்லாம் அவர் பரிசீலிப்பார் என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

சட்டத் தீர்ப்பின்படி பிரிந்து வாழ்வதைப் பற்றி சில ஆண்டுகளுக்கு முன்பு பிரபுக்கள் சபையில் நடந்த ஒரு சுவையான விவாதம் எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. அதில் பிர்கன்கெட் பிரபு பங்கு கொண்டார். மிகப் பிரபல வழக்குரைஞர்கள் மற்றும் சட்ட வல்லுநர்களில் சிலரும் இதில் பங்கு கொண்டனர். தீர்ப்பின்படி பிரிந்து வாழ்வது என்பது ஆசை நாயகியை வைத்துக்கொள்ளும் வழக்கத்தை சட்டமுறையாக்குவது போலாகும் என்ற கடுமையான கருத்தை ஒரு பிரிவினர் கொண்டிருந்தனர். இந்தத் தீர்ப்புவழிப் பிரிவு தொடருவதைவிட ஒரு தெளிவான விவாகரத்தையே நான் விரும்புகிறேன். ஜீவனாம்சம் சம்பந்தமானாலும் சரி மனைவி வறுமையில் வாடாமல் பொறுப்புகளை நிறைவேற்றுவது சம்பந்தமான பிரச்சினையானாலும் சரி, கணவனும் மனைவியுமாக இருக்கும்போதே தாம்பத்யப் பொறுப்பை நிறைவேற்றவில்லை என்றாலும் சரி அதற்கான விதிகள் மசோதாவில் உள்ளன.

வாழ்க்கைப்படி, சட்டத் தீர்ப்பின்படியான பிரிவினை, விவாக ரத்து, மணவாழ்க்கை உரிமைகளை மீட்பது சம்பந்தமான ஆங்கிலச் சட்டத்தின் சிக்கலான விதிமுறைகள் நமக்கு எதற்கு? இவ்வளவு பெரும் சிக்கலான விதிமுறைகள் தேவைதானா என்பது முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம்.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா** (மேற்கு வங்காளம் பொது) : நாட்டின் முன்னேற்றத்தின் நலனைக் கருதி அவை அவசியமாகின்றன.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** அது குறித்து நான் கருத்தேதும் தெரிவிக்க விரும்பவில்லை. அந்த விஷயத்தை குறித்து உங்களுக்கு முடிவான கருத்துக்கள் இருக்கலாம். ஆனால் இந்த விஷயம் குறித்து எனக்கு முடிவான கருத்து ஏதும் இல்லை.

எனவே, இங்கிலாந்தில் வழக்கத்திலிருந்த பழைய சிந்தனைப் போக்குகளை மட்டும் சார்ந்திருக்காமல், நவீன சிந்தனைப் போக்கு களையும் பரிசீலனையில் எடுத்துக் கொள்ளவேண்டும். அண்மை ஆண்டுகளில் இங்கிலாந்தில் இயற்றப்பட்ட சட்டங்களில், திருமணம் சம்பந்தமான எல்லா அம்சங்களைக் குறித்தும் விதிகள் இருப்பினும், புதிய கருத்துக்களும் தோன்றியுள்ளன. எனவே ஆங்கிலச் சட்டத்தை அப்படியே பகர்ப்பு செய்வதற்குப் பதிலாக, ஏதாவது மாற்றங்கள் செய்ய முடியுமா என்பதைப் பார்ப்போம்.

அதன் பொதுவான கோட்பாடுகளைப் பொறுத்தவரையில் விவாகரத்து அல்லது மற்ற விஷயங்களில் மசோதா மிகவும் தீவிர மாக உள்ளது என்று நான் கருதவில்லை. இரண்டு மாறுபட்ட கருத் தோட்டங்களைச் சமரசம் செய்யும் உண்மையான முயற்சிதான் எழுந்துள்ள சிக்கல்களுக்கும் கஷ்டங்களுக்கும் காரணமாகும். திருமணங்கள் எளிய முறையில் முறிந்துவிடக் கூடாது என்ற பழைமைக் கருத்தும், அதே நேரத்தில் சில சூழ்நிலைகளில் விவாக ரத்துத் தேவை என்ற நவீன கருத்தும் ஆகும் அவை. இந்த எதிரும் புதிருமான கண்ணோட்டங்களுக்கிடையே எப்படி இணக்கமான முடிவைக் கொண்டு வருவது என்பதே பிரச்சினை. ஓரளவு அமைதி யான முறையில் ஒருவர் கருத்தை மற்றொருவர் புரிந்து கொண்டு இப்பிரச்சினையை பரிசீலிக்க வேண்டும். நம் கண்ணோட்டம் எப்படி யிருப்பிலும், கால வெள்ளத்தை தடுத்து நிறுத்திவிட முடியாது. நான் ஒரு பழைமைவாத, ஆசாரமான குடும்பத்தைச் சேர்ந்தவன். சிரார்த்தங்களில் இன்றும் நம்பிக்கை உள்ளவன். என்னுடைய குடும்பத்திற்கு இல்லத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதுடன் வாழ்க்கையைப் பற்றி பழைய கருத்தோட்டங்களிலும் ஓரளவு நம்பிக்கை கொண்டவன், ஆனால் அதே நேரத்தில் தற்காலப் போக்கு களையும் புறக்கணிக்க முடியாது. என் மகன்கள் என்னைப் போல் இருக்க மாட்டார்கள். என் பேரக் குழந்தைகள் என்னைவிட மிகவும் வேறுபட்டு இருப்பார்கள். இந்தச் சூழ்நிலைகளில், கடந்த காலத் தில் என் வாழ்க்கை மிக ஆழமாக வேர் வீட்டிலிருந்தாலும் நவீன போக்குகளைப் பெருமளவில் புரிந்து கொள்ளும் நிலையில் உள்ளேன். எனவே, இந்த அம்சங்களெல்லாம் கருத்தில் கொள்ளப் பட்டு, இந்த நடவடிக்கையைப் பரிசீலிப்பதாக நம் அணுகுமுறை இருக்க வேண்டும். உண்மையிலேயே நீங்கள் சமயச் சடங்குத் திருமணங்களில் நம்பிக்கை வைத்திருந்தால் அதை இவ்வளவு எளிதாக பதிவுத் திருமணமாக மாற்றும் முறை ஏனோ எனக்கு இசைவாக இல்லை. அது என் கருத்து. சமயச் சடங்கு திருமணத்தை

ஏற்றுக் கொள்ளுங்கள் அல்லது அதை விலக்கிவிடுங்கள். சமயச் சடங்குத் திருமணத்திற்கான விவாகரத்துக்குக் குறிப்பிட்ட அடிப் படைக் காரணங்களை நிர்ணயம் செய்து கொள்ளுங்கள். பதிவுத் திருமணங்களின் விவாகரத்துக்குக் குறிப்பிட்ட காரணங்களை தீர்மானம் செய்துகொள்ளுங்கள். இந்த இரண்டையும் கலப்பதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

இப்பொழுது தத்து எடுத்துக்கொள்வது சம்பந்தமான அத்தி யாயத்தை எடுத்துக் கொள்கிறேன். தத்து எடுப்பது சம்பந்தமான அத்தியாயத்தைக் குறித்து விரிவான விவாதம் தேவை இல்லை என நினைக்கிறேன். நீதிமன்றத் தீர்மானங்கள் வகுத்துள்ள தத்து எடுத்துக்கொள்ளும் சட்டத்தின் அடிப்படை கோட்பாடுகள் கருத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டிருப்பதுடன், பல்வேறு ஜாதியினரிடையே நடைபெறும் திருமணம் சம்பந்தமான சட்டங்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்களின் விளைவாகத் தேவைப்படும் திருத்தங்களும் செய்யப் பட்டுள்ளன. சில குறிப்பிட்ட ஜாதிகளிலும் சூழ்நிலைகளிலும், ஒரு பையனைத் தத்தெடுப்பதற்கு முன்நிபந்தனையாக, திருமணச் சட்டத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள பண்டைய விதிகளைக் கைவிடாது, இந்தத் திருமணங்களில் பிறக்கும் குழந்தைகளுக்கு வாரிசுரிமையை ஒத்துக்கொள்வது அர்த்தமற்றது. தத்தெடுப்பதை செல்லதக்கதாகச் செய்யும் எளிய விதியான கொடுக்கலும் எடுத் தலும் மசோதாவில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. தத்தெடுத்த தாயாருக்கும் தத்தெடுக்கப்படும் பையனுக்கும் இடையில் எழும் சட்டத் தகராறுகளை தவிர்க்க சொத்துரிமை விதிகள் ஒழுங்குப் படுத்தப்பட்டுள்ளன. முடிவில்லாத சட்டத் தகராறுகளுக்கு முடிவு கட்ட, சொத்துக்களை பராதீனப்படுத்துவதைத் தடுக்க விதிமுறை கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. பூபன் மோயி வழக்கிலிருந்து தத்து எடுப்பது சம்பந்தமான சட்டத்தின்படி தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் ஓயாத வழக்குகளை முடிவுக்குக் கொண்டுவரும் பராதீனப்படுத்துவது சம்பந்தமான விதி ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. மயூகா சட்டத்தின் முக்கிய கோட்பாட்டின்படி தத்து எடுப்பதைச் செல்லுபடியாகச் செய்வதற்காக ஓர் அதிகார அமைப்பின் தேவையை உணர்ந்து சட்டம் எளிமையாக்கப்பட்டுள்ளது. மொத்தத்தில் இந்த அவை சாதகமாக பரிசீலிப்பதற்கான எல்லாமே தத்து எடுப்பது சம்பந்தமான அதிகாரத்தில் உள்ளன என்று கூறமுடியும். தத்தெடுப்பின் செல்லும் தன்மைக்கான கணவனின் வெளிப்படையான அதிகாரத் தின் அவசியம், கணவன் அளிக்கும் அந்த அதிகாரத்தின் வீச்சு மற்றும் வரையறைகள், தத்தெடுப்பது குறித்துக் கேள்வி கேட்க

அக்கறையுள்ள நெருக்கமான சபிண்டா உறவினர்களின் சுதந்திரமான சம்மதம், மற்றும் கணவனின் அதிகாரத்தின் பிதிநிதியான மூத்த, இளைய, விதவைகளின் கோரிக்கைகள், தத்தெடுப்பதற்கான அதிகார வரையறைகளை நிர்ணயிப்பது சம்பந்தமான விஷயங்கள் ஆகியவை பிரிட்டீஷ் இந்திய நீதிமன்ற வழக்குகளின் பயனுள்ள ஆதாரங் களாகும். தத்தெடுத்தல் மற்றும் தத்தெடுத்த பையனின் உரிமைகள் பற்றிய சட்டங்கள் எளிமையாக்கப்பட்டுள்ளன என்பதில் சந்தேக மில்லை. மொத்தத்தில் பல்வேறு சமூகங்களுக்கிடையே திருமணங் கள் நடைபெறும் என்று நம்புகிறேன். தத்தெடுப்பது சம்பந்தமான அத்தியாயத்தின் பகுதியாக அது அமைந்துள்ளது, ஏனெனில் பல்வேறு சமூகங்களுக்கிடையே திருமண உறவுகள் சாத்தியம் என்று நீங்கள் சம்மதிக்கும்போது அது சட்டத்தின் பகுதியாக மாறுகிறது. எனவே ஒரு பையன் தத்தெடுப்பதற்குத் தகுதியானவனா என்பதைக் குறித்த இப்பொழுதுள்ள தடைகள் நிச்சயமாக நீங்கிவிடும். கோத்ரம் முறை மறையும் போது தத்தெடுப்பதற்கு சகோத்ரம் ஒரு தகுதி என்ற நிலை எப்படி இருக்க முடியும்? எனவே எளிய மற்றும் தர்க்க ரீதியான நடைமுறைக்கு கொடுப்பது மற்றும் பெறுவது மட்டுமே அவசியம் என்பதைக் காண வேண்டும். இந்த நிலைமைக்கு நாம் உடன்பட்டாக வேண்டும். முதல் அடி எடுத்து வைத்த பிறகு இரண் டாவது அடியை நிறுத்திவிட முடியாது. சட்டமன்றம் ஏற்கெனவே முதல் அடி எடுத்து வைத்துவிட்டது. எனவே அடுத்த அடி வைப்ப தற்குத் தயங்குவதில் அர்த்தமில்லை இந்தச் சூழ்நிலைகளில் தத்து எடுப்பது சம்பந்தமான அதிகாரத்தை அவை சாதகமாகப் பரிசீலிக்க வேண்டுமென்று சிபாரிசு செய்கிறேன்.

மசோதாவின் பிற பிரிவுகளை இப்பொழுது பார்க்கலாம். இதில் பொறுக்குக் குழு உறுப்பினர்களிடமிருந்து மாறுபட்டக் கருத் துக்களைக் கொண்டுள்ளேன். கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பு சம்பந்தமாக நடவடிக்கைகள் எடுக்கையில் இந்திய விவசாயத் துறையின் பிரச்சினைகள், அதன் எதிர்காலம், வணிகம் அல்லது வர்த்தகத்தைத் தங்கள் முக்கியப் பணியாகக் கொண்டுள்ள சமூகங் களின் பல்வேறு வணிக அமைப்புகள் இதில் முக்கியக் காரணக் கூறுகளாக உள்ளன என்பதைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். சில குறிப்பிட்ட குடும்பங்கள் சில குறிப்பிட்ட நிலங் களை பரம்பரை பரம்பரையாக நீண்டகாலமாக சொந்தமாகக் கொண்டிருப்பதை இந்தியாவின் கிராமப்புற வாழ்க்கை நிலைமை களுடன் அதிகம் தொடர்பு கொண்டுள்ளவர்கள் அறிவர். நீண்ட காலமாக இந்த நிலங்களில் விவசாயம் செய்ய குத்தகை உரிமை

அளிக்கும் முக்கியமான காரணமாக இது அமைகிறது. எனது மதிப் பிற்குரிய நண்பர் திரு. சந்தானம் கிராமப்புற வாழ்க்கையைப் பற்றிக் கூறியதிலிருந்து நான் முற்றிலும் மாறுபடுகிறேன். கூட்டுக் குடும்பம் உடைந்து கொண்டிருக்கிறது என்று கூறுவது சரியல்ல. இந்தியக் கிராமப்புற வாழ்க்கையுடன் எனக்கும் தொடர்புள்ளதை தெரிவித்துக் கொள்கிறேன். சென்னையில், சுமார் 40 ஆண்டுகள் வாழ்ந்திருந் தாலும் நான் ஒரு கிராமவாசிதான். இந்த ஆண்டுகளில் வருடத்திற்கு ஒரு முறை ஒரு மாதமாவது கிராமத்தில் தங்கியிருக்காத ஆண்டு களே இல்லை எனலாம். கிருஸ்துமஸ் நாள்களிலும் கோடை விடுமுறையிலும் கிராமங்களுக்குச் சென்று, கிராம மக்களுடன் கழிக்கிறேன். எனவே இந்தியாவின் கிராமப்புற வாழ்க்கை நிலைமை எனக்குத் தெரியும் என்று கூறுகிறேன். சென்னை மாகாண கிராமங் களின் வாழ்க்கை நிலைமை எனக்குத் தெரியும். புத்தகங்கள் மற்றும் கிராமக் குறிப்பேடுகள் வாயிலாக அல்லாது வேறுவகையில் இந்தியாவின் பிற பகுதியிலுள்ள கிராமப்புற வாழ்க்கை முறை பற்றி எனக்கு சிறிதளவே தெரியும். இந்தியாவின் கிராமப்புற வாழ்க்கை முறையைப் பொறுத்தவரையில் கூட்டுக் குடும்பமுறை உடைந்து வருகிறது என்ற கூற்றை ஏற்றுக் கொள்ள முற்றிலும் மறுக்கிறேன். அதே நேரத்தில் அதாவது ஒரு வம்சத்தில் பிறந்து வேறு கிளை களைச் சேர்ந்தவர்களைப் பொறுத்தமட்டில் முதல் தலைமுறைக்குப் பிறகு கூட்டுக் குடும்பங்கள் உடையும் போக்கு காணப்படுகிறது என்று என் நண்பர் திரு. சந்தானம் கூறுவதை நான் ஏற்றுக்கொள் கிறேன். முதல் தலைமுறையில் சிதையும் போக்குக் கணிக்கப்பட வில்லை. நிச்சயமாகத் தகப்பனார் உயிருடன் வாழும் வரை இது நிகழ்வதில்லை. தகப்பனார் இறந்து குழந்தைகளின் குழந்தைகள் தங்கள் கால்களில் நிற்க ஆரம்பித்தவுடன் கூட்டுக் குடும்பம் சிதைய ஆரம்பிக்கிறது. கொள்கை அடிப்படையில் செயல்படாமல், இன்றைய யதார்த்த நிலைமைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். அண்மைக்காலம் வரை நானே ஒரு கூட்டுக் குடும்பத் தின் உறுப்பினராக இருந்தேன். கூட்டுக் குடும்ப லட்சியங்களில் எனக்கு இன்றும் நம்பிக்கை உள்ளது. கல்வி போன்ற வாழ்க்கையின் சில அம்சங்களில் கூட்டுக் குடும்ப முறை நல்ல பலனளித்துள்ளது என நிச்சயமாகக் கருதுகிறேன். தங்கள் சகோதரர்கள் கல்வி கற்பதற் காக ஏழை சகோதரர்கள் பலர் பட்டினியால் வாடி இருக்கின்றனர். தங்கள் மருமகன்ளின் கல்விக்காக மாமன்மார்கள் பலர் பட்டினி யால் அவதிப்பட்டுள்ளனர். கூட்டுக் குடும்பத்தில் ஒரு விதமான வரையறைக்குட்பட்ட சோஷலிசம் நிலவி வந்தது. அதே நேரத்தில் எந்த அமைப்பும் நீண்ட காலம் நிலை நிற்க முடியாது. சமூக

முன்னேற்றத்திற்கு குறுக்கே நிற்க எந்த அமைப்பையும் நாம் அனுமதிக்கக்கூடாது. இந்தப் பிரச்சினையை எழுப்ப வேண்டிய தருணம் வந்து விட்டதா என்பதே இப்பொழுதுள்ள கேள்வி. கிராமங்களைப் பொறுத்தமட்டில் கூட்டுக் குடும்பம் உடைந்து வருகிறது என்ற கருத்தை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்தியா, கிராமங்களைக்கொண்ட நாடு என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். கிராமப்புற மக்கள் இன்னும் பெருமளவில் கூட்டுக் குடும்ப முறையையே பின்பற்றுகிறார்கள். கைம்பெண்களுக்கும் மருமகள்களுக்கும் உரிமை அளிப்பதன் மூலம் கூட்டுக் குடும்ப முறைக்கு ஏற்பட்ட தாக்குதல், நிலைமையில் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை. விவசாயம் சம்பந்தமில்லாத தொழில் துறைகளில் கூட வாணிபத்தைத் தங்களது முக்கியத் தொழிலாகக் கொண்ட சமூகங்கள் தங்களது குடும்பத் தொழிலாக வாணிபத்தையே தொடர்ந்து நடத்தி வருகிறார்கள். நாட்டின் என் பகுதியில் இவ்வாறு தான் நடைபெற்று வருகிறது. கடந்த நாற்பது ஆண்டுகளாக நாட்டுக்கோட்டை செட்டியார்களிடம் எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்து வருகிறது. கடந்த ஐந்து பத்தாண்டுகளாகத்தான் அவர்கள் கம்பெனிகளை நிறுவி வருகிறார்கள். வருமான வரி விதிகளிலிருந்து விடுபடுவதற்காகத்தான் வைசியர்களிடையேயோ, நாட்டுக் கோட்டை செட்டியார்களிடையேயோ அல்லது மார்வாரிகளிடையேயோ கூட்டுக்குடும்ப வாழ்க்கை முறை உடைகிறது என்று சொல்வது சரியல்ல, இந்தச் சட்டமன்றம், அல்லது நாடாளுமன்றத்தில் அமர்ந்துகொண்டு இந்தியாவின் மூலை முடுக்குகளில் உள்ள விஷயங்கள் பூராவும் நாம் அறிந்துள்ளோம் என்று எண்ணிக் கொண்டு அதன் அடிப்படையில் சட்டமியற்றுவதில் எந்தப் பயனும் இல்லை. நாம் பரிசீலிக்க வேண்டியதெல்லாம் நவீன நிலைமைகளுக்கு இது ஒத்திருக்கிறதா, மேலும் முன்னேற்றம் அடைவதற்கு இது தடையாக இருக்குமா என்பதுதான். கூட்டுக் குடும்பச் சட்டத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ள சில மாறுதல்களையும் நீங்கள் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். அண்மை ஆண்டுகளில் இறுக்கமான கூட்டு குடும்பச் சட்ட விதிகள் மிகவும் தளர்த்தப்பட்டுள்ளன. கூட்டுக்குடும்ப உறுப்பினர் ஒருவர் தன்னிச்சையான அறிவிப்பின் மூலம் கூட்டுக் குடும்பத்தில் இருந்து பிரிந்து செல்வது ஏற்கெனவே வழக்கத்திலுள்ள சட்டமாகிவிட்டது. இதற்காக எந்த நீதிமன்றத்திற்கும் செல்ல வேண்டிய அவசியமில்லை. கூட்டுக்குடும்பத்திலிருந்து விலகுவதற்கான விருப்பத்தைக் கூட்டுக் குடும்ப உறுப்பினர் ஒருவர் வெளிப்படுத்தினாலேயே கூட்டுக் குடும்பத்திலிருந்து பிரிவதற்கு அது போதுமானது. எனினும் பலர் கூட்டுக் குடும்ப

உறுப்பினர்களாக இருப்பதற்கு அவர்கள் இந்தக் குடும்ப முறையில் கொண்ட பற்றே காரணம். கூட்டுக் குடும்ப உறுப்பினர் குடும்ப சொத்தில் தன் பங்கை பராதீனப்படுத்த முடியும். தகப்பனார் மற்றும் மகனைப் பொறுத்தவரையில் தகப்பனாரின் கடனுக்கு முழுச் சொத்தும் பொறுப்பாகும். தகப்பனாரின் கடனுக்கு மகன் பொறுப் பாவான். தவறுதலான காரணங்களுக்காக தகப்பனார் கடன் பெற்றார் என்று மகன் தன் பொறுப்பைத் தட்டிக்கழிக்க முடியாது. இந்த மாதிரியான வழக்குகள் வெகு வேகமாகக் குறைந்து வருகின்றன. தவறுதலான காரணங்களுக்காகத் தகப்பனார் கடன் வாங்கினார் என்று கூறி இப்பொழுது தப்பிக்க முடியாது. மேலும் சுய சம்பாத்தியம் சம்பந்தமான சட்டமும் மிகவும் எளிதாக்கப்பட்டுள்ளது. சுயமாக ஒருவன் சொத்துச் சேர்த்தால் அதை அவனே அனுபவித்துக் கொள்ள லாம் என்று பிரிவி கவுன்சில் தீர்மானம் தெளிவாக்கியுள்ளது. எனவே எனது நண்பருக்கு, மாண்புமிகு சட்ட அமைச்சருக்கு நான் கூறிக்கொள்வதெல்லாம் இந்தக் கூட்டுக் குடும்ப முறை இன்றும் செயல்பாட்டிலிருக்கிறது. அடுத்த பதினைந்து, முப்பது, ஐம்பது ஆண்டுகளில் அது உடைந்து போகக்கூடும். திருமணம் மற்றும் இதர விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டத்தில் மாற்றம் ஏற்படுவதன் காரண மாக அது உடையக் கூடும். மக்களின் விருப்பமின்றி அவர்களின் ஒப்புதல் இன்றி மக்களின் பொதுவான உணர்வை கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் இந்தச் சட்டத்தை ஏன் எடுத்துக்கொள்ள வேண்டும்? இரு விஷயங்களைப் புரிந்து கொள்ளாத ஏதோ ஒரு பழங்காலப் பிறவி என்று என்னை நீங்கள் கருதலாம். காலத்தோடு இந்த நாடும் ஒழுகவேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன். என்னுடைய வேண்டுகோள் எல்லாம், மக்களின் விருப்பத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்பதுதான். ''சரி விவசாயச் சொத்துக்கள் சம்பந்தப்பட்டவரை அதில் கைவைக்க மாட்டோம். விவசாயம் சாராத சொத்துக்களில் மாற்றங்கள் செய்வோம்'' என்று வாதிக்கக் கூடும். இந்த மாதிரியான விஷயங்களில் இது ஒரு விதமான சொத்து, அது வேறுவிதமான சொத்து என்று வேறுபாடுகாணுவது எளிதான காரியமல்ல. விவசாயம் சாராத சொத்துக்கள் சம்பந்தப்பட்ட சட்டத்தில் மாற்றம் செய்தவுடன், விவசாயம் சம்பந்தமான சட்டத் திலும் மாற்றங்கள் அவசியமாகத் தொடரத்தான் செய்யும். யூனிய னுக்கும் மாகாண அரசுகளுக்கும் அளிக்கப்பட்டுள்ள சட்டமியற்றும் அதிகாரங்கள் விவசாய நிலங்களுக்கும் விவசாயம் சம்பந்தமற்ற நிலங்களுக்கும் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன. சில அதிகாரங் கள் மத்திய அரசுக்கும் சில அதிகாரங்கள் மாகாணங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது தற்செயலான நிகழ்வே. ஆனால் இந்து

வாரிசுரிமைச் சட்டம் இந்தியா முழுமைக்கும் ஒன்றானது என்பதை மறுக்கமுடியாது. வாரிசுரிமை என்பது வெட்டிக் குறைக்கக்கூடிய விஷயமல்ல. வாரிசுரிமையை கூறு போட்டுப் பிரிக்க முடியாது. எனவேதான் இந்தக் கேள்வியை பரிசீலிக்கும்போது விவசாய சொத்துக்கள் மற்றும் விவசாயம் சாராச் சொத்துக்கள் சம்மந்தமான இந்த எல்லா அம்சங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். சமூகத்தின் பொதுவான நலன்களைக் கருதி கூட்டுக் குடும்ப அமைப்பு முறையில் புரட்சிகரமான மாறுதல் கொண்டு வரத் தருணம் வந்து விட்டதா என்ற கேள்வியை நீங்கள் பரிசீலிக்க வேண்டும். இந்த மசோதாவின் சில அத்தியாயங்களை ஏன் ஒத்தி வைக்கக்கூடாது என்பதைப் பரிசீலிக்கும்படி எனது மாண்புமிகு நண்பர் சட்ட அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஐயா, இந்தக் கேள்வியின் வேறொரு அம்சமான மகன்கள் மற்றும் மகள்களின் பிதுரார்ஜித சொத்துரிமை சம்மந்தமாகப் பேச விரும்புகிறேன். நேரடியான சொத்துரிமை சம்மந்தமானது அது. எனக்கு மகன்களும் மகள்களும் இருப்பதால் அதைப் பற்றிப் பேச எனக்கு விசேஷமான உரிமையுள்ளது. விசேஷ உரிமையுள்ளது என்பதை மீண்டும் கூறுகிறேன். உண்மையில் பெரும்பான்மை யினர் பெண்கள்தான், நான்கு மகள்களும் மூன்று பையன்களும் உள்ளனர். எனவே இந்த விஷயம் குறித்து எனக்குப் பேச விசேஷ உரிமை உள்ளது. வழக்குரைஞர் என்ற முறையில் நான் கொஞ்சம் அறிந்தது போக மகன்கள் மற்றும் மகள்களைப் பெற்ற தகப்பனார் என்ற முறையில் எனக்குப் பேச விசேஷ உரிமை உள்ளது. (ஆரவாரம்) இந்தப் பிரச்சினை குறித்துப்பேசும் போது இந்து குடும்பத்தின் பொதுவான கட்டமைப்பைப் பார்க்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். மூன்று மகன்கள் சொத்தை ஒன்றாக வைத்துக் கொண்டு கூடி வாழ்வது கடினமென்று நீங்கள் கருதினால் வெவ்வேறு சாதிகளை, ஏன், சமூகங்களைச் சேர்ந்தவர்களை மணம் செய்து கொண்ட மகள்கள் ஒன்றாக கிராமத்தில் கூட்டு விவசாயம் செய்ய முடியும் என்று எதிர்பார்க்கிறீர்களா? இந்தச் சூழ்நிலைகளில் தகப்ப னாருடைய சொத்தும் மகன்களது சொத்தும் எந்தவித வேறுபாடு மின்றி மகன்களுக்கும் மகள்களுக்கும் சமமாகப் பிரித்து அளிப்பது தேசத்தின் பொதுவான நலனுக்கு நல்லதா? கேள்வி நீதி சம்பந்தப் பட்டது என்றால், சமத்துவம் சம்பந்தப்பட்டது என்றால், கொள்கை ரீதியான சமத்துவம் சம்பந்தப்பட்டது என்றால் அதற்கு எதிராக நான் ஒன்றும் கூறப் போவதில்லை. ஆனால் சட்டம் எப்பொழுதும் தர்க்கரீதியானதல்ல. அது எப்பொழுதும் முரண்பாடானது என்று

அதற்கு அர்த்தம் அல்ல. ஆனால் அது சமுதாயத்தின் சமூகத்தரம், சமுதாயத்தின் உணர்வுகள், குடும்ப வாழ்க்கை மற்றும் இதர விஷயங்களின் மீதான அதன் தாக்கத்தையும் அது கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. நீங்கள் எழுதுவதற்கு உங்களிடம் இருப்பது எதுவும் எழுதப்படாத சுத்தமான கரும்பலகை அல்ல. எனவே ஓர் இந்து குடும்பத்தில் என்ன நடக்கிறதென்று பார்ப்போம். திரு. சந்தானம் டில்லியிலிருந்து விருப்பு வெறுப்பின்றி பார்வையிட்டுக் கொண்டிருக்கிறார். ஒரு சகோதரன் வீட்டில் திருமண நிகழ்ச்சி ஏதாவது நிகழ்ந்தால் அதில் சகோதரியும் மகளும் முக்கியப் பங்கு வகிக்கிறார்கள். அது தகப்பனாரின் வீடாகக் கருதப்படுகிறது. குடும்ப வீட்டை தனது வீடாக மகன் கருதுகிறான். குடும்பத்தில் (வீட்டு நிர்வாகத்தில்) சகோதரியும் மகளும் எவ்வளவு முக்கியமான பங்கு வகிக்கிறார்கள் என்பதை நாம் எல்லோரும் அறிவோம். தகப்பனாரும் தாயாரும் அமர்ந்திருக்கும்போது ஆரத்தி கொண்டு வருபவர்கள் மகளாகவும் சகோதரியாகவுந்தான் இருப்பார்கள். மகள்களுக்கும் சகோதரிகளுக்கும் அந்த நேரத்தில் நாம் பரிசளிக்கிறோம். எப்படி இருப்பினும் நாமெல்லோரும் இந்துக்கள். நீங்கள் அதை மறந்துவிட முடியாது. குடும்பத்தில் சகோதரியோ அல்லது மகளோ தான் பரிசு பெறும் முதலாவது நபராக இருப்பார்கள். இரண்டாவது விஷயம் என்னவென்றால் மகள்களுக்கும் சகோதரிகளுக்கும் பரிசுப் பொருள்கள் ஏற்பாடு செய்யாத எந்தத் திருமணமும் இந்துக் குடும்பங்களில் நடைபெறாது. மேலும் குழந்தை பெறுவதில் அக்கறை இல்லாதவர்கள் இதை ரசிக்காவிட்டாலும் சீமந்தம் போன்ற ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் அல்லது முதல் தடவையாக இரண்டாவது தடவையாக கருவுற்றிருக்கும்போதும் குடும்பத்திலுள்ள மகள்கள் அரவணைக்கப்படுகிறார்கள். பொதுவாக பெண் தன் தகப்பனார் வீட்டிற்கோ சகோதரனின் விட்டிற்கோ பிரசவத்திற்கு செல்கிறாள். இரண்டு மூன்று குழந்தைகள் பிறந்த பின்பே அவள் தகப்பனார் வீட்டிற்கோ, சகோதரன் வீட்டிற்கோ பிரசவத்திற்குச் செல்வதில்லை. இதுதான் இன்றைய இந்து குடும்பத்தின் வாழ்க்கை முறையாக உள்ளது. டில்லியில் உள்ள வாழ்க்கை முறையோ, கல்கத்தாவின் வாழ்க்கை முறையோ, மெட்ராஸிலுள்ள வாழ்க்கை முறையோ இந்த மாதிரி விஷயங்களில் வழிகாட்டும் நெறியாக இருக்க முடியாது. இந்தியா முழுவதிலுமுள்ள கிராமங்கள் ஒவ்வொன்றிலும் உள்ள சாதாரண வாழ்க்கை முறைதான் அது. (ஆரவாரம்) துணை சபாநாயகரை நோக்கிப் பேசினாலும் இந்த விஷயங்களைக் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இந்த அவையின் உறுப்பினர்கள் ஒவ்வொருவரையும் மிகவும் பணிவுடன்

கேட்டுக்கொள்கிறேன். தகப்பனாருக்கு எதிராக தகப்பனாரையும் மகனுக்கு எதிராக மகனையும் சகோதரனுக்கு எதிராகச் சகோதரனையும் எதிர்க்கச் செய்வேன்'' என்பது போன்று பைபிளில் வருகிறது. ஒரு குடும்பத்தின் உறுப்பினர்களிடையே கொடிய பகைமையை நம் சட்டம் உருவாக்கிவிடலாகாது. இது தேவையற்ற ஒரு கலகத்தைக் கிளப்பிவிடும். சொத்துரிமை இருக்கும் வரையில் கொஞ்சம் தகராறுகள், பகைமை இருக்கத்தான் செய்யும்.

நம் நாட்டில் போட்டி பூசல்களுக்குக் காரணம் சொத்துதான் என்று ஆதிசங்கரரே எடுத்துரைத்துள்ளார். அது தவிர்க்க முடியாதது. சகோதரனுக்கு எதிராகச் சகோதரனையும், சகோதரனுக்கு எதிராகச் சகோதரியையும், சகோதரிக்கு எதிராகச் சகோதரனையும் கிளப்பி விட்டு இந்த வகையில்தான் இன்றைய இந்தியாவின் குடும்ப வாழ்வை உருவாக்குவோம் என்று குடும்பத் தகராறுகளுக்கு உரம் போடக்கூடாது. வயது வந்த பிறகு தங்கள் திருமணங்களைப் பெண்கள் தாங்களே ஏற்பாடு செய்யும் காலம் வரலாம். இப்பொழுது பல சகோதரிகள் தங்கள் திருமணத்திற்கு சகோதரர்களையே சார்ந்திருக்கிறார்கள். ஏதாவது திருமணத்திற்கு உதவி கேட்டு ஒரு தகப்பனாரோ சகோதரனோ என்னைச் சந்திக்காத வாரம் ஒன்றுகூடக் கழிவதில்லை. இந்த மாதிரியான வேண்டுகோள்களை அனுதாபத்துடன் கவனிக்கும் நான் ஒரு பழமைவாதியாக இருக்கலாம். ஆனால் இதுதான் இந்துக்களின் வாழ்க்கை முறை. நான் ஆங்கில வாழ்க்கை முறைப்படி கல்வி கற்றவனாகக் கருதப்படுபவன். அப்படியிருக்கையில் என்னைப் போல் படிக்காதவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? நீங்கள் அதிகம் முன்னேறியவர்களாக இருக்கலாம். நான் குறைந்த அளவு முன்னேற்றம் அடைந்தவனாக இருக்கலாம். ஆனால் நான் இந்திய மண்ணில் பிறந்தவன் என்றும் என்னுடைய சிந்தனைகள் யாவும் இந்திய மண்ணில் வேர்விட்டுள்ளன என்றும் கூறிக் கொள்கிறேன். இந்திய வாழ்க்கையின் சிறப்பியல்புகளான இந்த சிறந்த நன்னெறிகளைக் காப்பாற்றவேண்டுமென்று உங்களை இறைஞ்சுகிறேன். (ஆரவாரம்) நவீன சிந்தனை ஓட்டங்களுக்கு எதிராகவோ, அல்லது முற்போக்கு எண்ணங்களுக்கு எதிராகவோ நான் செல்ல விரும்பவில்லை. தேசிய வாழ்க்கை மற்றும் இன்றைக்கு செயல்படும் சமூக நீரோட்டங்களில் நாம் அக்கறை கொண்டிருப்பது நமது கடமையானாலும், அதே நேரத்தில் இந்தியா முழுவதையும் நாமே பிரதிநிதித்துவப் படுத்துகிறோம் என்று கற்பனை செய்து கொள்வது பயனற்றது எனலாம். படித்த பெண்களிடையே கூட எல்லோரும் ஒரே விதமாகச் சிந்திப்பதில்லை என்று நான் கூற

முடியும். நமது சட்டமன்றத்திலுள்ள பெண்கள் கூட மரியாதைக்குரிய வேறு பல படித்த குடும்பப் பெண்களிலிருந்து மாறுபட்டு சிந்திக் கிறார்கள். சில விஷயங்களில் அவர்களின் சிந்தனை மாறுபடுகிறது.

**திருமதி ரேணுகா ரே:** (மேற்கு வங்காளம், பொது) : நமது குடும்பங்கள் பெருமைக்குரியவைகள் இல்லையா?

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** அவை மிகவும் பெருமைப்படத்தக்கவை. நீங்கள் குறுக்கீடு செய்ததில் எனக்கு மகிழ்ச்சிதான். இதற்குப் பழக்கப்பட்டவன் நான். அவைகளும் அதே போன்று பெருமைக்குரியவைகள்தான். ஆனால் சில மதிப்பிற்குரிய மனிதர்கள் சில விஷயங்களில் மிக முன்னேற்றக் கருத்துகளை கொண்டிருப்பதுடன் பழைமை வாதிகளாகவும் இருப்பதுபோல் அவையும் உள்ளன. நான் என் கருத்துகளைத் தெரிவித்துவிட்டேன். நான் மதிப்பிற்குரியவன் என்பதை நிச்சயமாக நம்புகிறேன். மற்ற வர்கள் எந்த அளவுக்கு மதிப்புமிக்கவர்களோ அந்த அளவுக்கு நானும் மதிப்புக்குரியவன்தான். ஆனால் என் வாழ்க்கை முறை, என் சிந்தனையோட்டம், இந்தப் பிரச்சினைகள் குறித்த என் கண் ணோட்டங்கள் எனக்குச் சமமாக மதிப்பிற்குரியவர்களிடமிருந்து மாறுபட்டுள்ளன. ஏனெனில் நான் வேறுவிதமாக வளர்க்கப்பட் டவன். உதாரணமாக, நமது பிரதமரிடம் அதிக மரியாதை வைத் திருப்பவன், சில விஷயங்களில் அவருக்கு விட்டுக் கொடுக் கிறேன். அதே நேரத்தில் எனது பெருமதிப்பிற்குரிய நண்பர், நமது பிரதமரை அப்படி அழைக்கலாமென்றால் எனது பெருமதிப்பிற் குரிய நண்பரின் நோக்கில் சில பிரச்சினைகளை என்னால் பார்க்க முடியாது. அது வெறும் அணுகுமுறைதான்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்** (போக்குவரத்து மற்றும் ரயில்வே துறை அரசாங்க அமைச்சர்) : உங்களுடைய உண்மையான தீர்மானந்தான் என்ன?

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** அவர் தம் கருத்துகளை அழகாக எடுத்துரைத்துக் கொண்டிருக்கிறார்.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** அதைக் குறித்து நான் வெட்கப்படவில்லை. மணமாகாத மகள்களைப் பற்றியதுதான் என் கேள்வி. அவர்கள் திருமணத்திற்காக விசேஷ விதி ஏதாவது

கொண்டு வருவதா அல்லது பெண்களின் திருமணத்திற்காக விசேஷ பங்கு ஏதாவது ஒதுக்குவதா என்பதுதான் என் கேள்வி. மகள்கள் தாயாரின் சொத்துக்களையும் மகன்கள் தகப்பனார்களின் சொத்துக் களையும் வாரிசுரிமையாகப் பெறச் சட்டம் வழி வகுக்கலாம். மகள் களைப் பொறுத்தமட்டில், திருமணம் ஆகாதவர்களுக்கு விசேஷ விதி ஒன்று கட்டாயமாக இயற்றப்பட வேண்டுமென்பதை ஏற்றுக் கொள்வதுடன் அதில் மிகவும் ஆர்வமாகவும் உள்ளேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** தாயாரிடமிருந்து வரும் பணத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** அதைப் பற்றிப் பேசு வதில் பயனில்லை. இந்த நாட்டில் வருமானவரி கட்டும் நபர்களின் எண்ணிக்கையைக் கணக்கெடுத்துப் பாருங்கள்? அதிகம் பேர் இருக்க மாட்டார்கள். இது ஒரு பஞ்சத்தால் வாடும் நாடு. எனவே தாயாருக்கு எந்தச் சொத்தும் இல்லை என்று கூறுவது பயனில்லை. பலர் ஏழை களாகவே உள்ளனர். அவர்களுக்குச் சொத்து இல்லாவிட்டாலும், சமூகப் பொறுப்புகளிலிருந்து அவர்கள் தப்ப முடியாது. சொத்து உள்ளவர்கள் அதைப் பிரித்துக் கொடுக்கலாம், சமூக மற்றும் குடும்பப் பொறுப்புகளை நிறைவேற்றுவதில் உணர்ச்சிபூர்வமிக்க, சொத்தில்லாதவர்கள் அல்லது குறைந்த சொத்துள்ளவர்கள் மீது இது பெரும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடும். எனவே, நீங்கள் எடுக்கும் எந்த நடவடிக்கையிலும், சமூகப் பொறுப்புகளில் பின்னடைவு ஏற்படாது கவனித்துக் கொள்ள வேண்டும். இதைப் பொறுத்த வரையில் நான் உங்களிடம் மிகவும் கேட்டுக்கொள்வது இதுதான்: என் மதிப்பிற்குரிய நண்பர் டாக்டர் அம்பேத்கரிடமிருந்து நான் மாறுபட்ட கருத்துடையவன். மிக அரிதாகவே நான் அவருடன் கருத்துவேறுபாடு கொள்கிறேன். அவருடைய தாக்கம் எனக்கு அடிக்கடி ஏற்படுவதுண்டு. சில சமயங்களில் என்னுடைய பாதிப்பும் அவருக்குண்டு. நான் தெரிவித்துள்ள சில விமர்சனங்களை அவர் அக்கறையுடன் கவனிப்பார் என்பதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை. அவர் பிடிவாதக்காரர் போல் தோற்றமளிப்பார். ஆனால் நியாயத்திற்குக் கட்டுப்படுவதில் அவர் போல் யாருமில்லை. அவரை நான் நன்கு அறிவேன். இந்த மூன்றாண்டுகளாக அவருடன் நெருங்கிப் பழகியதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன். கூட்டுக் குடும்ப முறை, மகன்களுக்கும் மகள்களுக்கும் சமமான வாரிசுரிமை சம்பந்தமான என் கருத்துகள் இவையே.

அடுத்த அம்சமான சீதனச் சொத்துகளைப் பார்ப்போம். அதைப் பொறுத்தவரையில் பராதீனப்படுத்துவதற்கான எல்லாக் கட்டுப்பாடுகளையும் நீங்கள் நீக்குவதாக இருந்தால் இந்த அவை யுடன் இந்த அவையிலுள்ள எல்லா உறுப்பினர்களும் கொண்டுள்ள கருத்தை ஏற்றுக்கொள்கிறேன். விதவை ஒருவர் செய்த பராதீனம் செல்லாது என்று அறிவிப்பதற்காக பின்னடைவு வழக்குகள், ஒவ்வொரு நீதிமன்றமாக அலைந்துதிரிதல், பல்வேறு சாட்சிகளை யும் தயார் செய்தல், தேவையற்ற வழக்குகள் ஆகியவைதான் இதன் பலன்கள். அநாவசியமான வழக்குகளைத் தவிர்ப்பதற்காகவாவது ஒரு விதவ்வ தன் வாழ்நாளில் தன் சொத்துகளை பராதீனம் செய்ய அதிகாரம் அளிக்குப்பட வேண்டும் என்பதே என் கருத்து. ஆனால் எல்லாவித சீதனச் சொத்துக்களையும் இவ்வாறுதான் பராதீனம் செய்யவேண்டுமென்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அதை சீதனச் சொத்து என்கிறீர்கள்; அத்துடன் வாரிசுரிமையைப் பொறுத்தவரை யில் சில நிபந்தனைகளை விதித்துள்ளீர்கள். முழு உரிமைச் சொத்து என்று ஆக்கிய பிறகு அது ஏன் வாரிசுகளைச் சென்றடையக்கூடாது? அதுதான் இப்பொழுதுள்ள கேள்வி. நான் சந்திக்கும் தொண்ணூற்
றொன்பது சத இந்துக்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்கத் தயாரா
இருக்கிறேன். விதவை ஒருவர் தமது கணவரிடமிருந்து இற
குரிமையாகப் பெற்ற சொத்து இது. அது ஒரு முழுஉரிமை பெற்
சொத்து. அந்த விதவை இறந்த பிறகு அந்தச் சொத்தை அளி
கணவனின் தாயார் மற்றும் தகப்பனாருக்கு அந்தச் சொத்து செல்வ
விட அவளுடைய தகப்பனாருக்கும் தாயாருக்கும் அது ஏன்ே
கூடாது? இது என் கேள்வி. இந்த நாட்டில் எந்தப் பகுதியில் வே
மென்றாலும் இது சம்பந்தமாகக் கருத்துக் கணிப்பு நடத்தி
அதன் முடிவு எப்படியிருக்கும் என்பது எனக்குத் தெளி
தெரிகிறது. என் கருத்துக்கு மாறாக இந்தக் கருத்துக் கணி
விடை இருக்குமா என்று இந்த அவைக்கு சவால் விடுகி
எனவே ஒருவித சொத்து ஒரு வகை வாரிசுகளுக்கும் இன்
சொத்து இன்னொரு வகை வாரிசுகளுக்கும் சேரக்கூடிய முழு
பெற்ற இரண்டு வகைச் சொத்துகள் இருக்க முடியும
கேள்வியை வழக்குரைஞர் என்ற முறையில் என்னிடம் ே
ஒரு சீரான நிலைமையை உருவாக்க இருவகை சொத்துக்
ஒரேவித வாரிசுரிமையை ஏன் கொடுக்கக்கூடாது? சமூ
களை தர்க்கரீதியானதென்ற பலிபீடத்தில் பலியிட்டு வி
சட்டம் எப்பொழுதும் தர்க்கரீதியானதாக இருக்க வேண்ட
சட்டம் தர்க்கரீதியானதாக இருக்க வேண்டிய அவசிய
சட்டத்தின் சாரம் தர்க்கமல்ல.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** பொதுவாக சட்டம் தர்க்க ரீதியானதாக இருக்க முடியாதா?

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** சட்டம் தர்க்கரீதியானதாக இருக்க வேண்டியது அவசியமில்லை என்பதே என் நண்பர் சந்தானத்துக்கு நான் அளிக்கும் பதில். அது ஏனெனில், சட்டம் என்பது சமுதாயப் பரிணாம வளர்ச்சி மற்றும் சமூக நேரமைவுகளின் விளைவுதான். எனவே அது எப்படி தர்க்க ரீதியானதாக இருக்க முடியும்? ஒரு குறிப்பிட்ட திட்டம் அல்லது நியமத்தின்படி சமுதாயம் இயங்குவதில்லை. துரதிர்ஷ்டவசமாக கம்யூனிஸ்டு சமுதாயங்களைத் தவிர மற்ற சமுதாயங்கள் இந்தப் பாதையில் செல்வதில்லை. எனவே, இந்தச் சூழ்நிலைகளில் ஒரு சராசரி இந்துவின் உணர்வுகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு வகையான சீதனச் சொத்திற்கும் மற்றொரு வகைக்கும் வேறுபடுத்திக் காட்டுவது தர்க்கரீதியானது அல்லஎன்று கூறுவது பயனில்லை. ஏன் அந்த சீதனச் சொத்து திரும்பவும் கணவனின் உறவினர்களிடமே சேர வேண்டும்? ஏன் அவளுடைய வாரிசுகளுக்குப் போகக்கூடாது? மசோதாவில் கூட இந்த வழிமுறைதானே செய்யப்பட்டுள்ளது. னவே பெண்களின் சொத்துகளைப் பொறுத்தவரையில் மாண்பு கு சட்ட அமைச்சர், மசோதா சட்டம் ஆவதற்கு முன், மக்களின் பாதுவான உணர்வுகளுக்கும், எதிர்பார்ப்புகளுக்கும் ஏற்ப இந்த ஷயத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வார் என்று நினைக் றேன். அண்மைக் காலம் வரை பராதீனம் செய்யும் அதிகாரம் வைகளுக்கு இருக்கவில்லை. ஒவ்வொருவரும் ஒரு சொத்தை ரிமையாகப் பெறும்போது அவன் அல்லது அவள் தம் வாரிசு ன் பரம்பரையை ஏற்படுத்துகிறார் என்ற கோட்பாட்டின் அடிப் யில், மரபுரிமையாகப் பெறப்படும் எல்லா சொத்துக்களும் விதமாகக் கையாளப்பட வேண்டாமா என்பதே கேள்வி. கள் சொத்தைப் பொறுத்தவரையில் இதுதான் என் வேண்டு . தர்க்கரீதியானவை என்ற ஆதாரத்தை இதுகாறும் தவிர்த்து ளேன்.

யா, கடைசியாக இன்னும் சில வார்த்தைகள் கூறலாமென் ரத்து வாரிசுகளைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். மசோதாவைவிட இப்பொழுது அளிக்கப்பட்டுள்ள விதிகள் ன்னேற்றகரமானவைகள் எனக் கருதுகிறேன். **தாயபாக** ருந்தும் வேறு சில நடைமுறைகளிலிருந்தும் சில விதி சாதா எடுத்துக் கொண்டுள்ளது. தூரத்து வாரிசுகளைப்

பொறுத்தமட்டில் மூல மசோதாவை விட இன்றைய நிலையிலுள்ள மசோதா மிகுந்த முற்போக்கானதாக எனக்குத் தோன்றுகிறது. இங்கும் அங்கும் ஏதாவது குறைபாடுகள் இருந்தால் அதை வெகு எளிதில் சரிசெய்து கொள்ள முடியும்.

காப்பாளர், வாழ்க்கைப் பொருளுதவி பற்றிய அத்தியாயங் களும், இதர அத்தியாயங்களும் பரந்த நோக்குடனும், முற்போக்கு உணர்வுடனும் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த அவையில் முழு மன துடனான ஆதரவு அதற்கு அளிக்கப்பட வேண்டும். இங்குமங்குமாக சில மாற்றங்கள் தேவைப்பட்டாலும், இந்த நடவடிக்கைகளின் பிற்பகுதியில் அதை எளிதாக நிறைவேற்றிக்கொள்ள முடியும். மாண்புமிகு சட்ட அமைச்சர் மற்றும் பிரதமரும் இக்காலத்தின் முற்போக்கு சிந்தனை ஓட்டங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டு பொது மக்களின் கருத்துகளுக்குச் செவிமடுப்பார்கள் என்ற முழு நம்பிக்கையுடன் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் கொண்டுவந்துள்ள தீர்மானத்தை ஆதரிப்பதுடன் இந்த மசோதாவை இரண்டாவது வாசிப்புக்கு சமர்ப்பிக்கிறேன்.

*டாக்டர் பி.கே. சென் (பீகார், பொது) : ஐயா அவையின் அலுவல் நேரம் மிகக் குறைவாக இருப்பதால் நான் சுருக்கமாகப் பேச வேண்டுமென்பதை நன்கு உணர்ந்துள்ளேன். அதே நேரத்தில் எனக்கு முன்பு பேசிய எனதருமை நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ண சாமி அய்யர் எழுப்பிய சில கருத்துகளுக்க பதிலுரைக்க வேண்டி யுள்ளது. மசோதாவில் கொடுத்துள்ள வரிசைப்படி அவர் விஷயங் களை எடுத்துரைத்தார். முதலில் அவர் திருமணச் சட்டத்தை எடுத்துக் கொண்டார். அதற்கு ஆதரவாகப் பேசினாரா அல்லது எதிர்த்துப் பேசினாரா என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை நான் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும். அந்தப் பிரிவைப் பற்றிப் பேசுகையில் தம் பேச்சின் ஒரு பகுதியில் அந்த விஷயத்தைப் பற்றி தமக்கு ஒரு தீர்மானமான கருத்தெதுவும் இல்லை என்று கூறினார். திருமணம் மற்றும் விவாகரத்து சம்பந்தமான சட்டத்தைப் பொறுத்தமட்டில் ஒவ்வொருவரும் ஒரு தீர்மானமான கருத்தைப் பெற்றிருக்க வேண்டும். வேறு எந்தச் சட்டத்தையும் விட திருமணச் சட்டத்தைக் குறித்துத் தான் ஒரு தீர்மானமான கருத்து இருக்க வேண்டும். ஏனெனில் திருமணத்தை நடத்துபவர்களை மட்டும் அது பாதிக்கவில்லை.

* அ.நி.வி. (சட்ட) டி., தொகுதி IV, பாகம் II, 13 டிசம்பர் 1949 பக்கம் 519-527.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் :** ஐயா, நீங்கள் புரிந்து கொள்ளும்படி நான் பேசினேனா என்று எனக்குத் தெரியவில்லை. நமக்கு எழுதுவதற்கு சுத்தமான கரும்பலகை ஒன்று இருந்தால் நாம் வேறுவிதமாகச் செயல்பட்டிருப்போம் என்றுதான் நான் கூறினேன். ஏற்கெனவே இந்த அவை எடுத்துள்ள நடவடிக்கைகளையும் இயற்றப்பட்ட சட்டங்களையும் கணக்கிலெடுத்துக் கொண்டால், திருமணம் சம்பந்தமான பகுதிகளைப் பொறுத்தவரையில் எந்தவித முக்கியமான ஆட்சேபனைகளும் இருக்க முடியாது. திருத்தங்கள் செய்ய வேண்டிய ஒன்றிரண்டு விஷயங்களை என் உரையில் குறிப்பிட்டுள்ளேன்.

**டாக்டர் பி.கே. சென் :** சமயச் சடங்குகளின் அடிப்படையிலான திருமணங்களைத் தவிர்த்து என்று நினைக்கிறேன்.

திருமணச் சட்டம் எல்லா அம்சங்களிலும் முற்றிலும் திட்டவட்டமானதாகவும் வெளிப்படையானதாகவும் இருப்பதுடன் எந்தவித ஐயப்பாட்டிற்கும் இடமளிக்காததாகவும் இருக்க வேண்டும் என்ற காரணத்தினால், சமயச் சடங்குகளின் அடிப்படையில் நடக்கும் திருமணங்களைக் குறித்துச் சில ஆட்சேபனைகள் எழக்கூடும் என்பதை இந்த மசோதா கணக்கிலெடுத்துக் கொண்டுள்ளது என்று நினைக்கிறேன். சில முறைகேடுகள், சில விடுதல்கள், ஏதாவது ஒரு குறிப்பிட்ட சடங்கு நிறைவேற்றப்படாமலிருத்தல் போன்றவை வலியுறுத்தப்படலாம். உதாரணத்திற்கு சப்தபதி சடங்கை எடுத்துக் கொள்ளுங்கள். அது ஒரு முக்கிய அங்கம் என்பது எல்லோருக்கும் தெரியும். ஏழு காலடிகள் எடுத்து வைத்த பிறகே திருமணம் செல்லுபடியானதாகக் கருதப்படும். உண்மையில் எல்லாவித முறைகேடுகளும் திருமணத்திற்கு எதிரான ஆட்சேபமாக வலியுறுத்தப்படும். இக்காரணத்திற்காகத்தான் ஏதாவது சமயச் சடங்குகளின் அடிப்படையில் திருமணம் நடைபெறும் சந்தர்ப்பங்களில் கூட அத்திருமணத்தை ஒரு தரப்பினர் பதிவு செய்ய மசோதாவில் வழிவகை செய்யப்பட்டுள்ளது. ஏனெனில் பின்னால் திருமணத்தின் செல்லுந்தன்மை குறித்து கேள்வி எழக்கூடாது என்பதற்காகத்தான். இது மிகவும் அவசியம் என்று நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனெனில் அது மணம் செய்து கொண்ட இரு தரப்பினரை மட்டும் பாதிப்பதில்லை, அடுத்த தலைமுறையையும், பிறக்காத தலைமுறையையும் அது பாதிக்கிறது. அதன் சட்டத் தன்மை இதைப் பொறுத்துத்தான் உள்ளது. எந்தவித முறைகேடுகள் நடந்திருந்தாலும் குழந்தைகள் பிறப்பின் சட்டத்தன்மை மற்றும், அவர்களின் வாரிசுரிமையைக்

காப்பாற்றவும் சில வழிமுறைகள் வேண்டும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அது குழப்பத்தில் போய் முடிந்துவிடக்கூடாது. இதில் எந்தவித கஷ்டமும் இருக்க முடியாது. சமயச் சடங்குகள் அடிப்படையிலான ஒரு திருமணத்தைச் செல்லுபடியானதாகக் கருதுவதற்கு எந்தச் சடங்குகள் அவசியமானவை என்பதை தெரிந்துகொள்ள வழிகள் உள்ளன. இதுகூட மசோதாவில் கொடுக்கப்பட்டுள்ளது. அதாவது ஒரு குறிப்பிட்ட பகுதியில் திருமணத்திற்கு சில குறிப்பிட்ட சடங்குகள் அவசியம் என்றால் அதுவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய சந்தர்ப்பங்களில் அந்தச் சடங்குகளே அந்தத் திருமணத்தின் செல்லுபடியாகும் தன்மையை நிருபிக்கிறது. இருப்பினும் இந்தச் சடங்குகளில் சில நிறைவேற்றப்பட்டிருக்கலாம், குறிப்பிட்ட முறையில் அந்த சடங்குகள் நிறைவேற்றப்படாமல் இருக்கலாம். இந்நேரத்தில் என்ன நிகழக்கூடும்? சட்டத்தின் முன் முறைகேடான குழந்தைகளைப் பெற்றவர் என்ற நிலையில் திருமணமான தம்பதிகள் தள்ளப்பட வேண்டுமா? இந்தக் காரணத்திற்காக மட்டுமே திருமணத்தை சட்டத் தன்மையுள்ளதாகச் செய்ய, அதைப் பதிவு செய்ய தரப்புகளுக்கு வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது.

அடுத்தபடியாக பொதுமக்கள் கருத்து என்ற கேள்விக்கு வருவோம். பெரும்பான்மையான பொதுமக்கள் இந்த மசோதாவைப் பற்றிப் போதிய அளவு தெரிந்து கொள்ளாதிருப்பதைக் குறித்துப் பேசுகிறேன். ஏன் இந்த அவசரம், ஏன் ஓராண்டு, இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் காத்திருக்கக்கூடாதா என்ற கேள்வி அடிக்கடி இங்கு எழுப்பப்பட்டுள்ளது. நாம் ஏற்கெனவே போதுமான அளவு காத்திருந்தாகிவிட்டது. ஏன் இன்னும் சிறிது காலம் நாம் காத்திருக்கக் கூடாது? இந்து தொகுப்பு சட்டத்தைத் தயாரிக்கத் தேவைப்பட்டது பதினோரு ஆண்டுகள், அதன் பிறகு கடந்து சென்ற இரண்டு ஆண்டுகள் என்பதல்ல பிரச்சினை. கடந்த நூற்றாண்டிலிருந்தே இது துவங்கிவிட்டது.

1872-ஆம் வருடத்திய III-ஆவது சட்டத்தை அவையின் நினைவுக்குக் கொண்டு வருகிறேன். 1868-ல் வங்காளத்தின் புகழ்பெற்ற சமூகச் சீர்திருத்தவாதி கேஷப் சந்தர் சென்னின் முன்முயற்சியில் சர் ஹென்றி மெய்ன் சட்டமன்றத்தில் முதன் முதலாக சிறப்புத் திருமணச் சட்டத்தைக் கொண்டுவந்தார். உண்மையில் மீண்டும் பின்னோக்கிச் சென்றால் கடந்த நூற்றாண்டின் ஐம்பதுகளில் விதவை மறுமண மசோதா சட்ட மன்றத்தில் விவாதத்தில் இருந்தது.

மாமனிதர் ஈஸ்வர சந்திர வித்யாசாகர் இந்து விதவைகள் மறுமணச் சட்டத்திற்கு பொது மக்களின் ஆதரவைப் பெற பெரும்பாடு பட்டார். அந்த நேரத்தில்தான் நாநூறு பிரமுகர்கள் கையெழுத் திட்ட முக்கியமான விண்ணப்பம் ஒன்று சட்டமன்றத்துக்கு அனுப்பப் பட்டது. தாங்கள் வைதீக இந்துக்கள் என்றாலும் ஒரு குறிப்பிட்ட ஜாதியில் தங்களைச் சிறைப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை யென்றும் ஜாதிகளுக்கிடையேயான திருமணங்களை ஆதரிப்பதாக வும், ஒருதார திருமணத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் என்றும், ஒரு தூய்மையான இந்து மதத்திற்கு சில சடங்குகள் மிகவும் அவசியம் என்றும், இதர சடங்குகளை விட்டு விடலாம் என்றும் விண்ணப் பத்தில் குறிப்பிட்டிருந்தனர். எனவே இந்து விதவை மருமணச் சட்டத்தின் விரிவான இந்து திருமணச் சட்டம் ஒன்று நிறைவேற்றப் படவேண்டுமென்றும் சட்டமன்றத்தைக் கேட்டுக்கொண்டது. இந்தத் திருமணச் சட்டத்தில் ஜாதிகளுக்கிடையேயான திருமணங்களுக்கு வகை செய்ய வேண்டுமென அது வலியுறுத்தியது. இது 1856-ஆம் ஆண்டை ஒட்டி நடைபெற்றது. சரியான பிரதிநிதித்துவம் பெற்ற அமைப்பால் இது அனுப்பப்பட்டது. பியரி சந்த் மிட்டர், ராதா நரத் சிக்தர், அபய் சரண் மல்லிக், ராசிக் கிருஷ்ண மல்லிக் போன்ற பிரபல பிரமுகர்கள் இந்த விண்ணப்பத்தில் கையொப்பமிட்டிருந் தனர். இவர்களுக்கும் பிரம்ம சமாஜத்திற்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. இவர்கள் வைதீக இந்துக்கள், இவர்களின் நடவடிக்கை களுடன் பிரம்ம சமாஜத்தின் நடவடிக்கைகளும் தொடர்ந்து கொண் டிருந்தன. பிரம்ம சமாஜத்தினர் ஜாதிகளுக்கிடையேயான திரு மணத்தை அங்கீகரித்திருந்தனர். நியாயம் என்பது நியாயமே. விளைவுகளை எதிர்பாராது நியாயத்தைப் பின்பற்றுவதே அறிவுடமை என்று அவர்கள் நம்பினர். சட்ட அனுமதி பெறுவதில் கஷ்டம் இருப்பினும் ஜாதிகளை உடைத்தெறிவோம் என்று அவர்கள் கூறினர். பிறகு இந்த நிலைமை எதிர்கால சந்ததிகளின் குழந்தைகளின் நலனுக்காக மாற்றப்பட வேண்டும் என்று அவர்கள் நினைத்தனர். எனவேதான் சர் ஹென்றி மெய்ன் ஒரு மசோதாவை கொண்டு வந்தார். இறுதியில் அதுவே 1872-ஆம் ஆண்டு சிறப்பு திருமணச் சட்டமாக மலர்ந்தது. இந்தச் சட்டம் பிரம்ம சமாஜத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்ததுடன் வேறு பல பகுதியினராலும் வரவேற்கப்பட்டது. இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டபின் வேறு பல பிரிவு மக்களுக்கும் இந்தச் சட்டம் விரிவுபடுத்தப்பட வேண்டும் என்ற நோக்கிலும், குறிப்பிட்ட சில பகுதிகளுக்கு எதிரான ஆட் சேபனைகளைத் தவிர்ப்பதற்காகவும் பல திருத்தங்கள் நிறைவேற்றப் பட்டது இதை நிரூபிக்கிறது, இதை நிறைவேற்றியதில் வெவ்வேறு

சமயங்களில் இம்மக்கள் சமுதாயத்தின் மனச்சாட்சிகளாக இருந்தனர். சிறுபான்மை மனச்சாட்சியாக என்றுகூடக் கூறலாம். ஆனால் சிறுபான்மையினருக்கும் மனச்சாட்சி உள்ளது. அந்த சிறுபான்மையினரின் சமூக மனச்சாட்சியும் மதிக்கப்படவேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் சட்டத்திற்கு, அதன் கண்ணோட்டத்தை நிரூபிப்பதற்கு உதவியாக எப்பொழுதும் சிறுபான்மையினரின் மனச்சாட்சியே முன்னுக்கு வந்துள்ளது. நன்று, ஐயா, இப்பொழுது எந்தப்பிரிவு சிறுபான்மையிலும் எந்தப் பிரிவு பெரும்பான்மையிலும் உள்ளது என்பதை நாம் அறியோம். ஒரு ஜனநாயக அரசியலமைப்பில் எல்லாப் பிரிவு மக்களின் மனச்சாட்சிகளின் நியாயங்களும் மெய்ப்பிக்கப்பட வேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவர்களின் வாழ்க்கை முறைகளும் சிந்தனைகளும் அடிப்படை விஷயங்களைப் பொறுத்தவரையாவது மதிக்கப்பட வேண்டும். அந்தக் கண்ணோட்டத்தின் அடிப்படையில் நாம் விடை காணப்பட வேண்டிய கேள்வி இதுதான். இந்த மசோதா எந்தக் குறிப்பிட்ட வகையிலாவது எந்தக்குறிப்பிட்ட பிரிவின் மனச்சாட்சியின் மீது திணிக்கப்படுகிறதா? (பாபு ராம் நாராயண் சிங் : ஆமாம்) இதன் மூலம் சிறப்பாக உள்ளதா இல்லையா என்பது பரீட்சிக்கப்படும்.

இப்பொழுது, மசோதாவின் முதல் பகுதியை நாம் பார்ப்போமானால் திருமணம், விவாகரத்து, சட்டப்படியான பிரிவு, காப்பாளர், ஜீவனாம்சம், குழந்தைகளின் பராமரிப்பு ஆகியவைகளை பொறுத்தவரையில், அவை யார் மீதும் திணிக்கப்படுவதாக கருதப்பட முடியாது என்று நான் புரிந்துகொண்டவரையில் என்னால் கூற முடியும். விவாகரத்து தவிர்க்க முடியாது என்ற சந்தர்ப்பங்களில் மட்டுமே இந்தக் குறிப்பிட்ட விதிகளை உபயோகப்படுத்த முடியும். இப்படிப்பட்ட சில வழக்குகள் உள்ளன என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. திருமண உறவு தொடர்வது இரண்டு தரப்புகளுக்கும் பெரும் துயரை அளிக்கும், குடும்பத்தின் சிதைவுக்கு வழி வகுக்கும் என்ற நிலையிலுள்ள வழக்குகள் உள்ள இந்த நிகழ்வுகளில்தான் விவாகரத்து கோரிக்கை எழுகிறது.

**ரோகிணி குமார் சௌதுரி** (அசாம் பொது) : அதன் பிறகு நடைபெறும் திருமணங்கள் மகிழ்ச்சிகரமாக உள்ளனவா? தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அவை மோசமாக உள்ளன.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை பொது) : மணம் புரிந்து கொள்ளும் பெண்ணைப் பொறுத்தது அது.

*டாக்டர் பி.கே. சென்:* இந்தப் பிரச்சினைக்குள் புக நான் விரும்பவில்லை. ஏனெனில், அது ஒரு புள்ளிவிவரப் பிரச்சினை, எவ்வளவு பேர் உண்மையிலேயே மகிழ்ச்சியாக உள்ளனர், எவ்வளவு பேர் உண்மையிலேயே துன்பத்தில் இருக்கிறார்கள் என்பதைக் கணக்கிட வேண்டும். அது ஒரு சரியான அளவுகோலல்ல. தவிர்க்க முடியாத தன்மையே அதற்கான அளவுகோல். கணவன் மனைவி பிரிவு எந்தச் சூழ்நிலையிலும் ஏற்பட முடியாது என்று யாராவது கூற முடியுமா? கற்பனையில்தான் பிரிவு ஏற்படாத சூழ்நிலையைக் காணமுடியும். நாம் நல்லெண்ணத்துடன் அமர்ந்து ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு இந்த விஷயங்களையெல்லாம் விவாதிக்க வேண்டும். எத்தரப்பின் மீதும் இது கட்டாயமாக இருக்குமா என்பதைப் பார்க்க வேண்டும். இங்கு எந்தவிதக் கட்டாயமும் இல்லை. இது விருப்பத்தை பொறுத்தது. மேற்கொண்டு உங்களால் இணைந்து வழ்வது சாத்தியமில்லை என்று உணர்ந்தால் நீங்கள் நீதிமன்றத்திற்குச் செல்லலாம். நீதிமன்றம் அதை விசாரணை செய்யும். விவாகரத்துக்கு வேண்டிய அல்லது திருமணக் கலைப்புக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளும் உள்ளன என்று கருதினால் அது பின்னுறுதித் தீர்ப்பாணையை (டிகிரி நிசி) அளிக்கிறது. ஆனால் நாள்தோறும் விவாகரத்து பன்மடங்காக பெருகிக் கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அது முற்றிலும் மக்களின் மனப் பண்புகளைப் பொறுத்தே உள்ளது. அமெரிக்காவில் அல்லது இங்கிலாந்தில் அல்லது வேறு சில வெளிநாடுகளில் ஒரு குறிப்பிட்ட போக்கு காணப்படுகிறது என்பதால் அதே போன்ற நிலைமை இந்தியாவிலும் தோன்றும் என்று கூறுவது சாத்தியமில்லாத முடிவாகும் என்பதைக் கூறித்தான் ஆகவேண்டும். (பண்டிட் லட்சுமி காந்த் மைத்ரா. அதே சட்ட நடைமுறைதானே). அதே விளைவுகள் இந்தியாவிலும் தொடரும் என்று நான் நம்பவில்லை.

*பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :* அதைவிட மோசமாகும்.

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :* மதிய உணவுக்குச் செல்ல நேரமாகவில்லையா?

*திரு. துணை சபாநாயகர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர் விரைவில் முடித்துவிடுவார் என நினைக்கிறேன்.

*டாக்டர் பி.கே. சென்:* விரைவில் முடிக்க நான் முயற்சிக் கிறேன், ஆனால் இப்பொழுதுதான் ஆரம்பித்துள்ளேன்.

*மதிய உணவிற்காக இரண்டரை மணிவரை அவை ஒத்தி போடப்பட்டது.*

---

*மதிய உணவிற்கு பிறகு அவை மீண்டும் இரண்டரை மணிக்குக் கூடியது. திரு. துணை சபாநாயகர் (திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் தலைமை தாங்கினார்.)*

**டாக்டர் பி.கே. சென் :** ஐயா, மதிய இடைவேளைக்காக இந்த அவை கலைந்த போது விவாகரத்து மற்றும் இதர விஷயங்கள் சம்பந்தமான விதிமுறைகள் வெவ்வேறு விருப்பத்தைப் பொறுத்தே செயல்படுத்தப்படும் என்பதை விளக்கிக் கொண்டிருந்தேன். இந்த விவாதத்தின்போது ஏன் வெளிநாடுகளில் விவாகரத்துக்கள் இவ்வளவு அதிகமாக உள்ளன என்ற கேள்வி என்னிடம் கேட்கப்பட்டது.

**திரு. மகாவீர் தியாகி** (உ.பி. பொது) : ஓர் ஒழுங்குப் பிரச்சினை, ரயில்வே மற்றும் போக்குவரத்துத்துறை ராசாங்க அமைச்சர் மட்டும் அரசு தரப்பில் அமர்ந்திருக்கிறார். விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட மசோதா ரயில்வே அல்லது போக்குவரத்துத் துறை சம்பந்தமானது அல்ல. ஐயா சட்ட அமைச்சரை தயவுசெய்து அழைக்கிறீர்களா?

**திரு. துணை சபாநாயகர்:** விரைவில் சட்ட அமைச்சர் வந்து விடுவார் என உறுதியாக நம்புகிறேன். அது வரை அவையில் உள்ள மற்ற அமைச்சர் குறிப்பு எடுத்துக்கொள்வார்.

**திரு. அஜித் பிரசாத் ஜெயின்** (உ.பி. பொது): இது அவையை அவமதிப்பதாகும் என்றே கொள்ளலாம்.

**திரு. துணை சபாநாயகர் :** இது வரை 36 உறுப்பினர்கள் எனக்கு சீட்டு அனுப்பியுள்ளார்கள்.

**திரு. எம். திருமலராவ்** (சென்னை பொது) : எங்களது பெயர்கள் அனுப்பப்படவில்லை. எங்களது சீட்டுகள் இங்கே கிடக்கின்றன.

**திரு. மகாவீர் தியாகி :** மேலும் பலர் உங்கள் பார்வைக்காகக் காத்திருக்கிறார்கள். அவர்கள் சீட்டுகள் அனுப்பவில்லை.

**திரு. துணை சபாநாயகர் :** எனவே நிலைமை என்னவென்றால் 36 சீட்டுகளைக் கொடுத்தவர்களைத் தவிர வேறு பலரும் என் பார்வைக்காகக் காத்திருக்கிறார்கள். இப்பொழுது இருக்கும் நிலையில் இந்த மசோதாவுக்கு நேற்றும் இன்றும் மட்டுமே அரசாங்கத்தால் ஒதுக்கப்பட்டுள்ளது. நான் அரசின் வேலை நிலைமைகளை அறியேன். விவாதத்தின் குறள்வளையை நெறிக்க நான் விரும்பவில்லை. ஆனால் இந்த வேகத்தில் நாம் செல்ல முடியாது என நினைக்கிறேன். எனவே மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தங்கள் பேச்சுக்களை முடிந்த அளவு பதினைந்து நிமிடங்களாகக் குறைத்துக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** சாத்தியமில்லை. நேரத்தை அதிகமாக்க அரசுக்கு சிபாரிசு செய்யுங்கள்.

**திரு. ஆர்.கே. சித்வா** (ம.மா. மற்றும் பேரார் பொது) **:** தங்களுடைய பேச்சைப் பத்து பதினைந்து நிமிடங்களில் முடித்து கொள்வதில் நம்பிக்கையுள்ள உறுப்பினர்களுக்கு முன்னுரிமை தரப்படும். இப்படிப்பட்ட உறுப்பினர்கள் நிறைய உள்ளனர் என்பதை அறிவேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஆனால் அவர்கள் தங்கள் சொன்ன சொல்லை காப்பாற்றுவார்களா? அதுதான் பிரச்சினை.

**திரு. ஆர்.கே. சித்வா:** நான் தீர்மானமாக உறுதி மொழி அளிக்கிறேன்.

**திரு. விஸ்வநாத தாஸ்** (ஒரிஸா பொது) **:** இந்தத் தீர்மானத்தின் விவாதத்திற்கு அவைக்கு முழுவாய்ப்பு அளிக்கப்படும் என்று மாண்புமிகு சபாநாயகர் உறுதி அளித்ததை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வரலாமா? ஓர் உறுப்பினருக்கு பத்து பதினைந்து நிமிடம் மட்டுமே நீங்கள் அனுமதிப்பது துரதிர்ஷ்டவசமே. சாதாரண மசோதாவை விட இது முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். இது கோடிக்கணக்கான மக்களின் பொருளாதார மற்றும் சமூக வாழ்வு சம்பந்தமானது. இந்தச் சூழ்நிலைகளில் மாண்புமிகு அவைத் தலைவரால் அளித்த வாக்கை உறுதியாகப் பின்பற்றுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இப்பொழுது இவர்தான் அவைத்தலைவர். அவர் தீர்மானிக்க முடியும்.

**திரு. துணை சபாநாயகர் :** அவைத்தலைவர் தற்பொழுது இருக்கையில் இல்லாதது துரதிர்ஷ்டவசமானதுதான். விவாதத்தை நான் கட்டுப்படுத்த விரும்பவில்லை. இந்த விவாதத்தில் பங்கு கொள்ள விரும்பும் உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் வாய்ப் பளிக்க ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் பேசி முடிக்குமாறு ஆலோசனை கூறுகிறேன். அதை மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் மேலான முடிவுக்கே விட்டு விடுகிறேன். பதினைந்து நிமிடங் கள் என்பது மீறக்கூடாத எல்லையல்ல. ஒரு நிமிடம் கூடவோ குறையவோ ஆனால் பாதகமில்லை. அதற்கு அதிகமானால் - அரசு அனுமதித்தால் கூட அவர்கள் அனுமதிப்பார்களா இல்லையா என்பதை அறியேன் - விவாதத்தை ஒரு நாள் அதிகரித்தால்கூட பேச வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையை கணக்கிலெடுத்துக் கொண்டால் எல்லோருக்கும் சந்தர்ப்பம் அளிக்க சாத்தியமிருக்காது என அஞ்சுகிறேன்.

**பண்டிட் பாலகிருஷ்ண சர்மா** (உ.பி. பொது) : அடுத்த கூட்டத் தொடருக்கு அதை வைத்துக் கொள்ளுங்கள்.

**திரு. துணை சபாநாயகர் :** அது என் கைகளில் இல்லை.

**திரு. எஸ். நாகப்பா** (மெட்ராஸ் பொது) : ஒன்றிரண்டு மணி நேரம் அதிகமாக அமரக்கூடாதா?

**திரு. துணை சபாநாயகர்:** இப்பொழுது பதினைந்து நிமிடங் களுக்குள் தங்கள் பேச்சை முடிக்கக் கூடியவர்கள் அப்படியே செய்யட்டும். அதிக நேரம் வேண்டும் என்று நினைக்கும் உறுப்பினர் கள் அதிக நேரத்தை எடுத்துக்கொள்ளட்டும்.

**திரு. எம். திருமலை ராவ் :** பேச்சின் தன்மையை கவனித்து வாதங்கள் திரும்பத் திரும்பக் கூறப்படும் போது அந்த வாதங்களைத் திரும்பக் கூறவேண்டாம் என்று பேச்சாளரிடம் கூறலாம்.

**திரு. துணை சபாநாயகர் :** மிக நன்று, டாக்டர் சென்.

**திரு. எச்.ஜி. காண்டேகர்** (ம.மா. மற்றும் பேரார்: பொது) : இன்னும் 21/2 மணி நேரந்தான் உள்ளது. ஒவ்வொருவரும் பதினைந்து நிமிடம் பேசினாலும் பத்து பேச்சாளர்கள் மட்டுமே பேச முடியும். மசோதாவைக் குறித்துப் பேச விருப்பம் தெரிவித்த மற்றவர்களின்

நிலை என்ன? ஒன்றிரண்டு தினங்கள் விவாதத்தை தொடர நீங்கள் அரசிடம் அனுமதி கேளுங்கள். நாடு முழுவதுமே ஆழ்ந்து கவனித்துக் கொண்டிருக்கும் முக்கிய நடவடிக்கை இது. இதுகுறித்து முழு விவாதம் நடைபெற வேண்டும். அதற்குப் பிறகே ஏற்றுக்கொண்ட வடிவில் இந்த மசோதா நிறைவேற்றப்பட வேண்டும்.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த அவையின் நடவடிக்கைகளும் மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் ஆலோசனைகளும் அரசுக்குத் தெரிவிக்கப்பட்டு, அரசு அதைத் தன் கவனத்தில் எடுத்துக்கொள்ளும். டாக்டர் சென் பேச்சைத் தொடரலாம்.

**டாக்டர் பி.கே. சென் :** ஐயா சுருக்கமாக பேசுவதே விவேகமான செயல் என்பதை நன்கு உணர்வேன். ஆனால் சில நேரங்களில் சுருக்கமான உரை புத்திசாலித்தனமாகாது. ஏனெனில் விஷயத்தைத் தெளிவாகக் கூறமுடியாது. எனவே தெளிவற்றதும் முடிவற்றதுமான பேச்சைக் கேட்பதால் அவையிலுள்ள எவருக்கும் அதனால் பயனில்லை. எனவே விவரங்களுக்குள் செல்லாமல் அடிப்படை விஷயங்களை மட்டும் குறிப்பிடப் போகிறேன்.

விவாகரத்துக்கு அனுமதி அளிப்பதன் மூலம் மற்ற நாடுகளைப் போல இந்நாட்டிலும் அதிக எண்ணிக்கையிலான விவாகரத்துக்கள் நிகழ்ந்து விடாதா என்ற கேள்வியைக் குறித்துதான் அவையில் பேசுகையில் குறிப்பிட்டேன். ஒரு நாட்டின் அறநெறிகளின் தரத்தைப் பொறுத்துத்தான் விவாகரத்துக்களின் எண்ணிக்கை இருக்கும் என்பதே என் பதிலாக இருந்தது, இருக்கிறது. முற்றிலும் தவிர்க்க முடியாத அவசியமான நேர்வுகளில் மட்டுமே தரப்புகள் விவாகரத்துக் கோரவும், அவசியம் இல்லாத நேர்வுகளிலும் விவாகரத்துக்கு காரணம் இருப்பதாக ஜோடிக்கப்பட்டுள்ள விவாகரத்தைக் கோருவதைக் குறித்து உள்ளார்ந்த வெறுப்பும், விருப்பமின்மையும், இகழ்ச்சியும் கொண்ட ஒரு சமூகம் உருவாக்கப்பட்டிருக்கலாம். இந்நாட்டில் பல ஆண்டுகளாக விவாகரத்து வழக்கத்திலிருக்கும் பரோடாவிலும் தென் இந்தியாவின் சில பகுதிகளிலும் இந்த அனுபவம் பரீட்சித்து பார்க்கப்பட்டுள்ளது. பரோடாவில் இதுவரை மூன்று வழக்குகளே நடந்துள்ளன. அதுவும் கடந்த இருபது ஆண்டுகளில் என்று என்னிடம் கூறப்பட்டுள்ளது. அந்தக் குறிப்பிட்ட சமுதாயத்தில் நிலவிலுள்ள அறநெறி கோட்பாடுகள் மற்றும் சமூகச் சூழ்நிலைகள்தான் விவாகரத்து வழக்குகளின் எண்ணிக்கையைத்

தீர்மானிக்கிறது என்பதை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே, சமுதாயத்தை சட்டம் உருவாக்குவதில்லை. விவாகரத்துக்கு அவசியமான வழக்குகளுக்கு அனுமதியளிக்க வேண்டிய நேர்வுகளில் சட்டம் அதற்கு அனமதி அளிக்கிறது. மசோதாவில் திருமணச் சட்டங்கள் எடுத்துரைக்கப்பட்ட பகுதியில் நான்கு அம்சங்கள் உள்ளன. முதலாவது ஜாதிகளுக்கிடையேயான திருமணங்கள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. இரண்டாவதாக, விவாகரத்துக்கான வழிமுறைகள், மூன்றாவதாக ஒருதார வழக்கம் வலியுறுத்தப்பட்டுள்ளது. இவைகளெல்லாம் 1872-ஆம் ஆண்டு III-ஆவது சட்டத்தில் இடம் பெற்றுள்ளவைதான். எனவே இந்த விஷயங்களை முதன் முறையாக அறிமுகப்படுத்தியது இந்து தொகுப்புச் சட்டம் அல்ல. கடந்த நூற்றாண்டின் ஐம்பதுகளில் நான் ஏற்கெனவே கூறியபடி கிளர்ச்சிகள் எழுந்தன, அதிலிருந்து கிளர்ச்சிகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. கேஷப் சந்தர் சென் தலைமையில் பிரம்ம சமாஜமே ஜாதிகளுக்கு எதிரான புனிதப் போராட்டத்தை துவக்கியது. அந்த நேரத்தில் பிரம்ம சமாஜத்தினர் எல்லா வகையிலுமான கொடுமைகளுக்கும், அவமானங்களுக்கும், சமூகத்திலிருந்து தள்ளி வைத்தல் போன்ற துன்புறுத்தல்களுக்கும் ஆளாக வேண்டியிருந்தது. ஜாதி ஒழிக்கப்பட வேண்டும் என்பதை இன்று நாம் எல்லோரும் ஏற்றுக் கொண்டுள்ளோம், எனவே இந்த மசோதாவில் ஜாதிகளுக்கிடையேயான திருமணம் சம்பந்தமாகக் கொடுக்கப்பட்டுள்ள விதிமுறைகள் குறித்து எந்தவித எதிர்ப்பையும் எழுப்பத் தேவையில்லை. ஜாதியை ஒழிக்க வேண்டுமென்பதற்கு ஆதரவாக பெரும்பான்மையினர் என்று கூற முடியாததெனினும், அதிக அளவிலான பொதுமக்களின் கருத்து உள்ளது என்பதில் எந்தவித ஐயப்பாடும் இல்லை. இல்லையென்றால் இந்த அரசியல் சாசனத்தில் சேர்த்துள்ள விதிகளின் பயன்தான் என்ன? ஜாதிகளுக்கு இனி இடமில்லை. இந்த நிலையை நாம் மேற்கொண்டால் அப்பொழுது ஜாதிகளுக்கிடையேயான திருமணம் பற்றிய விதிகளைப் பொறுத்த வரையில் எந்தவித ஆட்சேபனையும் இருக்க முடியாது.

ஒருதார திருமண முறைப் பற்றியும் இதே கண்ணோட்டம் தான் வேண்டும். இருதார மற்றும் பலதார திருமணங்களுக்கு மக்கள் ஆதரவு ஏதாவது இருக்கிறதா என்பதைப் பற்றி எனக்குத் தெரியாது. தனிப்பட்ட சில நிலைமைகளில் அவை நிகழ்ந்திருக்கலாம். அது முற்றிலும் மாறுபட்டது. மக்கள் கருத்து முழுவதும் ஒருதார மணத்துக்கே ஆதரவாக உள்ளது என்று எந்தவிதத் தயக்கமும் இன்றி

தெரிவித்துக் கொள்கிறேன். நான் ஏற்கெனவே கூறியபடி இந்த மசோதாவில் அது பற்றிக் குறிப்பிட்டுள்ளதைப் பொறுத்தவரை எந்தவித ஆட்சேபனையும் இல்லை. விவாகரத்துக்கான அனுமதி எந்தவித ஆட்சேபனையையும் ஏற்படுத்த முடியாது. ஏனெனில் விவாகரத்துத் தேவைப்படும் துரதிர்ஷ்டமான நேர்வுகளில் அதைத் தேர்ந்தெடுக்க அனுமதி அளிக்கும் விதி மிகவும் அவசியமானது.

ஐயா, சட்டத்தில் மாற்றம் ஏதும் இருக்கக் கூடாதா என்ற விஷயத்துக்கு வருவோம். (இதைப் பற்றி நான் பேசியபோது) சாஸ்திரத்தின் அடிப்படையிலான சட்டங்களைக் கண்டிப்பான முறையில் பின்பற்றப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டது. அதிலிருந்து எந்தவித மாற்றங்களும் இருக்கக்கூடாது என்று கூறப்படுகிறது. அது குறித்து இந்த அவையில் பல மணி நேரங்கள் விவாதங்கள் நடைபெற்றன. சாஸ்திரச் சட்டங்கள் முற்றிலும் இறுதியானவை, மாற்றப்படமுடியாதவை, மீறப்பட முடியாதவை என வலியுறுத்திக் கூறப்பட்டது. உங்களால் அதை மாற்ற முடியாது என்ற கூறப்பட்டது. ஐயா, சாஸ்திரச் சட்டம் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். உண்மையாகப் பார்த்தால் நமது சாஸ்திரங்களில் மாற்றங்களுக்கு வழிமுறைகள் உள்ளன. எப்பொழுதும் மாற்றங்களும் நிகழ்ந்துள்ளன. இல்லையென்றால் இவ்வளவு எண்ணிக்கையிலான ஸ்மிருதிகளின் அவசியந்தான் என்ன? மனிதனின் செயல்பாடுகளுக்கான நான்கு ஆதாரங்களை நான்கு விதிமுறைகளை மனுவின் பிரபல கட்டளையில் காணலாம்.

श्रुतिः स्मृतिः सदाचारः स्वस्य च प्रियमात्मन।
एतश्चतुर्विध प्राहः सक्षाद्धमस्य लक्षणं॥

இதை மொழி பெயர்த்தால் இவ்வாறு பொருள்படும் **ஸ்ருதி, ஸ்மிருதி,** நேர்மையான மனிதர்களால் உருவாக்கப்பட்ட நடைமுறை வழக்கங்கள் ஒருவனின் அந்தராத்மாவுக்குத் திருப்தியானவைகள். இவைதான் மனித நடவடிக்கைகளுக்கான நான்கு வகை விதிமுறைகள்; அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் என்று பொருள்படுகிறது. இந்த நான்கு விதி முறைகளில் ஆத்மதிருப்தியும் உள்ளடங்கியிருக்கிறது. இங்கு மனச்சாட்சியின் திருப்தி என்பது ஒரு தனிப்பட்ட நபரின் மனச்சாட்சி மட்டுமின்றி சமூக மனச்சாட்சியையும் உள்ளடக்கியுள்ளது எனக் கருதுகிறேன். நாம் வாழ்கின்ற கால சமுதாயத்தின் மனச்சாட்சியும் மதிக்கப்பட வேண்டும். அந்த அளவுகோலின் மூலம்தான் நமது நடவடிக்கைகளும் தர்மமும்

அளவிடப்பட வேண்டும். சட்டங்கள் இயற்றப்படும் அடிப்படைகளில் இதுவும் ஒன்றாகும். இந்த கோட்பாட்டின் அடிப்படையில் தான் சாஸ்திரியச் சட்டம் இதுகாறும் பல மாற்றங்களை அடைந்துள்ளது. **பராசர ஸ்மிருதி** அல்லது **நாரத ஸ்மிருதி**யில் விதவைகளின் மறுமணத்திற்கும் வேறு பல புரட்சிகரமான விஷயங்களுக்கு வழிவகை செய்யப்பட்டுள்ளதாக தமது துவக்க உரையில் எனது மதிப்பிற்குரிய நண்பர் சட்டத்துறை அமைச்சர் எடுத்துரைத்தார். எப்படித்தான் அவர்கள் இந்நிலைக்கு வந்தனர்? எப்படி அவர்கள் தடைகளை கடந்து அவற்றை உடைத்து புரட்சிகரமானவற்றை ஆரம்பித்தனர்? மிக உயர்ந்த கட்டளைகளின்படி **ஸ்ருதி, ஸ்மிருதிகள்** தவிர வேறு பல ஆதாரங்களும் சட்டத்திற்கு இருந்தன, ஆத்ம போதத்திற்கு இட்டுச் செல்லும் வாழ்க்கை முறைகளை நன்குணர்ந்த சாதுக்கள் மற்றும் மகான்களின் வாழ்க்கை நெறி முறைகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். இவர்கள்தான் நம் வாழ்க்கை நெறிமுறைகளுக்கு வழிகாட்டிகளாக விளங்கியவர்கள். இந்த நெறி முறைகளை நாம் பின்பற்ற வேண்டும். அவை சாஸ்திரியமானதல்ல. அவை எந்த ஒரு குறிப்பிட்ட ஸ்ருதி அல்லது ஸ்மிருதியை சேர்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை. தனிப்பட்ட மற்றும் சமூக வாழ்க்கை நெறிமுறைகளை ஒழுங்குபடுத்துவதற்காக உறுதியுடன் உருவாக்கப்பட்டவை அவை. அது அவ்வாறுள்ளதால், சட்டம் உருவாக வேண்டிய முறை அதுவென்றால், பொதுமக்களின் கருத்து பலமாக இருப்பதாக நம் உணரும்போது, சமூகத்தின் மனச்சாட்சி அல்லது ஒரு குறிப்பிட்ட அதன் பகுதியின் மனச்சாட்சி - சிறுபான்மை பிரிவாக இருக்கலாம் என்று வைத்துக் கொள்வோம். ஒரு குறிப் பிட்ட வாழ்க்கை நெறி முறையை பின்பற்ற சட்ட அனுமதி தேவை என ஆணையிடும்போது சட்டம் அவர்களின் உதவிக்கு முன்வந்து அது அப்படி இருக்க வேண்டும் எனப் பணிக்கிறது. அதுவே நம் அடிப்படையாக இருப்பின் சட்டத்தில் எந்த வித மாற்றமும் இருக்க முடியாது என்று கூறுவது இத்தருணத்தில் முடியுமா? நம் சாஸ்திரீய சட்டங்கள் மாற்ற முடியாதவை என்று கூற முடியுமா? அவை மாற்ற முடியாதவையும், திருத்த முடியாதவையும் மீற முடியாதவையும் என்றிருந்தால் இந்த முன்னேற்றமே நிகழ்ந்திருக்க முடியாது. சட்டம் மாற்றத்திற்குட்படாமல் தேங்கிக்கிடந்தது என்று கூறுவது நமது சட்டங்களை உருவாக்கியவர்களுக்கு நாம் அளிக்கும் மோசமான பட்டமாகும். மாறாகச் சிறுபான்மையினராக இருந்தாலும் சரி அல்லது பெரும்பான்மையினராக இருந்தாலும் சரி அந்தப் பகுதியினர் கொண்டிருக்கும் கருத்துகளை மிதித்துத் துவைத்து விடக்கூடாது என்று கூறும் தைரியத்தை நாம் பெறவேண்டும். ஒரு

குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிப் பலமான கருத்து இருக்கும் பட்சத்தில் அதை அனுமதிக்கச் சட்டம் முன்வர வேண்டும்.

ஐயா, அடுத்ததாக மற்ற அடிப்படையான விஷயங்களுக்கு வருகிறேன். இந்த மசோதா சம்பந்தமாக வேறு என்ன முக்கியமான ஆட்சேபனைகள் எழுந்துள்ளன? **மிதாக்ஷ்ரா மற்றும் தாயபாக** சொத்துச் சம்பந்தமாகத்தான் அவை உள்ளன. இம்மாதிரியான கேள்விகளை இத்தருணத்தில் எழுப்புவது சரிதானா என்பதை நாமே கேட்டுக்கொள்வோம்? கூட்டுக் குடும்ப முறைக்கு சில சிறப்பம்சங்கள் இருந்தன. கடந்த காலத்தில் அதன் புகழ் ஓங்கி இருந்தது. அதை யாரும் மறுக்க முடியாது. அண்மை காலங்களில் கூட்டுக் குடும்ப முறையின் கொடுமை பெரும்பாலான மக்களுக்கு சகிக்க முடியாததாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. குடும்பத்தில் பொருளீட்டும் நபர்களை, சோம்பேறிகள் உறிஞ்சிப் பிழிகிறார்கள் என்று அவர்கள் உணர்கிறார்கள். நமக்கு ஆதரவாகக் குடும்பம் இருப்பதால் நாம் ஏன் உழைத்துச் சம்பாதிக்க வேண்டும் என்று பலர் நினைக்கின்றனர். நமக்கு ஆதரவாகக் குடும்பம் இருக்கும் போது நாம் சம்பாதித்துக் கஷ்டப்படுவதில் என்ன பயன்? தங்களுடைய வேர்வையை சிந்தி குடும்பத்தில் சிலர் பொருளீட்டுவதை சோம்பேறிகளான குடும்ப உறுப்பினர்கள் சிலர் நன்கு அனுபவிக்கின்றனர். அவர்கள் தாராளமாகச் செலவு செய்பவர்களாகவும் உள்ளனர்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்** (ம.மா. பேரார் பொது) : அவர்கள் எப்பொழுதாவது குறை ஏதாவது கூறியுள்ளார்களா?

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஆம் அவர்கள் கூறியுள்ளார்கள். இந்தச் சூழ்நிலையில் அது இயற்கூறாக உள்ளது.

**டாக்டர் பி.கே. சென்:** அவர்கள் புகார்கள் செவிமடுக்கப்பட்டால் நிச்சயமாக அது வேறு விஷயமாக இருந்திருக்கும். ஆனால் அவர்கள் குடும்ப உறுப்பினர்களாக இருந்தால் புகார் செய்ய எந்த விதச் சந்தர்ப்பமும் இருக்காது. அவர்கள் குறைகூற வாய்ப்பளிக்கும் வழி ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது. அதாவது தாங்கள் குடும்பத்திலிருந்து பிரிந்து செல்வதை வெளிப்படுத்துவதுதான் அந்த வழி. இப்பொழுது உண்மை நிலைமை என்ன? குடும்ப ஒற்றுமை எவ்வளவு பலமாக இருந்தாலும், தனிப்பட்ட உறுப்பினர் எவரும் முன்வந்து தாம் பிரிந்து செல்ல விரும்புவதைத் தெரிவிக்கலாம்.

சட்டத்தின் கண்முன் பிரிந்து செல்லும் அந்த விருப்பம் உடனடியாக பிரிவை ஏற்படுத்தும். அப்பொழுது குடும்பத்தின் முழுமைத்தன்மை எங்கே இருக்கிறது? மிதாக்ஷரா குடும்ப அமைப்பு என்ன ஆகிறது? தற்போதைய நீதிமன்ற முடிவுகளின்படி பிரிந்து செல்ல வேண்டு மென்ற சிறிய விருப்பத்தை தெரிவித்தால் அந்த விருப்பம் பிரிவை ஏற்படுத்தும் என்று கூறும் அளவுக்கு வந்துவிட்டது. இந்த நிலையில் கூட்டுக்குடும்ப முறை பலமான அடித்தளத்தில் இருக்கும் பேரமைப்பு என்று கூறுவது காலங்களைக் கடந்த கூற்றாக உள்ளது என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். அது உடைந்து வருகிறது. மனித முயற்சியால் இனியும் அதைக் காப்பாற்ற முடியாது என்பதில் எந்த வித ஐயப்பாடும் இருக்க முடியாது. இப்பொழுது தனிநபர் சுதந்திரத்தை மக்கள் கோருகிறார்கள். சம்பாதிப்பவர்கள் ஒவ்வொருவரும் சம்பாதிக்க விரும்புவதுடன் அதை தங்கள் விருப்பப்படி செலவு செய்ய விரும்புகிறார்கள். குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள் தங்களைக் கட்டுப்படுத்துவதை அவர்கள் விரும்ப வில்லை. தனிநபர் சுதந்திரமே இப்பொழுது அவர்கள் குறிக்கோள் மற்றும் இலட்சியமாக உள்ளது. ஆரம்ப நாட்களிலிருந்தே இந்தக் குரல் எழுந்துள்ளது. ''தனிநபர் சுதந்திரம் குறைந்து போய் அரசு அதிக பலம் பெற்றுவருகிறது''. அண்மைக் காலங்களில் இந்தக் குற்றச்சாட்டைக் கேட்கிறோம். இன்று பெரும்பான்மையினரின் அதிகாரம், சமுதாயத்தின் கட்டுப்பாடு ஆகியவை ஆதிக்கம் செலுத்து வதை நமது சமுதாயத்தில் காண்கிறோம். இந்த ஆதிக்கத்தை இப்பொழுது யாரும் விரும்பவில்லை. தனிநபர் ஒவ்வொருவரும் முந்தைய நிலையிலிருந்து விலகிச் செல்ல விரும்புகின்றனர். குடும் பத்தின் பிடிக்குள் சிக்கி வாழ விரும்பவில்லை என்று கூறுகின்றனர். நான் சுதந்திரம் பெற்று என் பாதையில் செல்ல விரும்புகிறேன் என்கிறான். இன்றைய காலகட்டத்தின் உணர்வு இதுவன்றோ என்று அவையில் ஒவ்வொரு உறுப்பினரையும் தங்களைக் கேட்டுக் கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறேன். இக்காலத்தின் மனப்பாங்கு இதுவென்றால் நாம் எங்கே நிற்கிறோம்? உடைந்து விழுந்து கொண்டிருக்கும் நிலையிலுள்ள கட்டடத்தை எவ்வளவு நாள்தான் நம்மால் தூக்கி நிறுத்த முடியும்? மிதாக்ஷரா மற்றும் தாயபாகா முறைகளுக்கு இடையேயான பெரும் வேறுபாடுகள் நடைமுறை யில் இல்லாமலாகிவிட்டன. இணக்கமான முறையில் பரஸ்பர நல்லெண்ணத்துடன் நாம் அமர்ந்து, ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டு நமது வேற்றுமைகளுக்குத் தீர்வு காணமுடியும். எந்த ஒரு குறிப்பிட்ட பிரிவினரையும் புண்படுத்தாமல் நாம் ஒரு திருப்திகரமான

முடிவுக்கு வரமுடியும். அது அப்படித்தான் இருக்கமுடியும் என்று நம்புகிறேன். நான் விவரங்களுக்குள் செல்ல விரும்பவில்லை. எதிர்காலத்தில் நம்முடைய விவாதம் இந்த முறையில்தான் தொடரும் என்பதைச் சுட்டிக்காட்ட மட்டுமே விரும்புகிறேன்.

ஐயா, இப்பொழுது மற்ற விவரங்களைப் பார்ப்போம். வாரிசுரிமை அல்லது மரபுரிமை விஷயத்தைப் பொறுத்தவரை மகளுக்கு அளிக்கும் பங்கைத்தவிர வேறு எந்த விஷயத்திலும் எவ்வித கருத்து வேறுபாடுகள் இல்லை எனலாம். மற்ற விஷயங்களெல்லாம் கடந்தகால விஷயங்களாகி விட்டன. சட்டங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன. நீதிமன்றங்கள் முடிவுகள் எடுத்துள்ளன. அதன் மூலம் குடும்பத்தில் கோரிக்கை வைத்த மற்ற உறுப்பினர்கள் எல்லோருக்கும் உரிமைகள் அளிக்கப்பட்டுள்ளன. மகளின் பங்கைக் குறித்து மட்டும் இப்பொழுது கருத்து வேறுபாடுகள் எழுந்துள்ளன. மகன்கள் பெரும் பங்கில் பாதி, மகன்கள் பெரும் பங்கில் சமமான பங்கு, அல்லது எல்லோரும் தீர்மானிக்கும் அளவிலான பங்காக அது இருக்கும். நல்லெண்ணத்துடன் ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டு இந்தப் பிரச்சினைக்கு முடிவு செய்தால் ஒரு திருப்திகரமான முடிவை பெற முடியும் என்பதில் எனக்கு முற்றிலும் நம்பிக்கை உள்ளது. பொறுக்குக் குழுவின் முடிவை அதன் ஒவ்வொரு தனிப்பட்ட உறுப்பினரும் ஏற்றுக் கொள்ளவேண்டுமென்பது அவசியமில்லை. எனக்கு சில விஷயங்கள் பிடிக்கவில்லை என்பதை, வெளிப்படையாகவே ஒத்துக் கொள்கிறேன். மசோதாவின் சில அம்சங்களைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்று கூறும் சில உறுப்பினர்கள் இருப்பார்கள். இந்தக் கருத்து வேறுபாடுகள் பரஸ்பர விவாதத்தின் மூலம் ஓரளவு தீர்க்கப்பட வேண்டும். அடிப்படையான கேள்வி என்னவென்றால் மகளுக்கு பங்கு அளிக்கப்பட வேண்டுமா என்பதுதான். மகளுக்கு பங்கு எதுவுமே வழங்கக்கூடாது என்று கூறுவது குடும்பத்தில் உள்ள பெண் உறுப்பினர்கள் மீது காலம்காலமாக நாம் கொண்டுள்ள பாரபட்சக் கண்ணோட்டத்தின் வெளிப்பாடே என்ற என் கருத்தை வெளிப்படையாகக் கூறுவதில் எனக்கு எவ்விதத் தயக்கமும் இல்லை.

திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி: முற்றிலும் சரி அதுதான் உண்மையான விஷயம்.

டாக்டர் பி.கே. சென் : நமது குடும்பப் பெண்களை உயர்வாக நாம் மதிக்கலாம். ஒவ்வொரு குடும்பத்திலுள்ள பெண்களும்

நளின தேவதைகள் எனவும், பணிவிடை செய்யும் தேவதைகள் எனவும் அடிக்கடி அழைக்கப்படுகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. அது முற்றிலும் உண்மைதான். அவர்களுக்குத் தேவையானவற்றையெல்லாம், அவசியமானவற்றையெல்லாம் நாம் நிறைவேற்றுகிறோமா? நம் குடும்பங்களில் பெண்களுக்கு ஆண்களால் நிறைவேற்றப்பட வேண்டிய விஷயங்களை நிறைவேற்றுகிறோமா? இந்த விஷயங்கள் குறித்து நாம் முற்றிலும் தெளிவாகவும் நேர்மையாகவும் இருக்க வேண்டும். நமது மகளிருக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகள் பல உள்ளன. சமுதாயத்தில் தங்களுக்கும் ஓர் இடம் வேண்டும் என்று அவர்கள் கோருகிறார்கள். குடும்பத்தில் தங்கள் பணிகளை ஆற்றிக்கொண்டு, குடும்பத்தின் நிர்வாக தேவதையாகவும் இருந்து கொண்டு, அவர்கள் ஆற்ற வேண்டிய வேறு சில பணிகளும் உள்ளன. சமூக அமைப்புகளின் பணியில் அவர்கள் ஆர்வத்துடன் ஈடுபட வேண்டியுள்ளது. இன்றைக்கு தோன்றியுள்ள பல அமைப்புகளில் அவர்கள் பங்கு கொள்வது மிக அவசியமாக உள்ளது. பெண்கள் பங்குகொள்ளாத சமூக கட்டமைப்பை இப்பொழுது நாம் உருவாக்க முடியாது. ஆண்களின் பணிவிடைத் தேவதைகளாக அவர்கள் எப்பொழுதும் இருப்பார்கள். அதாவது அவர்களின் உடற் தேவைகளையும் நலனையும் கவனித்துக் கொள்வார்கள். ஆனால் தங்களின் உயர்ந்த லட்சியங்களையும் மற்றும் அபிலாஷைகளையும் அடைவதில் எதுவும் செய்ய மாட்டார்கள். ஆனால் அவர்களுக்கு சமுதாயத்தில் நிறைவேற்றப்பட வேண்டிய கடமை உள்ளது. சுதந்திர இந்தியாவில் அமைப்புகள் ஒவ்வொன்றிலும், இயக்கங்களிலும் பெண்கள் அதிக அளவில் இணைந்து பணியாற்ற வேண்டியுள்ளது. இப்படி இருப்பதால் அவர்களுக்கு விடுதலை அளிக்கப்பட வேண்டும். பொருளாதார சுதந்திரத்தைவிட வேறு எதுவும் அவ்வளவு முக்கியமானதல்ல (ஆரவாரம்). தங்கள் வாழ்க்கைக்கே தங்கள் குடும்பத்தின் ஏதாவதொரு ஆண் உறுப்பினரைச் சார்ந்திருக்க வேண்டியுள்ளதால் பலரின் வாழ்க்கை சிதைந்துபோன நேர்வுகள் பல உள்ளன. எனவே இன்றைக்கு எடுக்கப்படும் நடவடிக்கைகளில் அவர்களுடைய பொருளாதார சுதந்திரம் முக்கியத்துவம் பெறுகிறது.

மாலை 3 மணி

இந்த உண்மையை நாம் முற்றிலும் மறந்துவிடாமல் இருக்க வேண்டும். அவளுக்குப் பொருளாதார சுதந்திரம் அளிக்க விரும்பினால், ''ஏ, மகளே, உனக்கு எந்தப் பங்கும் சொத்தில் கிடையாது. எப்பொழுதும் குடும்பத்துக்கு பணிவிடை செய்யும் தேவதையாக இருப்பாய்'' என்று கூறுவதற்கு

எந்தவிதமான காரணமும் இல்லை. இதன் பொருள் என்னவெனில் அவள் எப்பொழுதும் யாரையாவது சார்ந்துதான் இருப்பாள். அவள் ஒரு விதவை என்றால் மற்றவர்களுக்கு பணிவிடை செய்வதில் மட்டும் அவள் ஈடுபடுவாள். நாட்டிற்கோ, சமூகத்திற்கோ, குடும்பத் திற்கோ வேறு எந்த சேவையையும் செய்ய அவளால் முடியாது. ஐயா, நேரம் அதிகம் தேவைப்படுமாகையால், மேலும் இது குறித்து நான் பேச விரும்பவில்லை. மேலும், மற்றவர்களின் நேரத்தையும் அபகரிக்க வேண்டிவரும் என்பதையும் அறிவேன். அடிப்படை விஷயங்கள் குறித்து அதிகம் பேசப்பட்டுவிட்டது, விரிவான விவா தங்கள் நடந்துவிட்டன. நடைபெற்ற இந்த விவாதங்களையெல் லாம் சிந்தித்துப் பார்க்கையில், இந்த விவாதத்திற்குப் பிறகு, முழு நல்லெண்ணத்துடனும் விவேகத்துடனும் எல்லா விவரங்களையும் அமைதியாக அமர்ந்து பரிசீலித்தோமானால் ஒரு நல்ல முடிவுக்கு வரமுடியும். நமக்குச் சஞ்சலம் அளிக்கும் பல சிறு விஷயங்கள் உள்ளன. அது எப்படி இருப்பினும், அதற்குத் தீர்வு காண்பது கடின மல்ல. அடிப்படை விஷயங்களில் நாம் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். நாம் அவ்வாறு செயல்பட்டால் நமது பாதை தெளிவாகி விடும் என்று கருதுகிறேன்.

*திருமதி கமலா சௌதுரி (உ.பி. பொது) : (இந்தி உரையின் ஆங்கில மொழி பெயர்ப்பு) ஐயா, இந்துத் தொகுப்புச் சட்டத்தைக் குறித்துச் சில வார்த்தைகள் பேச முற்படுவதற்கு முன், இந்த மசோதாவைக் கொண்டுவந்ததற்காக டாக்டர் அம்பேத்கருக்கு என் பாராட்டுகளைத் தெரிவித்தாக வேண்டும். காலத்தின் உணர்வுக் கேற்ப இந்த மசோதா அவையில் கொண்டுவரப்பட்டுள்ளது என்பதே என் சொந்தக் கருத்து. இன்றைய காலகட்டத்தின் தேவைக்கும், காலப்போக்கிற்கும் இசைவான சட்டம் இது. சமயம், கலாசாரம், மற்றும் பல்வேறு விஷயங்களின் அடிப்படையில் இந்த மசோதா எதிர்க்கப்பட்டாலும், இதற்கெதிராக பல குறைகள் கூறப்பட்டாலும், நமது மகளிர் குலத்திற்கும் இந்திய சமூகத்தின் முன்னேற்றத்திற்கும் இந்த மசோதா சமய சஞ்சீவி போன்றதாகும். இன்றைக்கு மிகத் தாழ்ந்த மட்டத்திலுள்ள நமது பெண்களுக்கு இது மிகவும் பலனளிக் கக்கூடியதாக இருக்கும். இந்த மசோதா இந்த அவையில் நிறை வேற்றப்பட்டால் நமது எதிர்காலப் பெண்குலம் மாண்புமிகு அமைச்சருக்கு கடமைப்பட்டவர்களாக இருக்கும்.

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 535-540

இந்த மசோதா நமது சமயம் மற்றும் கலாசாரத்திற்குப் பெரும் தீங்கிழைக்கும் என்று மசோதாவை எதிர்த்தவர்கள் கருத்துத் தெரிவித்தனர். இந்த வாதம் சரியானதாக எனக்குத் தோன்றவில்லை. மதத்தின் பெயரால் கூறப்படும் எந்த விஷயமும் மக்களின் உணர்வுகளை கவர்ந்திழுக்கின்ற வகையில் நம் மக்களின் மூளையும் இதயமும் உருவாக்கப்பட்டுள்ளன. இந்த சமய பலிபீடத்தில்தான் நமது மத உணர்ச்சிகளை எவ்வாறு கிளப்பி விடுகிறோம்? இந்த மதத்தின் பெயரில்தான் தேசத் தந்தை மகாத்மா காந்தி கொலையுண்டதைக் கண்டோம்.

எனவே, இவ்வாறு, மதம் மற்றும் கலாசாரத்தின் அடிப்படையில் இந்த மசோதாவிற்கு எதிராக பெரும் கூச்சல் கிளம்பியுள்ளது. சட்டம் என்றால் என்ன என்றுகூட அறியாத, இந்தச் சட்டமன்றம் எவ்வாறு உருவாக்கப்பட்டது, நமது அரசியல் அமைப்புச் சட்டப்படி அவர்களுக்கு வாக்குரிமை எப்படி வழங்கப்பட்டது என்பதைக் கூடப் புரிந்துகொள்ள முடியாத நம் சகோதரிகளின் சார்பிலும் எதிர்ப்பு பறைசாற்றப்படுகிறது. இந்நாட்டிலுள்ள பெண்களில் பெரும்பான்மை யினர் இந்த மசோதாவை எதிர்ப்பதாக அறிவிக்கப்படுகிறது. நமது மதத்திற்கும், கலாசாரத்திற்கும் எதிராக இந்த மசோதாவில் எதுவும் இல்லை என்றே என் சிற்றறிவுக்குத் தோன்றுகிறது.

மத நம்பிக்கை உள்ள இந்துக்கள் இப்பொழுது அனுபவித்து வரும் பலதார மணத்திற்கு எதிராக மசோதாவின் ஒரு பிரிவில் விதிகள் வகுக்கப்பட்டுள்ளன. பலதார மணத்தை அனுமதியாது, அதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. தங்கள் மனைவிமார்கள் உயிருடன் இருக்கும் வரையில் வேறு திருமணம் செய்து கொள்வதற்கு அனுமதியில்லாததால் நமது சகோதரர்களில் பெரும்பான்மையோர் இந்த மசோதாவை எதிர்க்கக்கூடும் என அஞ்சுகிறேன். மதத்திற்கு விரோதமாக இதில் எதையும் நான் காணவில்லை. ஏனெனில், நமது வேத சாஸ்திரங்களையும், பண்டைய இலக்கியங்களையும் படித்துப் பார்த்தால், எந்தக் காலத்திலும், ஏன் மிகப் பண்டைய நாட்களில்கூட பலதார திருமணங்கள் வரவேற்கப்படவில்லை என்பதைக் காண்கிறோம். பண்டைய இலக்கியங்களை அலசி ஆராய்ந்ததில் ஒரு மனைவிக்கு மேல் இளவரசர்கள் மணந்துகொள்ள அனுமதிக்கப்பட்ட சில நேர்வுகளையும் காணமுடிகிறது. நமது சமுதாயக் கட்டுக்கோப்பின் அடிப்படைகளான சிறந்த லட்சியங்களையும், மரபுகளையும், பழக்கவழக்கங்களையும் அரசர்கள் மதியாது

நடந்துகொண்டதை நாம் கண்டுள்ளோம். நம்முன் லட்சிய புருஷராகத் திகழும், கடவுளின் அவதாரம் என்று கருதப்படும் ஒருவரின் உதாரணத்தை உங்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். நமது இந்தியக் கலாசாரத்தைப் பாதுகாத்து, பல நூற்றாண்டுகளாக அதை அழியாது காப்பாற்றிவரும், வால்மீகியால் படைக்கப்பட்ட பெரும் இதிகாசமான இராமாயணத்தை படிக்கையில் ஒரு விஷயத்தைத் தெரிந்து கொள்கிறோம். அஸ்வமேத யாகத்தை அரசர் ராமச்சந்திரர் நடத்த முற்பட்டபோது, மனைவியின்றி அந்த யாகத்தை செய்ய முடியாது என்று புரோகிதர்களும் பெரியவர்களும் எடுத்துரைத்த போது, அந்த நேரத்திலும், அவர் இரண்டாவது மனைவியைத் தேடிச் செல்லாது சீதாப்பிராட்டியின் தங்கச் சிலையைச் செய்து யாகத்தை நடத்தியதாக அறிகிறோம். நம் முன்னே நமது மகத்தான லட்சியம் தெரிகிறது. நமது இதிகாச இலக்கியங்களைத் தேடினால் ஒவ்வொரு இடத்திலும் இதுபோன்ற நிகழ்ச்சிகளைக் காணமுடியும். ராமர் காட்டிற்குச் சென்றபோது சூர்ப்பணகை அவரை மணமுடிக்கக் கெஞ்சியபோது, ராமர் அயோத்தியாவின் இளவரசர் என்றும், அவர் அரசராகக் கூடும் என்றும், அவர் மணம் செய்து கொள்ளலாம், ஆயினும் ஏற்கெனவே மணமாகி விட்டதால் இரண்டாவது மணம் செய்யமாட்டார் என்றும் லட்சுமணன் கூறுகிறார். அந்தக் காலத்திலேயே ராமபிரான் மூலம் நமக்கு தெரிவிக்கும் லட்சியம் எல்லாம் பலதாரத் திருமணம் ஆதரிக்கப்படவில்லை என்பதாகும். எனவே இந்த மசோதாவில் அறிவிக்கப்பட்டுள்ள பலதார மணத்தடை எப்படி மதத்திற்கு எதிரானதாக இருக்க முடியும். அதற்கு மாறாக, இம்மாதிரியான பழக்கங்கள் ஊக்கப்படுத்தப்பட்டால், இந்தியக் கலாசாரத்திற்கும் சமுதாயத்தின் உயர்ந்த லட்சியத்திற்கும் பெரும் அழிவையேத் தேடித்தரும் என நினைக்கிறேன். இந்தியப் பண்பாட்டை ஆதரிப்பவர்களுக்கும், இந்து மதத்தைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொள்ளும் ஒவ்வொருவருக்கும் இதுவே சிறந்த லட்சியமாக இருக்கமுடியும் என நம்புகிறேன். சட்டப்படி மணந்த மனைவி உயிருடன் இருக்கும்போதே, ஒன்று இரண்டு மூன்று ஏன் நான்கு தடவைகூட கணவன் மணந்து கொள்ள அனுமதிப்பது பெண்களுக்கு இழைக்கப்படும் பெரும் அநீதியாகும். இந்தப் பழக்கம் பெண்களுக்கு தாங்க முடியாத வேதனையை அளிக்கிறது. அவள் மீது எல்லையற்ற அனுதாபம் ஏற்படுகிறது. பல நூற்றாண்டுகளாக நம் பெண்கள் பல தீவிரக் கட்டுப்பாட்டுக்குள் வாழ வேண்டியிருந்தது என்பது வேறு விஷயம். இந்நாட்டின் பெண்கள் அனேகமாக நான்கு சுவர்களுக்குள்ளே அடைபட்டு கிடந்தனர். அவர்களின் சமூக, மனோரீதியான, பொருளாதார உரிமைகள் குறைக்கப்பட்

டிருந்தன. அவர்களின் கண்ணீர் கண்களிலேயே உலர்ந்து போயின; கன்னத்தில் வழிய அனுமதிக்கப்படவில்லை. பெண்கள் அனுபவித்து வந்த இந்தப் பெரும் இன்னல்களையும் சோதனைகளையும் நமது கவிஞர்களும், எழுத்தாளர்களும், ஆசிரியர்களும் மிகவும் தத்ரூப மாக விவரித்துள்ளனர். கணவன் தனக்கு ஓர் இணை மனைவியை வைத்துக் கொள்வதை அனுமதிப்பதை விட வேறு எந்தக் கொடுமை யும் ஒரு பெண்ணிற்கு இருக்க முடியாது.

இப்பொழுது, மறுமலர்ச்சியும் பிறந்த பிறகு நம் நாட்டின் பெரிய மனிதர்கள் பெண்களில் அவல நிலையை உணர ஆரம்பித் தனர். அவர்களுடைய தீவிர முயற்சியால், பெண்கள் நிலை பற்றி அக்கறையுடன் பரிசீலிக்கப்பட்டது. எனவே இம்மாதிரியான புரட்சி கரமான மசோதாக்கள் அவ்வப்போது இந்த அவையில் கொண்டு வரப்படுகின்றன. அன்று நம் நாடு கொந்தளித்துக் கொண்டிருந்த போது நமது சமூக வாழ்வில் மகாத்மா காந்தி நுழைந்தார். பெண்கள் தங்கள் சொந்தக் கால்களில் நிற்குமளவுக்கு அவர்களது நிலையை உயர்த்தினார். இன்றைக்கு தனக்குரிய உரிமையைப் பெற அவளது இதயத்தில் ஓர் உத்வேகம் பிறந்துள்ளது. இதுகாறும் கொடுமை களையும் அடக்குமுறைகளையும் பொறுத்துக் கிடந்தது போன்று, எதிர்கால மங்கையர் சகித்துக் கொண்டிருக்க மாட்டார்கள். ஒருபோதும் இம்மாதிரி அவமானத்தையும் அலட்சியப் போக்கை யும் அவள் ஏற்றுக்கொள்ள மாட்டாள். எனவே காலம் கடந்து விட்டது என்றே நினைக்கிறேன். நம் முன்னே உள்ள இந்த மசோதா இவ்வவையில் உரத்த கரவொலியுடன் நிறைவேற்றப்பட வேண்டும்.

பல்வேறு அடிப்படைகளில் இம்மசோதா எதிர்க்கப்படு கிறது. இங்கே அவைகளைக் கேட்க எனக்கு வாய்ப்புகள் இருந்தன. பெண் குலத்திற்கு எதிராக வசைமொழிகளும், அசிங்கமான விஷயங் களும் கூறப்பட்டன. அவர்கள் அவமானப்படுத்தப்படுகின்றனர். பெண்களுக்கு எதிராக அவதூறுகளும் களங்களும் கற்பிக்கப்பட்டு பிரசாரம் செய்யப்படுகின்றன. மசோதாவில் அளிக்கப்பட்டுள்ள விவாகரத்து உரிமை நம் சமுதாயத்தின் கட்டமைப்பை சீரழித்து விடும் என்று இங்குள்ள மக்கள் நம்புகிறார்கள். நமது கலாசாரம் நாசமாகிவிடும் என்று கருதுகிறார்கள். இம்மாதிரியான அச்சத்தை மக்கள் எப்படி அடைகிறார்கள், இம்மாதிரியான பேச்சுகளில் ஏன் ஈடுபடுகிறார்கள் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் மசோதாவை நான் படித்த வரையில், விவாகரத்தைப் பொறுத்தமட்டில் புதுமையாக எதுவும் கொண்டு வரப்படவில்லை.

என்பதுடன், நமது வேதங்கள் மற்றும் அறநூல்களில் அனுமதித்ததை விட அதிகமாக எதையும் நான் காணவில்லை. விவாகங்களை ரத்து செய்வதற்கு என்னென்ன நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருந்தனவோ, அல்லது எந்த முறையில் விவாக ரத்துக்கள் நடைபெற வேண்டு மென்று கூறப்பட்டுள்ளதோ, எந்தக் காலங்களில் அதற்கு அனுமதி அளிக்கலாம் என்று விதிக்கப்பட்டிருந்ததோ அவைகளெல்லாம் நம் சாஸ்திரத்திலேயே கொடுக்கப்பட்டுள்ளன. இந்து மதத்திலும் அதன் பண்பாட்டிலும் நான் நம்பிக்கை கொண்டுள்ளேன். நான் ஓர் இந்துப் பெண்மணி. பெண்களின் பெருமையும் முக்கியத் துவமும் எதிர் காணப்படுகிறது என்பதையும் அறிவேன். பல நூற் றாண்டுகளாக நமது முனிவர்களும், தீர்க்கதரிசிகளும், கவிஞர் களும், எழுத்தாளர்களும், இந்தியப் பெண்களின் சிறப்புகளைப் பற்றி பாடல்கள் எழுதியுள்ளனர்; மிகவும் பாராட்டிப் புகழ்ந்துள் ளனர். அவளுடைய புற அழகை மட்டும் புகழ்ந்து பாடவில்லை. அவளுடைய தன்னலமற்ற தியாக உணர்வை போற்றிப் புகழ்ந்துள் ளனர். இந்த உன்னத லட்சியங்கள் நமக்கு மிகவும் சிறப்பானது தான். இன்று நேற்றல்ல, ஆண்டாண்டுக் காலமாக இந்தியப் பெண்கள் இந்த உன்னத லட்சியங்களைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றனர். அவளுடைய தன்னலமற்ற தியாகமும், உன்னத லட்சியங்களும் இந்தியக் கலாசார வரலாற்றிலும், மனிதகுல வரலாற் றிலும் பொன்னெழுத்தில் பொறிக்கப்படும்.

ஆயினும் ஒவ்வொரு சமுதாயத்திலும் தனிநபர் ஒவ்வொரு வரும் ஆணானாலும் அல்லது பெண்ணானாலும் சரி, உயர்ந்த லட்சி யங்களின்படி வாழ்வது சாத்தியமில்லை என்பது தெரிய வந்துள்ளது. மகாத்மா காந்தி ஒரு அதீத மனிதர் என்று உலக முழுவதும் போற்றப் படுகிறார். தம் லட்சியங்களை அவர் நம்முன் வைத்துள்ளார். அவரைப் பின்பற்றுபவர்களாக நாம் இருப்பினும், அந்தக் கொள்கை வழி நம்மால் நடக்கமுடிவதில்லை. சமுதாயம் மற்றும் உலகின் நிலையும் இதுவேதான். இந்த உன்னத லட்சியங்களை இந்திய சமுதாயமும் உலகமுழுமையும் பின்பற்றி நடக்குமானால் இவ் வுலகமே ஒரு சுவர்க்கலோகமாக மாறிவிடும் என்று நினைக்கிறேன்.

ஓர் உயர்ந்த லட்சியத்தை மக்கள் முன் வைக்கும்போது, அதற்கு ஒரு சாதகமான சூழ்நிலையை உருவாக்க பல்வேறு விஷயங்கள் நிறைவேற்றப்பட வேண்டியுள்ளன. இந்துத் திருமணச் சடங்கை எடுத்துக் கொள்ளுங்கள். திருமணம் நடைபெறும்போது, அடுத்த பல பிறவிகளுக்கும் இந்த உறவு தொடர்ந்து இருக்கும், அழியாதது என்று புரோகிதர்கள் வர்ணிக்கிறார்கள். என்னால் இதை நம்ப முடியவில்லை. ஒருபுறத்தில் இந்துமதக் கோட்பாட்டின்படி இந்து ஆண் ஒருவருக்கும் இந்து பெண் ஒருவருக்கும் இடையே உருவாகும் உறவே இந்தத் திருமண உறவு என்று நமக்குக் கூறப்படுகிறது. மற்றொருபுறத்தில், கர்மா தத்துவத்தின்படி இந்த உறவு காலம்காலமாக தொடர்ந்து வருவதாக இருக்கவேண்டும் என்று நமக்குக் கூறப்படுகிறது. அதாவது நமது முந்தையப் பிறவிகளில் கணவன் ஒரு மனிதனாகவோ, ராட்சசனாகவோ, மிருகமாகவோ கூட இருந்திருக்கலாம். இந்த விஷயங்களிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. வாழும் காலத்திற்கான சமரச உடன்பாடு மட்டுமே திருமணம் என்பதே என் நம்பிக்கை. விவாகரத்து பற்றிய வாய்ப்புகளை மட்டுமே நமது திருமண ஜோடிகள் சிந்தித்துக் கொண்டிருந்தால், நம் வாழ்க்கை பயனற்றதாகிவிடும் என அஞ்சுகிறேன். இம்மாதிரியான நிலைமைகளின் விளைவுகளினால் ஒரு நல்ல மகிழ்ச்சிகரமான குடும்பத்தை உருவாக்க முடியாத நிலை தோன்றும். இம்மாதிரியான நிலைமை எங்கேயாவது தோன்றுமானால், அந்நிலைமையில் நமது மதத்தின் பரிணாம வளர்ச்சியோ, நாட்டின் கலாசார வளர்ச்சியோ இருக்க முடியாது. எந்தச் சூழ்நிலையிலாவது பிரிவு வேண்டும் என்று கருதப்பட்டால் அந்தச் சட்ட உரிமை பெண்ணிடந்தான் இருக்க வேண்டும். நமது தற்கால சமுதாயத்தில் பல கோளாறுகள் காணப்படுகின்றன. இந்த மாதிரியான விஷயங்கள் எனக்கு மட்டுமே தெரியும் என்று கூறமுடியாது. இங்கு அமர்ந்துள்ள எல்லோருக்கும் தெரிந்திருக்கும் மனைவிக்கு வயது குறைவாக இருந்தாலும் கணவன் இரண்டாம் தாரத்தை மணக்க முடியும். ஆனால் அதே வேளையில் 16, 17 அல்லது 18 வயதான பெண் மறுமணம் செய்துகொள்ள முடியாது. தன்னுடைய விவாகத்தை ரத்து செய்து கொள்ளும் அதிகாரம் அவளுக்கு இல்லை. இம்மாதிரியான நிலைமைகளில் விளைவு என்ன? விவரத்திற்குள் செல்ல நான் விரும்பவில்லை. இவை பெரும் அழிவில் முடிகின்றன என்பதை மட்டும் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். சட்டப்படியான அவளுடைய கணவனுடன் அவளுக்கு எந்த உறவும் இல்லை. சமுதாயத்தின் அடித்தளத்தில் உழன்று துன்பத்தில் வாடி வதங்கிக் கொண்டிருப்பாள். கௌரவமான முறையில் மறுமணம்

செய்து கொண்டு தன்னுடைய குழந்தைகளை அன்புடன் வளர்த்து ஒரு குடும்பமாக தனது எஞ்சிய வாழ்நாளை நிம்மதியாகக் கழிப்ப தற்கு சமூகம் அவளுக்கு அனுமதி அளிப்பதில்லை. இம்மாதிரியான சூழ்நிலைகளில் பெண்களுக்கு உரிமைகள் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். தாராளமாக உபயோகப்படுத்தும் அளவுக்கு இந்த உரிமைகள் இருக்க வேண்டுமென்பது என் விருப்பமல்ல. நினைத்த மாத்திரத்தில் உறவுகளைத் துண்டிக்க வேண்டும் என்று ஒவ்வொரு ஆணும் பெண்ணும் நினைத்தால் பழிவாங்கும் படலம் தொடரக்கூடும். மக்கள் கூறுமளவிற்கு மசோதா வாய்ப்பளிக்க வில்லை என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நமது சமுதாயத்தின் 80 சதவிகிதத்தினர் ஒரு பஞ்சாயத்தைக் கூட்டி ஒரு நிமிட நேரத்தில் விவாகத்தை ரத்து செய்து விடுவதாகக் குறிப்பிட்டிருப்பதுதான் இந்த மசோதாவில் என்னை மிகவும் கவர்ந்த அம்சமாகும். சில பகுதிகளில் மற்றும் சில சமூகங்களில் முடிவெடுப்பதற்கு பஞ்சா யத்தைக்கூட கூட்டுவது கிடையாது. ஆண்களும் பெண்களும் மிக சுதந்திரமாக பிரிந்துசென்று, அவர்களுக்குப் பிரியமானவர்களை மறுமணம் செய்து கொள்கிறார்கள். அவர்களுக்கு அந்த சமூகம் அளிக்கும் மிகப் பெரும் தண்டனை அவர்களை கண்டிப்பதுடன் சமூகத்தைவிட்டு விலக்கி வைக்கிறார்கள். சமூகத்திற்குக் கூட்டு விருந்தளித்த பிறகு அவர்கள் மீண்டும் அரவணைத்துக் கொள்ளப் படுகிறார்கள். பிரிந்து வாழ்வதும் விவாகரத்தும் மிகச் சாதாரண விஷயங்களாகக் கருதும் சமூகங்களுக்கு இந்த மசோதா அதிகப் பலனளிக்கும். இந்த மசோதா அவர்களுக்கு சில கட்டுப்பாடுகளை விதிக்கிறது. கலாசாரப் பின்னணி இல்லாத சில பிற்படுத்தப்பட்ட சமூகங்கள் கலாசார மேம்பாடு அடைவதுடன் அவர்களது ஒழுக்க நெறிகளும் உயர்வடையும் என்பதே இந்த மசோதாவினால் அடையப்படும் பெரும் பலன் என்று கூறலாம். இதுவே இந்த மசோதாவில் நான் கண்ட தனிச் சிறப்பு வாய்ந்த அம்சமாகும்.

இந்த மசோதாவுக்கு எதிராக எழுந்த பலத்த கண்டனம் சொத்து சம்பந்தமானதுதான் என்று நான் நினைக்கிறேன். ஏனெனில், தகப்பனாரின் சொத்தில் மகனுக்கு அளிக்கப்படும் பங்குக்குச் சமமான பங்கை மகளுக்கும் அளிக்கவேண்டும் என்று இந்த இந்து தொகுப்புச் சட்டம் வழிவகை செய்கிறது. இந்த ஆலோசனையைக் குறித்து பலவிதமான மாறுபட்ட கருத்துகள் எழுந்துள்ளன. சகோதரன் மற்றும் சகோதரிகளுக்கிடையேயான இயல்பான பாசப்பிணைப்பு கள் இந்த விதிமுறையை நிறைவேற்றுவதால் மறைந்து போய்விடும் என்ற கருத்து மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் சிலரிடையே காணப்

படுகிறது. நமது மரபு வழி மற்றும் குடும்பக் கட்டுக்கோப்பு, முறை முழுவதும் சீரழிந்து விடுமென்று இவர்கள் கருதுகின்றனர். இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏனெனில் ஒருவருக்கு இரண்டு அல்லது நான்கு பையன்கள் இருந்தால் அவர்கள் கண்டிப்பாக ஒருவருக்கொருவர் தகராறு செய்ய வேண்டியதோ அல்லது பூசலிட வேண்டியதோ அவசியமில்லை என்பதை இன்று நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால் அதே சமயத்தில் இந்தத் தகராறுகள் முற்றி அவர்கள் ஜன்ம விரோதிகளாக ஆகிவிடும் பல நிகழ்வுகளை நாம் காண்பதுடன் இந்த மாதிரி பல சம்பநங்களைப் பற்றிக் கேள்வியும் படுகிறோம். சொத்துக்களை வாரிசுரிமையாகப் பெற்றுக் கொண்ட பிறகு சகோதரனும் சகோதரியும் அதே போன்று வழக்கில் ஈடுபடு வார்கள் என்று கூறப்படுமானால், ஏற்கெனவே சகோதரர்களுக் கிடையே வழக்குகள் ஏற்படுவது சகஜமாகையால், இதைப் பொருட் படுத்த வேண்டியதில்லை. மேலும் அதே நேரத்தில் சொத்து வாரிசுரிமையினால் சகோதரர்களுக்கிடையே சண்டையும் பூசலும் எழுவதால், அதை ஒழித்திட வேண்டுமென்று கலாசாரம் சீரழிந்து விடும் என்று கூச்சல் போடுபவர்கள் அறிவிப்பார்களா? இந்தச் சொத்துச் சண்டைகளெல்லாம் நமது கலாசாரத்தின் உள்ளடக்கமா? இயற்கையான பாசம், ஒருவருக்கொருவர் அன்பு, மற்றவர்களுடன் அன்புடன் நடந்து கொள்வதே நமது மதத்தின் உன்னத லட்சியங்கள். நமது மதத்தின்படி இதுவே நமது பண்பாடாகும். ஒரே சகோதரியாக இருப்பவர் தம் சகோதரனிடம் காட்டும் அன்புதான் எவ்வளவு ஆழமானது என்பதை பல இடங்களில் நான் கண்டிருக்கிறேன். அன்பு செலுத்துவது என்பது பல தரங்களில் காணப்படுகிறது. ஒரு சகோதரன் பால் சகோதரி கொண்டுள்ள அன்பு படாடோபமற்றது, உள்ளார்ந்தது, மாசற்றது, வேறு எந்த அன்பும் அதற்கிணையாகாது. இப்படிப்பட்ட இணையற்ற பாசத்தை அவள் சகோதரன்பால் கொண் டுள்ளாள். ஒரு பெண்ணின் தாயாரிடம் உள்ள சொத்தான சீதனத் தையும், அவளது நகைகளையும், மகள் வாரிசுரிமையாகப் பெறு வதற்கு நமது தற்போதையச் சட்டம் வழி வகை செய்கிறது. இந்த நகைகளை சகோதரனுடன் சகோதரி பகிர்ந்து கொள்வதை நாம் எங்கும் காண்கிறோம். இந்த நகைகளைப் பிரிப்பதில் அவர்கள் சண்டையிடுவதை நாம் காண்பதில்லை. நமது பெண்குலத்தின் உயர்ந்த லட்சியங்கள் உண்மையானது என்றால் தன் சகோதரனுக்காக ஒரு சகோதரி எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருப்பாள். இந்த மாதிரியான தகராறுகள் வெகு அரிதாகவே காணப்படுகின்றன. எப்பொழுதாவது இந்த மாதிரியான நிகழ்ச்சிகள் எதிர்காலத்தில் தோன்றக்கூடும் என்றாலும், இது மிகவும் அநீதி என்றுதான் நான்

கூறுவேன். எங்கள் பெரும் தாலூக்தாரர்கள் வாழ்ந்த வாழ்க்கை எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. தகப்பனார் விட்டுச் சென்ற சொத்தில் சகோதரர்கள் மிக ஆடம்பரமாக வாழ்ந்துவந்தனர். இஜ் மற்றும் இதர விழாக்களின்போது அவர்கள் தங்களுக்காக செலவு செய்த தொகை சகோதரியின் வாழ்நாள் பூராவுக்குமான செலவுக்குப் போதுமானதாக இருக்கும். ஒரு விதவை சகோதரி அந்த வீட்டில் வந்து வாழ நேர்ந்தால், அவள் சமையலறையில் முடங்கி கிடக்கும் ஒரு சமையல்காரியாகத்தான் வாழ வேண்டியிருக்கும். தகப்பனாரின் சொத்திலும் செல்வத்திலும் சகோதரர்கள் வாழ்க்கையை ஆனந்தமாக கழித்துக் கொண்டிருக்கும் அதே வேளையில், அந்த வீட்டிலேயே ஒரு சகோதரி தன் சிறு குழந்தைகளுக்கு பால்கூட வாங்க அவதிப்படும் நிலையை என் கண்களாலேயே கண்டிருக்கிறேன். தனது சகோதரனின் குழந்தைகளைப் போல தன் குழந்தைகளும் நல்ல உணவு அருந்தவேண்டும் என்றும், அழகிய ஆடைகளை அணியவேண்டும், சிறந்து கல்வி பெறவேண்டும் என்றும் அவளுக்கும் ஆசை இருக்கத்தான் செய்கிறது. ஆனால் சட்டம் அவள் வாயை அடைத்திருக்கிறது. அவள் தன் நாக்கை அடக்கிக் கொண்டு தனது உணர்ச்சிகளை கட்டுப்படுத்திக் கொள்கிறாள். இந்து சட்டத்தின்படி இது சரியானதுதானா என்று இந்தச் சட்டத்தை எதிர்ப்பவர்களை மிகவும் பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன். பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதியை இந்து மதத்தின் எந்தத தத்துவப் போக்கு அனுமதிக்கிறது? எனவே தகப்பனாரின் சொத்தில் மகளுக்கும் பங்கு உண்டு என்று கூறும் விதிமுறைகள் காலத்திற்கு இசைந்தது என்பதுடன் நமது கலாசாரத்திற்கும் நம்பிக்கைக்கும் ஏற்றது. எனவே இது பரந்த அளவில் பரிசீலிக்கப்படும் என்று நினைக்கிறேன்.

இந்திய இலக்கியங்களைப் படிக்காதவர்கள், வெளிநாட்டுக் கலாசாரத்தின் மீது மோகம் கொண்டுள்ளவர்களின் இதயத்தில் தான், தகப்பனாரின் சொத்தில் பெண்களுக்கும் பங்கு அளிக்கப்பட வேண்டும் என்ற கருத்துத் தோன்றியுள்ளது என இந்த விதிமுறையை எதிர்த்துப் பேசிய பல உறுப்பினர்கள் வலியுறுத்திக் கூறியுள்ளனர். நான் உங்கள் நேரத்தை அதிகம் எடுத்துக் கொள்ளப் போவதில்லை. கடந்த பல நூற்றாண்டுகளாக வழக்கில் இருந்து வரும் நமது நாடோடிப் பாடல்களில் இந்த உணர்வுகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதைச் சுருக்கமாகத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த உணர்வுகள் நமது தாய் தந்தையர்கள் காலத்திய நாடோடிப் பாடல்களில் வெளிப்படுத்தப்பட்டவையல்ல. வெளிநாட்டுக் கலாசாரமே நம் நாட்டில் காலடி எடுத்து வைக்காத நமது

பாட்டிகளின் பாட்டிகள் காலத்திலேயே இவை நாடோடிப் பாடல் களில் எதிரொலித்தன, அப்பொழுது நமது கலாசாரத்திற்கு எந்த முத்திரையும் குத்தப்படவில்லை. எங்கள் மாகாணத்தில் மண விழாக்களின்போது பாடப்படும் பாடல்களில் இந்த உணர்வுகள் வெளிப்படுவதைக் காணலாம். எல்லா மாகாணங்களிலும் இவ்வகைப் பாடல்கள் பாடப்படுகின்றன என நினைக்கிறேன். அந்தப் பாடல் களின் வரிகளை நான் இங்கு எடுத்துரைக்க விரும்பவில்லை. சுருக்க மாகக் கூற விரும்புவது என்னவென்றால், மணவிழாவின் போது, எது எப்படியாகினும் எனக்கு மிகவும் பழக்கமான என் மாகாணத் தில் இத்தகைய பாடல்கள் பாடப்படுகின்றன. வேறு சில மாகாணங் களின் நாடோடிப்பாடல்களிலும் இச்சிந்தனை ஓட்டத்தை நான் கண்டிருக்கிறேன். தகப்பனாரின் ''ஆட்சியின்'' சரிபாதி பங்கு தனக்கு வேண்டுமென்ற ஆசையை பெண் வெளிப்படுத்துகிறாள். பல்வேறு கவர்ச்சியூட்டும் பரிசுப் பொருள்களை அளிப்பதாகச் சகோதரன் கூறுகிறான். ஒரு தட்டு நிறைய ஆபரணங்கள், குதிரைகள், யானை கள், மேலும் சீதனமாக அவன் அளிக்கவிருக்கும் பொருள்களின் பட்டியலை விவரிக்கிறாள். தன் மாமனாரின், கணவனின் வீட்டுக்குச் செல்லும்போது இந்தச் செல்வம் எல்லாம் அவளுக்குக் கிடைக் கும். ஆனால் இந்த வீட்டிலேயே பிறந்து வளர்ந்ததால் தோட்டத் திலும், குளத்திலும் பங்கு வேண்டுமென்று அவள் கூறுகிறாள். எனவே இந்த உணர்வுகள் ஏதோ வெளிநாட்டுக் கல்வியால், வெளிநாட்டு இலக்கியத்தால், வெளிநாட்டுக் கலாசாரத்தால் அல்லது வெளிநாட்டில் கல்வி கற்றவர்களின் மூளையில் உதயமானது என்ற கூற்றிற்கு எந்த அடிப்படையும் இல்லை. இந்தக் கருத்து நமது பண்டைய இலக்கியங்களில் நிரம்பி வழிவதுடன் நமது நாடோடிப் பாடல்களில் இந்தச் சிந்தனையோட்டம் எதிரொலிப்பதைப் பல இடங்களில் காணலாம்.

பெற்றோர்களின் பார்வையில் ஒரு பெண்ணும் ஆணும் சம மாகவே தோன்றும்படி இயற்கையால் படைக்கப்பட்டுள்ளனர். அவ்வாறெனில் ஒரு பையன் மட்டும் தகப்பனாரின் சொத்தில் பங்கு பெறும்போது பெண்ணுக்கு மட்டும் ஏன் ஒன்றும் அளிக்கப்படுவ தில்லை? இது ஒரு வகை அநீதி என்றே எனக்குத் தோன்றுகிறது. இன்றைய சமூக அமைப்பின்படி இந்த மசோதாவை நடைமுறைப் படுத்துவதிலுள்ள கஷ்டத்தைக் குறித்துச் சிலர் சந்தேகம் கொண் டுள்ளனர். ஏனெனில் நமது சமுதாயத்தில் ''மருமகன்'' வகிக்கும் இடம் கொஞ்சம் விசித்தரமானது. இது முற்றிலும் வேறு விஷயம். வாழ்க்கை முழுவதும் அவரை **ஜமாய் பாபு** அல்லது **பஹுனா**

(விருந்தாளி) என்று அழைப்பதுடன் குடும்பத்தின் ஓர் உறுப்பினராக அவர் ஒருபொழுதும் ஆவதில்லை. இந்த சொத்துரிமை மகளுக்கு அளிக்கப்பட்டால், மற்றொரு குடும்பத்தின் மகன் மருமகன் என்ற முறையில் வருவதுடன் மகளின் குடும்ப உறுப்பினர் என்ற முறையில் இரண்டு மகன்கள் உள்ள தகப்பனாருக்கு மூன்றாவது மகனாக ஆகி விடுவார். இதன் மூலம் பரஸ்பர அன்பும் பாசமும் வளரும் எனலாம். சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் இடையேயான உறவுகள் சீர்கெட்டுவிடும், நிரந்தரமாக உறவு முறிந்துவிடும் என்ற வாதம் எனக்கு ஏற்புடையதாக இல்லை. இந்தச் சட்டம் நிறைவேற்றப் பட்டால் நமது சகல சமூக, கலாசார, சமய பாரம்பரியத்திற்கு அழிவு ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை. அந்த வாதத்தை என்னால் ஆதரிக்கமுடியவில்லை. நமது அரசியல் சாசனத்தை நிறைவேற்றி யவர்கள், நமது சமூக, அரசியல் அமைப்பில் தீவிர மாற்றம் கொண்டு வர முயற்சிப்பவர்கள், அரசியல் சாசனத்தில் பெண்களுக்கு சம உரிமையை ஏற்றுக்கொண்டவர்கள்; அவர்கள் பெண்களின் இன்றைய நிலைமையை ஆழ்ந்த அனுதாபத்துடன் கவனிப்பார்கள் என்ற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்கிறேன். காலத்தின் கோரிக்கைக்கு அவர்கள் செவிசாய்க்கட்டும். இந்த உரிமைகளை நாம் உடனடி யாக அளிக்க வேண்டும். முன்னேற்றப் பாதையில் செல்லும் ஒரு சமுதாயம், உடனடியாகச் செய்யப்பட வேண்டிய எல்லா மாற்றங் களையும் நிறைவேற்றாவிடில் அந்தத் துறையில் அவர்கள் பல நூற்றாண்டுகள் பின்தங்கியிருக்க நேரிடும் என்று அறிஞர்கள், படித் தவர்கள், வரலாற்று ஆசிரியர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். மாறாக, காலத்தின் தேவைகளையும் அவசியத்தையும் நல்ல முறையில் புரிந்து கொண்டு, உடனடியாகத் தேவைப்படும் மாற்றங்களைச் செயல்படுத்தும் சமுதாயம் வேகமாக முன்னேற்றப் பாதையில் செல்லும், மகாத்மா காந்தியைப் பின்பற்றுபவர்கள் இந்த சட்ட மன்றத்தில் அதிக எண்ணிக்கையில் இருப்பதால் இச்சட்டமன்றத் தினால் இம்மசோதா நிறைவேற்றப்படும் என்று நம்புகிறேன். இந்தியப் பெண்களை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளை மற்றும் அவர்களுக்குள்ள இடையூறுகளை நன்கு உணர்ந்திருந்த பெரிய மகான் மகாத்மா காந்தி. அரசியல் புரட்சியுடன் நமது பழைய சமூக சிந்தனைகளுக்கு எதிராக தீவிர புரட்சியை ஆரம்பித்ததுடன் அவைகளை வேரோடு களையவும் செய்தார். மகாத்மா காந்தியின் ஆதரவாளர்கள் இந்த மசோதாவை முறையாகப் பரிசீலிப்பதுடன், நமது நம்பிக்கை மற்றும் கலாசாரத்தின் பின்னணியில் அதை அனுதாபத்துடனும் பெருந்தன்மையுடனும் பரிசீலித்து நிறைவேற்று வார்கள் என்று நினைக்கிறேன். இறுதியில், இந்த மசோதாவை நன்கு

புரிந்துகொண்டுள்ள அனைத்துப் பெண்களும் இதை மனப்பூர்வ மாக வரவேற்பார்கள் என்பதை மாண்புமிகு அமைச்சருக்கு இந்திய மகளிர் சார்பாக உறுதியாகக் கூறுகிறேன். எதிர்காலத் தலைமுறை யைச் சேர்ந்த பெண்களும் இந்த மசோதாவை நிறைவேற்றியமைக் காக அவருக்கு நன்றி செலுத்துவார்கள்.

***திரு. காமேஷ்வர் சிங் தர்பங்கா** (பீகார் -பொது) : ஐயா, இந்தக் கூட்டத் தொடரின் துவக்க நாளன்று நம்முன் வைக்கப்பட் டுள்ள மசோதாவைக் குறித்து நமது பிரதமர் இந்த அவையில் ஆற்றிய உரைக்குப் பிறகு, அரசின் சார்பாக கொண்டுவரப்பட் டுள்ள இந்தத் தீர்மானத்தை எதிர்க்கும் நம்மில் பலருக்கு இந்த விவாதத்தில் கலந்து கொள்வது கஷ்டமாக உள்ளது. அவர் உரை யாற்றுகையில், இந்த அவையில் நான் இருக்கவில்லை. ஆனால் பத்திரிகைச் செய்திகள் உண்மையானால், இந்த மசோதா நிறை வேற்றப்படுவது அவரது அமைச்சரவையின் மீது கொண்டுள்ள நம்பிக்கைப் பிரச்சினையாக அவர் கருதுவதாகத் தெரிகிறது. (குறுக்கீடு).

**திரு. துணை சபாநாயகர் :** அமைதி, அமைதி. இந்த மாதிரி குறக்கீடு செய்தால் ஒன்றும் நடைபெறமுடியாது. இந்தக் குறுக்கீடு களினால் உறுப்பினர்கள் எடுத்துக் கொள்ளும் நேரந்தான் அதிக மாகும்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** மதிப்பிற்குரிய உறுப்பினர் மிகச் சிறந்த உரை நிகழ்த்துவதாகத் தெளிவாகத் தெரிகிறது.

**திரு. காமேஷ்வர் சிங் தர்பங்கா** (பீகார் - பொது) : நமது நாட்டின் இன்றைய நிலைமையில் நமது பிரதமரின் அரசே மிகச் சிறந்த அரசாக இருக்க முடியும் என்ற கருத்தில் நான் உறுதியாக இறுக்கிறேன். அது எவ்வளவு குறைபாடுள்ளதாக இருப்பினும் தற்போதைய அரசைவிட சிறந்த அரசு ஒன்று அமையப் போவ தில்லை. எந்த அரசியல் கட்சிகளிலும் சேராத பெரும்பான்மை யினரின் கருத்து அதுதான் என்று நினைக்கிறேன். எனவே நமது பிரதமர் எடுத்துள்ள நிலை ஒரு வகையில் என் போன்ற சிந்தனை யாளர்களுக்கு எதிரான ''நிர்ப்பந்தம்'' என்று சொல்ல முடியா விடினும் எங்கள் மீது தேவையற்ற ''செல்வாக்கைப்'' பயன்

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 541-43.

படுத்துவதாகக் கூறலாம். இந்த மசோதாவைப் பரிசீலிக்கையில் தமது அரசின் மீதான நம்பிக்கைப் பிரச்சினை இது என்ற கருத்தை விட்டுவிட்டு இந்த விஷயத்தை மறு பரிசீலனை செய்யும்படி பிரதமரை மிகவும் மனப்பூர்வமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

மக்களின் விருப்பத்தைத் தெரிந்து கொள்ளும் வரையில் இந்த மசோதா பற்றி மேற்கொண்டு பரிசீலனை செய்வதை ஒத்தி வைக்கும்படி அரசையும் அவையையும் கேட்டுக் கொள்ள விரும்பு கிறேன். மாண்புமிகு டாக்டர் ராஜேந்திரப் பிரசாத், இந்திய தேசியக் காங்கிரசின் தலைவர் என்ற முறையில் அதற்குரிய காரணங்களை நமது பிரதமருக்குக் கடந்த ஆண்டு அனுப்பிய குறிப்பில் தெரிவித் துள்ளார்.

புரட்சிகரமான நடவடிக்கை என்றுகூட கருதப்படத்தக்க இந்த முக்கியமான நடவடிக்கை குறித்து, மாறுபட்ட கருத்துகள் இருப்பதை இந்த அவையின் உறுப்பினர்கள் நன்கு உணர்ந்திருப் பார்கள். பெரும்பான்மை மக்களின் தனிப்பட்ட சட்டங்களை இது பாதிக்கிறது. அவர்களின் சமூக மற்றும் பொருளாதார வாழ்க்கை யைப் பாதிப்பதுடன், பல நூற்றாண்டுகளாக உருவாகியுள்ள பல்வேறு இந்து சமய பழக்க வழக்கங்களையும் நடைமுறைகளையும் பாதித் துள்ளது. ஒரே சீராக்குதல், தொகுத்தல் என்ற பெயரில் முஸ்லீம்கள், கிருஸ்தவர்கள், பார்சிகள், யூதர்கள் தவிர இந்து சமுதாயத்தைச் சேர்ந்த அனைவரின் சமூக, பொருளாதாரக் கட்டமைப்பை பலவந்த மாகத் தகர்க்கிறது. இந்த மசோதா குறித்த பொறுக்குக் குழுவின் அறிக்கைக்கு தாங்களும் மற்றும் திரு. ராம் நாராயண் சிங்கும் அளித்துள்ள மாறுபட்ட கருத்துக் குறிப்பில் தெரிவித்துள்ளதை நான் முற்றிலும் ஏற்றுக் கொள்கிறேன். இந்த மசோதாவில் கொடுக்கப் பட்டுள்ள முக்கியமான விஷயங்கள் குறித்து முடிவு செய்வதற்குக் கூட இந்தச் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு வாக்காளர்களிடமிருந்து எந்த அதிகாரமும் கொடுக்கப்படவில்லை. சொல்லப் போனால் அடுத்த தேர்தல் வெகு தூரத்தில் இல்லை. எனவே அதுவரை இதைத் தள்ளிவைப்பதால் இழப்பொன்றும் ஏற்படப் போவதில்லை.

இம்மாதிரியான அடிப்படை மாற்றங்களை இந்த மசோதா வில் கொடுக்கப்பட்டுள்ள முறையில், செய்திருக்கக்கூடாது என்பதே என் திட்டவட்டமான கருத்து. இந்து சட்டக் கமிஷன் முன் கூறப் பட்டுள்ள கருத்துகளைத் தெரிந்துகொள்ள ஒருவருக்கு அக்கறை இருக்குமானால், இந்த மசோதாவுக்கு எதிராகப் பலமான எதிர்ப்பு

உள்ளதைப் புரிந்துகொள்ளத் தவறமாட்டார். ஸ்மிருதி மற்றும் அது குறித்த வியாக்கியானங்களை புனிதமாகக் கருதுபவர்களின் பிரிவைச் சேர்ந்தவன் நான். நான் சேர்ந்திருக்கும் இந்தப் பிரிவுதான் இந்த நாட்டின் மக்கள் தொகையில் பெரும்பாலாக உள்ளது. திருமணம், வாரிசுரிமை போன்றவைகளை நமது சமயக் கடமையாக, கட்டளை களாகக் கருதுகிறோம். எங்களுக்கு இவையெல்லாம் சமயச்சார்பற்ற சமூக நிகழ்வுகள் என்பதைவிட அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை களாகும்.

சூழ்நிலைப் பளுவினால் சமூகக் கட்டமைப்பு படிப்படியாக மாற்றம் அடைந்துவருவது உண்மைதான். ஆனால் இந்த மாற்றங்கள் பரிணாம வளர்ச்சிகளினால் ஏற்படுபவை, மேலிருந்து திணிக்கப் படுபவை அல்ல. மேலும் பல்வேறு இந்து சமூகங்களை நிர்வகிக்கும் சட்டங்களின் அடிப்படைக் கோட்பாடுகளை இந்த மாற்றங்கள் பொதுவாகப் பாதிப்பதில்லை. இந்த மசோதாவில் கொண்டுவரப் பட்டுள்ள மாற்றங்கள் ஏற்கெனவே மக்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டு சட்ட அனுமதிமட்டும் தேவைப்படும் மாற்றங்களா என்பதே இப்போதைய கேள்வி. ''இல்லை'' என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுவேன். ஸ்மிருதிகளை உருவாக்கியவர்கள் அதற்கு விளக்கம் அளித்தவர்கள் அடிக்கடி பல மாற்றங்கள் செய்துள்ளனர் என்பதில் ஐயப்பாடு ஏதுமில்லை. மக்களின் பெரும்பான்மை ஆதரவுடன் அவைகளை நிறைவேற்ற வாய்ப்புள்ள வேளைகளில் அவர்கள் அதைச் செய்தனர். தங்களுடைய மேதகைமையில், எதிர்நோக்குப் பார்வையில், நோக்கத்தின் மாசற்ற தன்மையில், முக்கியமாக தங்கள் செயல்பாடுகளில் அவர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. இப்பொழுது கொண்டுவரப்பட்டுள்ள இருபதாம் நூற் றாண்டு ஸ்மிருதியின் ஆசிரியர்களுக்கு இந்தவிதப் பின்னணி எதுவும் கிடையாது. இன்றுகூட பெரும்பான்மை மக்களுக்கு வழிகாட்டியாக உள்ள கட்டளைகளை அளித்துள்ள ஸ்மிருதிகளைப் படைத்தவர் களின் மீது மக்கள் கொண்டுள்ள மதிப்பும் மரியாதையும் இவர் களுக்குக் கிடையாது. இந்து மக்களின் தனிப்பட்ட சட்டத்திற்கான அனுமதி பெரும்பான்மை மக்களின் ஆதரவினால் பெறப்பட்டதே தவிர எந்தவித மைய அரசியல் நிர்வாகமும் மேலிருந்து திணித்த தால் பெறப்பட்டதல்ல என்பதை நாட்டின் பல்வேறு பாகங்களிலும் காணப்படும் பன்முகத் தன்மை உறுதிப்படுத்துகிறது. இந்து சமய வாழ்க்கை முறையின் முக்கிய அம்சமே வேற்றுமையில் ஒற்றுமை என்பதுதான். வெளித் தோற்றத்தில் காணப்படும் வேறுபாடுகளை உடனடியாக ஒழிக்கப்பட வேண்டிய தீமையாக எண்ணிவிடக்கூடாது.

பண்டைக் காலத்தில் சட்டத்தை உருவாக்கியவர்களின் கண்ணோட்டத்திற்கும் இன்றைக்குச் சட்டத்தை அளிப்பவர்களின் கண்ணோட்டத்திற்கும் உள்ள அடிப்படையான வேற்றுமை என்ன வெனில், முன்னவர்கள் ஆன்மிக அடிப்படையில் செயல்பட்ட போது பின்னவர்கள் முற்றிலும் லோகாயுத அடிப்படையில் செயல் படுகின்றனர். இதை ஒத்துக் கொள்வது என்பது, நமது பாரம்பரியத் தின் தொடர்ச்சிக்கும், நமது கலாசாரத்தின் அடிப்படைக்கும் மற்றும் நமது வாழ்க்கைத் தத்துவத்திற்கும் விடை கொடுப்பதாகும். இதற்குத் தயாரில்லாத ஒருவன் நான்.

இதைத் தவிர, இந்த மசோதாவில் கொடுத்துள்ள விதிமுறை களை செயல்படுத்துவதில் சில நடைமுறைக் கஷ்டங்களும் தோன்றும் என்று அஞ்சுகிறேன். தங்களுடைய திருமணங்களைப் பதிவு செய்ய நீதிமன்றத்துக்குச் செல்ல வேண்டும் என்பதை மக்களுக்குக் கற்றுக் கொடுக்க எவ்வளவு காலம் பிடிக்கும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். செல்லாத மற்றும் செல்லத்தகாத திருமணங்கள் சம்பந்த மான விதிமுறைகளால் எவ்வளவு குழப்பங்களும் சிக்கல்களும் உருவாகும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். திருமணக் கலைப்பு மற்றும் விவாகரத்துக்கள் சம்பந்தமான விதிமுறைகள் குடும்ப வாழ்க்கையில் எவ்வளவு பேரழிவுகளை ஏற்படுத்தும் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். இதுவரை இந்த விதிமுறைகளுக்கு அடிப் படையான கருத்துகளுக்கு மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ள வர்கள் அவர்கள். சிக்கலான வழக்குகள் மட்டுமே விசாரணைக்கு வரும் என்ற கருத்துடன் எனக்கு உடன்பாடில்லை. தங்கள் சுயநலனுக் காக தங்கள் அண்டைவீட்டார்கள், உறவினர்கள் மற்றும் இதரர் களின் குடும்ப வாழ்க்கையை சீர்குலைக்க பலர் முன்னுக்கு வருவார்கள் என்ற அச்சம் எனக்குள்ளது. அதே போன்று, வாரிசுரிமை பற்றிய விதிமுறைகளும் சொத்துக்களை நிர்வகிப்பதைக் கடின மாக்குவதுடன், பல சதிகாரரர்கள் சமுதாயத்தில் பல சதித் திட்டங் களை உருவாக்கக் களமாக அமையும். சட்ட வல்லுநர்களும் நீதிமன்றங்களும் செழித்தோங்கக்கூடும், ஆனால் குடும்பங்கள் சிதைந்து போவதுடன் குடும்ப அமைதியும் குலைந்து போகும்.

இந்து சட்டக் குழுவின் உறுப்பினர்களில் ஒருவரான டாக்டர் துவாரகா நாத்தின் அறிக்கை இந்துக்களில் பெரும்பான்மையோரின் கருத்தை எதிரொலிக்கிறது. அவரது முடிவுகளுக்கு அடிப்படையாக

உள்ள உண்மைகள் மறுக்க முடியாதவை. குழுவின் மற்ற உறுப்பினர்களின் அறிக்கை டாக்டர் மிட்டர் தமது கருத்துக்கு ஆதரவாகக் கொடுத்துள்ள மறுக்கமுடியாத உண்மைகளின் வலிமையைக் குறைக்க எடுத்துள்ள முயற்சி என்றுதான் கூறவேண்டும். குழுவின் பெரும்பான்மை உறுப்பினர்கள் முக்கியமான விஷயங்களில், பல்வேறு வகைகளில் தங்களுக்கு முன்வைக்கப்பட்டுள்ள பொது மக்களின் கருத்துகளைக் கவனத்தில் எடுத்துக் கெள்ளாது, தங்கள் முடிவுகளை ஏற்கெனவே எடுத்துள்ளதாகத் தெரிகிறது. பொது மக்கள் கருத்துக்கு அஞ்சி நடுங்கும் இந்திய அரசு இந்த மாதிரியான ஒரு மசோதாவை இந்த அவையில் கொண்டுவர எவ்வாறு தீர்மானித்தது என்பது எனக்கு ஆச்சரியமாக உள்ளது. இந்து சமுதாயத்தில் முற்போக்காளர்கள் என்று கூறிக்கொள்ளும் சிலரின் உணர்வுகளைத் திருப்தி செய்வதற்காக இந்துக்களில் மிகப் பெரும்பான்மையினரால் எதிர்க்கப்படும் ஒரு மசோதாவைக் கொண்டுவர அது முன்வந்திருக்கக் கூடாது. இந்த மசோதாவை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று குரல் கொடுப்பவர்கள், கிராமம் கிராமமாகச் சென்று இந்த மசோதாவிலுள்ள விதிகளைப் பற்றிய கருத்துகளை கேட்டுத் தெரிந்து கொள்வார்கள் எனின், திருப்திகரமான ஆதரவு இல்லை என்பதை கண்டு கொள்வார்கள் என்பது நிச்சயம். குறைந்தபட்சம், என் மாகாண மக்களின் கருத்து இந்த மசோதாவுக்கு எதிரானதே.

***டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா** (சென்னை - பொது) : ஐயா, நான் எழுந்தவுடன், நண்பர்களிடமிருந்து சில குரல்கள் கேட்கின்றன. ''ஆதரியுங்கள்'' என்று சிலரும் ''ஆதரிக்காதீர்கள்'' என்று சிலரும் குரல் எழுப்புகின்றனர்.

**திரு. பி.எல் சோந்தி** (கிழக்குப் பஞ்சாப்): நீங்கள் இரண்டு விதமாகவும் நடந்து கொள்வீர்கள்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா:** ஒருவேளை இரண்டு வகையிலும் செயல்படுவேன். ஏனெனில் இந்த மாதிரி விஷயங்களில் வறட்டுப் பிடிவாதம் காட்டுவது நமது கடமையல்ல. பெரிய மனிதர்கள் மற்றும், முட்டாள்கள் மட்டுமே பிடிவாதமான கொள்கையுடன் நடந்து கொள்வார்கள். நான் இரண்டையும் சேர்ந்தவன் அல்ல. நமது சிந்தனைகளை மற்றவர்களின் சிந்தனைகளுடன்

---

★ அ.நி.வி. (சட்ட) டி., தொகுதி VI, பாகம் II, 13, டிசம்பர் 1949, பக்கங்கள் 543-52.

இணைத்துக் கொண்டு பள்ளி நாட்களில் நாம் கற்றுக் கொண்ட அதிக பட்சத்திலான பொதுவான எண்ணை (G.C.M.) கண்டுபிடிப்போம். அதாவது சமுதாயத்தின் செயல்பாடுகள் மற்றும் கட்டுக்கோப்பு சம்பந்தமான முக்கியப் பிரச்சினைகளில் அதிகபட்ச அளவிலான ஒருமைப்பாடு அவசியம். பதிவாளரிடம் மூன்று ரூபாய் கொடுத்து தினந்தோறும் மாற்றம் செய்துக் கொள்ளத்தக்க மெமோராண்டம் ஆர்டிக்கில் போன்ற தஸ்தாவேஜிகளின் அடிப்படையில் செயல்படும் ஓர் உயிரற்று கூட்டுப் பங்கு நிறுவனம் அல்ல சமுதாயம். அது உயிருடன் இயங்கிக் கொண்டிருக்கிறது, நாம் வழிவழியாகக் கண்டு கொண்டிருக்கும் இந்த சமுதாயம், எதன் உறுப்பினர்களாக இருப் பதில் பெருமை கொள்கிறோமோ, அந்த சமுதாயம் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

***பாபு ராம் நாராயண் சிங்:*** *(பீகார் - பொது) படைக்கப்பட்ட நாளிலிருந்தே.*

***டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா:*** *என்று அது தொடங் கியது என்பது யாருக்கும் தெரியாது. கௌடில்யரின் அர்த்தசாஸ்தி ரத்தின் கொடுக்கப்பட்டுள்ள சான்றுகளின் அடிப்படையில் 2300 ஆண்டுகளுக்கு முன்பே இது ஒரு முதிர்ச்சியை அடைந்துள்ளது என்று கூறமுடியும். திருமணப் பிரச்சினைகள், குற்றங்கள், தண்டனைகள், மனோதத்துவக் குழப்பங்கள், அரசியல் புதிர்கள் போன்ற பல பிரச் சினைகள் குறித்து கௌடில்யர் அர்த்த சாஸ்திரத்தில் விளக்கியுள்ளது போன்றே எவ்வித வேறுபாடுமின்றி இன்றும் அவை நம் முன் உள்ளன. அந்த நூலைப் படிக்காத என் நண்பர்களை அதைப் படிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். சுக்ர நிதி சாரம் என்ற நூலையும் படியுங்கள், நமது பண்டைய இந்துச் சட்டத்தின் மற்ற அரசியல் படைப்புகளைப் படித்துப் பாருங்கள்.*

***திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:*** *துரதிர்ஷ்டவசமாக கௌடில் யரின் அர்த்தசாஸ்திரம் கிடைப்பதில்லை.*

***டாக்டர் பட்டாபி சீதாராமையா:*** *அதைப் பெற வேண்டு மென்ற எண்ணம் இருப்பவர்களுக்கு அது எளிதாகக் கிடைக்கிறது.*

***திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:*** *என்னால் முடிந்த அளவுக்கு நான் முயற்சி செய்துவிட்டேன்.*

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** எனவே இந்து சமுதாயத்தில் ஏற்பட்டுள்ள மாற்றங்களின் குணவியல்பினை காட்டும் முந்தைய வரலாறுகள் மற்றும் முன்னேற்றத்திற்கான பரிணாம வளர்ச்சிக்கான நிலைமைகளை கவனித்து நோக்க வேண்டும். இந்து சமுதாயம் மற்றும் இந்து கலாசாரத்தின் மீது நாம் பெருமை கொள்ள வேண்டுமென்று கூறவில்லை, எப்படி இருப்பினும் இந்தியக் கலாசாரம் என்பது பெரும்பாலும் இந்துக் கலாசாரந்தான். இந்திய சமுதாயம் என்று அழைக்கப்படுவதும் இந்து சமுதாயந்தான். வேறுபல மக்கள், ஜாட் இனத்தினர், மொகலாயர்கள், துருக்கியர்கள், ஆங்கிலேயர்கள் நம்மை வந்தடைந்து நம்முடன் கலந்தாலும் நம்மிடம் உள்ள பல நல்ல விஷயங்களை அவர்கள் ஒருவேளை தன்மயமாக்கிக் கொண்டிருப்பார்கள். அவர்களிடம் உள்ள பல நல்ல விஷயங்களை நாம் ஏற்றுக் கொள்ள அவர்கள் உதவியுள்ளனர். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடைபெற்றுவரும் இந்த கலாசாரங்களின் சங்கமம், நமது தேசிய கலாசார நீரோட்டத்தை அதன் உள்ளடக்கத்திலும் பரந்த தன்மையிலும் மிகவும் செழுமைப் படுத்தியுள்ளது. இந்தப் பரம்பரை செல்வத்திற்கு நாம் வாரிசுதாரர்கள். அதை நாம் எப்படிக் கையாளப் போகிறோம்? அதற்குப் பின் ஏதாவது தத்துவம் இருக்கிறதா அல்லது எந்தத் தொடர்பின்றியும் நிகழும் வளர்ச்சியா? சூழ்நிலைகளினால் ஏற்பட்ட வளர்ச்சியா, நேர் எதிரான சக்திகள் தாறுமாறாக ஒன்றுக்கொன்று இணைப்பில்லாமல் குழும்பிக் கிடக்கும் கலவையா, அல்லது பல்வேறு காரணக் கூறுகள் தன்வய மாக்கப்பட்டு தகுதியானவைகள் கரைந்து தகுதியற்றவைகள் வெளித்தள்ளப்பட்ட திரவமா? இதுவே நாம் கவனிக்க வேண்டிய விஷயங்கள். இந்த முக்கிய சீர்திருத்தத்தை கொண்டு வருவதற்கு முன்பு இந்த விஷயங்களைக் கவனமாக ஆய்வு செய்தோமா? இந்தச் சீர்திருத்தத்தை யார் ஆரம்பித்தார்கள்? இது எப்பொழுது ஆரம்பிக்கப்பட்டது? யார் காலத்தில் இது துவக்கப் பட்டது? தேசிய அரசு பதவிக்கு வந்த பிறகு இது ஆரம்பிக்கப் பட்டதா அல்லது இது பழைய அரசின் செயலாளர் அலுவலகத்திலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட பூர்வீக சொத்தா? இதில் நாம் முன்கை எடுத்துள்ளோமா? அது சம்பந்தமாக நம் பங்கு என்ன? நான் கூறியபடி சமூகம் ஒரு உயிருள்ள அமைப்பு ஆகும். அதன் பின்னே சில தத்துவக் கொள்கைகள் உள்ளன. அதன் முன்னே சில பொருளாதாரத் திட்டங்கள் உள்ளன. இந்து சமுதாயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வேறு எந்த சமூகமாவது இந்து சமூகத்தைப் போன்று சோஷலிசக் கருத்துகளை இயல்பாக உள்ளடக்கியுள்ளதா?

எனக்கு 50 ஏக்கர் நிலங்கள் உள்ளன. எனக்கு இரண்டு மகன்கள் உள்ளனர். எனது இரண்டு மகன்கள் ஒவ்வொருவரும் தலா இருபத்தைந்து ஏக்கருக்கு வாரிசுதாரர்களாக இருப்பார்கள். எனது மூத்த மகனுக்கு நான்கு மகன்கள். ஒவ்வொரு மகனுக்கும் ஆறு ஏக்கர் மட்டும் கிடைக்கும். நம்முடைய வாரிசுரிமைப்படி சொத்தைக் குவிப்பதற்கு வாய்ப்புள்ளதா? சிறிதுமில்லை. அது மிகச் சிறந்த முறையிலான சோஷலிச அமைப்பு. இந்த சோஷலிச முறையை அழித்துவிட்டு அதற்கு மாறாக ஒவ்வொரு தனிநபரும் பிறப்பினால் வாரிசுரிமை பெறாமல் எஞ்சுநர் உரிமை அடிப்படையில் சொத்துரிமை பெறும் தனிநபர் நாகரீகத்தைக் கொண்டுவர விரும்புகிறீர்களா? ஒரு வேளை சாதாரண மக்களின் வம்ச விருத்திக்கான சட்ட மசோதா ஒன்றைக் கொண்டு வருவதே டாக்டர் அம்பேத்கரின் அடுத்த நடவடிக்கையாக இருக்கும் என நினைக்கிறேன். பிறகு நீங்கள் பிரபுக்கள் கூட்டத்தை உருவாக்கி அதைப் பேணிப் பாதுகாப்பீர்கள். வர்க்கங்கள் அற்ற சமுதாயத்துக்கு பதிலாக வர்க்கங்களைக் கொண்டுள்ள சமுதாயத்தை நிலை நாட்டுவீர்கள். அறிவும் சொத்தும், புலமையும், செல்வமும் சமநிலையிலிருக்கும் ஒரு வர்க்கமற்ற சமுதாயத்திற்குப் பதிலாக பணமே ஆதிக்கம் செலுத்தும் ஒரு சமுதாயத்தை உருவாக்கப் போகிறீர்கள். அதுதான் மேலை நாடுகளில் நடந்து கொண்டிருக்கிறது. கீழை நாடுகளில் நடக்க முடியாதது அதுவேதான். இங்கே சமூக அமைப்புகளின் மூலம் செல்வத்தையும் கலாசாரத்தையும் சமநிலைப் படுத்தியுள்ளோம். அந்த நிலை ூய உருவாக்கிய பிறகு செல்வத்தைவிட கலாசாரத்துக்கு அதிக மதிப்புக் கொடுத்துள்ளோம். செல்வம் அதற்குத் தாழ்ந்த நிலையையே பெற்றுள்ளது. இப்பொழுது நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? பத்து லட்சம் ரூபாய் குவிக்குமளவுக்கு ஒரு வழக்குரைஞருக்கு வாய்ப்பளிக்கப்படுகிறது. அவர் ஒரு மிகப் பெரிய நபராகிவிடுகிறார். அவருடைய சகோதரர்களால் கொடுக்க முடிந்த தொகையில் அவர் இங்கிலாந்து சென்று பாரிஸ்டருக்குப் படித்திருப்பார். பிரிட்டிஷார்களின் லட்சியத்தின் அடிப்படையில் கொண்டு வரப்பட்ட சட்டத்தின்படி அவர் கற்றதனாலாய பயன் அவருக்கு மட்டுமே உரிய சொத்தாகி விடுகிறது. ஆனால் அதேநேரத்தில் விவசாயிகள் மற்றும் வியாபாரிகளான மற்ற சகோதரர்கள் அவரைப் போன்ற நியாயமாக உழைத்திருந்தும் சொத்தை பாரிஸ்டரான சகோதரனுடன் பங்கிட்டுக் கொள்ள வேண்டியுள்ளது. பாரிஸ்டர் தன் சொத்துக்களை மற்ற சகோதரர்களுடன் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. இது நியாயமா? நமது சமுதாயத்தில் ஏற்றுக்

கொள்ளப்பட்ட உன்னதமான மதிப்புகளுடன் ஒப்பிட்டால் இது சகிக்க முடியாத முட்டாள்தனம்.

இப்பொழுது ஒரு நிமிடம் கேள்வி ஒன்றைக் கவனிப்போம். இந்த சமுதாயத்தின் செயல்பாடுகள் மற்றும் கட்டமைப்பின் மீதான சமூக, அரசியல், பொருளாதார மற்றும் செறிமுறைகளின் தாக்கத்தை குறித்து நீங்கள் ஒரு விசாரணைக் குழுவை அமைத்திருக்கிறர்களா? ஒரு ஐயாயிரம் ஆண்டுகளாக சூழ்நிலைகள் மற்றும் காலத்தின் தாக்குதல்களினால் அழிந்துவிடாமல் நிலைத்து நிற்கும் இந்த கட்டமைப்பின் பின் உள்ள மனோதத்துவத்தை ஆய்வுசெய்து தயாரிக்கப் பட்டுள்ள அறிக்கை ஏதாவது உங்களிடம் உள்ளதா? ஏன் அது ஐந்தாயிரம் ஆண்டுகளாகவோ, நிச்சயமாக பதிமூன்றாயிரம் ஆண்டு களாகவோ, ஒரு வேளை முப்பதாயிரம் ஆண்டுகளாகவோகூட இருக்கலாம். ஏனெனில் நமது சமுதாயம் மற்றும் பண்டைய நாகரிகம், மகாபாரதம் வேதங்கள் ஆகியவைகளின் காலத்தைக் குறித்து மூன்றுவிதக் கருத்துக்கள் உள்ளன. ஏன் நீங்கள் அவ்வாறு செயல்பட வில்லை? ஆன்ட்வெர்ப்பிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சிறிதளவு இரும்புக்கு சுங்கவரிச் சலுகைக் கொடுக்க வேண்டுமென் றால் 3000 ரூபாய் மாத ஊதியத்தில் மூன்று அதிகாரிகளைக் கொண்ட சுங்க வரி போர்டை நியமிக்கிறீர்கள். இந்த நாட்டிலுள்ள எல்லா முதலாளிகளிடமிருந்தும் பெறப்பட்ட சாட்சியங்களிலிருந்து அறிக்கை ஒன்றை பெறுகிறீர்கள். அதை நிதி இலாகாவில் பரிசீலனை செய்து விட்டு சட்டமன்றத்துக்குக் கொண்டு செல்கிறீர்கள். பிறகு வரிச் சலுகை கொடுக்கிறீர்கள். நமது சமூகத்தைப் பொறுத்தவரை நீங்கள் எப்படி நடந்து கொண்டிருக்கிறீர்கள்? இந்தப் புராதன சமுதாயம் பண்டைய காட்டுமிராண்டித்தனத்தின் நினைவுச் சின்னம், கிழடுத் தட்டிப்போன விஷயங்களின் அறிகுறிகள் என்று கையைச் சொடக்கு கிறீர்கள். இல்லை, நாமெல்லாம் முற்றிலுமாக மறைந்து விடுவோம் என்று கூறுகிறீர்கள்.

லண்டனில் உள்ளதைப் போல் நமது பல்கலைக் கழகங்களை உருவாக்கியிருக்கிறோம். லண்டனில் உள்ள உயர் நீதிமன்றங்களில் நடைபெறுவது போன்ற சட்ட வழிமுறைகளை நாம் ஏற்றுக் கொண் டுள்ளோம். மேலை நாட்டுப் பாராளுமன்றத்தைப் போன்று நமது சட்டமன்றங்களையும் மேலவைகளையும் உருவாக்கியுள்ளோம். மேலை நாட்டு குடியுரிமைச் சட்டங்களையும், சமூக அமைப்புகளை யும் மேலை நாட்டு நடத்தை முறைகளையும் சமூகத்தையும் பகர்ப்பு செய்ய வேண்டியதுதான் எஞ்சியுள்ளது. தயவுசெய்து என்னைத்

தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். நீண்டகாலமாக விவாகரத்தை அனுதாபத்துடனேயே நோக்கினேன். என்னுடைய மனைவியை விவாகரத்து செய்ய நினைத்துக் கொண்டிருக்கிறேன். அவளும் அதற்கு மதிப்புக் கொடுத்து அதையே அவளும் திரும்பிச் செய்ய நினைக்கிறாள். அதுவல்ல விஷயம், இந்த மசோதாவின் பல அம்சங் களை ஆதரிக்கிறேன் என்பதைக் கூறிக்கொள்கிறேன். ஆனால் இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு இந்திய மரபுகளை, அமைப்பு களைப் பற்றிய உங்கள் கண்ணோட்டம் மற்றும் அணுகுமுறையும் எப்படியுள்ளது என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இந்தப் பிரச்சினையை அவசர கோலத்தில் முற்றிலும் ஆய்வு செய்யாமல் கையாளும் முறை என்னுடைய கற்பனைக்கு எட்டாதது மட்டு மின்றி எனது கொள்கைகளுக்கும் மாறானது. சட்டமன்றத்தை விட்டு காங்கிரஸ் வெளியேறிய காலத்திலிருந்தே இந்த மசோதா கிடப்பில் உள்ளது என்று நீங்கள் கூறுவீர்கள் என்பது எனக்குத் தெரியும். அது கிடப்பில் உள்ளது என்பது எனக்குத் தெரிந்ததுதான். 1938 ஜூலை மாதத்தில் இந்தியாவின் எல்லையாகக் கருதப்பட்ட எகிப்து மற்றும் சிங்கப்பூருக்கு ராணுவம் அனுப்பப்பட்டதால் சட்டமன்றத் திலிருந்து வெளிநடப்புச் செய்யவேண்டுமென்று காங்கிரஸ் கட்சி நிறைவேற்றிய தீர்மானம் உங்களுக்கு ஞாபகத்தில் இருக்கும் என்று நினைக்கிறேன். எனவே, அந்த நடவடிக்கைக்கு எதிராக, சட்ட மன்றத்தின் திட்டவட்டமான அனுமதியின்றி வெளிநாடுகளுக்கு படைகளை அனுப்பமாட்டோம் என்று அரசு அளித்த வாககுறுதியை மீறியதற்காக நாம் வெளிநடப்புச் செய்தோம். அதிலிருந்து 1946 வரை உள்ளே செல்லவில்லை. இந்த நேரத்தில், தேசப்பற்றில் நாட்டம் இல்லாதவர்கள், மேலைநாடுகளது நாகரிகத்தின் பாதுகாவ லர்கள், தங்கள் வாழ்வின் பெரும்பகுதியை இங்கிலாந்திலோ வெளிநாடுகளிலோ கழித்தவர்கள் ஒரு சிலர் ஒரு குழுவாக அமைக்கப்பட்டு, அக்குழுவால் இந்தச் சட்டம் நமக்கு அளிக்கப்பட் டுள்ளது. 1944 அக்டோபரில் நான் அகமத்நகர் ஜெயிலில் இருந்த போது இந்து சட்ட சீர்திருத்தக் குழுவின் முதல் அறிக்கை எனக்குக் கிடைத்தது. இந்தச் சட்டத்தின் முக்கிய காரணகர்த்தா, புதிய அரசியல் சட்டத்தில் நாம் பெற்றுள்ள சாதனைப் பெருமைகளை நமக்கு அளித்துள்ள திரு. பி.என். ராவ் அவர்கள்தான். நமக்காக பெரும் பணியாற்றியுள்ளவர் அரசியல் சட்டம், தீர்ப்புவழிச் சட்டம், தொகுப்புச் சட்டம், நடைமுறைச் சட்டம் ஆகியவைகளில் அவர் கொண்டிருந்த திறமைக்காக பெரும் புகழ் பெற்றவர். தாயபாகா முறை நடைமுறையிலுள்ள வங்காளத்தின் கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் நீதிபதியாக இருந்தவர். மெட்ராஸ் மற்றும் இரு மாகாணங்களில்

*மிதாக்ஷரா* முறையும் பம்பாயில் மயூகா முறையும் நடைமுறையிலுள்ளதை நீங்கள் அறிவீர்கள். மிதாக்ஷர நடைமுறையில் எந்த அனுபவமும் இல்லாத இவர் கல்கத்தா உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாக இருந்தார். ஈடு இணையற்ற சட்ட அறிவு உள்ள இவர்தான் இந்தச் சட்டத்திற்கு அடிகோலிட்டவர், பிறகு, வெகுஜனக் கட்சியான காங்கிரசுக் கட்சிக்கு இதைக் குறித்து மத்தியச் சட்டமன்றத்தில் விவாதிக்க வாய்ப்பில்லாமல் போய்விட்டது. திரு. அசோக ராய் சட்டமன்ற உறுப்பினராக வந்தபோது தோணிக் கழியால்கூட இந்த மசோதாவைத் தொடமாட்டேன் என்று கூறினார். (திரு. மகாவீர் தியாகி : தோணிக் கழி என்றால் என்ன?) தோணியைத் தண்ணீரில் செலுத்துவதற்கான கழிதான் அது. இருப்பினும் இந்தச் சட்டம் வந்தாகிவிட்டது. நமது தேர்தல் அறிக்கையில் அதைப் பற்றி ஒரு வார்த்தைகூட குறிப்பிடாமல், அதற்காக வெகு ஆவலாகக் காத்திருந்தது போல் நாம் அதை எடுத்துக் கொண்டுள்ளோம். சீனாவிலிருந்து பெருவரை உள்ள நாடுகளின் பிரச்சினைகளை விவரித்துவிட்டு, முக்கியமான தொழில்களைத் தேசியமயமாக்க வேண்டுமென்று ஆர்வத்துடன் அறைகூவல்விட்டு, ஜமீந்தாரி முறை மற்றும் குடி முதலியவைகளை ஒழிக்க வேண்டுமென்று அறிவிப்புகளை அள்ளி வீசிவிட்டு இந்தியாவுக்கு மிகவும் அடிப்படைக் கூறாக விளங்கும் சமூகசீர்திருத்தங்களைக் குறித்து மௌனம் சாதிக்கும் விவரமான தேர்தல் அறிக்கைகளை வெளியிடும் கட்சி எதையாவது, எங்காவது சந்தித்திருக்கிறீர்களா?

அது ஒரு சாதாரண சிறு சமூகச் சீர்திருத்தம் மட்டுமல்ல. இந்தியாவில், சமயம் சமுதாயத்துடன் பின்னிப் பிணைந்து கலந்துள்ளது. எந்த நடவடிக்கைக்கும் பின்னே சமய அங்கீகாரம் உள்ளது. இப்பொழுது நான் மிகவும் மத நம்பிக்கையில்லாதவன். ஆனால் அடுத்தவர்களது உணர்வுகளுக்கு அதிகம் மதிப்புக் கொடுப்பவன். இல்லையென்றால் நான் ஒரு பண்பற்ற காட்டுமிராண்டிதான். மற்றவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கைகளின் மீது என் மாற்றுக் கருத்துகளை செயல்படுத்த விரும்பினால் நான் உண்ணும் உணவுக்கு அருகதையற்றவன் ஆவேன். பிறகு சமயம் மட்டுமல்ல, பொருளாதாரக் கூறுகள், சமுதாயக் கூறுகள் மற்றும் இதர விஷயங்களும் பின்னிப் பிணைந்துள்ளன. இந்தக் கூட்டுக் குடும்ப முறை காலம் காலமாக உருவாக்கப்பட்ட ஒன்று. கூட்டுக் குடும்ப முறை என்றால் என்ன? அது ஒரு காப்பீட்டு நிறுவனம் போன்றதாகும். அது ஒரு கூட்டுறவு சங்கம். அது ஒரு உழைப்பாளர் சமூகம்.

மாலை 5 மணி

அதில் ஏழை சகோதரர்கள் எல்லோரும் சேர்ந்து உழைக்கின்றனர். எல்லா சகோதரர்களும் ஒருவருக்காக எல்லோரும் எல்லோருக்குமாக ஒருவரும் சேர்ந்து வாழும் கூட்டுறவு அமைப்பாகும். இறந்த சகோதரனின் மனைவியை உயிருடன் வாழும் எஞ்சிய சகோதரர்கள் பேணிப் பாதுகாக்கும் காப்பீட்டுக் கழகம் அது. காப்பீட்டுத் திட்டத்தை மகாத்மா எதிர்த்தபோது இப்படித்தான் கூறினார் எல்லோரும் மகாத்மாஜியாக ஆக முடியாது என்பது எனக்குத் தெரியும். இந்துக் கூட்டு குடும்ப அமைப்பு சமயப் பின்னணியின் அடிப்படையில் சமூகப் பிணைப்பினால் ஒன்றாக இணைந்து இந்த மூன்று அம்சங் களையும் கொண்டுள்ள ஒரு புனிமான கூட்டமைப்பாகும். உங்கள் உழைப்பு முழுவதாலும், உங்கள் சட்டங்கள் எல்லாவற்றாலும் இங்கிலாந்தின் ஹாலிஸ்பரியின் சட்டங்களின் மூலம் இதற்கு சமமான ஒன்றை உங்களால் உருவாக்க முடியுமா? தேசப்பிதா மீண்டும் கண்டுணர்த்திய கைராட்டுப் பொருளாதாரத்திற்கு இணை யாக எதையும் உருவாக்க முடியாதோ அது போன்று தான் இதுவும். வழக்கமான என் கௌரவமற்றத் தன்மையுடன் இதை எடுத்துரைப் பதற்கு என்னை அனுமதியுங்கள். 1938-ல் ''இந்து இல்லம் மீண்டும் கண்டுபடிக்கப்பட்டது'' என்ற நூலை எழுதினேன். நான் மத நம்பிக்கையற்றவனாக வாழ்க்கையில் நுழைந்த போது, கிருஸ்தவ பாரம்பரிய ரீதியில் மேலைநாட்டு மாறுபட்ட கருத்துகளின் அடிப் படையிலும் வளர்க்கப்பட்டபோது, இந்த சமூகத்தின் ஒவ்வொரு விழாவிலும், சடங்குகளிலும், ஒவ்வொரு சமயப் பழக்கவழக்கங் களிலும், ஆழ்ந்த சமய, வாழ்க்கையை மேம்படுத்தும், உயிர்ப்பூட்டும், மேம்பாட்டுக்கு வழிவகுக்கும் ஏதோ ஒன்றைக் கண்டேன். நான் என் சகோதர சகோதரிகளுடன் வசித்தபோது இந்த இல்லத்தை நான் திரும்பவும் கண்டுபிடித்தேன். அதற்குப்பிறகு இந்தச் சிறிய நூலை எழுதத் துணிந்தேன். இந்த விஷயங்களை அதில் உயர்வாகச் சித்தரித்துள்ளேன். ஆனால் இந்த உயர்ந்த லட்சியங்கள் வாழ்க்கை யில் இன்றைக்கு உள்ளதா என்பதை நான் கூறமாட்டேன். ஓர் அமைப்பை விமர்சிக்கும்போது அதன் தூய்மையான தன்மையில் அதை விமர்சிக்க வேண்டும். அதன் சீர்கெட்ட போலியை அல்ல. ஏதாவது கருத்தை ஒப்பற்றதாகச் செய்ய வேண்டுமென்றால், ஏதாவது அமைப்பை உயிரூட்டிப் பிரபலப்படுத்த விரும்பினால், அது உருவான விதத்தை தேசத்திற்கு முன்பு வைத்து அதன் ஆதரவைப் பெறுங்கள். இந்த மசோதாவின் ஒவ்வொரு விதியின் சாதக பாதகங் களை நான் செல்லுமிடங்களிலெல்லாம் எடுத்துரைக்கிறேன். பார்ச னின் முட்டைகளைப் போல் சில பகுதிகளில் இது நன்றாகவும் சில

பகுதிகளில் மோசமாகவும் இருக்கலாம். பெண்கள் தங்கள் கால்களில் நிற்கும் நிலைக்கு வந்துவிட்டார்கள். எனவே அவர்களுக்கு இவை செய்யப்பட வேண்டும் என்று நீங்கள் கூறினால் அதை எவ்விதத்திலும் நிறைவேற்றுங்கள். ஆனால் அதற்கு ஏன் இந்த அவசரம்? அவர்கள் தங்கள் கால்களிலே நிற்க வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். அவர்கள் பிறர் உதவியின்றி வாழும் நிலைக்கு வந்துவிட்டார்கள். அடுத்த சட்டமன்றத்தில் இந்த அவையின் பாதி இடங்களை அவர்கள் பிடித்துவிடுவார்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன். அவர்கள் மட்டும் நினைத்தால் இருநூற்றி ஐம்பது பெண்கள் தாராளமாக வந்துவிடுவார்கள்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** அவர்களை அனுமதிப்பீர்களா?

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா:** மாகாண மாதிரி அரசியலமைப்புக் குழுவின் முன்பு திருமதி ராஜகுமாரி பெண்களுக்கு ஒதுக்கீடு தேவையில்லை என்று கூறியதை நான் பாராட்டுகிறேன். அது ஒரு துடுக்குத்தனமான கருத்து என்று எண்ணினேன். அப்படிக் கூறுவதற்கு மிகுந்த பொறுப்பு வேண்டும். ஆனால் பெண்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டதை இப்பொழுது உணர்கிறேன். ஓர் அரை டஜன் பெண் உறுப்பினர்கள் இந்த மசோதாவை நிறைவேற்ற நம்மை கரகரவென்று இழுத்துச் செல்கையில் இங்கு இருநூற்றைம்பது உறுப்பினர்கள் இருந்தால் நம் நிலை என்னவாகும் என்பதை எண்ணிப் பாருங்கள். நான் தமாஷ் செய்யவில்லை. தேர்வின் போது எனக்கு சந்தர்ப்பம் அளிக்கப்படுமானால் திரு. ரோகிணி குமார் சௌத்ரி குறுக்கிடினும் நான் அதை நிறைவேற்றுவேன்.

*(இந்த நேரத்தில் துணை சபாநாயகர் நாற்காலியை விட்டு சென்றபோது திரு. எஸ்.வி. கிருஷ்ண மூர்த்தி ராவ் (தலைவர் குழுவில் ஒருவர்) நாற்காலியில் அமர்ந்தார்.)*

இது சம்பந்தமாக 1949 மார்ச் 12-ஆம் தேதி ''பிச்சர் போஸ்டு'' என்ற சஞ்சிகையில் வெளிவந்துள்ள பின்வரும் தகவலை உங்களுக்குப் படித்துக் காட்ட ஆசைப்படுகிறேன்.

''சமத்துவத்துக்கான கோரிக்கை பெண்களிடமிருந்து இடைவிடாது வந்து கொண்டிருக்கிறது. சமத்துவம் என்று அவர்கள்

குறிப்பிடுவது எது? நுகர் பொருள்களைப் பார்த்தால், பெரும்பங்கு அவர்களிடமே இருக்கிறது. விளம்பரங்களில் 90 சதவீதம் அவர்களுக்காகவே வெளியிடப்படுகிறது. கதைப் புத்தகங்கள் வெளியிடுபவர்களும் பெண்களையே இலக்காகக் கொண்டுள்ளனர். துணிகளைப் பொறுத்தவரையில் நியாயமான விலையில், அவர்களுக்குத் தான் எத்தனை வகைப்பட்ட ஆடைகள் உள்ளன. ஆனால் அசிங்கமான, நைந்துபோன ஆடைகளை அணிந்துள்ள ஆண்கள், ஒளி மங்கியக் கண்ணாடிக் கூண்டுகளில் உள்ள ஆடைகளைப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, என்ன விலையோ என்று ஏங்கிப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நம்முடைய தீர்க்கதரிசனக் கண்களைக் கொண்டு எதிர்காலத்தை நோக்குவோம். பெண்கள் சமத்துவத்துடன் நின்று விடாது அதைவிட அதிக உரிமை பெற்றுள்ளனர். கன்னிகையரின் செல்ல நாயாக, பெண்கள் ஒதுக்கித் தள்ளும் குப்பைகளில் ஜீவிப்பவனாகிவிட்டான் ஆண் மகன்.''

பொறுமையைக் கடைப்பிடிப்பதன் மூலம் அவர்கள் எதையும் இழக்கப்போவதில்லை என்று நமது சகோதரிகளுக்கு உறுதியாகக் கூறிக் கொள்கிறேன். காசியைச் சேர்ந்த சுவாமிஜி ஒருவருடன் சமயக் கூட்டமொன்றில் கலந்து கொண்டதற்காக என்னைக் கேள்வி கேட்டனர். சிறந்த பெண் தொண்டரான பிரபாவதி ராஜே, பழைய ஜோன் ஆப் ஆர்க்கைப் போல் கூட்டத்தினரைக் கவர்ந்திழுப்பதைக் கண்டு, மத நடவடிக்கைகளில் அதிகம் ஈடுபாடு உள்ளவர்களை அனுமதிப்பதால் உள்ள ஆபத்தை உணர்ந்தேன். அழைப்பின் பேரில் அங்கு சென்ற நான் ஒரு மணி நேரம் உரை நிகழ்த்தினேன். எதிர் தரப்பினரின் மேடையில் ஏன் கலந்துகொண்டீர்கள் என்று என் மீது குற்றம் சாட்டினார்கள். ''ஏற்கெனவே நமது கொள்கைக்கு மாற்றம் அடைந்தவர்களிடம் பேசுவதால் என்ன பயன்? இன்னும் மாற்றம் அடையாமல் இருப்பவர்களை மாற்றுவதுதானே என் கடமை'', என்று கூறினேன். இந்தப் புதிய இந்துச் சட்டத் தொகுப்பை மக்களுக்கு எடுத்துணர்த்துவதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. விஷயத்தைத் துரிதப்படுத்தி, பெரும்பான்மை பலத்தின் மூலம் முடிவுக்கு வந்துவிடக்கூடாது. எப்பொழுது வேண்டுமானாலும் அது நிறைவேறட்டும். மக்களை அறிவுப்பூர்வமாக உணரச் செய்ய வேண்டும். அறிவூட்டும் பிரசாரத்தின் மூலம் நாம் பலனை அடையவேண்டும். முக்கியத் தொழில்களை நாம் தேசிய மயமாக்கவில்லை. இந்த உறுதிமொழி எங்கே போயிற்று? நம்மிடம் பணம் இல்லாததால் முதலாளி கொடுத்த பதிலடியில் நம்து அறிவிப்புகளை வாபஸ் பெற்றுக்கொண்டோம். நான் பொறுமையைக் கடைப்பிடிப்பதை

நம்புகிறவன். இன்னும் சில நாட்களில் எல்லாம் சரியாகிவிடும். தற்போதைக்குத் தேசிய மயமாக்குவதைக் கண்டு அஞ்சுகிறோம். ஜமீன்களை ஒழிப்பதில் தயக்கம் காட்டுகிறோம். நதிநீர்த் திட்டங் களைத் தொடர்வதில் தயக்கம் காட்டுகிறோம். குடிசைத் தொழில் களின் வளர்ச்சியில் தயக்கம் காட்டுகிறோம். ஏனெனில் பணவீக்கம் நம்மைப் பயமுறுத்துகிறது. தேவைப்படும் இந்த வளர்ச்சிப் பணி களை நம்மால் செய்ய முடியவில்லை. நம்மைச் சுற்றிக் குழப்பங் களையும், முரண்பாடுகளையும் சந்திக்கிறோம். ரயில்வேப் பயணம் போன்று, வாழ்க்கைச் சுகமான பாதையில் செல்வதில்லை. கரடு முரடான பாதையில், நெரிசல் மிகுந்த போக்குவரத்தில், காரில் பயணம் செய்வது போன்றது அந்தப் பயணம். தங்கள் எஜமானர் களுக்கு அறிவூட்டும் பயனுள்ள நடவடிக்கைகளில் ஈடுபடுவது இந்த மரியாதைக்குரிய அவை உறுப்பினர்களின் கடமையல்லவா? நமது எஜமானர்களை அறிவுடையவர்களாக்குவோம் என்று வாக் குரிமை விரிவுபடுத்தப்பட்ட பிறகு ராபர்ட் லோ கூறியவுடன் 1878-ல் நடந்தது என்ன என்பது உங்களுக்குத் தெரியும். நமது எஜமானர்கள் வெளியே இருக்கிறார்கள். நாம் எஜமானர்கள் இல்லை. அமைச்சர் களும், நமது எஜமானர்கள் இல்லை. நம் விருப்பப்படி அவர்களுடன் நாம் நடந்து கொள்ளமுடியும். நமக்கு விருப்பமில்லையென்றால், நாளைக்கே அவர்களை நீக்கிவிட முடியும். அது நமது உரிமை. நமக்களிக்கப்பட்டுள்ள சலுகை அது. அதுதான் நம் பாதுகாப்பும்கூட. எனவே இந்த விஷயத்தில் நாம் மெதுவாகச் செல்ல வேண்டும் என்று கூறுகிறேன். சமூகச் சீர்திருத்தங்களைப் பொறுத்தவரையில் நான் யாருக்கும் சளைத்தவனல்ல. இந்த அவைக்கு வருகை தந்துள்ளவர் களில் பாதிப்பேர் பிறப்பதற்கு முன்பே, 51 ஆண்டுகளுக்கு முன்பே, 1898-ல் பி.ஏ. வகுப்பில் படிக்கும்போதே சமூகச் சீர்திருத்தப் பணியில் ஈடுபட்டிருந்தேன். அதிலிருந்து சமூகச் சேவையிலுள்ள ஆர்வம் எனக்குக் குன்றவில்லை. பிரம்ம சமாஜ சீர்திருத்தவாதி களால் சிறுவயதினிலேயே கவரப்பட்டேன். நான்காவது படிவத் திலிருந்து பி.ஏ. வகுப்புவரை நான் கல்வி கற்ற கிருஸ்தவப் பாதிரி களின் சேவை உணர்வுகள் என்னில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின.

எனவே, இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் இப்பொழுது நாம் என்ன செய்யப் போகிறோம் என்பது முக்கியமல்ல, அதை நாம் எப்படிச் செய்யப் போகிறோம் என்பதே முக்கியமானது. நாளைக்கே நீங்கள் வாக்காளர் முன்பு நிற்க வேண்டியுள்ளது. நேற்று எவ்வளவு மோசமான நிலைமைக்கு நாம் ஆளாகியிருந்தோம். நேற்று நான் இங்கில்லை. இல்லையெனில், அந்தக் காட்சிகளை என் கண்

களினாலேயே கண்டிருப்பேன். ஆள்வாருக்குச் சென்றிருந்த நான், நேற்றிரவு பதினோரு மணிக்குத்தான் திரும்பி வந்தேன். தடியடிப் பிரயோகம் நடைபெற்றதாகவும் சிலர் படுகாயமுற்றதாகவும் என் மனைவி நான் திரும்பி வந்தவுடனேயே தெரிவித்து விட்டாள். சாதாரணமாக, இம்மாதிரிச் செய்திகள் ஒரு நபரிடமிருந்து மற்றொரு நபருக்குப் பரவும்போது, கைகால் முளைத்துப் பெரிதாகிவிடும். இன்றைக்கு நான் என் முன்னே காணும் காட்சி மிகவும் வருந்தத் தக்கதாகத்தான் இருக்கிறது. பொதுவாக நான் உத்வேகத்துடனோ அல்லது ஆர்வத்துடனோதான் பேசுவேன். காலரியில் அமர்ந்திருக் கும் மூன்று பெண் காவலர்களின் காட்சியினால் தோன்றிய எரிச்சலில் இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறேன். இந்தப் பெண் காவலர்களின் தடிகள் இன்றி இந்த அவையை நடத்திச் செல்ல முடியாதா? காலரியிலும் அதற்குக் கீழேயும் அமர்ந்துள்ள பெண்களை, பெண் காவலர்களின் துணையின்றி நம்பமுடியாதா? நமது சகோதரி களை, இந்தப் பெண்காவலர்கள் குற்றவாளிகளாக்குவதில் நீங்கள் உண்மையிலேயே பெருமை கொள்கிறீர்களா? ஏராளமான காவலர் களைச் சந்தித்துவிட்டோம். இந்த மசோதாவின் சோகமான விளைவு இதுதான். காவலர்கள் பாதுகாவலின்றி இந்த அவையினுள் நீங்கள் நுழைய முடியாதென்றால், ஆண்களுக்கு ஆண்காவலர்களும், பெண்களுக்குப் பெண் காவலர்களும் தவிர்க்கமுடியாதெனின், இந்த முன்னேற்றம், நமது சட்டங்கள், சட்டமன்றங்கள் எல்லாவற்றிற்குமே ஆபத்து என்பதை டாக்டர் அவர்கள் கவனிக்க வேண்டும். இது எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. எனது பொதுவான விமரிசனங் களை இத்துடன் நிறுத்திவிட்டு, நான் மிகவும் அக்கறை கொண்டுள்ள ஒன்றிரண்டு விஷயங்களைக் குறித்துப் பேச விரும்புகிறேன். அதற்கு முன், இச்சட்டத்தின் முன்னோடிகளைக் குறித்து ஓரிரு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த மசோதாவை நிறைவேற்றும் பொறுப்பு டாக்டர் அம்பேத்கரின் தலையில் விழுந்ததை நினைத்து மிகவும் வருந்துகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்டத் துறை அமைச்சர்) **:** அதில் எனக்குச் சிறிதும் வருத்தமில்லை.

**டாக்டர் பட்டாபி சீதாராமையா:** எனக்குத் தெரியும். இல்லை யென்றால், இவ்வளவு பெருமிதத்துடன் உங்கள் இருக்கையில் அமர்ந்து கொண்டிருக்க மாட்டீர்கள். தம்மைப் பற்றிக் கூறியதை டாக்டர் புரிந்து கொண்டிருப்பார் என நினைக்கிறேன். நல்லதற்கோ, கெட்டதற்கோ எதற்கெனினும் சரி, சலிப்படையாத, எதிர்க்க முடியாத, வெற்றி கொள்ளமுடியாத அவருடைய ஆர்வத்தைத்

தான் குறிப்பிடுகிறேன். இந்த அபரிமிதமான உற்சாகமிருப்பதால், நாம் அவரைப் பாராட்டுகிறோம். ஆனால், அதே நேரத்தில் சமுதாயத்தின் உணர்விற்கு ஒவ்வாதவராகிவிட்டார் அவர்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** முற்றிலும் அவர் பொருந்துபவராகவே இருக்கிறார்.

**டாக்டர் பி. பட்டாபி சீதராமையா:** நான் அவரை ஜன விரோதி என்று அழைக்கமாட்டேன். ஆனால் அவர் ஒரு சாதாரண மனிதர் அல்ல என்பதை மட்டும் கூறுவேன். பயிற்சி, சூழ்நிலை, சுற்றுப்புறம், கலாசாரம் ஆகியவைகளெல்லாம் அவரை தேசத்தின் உணர்வுகளிலிருந்து பிரித்துவிட்டன. நம்மிடையே உள்ள அறிவு ஜீவிகளில் அவர் மிகச் சிறந்தவர் என்பதைப் பற்றி எந்த சந்தேகமும் இருக்கமுடியாது. அவர் நல்ல உடல் நலத்துடனும், வளமுடனும் நீண்டநாட்கள் வாழ வேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால் இதற்காக அவருடைய கருத்துகளை நாம் ஏற்க வேண்டிய அவசியமில்லை. பொதுச் சிவில் சட்டத்தை நாம் நிறைவேற்றியபோதே இந்தப் பூசல் கிளம்பியது. நம்முடைய பலத்தையெல்லாம் உபயோகித்து அதைத் தடுக்க முயன்றோம். பயனில்லை. இந்த மசோதா இந்த அவையில், கொண்டுவரப்பட்ட முதல் நாளன்று, நான் கூறியதை உங்கள் நினைவுக்கு மீண்டும் கொண்டு வருகிறேன். பலர் அதை மறந்திருக்கலாம். நான் அதைத் திரும்பவும் எடுத்துக் கூறுவதற்காக அவர்கள் என்னைக் குறை கூற வேண்டாம். முக்கியமான விஷயத்தை நானே மறந்து விட்டேன். அந்த விஷயம் இதுவாகத் தான் இருக்கும் என்று நினைக்கிறேன். ஆலோசனை வழங்குதல் பரிந்துரைத்தல், அல்லது நாம் அமைக்கவுள்ள சமூகக் குழுக்களின் தாக்கத்தின் மூலம் இந்நாட்டில் சமூகச் சீர்திருத்தங்கள் நடைபெற வேண்டும். பிறகு, நான் இங்கிலாந்தின் மாதாகோவில் குழுவின் உதாரணத்தை எடுத்துரைத்தேன். மாதாகோவிலின் முக்கியஸ்தர்களே அதன் பலமாக இருந்தனர். வாழ்க்கையிலும், சட்டத்திலும் அவர்கள் கொண்டுவரும் எந்த மாற்றங்களையும், காமன்ஸ் சபை எவ்வித மாற்றமுமின்றி ஏற்றுக் கொண்டது. மதம் மற்றும் சமூக விஷயங்களில் இவ்வாறுதான் நடைபெற வேண்டும். நாமும் இதைப் பின்பற்றலாம். நிபுணர்களின் ஆலோசனைகள் தேவைப்படும் பொருளாதார விஷயங்களைக் கவனிக்க ஜெர்மனியில் பொருளாதாரக் குழு ஒன்று செயல்பட்டு வந்தது. இந்தக் குழுவின் பரிந்துகைளை ரீஷடாக் ஏற்றுக் கொள்வது வழக்கமாக இருந்தது. நாம் மெதுவாகச் செல்வோம். அப்பொழுதுதான் நாம் எங்கு நிற்கிறோம் என்பது நமக்குத் தெரியும்.

மசோதாவின் சில விஷயங்களை இப்பொழுது பார்ப்போம். நான் உங்கள் பொறுமையை நீண்ட நேரம் சோதிக்கப் போவதில்லை. மசோதாவில் சில நல்ல விஷயங்கள் உள்ளன. சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணத்தை விடப் பதிவுத் திருமணத்தையே நான் அதிகம் விரும்புகிறேன். இரண்டு தரப்புகளுக்கிடையேயான ஒரு நடவடிக்கையை ஆவணத்தில் எழுதிப் பதிவு செய்வதுதான் பதிவுத் திருமணம் எனப்படுகிறது. அது ஓர் ஒப்பந்தமாகும். ஓர் ஆவணம் தயாரானவுடன் சச்சரவுகளும் ஆரம்பமாகின்றன. ஒப்பந்தத்தின் நோக்கம் நியாயமானதுதானா, ஒப்பந்தத்துக்கு அதிக விலை அளிக்கப்பட்டுவிட்டதா, சட்டத்தின் முன் நியாயமான ஒப்பந்தமா என்ற பல கேள்விகள் எழுகின்றன. ஆனால் சமயச் சடங்குகளின் அடிப்படையிலான திருமணத்தில் அதற்கெதிராக எந்தவித மேல் முறையீடும் கிடையாது. திருமணத்தின் நம்பகத்தன்மை மற்றும் அது சரியாக நடைபெற்றதா என்பதைக் குறித்து, எந்த ஒரு புரோகிதரும் தம் வாழ்நாளில் நீதிமன்றம் சென்று சாட்சி கூறப்போவதில்லை. திருமணம் முடிந்துவிட்டபிறகு யாரும் அதைக்குறித்துக் கேள்வி கேட்பதில்லை. அது வாய்ச் சொற்களைப் போன்று நேர்மையானது. வாய் சொற்களின் நேர்மை பிரிட்டிஷார் நீதிமன்றங்களில் பலியாகி விட்டது. மீண்டும் அந்நற்பண்பினைப் பெற்றுவருகிறோம். தமது மகளும் வரப்போகும் மருமகனும் ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் என்பது திருமண மண்டபத்தில் என் நண்பர் கண்டுகொண்டதைப் போன்று பல சூழ்நிலைகள் உள்ளன. சமயக் காரணங்களுக்காக இல்லாவிடினும் பொருளாதாரக் காரணங்களுக்காகவாவது அத் திருமணத்தை நிறுத்தமுடியாத நிலை ஏற்படுகிறது. உடனடியாகச் சடங்குகளை முடித்துக் கொண்டு, திருமணப் பதிவாளர்கள் அலுவலகத்திற்குச் சென்று, அதை அவர்கள் பதிவு செய்தனர். நமது திருமணங்களைப் பதிவு செய்துகொள்ளக்கிடைத்திருக்கும் வாய்ப்பு பெரும் சலுகை என்றுதான் கூறவேண்டும். பெண்களின் சொத்தில் உள்ள பங்கைக் குறித்தும் இறுதியான ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்று விரும்புகிறேன். மகன்களைப் போன்றே மகள்களும் தகப்பனாரின் சொத்தில் சமமான பங்கை அடையவேண்டுமென்று நீண்டகாலமாக நினைத்து வந்தேன். எனது நண்பர் ஒருவருக்கு ஆறு மகள்களும் ஒரு மகனும் இருக்கிறார்கள். ஒவ்வொரு பெண்ணையும் தனித்தனியாக கூப்பிட்டுத் தகப்பனாரின் சொத்தில் அவர்களுக்கும் பங்கு வேண்டுமா என்று கேட்டேன். வேண்டாம் என்று அவர்கள் பதிலளித்தார்கள். ''இது சகோதரனுடன் தகராறுக்கு வழிவகுக்கும். நாங்கள் இதை விரும்பவில்லை. கணவனுடைய சொத்து எங்களுக்கிருக்கிறது. அது எப்பொழுதும் எங்களுக்குள்ளது.'' சீதனம் அவர்களுக்குக் கிடைப்பது

போல் சொத்தில் அவர்களுக்குப் பங்கு கிடைப்பதில்லை. சீதனம் அளிப்பது என்பது மிக அற்புதமான ஒரு விஷயம். சீதனம் அளிக்கும் வழக்கத்திற்கு இணையான ஒன்று உலகில் வேறெங்காவது உள்ளதா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். திருமணத்தின்போது பெண்ணுக்கு அளிக்கப்படும் சீதனம் பெண்ணின் முழு உரிமை பெற்ற சொத்தாகிவிடுகிறது. அவளது கணவனோ, தகப்பனாரோ, வேறு எந்த நபருமோ அதைத் தொட முடியாது. அது குடும்பத்தின் சேம நிதியாக உள்ளது. தனது கணவன் நோய்வாய்ப்படும்போது மருத்துவச் செலவுக்கு அணிகலன்கள் விற்கப்படுகின்றன. கணவன் நலமுடன் இருந்தால் சரி; இல்லையேல் அவர் மரணமடைந்தால் அவர் இறுதிச் சடங்கிற்கு இந்த நிதி பயன்படுகிறது. இம்மாதிரி ஒரு சேமநிதி உருவாக்கப்பட்டு விட்டது. பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு சட்டமான திரு. டி.வி.சேஷகிரி அய்யரின் மசோதாவின்படி, கணவரின் சொத்தில் மனைவிக்குப் பங்கு உண்டு என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. மகன்களின் பங்குக்கு ஈடாக கணவனின் மறைவுக்குப் பிறகு வாழ்க்கைச் செலவுக்காக மட்டும் இது அளிக்கப்படுகிறது. தங்கள் அரசியல் ஸ்திரத்தன்மை ஆட்டம் கண்டுவிடும் என்ற அச்சத்தில் இந்திய சமயக் கட்டமைப்புகளில் குறுக்கீடு செய்ய ஆங்கிலேயர்கள் விரும்பவில்லையென்றாலும் முன்னால் பேசிய உறுப்பினர் ஒருவர் குறிப்பிட்டபடி, போதுமான மாற்றங்கள் ஏற்படாவிடினும், சிறிதளவு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அரசியல் காரணங்களுக்காக, இந் நாட்டின் பழக்கவழக்கங்களில், ஆங்கிலேயர்கள் தலையிட விரும் பாதது வருந்தத்தக்க விஷயந்தான். எனவே, சட்டம் இறுகிப் பாறை யாகிவிட்டது. ஒவ்வொரு நாட்டிலும் பழக்க வழக்கங்கள் மாறிக் கொண்டே இருக்கின்றன. சமூகப் பழக்க வழக்கங்களில் அரசர் மாற்றங்களைக் கொண்டு வரும்போது அது உடனடியாகச் சட்ட மாவதுடன், சமூகம் முழுமைக்குமான வழிகாட்டியாகி விடுகிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக, ஆயிரமாண்டுகளாக இங்கு உள்ளூர் அரசர்களின் ஆட்சி நடைபெறவில்லை. ஆங்கிலேயர்கள் வந்த பிறகு, இந்தச் சமூகக் கட்டமைப்பில், மாற்றங்கள் செய்யும் ஆசைக்கு அவர்கள் இடமளிக்கவில்லை. எனவே அந்தப் பழக்க வழக்கங்கள் பாறை போல் இறுகிப் போய்விட்டன. அந்த இறுக்கமடைந்த பழக்க வழக்கங்களை நெகிழச் செய்து, அவை விரிவுபடுத்தப்பட வேண்டும். பிறவற்றை ஏற்றுக் கொள்ளக்கூடியதாக, மாற்றமடையக் கூடியதாக ஆக்கப்பட வேண்டும். அவ்வாறு செயல்படுவதற்குப் பதிலாக, திடீரென்று சட்டம் என்ற கல்லை, பாறையாக உறைந் திருக்கும் பழக்கவழக்கங்களின் மீது வீசி எறிந்தால் இரண்டுமே உடைந்து சுக்கல் சுக்கலாகிவிடும். மாற்றங்களுக்கான வழி இதுவல்ல.

வழக்காற்றுச் சட்டங்களில் மாற்றங்கள் கொண்டுவருவதன் மூலம் சமூக மாற்றங்கள் துவங்க வழிவகுக்க வேண்டும்.

இப்பொழுது பெண்களுக்கு பங்கு அளிக்கும் வழக்கத்தைப் பொறுத்த வரையில், அவர்களுக்குப் பங்கு அளிக்க வேண்டும் என்பதை நான் முற்றிலும் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் ஒரு சிறிது மாறுதல் செய்ய விரும்புகிறேன். அதாவது திருமணமானவுடன், கணவனின் சொத்தில் அவள் பங்குதாரர் ஆகிவிடவேண்டும். சில சமயங்களில் கணவன் துரதிர்ஷ்டவசமாக, தவறுதலாக நடந்து கொள்வதற்கான வாய்ப்பை இது தடுத்துவிடும் என்று நினைக் கிறேன். இப்பொழுது விவாகரத்துப் பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். பல பெண்களிடம் நான் பேசியிருக்கிறேன். இன்று காலையில் நான்கு பெண்கள் என்னைக் காணவந்தார்கள். அவர்கள் நல்லவர்கள், மிகவும் நாகரிகமானவர்கள். அவர்களில் ஒருவர் கணவனால் கைவிடப்பட்டவர் என்று எனக்கு அறிமுகப்படுத்தப் பட்டார். இந்த மசோதாவை எதிர்ப்பவர்கள், மகிழ்ச்சிகரமாக வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் மட்டுமல்ல, ஆண்களின் கோபத் திற்கும், கொடுமைக்கும் பலியாகி துன்பத்தில் உழலும் பெண்களும் கூட இதில் அடங்குவர். அதுவல்ல விஷயம். அவர்களிடம் நான் எடுத்துக் கூறினேன். இதுதான் விஷயம். நமது திருமணங்களில் 90 சதவீதம் மிகச் சிறப்பாகவே உள்ளன. ஆனால் மீதமுள்ள பத்து சதவீதத்தின் நிலைமை என்ன? அவர்களுக்கு பரிகாரம் வேண்டும். இந்தியாவில், நாம் மணம் புரிந்த பிறகு காதலிக்க ஆரம்பிக் கிறோம். ஆங்கிலேயர்கள், காதலுக்குப் பிறகு திருமணம் செய்து கொள்கிறார்கள். பிறகு தங்கள் காதலைக் கைவிட்டு விடுகிறார்கள். ஏனெனில் இளம் பருவத்தில் உண்டாகும் காதல் வெறும் கற்பனை மாளிகையாகவே இருக்கிறது. காதல் என்னவென்றே தெரியாது. திருமணத்தைப் பற்றிச் சட்டம் அல்லது விதிமுறைகள் இந்துக் களிடையே உள்ளது. ஸ்ரீ, குணம், ரூபம், பந்து,ஷ்ரேண, மற்றும் சம்பிரதாயம் - இவைகளெல்லாம் திருமணத்திற்கு முன்பு கணக்கி லெடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஸ்ரீ என்றால் சம்பத்து அல்லது செல்வச் செழிப்பு, பிறகு குலம் அல்லது ஜாதி மற்றும் அந்தஸ்து, பிறகு ரூபம் அதாவது தோற்றம், சௌந்தர்யம் அல்லது அழகு, மற்றும் அதற்குப் பிறகு பந்து ஷ்ரேணி அதாவது பந்துக்கள் கூட்டம், பிறகு சம்பிரதாயம் அதாவது குடும்பத்தின் பரம்பரை ஆகிய இந்த ஐந்து விஷயங்களும் நன்கு கவனிக்கப்பட வேண்டும். திருமணத் திற்குத் தயாராக உள்ள பதினெட்டு வயதுப் பெண் ஒருத்தியால் இந்த விஷயங்களையெல்லாம் சீர்தூக்கி தேர்வு செய்ய முடியுமா? இந்த

விஷயங்களில் ஒன்றுக்கொன்று வேறுபடுத்தி அவளால் பார்க்க முடியுமா? முடியாது. அன்றொருநாள் என் மனைவியின் சகோதரியின் கணவனின் சகோதரனிடம் கேட்டேன். அது ஒரு தூரத்து உறவு என்று கூறமுடியாது. என்னுடைய மனைவியின் சகோதரியின் கணவன் என்பவர் மைத்துனியின் கணவர்தான். அவருடைய சகோதரிக்குத் திருமணம் ஆகியிருந்தது. திருமணத்திற்கு முன்பு அவள் தன் தகப்பனாரிடம் ஏதோ கூறியிருப்பதைத் தெரிந்து கொண்டேன். நான் அவளுடைய கணவரின் வீட்டிற்குச் சென்றேன். அவளுடைய கணவனுடன் சேர்ந்து வீட்டிற்குள் சென்று அவரிடம் கூறினேன்: ''இந்தப் பெண் உங்களை ஒருபொழுதும் திருமணம் செய்து கொள்ளவில்லை என்பது தெரியுமா?'' அவர் திகிலடைந்தார். சிறிது கோபத்துடனும், ஆச்சரியத்துடனும் அவர் கேட்டர்: ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' அவள் உங்களை ஒருபொழுதும் மணக்கவில்லை, நான் இதை உணர்ந்துதான் கூறுகிறேன்.'' ''ஏன்'', இந்த வீட்டிலுள்ள மின்சாரம், மோட்டார் காரைத்தான் அவள் மணந்து கொண்டிருக்கிறாள். விஷயம் என்னவென்றால் அந்தப் பெண் தகப்பனாரிடம் இவ்வாறு கூறியிருக்கிறாள். ''யாரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று நீங்கள் கூறினாலும் எனக்கு அக்கறையில்லை. ஆனால் அவர் வீட்டில் மின்சாரமும்; மோட்டர் காரும் இருக்க வேண்டும்.'' பதினாறு அல்லது பதினெட்டு வயதுப் பெண் பொருள்கள், மற்றும் இதர விஷயங்களைப் பற்றி என்ன முடிவு செய்யமுடியும்? ''இந்த வீட்டில் என் தகப்பனாரால் வளர்க்கப்பட்டேன். ஆண்டுக்கு இருபதினாயிரம் ரூபாய் அவருக்கு வருமானம் உள்ளது. வீட்டில் மின்சாரம் உள்ளது, மோட்டார் கார் உள்ளது. கப்பல் போன்ற வீடு இருக்கிறது. புகுந்த வீட்டிலும் இப்படி இருக்கவேண்டும்'', இவ்வாறு அவள் சிந்திக்கிறாள். அவ்வளவு தான். ஆனால் ஆங்கிலேயப் பெண்ணின் தாய் தன்மகள் ''வெற்றி பெறவில்லை'' என்று எப்பொழுதும் அங்கலாய்க்கிறாள். ''என் மகள் வெற்றி பெறவில்லை'' என்பதுதான் அவளது புலம்பல். அதாவது ''மகளுடன் எப்பொழுதும் நடனம் ஆட காத்திருக்கவும், அவளுடைய திரைப்படச் செலவுகளையும் உணவு விடுதிச் செலவுகளையும் ஏற்றுக் கொள்ளும் வாலிபர்கள் கூட்டத்தை தன்னைச் சுற்றி கவர்ந்திழுக்க தன் மகளால் முடியவில்லையே'' என்பதுதான் இதன் பொருளாகும். இதற்குத்தான் அந்தத் தாயார் ஏங்குகிறாள். அம்மாதிரி உங்கள் தலையை ஆட்டாதீர்கள். நான் கூறுவது உண்மை.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா :** நான் உங்களை ஆதரிக்கிறேன்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** நீங்களில்லை. உங்களுக்கு பின்னே இருக்கும் உங்கள் நண்பர்.

**திரு. ஆர்.கே. சித்வா :** நீங்கள் என்னைக் குறிப்பிடுகிறீர்களா?

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** இல்லை, உங்கள் அருகில் அமர்ந்திருப்பவரை.

இங்கிலாந்தில் என்ன நடக்கிறது? ஓர் அரை டஜன் காதலர்களையாவது தனது மகள் கவர்ந்திழுக்க வேண்டுமென்று தாய் எப்பொழுதும் விரும்புகிறாள். அதன் பிறகு அவர்களில் தகுதியான ஒருவரை மருமகனாகப் பெற்றோர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். தாயாருக்கு எப்பொழுதும் வேலைக்காரப் பெண் மீது பொறாமைதான். ஏனெனில் வேலைக்காரப் பெண்ணுக்கு எப்பொழுதும் வெற்றிதான். ஆனால் மகளால் அதைச் சாதிக்க முடியவில்லை. அவல நிலைதான். மாலை எட்டு மணிக்கு வேலைக்காரப் பெண் தன் மேலாடையை மாற்றிவிட்டு அழகான சுத்தமான கவுனை அணிந்து கொண்டு வெளியே செல்கிறாள். ''நீ எங்கே போகிறாய்?'' ''வெளியே என் காதலர் காத்திருக்கிறார், நான் போகவேண்டும்.'' ''போகாதே, என் மருமகன் இபபொழுது வருகிறான்.'' நீயும் உன் மருமகனும் அருகிலுள்ள மரத்தில் தொங்குங்கள். என் காதலர் காத்திருக்கிறார். நான் போய்க் கொண்டிருக்கிறேன்.''

**திருமதி சேணுகா ரே:** இந்தியப் பெண்ணானாலும் சரி, வெளிநாட்டுப் பெண் ஆனாலும் சரி அவர்களைப் பற்றி மோசமான அபிப்பிராயமே உங்களுக்குள்ளது.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** என் மனைவியைப் பற்றி உயர்வான எண்ணமே கொண்டுள்ளேன்.

இப்பொழுது அந்தத் தாயாரின் மனக்குறை இதுதான். ''அந்த வேலைக்காரப் பெண் பல வாலிபர்களைக் கவர்ந்திழுத்து வெற்றி பெறுகிறாள். ஆனால் மகளுக்கோ அது முடியவில்லை.'' எனவே அந்தத் தாய் சோகத்தில் இருக்கிறாள். அதுதான் அங்குள்ள நாகரிகம். அந்த நாட்டின் வழக்கம் அதுதான். அதுதான் காலத்தின் போக்கு. அந்த முறை அங்கு நடப்புக்கு வந்துவிட்டது. மலபாருக்குச் சென்று மருமக்கள்தாயம் முறையைப் பாருங்கள். அது முற்றிலும் மாறுபட்ட வழக்கம். மூன்றாண்டுகளாக நீங்கள் அதை ஆய்வு செய்தாலும் அதன் இரகசியத்தை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. அது

ஒரு சிறந்த முறைதான். அதில் எந்தவித மாற்றத்தைக் கொண்டு வருவதையும் என் நண்பர் திரு. தாணுப் பிள்ளை ஏற்றுக் கொள்ள மாட்டார்.

உங்களுக்கு முன்னால் தலைமை தாங்கியவர், எனக்கு முன்னால் பேசியவருக்கு மணி அடித்த பிறகு பத்து நிமிடம் அனுமதித்தார். நான் மேலும் இரண்டு நிமிட நேரம் மட்டுமே எடுத்துக் கொள்வேன்.

ஆனால் திருத்தம் செய்வதற்கு இன்னும் காலம் கடந்துவிட வில்லை. நாம் அதிகதூரம் சென்று விடவில்லை. இந்த விஷயத்தை ஆழமாகவும் முழுமையாகவும், அக்கறையுடனும் நாம் விவாதித் தோம். அது நல்லதுதான். இந்த விஷயத்தில் அதிக கவனம் எடுத்துக் கொண்டோம். இப்பொழுது நாம் என்ன செய்யவேண்டும்? இந்த மசோதாவை மேற்கொண்டு விவாதிக்க வேண்டுமா? இதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும்படி என் நண்பர் மாண்புமிகு சட்ட அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன். வாக்காளரிடமிருந்து தேவை யான அதிகாரத்தையும், அனுமதியையும் பெற்றுக் கொண்டு அடுத்த தடவை கடுமையான மசோதாவைக் கொண்டு வாருங்கள். அப்பொழுது நம்மை யாரும் தடுக்க முடியாது. நாட்டு மக்களின் அனுமதி நம்மிடம் இருக்குமாதலால், அவர்களை ஒரே அடியில் வீழ்த்திவிடலாம். என்னிடம் தேர்தல் அறிக்கை இருக்கும். அதை நிறைவேற்றுவதற்கு உரிமை அளிக்கும் பலத்துடனும் அதிகாரத் துடனும் வருவேன். இப்பொழுது அதிகாரம் ஏதுமின்றி வந்துள் ளீர்கள். உங்களுடைய பாதுகாப்பிற்கு நான்கு பெண் காவலர்களை நம்பி இருக்கிறீர்கள். எந்த ஒரு முற்போக்கு காங்கிரஸ்காரனுக்கும் இது ஒரு வேதனையான காட்சிதான்.

மேலும், வேறு ஒரு விஷயமும் உள்ளது. எது நடந்தாலும், இந்த மசோதா மேலும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட மாட்டாது என்று நம்புகிறேன். அதைப் பற்றிய விவாதம் மேலும் தொடருமானால், தம் விருப்பப்படி வாக்களிக்க ஒவ்வொரு உறுப் பினருக்கும் சுதந்திரம் அளிக்க வேண்டுமென்று நான் விரும்பு கிறேன். அது அளிக்கப்பட்டால் வேதனையில் பாதி குறையும். ஆனால் இது தொடர்வதற்கான வலையில் நாம் ஏற்கெனவே விழுந்துவிட்டோம். இப்பொழுது, நண்பர்களே, உங்களை எச்சரிக்க விருமபுகிறேன். வரும் தேர்தலில் இது பெரும் பாதிப்பை ஏற்படுத்தும், எப்படியாயினும்.........

**திரு. மகாவீர் தியாகி :** இன்னும் ஐந்தாண்டுகளுக்கு தேர்தலை ஒத்தி போடுங்கள்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** எப்படியிருப்பினும், மக்களின் பிரதிநிதிகளாக நாம் இங்குள்ளோம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். 90 சதவீத மக்கள், ஒரே வகுப்பைச் சேர்ந்த, ஒரே சமூகச் சட்டம், ஒரே உரிமையியல் சட்டஅமைப்பு, தந்தைவழி சமுதாய அமைப்பு என்ற முறையில் இணைக்கப்பட்ட அவர்கள், ஒன்றிலிருந்து மற்றொன்றை வேறுபடுத்திக் காணும் அளவுக்கு அறிவு பெறாதவர்கள். அவர்களுக்கு எரிச்சல்தான் உண்டாகிறது. நேற்றைக்கு நடந்த ஆர்ப்பாட்டங்கள் இந்து சட்டத் தொகுப்பிற்கு எதிரானது அல்ல. அது காங்கிரஸ் மற்றும் காங்கிரஸ் அமைப்புகளின் மீது மக்கள் கொண்டுள்ள கோபம் மற்றும் வெறுப்பின் அடையாளம் என்றுதான் சொல்ல வேண்டும். அதை மறைப்பதில் நமக்குப் பயன் ஏதுமில்லை. நான் எங்கே சென்றாலும் கேள்விக் கணைகளால் துளைத்தெடுக்கப் படுகிறேன். என் வாக்கு சாதுரியத்தாலும், நிறுத்தாது பேசும் திறமை யாலும், சளசளவென்று பேசுவதாலும் சமாளித்துக் கொள்கிறேன். ஆனால் அதே நேரத்தில் எவ்வளவு ஆபத்தான தளத்தில் பயணம் செய்கிறேன் என்பதை உணர்கிறேன். இந்த அரசை விமர்சிப்பவன் என்ற முறையில் மட்டுமல்ல, எல்லா நேரங்களிலும் காங்கிரஸுக்கு நூற்றுக்கு நூறு ஆதரவளித்து வந்திருக்கும் ஒரு பொறுப்புள்ள காங் கிரஸ்காரன் என்று முறையில் பேசுகிறேன். வெறுமனே புகழ்ந்து பேசுபவர், அரசிடமிருந்து உண்மையை மறைப்பவர் அரசின் மீது நல்லெண்ணம் கொண்டவர் அல்ல. உங்களுக்கு அந்தக் கடைசிக் காட்சி ஞாபகத்திலிருக்கும் என நினைக்கிறேன். ஹாம்லெட் நாடகத் திலிருந்துள்ள காட்சி அல்ல அது. ஜெர்மனியில் 1918 நவம்பர் 9ல் கைசர் தம் தளபதிகளை அழைத்துப் பேசச் சொன்ன காட்சிதான் அது. யாரும் வாயைத் திறக்கவில்லை. எல்லோரும் மௌனம் சாதித்தனர். பிறகு ''உங்களைப் பேசும்படி கைசர் உத்தரவிடுகிறார்'', என்று கூறினார். பிறகு தளபதி லுடன்டிராஃப் பேச ஆரம்பித்தார். கைசர் உத்தரவுப்படி அவர் பேசாவிடின் அவர் சுடப்படுவார். விக்டோரியா மகாராணி ஆல்பெர்ட் இளவரசரைக் கதவைத் திற என்று கூறியது போல மகாராணி கூறினார்: ''அன்பே, கதவைத் திற'', ஆனால் கதவு திறக்கப்படவில்லை. பிறகு அவள் கூறுகிறாள்: ''இங்கிலாந்தின் மகாராணி உன்னைக் கதவைத் திறக்கச் சொல் கிறாள்.'' உடனே அந்த பரிதாபத்துக்குரிய மனிதன் வந்து கதவைத் திறக்கிறான். இதே போன்றுதான் கைசரிடமும் லுடன்டிராஃப் சொன்னான்: ''மாட்சிமை பொருந்திய மன்னரே, ஹாலந்துக்குத்

தப்பி ஓடுவதற்கு இன்னும் உங்களுக்க இருபத்தி நான்கு மணி நேரமே உள்ளது. அப்பொழுது கைசர் கேட்டார்: ''ஏன்'' ''ஏனா? ஏனெனில் ராணுவம் போர் செய்யாது.'' கைசர் கூறினார்: ''நானே ராணுவத்தை நடத்திச் செல்வேன்.'' ஆனால் ராணுவம் போர் செய்ய வில்லை. இந்த மனிதர் இருபத்துநான்கு மணி நேரத்தில் இட மாற்றம் செய்யப்பட்டார். கசப்பான உண்மைகள் கூறப்படும்போது தயவு செய்து அதைக் கேளுங்கள், ஏனெனில் அதில் நமது ஒன்று பட்ட நல்வாழ்விற்கும், வெற்றிக்குமான வாழ்த்துக்களைத் தவிர வேறொன்றுமில்லை. கொள்கை ரீதியாக இல்லாவிடினும், விவேகத் தின் அடிப்படையிலாவது உங்கள் நிலையைப் பரிசீலனை செய் யுங்கள். மக்களும் உங்களைப் பின்பற்றி நடக்க வழி செய்யுங்கள்.

***ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி** (உ.பி. பொது): ஐயா அரசின் கொள்கையை எதிர்த்து நான் பேசுவேன் என்று சில வட்டாரங் களில் அச்சம் எழுந்துள்ளது. நான் இந்த அவையில் ஒரே ஒரு முறை தான் பேசியிருந்தாலும்கூட சிவ வட்டாரங்களில் இந்த அச்சம் உள்ளது. அந்த அச்சத்தைப் போக்க விரும்புகிறேன். இந்த மசோதா வின் பொதுவான கொள்கைகளை ஆதரிக்கவே இங்கு வந்துள்ளேன். நான் அவ்வாறு செய்வதற்குக் காரணம் என்னவென்றால், இந்த அரசு ஒரு சாதாரணப் பிரச்சினையில், ஒரு சமூகப் பிரச்சினையில் பதவி விலகிவிடக்கூடாது என்பதற்காகத்தான். அரசியல் மற்றும் பொரு ளாதாரப் பிரச்சினையில், மிகவும் முக்கியமான பிரச்சினையில் அது பதவி இழப்பதை விரும்புகிறேன். உதாரணமாக, ஜனநாயகம் அதிகம் மலர்ந்துள்ள நாட்டில் சர்க்கரை வினியோகத்தில் குழுப்படி செய்ததன் மூலம் ஏழைகளின் குழந்தைகளுக்கு சர்க்கரைக்கு வழி யின்றி, விலை அதிகம் கொடுப்பவர்களுக்கு டன் கணக்கில் சர்க்கரை கிடைக்க வழி பண்ணியதால் ஓர் அரசு பதவி இழப்பதை போன்று இந்த அரசு பதவி விலகுவதை விரும்புவேன், இம்மாதிரி பிரச்சினை களில் அது பதவி இழக்குமானால் அதில் வருத்தப்படுவதற்கு ஒன்று மில்லை. அது ஒரு சாதாரண சமூகப் பிரச்சினையில் பதவி விலகு வதை நான் விரும்பவில்லை.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இந்த மசோதாவை விட சர்க்கரை மிகவும் முக்கியமானதல்ல.

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 552-558.

***ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி:** ஆம் அவ்வளவு இனிப்பான தல்ல அது.

என்னால் மறுக்க முடியாத வட்டாரங்களிலிருந்து வந்த வற்புறுத்துதல்கள் இல்லையென்றால், எப்படி இருப்பினும் இந்த மசோதாவை ஆதரிக்க வந்திருக்க மாட்டேன். இந்த மசோதாவை ஆதரிக்க வேண்டுமென்று என் இல்லத்தில் கூறப்பட்டது. இந்துச் சட்டத்தைப் பொறுத்தவரை நான் ஒன்றும் தெரியாத அப்பாவி என்று கூறினேன். இந்துச் சட்டம் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளது. பல விளக்க உரைகளும் வெளிவந்துள்ளன. எனக்குப் புரியாத ஒன்றை ஆதரிக்கவோ எதிர்க்கவோ எப்படி முடியும்? உங்களுக்குப் புரிய வைக்கிறேன் என்று எனக்கு உடனடியாகக் கூறப்பட்டது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** உங்களுடைய ஆசிரியர் யார்?

**ஆச்சாரிய ஜே. கிருபளானி:** எனவே என் மனைவியின் விளக்கப் பாடங்களைக் கேட்க இணங்கினேன். இந்தச் சட்ட மன்றத்தில், உயர்ந்த அதிகாரம் படைத்த டாக்டர் அம்பேத்கர் அவர் களாலேயே போதிக்கப்பட்டவர் என் ஆசிரியர் என்று எனக்கு உறுதி அளிக்கப்பட்டது. இந்தத் திரைக்குப் பின்னே நடந்த போதனைக்குப் பிறகு, எப்படி என் பள்ளி மற்றும் கல்லூரி நாட்களில் என் ஆசிரியர் களின் போதனைகளுக்குப் பிறகு எவ்வளவு முட்டாளாக, அறிவாளி யாக இருந்தேனோ அதே நிலைதான் இப்பொழுதும். எனது ஆசிரியர்கள் என்னை விட அறிவற்றவர்களாக இருந்தார்கள் என்ற முடிவுக்கு வந்தேன்.

நான் பேராசிரியராக இருந்தபோது, மாணவர்கள் எனக்கு இதேபோன்ற பட்டத்தை அளிப்பார்கள் என எண்ணினேன். இதை உணர்ந்த நான், வகுப்பில் நுழைந்தவுடன் இவ்வாறு கூறினேன்: ''கனவான்களே, உங்கள் ஆஜர் உறுதியாகிவிட்டது. நான் வருகைப் பட்டியலில் பதிவு செய்தபிறகு நீங்கள் வெளியே செல்லலாம். நான் என் ஆசிரியர்களுக்கு கொடுத்ததைவிட நீங்கள் எனக்கு அதிகம் மதிப்புக் கொடுக்கப் போவதில்லை.''

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 552-558.

ஐயா, இந்த மசோதாவை ஆதரிப்பதாக வாக்களித்துள்ளேன். எனவே இதை ஆதரிக்கிறேன். ஏனெனில் என் மனைவி வருகை தராவிட்டாலும், அவள் திரும்ப வந்தவுடன், கணக்கு வழக்குகளைக் கேட்பதுடன் என்னுடைய அறவழி மற்றும் அறிவுபூர்வ நடத்தை களின் கணக்கையும் சோதிப்பாள்.

என்னைப் பொறுத்தவரையில், சமயத்திற்கு ஆபத்து என்ற பிரச்சினை இல்லை. என்னுடைய இல்லத்திற்கு ஆபத்து என்பதுதான் பிரச்சினை. இந்து சமயத்திற்கு ஆபத்து என்பதைக் குறித்து அதிகம் பேசப்பட்டுவிட்டது. என்னால் அவர்கள் கருத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்துக்கள் திருடர்களாகவோ, மோசடிக்காரர் களாகவோ, காமாந்தகாரர்களாகவோ, கள்ளச்சந்தைக்காரர் களாகவோ, லஞ்சம் பெறுபவர்களாகவோ இருப்பதால் இந்து மதத்திற்கு எந்த ஆபத்தும் கிடையாது. இவர்கள் இந்து மதத்துக்கு எந்த ஆபத்தையும் கொடுக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட சட்டத்தைத் திருத்த விரும்பு பவர்களால்தான் இந்து மதத்திற்கு ஆபத்து என்கிறார்கள். ஒருவேளை அவர்கள் அதிக உற்சாகத்துடன் செயல் படலாம். லோகாயுத விஷயங்களில் லஞ்ச ஊழலுடன் செயல் படுவதைவிட லட்சியங்களில் அதிக உற்சகத்துடன் செயல்படுவது சிறந்தது. இம்மாதிரியான மனப்பாங்கால்தான் நாம் நம் தேசப் பிதாவை இழந்தோம். பகவத் கீதை மற்றும் உபநிஷத்துகளில் கூறப்பட்டுள்ள உயர்ந்த லட்சியத்தின் அடிப்படையிலும், நமது சமய நூல்களின் போதனைகளின் வெளிச்சத்திலும் தம் வாழ்வை கழித்தவரைவிட கொலைகாரன் சிறந்த இந்துவாகக் கருதப் பட்டான். தங்கள் மதத்தைப் பற்றிய இப்படிப்பட்ட தவறான கருத்துகளிலிருந்து இந்து சமுதாயம் விடுபட வேண்டும் என்று விரும்புகிறேன். நமது மதம் கொலைக்காரர்களாலும், திருடர் களாலும் உருவாக்கப்பட்டதல்ல. சாதுக்கள், சன்னியாசிகள் மற்றும் மகாத்மாக்களால் உருவாக்கப்பட்டது அது.

இருப்பினும் இந்தக் கேள்விக்கு மறுபக்கமும் இருக்கிறது. ஒரு தரப்பினர் மதத்திற்கு ஆபத்து என்று கூறுகிறார்கள் மற்றொரு பிரிவினர் நவீன முற்போக்கு மதத்திற்கு ஆபத்து என்கின்றனர். இதன் விளைவாக பெரும் குழப்பம் ஏற்பட்டுள்ளது. இந்த மசோதாவை ஆதரிக்காவிட்டால் நீங்கள் ஒரு பிற்போக்காளர்.

இந்த மசோதாவை ஆதரிக்கும்படி நான் எப்படி மாற்றப் பட்டேன் என்பதை எடுத்துக் கூறுகிறேன். ஒரு காரணத்தை ஏற் கெனவே உங்களுக்கு எடுத்துரைத்தேன். வேறொரு காரணத்தை இப்பொழுது கூறுகிறேன்.

ஒரு பெண்மணி மற்றொரு பெண்ணிடம் கூறினாள்: ''இந்த மசோதாவை கிருபளானி ஆதரிக்க மாட்டார். அவர் பிற்போக்காளர்.

**திரு. பி.எல். சோந்தி :** அவர்கள் இருவரும் இந்த அவையின் உறுப்பினர்களா?

**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி :** அவர்கள் இருவரும் உறுப்பினர்களல்ல. ஆனால் கௌரவம் வாய்ந்தவர்கள். அவர்களில் ஒருவர் நம்பிக்கையுடன் என்னிடம் கூறினார்: ''நான் அதை மறுத்து, கிருபளானி முற்போக்கானவர் என்று கூறினேன்.'' எனவே என் னுடைய மரியாதை எனக்கு திரும்பவும் அளிக்கப்பட்டது. எவ்வளவு சாதுர்யமான பிரசாரம் நடைபெறுகிறது பாருங்கள். ஒரு பெண்மணி இரகசியமாக மற்றொரு பெண்ணிடம் ஏதோ கூறுகிறாள். அதை அவர் என்னிடம் கொண்டு வருகிறாள். இப்பொழுது நான் எப்படி நடந்து கொள்வது? நான் என்னை முற்போக்காளனென்றோ, பிற்போக்காளனென்றோ என்னைக் கருதிக் கொள்ளவில்லை. இந்து அல்ல என்று வேண்டுமானாலும் என்னைக் கூறலாம். ஒரு நவீன கால மனிதனுக்கு மதநம்பிக்கை இல்லாமலிருப்பதைவிட புதுமை யாக இல்லாமலிருப்பது பெருங்களங்கமாகும். நான் கடவுள் நம்பிக்கை இல்லாதவனாக இருக்கலாம். ஆனால் மேலைநாட்டில் உள்ளது போன்ற முற்போக்கு என்ற கடவுளிடம் நம்பிக்கை கொள் ளாமல் இருக்க முடியுமா?

முதற் பெண்மணி என்னை பிற்போக்காளன் என்று கூறியது ஏன் என்பதை இப்பொழுது கூறுகிறேன். அது ஒரு சுவையான கதை, உங்கள் சிரிப்பால் அதில் குறுக்கிடமாட்டீர்கள் என்று வாக்களித் தால் அதைக் கூறுகிறேன். அடிப்படை உரிமைகள் குழுவின் தலைவ ராக நான் இருந்தேன். அந்த அடிப்படை உரிமைகள் குழுவில் பெண்கள் முகத்திரை அணியாமல் இருப்பது அவளின் அடிப்படை உரிமை என்ற தீர்மானம் கொண்டு வரப்பட்டது. முகத்திரை இல் லாமல் எல்லாப் பெண்களும் செல்ல வேண்டும் என்பதை ஆதரிப்

பவன் நான். எந்த ஆண்கள்தான் அதை ஆதரிக்க மாட்டார்கள். அதை ஆதரிக்காதவர்களைக்கண்டு நான் பாராட்டுகிறேன். ஆனால் பாராட்டப்படும் மனிதர்களில் நானும் ஒருவன் அல்ல. இந்த விதி குறித்து எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை. ஆனால் பழைய முகமூடிகளும் புதிய முகத்திரைகளும், ஆக எல்லா வித முகத்திரை களும் மறைந்துவிட வேண்டும், டெல்லியைச் சுற்றி வாருங்கள். ஒரு பெண்ணின் உண்மையான முகத்தைப் பார்ப்பது கடினம் எப்பொழுதுமே முகமூடி இருக்கும். (மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர் : முகத்திற்குப் பூசும் பவுடர்) பண்டைக் காலத்து பர்தா (முகத்திரை) நீக்கப்பட வேண்டுமென்றால் தற்கால முகமூடியும் நீக்கப்படவேண்டும். ஏனெனில் இந்த நவீன கால முகமூடி பழைய பர்தாவை விட மேலும் முழுமையானது. பர்தாவை எளிதாக எடுத்து விடலாம். ஆனால் இந்த முகமூடியை வீட்டில் வைத்துத்தான் சில ரசாயனப் பொருள்களை கொண்டுதான் நீக்க முடியும்.

என்னைத் தவறாகப் புரிந்து கொள்வீர்கள் என்ற அச்சத்தால், மனிதர்களின் சமத்துவத்தில் மிகவும் நம்பிக்கை உள்ளவன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். மனிதர்கள் என்று கூறுகையில் பெண் குலத்தையும் சேர்த்துக் கொள்கிறேன். இந்த மசோதா பெண்களுக்கு இணையான சமத்துவத்தை நமக்கு அளிப்பதால் அதை நிறைவேற்ற வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். நம்முடைய சமத்துவத்திற்கான மசோதா இது என நினைக்கிறேன். பெண்களை ஒப்பிடுகையில் நாம் மிகவும் அனுகூலமற்ற நிலையில் உள்ளோம் என்பதை எப்பொழுதுமே எண்ணி வந்திருக்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக, இயற்கை ஒரு அனுகூலமற்ற நிலையில் நம்மை உருவாக்கி விட்டது. நீங்கள் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் ஆண் செய்யக் கூடிய எல்லாவற்றையும் ஒரு பெண்ணால் செய்ய முடியும் என்பதை ஏற்றுக்கொள்வீர்கள். ஆனால் பெண்களால் செய்யக்கூடிய சில விஷயங்களை ஆண்களால் செய்ய முடியாது. நம்முடைய கற்பனை களில்கூட, நம்முடைய கனவுகளில்கூட, நம்முடைய மனக்கிலி யின் போது கூட அவை சாத்தியமில்லை. நாம் கர்ப்பம் தரிக்க முடியாது.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** இல்லை. உங்களால் முடியாது.

**ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி :** கர்ப்பத்தைப் பற்றிப் பேசியது அறிவுபூர்வமான பொருளில்தான். ஆனால் நீங்கள் நான் கூற நினைத்ததை ஏற்கெனவே புரிந்து கொண்டுள்ளதால் அதை நான் விவரிக்கத் தேவையில்லை. (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: ஓ இல்லை) எப்பொழுதுமே எனக்கு இது ஆச்சரியமாக இருக்கிறது. பெண்களிடம் கூட கேட்டுள்ளேன்: பிரசவத்தின் போது நீங்கள் அனுபவிக்கும் இந்தத் தாங்கமுடியாத வேதனைக்கும், எல்லையற்ற மகிழ்ச்சிக்கும் என்ன பொருள்? என்னுடைய அறியாமையைக் கண்டு அவர்கள் சிரிக்கிறார்கள். பதில் ஏதும் அளிப்பதில்லை. மார்பில் குழந்தையை அணைத்துக் கொண்டு பால் கொடுப்பதில் அவர்களுக்கு என்ன மகிழ்ச்சி என்று அவர்களை மீண்டும் கேட்டேன். அப்பொழுதும் கூட அவர்கள் என் அறியாமையைக் கண்டு புன்முறுவல் பூத்ததுடன் பதிலொன்றும் அளிக்கவில்லை. இந்த மாதிரி விஷயங்களில் நாம் ஒரு சாதகமற்ற நிலையில் இருக்கிறோம். அவர்கள் பெரிய சிருஷ்டி கர்த்தாக்கள். ஓவியர்கள் உயிரற்ற பொருள்களைத்தான் படைக்கிறார்கள். பெண்கள் கடவுளின் பிரதிபலிப்புகளை சிருஷ்டிக்கிறார்கள். அவை சிலசமயங்களில் சாத்தான்களின் பிரதிபலிப்புகளாக சீர்கேடடைகின்றன. ஆனால் பல விஷயங்களில் நாம் பெண்களுக்கு இணையான ஒரு நிலையை அடைய முடியும்.

பெண்கள் ஆண்களுக்கு இணையான சமத்துவம் அடைய வேண்டும் என்ற பிரச்சினையைப் பொறுத்தவரையில், இந்தியாவில் அவர்கள் அதை ஏற்கெனவே அடைந்துவிட்டார்கள். இந்தியா சுதந்திரம் பெற்ற உடனேயே ஒரு பெண் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அமெரிக்கா சுதந்திரம் பெற்று இரண்டு நூற்றாண்டுகள் கழிந்துவிட்டன, நாற்பத்தெட்டு மாகாணங்களும் அங்குள்ளன, எனக்குத் தெரிந்த வரை அங்கு ஒரு தடவை கூட ஒரு பெண் ஆளுநராக நியமிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. என்னுடைய வரலாற்று அறிவு பழமையானதாக இருக்கலாம், தவறு இருந்தால் திருத்திக் கொள்ளலாம் என்ற நிபந்தனையுடன் கூறுகிறேன், பெண் ஒருவர்கூட பெடரல் அமைச்சராக நியமிக்கப்படவில்லை. பெண்கள் கல்வி மிகவும் பரவலாகவுள்ள இங்கிலாந்து போன்ற நாட்டில் கூட இந்நாள் வரை பெண் யாரேனும் காபினட் அந்தஸ்து பெற்ற அமைச்சராக நியமிக்கப்பட்டதாக எனக்குத் தெரியவில்லை. நான் துணை அமைச்சர்களைப் பற்றிக் கூறவில்லை. இங்கேயும்கூட

*இருக்கிறார்கள். அவர்களையும் அமைச்சர்கள் என்றுதான் அழைக் கிறார்கள். நான் கூறுவதெல்லாம் காபினெட் அந்தஸ்து பெற்றுள்ள அமைச்சர்களைப் பற்றித்தான், எனக்குத் தெரிந்த வரையில் இங்கி லாந்தில் ஒருவர் கூட கிடையாது. பெண் ராஜதந்திரிகள், தூதர்கள் இங்கிலாந்திலும் அமேரிக்காவிலும் உள்ளனரா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நம்முடைய சிறப்பான தூதுவர் ஒரு பெண்மணி என்பது உங்களுக்கு ஞாபகம் இருக்கும்.*

***திரு. ஆர்.கே. சித்வா:*** *நமது பெண்களைக் கண்டு நாம் பெருமையடைகிறோம்.*

***திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி:*** *நன்று. நான் பெருமைப் படவில்லை என்று திரு. சித்வா கருதுகிறார் போலும். நான் சமத் துவத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறேன், பெருமையைப் பற்றி அல்ல. ''நாம் பெண்களுக்கு சமத்துவம் அளித்துவிட்டோம். இப்பொழுது பெண்களுக்கு இணையாக நமக்கு சமத்துவம் அளிக்கப் படுமா? என்று கேட்கிறேன். நான் ஒரு வயதான மனிதன் என்பதால் அதிகம் துன்பப்படுகிறேன். வயதானவர்களைக் கண்ணியத்துடன் நடத்த வேண்டும் என்று படித்திருக்கிறேன். வரவேற்பறைக்குள் குட்டிப் பெண் ஒருவள் நுழைந்தால் போதும் சீட்டுக் கட்டிலுள்ள ஜாக்கி போன்று திடீரென்று எழுந்திருக்க வேண்டியிருக்கிறது.*

*(இந்த நேரத்தில் திரு. துணை சபாநாயகர் (திரு. எம். அனந்த சயனம் அய்யங்கார்) மீண்டும் தலைமை தாங்குகிறார்)*

*அந்நாட்களில் இந்தமாதிரி நான் நடந்து கொள்வதில்லை. அது மட்டுமல்ல, ஐயா, நான் ஒன்று சொல்லட்டுமா, என் மனைவி வரவேற்பறைக்குள் நுழைந்தால்கூட நான் எழுந்திருக்க வேண்டி யிருக்கிறது. ஏன் என்று உங்களுக்குத் தெரியுமா? ஏனெனில் ஏதாவது ஒரு முரட்டு வாலிபன் என்னுடன் அங்கே அமர்ந்திருப்பான். தற்காலத் தில் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பது அவனுக்குத் தெரிந் திருக்காது. அவன் எழுந்திருக்கமாட்டான். அவனுக்கு எடுத்துக் காட்டுவதற்காக நான் எழுந்திருக்கிறேன். சமத்துவம் இருக்க வேண்டு மென்று நான் விரும்புகிறேன். ஏனெனில் இப்பொழுது நீங்கள் அறிந்து கொண்டபடி ஒரு பெண்மணி வரும்போது ஆண் என்ற முறையில் நான் எழுந்திருக்க வேண்டிய கடமை உள்ளது. ஆனால் நமது பிரதம மந்திரியே அல்லது காங்கிரஸின் தலைவரே அறையில் நுழைந்தால் கூட இளம் பெண்கள் தங்கள் இருக்கைகளில் அமர்ந்து*

கொண்டிருப்பதை நான் கண்டிருக்கிறேன். இது சாதாரண ஆணுக்கு இழைக்கப்படும் பெரும் அநீதியாகும். என்னுடைய அனுபவத்தைக் கூறுகிறேன். இரகசியச் சண்டைகளைப் பற்றி எனக்குத் தெரியாது. ஒரு கடைத்தெருவிலோ, அல்லது சந்தையிலோ, அல்லது கிளப்பிலோ ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே தகராறு ஏற்பட்டு அந்த ஆண் அந்தப் பெண்ணை ஒரு தட்டுத் தட்டிவிட்டால் என்ன நடக்கும் தெரியுமா? அங்கே பெரும் அமளியே தோன்றுவதுடன், அந்த மனிதனை எல்லோரும் கோழை என்று வசைப்படுவார்கள். அது சரிதான். ஆனால் ஒரு வேளை அந்த ஆண் பெண்ணால் தாக்கப் பட்டால் என்ன நடக்கும் தெரியுமா? அவன் மிகவும் பரிகாசத்துக் குரியவனாகக் காணப்படுவான். அவனுக்கு யாரும் பரிந்து பேச மாட் டார்கள் என்பதுடன் அவன் ஒரு கேலிப் பொருளாகிவிடுவான். அதுவும் சரிதான். நாம் அடித்தாலும், அல்லது நாம் அடிபட்டாலும் இரண்டு வகையிலும் இழப்பு நமக்குத்தான். ஆனால் இதில் சமநிலை கொண்டு வரப்பட வேண்டும். சாதாரண ஆணைக் காப்பாற்ற சிறிது சமத்துவம் மிகவும் அவசியம்.

மேலும் ஒரு விஷயம் இருக்கிறது. நாம் அனுகூலமற்ற நிலையில் இருப்பது சமூகத்தில் மட்டுமல்ல சட்டம்கூட நமக்கு எதிராக உள்ளது. இதை நமது சட்ட அமைச்சர்கூட ஏற்றுக் கொள்வார். ஆண் ஒருவன் பெண் ஒருத்தியுடன் ஓடிவிடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். சட்டப்படி ஆண்தான் அதற்குப் பொறப்பாகிறான். பெண் ஒருத்தி ஆண் ஒருவனுடன் ஓடிவிட்டதாக வைத்துக் கொள் வோம், இங்கும் ஆண்தான் பொறுப்பேற்க வேண்டும். மிகவும் உயர்ந்த அதிகாரத்தில் உள்ளவர்கள் மற்றும் தற்கால விஷயங்களில் அதிக அனுபவம் உள்ளவர்களிடமிருந்து நான் தெரிந்து கொண்டது என்னவென்றால் விரட்டித் துரத்துபவர்கள் பெரும்பாலும் பெண்கள் தான். தாக்குதலை அவர்கள் ஆரம்பித்தாலும் சரி நாம் ஆரம்பித் தாலும் சரி, தாக்குதல் எவ்வாறாயினும், சட்டம் நம்மைத்தான் தண்டிக்கும். இரண்டு வகைகளிலும் நமக்குத்தான் பாதிப்பு. எனவே நாம் சுதந்திரமாக மூச்சு விடுவதற்கும், நம்மை உதைத்தால் நாமும் கேலிக்குள்ளாகாமல் திருப்பி உதைப்பதற்கும், சட்டம் வலிமையான தரப்புக்கு அதாவது பெண்களுக்கு உதவிக்குச் செல்லாமலிருக் கவும் கொஞ்சம் சமத்துவத்தை நமக்குக் கொண்டு வரும்படி இந்த அவையைக் கேட்டுக் கொள்கிறேன். நான் இந்த மசோதாவை ஏன் ஆதரிக்கிறேன் என்பது இப்பொழுது புரிந்திருக்கும்.

இப்பொழுது விவரத்திற்குள் செல்வோம். முதலாவதாக சொத்து சம்பந்தமான பிரச்சினை உள்ளது. தனியார் சொத்துடமையை

ஒழிக்க எண்ணியுள்ள காங்கிரஸ்காரர்களாகிய நாம் சொத்தின் ஒரு பங்கு யாருக்குப் போகவேண்டும் என்பதைக் குறித்துச் சிந்திப்பது எப்படி என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத ஒரு விசித்திரமான நிலையை நம் நாட்டில்தான் காண்கிறேன்.

**திரு. லட்சுமி நாராயண் சாகு** (ஒரிசா பொது) : நான் ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். தனியார் சொத்துடைமையை ஒழிக்க காங்கிரஸ் உறுதிமொழி அளித்துள்ளதா?

**திரு. துணை சபாநாயகர்:** அது மதிப்பிற்குரிய உறுப்பினரின் அபிப்பிராயம்.

**திரு. ஆசார்ய ஜே.பி. கிருபளானி:** காங்கிரஸ் கட்சியின் தீர்மானங்களைக் கவனமாகப் படித்துப் பார்த்தால், தனியார் சொத்துடைமையை ஒழிப்பது காங்கிரஸின் நிலை என்பது தெளிவாகத் தெரியும். அதாவது குவித்து வைக்கப்பட்டுள்ள தனியார் சொத்துக்களைத்தான் உபயோகத்திலுள்ள தனியார் சொத்துக்களையல்ல. ஆனால் துணை சபாநாயகர் குறிப்பிட்டபடி இது ஒவ்வொருவரின் அபிப்பிராயத்தையும் பொறுத்தது. இருக்கும் செல்வத்தை மறு விநியோகம் செய்வதிலேயே இங்குள்ளவர்கள் அதிக அக்கறை கொண்டுள்ளதாக எனக்குத் தெரிகிறது. மேலும் செல்வத்தைப் பெருக்கவேண்டுமென்ற எந்த முயற்சியும் இந்நாட்டில் இல்லை. நம்முடைய சோஷலிச நண்பர்கள் கூட செல்வத்தை பெருக்க வேண்டுமென்ற முறையில் சிந்திப்பதாகத் தெரியவில்லை. நம்மிடம் உள்ள குறைந்த அளவு செல்வத்தையே மறு விநியோகம் செய்ய நினைக்கிறார்கள். இப்பொழுதுள்ள குறைவான செல்வம் ஓர் ஆணுக்குச் சென்றாலும் சரி அல்லது பெண்ணுக்குச் சென்றாலும் சரி அதில் எனக்கு எந்த அக்கறையும் இல்லை, நாட்டைவிட்டுப் போகாமல் இருந்தால் போதும் என்று நினைக்கிறேன். அதனால் தேசம் ஏழ்மையடைந்துவிடக் கூடாது. மக்கள் லஞ்சம் வாங்கினாலும் அல்லது கறுப்புச் சந்தையில் விற்றாலும் பரவாயில்லை என்பதை அறிய உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். எப்படியாயினும் செல்வம் இந்திய நாட்டைவிட்டு வெளியே செல்வதில்லை. இந்திய மக்களிடையே எங்கேயோ இருக்கிறது. அதன் நெறிமுறைகளைப் பற்றி மட்டுந்தான் நான் சிந்திக்கிறேன். அது நமது பொது வாழ்க்கையையும் தனிப்பட்ட நன்னெறிகளையும் அழித்துவிடுகிறது. செல்வத்தைப் பொறுத்த வரையில் அது அவ்வளவு

முக்கியமானதல்ல. இந்த லஞ்சப் பேர்வழிகள் மற்றும் கறுப்புச் சந்தைக்காரர்கள் செல்வத்தை வெளிநாட்டுக்குக் கொண்டு செல்வதில்லை. அவர் என்னுடைய மைத்துனனாக இல்லாவிட்டால் யாருடைய மைத்துனனாவது இருப்பார். ஆனால் செல்வம் இங்கேயே உள்ளது. இப்பொழுதுள்ள செல்வம் யாரிடம் செல்கிறது என்ற குறுகிய பார்வையில் ஒரு கணம்கூட நான் சிந்திப்பதில்லை. தேசம் என்ற நிலையில் நான் சிந்திக்கிறேன். இங்கிலாந்து நாடு மற்றும் இதர சுதந்திர நாடுகள் செல்வத்தைப் பெருக்குவதைப் பற்றிச் சிந்திக்கின்றன. இருக்கிற குறைந்த செல்வத்தை கூறு போடுவதையல்ல. எனவே, பரம்பரைச் சொத்தில் பெண்களுக்கும் ஒரு பங்கு அளிக்க வேண்டுமென்பதை முழுமனதுடன் ஆதரிக்கிறேன். அவர்களுக்கென்று ஒரு பங்கு இருக்குமானால் அவர்கள் தங்கள் பணத்தைக் குறித்து மிகவும் கவனமாக இருப்பார்கள். ஒரு பெண் ஆணைவிட அதிகமாக செலவு செய்கிறாள் என்பது என் அனுபவம். பெண்கள் பள்ளிக்கோ, கல்லூரிக்கோ செல்லும்போது பையன்கள் அணிந்துள்ள ஆடைகளைவிட பெண்கள் அணிந்துள்ள ஆடைகளைப் பற்றித் தாயார் அதிகக் கவனம் செலுத்துகிறாள் என்பதை நான் கண்டுள்ளேன். இளம் சிறுவர்கள் ஆடி அசைந்து கொண்டு நடந்தே பள்ளிக்குச் செல்வார்கள். ஆனால் பெண் குழந்தைகள், டோங்காவிலோ அல்லது பேருந்துக் கட்டணம் 15 ரூபாய்க்கு அதிகமாக இருந்தாலும் சரி பேருந்திலேதான் செல்ல வேண்டும். எனவே ஆடைகள், போக்குவரத்துச் செலவுகள் மற்றும் இதர விஷயங்களில் பெண்களின் கல்விக்கு அதிகம் செலவிடப்படுகிறது. இது திருமணத்திற்கு முந்தைய விஷயம். பெண்கள் திருமணம் ஆனபிறகு அவர்கள் ஆடையைப் பாருங்கள், நமது ஆடையைப் பாருங்கள். பல திருமண நிகழ்ச்சிகளில் நான் பார்த்திருக்கிறேன், மணமகன் முட்டாள் மாதிரி தோற்றம் அளிப்பான். ஆனால் மணப்பெண்கள் ராணிகளைப் போல இருப்பார்கள். நான் இதைப் பார்த்திருக்கிறேன். யாராவது நடுநிலையுடன் கவனித்தால் அது அப்படித்தான் என்று சான்றிதழ் அளிப்பார். சாலைகளில் தற்கால ஆண்களும், பெண்களும் சேர்ந்து செல்வதைப் பார்த்திருக்கிறேன். பொதுவான தற்கால இளைஞன், ஆங்கில மோஸ்தரில் ஆடை அணிகிறான். மேலைநாட்டு ஆடைகள் எல்லோருக்கும் பொருத்தமாக இருப்பதில்லை. ஒரு சில விதிவிலக்குகளைத் தவிர பெரும்பான்மையினருக்கும் அது அலங்கோலமாகத் தெரிகிறது. ஆனால் பெண்கள் வண்ண வண்ண உள்ளூர் சேலைகளில், ஆபரணங்கள் இல்லாவிடினும், தனக்குப் பின்னே வரும் ஆடவனை விட அதிக அழகாகவும் மதிக்கத் தக்கவிதத்தில் ஆடை அணிந்தவளாகவும் காணப்படுகிறாள். இந்நாட்களில் கணவன்மார்கள்

மாலை 5 மணி

சற்று பின்னேயே நடந்து செல்வதுடன், அருவருப்பாகத் தோற்றமளிக்கிறார்கள். இந்திய, மத்தியதர வகுப்பைக் குறித்து அதிகம் தெரியாதவர்கள் அல்லது வெளிநாட்டினர், ஏதோ ஒரு வேலைக்காரன் பின்னே சென்று கொண்டிருக்கிறான் என்று நினைப்பார்கள். எனவே, ஐயா, அவர்கள் சொந்தமாகச் சொத்து வைத்துக் கொள்ளட்டும் என்று கூறுகிறேன். அதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்கள் இஷ்டப்படி அதைச் செலவு செய்யட்டும். அவர்களுக்கு ஏதாவது வாங்க வேண்டியிருந்து அதற்கு நாம் பணம் கொடுப்பதாக இருந்தால் எவ்வளவு செலவு செய்வார்களோ அதைவிடக் குறைவாகத் தான் தங்கள் சொந்தப் பணத்தை அவர்கள் செலவு செய்வார்கள். எனவே, பெண்களுக்கு சொத்தில் பங்கு அளிக்கப்பட வேண்டும் என்பதை முற்றிலும் ஆதரிக்கிறேன்.

மேலும் ஒரு விஷயம் இருக்கிறது. அது எனக்கு மிக முக்கியமானது. பெண் குழந்தையை தத்தெடுக்க முடியாது என்று கூறப்படுகிறது. குழந்தை இல்லாத துரதிர்ஷ்ட நிலையில் இருப்பவன் நான்.

**திரு. பி.எல். சோந்தி :** எவ்வளவு வருந்தத்தக்கது.

**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி :** உண்மையில் அது மிகவும் வருந்தத்தக்க விஷயந்தான். இந்து என்ற முறையில் நான் தத்தெடுக்க முடியும் என்று எண்ணினேன். எப்பொழுதுமே பெண் குழந்தைகளுக்கு முன்னுரிமை அளிப்பவன் நான். நான் இரண்டு பெண்களை தத்தெடுத்தேன். அவர்கள் கணவன்களுடன் ஓடிவிட்டனர். இருப்பினும் ஒரு பெண்குழந்தையைத் தத்தெடுக்க விரும்புகிறேன். ஒரு பெண் குழந்தையைத் தத்தெடுக்கக்கூடாது என்ற விதி ஏன் இங்கு உள்ளது என்பது எனக்குப் புரியவில்லை. தகப்பனாரைப் பொறுத்தவரையில், பையன்களை விட பெண்களை அவர்கள் அதிகம் நேசிக்கிறார்கள். துடுக்காகவும், தங்களை மதிக்காமலும் எவ்வளவுக்கெவ்வளவு பெண் குழந்தைகள் இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு தகப்பனாரின் அன்பு அதிகரிக்கிறது. எனவே, இந்த மசோதாவில் குறைபாடு ஏதேனும் இருந்தால் அது சரி செய்யப்பட்டு பெண் குழந்தைகளையும் தத்தெடுக்க வாய்ப்பளிக்க வேண்டும்.

விவாகரத்தைக் குறித்து தனிப்பட்ட முறையில் எனக்கு அக்கறையில்லை. எனது திருமணம் சிவில் (பதிவுத்) திருமணம்,

கிரிமினல் திருமணமல்ல. நான் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று என் மனைவி எண்ணினால் எந்த நேரத்திலும் நிச்சயமாக என்னை விவாகரத்து செய்ய வழி உள்ளது. விவாகரத்து சம்பந்தமான விதிகளைப் பொறுத்தவரையில் இந்த மசோதா பழைய வழக்கங் களை விட மிகவும் பிற்போக்காக உள்ளது என்றுதான் எனக்குத் தெரிகிறது. திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் மற்றும் ஒரு பெண் உறுப்பினர் கூற்றின்படி கிராமங்களிலுள்ள பொது ஜனங்களிடையே விவாகரத்துக்கான எளிய முறை இருப்பதாகத் தெரிகிறது. அதிகம் செலவாகிற நடைமுறைகளோ, அவதூறுகளோ, பத்திரிகைக் கட்டுரை களோ ஒன்றும் கிடையாது. இவையெல்லாம் தவிர்க்கப்பட்டுள் ளன. விவாகரத்தைப் பொறுத்தவரையில் அதிக நியாயமான, அறிவியல் பூர்வமான, மிக நவீனமான கண்ணோட்டத்துடன் அணுக வேண்டும் என்று யோசனை கூறுவேன்.

ஐயா, நான் ஒரு ஆலோசனையை முன்வைக்கிறேன். அதன் நடைமுறை சாத்தியத்திற்கேற்றபடி சட்ட அமைச்சர் அதைப் பரிசீலனை செய்யட்டும். பணச் செலவு, வழக்காடுதல், அவதூறு, பத்திரிகைகளில் கட்டுரைகள் எதுவுமற்றது இந்த ஆலோசனை, எல்லாத் திருமணங்களும் ஐந்தாண்டுகளுக்கே. அந்த ஐந்தாண்டுகள் முடிந்த பின்பு ஒவ்வொரு திருமணமும் புதிப்பிக்கக் கூடியவை. கிராம அதிகாரியின் முன்போ அல்லது அதற்கு இணையான நகர, மாநகர அலுவலர் முன்போ செய்யப்படும் ஏதாவது பிரகடனத்தின் மூலம் புதுப்பித்தலை நிறைவேற்றலாம். ஐந்து வருடம் கழித்து நீங்கள் பிரிந்து செல்ல விரும்பவில்லை என்பதை அறிவிப்பதன் மூலம் திருமணம் தொடர்ந்து நீடிக்கிறது. இது, விவாகரத்தை எளி தாக்குவதுடன், அறிவியல் பூர்வமானதாகவும் ஆக்குகிறது. எந்தவித அவதூறக்கோ வழக்குகளுக்கோ வாய்ப்பில்லை. மிகவும் புதுமை யானதாகவும் இருக்கும். இந்த ஆலோசனையை உங்கள் முன் வைக் கிறேன். அதன் உண்மையான மதிப்பை அறிந்து அதை ஏற்றுக் கொள்ளுங்கள். முற்போக்கு மற்றும் வளர்ச்சி என்ற புதிய மதத்தின் எல்லாத் தேவைகளையும் அது திருப்தி செய்கிறது என்று கூறுகிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, உங்களிடம் ஒரு வேண்டுகோள் ஐயா, பல மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் இந்த மசோதா மீது பேச விரும்புவதால் விவாதத்திற்கு மேலும் ஒரு நாள் ஒதுக்கக் கேட்டுக் கொள்கிறேன். மாண்புமிகு பிரதம மந்திரி இங்கு

அமர்ந்திருக்கிறார். நாளைய தினத்தையும் விவாதத்திற்கு ஒதுக்க அரசு தயாராக உள்ளதா என்பதை அவர் கூறமுடியும்.

**மாண்புமிகு திரு. ஜவஹர்லால் நேரு** *(பிரதம மந்திரி)* : ஐயா, இந்த அவையின் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணி நேரமும் அதிக மதிப்புள்ளது. அதை விட மதிப்புள்ளது வேறொன்றுமில்லை. இந்தக் கூட்டத் தொடரில் நாம் முடிக்கவேண்டிய மிக முக்கியமான அலுவல்கள் எவ்வளவோ உள்ளன. கையிலுள்ள நாள்களும் அதிகம் இல்லை. இருப்பினும் ஆரம்ப கட்டங்களில் நான் தெளிவாக்கியது போல், இந்த விவாதம் நடப்பதற்கும், அதைக் குறித்து முடிந்த அளவு அதிக எண்ணிக்கையிலான உறுப்பினர்கள் பேசவும் முழு வாய்ப்பு அளிக்க நாங்கள் விரும்புகிறோம். ஆயினும், மற்ற பொது அலுவல்கள் நடைபெறுவதை தடைசெய்யும் வகையில் இந்த அல்லது வேறு விவாதம் முடிவின்றி நடந்து கொண்டிருக்க முடியாது, எனவே விவாதத்தை முடிவுக்கு கொண்டுவரும் நிபந்தனையின் பேரில் முடிந்த அளவு நேரம் ஒதுக்க அரசு அறிவித்தது. இரண்டு நிபந்தனைகளுக்குட்பட்டு அரசின் சார்பாக நாளைய தினத்தை விவாதத்திற்கு ஒதுக்க நான் முற்றிலும் தயாராக உள்ளேன். விவாதம் நாளைக்கு முடிவுக்கு வரவேண்டும். இரண்டாவது சனிக்கிழமை நாம் அமர்ந்து அவையின் பிற அலுவல்களைப் பரிசீலிக்க வேண்டும்.

**திரு. மகாவீர் தியாகி:** சனிக்கிழமை அமர்வது நமக்கு மிகக் கஷ்டம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். மாண்புமிகு பிரதம மந்திரி அவர்களுக்கு நேரம் கிடைக்கும். ஏனெனில், அவருக்கு அவையில் அதிக நேரம் செலவழிக்க வேண்டியதில்லை. ஆனால் நாங்கள் காலையிலிருந்து மாலை வரை அமர்ந்திருக்க வேண்டியுள்ளது. மாலையில் தேர்வுக் குழுவின் கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டியிருப்பதுடன் எங்களுடைய மற்ற வேலைகளையும் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. எங்களுக்கு வரும் பல்வேறு அறிக்கைகளையும் படிக்க வேண்டியிருப்பதுடன், திருத்தங்கள் செய்து அனுப்ப வேண்டியுள்ளது. சனிக்கிழமை மற்றும் ஞாயிற்றுக்கிழமை ஆகிய இரண்டு நாட்களில் மட்டுமே இதை நாங்கள் செய்ய முடியும். ஐயா, சனிக்கிழமையை எடுத்துக் கொண்டு விடாதீர்கள்.

**பண்டிட் கோவிந்த மாளவியா** *(உ.பி.: பொது)* : ஐயா, வேறு எந்த மசோதாவைக் காட்டிலும் இந்த மசோதாவின் மீதுதான் நாடு முழுவதும் ஆர்வம் கொண்டுள்ளது என்பதை நான் தாழ்மையாகத்

4

தெரிவித்துக் கொள்கிறேன். அதைக் குறித்து இந்த அவையின் உறுப்பினர்கள் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்துக் கொள்ள முழு வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். உறுப்பினர் ஒரே ஒருவர் மசோதாவுக்கு ஆதராவக இருந்தாலும் சரி அல்லது எதிர்ப்பாக இருந்தாலும் சரி, மக்களின் பிரதிநிதி என்ற முறையில் தம் கருத்தைக் கூற அவருக்கு நாம் நேரம் ஒதுக்க வேண்டும். அதற்கு நாளைக்கு நேரமில்லை என்றால் இந்த மசோதாவை விவாதிப்பதற்கு அரசு அதிக நாட்கள் ஒதுக்கவேண்டும். இந்த மசோதாவைக் குறித்து எவரும் தங்கள் கருத்துகளை தெரிவிக்க அனுமதிக்கப்படவில்லை என்றால் அது இந்நாட்டு மக்களுக்கும், அவை உறுப்பினர்களுக்கும் செய்யும் அவமரியாதையாகும்.

**திரு. துணை சபாநாயகர் :** மேலும் ஓர் அலுவல் தினத்தை இந்த மசோதாவின் விவாதத்திற்கு ஒதுக்குவதாக ஏற்கெனவே மாண்புமிகு பிரதம மந்திரி கூறியுள்ளார். பொறுக்குக் குழுவின் ஆய்வுக்காக பல மசோதாக்கள் அனுப்பப்பட்டுள்ளன. மற்ற சில மசோதாக்கள் குறித்து பொறுக்குக் குழுவின் அறிக்கைகள் அவைக்கு அளிக்கப்பட்டுள்ளன. முடிக்க வேண்டிய அலுவல்களைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, இந்து சட்டத் தொகுப்புக்கு ஒரு நாளைக்கு மேல் ஒதுக்கமுடியாது என்று மாண்புமிகு பிரதம மந்திரி நினைப்பதாகத் தெரிகிறது. அந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் அது ஓர் அலுவல் தினம், எனவே நான் முற்றிலும் அரசின் கைகளில்தான் உள்ளேன். அவை இதை ஏற்றுக்கொள்ளவோ, நிராகரிக்கவோ செய்யலாம். இந்த விஷயத்தில் மேலும் சொல்வதற்கு ஒன்றுமில்லை. இதுவரை இருபத்து ஏழு உறுப்பினர்கள்வரை பேசியிருக்கிறார்கள். ஏழு நாட்களும் பத்தொன்பதும் ஐந்தும் ஆக இருபத்து நான்கு மணிநேரம் எடுத்துக் கொண்டுள்ளோம்.

**டாக்டர் பி. எஸ். தேஷ்முக் :** பேசுவதற்கு எத்தனை பேர் காத்திருக்கிறார்கள்?

**மௌலான ஹஸரத் மோகனி** (உ.பி. முஸ்லீம்) : நம்முடைய விவாதத்தை நாளைக்குள்ளேயே முடித்து விடுவோம் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது?

**திரு. துணை சபாநாயகர்:** இன்னும் பேச விரும்புவர்களின்

இருபத்துநான்கு பெயர்கள் என்னிடம் உள்ளன. இந்த அலுவலை நடத்துவதற்கு அலுவல் தினமாக நாளை தினம் மட்டுமே ஒதுக்கப் பட்டுள்ளது. நிலைமை இவ்வாறு உள்ளது. நாளைக்குத்தான் இதை அவை பரிசீலிக்க வேண்டும். சனிக்கிழமையைப் பொறுத்தவரை யில் நாளைக்கு இந்த விஷயத்தை எடுத்துக் கொள்வதால், அது ஓர் அலுவல் தினமாக இருக்கும். பொறுக்குக் குழுவை வேறு ஒரு தினத்தில் கூட்ட ஏற்பாடு செய்யுங்கள்.

*நாளை காலை 10-45 வரை அவை ஒத்தி போடப்படுகிறது.*

*பிறகு 1949 டிசம்பர் 14 புதன்கிழமை காலை பத்து மணி நாற்பத்தைந்து நிமிடம் வரை அவை ஒத்திப்போடப்பட்டது.*

---

## *இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்ச்சி

**திரு. துணை சபாநாயகர் :** நேற்று, தவறுதலாக, இருக்கையில் அமர்ந்து விட்டதாக, திரு. கிருபளானியிடமிருந்து எனக்குக் கடிதம் ஒன்று வந்தது. அவர் பேச்சை முடித்துவிட்டார் என்றுதான் நினைத்தேன். நான் எழுந்தவுடன், அவைத் தலைவருக்கு அளிக்கும் மரியாதையாக அவர் இருக்கையில் அமர்ந்து விட்டதாக அவர் கூறுகிறார். அது அப்படியென்றால், அவருடையப் பேச்சைத் தொடர்வதற்கு அவருக்கு வாய்ப்பு அளிக்க வேண்டும். ஆனால் தம் உரையை சீக்கிரமாக முடித்துவிட வேண்டும் என்று அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

+**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி** (உ.பி. பொது) : என்னுடைய பேச்சை முடிப்பதற்கு எனக்கு வாய்ப்பு அளித்தமைக்கு உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதிகக் கண்டிப்பான முறையில் பேச்சை முடிக்க நான் விரும்புகிறேன். நமது மக்களுக்கு நகைச்சுவை ரசனை குறைவாக இருப்பதாகத் தெரிகிறது. இந்த நகைச்சுவைக்குப் பின்னே உள்ள, முக்கிய நோக்கத்தை ஊடுருவிப் பார்க்க முடிவதில்லை.

நான் முழு மனதுடன் இந்த மசோதாவை ஆதரிப்பதுடன் அது ஒரு வலுவான தளத்தில் இருக்கிறது என்கிறேன். இந்தியப் பெண்குலத்தின் பரம்பரை மற்றும் நெறிமுறைகளின் அடிப்படையில் அது உள்ளது. வரலாறு முழுவதையும் நோக்கின், நம்முடைய வாழ்விலும், கலாசாரத்திலும் அவர்கள் குறிப்பிடத்தக்க பங்காற்றியுள்ளனர் பண்டைய நாட்களில் அறிவாற்றல் பெற்ற பல பெண்களின் பெயர்கள் உள்ளன. அவர்களில் பலர் எழுத்தாளர்களாகவும், தத்துவவாதிகளாகவும், கவிஞர்களாகவும் இருந்தனர். மத்திய காலங்களில் நம் நிலைமை தாழ்ந்தபோது, அலைஅலையாக வெளிநாட்டு ஆக்கிரமிப்பு தொடர்ந்தபோது, நம் பெண்கள் தங்கள் நல்லொழுக்கத்துக்கு எவ்வித பாதகமுமின்றி இல்லத்தைக் கவனித்துவந்தனர். நாம் காயம் அடைந்தபோது, ஏமாற்றமடைந்தபோது இல்லம் சென்றவுடன் நமது காயங்களை ஆற்றி, வீட்டில் அடுப்பு அணையாது அவர்கள் கவனித்துக் கொண்டனர். நம்முடைய துயர் துடைப்பவர்

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 14 டிசம்பர் 1949, பக்கம் 560-621

\+ மேற்படி அதே நூல், பக். 560-62.

களாக அவர்கள் விளங்கினர். நம்முடைய மதத்தை அவர்கள் வாழவைத்ததுடன் நம்முடைய மரபுகளையும் பாதுகாத்தனர். நம் கலாசாரத்தை அழியாது பாதுகாத்தனர். இந்து இல்லங்களில் இந்துப் பெண்களிடந்தான் நம் கலாசாரம் மற்றும் மதத்தின் சிறப்பம்சங் களைக் காண்கிறோம். இன்றுங்கூட, ஆடவர்கள் தங்கள் ஆடைகளை மேலைநாட்டு ஆடைகளாக மாற்றிவிட்டனர். பெண்கள் இந்தியப் பாணி ஆடைகளையே அணிகின்றனர். இந்தியப் பெண்குலத்தின் இத்தனித்தன்மையை தேசத் தந்தை அங்கீகரித்ததுடன், அதைச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொண்டார்.

நம் சுதந்திரப் போராட்டத்தில் அவர்கள் நம்முடன் தோளோடு தோள் நின்று போரிட்டனர். பல தடவைகளில், நம்மை விட அவர்கள் அதிகம் துயருற்றனர் என்பதை அறிவேன். அவர்களில் சிலர் தடியடிக்கு ஆட்படாவிட்டாலும், சிறைச்சாலைக்குச் செல்லா விடினும் அவர்கள் அனுபவித்த கொடுமைகளை நான் அறிவேன். அதை அவர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டனர். எல்லா வகை களிலும் அவர்கள் நமக்கு மிகவும் உதவியாக இருந்தனர். அவர்கள் தங்களைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்தனர் என்று நினைப்பது நமக்கே இழுக்காகும். காலணி அணிந்திருப்பவருக்கு எங்கே கடிக் கிறது என்பது தெரியும். என்ன குறைபாடுகளால் கஷ்டப்படுகிறோம் என்பது அவர்களுக்குத் தெரியும். வங்காளத்திலுள்ள விதவைகளின் நிலைமைகளைத் தெரிந்து கொள்ளாது, இந்த மசோதாவை ஆர்வத் துடன் எதிர்க்கும் வங்காள உறுப்பினரைக் குறித்து வருத்தப்படு கிறேன். நான் அவர்களின் நிலைமைகளை என் கண்ணாலேயே பார்த்திருக்கிறேன்.

**திரு. சுரேஷ் சந்திர மஜும்தார்** (மேற்கு வங்காளம் : பொது) : எல்லா வங்காள உறுப்பினர்களுமல்ல.

**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி :** இந்த மசோதாவை ஆர்வத்துடன் எதிர்த்துவரும் ஒரே ஒரு உறுப்பினரைப் பற்றி மட்டுமே பேசினேன். நான் குறிப்பிட்டபடி காலணி அணிந்தவருக்கு கடி எங்கே என்று தெரியும். பெண்களுக்கு தாங்கள் விரும்பியதெல்லாம் கிடைத்தாலும்கூட, இல்லத்திலும் இல்லத்திலுள்ள ஆடவர்களிடம் அவர்களுக்குள்ள பரம்பரை ஈடுபாடு குறைவதில்லை. இதை நம்பு வதற்கு எல்லாக் காரணங்களும் உள்ளன. புதுமைப் பெண்கள் என்று கருதப்படக்கூடிய பல பெண்களை நான் அறிவேன். என் னுடைய வீட்டு வாழ்க்கையை கொஞ்சம் எடுத்துக் காட்டுவதற்கு

என்னை மன்னிக்க வேண்டுகிறேன். நீங்களும் இந்த அவையினரும் திருமதி கிருபளானியை அறிவீர்கள். ஆனால் அவளுடைய பொதுநல நடவடிக்கைகளை மட்டுமே நீங்கள் அறிவீர்கள்.

**ரோகிணி குமார் சௌத்திரி** (அசாம் : பொது) : ஓர் ஒழுங்குப் பிரச்சினை. இந்த அவையில் திருமதி கிருபளானி இல்லாதபோது அவரைப் பற்றி விவாதிக்கலாமா?

**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி:** நிச்சயமாக. உறுப்பினர் திருமதி கிருபளானியைக் குறித்து விவாதித்தால் நான் ஆட்சேபனை எழுப்புவேன். அவளைப் பற்றிப் பேச எனக்குக் கொஞ்சம் உரிமை இருக்கிறது என்று நினைக்கிறேன். நான் குறிப்பிட்டபடி பொதுநல நடவடிக்கைகளில் அவள் முழுப் பங்கு எடுக்கிறாள். ஆனால் அவள் வீட்டிற்குள் நுழைந்தவுடன், பழைய காலத்துப் பெண்மணிகளைப் போன்று, ஒரு சிறந்த இல்லத்தரசியாக மாறிவிடுகிறாள்.

எனக்காக பிறர் எந்த வேலை செய்வதையும் நான் விரும்புவதில்லை. நான் வேறு எங்காவது பார்த்துக் கொண்டிருக்கும்போது அவள் எனக்காக எல்லாம் செய்கிறாள் என்பதைச் சொல்லத்தான் வேண்டும். என்னுடைய காலணிகளை சுத்தம் செய்கிறாள். என் துணிகளைத் துவைத்து சுத்தம் செய்கிறாள். தற்கால மாதர்கள் என்று கருதப்படும் பெண்களின் வாழ்க்கை முறையை காணும் வாய்ப்பும் எனக்கு கிடைத்தது. அவையில் மட்டுமே சந்திக்கும் உறுப்பினர்களை அவர்கள் வீட்டில் அவர்களுடன் நன்கு பழகும் வாய்ப்பு எனக்குக் கிட்டியுள்ளது. அவர்கள் தங்கள் குழந்தைகள் சூழ தங்கள் கணவன்மார்கள் மற்றும் சகோதரர்களுடன் குடும்பப் பணிகளில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கும்போது பண்டைய மாதர்களின் நன்னெறிகள் அனைத்தையும் இவர்களும் பெற்றிருப்பதைக் காண முடிந்தது. அத்துடன் பொதுநலத் தொண்டு மற்றும் பொதுநல நடவடிக்கைகள் என்ற புதிய நெறிமுறைகள் அவர்கள் வாழ்வை வளமுறச் செய்தன. ஐயா, நான் சிந்து மாகாணத்திலுள்ள ஒரு சமூகத்திலிருந்து வந்தவன். இந்த சமூகத்தில் பெரும்பாலான பெண்கள் நன்கு கல்வி கற்றவர்கள். தற்கால கொள்கைகளின்படி, அவர்களை நாகரிகமானவர்கள் என்று கூடச் சொல்லலாம். அவர்கள் இல்லங்களுக்குச் செல்லும்போது அவர்கள் தங்கள் கணவன்மார்களையும் குழந்தைகளையும் சகோதரர்களையும் எவ்வளவு பரிதாபகரமாக நேசிக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர் : ஏன் பரிதாபகரமாக?

**திரு. ஆச்சார்ய ஜே.பி. கிருபளானி:** நன்கு ஆலோசித்த பிறகே இந்தச் சொல்லை உபயோகப்படுத்தினேன். இவர்களுடைய இந்த அன்பு நம்மவர்களுக்குப் பெரும் தொல்லைதான். எவ்வளவு தூரம் நாம் வீட்டு நிர்வாகத்தில் ஆதிக்கம் செலுத்த முயற்சித்தாலும், நம் விருப்பத்தை நடைமுறைப்படுத்த விரும்பினாலும் அவர்கள் அவ்வளவு ஈடுபாட்டுடனும், நம்பிக்கையுடனும், உறுதியுடனும் பொறுமையுடனும் நம்மைச் சுற்றி வந்து கவனிக்கையில் எந்தக் கணவனும் பெண்டாட்டி தாசனாக ஆகாமலிருக்க முடியாது. இந்தியாவைவிட வேறு எந்த நாட்டிலும் இவ்வளவு பெண்டாட்டி தாசர்களைப்பார்க்க முடியாது. அவர்கள் குனிவதெல்லாம் எப் பொழுதும் வெற்றி பெறுவதற்கே. இந்தத் தற்காலப் பெண்கள் பலரைப் பார்த்திருக்கிறேன். நம்மைப் போன்று அவ்வளவு உயர் கல்வி கற்றவர்கள். ஆனால் தோலுக்குக் கீழே நம்முடைய பழைய கால சகோதரிகளைப் போன்ற பண்புகளையே கொண்டிருந்தனர் என்பதை நான் கண்டுள்ளேன். பழைய ஆசாரக் குடும்பப் பெண் களை மணம் செய்து கொண்டு தங்களுடைய மனைவிமார்கள் தங்கள் மீது கொண்டுள்ள ஈடுபாட்டைக் கண்டவர்கள், தற்கால மகளிர் தங்கள் கணவன்மார்களிடம் கொண்டுள்ள விசுவாசத்தைக் கண்டால் அதில் எந்த வித்தியாசமும் இல்லாதிருப்பதைக் கண்டு ஆச்சரியப் படுவார்கள். இந்தப் பெண்கள் தங்களிடம் உள்ள சில குறைபாடுகள் நீங்க விரும்புகிறார்கள். பெண்களுக்கு வாரிசுரிமை கொடுத்தால் சகோதரனுக்கும் சகோதரிக்கும் இடையேயான அன்பு போய்விடும் என்று கூறப்பட்டது. இந்த மாதிரியான அற்ப விஷயங்களின் அடிப் படையில் நமது சகோதரிகளின் பாசம் அமைந்திருக்கவில்லை. அதன் பின்னே சில நூற்றாண்டு பரம்பரை உள்ளது. தங்களுடைய சகோதரர்கள் நன்கு கல்விகற்று சொந்தக் கால்களில் நிற்க வேண்டு மென்பதற்காக, சகோதரிகள் பலர் கடுமையாக உழைத்துள்ளதை நான் கண்டுள்ளேன். தங்கள் குடும்பத்துக்காக அவர்கள் தியாகம் செய்துள்ளனர். நான் சார்ந்துள்ள சமூகத்தில் கூட்டுக் குடும்ப முறை கிடையாது. திருமணம் முடிந்தவுடன் மகன் தன் மனைவியுடன் தனிக்குடித்தனம் செய்யச் சென்று விடுகிறான். ஆனால் அவர்கள் கூட்டுக் குடும்பத்தில் இல்லாததால் அந்தக் குடும்ப உறுப்பினர் களிடையே அதிக அன்பு காணப்படுகிறது. சிந்திகள் சிந்து மாகாணத் திலிருந்து இந்தியாவுக்கு குடிபெயர்ந்து வந்தபோது இது வெளிப் படையாகத் தெரிந்தது. ஒரு வீட்டில் நான்கைந்து சிந்திக் குடும்பங்கள் சேர்ந்து வாழ்வதைக் கண்டேன். சிந்துவுக்கு வெளியே ஒருவன்

வாழ்ந்தால் யாருக்காவது வெளியே வீடிருக்குமானால் அவன் இந்தியாவில்தான் இருப்பான். அந்த வீட்டில் மருமகன்கள், மாமன் மகன்கள், அத்தை மகன்கள், மாமனார்கள் மனைவி வழி உறவினர் கள், கணவன் வழி உறவினர்கள் எல்லோரும் சேர்ந்து வசித்தனர். இந்த நெருக்கடியை அவர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டனர். அவர்களில் பலர் அதிகமான பணம் செலவழிக்க வேண்டியிருந்தது. இந்துச் சட்டங்களில் சில மாற்றங்கள் வருவதால் பல நூற்றாண்டு களாக இருந்துவரும் இந்தக் குடும்ப பாசம் முடிந்துவிடப் போவ தில்லை.

நண்பகல் 12 மணி

திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் கூறியது போன்று இந்தச் சட்டம் எப்பொழுதும் மாறிக் கொண்டே இருக்கிறது. மாறிவரும் சூழ்நிலைகளுக்கேற்ப தன்னை மாற்றிக் கொண்டுள்ளது என்பது இந்து மதத்தின் பெருமைக்குரிய விஷயம். அது பழைமைக்கு உண்மையாக இருக் கிறது. இருப்பினும் சமுதாயத்தின் ஆரோக்கிய வாழ்க்கைக்குத் தேவை யான அளவு புதுமையையும் எடுத்துக் கொண்டுள்ளது. காலம் மாறி விட்டது. வெளிநாட்டு ஆட்சி இங்கு ஏற்படாமலிருந்தால் நமது சாஸ்திரங்களும் மாற்றங்கள் அடைந்திருக்கும். நமது சட்டங்களும் மாற்றம் அடைந்திருக்கும். வெளிநாட்டு ஆட்சி இந்தச் சட்டங்களை இறுக்கமானதாக ஆக்கிவிட்டது. அதில் கொஞ்சம் புது வாழ்வை யும், ஒளியையும் கொண்டு வரும் காலம் வந்துவிட்டது. அதை இந்த மசோதா செய்ய முயற்சிக்கிறது. பொறுக்குக் குழுவில் இந்த மசோதா ஒரு சரியான உருவத்திற்கு கொண்டு வரப்படும். பிறகு எந்த விதப் புகார்களும் இருக்காது. நமது வீட்டு வாழ்க்கையின் அமைதி குலைந்துவிடாது என்பது நிச்சயம். நமது பெண்களின் அன்பும் விசுவாசமும் குறையப் போவதில்லை. தங்கள் குடும்ப ஆடவர் களின் மீது அவர்கள் கொண்டுள்ள ஈடுபாடு சிறிதும் குறையப் போவதில்லை. எதிர்கால இந்தியப் பெண்கள் குடும்பத்திற்கும் தேசத்திற்குள் உண்மையானவர்களாக இருப்பார்கள். ஐயா, நான் பேச்சை முடிக்கிறேன்.

**திரு. கோகுல்பாய் தௌலத்ராம் பட்** *(பம்பாய் மாகாணங் கள்) : (இந்தி உரையின் ஆங்கில மொழி பெயர்ப்பு)* : என்றைக்கு இந்து தொகுப்புச் சட்டம் அவையில் சமர்ப்பிக்கப்பட்டதோ அன்றி லிருந்து அது இந்திய மக்களின் மனதைக் கலக்கிக் கொண்டிருக்

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 576-85

கிறது. கடந்த ஐம்பது அல்லது அறுபதாண்டுகளாக அது நம்முன் உள்ளது என்று டாக்டர் சென் கூறுகிறார். ஆனால் நான் பார்த்த எந்தப் புத்தகத்திலும் இந்தத் தொகுப்பு இருந்ததாக குறிப்பு எதுவும் காணப் படவில்லை. ஓர் இந்துச் சட்டம் இருந்தது. அதில் அடிக்கடி செய்யப் பட்ட மாற்றங்கள் இந்து சமுதாயத்தின் கவனத்தை ஈர்த்தது.

1939க்குப் பிறகுதான் தற்போதைய வடிவில் இந்துச் சட்டத் தொகுப்பைப் பற்றி நாம் அறிகிறோம். அந்த நேரத்தில் சில பேச்சுகள் இருந்திருக்கலாம். 1938-ல் இந்த அவையில்தான் திருமண மசோதாவை டாக்டர் தேஷ்முக் கொண்டு வந்தார்.

**டாக்டர் பி.கே. சென்** (பீகார் : பொது) : நான் சிறிது விளக்கம் தரலாமா? 60 ஆண்டுகளுக்கு மேலாக அதாவது 1856 அல்லது 1855-லிருந்து அது சட்டமன்றத்தில் இருந்தது என்று கூறினேன். அது திருமணச் சட்டம் சம்பந்தமாக அன்றி வேறு எந்த அம்சத்தையும் பற்றி அல்ல.

**திரு. கோகுல்பாய் தௌலத்ராம் பட்** : அதன் சில அம்சங்கள் நம்முன், இந்து சமுதாயத்தின் முன் இருந்தன என்று நானும் கூறுகிறேன். உண்மையில் இந்த மாதிரிப் பிரச்சினைகளைச் சந்திப்பது இந்துக்கள் மட்டுமல்ல, பார்சிகளும் முஸ்லீம்களும் இதேபோன்று அவற்றை எதிர்நோக்குகிறார்கள். இந்துச் சட்டத் தொகுப்பு இந்த அவை முன் கொண்டுவரப்பட்ட வரலாற்றின் சில பகுதிகளையும், ''ராவ் குழு'' என்ற குழு அமைக்கப்பட்ட சூழ்நிலைகள் குறித்தும் உங்களுக்கு எடுத்துரைக்க விரும்புகிறேன். 30 கோடி மக்கள் தொகை கொண்டுள்ள இந்து சமுதாயத்தின் சமூகக் கட்டுக்கோப்பிற்கான விதிகள் மற்றும் ஒழுங்குமுறைகள் வகுத்தளிக்கப்பட்ட காலக்கெடுக் குறித்தும், பிரசாரம் மற்றும் மக்கள் கருத்தை அறிந்துகொள்ளவும் அல்லது வேறு எதிர் விளைவுகளைத் தெரிந்து கொள்ள உபயோகப் படுத்த உள்ள முறைகள் குறித்தும் சில விவரங்களைக் கூறுகிறேன். இந்தச் சட்ட தொகுப்பு கொண்டு வரப்பட வேண்டுமா, வேண்டாமா, இந்து சமுதாயம் ஒருமைப்பாட்டை அடைய வேண்டுமா வேண்டாமா, இந்து சட்டம் என்று வழக்கத்திலுள்ள பல்வேறு துண்டு சட்டங்கள் ஒன்றாக இணைக்கப்பட வேண்டுமா வேண்டாமா என்பதல்ல உண்மையான பிரச்சினைகள். 1944 ஜனவரி 20-ஆம் நாள் ராவ் குழு நியமிக்கப்பட்டதை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

அவர்கள் இந்தப் பணியை ஆரம்பித்து ஒரு வரைவு மசோதாவை தயார் செய்தார்கள். 1944 ஆகஸ்டு 4ல் பொதுமக்கள் இந்த மசோதாவைப் பற்றித் தெரிந்து கொண்டனர். 1944 அக்டோபர் 5க்குள் பொதுமக்களிடமிருந்து கருத்துக் கோரப்பட்டது. இந்த மசோதாவின் பிரதிகள் ஆயிரம் மட்டுமே 30 கோடி மக்களுக்காக இந்திய அரசால் அச்சடிக்கப்பட்டது. அதன் பிறகு பொதுமக்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க மேலும் மூவாயிரம் பிரதிகள் அச்சடிக்கப்பட்டன.

**திரு. மகாவீர் தியாகி :** (உ.பி. பொது) : அது அச்சடிக்கப் பட்டது ஆங்கிலத்திலா அல்லது இந்தியிலா?

**திரு. கோகுல்பாய் தௌலத்ராம பட்:** நாலாயிரம் பிரதிகளும் ஆங்கில மொழியிலேயே அச்சிடப்பட்டன. அதன் பிறகு இந்த மசோதாவை மொழி பெயர்த்து அச்சிட்டு வினியோகிக்குமாறு மாகாண அரசுகளை திரு. ராவ் கேட்டுக் கொண்டார். மொழி பெயர்ப்பு செய்தும்கூட எனக்குத் தெரிந்த வரையில் 30 கோடி மக்கள் தொகைக்கு, 50 லிருந்து 60 ஆயிரம் பிரதிகளுக்கு மேல் வினியோகிக்கப்படவில்லை.

இப்பொழுது மிகவும் முக்கியமானது என்று கருதப்படுவதும், இந்து சமுதாயத்தை ஒன்றுபடுத்துவதை லட்சியமாகக் கொண்டதும், புதிய வாழ்க்கையை அறிமுகப்படுத்துவதும், சீர்திருத்த நடவடிக்கை என்று கருதப்படுவதுமான இம் மாதிரியான மசோதாவைக் குறித்து மக்களின் கருத்துகளை சேகரிக்க, கொடுக்கப்பட்ட விளம்பரம் மற்றும் மக்களிடையே சுற்றுக்கு விடப்பட்ட விளம்பரப் பொருள்களைக் குறித்துப் பேசப் போகிறேன் இந்த நோக்கத்திற்காக, இரண்டு மாதக் காலக்கெடு நிர்ணயிக்கப்பட்டது. அதற்குப் பிறகு, குழ நாட்டின் பல இடங்களுக்குப் பயணம் மேற்கொண்டது. அவர்கள் பயணம் 38 நாட்கள் மட்டுமே நீடித்தது. அவர்கள் எல்லா மாநகரங்களுக்கும் செல்லவில்லை. கிராமங்களையும், சிறு நகரங்களையும் அவர்கள் இதில் சேர்த்துக்கொள்ளவில்லை. பயணத்தின் எந்தக் கட்டத்திலும் அவர்கள் மக்கள் மத்தியில் செல்ல அக்கறை கொள்ளவில்லை. வங்காளத்தில் நிலவிலுள்ள தாயாபாக முறைப்படி, ஒருவிதவைக்கு சொத்தில் பங்கு கிடைத்தாலும் ஏன் அவள் வறுமையில் உழல்கிறாள் என்பதைக் குறித்து அவர்கள் எந்த விதவையையும் அணுகிக் கேட்கவில்லை. தாய்வழி சமுதாய அமைப்பின் முறைப்படி சொத்தில் பங்கு இருந்தும், மெட்ராசிலுள்ள சகோதரிகளும் மகள்

களும் ஏன் மகிழ்ச்சியற்று இருக்கிறாள் என்பதை அறிந்துகொள்ள அவர்கள் மெட்ராசுக்கு ஒரு பொழுதும் போகவில்லை. வங்காளத்திலும் மெட்ராசில் மட்டுமே விதவைகள் அவல நிலையில் இருக்கிறார்களா அல்லது அவர்கள் விதி நாடு முழுவதும் ஒரே மாதிரியாக உள்ளதா, அப்படியென்றால் அதற்கு என்ன காரணங்கள் இருக்கக் கூடும் என்பதை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை, சொத்தில் பங்கு இல்லாததால் அவர்களுக்கு இந்த அவல நிலை என்பதை என்னால் ஒத்துக்கொள்ள முடியாது. இதுவல்ல உண்மை. சொத்துக்கள் இல்லாதது மட்டுமே அவர்களது துயரத்திற்குக் காரணம் என்று கூறமுடியாது. இளவயதில் விதவையானவர்கள் உலக இன்பங்களைச் சுவைக்கக்கூடாது என்ற தடை இருந்தது. இத்தகைய விதவைகளுக்கு இரண்டாவது திருமணம் செய்து கொள்ள வாய்ப்பளிக்க மறுத்ததிற்கு எந்த நியாயமும் கிடையாது. இந்த நிலையை மாற்ற ஈஸ்வர் சந்திர வித்தியா சாகரும் மற்றும் மலபாரி சாகேப்பும் பாடுபட்டனர். எனக்குச் சரியாக நினைவில் இல்லாவிடினும் விதவைகள் மறுமணச்சட்டம் 1856-ல் நிறைவேற்றப்பட்டு இன்று வரை அமலில் உள்ளது. எனினும் இந்தச் சட்டத்தின் பயனை எத்தனை பேர் அடைந்தனர் அல்லது இச்சட்டம் எவ்வித மகிழ்ச்சிக்கு அல்லது வளர்ச்சிக்கு உதவியுள்ளது என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். ஒரு சட்டத்தை இயற்றுவதன் மூலமே சமுதாயத்தில் எந்த மாற்றத்தையும் கொண்டு வரமுடியாது அல்லது எதையாவது மேலிருந்து மக்களின் மீது திணிப்பதால் உருப்படியான விளைவுகள் எதையும் எதிர்பார்க்க முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். உதாரணமாக பார்சி திருமணம் மற்றும் விவாகரத்துச் சட்டத்தைப் பற்றி எடுத்துரைக்க விரும்புகிறேன். இந்தச் சட்டம் முதலில் 1865-ல் வகுக்கப்பட்டது. 1936ல் இந்த அவையில் மூலச் சட்டத்தைத் திருத்துவதற்கு ஒரு மசோதாவை சீர் கௌவாஸ்ஜி ஜெகாங்கீர் கொண்டு வந்தார். இந்தத் திருத்த மசோதாவின் வரலாற்றைப் பற்றிக் கூற நான் எண்ணியுள்ளேன். நாம் இப்பொழுது நினைப்பதுபோல பார்சி சமூக அன்பர்களும் திருத்தம் அவசியம் என்று எண்ணினர். தமது இல்லத்தில் குழப்பம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதற்காக திரு. கிருபளானிஜிக்கு இந்த மசோதாவை ஆதரிக்க வேண்டியிருந்தது. அதே போன்று நானும் என் குடும்பத்தை குழப்பத்தில் ஆழ்த்த விரும்பவில்லை. அதனால் நானும் அதை ஆதரிக்கட்டுமா?

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா :** (உ.பி. பொது) : இதைப் பொறுத்த வரையில் வயதானவர்கள் எல்லோரும் ஒரே மாதிரித்தான் நடந்து கொள்கிறார்கள்.

**திரு. கோகுல்பாய் தௌலத்ராம் பட் :** முற்றிலும் சரி. நான் சர்மாஜிக்கு இப்பொழுது பதிலளிக்க விரும்பவில்லை. அவர் தன் மனைவியின் கோட்டைச் சுமந்து கொண்டு, அவளைப் பின் தொடர்ந்து எல்லா இடங்களுக்கும் போய்க் கொண்டிருக்கட்டும்.

**திரு. கிருஷ்ண சந்திர சர்மா :** அவள் கோட் அணிவதில்லை.

**திரு. கோகுல்பாய் தௌலத்ராம் பட் :** 1865-ஆம் ஆண்டு சட்டத்தை திருத்தி மாற்றியமைக்கவேண்டுமென்று பார்சி அன்பர்கள் முடிவுசெய்தவுடன், அவர்கள் எடுத்த நடவடிக்கைகளை விளக்க வேண்டுமென்பதே என் எண்ணம். அவர்கள் என்ன செய்தார்கள்? அவர்கள் பஞ்சாயத்துகளிலிருந்து ஒரு சட்டக் குழுவை அமைத்தார்கள். அந்தக் குழு என்ன செய்தது? ஒரு திருத்த மசோதாவைத் தயாரித்து மக்கள் கருத்துக் கணிப்புக்கு இரண்டு மாதம் ஒதுக்கி விட்டு, பிறகு ஒரு முடிவை எடுக்கும் வகையில் அவர்கள் செயல் படவில்லை. நான்காண்டுகளாக அவர்களிடம் ஒரு கேள்விப் பட்டியல் இருந்தது. 1921 ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கின்படி ஒரு லட்சம் அல்லது அதிக பட்சம் ஒன்றரை லட்சம் மக்களிடம் கருத்தைக் கேட்க விரும்பினார்கள். அவர்கள் பரிசீலனையில் அறிக்கை நான்கு ஆண்டுகள் இருந்தது. அதற்குப் பிறகுதான் அவர்கள் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டனர். மீண்டும் பார்சி சமூகத்தில் அந்த அறிக்கை சுற்றுக்கு விடப்பட்டு அதன் மீது கருத்துகள் திரட்டப்பட்டன. இந்தக் கருத்துகள் பம்பாய், அகமதாபாத் அல்லது மெட்ராஸ் மக்களிடமிருந்து மட்டும் சேகரிக்கப்படவில்லை. பாரசீகம், சீனா போன்ற பகுதிகளில் வசிக்கும் பார்சிகளின் கருத்துகளும், விருப்பங்களும் அறிந்து கொள்ளப்பட்டன. படித்தவர்கள் மற்றும் வழக்குரைஞர்கள் ஒரு விஷயத்தை உருச்சிதைத்து அளிக்கிறார்கள். விஷயத்தின் அந்தக் கோணத்தை மக்கள் ஏனோ ஏற்றுக் கொள்கிறார்கள். விவாதத் திறமையினால் தங்கள் சிந்தனைப் போக்கை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்கிறார்கள். ஆனால் அந்த அறிக்கை அந்த மாதிரியான திறமை எதுவும் இல்லாதவர்களிடமும் அளிக்கப்பட்டது. சிறுபான்மை, மற்றும் பெரும்பான்மை என்ற வேறுபாடின்றி பல குழுக்களிடமிருந்து கருத்துகள் கோரப்பட்டன. எல்லோரையும் இவ்வாறு கலந்தாலோசித்த பிறகு 1936-ல் மசோதா திருத்தப்பட்ட வடிவில் அனுப்பப்பட்டது. எனவே இந்த மசோதாவில் கண்டுள்ள விஷயங்கள் 1923லிருந்து 1936 வரை அவர்கள் பரிசீலனையில் இருந்த பிறகு, இறுதியாகத் திருத்தப்பட்ட வடிவில் நிறைவேற்றப்பட்டது.

எனக்குத் திரு. ராவ் மீது மிகவும் மதிப்பும் மரியாதையும் உண்டு. கடுமையாக உழைத்து, அரசியல் அமைப்புச் சட்டம் தயாரிப்பதில் அவர் பேருதவி புரிந்திருக்கிறார். ஒரு சிலரை மட்டும் கலந்தாலோசித்ததை அவர் அறிக்கையிலேயே குறிப்பிட்டுள்ளதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இதில் எந்தக் கெடுதலும் இல்லை என நினைக்கிறார். இருப்பினும் இந்தப் பிரச்சினையைப் பொறுத்தவரையில் சமூகம் பிளவுபட்டுள்ளது என்பதை அவர் ஒத்துக் கொள்கிறார். இப்பொழுது அவையில் சகோதரி ரேணுகா இல்லை. அவரைப் பற்றியும் மாறுபட்டுச் சொல்வதற்கில்லை. 1943/44-ல் அவர் திருமணச் சட்டத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். அந்த நேரத்தில் ஒரு கருத்துக் கணிப்பு நடந்து, அந்த வாக்குகளையெல்லாம் எண்ணிப் பார்த்தால் உற்சாகமான வாலிபர்கள் அனைவரும் (ஜோஷிலா ஜவான்கள்) மசோதாவுக்கு ஆதரவாகவே வாக்களித்திருப்பார்கள் என்று வலியுறுத்திக் கூறினார். அவர் இந்த ஜோஷிலா ஜவான்கள் என்ற சொற்களை உபயோகப்படுத்தவில்லை. அவர் உபயோகித்த இளைஞர் என்ற சொல்லை விளக்கவே அதை உபயோகித்துள்ளேன். எனது சகோதரிக்கும் மற்றும் இந்த அவையில் உள்ள ஆறு அல்லது எட்டு உறுப்பினர்களுக்கும், நான் சொல்ல விரும்புவதெல்லாம் நம் ஆச்சார்ய கிருபளானி இதில் பெண்களின் விடுதலையைக் கண்டதுபோல, பெண்களின் நலனுக்காக இந்த மசோதா அவசியம் என்று அவர்கள் நினைத்தால் அதை இந்துச் சட்டத் தொகுப்பு என்று பெயரிட்டு அழைக்காதீர்கள். சுதந்திரத்திற்குப் பிறகு இந்துப் பெண்களுக்கான குடியியல் உரிமைகள் மசோதா அல்லது அதைப் போன்ற வேறு பெயரிட்டு அழையுங்கள். அதற்குப் பிறகு அவர்களுக்கு வேண்டிய அளவு உரிமைகளை வாரி வழங்குங்கள். ஏனெனில் எப்பொழுதும் பெண்களிடம் மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறோம். கல்யாணத்துக்குப் பிறகு நம் பெண்கள் தங்கள் கணவன் வீட்டை தம் சொந்த வீடாகக் கருதுகிறார்கள். சகோதரி சுசேதா இப்படி ஒரு இல்லத்தைத்தான் அமைத்திருக்கிறார். ஒரு பெண் தன் கணவன் வீட்டிற்குச் சென்றவுடன் அந்த வீடு அவளுடைய வீடாக ஆகிவிடுகிறது. தன்னுடைய தகப்பனாரின் வீட்டை தன் வீடாக இனியும் கூறமுடியாது. அவளுடைய திருமண நாளிலிருந்து அது அவள் தகப்பனாரின் இடம் மட்டுந்தான். அவள் திருமணம் செய்தகொண்டு சென்ற வீடுதான் அவள் வீடு. மேலும் விவரத்திற்குள் செல்ல நான் விரும்பவில்லை. இந்த மசோதா தங்களுக்காக மட்டுமே என்று நம் சகோதரிகள் எண்ணினால் அது தவறாகும். பெண்களுக்கு எவ்வளவு அதில் உரிமை உள்ளதோ,

ஆண்களுக்கும் அதில் அவ்வளவு உரிமை உள்ளது. எவ்விதத்திலும் இதைப் பொறுத்தவரையில் அவர்களிடையே வேறுபாடு காண விரும்பவில்லை. சமூகத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதிக்காக இந்த மசோதா உருவாக்கப்பட்டுள்ளது என்று எந்த ஆணுமோ அல்லது பெண்ணுமோ எண்ணிவிடக்கூடாது. அதிக நேரம் எடுத்துக் கொண்டதற்காக என்னை மன்னிக்க வேண்டும்.

ஒரு கருத்துக் கணிப்பு நடந்திருந்தால் உற்சாகமான இளைஞர்களின் ஆதரவு இருந்திருக்கும் என்று சகோதரி ரேணுகா கூறியதைப் பற்றி நான் எடுத்துரைத்தேன். 1947ல் திரு. ராவ் தாம் சமர்ப்பித்த அறிக்கையில் பின்வருமாறு கூறியிருந்தார்: ''மக்களின் அபிப்பிராயங்கள் கடுமையாகப் பிளவு பட்டிருந்தன. சிலர் இடதுசாரிகளாகவும், சிலர் வலதுசாரிகளாகவும் இருந்தனர். மேலும் மசோதாவுக்கு ஆதரவானவர்கள் புத்திசாலிகளாகவும் அந்தஸ்துள்ளவராகவும் இருந்தனர். அதே நேரத்தில் அதற்கு எதிர்ப்பு தெரிவித்தவர்கள் முட்டாள்களாகவும், மூளை இல்லாதவர்களாகவும், வாழ்க்கையில் எந்த அந்தஸ்தும் இல்லாதவர்களாகவும், சமுதாயத்தையும் அதன் சிக்கல்களையும் புரிந்து கொள்ள முடியாதவர்களாகவும் இருந்தனர். ஆயின், சமுதாயத்தையும் அதன் பிரச்சினைகளையும் புரிந்து கொள்ளுபவர்கள் யார் என்று நான் தெரிந்துகொள்ளலாமா? திரு. ராவ் அதைப் புரிந்து கொண்டிருக்கிறாரா? திரு. துவாரகாநாத் மிட்டர் உண்மையிலேயே அதைப் புரிந்து கொள்ளவில்லையா? அந்த மனிதர்களைப் பற்றி எனக்குச் சொல்வதற்கு ஒன்றுமில்லை. நேற்று யாருடைய நூற்றாண்டு பிறந்த தினம் நம்மால் கொண்டாடப்பட்டதோ, அந்தப் பண்பாட்டில் ஈடு இணையற்ற மனிதரான திரு. மாளவியாஜியைவிட இந்தத் துறையில் அதிகம் பணி புரிந்தவர்கள் வேறுயாரும் இருக்க முடியாது அவர் ஒரு சனாதனியாக இருந்தாலும் கூட சமுதாயச் சீர்திருத்தத்திலும் மக்கள் உரிமை பெறும் விஷயங்களிலும் அவரைப் போல் முன்னணியில் இருந்தவர் வேறு யாரும் கிடையாது. அந்தப் பெருமதிப்பிற்குரிய மாளவியாஜி இந்துச் சட்டத் தொகுப்பு அறிமுகப்படுத்தப்பட்ட முறை சரியானதல்ல என்று கருதினார். நாம் அவரைக் கவனிக்காமலிருக்கலாம். சர் தேஜ்பகதூர் சப்ரூவை உங்களுக்குத் தெரிந்திருக்கும். அறிவிலும் விவேகத்திலும் அவர் யாருக்கும் சளைத்தவர் அல்லர். இந்த மசோதாவுக்கு அவர் ஆதரவு அளிப்பதாக அறிவித்துள்ளார். இந்த மாதிரியான மசோதாவை தயாரிப்பதற்கான நேரம் இதுவல்ல என்று அவர் ஒத்துக் கொண்டிருக்கிறார். மேலும் தொடர்கிறேன். சர் சிமன்லால் செதல்வாட் மற்ற எந்த மனிதருக்கும் குறைவில்லாத அந்தஸ்துடன்

வாழ்ந்துவந்தார். இந்தச் சமூகத்தை சீர்திருத்தும் பணியில் எப்பொழு துமே தலைமைப் பாத்திரம் வகித்து வந்தார். கொள்கை அடிப் படையில் சட்டத் தொகுப்பை ஒருபொழுதும் அவர் ஏற்றுக் கொள்ள வில்லை. சட்டத் தொகுப்பு மற்றும் முறைப்படுத்தல் ஏதுமின்றி பெண்களுக்கும், விதவைகளுக்கும் சொத்தில் பங்களிப்பதை அவர் ஆதரித்தார். நீங்கள் பேசுவதைத் திரும்பச் சொல்பவர்களை எல்லாம் அறிவில் சிறந்தவர்கள் என்றும், உங்களுடைய கருத்துகளை ஏற்றுக் கொள்ளாதவர்களை வெறும் முட்டாள்கள் என்றும் பழித்துரைப்பது முற்றிலும் சரியல்ல. மசோதாவை இந்த முறையில் பரிசீலிக்கக் கூடாது என்று இந்த அவையின் மூலமும் உங்கள் மூலமும் நமது சகோதர சகோதரிகளைக் கேட்டுக் கொள்கிறேன். மேலும், நம் மாண்புமிகுத் தலைவர், பிரதம மந்திரி பண்டிட் ஜவஹர்லால் நேரு அவையில் இல்லாவிடினும், இந்து சமுதாயத்துக்கு ஒரு சீரான விதி களை உருவாக்க வேண்டுமென்று அவர் முயற்சியிலும், சிதறிக் கிடக்கும் பல சட்டங்களைத் தொகுத்து முறைமைப்படுத்த வேண்டும் என்ற அவரது விருப்பத்திலும் நானும் இணைந்து செயல்பட்டிருப் பேன், உண்மையில் நான் அவருடன்தான் இருக்கிறேன். பொதுமக்கள் தங்கள் கருத்துகளை எடுத்துக்கூற வாய்ப்பளிக்க அனுமதிக்கப்பட் டார்களா என்று அவரிடம் கேட்க விரும்புகிறேன். அதிக எண்ணிக் கையில் இல்லாத பார்சி சமூகத்தை எடுத்துக் கொள்ளுங்கள். தங்க ளுடைய எல்லா ஆக்கக் கூறுகளையும் தங்களுடன் ஒன்றாக வைத்துக் கொண்டு தனித்தனியாக ஒவ்வொன்றின் அபிப்பிராயங்களையும் தெரிந்துகொண்டபிறகே மசோதா கொண்டு வரப்பட்டது. அதன் பிறகே அவர்கள் வெற்றி அடைந்தனர். இல்லையெனில் தங்கள் குறிக்கோளை அடைந்திருக்க முடியாது. சிவில் திருமணச் சட்டத்தை திருத்தம் செய்ய இப்பொழுதுள்ள குறிக்கோளைப் போன்ற குறிக் கோள்களுடன் ஒரு மசோதா 1921-ல் கொண்டுவரப்பட்டது. ஏன் ஒரு இந்து சட்டத் தொகுப்பைத் தயாரிக்கிறீர்கள்? ஏன் ஒரு இந்தியச் சட்டத் தொகுப்பை உருவாக்கக்கூடாது? எல்லா மக்களும் இந்தியா என்ற ஒரே நாட்டில்தான் வாழ்கிறார்கள். அவர்களுக்கு ஒரே மாதிரியான நடைமுறைகளும் வழக்கங்களும் இருக்க வேண்டும். நாம் ஒரே மொழியைப்பற்றி முடிவு செய்திருக்கும்போது, எல்லா மக்களுக்கும் ஒரே பொதுவான சட்டத் தொகுப்பு இருக்க வேண்டும். இது ஒற்றுமைக்கும் ஒன்றுபட்ட இந்தியாவிற்கும் இட்டுச் செல்லும். அந்தக் காலத்தைப் பற்றி உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். கிருஸ்துவர்களும் முஸ்லீம்களும் பெரும் எதிர்ப்பை தெரிவித்தனர். டாக்டர் கௌர் இதைப் பற்றிக் கூறுகிறார். ''இந்தியா முழுவதிலு முள்ள முஸ்லீம்கள் மற்றும் பார்சி சமூகத்தினரிடமிருந்து அதிர

வைக்கும் எதிர்ப்பு கிளம்பியது. அந்த மசோதாவைக் கைவிடுவதை விட வேறுவழி எனக்கு இருக்கவில்லை. புதிய மசோதா 1923-ல் கொண்டுவரப்பட்டது.''

அவர் அந்த வழியைத் தேர்ந்தெடுத்தார். எந்தவித மதிப்பும் மரியாதையும் இந்து சமுதாயத்திற்கு அளிக்கப்படவில்லை. இவ்வளவு பெரும் எண்ணிக்கை கொண்டுள்ள ஒரு சமுதாயத்துக்கு எந்தவித முக்கியத்துவமும் கொடுக்கப்படவில்லை. திரு. பட்டாபி சாகிப், திரு. அல்லாடி திரு. லட்சுமி காந்த மைத்ரா ஆகியவர்களை விட்டு விடுங்கள். மாளவியாஜியின் ஆலோசனையே கவனிக்கப்பட வில்லை. அவர்கள் கூறுவது எதுவும் முக்கியத்துவம் வாய்ந்தது அல்ல. மற்றவர்களை விட்டுவிடுங்கள் அஜாதசத்ரு என்று பாராட் டப்படும் ராஜேந்திரப் பிரசாத்திற்கு ஏற்பட்ட நிலைமையைப் பாருங்கள். அறிவாற்றலுக்கும், விவேகத்திற்கும் உயிருள்ள அரும் பொருள் காட்சியகமாக விளங்கும் அவர் இந்தியாவின் அணிகல னாக விளங்குகிறார். காந்திஜயின் கருத்துகளை நடைமுறைப்படுத் தியவர். அந்தச் சீரிய கருத்துகளை இந்நாட்டிலுள்ள மக்கட்கு மட்டு மின்றி உலக மக்களுக்கே அவரால் விளக்கி எடுத்துரைக்க முடியும். அவர் கூறுகிறார்: ''இது தக்க தருணமல்ல. இதில் விவாதத்திற்குரிய பல விஷயங்கள் உள்ளன. அதை வடிகட்டி எடுத்து விடுங்கள். அதைத் தொடாதீர்கள். ஆனால், என்ன செய்வது? இல்லை, இது விரைவில் செயல்படுத்தப் படவேண்டும் என்று தலைவர்கள் கூறு கிறார்கள். அவ்வாறாயின், அதைத் துரிதப்படுத்தட்டும். குறைந்த பட்சம் எல்லா மக்களின் கருத்துகளையும் சம்மதத்தையுமாவது பெறட்டும். ஒரு சாதகமான நிலையை டாக்டர் அம்பேத்கர் பயன் படுத்திக் கொண்டார். அந்த சாதகமான நிலை என்ன என்பதை இப்பொழுது கூறுகிறேன். 1948-ல் இந்த மசோதா அறிமுகப்படுத்தப் பட்டபோது, நாங்களெல்லாம் அமர்ந்து தற்போதைக்கு யாரும் அதைக் குறித்து உரை நிகழ்த்தக் கூடாது என்று முடிவு செய்தோம். டாக்டர் அம்பேத்கரோ அல்லது வேறு யாருமோ, குறிப்பிட்டு எதையும் பேசவில்லை. சாதாரண முறையில் அந்த மசோதாவை அறிமுகப்படுத்தினால் நம் சகோதரிகளுக்கு மனநிறைவைக் கொடுப் பதுடன், ஒருங்கிணைப்பு மற்றும் தொகுத்து முறைப்படுத்த விரும்பும் சீர்திருத்தவாதிகளுக்கும், பகுத்தறிவாளர்களுக்கும் திருப்தி அளிக்கும் என்று அப்பொழுது கருதப்பட்டது. எனவே அந்த மனநிறைவு அவர் களுக்கு கிட்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இதைச் சாதக மாகப் பயன்படுத்திக் கொண்டு இந்த மசோதா பொதுவாக சரியாக உள்ளது என்றும் மக்கள் ஏற்றுக் கொண்டதாகவும் டாக்டர் அம்பேத்கர்

கருதினார். இல்லை, ஐயா இந்த மசோதாவின் சில கூறுகளையும், விதிகளையும் நாம் படிக்கவில்லை. ஆனால் நம் தலைவர்கள் கூறினார்கள்; "நாம் சிறிது முன்னேறிச் செல்வோம்." நாம் கூறினோம்; "மிகவும் நன்று அதை முன்னுக்கு எடுத்துச் செல்வோம். அதைச் சந்தைக்கு எடுத்துச் செல்வோம்." இப்படித்தான் அது சந்தைக்கு வந்துள்ளது. அது ஊர்வலத்தில், அணிவகுத்துக் கொண்டு வரப் பட்டது. அந்தக் காட்சியைத்தான் கண்டு கொண்டிருக்கிறோம். மசோதா பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்படுவதற்கு முன்பு நம் முடைய இந்த விவாதங்கள் எல்லாம் நடைபெற்றிருக்குமானால் அது டாக்டர் அம்பேத்கருக்கும், பொறுக்குக் குழுவில் உள்ள நமது நண்பர்களுக்கும் பெரும் பயன் அளித்திருக்கும். பல்வேறு பகுதி களுக்கு, என்ன வடிவம் கொடுக்கப்பட வேண்டும் என்பதை அவர்கள் தெரிந்துகொண்டிருப்பார்கள். இப்பொழுது நாம் ஒரு கடினமான, சிக்கலான நிலைமைக்கு வந்துள்ளோம். நம்முடைய குழப்பம் என்ன வென்றால் மீண்டும் அது பொறுக்குக் குழுவுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று நாம் கூறினால் எப்படிப்பட்ட சிக்கலான விதிமுறை களையும் நடைமுறைகளையும் சந்திக்க வேண்டுமோ என்பதுதான். அதே நேரத்தில், தற்போதைக்கு அதை நிறுத்தி வைத்திருப்போம் என்றால், நம் தலைக்குமேல் வேறொரு வாள் தொங்கிக் கொண் டிருக்கிறது. இப்பொழுது நாம் என்ன செய்யப் போகிறோம்? நாம் ஒரு பெரும் சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டோம். நமது தலைவர் களும், விதியும்தான் நம்மை இதிலிருந்து காப்பாற்ற வேண்டும்.

இந்து சமூகத்தின் கருத்துகளை இன்னும் நாம் தெரிந்து கொள் ளாததால் இந்தக் குறிப்பிட்ட காலகட்டத்தில் இந்த மசோதாவை அறிமுகம் செய்யத் தேவையில்லை என்று நான் எடுத்துரைத்தேன். நாம் கலந்தாலோசித்த இந்துக்கள் நகரத்தைச் சேர்ந்தவர்கள். எத்தனை பேர்களை நாம் கலந்தாலோசித்தோம்? எழுத்து மூலம் கருத்துகளை தெரிவித்தவர்கள் மற்றும் சாட்சியம் அளித்தவர்களின் எண்ணிக்கை 121 தனிநபர்களும், 102 அமைப்புகளுமாகும். இப் பொழுது, இதுதான் இந்து சமுதாயத்தின் அபிப்பிராயம் என்று கூறலாமா? திரு. மிட்டரின் கருத்தை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்பினால் அதுவும் ஒவ்வொரு பிரிவைக் குறித்தும் தனித்தனி யாக, அதைக் குறித்து உங்களிடம் பேசத் தயாராக இருக்கிறேன். மதராஸைத் தவிர எங்கும் மசோதாவுக்கு எதிர்ப்புதான். வங்காளத் திலுள்ள **தாயபாக** முறையைச் சேர்ந்தவர்கள் கண்டனத்தை தெரிவித் துள்ளனர். பம்பாயிலிருந்தும் எதிர்ப்புக் குரல்தான். இந்த மாதிரியான

கருத்து வேறுபாடு மற்றும் இதர காரணங்களினால் அது பெரும் எதிர்ப்பைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. இந்த எதிர்ப்புக்குப் பிறகும், சிறுபான்மையினர் கூறுவதே உண்மை, அதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும், ''முடிவை மாற்ற முடியாது'' என்று கூறினால் அது மிகவும் கடினமானதுதான். இந்து சமுதாயத்தை ஒன்றுபடுத்த வேண்டும். நிச்சயமாக ஓர் அமைப்பு முறையின் அடிப்படையில்தான் இதைச் செய்ய முடியும். நமது சகோதரிக்கு பங்களிக்கக் கூடாது என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? அவர்கள் தங்கள் பங்கைப் பெற்றுக் கொண்டபிறகு, தங்கள் பெற்றோர்கள் வீட்டின் மீது ஏதாவது அன்பு எஞ்சியிருக்குமா என்பதை நமது சகோதரிகளிடமே கேட்டுப் பாருங்கள். அவர்களிடம் எவ்வளவு பற்று இருக்கும்? இன்றைய சீர்திருத்தவாதியான பெண்களில் ஒருவரிடம், அவருடைய தகப்பனார் எங்கே வசிக்கிறார், சகோதரர் எங்கே வசிக்கிறார் என்று கேட்டுப் பாருங்கள். அவர்கள் தங்கள் குடிசையிலேயே, இல்லத்திலேயே மாளிகையிலேயே முடங்கிக் கிடக்கிறார்கள். உறவினர்களைக் கண்டு கொள்வதில்லை. சீர்திருத்தவாதிகளின் இன்றைய நிலை இதுதான். எனவே சொத்தில் பங்கு என்றால் நம் நிலைமை என்னவாகும்? எனினும், இந்த ஆட்சேபனைகள் எல்லாம் இருப்பினும் நாம் சிறுபான்மையினரின் பிரச்சினையைச் சந்தித்துக் கொண்டிருக் கிறோம் என்பதைக் கூற விரும்புகிறேன். ஒவ்வொருவரின் கருத்தை யும் தெரிந்து கொள்ளா விட்டாலும், நாம் அந்தவித நெருக்கு தலுக்கு உள்ளாகி யிருக்கிறோம். நாம் அதை ஏற்றுக் கொள்ள வலுக்கட்டாயமாக வற்புறுத்தப்படுகிறோம். ஆயினும், பிற்காலத்தில் எவ்வளவு சிக்கல்கள் தோன்றப் போகின்றன என்பதை அவர்கள் காணத் தவறுகின்றனர்.

எனவே, நான் கூறுவதெல்லாம் ஓர் இடைப்பட்ட பாதையை கண்டுபிடியுங்கள். நமக்கும், சமூகத்திற்கும் திருப்தி அளிப்பதுடன் இந்த குழப்ப நிலை அடங்குவதற்கும் இடைப்பட்ட பாதையே உதவமுடியும். இன்றைக்கு படாஸ்கர்ஜி கூறியது போன்று ஏற் கெனவே பல இடர்பாடுகளுக்கிடையே உழன்று கொண்டிருக் கிறோம். இந்தக் கட்டத்தில் மேலும் ஒரு சிக்கலைக் கிளப்புவானேன்? மேலும் முட்புதர்களைப் பாதையில் போடவேண்டுமா? சில காலம் கழித்து அந்தப்பாதையைச் செப்பனிட அதிக உழைப்புத் தேவைப் படாதா? ஏன் இப்படி நடந்து கொள்கிறீர்கள்? வேறு ஏதாவது பணியில் ஈடுபடுங்கள். ஒன்றிரண்டு ஆண்டுகளுக்கு இதை ஒத்தி போடுங்கள். இந்த மசோதாவை வரவேற்கும் நமது மெய்மையான பெண் தெய்வங்களான சகோதரிகளுக்கு ஒரு வேண்டுகோள். நாட்டின்

நலன்கருதி, அவர்கள் நம் ஜவஹர்லால் நேருவிடம் சென்று இந்த நடவடிக்கையை ஒன்றிரண்டு ஆண்டுகள் நிறுத்திவைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ள வேண்டும். இது பல வழிகளில் உதவிபுரியும். இந்த மசோதா இப்பொழுது அல்லது 1950 ஆண்டுக்குள்ளாவது நிறைவேற்றப்படவில்லையென்றால் ஒருபொழுதும் நிறைவேற்றப் படப் போவதில்லை என்பதே அவர்களுடைய சிந்தனைப் போக்காக உள்ளது. ஏனெனில் இனி எதிர்காலத்தில் வருபவர்கள் அதை நிறைவேற்ற அனுமதிக்கமாட்டார்கள். நீங்கள் அதை இன்று நிறைவேற்றினாலும்கூட பிற்காலத்தில் என்ன நடக்கும் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். ''சட்டமாக்கப்பட்டுள்ள இந்துச் சட்டத் தொகுப்பைத் திருத்துவதே நமது முதற் பணி'' என்ற கருத் துள்ளவர்கள் இந்த அவையில் அமர்ந்திருப்பார்கள். எனவே தயவு செய்து, உங்களால் முடியுமானால் இதைத் தடுத்து நிறுத்துங்கள். அது உங்களால் சாத்தியமில்லையென்றால், இடதுபக்கமோ வலது பக்கமோ சாயாதீர்கள். இடைப்பட்ட பாதையை, ஒரு தங்கமயமான இடைப்பட்ட பாதையைத் தேர்ந்தெடுங்கள். இதுவே இந்து சமுதா யத்திற்கு மனநிறைவு தரும்.

இரண்டாவதாக, திரு. சர்வாத்தே எழுப்பிய ஒழுங்குப் பிரச் சினைக்கு டாக்டர் அம்பேத்கர் அளித்த பதிலைக் குறித்துப் பேச விரும்புகிறேன். துணை சபாநாயகர் அவர்களே, நீங்கள்கூட அதற்கு ஆதரவு தெரிவித்தீர்கள். அதாவது இந்த மசோதா மாகாணங்களில் மட்டுமே அமலாக்கப்படும். அது சமஸ்தானங்களிலும் அமலாக்கப் பட வேண்டுமென்றால் அவற்றுக்கும் அனுப்பப்படும். அது சுற்றுக்கு விடப்பட்ட பிறகு அதை என்ன செய்வதென்று முடிவு எடுக்கப் படும். டாக்டர் அம்பேத்கர் பின்வருமாறு கூறினார்:

> ''இந்திய சமஸ்தானங்களுக்கு இந்த மசோதாவை விரிவுபடுத்த வேண்டிய தருணம் வரும்போது, தீர்மானம் ஒன்று அதன் முன் வைக்கப்படும்போது, நிச்சயமாக இந்த சட்டமன்றம், அல்லது அன்றைய அரசு அவர்களுடைய விருப்பங்களையும் நோக்கங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளும்போது இந்திய யூனியனில் இணைக்கப்பட்டுள்ள சமஸ்தானங்களை கலந்தாலோ சிக்கும்.''

இதுதான் நிலைமை என்றால், இன்றைக்கு நிறைவேற்றப் பட்டவை ஆறுமாதம் கழித்து சமஸ்தானங்களுக்கு அனுப்பப்படும். சமஸ்தானங்கள் இதை நடைமுறைக்குக் கொண்டு வரும்போது நீங்கள் மேலும் முன்னேறிச் சென்றிருப்பீர்கள். ஏற்கெனவே பின்தங்கி யுள்ள சமஸ்தான மக்கள் மேலும் பின்தங்கிய நிலையில் இருப்பார்கள்.

எனவே இந்த விஷயத்தைக் கவனத்தில் கொண்டு, என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்யுங்கள்.

பொதுமக்கள் கருத்தைத் தெரிந்து கொள்வதில் நாம் கையாண்ட முறை குறைபாடுள்ளது என்று கூற என்னை அனுமதிக்குமாறுக் கேட்டுக் கொள்கிறேன். அரசியல் சட்டத்தைத் தயாரிப்பதற்கு இரண்டரை ஆண்டு முதல் மூன்றாண்டு வரை எடுத்துக் கொண்டோம். மிகவும் எச்சரிக்கையுடன் அதை நாம் தயாரித்தாலும் அது சரியாக இல்லை என்று பலரும் கூறுகின்றனர். மாகாண அரசுகளுக்கு அரசியல் சட்டத்தின் நகல்கள் அனுப்பப்பட்டு, அவை சட்ட மன்றங்களிலும் அமைச்சரவையிலும் விவாதிக்கப்பட்டு, அவர்களுடைய கருத்துகளும் நமக்கு அனுப்பப்பட்டன. எந்த மாகாண அரசுக்கும் ராவ் குழுவின் வரைவு அறிக்கை அனுப்பப்படவில்லை. இப்படித்தான் அது இங்கு கொண்டுவரப்பட்டுள்ளது. கருத்துகள் முழுமையாகவும், சரியான முறையிலும் கணிக்கப்படவில்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நீங்கள் கூறுவதன் அடிப்படைச் சரியாக இல்லை. அதைப்பற்றி எனக்கு ஐயப்பாடு உள்ளது. நாட்டில் பாதிக்கும் மேல் அதை ஆதரிக்கின்றனர் என்று ரேணுகா பகன் (சகோதரி) குறிப்பிட்டார். ஆனால் ராவ் குழுவோ, சமுதாயம் முழுவதும் பிளவுபட்டுக் கிடக்கிறது என்று கூறுகிறது. நான் யாரை நம்புவது? ஆய்வுக்குப் பிறகு 1947-ல் அளிக்கப்பட்ட அறிக்கையையா அல்லது 1944-ல் ரேணுகா பகன் வெளியிட்ட அறிக்கையையா?

**திரு. துணை சபாநாயகர்:** இன்னும் பல உறுப்பினர்கள் உரையாற்ற வேண்டியிருக்கிறது. தயவு செய்து விரைவில் முடியுங்கள்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட் :** இன்னும் ஐந்து அல்லது ஏழு நிமிடங்களில் முடித்து விடுகிறேன். நீங்கள் அனுமதித்தால் இன்னும் சில விஷயங்களை எடுத்துக் கூறுவேன்.

**திரு. துணை சபாநாயகர்:** உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். ஏற்கெனவே முப்பது நிமிடங்கள் எடுத்துக் கொண்டு விட்டீர்கள்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட்:** இன்னும் கொஞ்சம் பேசிவிட்டு விரைவில் முடித்துக் கொள்கிறேன். நீங்கள் என்ன அடி கொடுத்தாலும் இந்து சமுதாயம் மட்டும் அமைதியாகத் தாங்கிக் கொள்ளும் என்பதை நான் கண்டிப்பாகக் கூறவேண்டும். முஸ்லீம் சமுதாயத்தைப் பாருங்கள். அவர்களுக்கு ஒரு சட்டத் தொகுப்பு

தயாரிப்பதற்கு யாருக்காவது தைரியம் இருக்கிறதா? ஷியா மற்றும் சன்னி சிந்தனைப் போக்குகளை ஒன்றிணைக்க முடியுமா? கிருஸ்தவர்களின் சட்டத்தில் கைவைக்கத் தைரியம் உள்ளதா என்று கூறுங்கள்? அல்லது பார்சிகளை ஏதாவது செய்யமுடியுமா? பாவம், இந்து சமுதாயம் மட்டும் எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ள வேண்டும். ஏனெனில் அதை நீங்கள் உயிரற்ற சமூகம் என்று நினைக்கிறீர்களா? தான் சூத்திரர் பிரிவைச் சேர்ந்தவர் என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். நான் அவரை உயர்வாக மதிப்பவன். யாரோ ஒருவர் அவருக்கு முனிவர் என்ற பட்டத்தைக் கொடுத்தார். மற்றொருவர் ரிஷியின் நிலைக்கு உயர்த்தியுள்ளார். ஆனால் அவர் தம்மை சூத்திரர் என்றுதான் அழைத்துக் கொள்கிறார். அப்படியானால் அவர் விஸ்வாமித்திரராக இருக்கட்டும். நீங்கள் யாராக இருந்தாலும், நிச்சயமாக நீங்கள் மதிநுட்பம் மிக்கவர். ஏன் இந்த தாழ்வு மனப்பான்மையை வளர்க்க வேண்டும்? **ஸ்மிருதிகள்** தொடர்ந்து எழுதப்பட்டு வந்தன என்று அவர் கூறுகிறார். பிராமணர்கள் எழுதிக் கொண்டே இருந்தார்கள். வேறு என்னதான் அவர்கள் செய்ய முடியும்? உங்கள் துறை ஆற்றும் பணி என்ன? அதைத்தான் **ஸ்மிருதி** ஆசிரியர்களும் செய்தார்கள். சட்டங்களைத் திருத்தவும் அவ்வப்போது விதிகளை உருவாக்கிய துறைதான் அது. நீங்கள் சட்டங்களை இயற்றி திருத்தங்கள் கொண்டு வருவதைப்போன்றே அவர்களும் செய்தனர். எனினும் இந்தப் பிரச்சினைக்குள் நான் செல்ல விரும்பவில்லை. சம்பந்தமற்ற விஷயங்களுக்குள்ளும் செல்ல விரும்பவில்லை. இந்த விஷயங்கள் அடிப்படை உரிமையில் சேர்க்கப்பட வேண்டியவை என்று நமது சகோதரிகள் கூறுகிறார்கள். இதை எதிர்ப்பவர்கள் அடிப்படை உரிமைகளைப் புரிந்து கொள்ளாதவர்கள் என்கிறார்கள். ''உங்களுக்கு அடிப்படை உரிமைகளைப் புரிந்து கொள்ள முடியவில்லை'', என்று அவர்கள் கூறுகிறார்கள். அது அடிப்படை உரிமையில் அடங்கியதா அல்லது ஒரு மாகாணத்திற்கான பொதுவான சட்டமா? அது நாடு முழுவதற்குமான சட்டமா அல்லது ஒரு குறிப்பிட்ட வகுப்பினருக்கான (தனிநபர்) சட்டமா? இந்தியத் தொகுப்புச் சட்டம் ஒன்றைக் கொண்டு வந்தால் யாரும் அதை எதிர்க்க மாட்டார்கள் என்று நிச்சயமாகக் கூறுவேன். ஆனால் நீங்கள் இன்று இந்துச் சட்டத் தொகுப்பைக் கொண்டுவர, இந்துச் சட்டத்தில் மாற்றங்கள் கொண்டுவர விரும்புகிறீர்கள். குறிப்பிட்ட வகுப்பினருக்கான சட்டம் மாநில மக்கள் யாவருக்குமான சட்டமல்ல. எனவே அது பொருத்தமற்றது. கௌர் ஒரு முறை குறிப்பிட்டார், ஓர் அவதாரந்தான் ஒரு நாள் இந்த மாதிரியான தொகுப்புச் சட்டத்தைக் கொண்டுவர முடியும். திரு. கௌர் நாக்பூரில் இருந்து கொண்டு

ஓர் அவதாரம் தோன்றி, இறுதியில் இந்து தொகுப்பு மசோதாவைக் கொண்டு வந்திருப்பதை தெரிந்து கொண்டிருப்பார்.

**திரு. மகாவீர் தியாகி :** வெட்கங்கெட்ட மனிதர்கள்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட் :** மேலும் சில வார்த்தைகள் கூறிவிட்டு என்னுடைய உரையை சிறிது நேரத்தில் முடித்துக் கொள்கிறேன். சகோதரர்களையும் சகோதரிகளையும் ஒரே விதத்தில் பாவிக்கவேண்டுமென்று கூறப்பட்டது. திரு. கிருபளானி அவையை விட்டுப் போய்விட்டார். மற்றவர்கள் உரையை அவர் ஏன் கேட்க வேண்டும்? சகோதரிகளுக்கு ஏன் இரட்டை உரிமை கொடுக்க வேண்டுமென்று கேட்கிறேன்? தன் தகப்பனார் வீட்டிலிருந்து சீதனத்தைப் பெற்றுக் கொள்கிறாள். தகப்பனாரிடமிருந்து வரதட்சணையைப் பெற்றுக் கொள்கிறாள், தனது பங்கை எடுத்துக் கொள்கிறாள். இதற்கும் மேல் தனது கணவன் சொத்திலும் பங்கு உள்ளது. எப்படி நம் சகோதரிகள் இவ்வளவு பேராசை பிடித்தவர்கள் ஆனார்கள்? பெண்களே செல்வத்தின் சின்னம். அப்படியிருக்கும்போது உலகச் செல்வங்களின்மீது ஏன் மேலும் அவர்களுக்கு ஆசை? செல்வமும், வளமான வாழ்வும் தானாகவே செல்வந்தர்களுக்கே சென்றடையும் என்பதில் எந்தவித ஐயப்பாடும் இல்லையென்று திருமதி கமலா சௌத்திரி எடுத்துரைத்தாள். பெண்களே ஐஸ்வர்யத்தின் அவதாரம் என்கையில், மேலும் அவர்கள் செல்வத்தைச் சேர்க்க ஏன் விரும்புகிறார்கள்? கொஞ்சம் மாயத் தோற்றத்தையும் கவர்ச்சியையும் வைத்துக் கொண்டு உலகத்தையே கீழ்ப்படியச் செய்வதுடன் அதை வெற்றி கொள்ளவும் அவர்களால் முடியும். அந்த மயக்கும் தோற்றமும் கவர்ச்சியும் அதிகமாகிவிட்டால் என்னதான் நடக்கும் என்று யாராலும் கூறமுடியாது. செல்வச் செழிப்பு (மாயை) செல்வந்தர்களுக்கே செல்லுமென்றால் இயற்கை மட்டும் உலகில் இருக்கட்டும். அதிலிருந்து ஆடவனை நீக்கிவிடு. இவ்வாறு ஆடவனை விலக்குவதால், மாயை தொடர்ந்து ஜீவித்திருக்க முடியுமானால் அவ்வாறே செய்யுங்கள்.

திருவிதாங்கூர் மற்றும் கொச்சியைச் சேர்ந்த நம் நண்பர்கள் மிகவும் முன்னேற்றம் அடைந்து விட்டனர், ஆனால் ஒரு மரம் தோப்பாகாது என்பதை அவர்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். கிராமவாசிகளும் தங்களோடொப்பம் முன்னுக்கு வர வேண்டுமென்றால், அவர்களையும் தங்கள் வேகத்திற்குக் கொண்டு வருவதுடன் இந்த மசோதாவுக்கு அதிக விளம்பரம் கொடுக்கப்பட

வேண்டும். இதன் பல்வேறு விளைவுகளையும் அவர்களுக்கு விளக்கு வதால் இதன் நோக்கம் நிச்சயம் நிறைவேறும். இதைப் பொறுத்து எந்த சந்தேகமும் வேண்டாம். இந்த மசோதாவை நிறைவேற்று வதன் மூலம் தற்பொழுதுள்ள நிலையிலிருந்து பின்னோக்கி செல்ல வேண்டியிருக்கும் என்று சில இடங்களில் கூறப்படுகிறது. இந்தக் குற்றச் சாட்டு ஓரளவுக்கு சரியாகத்தான் உள்ளது. தனது இயற்கை யான போக்கில் தண்ணீர் ஒழுகட்டும். சிறுபான்மையினர் கருத் துகளை திணிப்பதன் மூலம் தற்போதைய நிலைமையை பின்னுக்கு தள்ளலாம். இன்றைக்கு இதைச் செய்ய உங்களுக்கு சாத்தியமாக லாம். ஆனால் ஒரு நாள் உங்களைப் பேச்சு மூச்சற்று திகைக்க வைக்கும் தீவிரமான மாற்றங்கள் அதில் கொண்டுவரப்படும். தவிர்க்க முடியாதது நடக்கத்தான் செய்யும். நான் விவரங்களுக்குள் செல்ல விரும்பவில்லை.

நம் ஸ்மிருதி ஆசிரியரான (சட்டம் அளிப்பவர்) யாக்ன வல்கியர் மனு **ஸ்மிருதியை** விட ஒரு படி முன்னே சென்றுவிட்டார். இந்த மனு ஸ்மிருதியின் ஆசிரியர், எந்த மனு என்று விவாதத்தில் இறங்க நான் விரும்பவில்லை. ஏனெனில் மனு என்ற பெயரில் பலர் இருந்துள்ளனர். ஆனால் யாக்னவல்கிய ஸ்மிருதி உரையாசிரி யரும் மிதாக்ஷரா விளக்க உரை எழுதியவருமான திரு. விக்யா னேஸ்வர், மற்றும் தாயபாக் மற்றும் மயூக் விளக்க உரைகளை வழங்கிய உரையாசிரியர்கள் பல்வேறு மாறுபட்டக் கருத்துகளை எடுத்துரைத்தனர். எல்லா உதாரணங்களையும் எடுத்துரைக்க விரும்பவில்லை. ஒரு பெண்ணுக்கு சீதனம் கொடுக்காவிட்டால், மகனுக்கு சமமாக சொத்தில் பங்கு அளிக்க வேண்டுமென்று அவர்கள் விதித்துள்ளனர். இது வெளிப்படையாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. நம் ஸ்மிருதிகளில் சீதனத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதை என்னால் முடிந்த அளவுக்கு உரத்த குரலில் எடுத்துரைக்க விரும்பு கிறேன். ஆங்கிலேயர்கள் தங்கள் சட்டத்தை இன்னும் தொகுத்து முறைப்படுத்தவில்லை. ஆங்கிலப் பிரார்த்தனைப் புத்தகத்தின்படி திருமணத்திற்கான தடை செய்யப்பட்ட உறவுகளின் படிநிலை கி.பி. 1565-ல் நிர்ணயிக்கப்பட்டது. அது கி.பி. 1915 வரை அமலில் இருந்து வந்தது. கி.பி. 1915ல் தடைசெய்யப்பட்ட உறவுகளின் படிநிலை பட்டியலில் ஒரே ஒரு மாற்றம் செய்யப்பட்டது. அதாவது இதுவரை மனைவியில் சகோதரியுடன் திருமணம் நடைபெற முடியாது. இதை ஒப்பிட்டுப் பார்க்கையில் நாம் எவ்வளவோ முன்னேறி விட்டோம் என்று கூற விரும்புகிறேன். அங்கே தடைசெய்யப்பட்ட உறவுகளின் படிநிலையில் ஒரே ஒரு மாற்றம் செய்ய இவ்வளவு

ஆண்டுகள் சென்றுள்ளன. ஆனால் இங்கு, சிவில் திருமணச் சட்டப் படி பெற்றோரின் ஒன்றுவிட்ட உடன் பிறந்தாரின் பிள்ளையுடன் கூட மண உறவுகளை ஏற்படுத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளது. பலர் சிவில் திருமணத்திலேயே தஞ்சம் புகுகிறார்கள். ஆனால் ஏன் அதே கட்டுப்பாட்டை மற்றவர்கள் மீது திணிக்க விரும்புகிறீர்கள்? சிவில் திருமணச்சட்டம் பெற்றோரின் ஒன்று விட்ட உடன் பிறந்தாரின் பிள்ளைகளுடனான திருமணத்திற்கு அனுமதி அளிக்கிறது. அந்த முறையை ஆதரிப்பவர்கள் அதைப் பின்பற்றட்டும். இந்த மசோதாவைத் தயாரிக்கையில் மனித இன மேம்பாட்டு அறிவியல் கொள்கைகளையும் மனதில் கொள்ள வேண்டும். நமது ஸ்மிருதி ஆசிரியர்கள் (உரையாசிரியர்கள்) தொடர் பற்று எதையும் குறிப்பிட்டுள்ளார்கள் என்று கூறிவிட முடியாது. நம் ஸ்மிருதி ஆசிரியர்கள் மனித இன மேம்பாட்டு அறிவியலில் அதிக நிபுணத்துவம் பெற்றவர்கள். அவர்களைச் சாதாரண மனிதர்கள் என்று கருதிவிட முடியாது. அவர்கள் நன்கு கற்றுத் தேர்ந்தவர்கள் என்பதுடன் நல்ல விஷயஞானம் பெற்றவர்களாகவும் இருந்தனர். அவர்கள் நிர்ணயித்த படிநிலை முற்றிலும் சரியாக இருந்தது. 6, 8, 10, அல்லது 12 மாதங்களுக்குப் பிறகு அதில் மாற்றம் செய்ய வேண்டிய அவசியம் இல்லாமல் இருந்தது. நம் **ஸ்மிருதி** ஆசிரியர்கள் மதி நுட்பம் நிறைந்தவர்களாகவும் விவேகமுடையவர்களாகவும் இருந்தனர். அவர்கள் எழுதியுள்ளதில் மாற்றத்திற்கான ஆலோசனைகளைக் கூற நூற்றுக் கணக்கான ஆண்டுகள் ஆழ்ந்து தியானம் செய்யவேண்டும். அப்போது அவற்றில் பொருத்தமான திருத்தங்களை நீங்கள் செய்யமுடியும் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் இந்த ஸ்மிருதிகளில் அவ்வப்போது மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்த மாற்றங்களைக் கொண்டு வருவதால் சமுதாயத்துக்கு ஆதாயமா அல்லது இழப்பா என்பதை நாம் முழுமையாகப் பரிசீலித்துப் பார்க்க வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்** (ம.மா. மற்றும் பேரார் : பொது) : இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவாளிகளில்லையா?

**திரு. துணை சபாநாயகர் :** தயவு செய்து தொடருங்கள்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட் :** திரு காமத்தைப் போன்று நான் படித்தவனோ, அறிவாளியோ அல்ல. இந்த அவையிலுள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு அறிவாற்றல் இல்லை என்று நான்

குறிப்பிடவில்லை. ஒவ்வொருவருக்கும் அவரவர்களுடைய அறிவுத் திறன் இருக்கிறது. எல்லோராலும் சிந்தனை செய்யமுடியும். பெரிய மனிதர்களிடம் சிறந்த கருத்துகள் இருக்கும் என்பதன் அடிப்படையில், டாக்டர் அம்பேத்கர் கூறுவதையெல்லாம் நான் கண்மூடித் தனமாக ஏற்றுக் கொள்ளமாட்டேன் என்பதைக் கூறிக் கொள்கிறேன். அதே போன்று யாராவது பண்டிட் (அறிஞர்) ஒருவர் வந்து தீண்டப் படாதவர்களின் முன்னேற்றத்துக்கு எடுக்கப்படும் நடவடிக்கைகள் எல்லாம் முற்றிலும் நியாயமற்றவை என்று கூறினால், அந்தக் கூற்றை யும் அப்படியே ஏற்றுக் கொள்ளமாட்டேன். ஏனெனில் பெரிய மனிதர்களிடம் சிறந்த கருத்துகள் இருக்கும் என்ற மூதுரையில் எனக்கு நம்பிக்கையில்லை. இந்த சமுதாயத்தின் எதிர்காலத்தை முற்றிலும் கணக்கிலெடுத்துக்கொண்டு நம் ஸ்மிருதி ஆசிரியர்கள் எதையும் செய்தார்கள். சமுதாயத்தின் அன்றையத் தேவையின்படி இந்த ஸ்மிருதிகள் தொகுத்து முறைப்படுத்தப்பட்டன என்பது முற்றிலும் உண்மை. இன்றைக்கு பல ஜாதிகள், பல உபஜாதிகள், பல மதப்பிரிவுகள், பல்வேறு கொள்கைகளில் நம்பிக்கையுள்ள வர்கள், சீக்கியர்கள், ஜைனர்கள், புத்தர்கள், வேறுபல கொள்கை களைப் பின்பற்றுபவர்கள் நம் சமுதாயத்தில் உள்ளனர். அவர்கள் பல்வேறு மதப்பிரிவுகளாக பிளவு பட்டுள்ளனர். ஒரே ஒழுங்கு முறையில் அவர்களை ஒருங்கிணைப்பது சாதாரணப் பணி என்று கூறமுடியாது.

ஐயா, இன்னும் சிறிது நேரம் மட்டும் எடுத்துக் கொள்கிறேன். நடைமுறை வழக்கங்கள் சட்டத் தொகுப்பை அரித்துவிடும். எனவே அவை வழக்கத்திலிருக்கக்கூடாது'' என்று டாக்டர் அம்பேத்கர் கூறியதை இப்பொழுது உங்களுக்கு எடுத்துரைத்தேன். அதே நேரத் தில் இல்லாமலிருக்கப் போகும் மன்னர்கள் மற்றும் ஜாகிரதார் களின் வாரிசுரிமைகள் சம்பந்தப்பட்டச் சட்டம் தொடர வேண்டும் என்கிறார். வழக்கம் மற்றும் வழக்காறு உரிமைகள் இருக்க வேண்டாம் என்கிறார்.

மரபுரிமை விஷயம், பிரச்சினையாக உள்ளது. வேறொரு பிரச்சினையான தத்தெடுத்தல் சம்பந்தமாக, வழக்கம் மற்றும் வழக் காறுகளைத் தொடர அனுமதிக்கக் கூடாது என்கிறார். இந்த இரண்டுமே ஏற்றுக்கொள்ளத் தக்கது அல்ல. அதற்கு ஒரு முடிவு கட்டுங்கள், ஒரே சீராக அமையுங்கள் அல்லது ஒரே அடியாக ஒழித்துக் கட்டுங்கள். ஐயா, அங்கங்கே குட்டி மாநாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்பதை மீண்டும் உங்கள் கவனத்துக்குக்

கொண்டுவர விரும்புகிறேன். அதனால் எனக்குப் பேசுவது கஷ்ட மாக இருக்கிறது.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** இவர் ஒரே வாதத்தைத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (சட்டத் துறை அமைச்சர்): இந்த கனவான் ஒரு மணிநேரமாகப் பேசிக் கொண் டிருக்கிறார்.

**திரு. துணை சபாநாயகர் :** அமைதி. பேச்சை அவர் நீட்டித்துக் கொண்டு போகாமலிருக்க சிறந்த வழி கூச்சல் போடுவது அல்ல. அவரைத் தனியே விட்டுவிட்டால் பேச்சை விரைவில் முடிக்கு மாறு அவரைக் கேட்டுக் கொள்வேன். வேறுபல உறுப்பினர்கள் பேசுவதற்கு ஆவலுடன் காத்திருக்கிறார்கள் என்பது மதிப்பிற்குரிய உறுப்பினருக்குத் தெரியும். 45 நிமிடங்களுக்கு மேல் அவர் எடுத்துக் கொண்டுவிட்டார்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட் :** ஐயா, உங்களுக்கு நான் கடமைப்பட்டுள்ளேன். ஒரு பக்கம் இந்த நடைமுறை வழக்கம் ஒரு பிரச்சினையே அல்ல, வழக்கமும், வழக்காறுகளும் தொடர வேண்டும் என்று நீங்கள் கூறுவதாகப் பேசிக் கொண்டிருந்தேன். அதேநேரத்தில் இவை அனுமதிக்கப்பட்டால் அவை இந்துச் சட்டத் தொகுப்பையே அழித்துவிடும் என்கிறீர்கள். நான் இந்த இரண்டை யுமே விரும்பவில்லை. உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள் என்கிறீர்கள். நம் வசமுள்ள எல்லா நிலங்களிலும் பயிரிட்டோ மானால், அது தோட்டமாக இருந்தாலும் சரி அல்லது அழகிய புல் வெளியாக இருந்தாலும் சரி, எல்லா நிலங்களிலும் பயிர் செய்ய வேண்டும். ஒரு பக்கம் உங்கள் புல்வெளிகள் அப்படியே இருக்க வேண்டுமென்று விரும்புகிறீர்கள் மற்றும் அதே நேரத்தில் அதிக உணவு உற்பத்தியாக வேண்டும் என்றும் விரும்புகிறீர்கள். இந்தப் போக்கை நான் ஆதரிக்கவில்லை.

வழக்கம் என்றால் என்ன என்பதை நீங்கள் அறிவீர்களா? குடும்பப் பழக்க வழக்கங்கள், கிராம வழக்கங்கள், தேசிய வழக் கங்கள் என்பவைகளை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஷாஸ்தரத் ரூரி பல்ஸி'' (புனிதச் சட்டங்கள் நடைமுறை வழக்கங்களினால்

செயலிழக்கின்றன). சாஸ்திரம் என்பதின் பொருள் என்ன? மீண்டும் மீண்டும் சாஸ்திரத்தைக் குறிப்பிடுவதால் பித்துப் பிடித்தவன் போல் பிதற்றுகிறேன் என்று நீங்கள் எண்ணுவீர்கள். சாஸ்திரம் ஓர் அறிவியல், ஆய்வுப் பொருள், மற்றும் சட்டம் என்று சொல்லலாம். அதுதான் ஸ்மிருதி. இதன் பிறகு இதேபோன்ற எந்த விஷயங்களையும் நீங்கள் ஆதரிக்க மாட்டீர்கள், விவாக ரத்துப் பிரச்சினை உண்டாக்கிய வாதங்களைப் போன்ற எதிலும் அவர் சிக்கிக் கொள்ள மாட்டார். ஓர் ஆணும் பெண்ணும் பஞ்சாயத்தில் அமர்ந்து ஒருவர் மற்றொருவரை விட்டுப் பிரிந்துவிடுவதாகக் கூறுகிறார். இந்த உலகின் இன்பங்களை அனுபவித்தாகிவிட்டது. வேறு இடத்துக்குச் செல்ல வேண்டுமென்று விரும்புகிறார்கள். இதற்காக அவர்கள் ஒரு மாவட்ட நீதிமன்றத்துக்கோ, உயர்நீதி மன்றத்துக்கோ போவதில் அக்கறை உள்ளவர்களாக இருக்க மாட்டார்கள். இந்த மாதிரி அவர்கள் நடந்து கொண்டால் பின்னுக்குச் செல்கிறார்கள் என்றுதான் கூறவேண்டும்.

நான் கிராமங்களுக்குச் செல்லும்போது, இந்துச் சட்டத் தொகுப்பு இந்த முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது, இந்தந்த விஷயங்களுக்காக இந்தமாதிரி விதிகள் உள்ளன என்று கூறுவேன். இந்த வடிவத்தில் விரும்பவில்லை என்று அந்த மக்கள் கூறுவார்கள். தற்போதுள்ள பஞ்சாயத்துகளே மிகவும் சிறப்பாக உள்ளன, தற்போதுள்ள நடைமுறைகளையே தொடரத் தங்களை அனுமதிக்க வேண்டும் என்று கூறவார்கள். சட்டத்தின் இம்மாதிரி சிக்கல்களில் ஈடுபட விரும்பவில்லை என்று கூறுவார்கள். ஏழைகளை மேலும் ஏழைகளாகவும், வழக்குரைஞர்களைச் செல்வச் சீமான்களாகவும் ஆக்க இது உதவும் என்பார்கள். உங்கள் ஆசியினால் இந்துச் சட்டத்தில் இந்த மாதிரி ஏராளமான விஷயங்கள் உள்ளன.

ஐயா, இந்த விஷயங்களின் இறுதி விளைவுகளைக் குறித்து நான் சொல்லிக் கொண்டிருந்தேன். எனக்குப் போதிய நேரமில்லாததால் நான் பேச விரும்பிய எல்லா அம்சங்களையும் குறித்து பேச இயலாது. எனது சகோதரர்களில் பலர் இது குறித்து பேச விருப்பம் தெரிவித்துள்ளனர்.

எனவே ஐயா, இது ஒரு மிக முக்கியமான பிரச்சினை என்பதை எடுத்துரைத்தேன். இந்த மசோதா நிறைவேற்றப்பட

வேண்டுமென்று விருப்பம் தெரிவித்துள்ள இங்கு அமர்ந்திருக்கும் என் மதிப்பிற்குரிய நண்பர்களிடம் மீண்டும் ஒருமுறை இதை நன்கு பரிசீலிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன். அவசரகோல நடவடிக்கைகளுக்கு இது தருணமல்ல. இவ்விதம் செயல்படு வதற்கு மக்களுக்கு நீங்கள் பதில் கூறவேண்டியிருக்கும். நமது முன் வைக்கப்பட்டுள்ள மசோதா மிகவும் கவனத்துடன் பரிசீலிக்கப்பட வேண்டியதும், அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததும் என்பதால், பொதுமக்கள் கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டியது மேலும் முக்கியத்துவம் பெற்றுள்ளது என்பதை எனது மதிப்பிற்குரிய தலைவர் மாண்புமிகு பண்டிட் ஜவஹர்லால் நேருவிடம் உரிய மரியாதையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். என் மதிப்பிற்குரிய சகோதரி திருமதி ரேணுகா தேவி கருத்துக் கணிப்பைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். இதன் தொடர்பாக நான் கூறுவதெல்லாம், தேர்தல்கள் வெகு விரைவில் நடைபெற உள்ளதால் அந்த நேரத்தில் இந்துச் சட்டத் தொகுப்பை மக்கள் ஆதரிக்கிறார்களா அல்லது இல்லையா என்பது குறித்து அவர்கள் கருத்தைத் தெரிந்து கொள்ள லாம். இந்த மாதிரியான இந்துச் சட்டத் தொகுப்பை தயாரித்துள் ளோம் என்று இந்த மசோதாவை மக்கள் முன்வைத்து அவர்கள் ஆதரிக்கிறார்களா, இல்லையா என்று கேட்கலாம், இந்தப் பிரச்சினை பற்றி மக்களின் ஆதரவை நீங்கள் தெரிந்து கொண்டால் மசோதாவை இந்த அவையில் நீங்கள் நிறைவேற்றுவதற்கு உங்களுக்கு முழு சுதந்திரம் உண்டு. கருத்துக் கணிப்பின் அடிப்படையாக இது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். பத்திரிகை அறிக்கைகளால் இங்கும் அங்கும் சாய்பவனல்ல நான். தங்களுடைய விற்பனையை அதிகரிப் பதற்காக பத்திரிகைகள் இந்த விஷயங்களைப் பற்றி மிகைப் படுத்தப்பட்ட செய்திகளைப் பிரசுரிக்கின்றன. பத்திரிகையாளர் களுக்கு எதிராக எனக்கு எந்தத் தனிப்பட்ட பகையும் கிடையாது. அவர்களிடம் ஆழ்ந்த அக்கறையும், அனுதாபமும் கொண்டுள் ளேன். கருத்துக் கணிப்பு எடுப்பதைப் பொறுத்த வரையில் இந்த அவையில் தற்போது இல்லாத திருமதி ரேணுகா ரே மற்றும் இதர சகோதரிகளுக்கு நான் கூறிக் கொள்வதெல்லாம், தேர்தல் சில மாதங் களில் நடைபெறப் போவதால் அப்பொழுது இந்தப் பிரச்சினையை மக்கள் முன் வைக்கலாம். உங்களுக்கு சாதகமாக மக்கள் இந்தப்

பிரச்சினையில் ஆதரவளித்தால், நிச்சயமாக அதை நாம் இங்கு நிறைவேற்றலாம்.

இவ்வாறு, இந்த நேரத்தில் இந்த மசோதாவை நிறை வேற்றாது, இந்த விஷயத்தை பரிசீலிக்க வேண்டுமென்று அரசைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா** (ம.மா. மற்றும் பேரார் : பொது) : ஐயா, என் நண்பர் பார்சி திருமணச் சட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டார். விளக்கம் அளிப்பதற்கு எனக்கு ஐந்து நிமிடம் ஒதுக்குவீர்களா?

**திரு. துணை சபாநாயகர்:** அவர் எந்த விதத்திலும் அதைக் குறை கூறவில்லை. எனவே நேரம் ஒதுக்க இயலாது. உலகில் உள்ள எல்லாப் பார்சிகளுக்கும் இந்த பார்சி திருமண மசோதா அனுப்பப் பட்டது என்று கூறினார். முப்பது கோடி மக்கள் சம்பந்தப்பட்ட இந்த மசோதாவுக்கு ஆதரவாக அந்த வாதத்தை முன்வைத்தார். எனவே அந்த அடிப்படையில் பேசுவதற்கு உரிமை கோரமுடியாது.

**திரு. ஆர்.கே. சித்வா :** இல்லை, ஐயா. அவர் தவறுதலான அறிக்கைகளைக் கொடுத்துள்ளார்.

**திரு. துணை சபாநாயகர்:** அப்படியென்றால் மதிப்பிற்குரிய உறுப்பினர் எனது கவனத்திற்குக் கொண்டு வந்திருக்க வேண்டும். ஒவ்வொரு விஷயத்தையும் நாம் விவாதித்துக் கொண்டிருக்க முடியாது.

**திரு. ஆர்.கே. சித்வா:** இந்த மசோதாவின் மீது எனக்குப் பேச உரிமையில்லையா?

**திரு. துணை சபாநாயகர்:** ஒவ்வொரு உறுப்பினருக் கும் உரிமை இருக்கிறது. எனக்கு அதில் எந்தவித சந்தேகமும் கிடையாது. ஆனால் நேரத் தட்டுப்பாடுதான் இதை அனுமதிக்க வில்லை.

*டாக்டர் பக்ஷி தேக் சந்த் (கிழக்குப் பஞ்சாப் : பொது) : மசோதாவைக் குறித்த விவாதம் பல நாட்களாக தொடர்கின்றன. பிரச்சினையின் இரு பக்கங்களும் உங்கள் முன் வைக்கப்பட்டுள் ளன. இரு தரப்பினர்களும் கூறிய வாதங்களை மீண்டும் உங்களுக்கு எடுத்துக்கூற நான் விரும்பவில்லை. என்னிடம் இரு கருத்துகள் உள்ளன. இந்த மசோதாவை ஆதரிப்பவர்கள் மற்றும் அதை எதிர்ப் பவர்கள் ஆகிய இருவரும் பரிசீலிக்க வேண்டிய கருத்துகள் அவை. அதன் பிறகு இந்த நாடும், இந்த அவையில் உள்ள அனைவரும் அல்லது பெரும் பகுதியினரும் ஏற்றுக் கொள்ளத் தகுந்த விதத்தில் இந்த மசோதாவில் மாற்றம் செய்ய ஆலோசனை ஒன்றை இந்த அவையின் பரிசீலனைக்கு வைக்க விரும்புகிறேன். எனவே என் கருத்துகளை உங்கள் முன் வைக்க சில நிமிட நேரங்கள் அனுமதிக்கு மாறு அவையைக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த மசோதாவை எதிர்ப்பவர்களுக்கு என்னுடைய முதல் ஆலோசனை இதுதான். இந்து சட்ட விதிகளைத் தொடுவதற்கு இந்த அவைக்கு எந்தத் தகுதியும் கிடையாது, ஏனெனில் அவை பல நூற்றாண்டுகளைக் கடந்து நம்மை வந்தடைந்துள்ளன, காலத்தால் அழியாப் புகழ் பெற்றுள்ள மதம் சம்பந்தமானது அது. பண்டிட் பரிஷத் மட்டுமே அதில் ஏதாவது மாற்றம் செய்யத் தகுதி படைத்தது என்று அவர்கள் வாதிக்கின்றனர். ஒரு நிமிடம் கூட இந்தக் கூற்றை ஒத்துக் கொள்ள முடியாது என்று மிகவும் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்து மதம் ஒரு பொழுதும் மாற்றமின்றி இருந்த தில்லை என்று திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் மற்றும் வேறு பலரும் கூறியுள்ளனர். அவ்வப்போது அதில் மாற்றங்கள் செய்யப் பட்டுள்ளன. ஒவ்வொரு தடவையும் சமூகக் கட்டுக் கோப்பில் மாற்றங்கள் ஏற்படும்போதெல்லாம் ஒரு ஸ்மிருதி ஆசிரியரோ, ஒரு ஞாநியோ, ரிஷியோ, முனிவரோ தோன்றி அக்காலத்துக்கேற்ற மாற்றங்களைச் செய்தார். ஆங்கில ஆட்சி வரும் வரையில் பல நூற்றாண்டுகளாக இந்த நடைமுறை தொடர்ந்தது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் செய்யப்பட்ட மாற்றங்கள் சட்டத்தை அமல் படுத்தும் நீதிபதிகளால் அல்லது சட்டமன்றத்தால் நிறைவேற்றப் பட்டன. மனு அல்லது யாக்னவல்கியா அல்லது விஸ்வாமித்தரர் போன்ற அதிகாரமுள்ள புதிய முனிவர்கள் யாரும் தோன்ற முடிய வில்லை. ஸ்மிருதிகள் மற்றும் நிபந்தங்களில் உள்ள விதிமுறைகளுக்கு

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 585-99.

நீதிபதிகள் பொருள் விளக்கம் அளித்தனர் அல்லது சட்டமன்றம் குறுக்கீடு செய்தது. எனவே ஸ்மிருதிகளில் பாண்டித்தியம் இல்லாத பல்வேறு வகைப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டுள்ளதால் இந்தச் சட்டமன்றத்துக்கு தகுதி இல்லை என்று, இந்த 1949ல் கூறவது பயனற்றது. இந்த வாதத்தை உடனடியாக உதறித் தள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஒரு நூற்றாண்டுக்கு மேலான சட்ட சபை நடவடிக்கைகளின் போக்கைக் கவனித்தால், இந்துச் சட்டமோ அல்லது ஏதாவது பிரிவோ குறைபாடுடையதாக இருந்தால், அதை நீக்க சட்டம் வகுக்கப்பட்டது. காலஞ்சென்ற திரு. ராம் மோகன் ராயின் வழிகாட்டுதலில் 1829 ஆம் ஆண்டு சதி ஒழிப்புச் சட்டம் நிறைவேற்றுவதிலிருந்து அது ஆரம்பமாகியது. இந்து மதத்தின் ஒரு பகுதியாக சதி வழக்கம் கருதப்பட்டது. ஆனால் உண்மையில் அது இந்து மதத்தின் பகுதி அல்ல. அது ஒரு அவமானந்தான். அது மதத்தின் கொள்கை என்பது மறுக்கப்பட்டது என்று கூறலாம் என நினைக்கிறேன். அதற்காக 1829 ஆண்டிலேயே சட்டம் கொண்டு வரப்பட்டது.

**திரு. துணை சபாநாயகர்:** அதிக அளவில் பேச்சு நடை பெற்றுக் கொண்டிருக்கிறது. பத்திரிகை நிருபர்கள் குறிப்பு எடுக்க முடியவில்லை. எனக்கும்கூட எதுவும் கேட்கவில்லை.

**ரோகிணி குமார் சௌதுரி:** சபாநாயகரின் குரலும் தெளிவாக இல்லை. அவர் முன்னே இரண்டு ஒலிபெருக்கிகள் அருகருகே உள்ளன.

**திரு. துணை சபாநாயகர்:** அவர் ஒலிபெருக்கி முன் பேசிக் கொண்டிருக்கிறார். ஒவ்வொரு இருக்கையும் ஒலிபெருக்கியாக மாறி யுள்ளது. நான் என்ன செய்வது?

**திரு. ஏ. தாணுப்பிள்ளை :** (திருவாங்கூர் மற்றும் கொச்சி) நான் ஓர் ஆலோசனைக் கூறட்டுமா? (குறுக்கீடு) என் கருத்து என்ன வென்றால்....

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** ஏற்கெனவே அவை ஒத்திப்போடப்பட்டு விட்டது.

**திரு. துணை சபாநாயகர்:** நீங்கள் தாமதித்து விட்டீர்கள். அவை ஏற்கெனவே ஒத்திப்போடப்பட்டு விட்டது.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை:** *மிக்க வருத்தம், எனக்குத் தெரியாது.*

*பிறகு சட்டமன்றம் பகலுணவுக்காக இரண்டரை மணிவரை ஒத்திபோடப்பட்டது.*

*சட்டமன்றம் பகலுணவிற்குப் பிறகு இரண்டரை மணிக்கு மீண்டும் கூடியது. திரு. துணை சபாநாயகர் (திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்) தலைமையேற்றார்.*

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** *அவை கலைந்தபோது திரு. ராம் மோகன் ராய் அளித்த ஊக்கத்தினால் சதி வழக்கத்தை ஒழிப்பதற்காக, 1829ல் சட்டம் நிறைவேற்றப்பட்டதைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தேன். இந்து மதத்தின் ஒரு பகுதியே சதி வழக்கம் என்று வாதிடப்பட்டது என்பதை நாமெல்லோரும் அறிவோம். நமது தர்மத்தின் ஒரு முக்கியமான அம்சம் சதி வழக்கம், அதில் கைவைப்பது இந்து மதத்தின் மீதான தாக்குதல் என்று கூறப்பட்டது. சமுதாயத்தில் அறிவுநுட்பம் மேலோங்கியிருந்ததால் சட்டம் நிறைவேற்றப் பட்டு சதி ஒழிக்கப்பட்டது. நான் கூறியது போல் இது இந்துச் சட்டத்தின் ஒரு பகுதி அல்ல. இருண்ட காலம் அல்லது வரலாற்றின் மத்திய காலத்தில் நுழைக்கப்பட்ட ஒன்றுதான் இது. அதிர்ஷ்டவசமாக சட்டத்தின் மூலம் ஒழிக்கப்பட்டது.*

*அதற்குப் பிறகு 1850-ல் வாரிசுரிமை சம்பந்தமாக இருந்த வகுப்பு குறைபாடுகளை நீக்குவதற்கான சட்டம் நிறைவேற்றப் பட்டது. ஒரு நபர் அல்லது ஒரு வாரிசு மதமாற்றம் செய்து கொண்டால் வாரிசுரிமை பாதிக்கப்படுவதில்லை. இந்துச் சட்டத்தில் செய்யப் பட்ட இரண்டாவது முக்கியமான மாற்றம் இது. பிறகு மேலும் ஒரு பெரும் சீர்திருத்தம் 1856-ல் நடைபெற்றது. விதவைகள் மறுமணச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. பல நூற்றாண்டுகளாக விதவைகளின் மறுமணத்தை இந்து மதம் அனுமதிக்கவில்லை என்று நம்பப் பட்டது.*

**திரு. மகாவீர் தியாகி:** *ஐயா, அவையில் ஆளுங்கட்சியினர் உள்ளனரா?*

**மாண்புமிகு திரு. கே.சி. நியோகி** *(வர்த்தக அமைச்சர்) : அரசு என்பது முழுமையானது. பிரிக்கமுடியாதது. ஓர் அமைச்சர் வருகை தந்திருந்தாலும் அரசு முழுவதையும் அவர் பிரதிநிதித்துவப்படுத்துகிறார்.*

**திரு. துணை சபாநாயகர் :** அந்தப் பக்கத்திலுள்ள உறுப்பினர்கள் இந்தப் பக்கத்திற்கு வருவது எப்பொழுதுமே ஆரோக்கியமான போக்கு என்றுதான் நினைக்கிறேன்.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** நான் எடுத்துக் கூறியது போல் விதவைகளின் மறுமணம் இந்து மதத்தின் முக்கிய அம்சம் என்று கருதப்படுகிறது. அந்தச் சட்டத்தை ரத்துச் செய்யக் கோரி ஆலோசனையும் அல்லது ஒரு விதவை மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கச் சட்டத்தை இயற்றுவதையும் கடுமையாக எதிர்த்தனர். திரு. ஈஸ்வர சந்திர வித்யா சாகர் மற்றும் அந்நாளின் இதர தலைவர்களின் தலைமையில் மக்கள் ஆதரவு உறுதியாக இருந்ததால் இந்துப் பெண்களுக்கு இழைக்கப்பட்ட அநீதி மேலும் ஒரு சட்டத்தினால் நீக்கப்பட்டது. எனவே, இந்தச் சட்டத்தை நிறைவேற்றியதால் இந்து மதம் அழிந்துவிடவில்லை.

அதற்குப் பிறகு அன்றைய நாடாளுமன்றம் மற்றும் சட்ட மன்றம் நிறைவேற்றிய சட்டங்களால் இந்துச் சட்டத்தில் பல மாற்றங்கள் கொண்டுவரப்பட்டன. 1890 மற்றும் 1891 ஆம் ஆண்டுகளில் ஒப்புதல் அளிக்கும் வயது சம்பந்தமான மசோதா அறிமுகப்படுத்தப்பட்டபோது ஏற்பட்ட பெரும் அமளி உங்களில் பலருக்கு நினைவில் இருக்கும். பன்னிரண்டு வயதிற்குக் குறைந்த சிறுமியான மனைவியுடன் உடலுறவு கொள்ள அனுமதிக்கும் வழக்கம் சம்பந்தமாக, இந்துக்களும், முஸ்லீம்களும், கிருஸ்தவர்களும் அரசதிகாரிகளும் ஆதிக்கம் செலுத்தும் சட்டமன்றம் இந்து மதத்தில் பெரும் குறுக்கீடு செய்வதாக அந்த நேரத்தில் பெரும் கூச்சல் எழுந்தது. அம்ரித பஜார் பத்திரிகா போன்ற முற்போக்கு பத்திரிகைகள் உட்பட பல பத்திரிகைகளில் வந்த செய்திகள் உங்களுக்கு ஞாபகம் இருக்குமானால் அந்தக் காலத்தில் இந்து சமுதாயம் எவ்வளவு அமளிதுமளிப்பட்டது என்பது தெரியும், ஆனால் மீண்டும் நமது சட்டமன்ற உறுப்பினர்களின் பிடிவாதத்தால் அந்த மசோதா நிறைவேறியது. அது இறுதியில் கடைசி அமர்வில் அவையின் ஒருமித்த ஆதரவுடன் மேலும் திருத்தப்பட்ட மசோதாவாக பண்டிட் தாகூர் தாஸ் பர்கவாவால் அறிமுகப்படுத்தப்பட்டு, அவையின் எல்லா தரப்பினராலும் ஆதரிக்கப்பட்டு ஒருமனதாக நிறைவேற்றப்பட்டதாக எனக்கு ஞாபகத்தில் இருக்கிறது. அந்த நேரத்தில் இந்து மதத்தின் முக்கிய பகுதியாகக் கருதப்பட்ட விஷயத்தைக் குறித்துச் சட்டம் இயற்றுவதற்கு இந்தச் சட்ட மன்றத்திற்கு தகுதியில்லை என்று நமது நண்பர்கள் எவரும் கருத

6

வில்லை. மிக அண்மைக் காலத்தில் 1916ல் இந்தியச் சட்டமன்றம் சொத்துக்கள் பராதின சட்டத்தை நிறைவேற்றியது. பிரிவி கவுன்சில் நிறைவேற்றிய தாகூர் மற்றும் தாகூர் என்றழைக்கப்படும் வழக்கை இது ரத்து செய்தது, அந்த வழக்கில், ஸ்மிருதிகளிலுள்ள சில வாசகங் களின்படி, நன்கொடைகள் அளிக்கப்படும் தேதியில் நன்கொடை பெறுபவர்கள் பிறந்திருக்கவில்லையென்றால் அந்த உத்தரவோ நன்கொடையோ செல்லுபடியாகாது என்று பிரிவி கவுன்சில் உத்தர விட்டுள்ளது. ஓர் அறுபது எழுபது ஆண்டுகளுக்கு அதுதான் சட்டமாக இருந்தது. இது வாசகங்களின் தவறுதலான விளக்கம் என்று எடுத்துக் கூறப்பட்டது. எனவே விஷயம் பரிசீலிக்கப்பட்டு சில வாசகங்கள் சொல்லுக்குச் சொல் மொழி பெயர்க்கப்படும் போது பிரிவி கவுன்சில் கூறும் முடிவுக்கு சாதகமாக உள்ளதாக தெரிந்தது. இது ஒரு பெரும் தடையாகவும் அநீதியாகவும் கருதப் பட்டது. எனவே சட்டமன்றம் மீண்டும் குறுக்கிட்டு அவையின் ஒருமனதான வாக்களிப்பின் மூலம் 1916-ல் இந்த மசோதா நிறை வேற்றப்பட்டது.

அதன் பிறகு குறைபாடுகள் நீக்கும் மசோதா நிறைவேற்றப் பட்டது. சில ஸ்மிருதிகளில் விளக்கப்பட்டது போல இந்துச் சட்டத் தின் சில வாசகங்களின்படி ஒருவர் கண்பார்வை இல்லாமை, காது கேளாமை போன்ற குறைபாடுகள் இருந்தால் அவருக்கு வாரி சுரிமை கிடையாது. வாசகங்களின் பொருள் எத்தகையதாக இருந் தாலும் இவ்விதி பெரும் கொடுமை என்று பலர் கருதினர். ஐந்து மக்களில் ஒருவன் காதுகேளாமலோ, கண்பார்வையற்றோ அல்லது வேறு ஏதாவது உடல் ஊனமுற்றோ இருந்தால் தகப்பனாரின் சொத்தில் உடல் தகுதியுடன், ஊதியம் ஈட்டத் தகுதியானவர்களை விட அவனுக்குத்தான் பங்கு அளிக்க வேண்டியது அவசியம். குடும்பச் செல்வத்தை அதிகரிப்பதற்கு, எல்லோரும் கண்டிப்பாக வேலை செய்ய வேண்டியதாக சமூக அமைப்பு இருந்திருக்கும். அந்தக் காலத்தில் இந்த வாசகங்கள் சட்டப்படி சரியானதாகவும் பயன் உள்ளதாகவும் இருந்திருக்கலாம். அது வழக்கற்றுப் போய்விட்டது. இந்து சமுதாயம் அதற்கு எதிராகப் போர்க் கொடி தொடுத்தது. கிளர்ச்சி பலமாக இருந்ததால் இந்தியச் சட்டமன்றம் 1928-ல் இந்தச் சட்டத்தை நிறைவேற்றியது. இதன் பிறகு குறைபாடுள்ளவர்கள், உடல் ஊனம் ஏதுமில்லாதவர்களைப் போல வாரிசுரிமை பெற அனுமதிக்கப்பட்டனர். இது இந்துச் சட்டத்தில் ஏற்பட்ட மேலும் ஒரு பெரிய மாற்றமாகும்.

பிறகு 1929-ல் சட்டம் 11, என்கிற ஒரு முக்கியமான சட்டம் வந்தது. அதன்படி அதுவரை நீதி மன்றங்களினால் வாரிசுரிமைக்கு அனுமதிக்கப்படாத சில குறிப்பிட்ட பிரிவினருக்கு வாரிசுரிமை வழங்கப்பட வகை செய்யப்பட்டது. மிதாக்ஷரா விதிகளின்படி ஐந்து வகைப் பெண்களே வாரிசுரிமைக்குப் பாத்தியதை உடையவர்கள் என்று இந்தியாவிலுள்ள நீதிமன்றங்களும், பிரிவு கவுன்சிலும் தீர்ப்பு வழங்கின. ஏனெனில் இந்த ஐந்து வகை பிரிவினர்களே மிதாக்ஷராவில் குறிப்பிடப்பட்டுள்ளனர். இந்தப் பட்டியல் விரிவானதாக இல்லை என்றும், அது வெறும் உதாரணங்கள் மட்டுமே என்றும் பம்பாய் நடைமுறையைப் பின்பற்றுபவர்கள் கூறினர். வட இந்தியாவில் மிதாக்ஷராவிற்கு கொடுக்கப்பட்ட தவறான விளக்கத்தினால்தான் இது பழக்கத்திற்கு வந்துள்ளது என்று புகழ் பெற்ற உரையாசிரியர் நீலந்தாவும் மற்றும் அவரைப் பின்பற்று பவர்களும் கூறினர். எனவே, மசோதா ஒன்று இந்தச் சட்டமன்றத் தில் கொண்டவரப்பட்டது, நீண்ட விவாதங்களுக்குப் பிறகு அந்த மசோதா நிறைவேற்றப்பட்டது. மகள், சகோதரி, சகோதரியின் மகன் போன்றவர்கள் வாரிசுகளின் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்பட் டனர். இதுவும் குறிப்பாக வட இந்தியாவில் இந்துச் சட்டத்தின் கட்டுக்கோப்பில் பெரும் மாற்றத்தைக் கொண்டுவந்தது.

சாரதாச் சட்டம் பற்றி உங்கள் அனைவருக்கும் நன்கு தெரிந் திருக்கும். திரும்பவும் அதைப்பற்றி நான் கூற வேண்டியதில்லை. அந்த நேரத்தில் கூட திருமணத்திற்கு ஒரு குறைந்த வயதை நிர்ண யிப்பது இந்து மதத்தில் குறுக்கீடு செய்வதாகும் என்று இந்த அவை யில் மிகவும் தீவிரமாக விவாதிக்கப்பட்டது. ஆனால் எதிர்ப்பாளர் கள் வெற்றி பெறவில்லை. சட்டமன்றம் உறுதியுடன் இருந்து, இறுதியில் அந்தச் சட்டம் நிறைவேறியது.

அதன் பிறகு, தேஷ்முக் மசோதா என்று அழைக்கப்பட்ட மசோதா வந்தது. இந்த 1937-ஆம் ஆண்டு மசோதா இந்து வாரி சுரிமைச் சட்டத்தில் மிகப்பெரும் மாற்றத்தை, தாக்கத்தை ஏற்படுத் தியது. இந்தச் சட்டம் வாரிசுரிமையில் மிதாக்ஷர வழக்கம் நடை முறையிலுள்ள பகுதிகளில் கூட்டுக் குடும்பங்களில் இணைப் பங்கு தாரர் ஒருவரின் மரணத்திற்குப் பிறகு அவருக்கு மகன் இல்லை யென்றால் விதவைக்கு சொத்தில் எந்தப் பங்கும் கிடையாது. தன் னுடைய மைத்துனர்கள் அல்லது கணவனின் தகப்பனார் மற்றும் இணை வாரிசுதாரர்களின் தயவில்தான் அவள் தன் வாழ்க்கையைக் கழிக்க வேண்டியிருந்தது. உணவும் உடையும் மட்டுமே அவளுக்கு

அளிக்கப்பட்டது. வெறும் பராமரிப்பு மட்டுமே. இந்தச் சட்டத்தின் படி குழந்தைகள் அற்ற விதவைகளுக்கு அவள் கணவருக்கு அளிக்கப் படும் அளவுக்கு பங்கு ஒதுக்கப்பட்டது. அவள் விரும்பினால் அந்தப் பங்கை பிரித்து எடுத்துக் கொள்ளும் உரிமையும் அளிக்கப்பட்டது. இந்துக் கூட்டுக் குடும்பத்திலுள்ள பெண்கள், பாகத்தில் பங்கு கேட்டு, வழக்குப் போடுவது இந்துச் சட்டத்தின் அடிப்படை கோட்பாடு களுக்கு முரணானது என்று அக்காலத்தில் கருதப்பட்டது. ஆனால் காலத்தின் மாற்றங்கள், பெண்களிடையே மட்டுமின்றி இந்நாட்டின் ஆண்களிடையேயும் தங்களுடைய சகோதரிகள் மற்றும் தாயார் களுக்கு இவை அவசியம் என்று ஏற்பட்ட விழிப்புணர்வுகளின் வளர்ச்சியில் சட்டமன்றம் இந்த மாற்றங்களைச் செய்தது. அந்த நேரத்திலும் நாட்டில் பெரும் கிளர்ச்சி நடந்தது. ஆனால் இறுதியில் அந்தக் கிளர்ச்சியும் அடங்கி ஓய்ந்தது. பன்னிரண்டு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இந்து சமுதாயம் எந்த விதத்திலும் சுக்கு நூறாக உடைந்து விட்டதாகக் கூறமுடியாது. அல்லது இந்து மதம் அதன் முக்கிய அடிப்படையில் தாக்கப்பட்டு உடைந்து வருவதாகக் கூறமுடியாது.

அண்மைக் காலத்துக்கு இப்பொழுது வருவோம். 1946-ல் இந்தச் சட்டமன்றம் தேர்ந்தெடுப்பதற்கு சிறிது காலத்திற்கு முன்பு சகோத்ரத்தில் மணம் செய்துகொள்ள இந்தச் சட்ட மன்றம் ஒரு மசோதாவை நிறைவேற்றியது. தடைசெய்யப்பட்ட படிநிலையில் மசோதா எவ்வித மாற்றமும் செய்யவில்லை. நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் வசித்தாலும், ஒரே சாதியைச் சேர்ந்தவர்களாக இல்லா திருந்தாலும், வாசகங்களின் சட்ட நுணுக்கப் பொருளின்படி, ஒரே கோத்ரத்தைச் சேர்ந்திருந்தால் அவர்கள் திருமணம் செல்லுபடி யாகாமல் ஆகிவிடும். நாட்டின் பல்வேறு பகுதிகளில், இம்மாதிரி யான திருமணங்கள் நடைபெற்றாலும், அவை செல்லுபடியாகுமா என்ற ஐயப்பாடு இருந்து வந்தது. இது ஒரு விருப்ப நடவடிக்கை யாகும். 1946-ல் நிறைவேற்றப்பட்ட இச்சட்டத்திற்கு தீவிர எதிர்ப்பு ஒன்றும் கிளம்பவில்லை.

இந்தச் சட்டமன்றத்தின் ஏப்ரல் கூட்டத் தொடரில், நாம் மேற்கொண்ட நடவடிக்கைகளை நினைத்துப் பார்க்கும்படி மதிப்பிற் குரிய உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். எனது மதிப்பிற்குரிய உறுப்பினர் பண்டிட் தாகூர் தாஸ் பார்க்கவா ஒரே ஒரு பிரிவைக் கொண்டுள்ள சாதாரண மசோதா ஒன்றைக் கொண்டு வந்தார். ஆனால் அது பல விளைவுகளை கொடுக்கக்கூடியதும்

முக்கியத்துவம் வாய்ந்ததும் ஆகும். இந்துச் சட்டத்தின் வாசகம் எவ்வாறு இருப்பினும், சட்ட வலுவுள்ள ஏதாவது பழக்கங்கள் அல்லது நடைமுறைகள் இதற்கு எதிராக இருப்பினும், பல்வேறு ஜாதிகளைச் சேர்ந்த இந்துக்களிடையே நடைபெறும் திருமணங்கள் செல்லுபடியானதாக இந்த மசோதாவின் மூலம் மாற்ற வகை செய்யப்பட்டது. அது ஒரு பெரும் முன்னேற்றம். தன்னுடைய ஜாதியிலோ அல்லது உப ஜாதியிலோதான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாட்டை நீக்கி, ஜாதிகளுக் கிடையேயான திருமணத்தை அது அனுமதித்தது. இந்த அவையில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்ட மசோதா அது. என் நினைவில் உள்ளபடி, மசோதா பரிசீலனையில் இருந்தபோது அதற்கு எதிராக ஒரே ஒரு குரல் டாக்டர் அம்பேத்கருடையதுதான். சனாதினிகளும், சனாதினிகளாக இல்லாதவர்களும், தாயபாக, மிதாக்ஷரா, மயூகா வழக்கங்களைப் பின்பற்றுபவர்களும், பழங்குடி மக்களின் வழக் கங்களைப் பின்பற்றுபவர்களும் எல்லோரும் மசோதாவை ஆதரித் தனர். டாக்டர் அம்பேத்கரும், நிச்சயமாக ஒருவரம்புக்குட்பட்டு அதை ஆதரித்தார். மசோதாவின் கொள்கைகளை அவர் முற்றிலும் ஆதரித்தார். சட்டமன்னறத்தின் முன் மிகவும் விரிவான இந்துச் சட்டத் தொகுப்பு இருப்பதால், நமக்கு பல விஷயங்களை உள் ளடக்கியுள்ள சட்டம் தேவை என்று கருதினார். அவருடையது ஒரு சட்ட ரீதியான மறுப்பாக இருந்தது. மற்றபடி நாமெல்லோரும் ஒருமனதாக அந்த மசோதாவை ஆதரித்தோம். ஏப்ரல் இறுதியில் ஒரு நாளில் அது நிறைவேறியது. அது என்னவாயிற்று என்று இந்து தர்மத்திற்கு ஆபத்து என்று கூச்சலிட்ட என் சனாதன நண்பர்களைக் கேட்கிறேன். நமது அரசியல் அமைப்புச் சட்டம் பரிசீலனையில் இருந்தபோது ஒரு வர்க்கமற்ற, ஜாதியற்ற சமூகத்தை உருவாக்க வேண்டுமென்று நாம் கூறிவந்தோம். பல நூற்றாண்டுகளாக நாட்டின் பல பாகங்களிலும் நிலவிலுள்ள இந்துச் சட்டத்தின் சில வாசகங் களுக்கு அது முரணானதுதான். இருப்பினும், மசோதா சட்டமாக்கப் பட்டதுடன், இந்த நாட்டின் சட்டங்களின் பகுதியாகவும் ஆகியது. அந்த நேரத்தில், அன்றாட நிர்வாக நடவடிக்கைகளுக்காகவும், அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதற்காகவும் இந்த அவை தேர்ந்தெடுக்கப்பட்டதென்றும், அந்தச் சட்டத்தை நிறைவேற்று வதற்கு அதிகாரமற்றது என்றும் கூறி யாரும் ஆட்சேபனை எழுப்ப வில்லை என்பதைக் கூற அனுமதி அளிக்கக் கோருகிறேன். திருமணத்தைப் பொறுத்தவரையிலான ஜாதி ஒழிப்பு நிச்சயமாக

நாட்டின் அன்றாட பணிகளில் ஒன்றல்ல. காஷ்மீர் முதல் கன்னியா குமாரி வரை, வங்காளத்திலிருந்து குஜராத்வரை ஏதோ ஒரு வடிவில் நிலவில் இருக்கும் திருமணச் சட்டத்தின் ஓர் அடிப்படையான, முக்கியமான, வலுவான மாற்றமாகும் இது. நாம் திறந்த கண் களுடன்தான் அந்த மசோதாவை நிறைவேற்றினோம். அப்பொழுது இங்கிருந்த திரு. முன்ஷி அந்த மசோதா வெகு சிறியதாக இருந் தாலும் பெரும் விளைவுகளை ஏற்படுத்தக் கூடியது, அது மிகப் பெரும் முக்கியமான மாற்றங்களை அளிக்கிறது என்று கூறினார். அவ்வாறு கூறியவுடன் அவை அதைப் பெரும் ஆரவாரம் செய்து வரவேற்றது. என்னுடைய சனாதன உறுப்பினர்களை, மசோதாவின் எதிர்ப்பாளர்களைக் கேட்கிறேன்; அந்த நேரத்தில் இந்துச் சட்டம் மற்றும் இந்து தர்மத்தின் மீதான அவர்களின் மதிப்பும் உற்சாகமும் எங்கே போயிருந்தன? எனவே இந்த அவை முன் உள்ள இந்த மசோதாவால் இந்து கலாசாரம் மற்றும் இந்து சமுதாயத்தின் கட்டமைப்புச் சிதறுண்டு போகுமென்றும், இந்து மதத்தின் அஸ்தி வாரம் வலுவிழந்து விடுமென்றும் இந்து மதத்தின் மீதான தாக்குதல் என்றும் எழும் கூச்சல் அல்லது இந்த அவையில் படித்த பல பண்டிட்கள் இல்லாததால், இங்கு உறுப்பினர்களாக இருப் பவர்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட் டவர்கள் இல்லை என்பதால், இம்மாதிரியான மசோதாவைக் கொண்டுவர இந்த அவைக்கு தகுதியில்லை என்ற ஆட்சேபனை களில் எந்த ஆதாரமும் இல்லை என என் சனாதன உறுப்பினர் களுக்கு பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் முன் எடுத்துரைத்துள்ள பல சட்டங்களின் வரலாறுகளையும் மற்றும் அண்மைக் காலங்களில் நாமே நிறைவேற்றிய பல நடவடிக்கை களையும் கவனித்து நோக்குமாறு மிகவும் மரியாதையுடன் என் சனாதன நண்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன். வேறு எந்த அடிப் படைகளிலாவது இந்த மசோதாவை எதிர்ப்பதற்கு அவர்கள் சிந்தித்துப் பார்க்கட்டும். ஆனால் இந்த அவை வெறும் சட்டமன்றந் தான். இந்த மாதிரியான நடவடிக்கைகளை எடுக்கவும், சட்டம் இயற்றவும் அதைப் பரிசீலித்து நிறைவேற்றவும் மக்களின் கட்டளை எதுவம் நமக்கு இல்லை என்ற அடிப்படையில் இந்த அவைக்கு எந்த சட்டஉரிமையும் இல்லை என்ற வாதம் சரியானதல்ல. இந்த மசோதாவின் தகுதியின் அடிப்படையில் அதை விமர்சித்து ஏற்றுக் கொள்ளவோ, தூக்கி எறியவோ செய்யட்டும். இந்த மசோதா போதுமான அளவிற்குப் பரிசீலிக்கப்படவில்லை என்று கூறுவது

ஒரு விஷயம். மசோதாவில் பல விதிகள் மேலும் பரிசீலிக்கப்பட்டு ஆய்வுசெய்யப்படவேண்டும் என்று கூறுவது வேறு ஒரு விஷயம். சில விஷயங்களில் மசோதா மீண்டும் தயாரிக்கப்பட வேண்டும் என்று கூறவது ஒரு விஷயம். ஒருவேளை பகுதி பகுதியாக இந்த இந்துச் சட்டம் சீர்திருத்தம் செய்யப்படுவது விரும்பத்தக்கதாகும். இன்றுகூட நான் இந்த ஆலோசனையை எடுத்துக் கூறினேன். குழு வின் மூல அறிக்கையில் திரு. பி.என். ராவும் இதைக் கூறியுள்ளார். அதை நான் முற்றிலும் புரிந்து கொள்கிறேன். நான் இவ்வாறு கூறுவதற்காக என்னை மன்னிக்க வேண்டும். இம்மாதங்களில் ஒவ்வொரு தபாலிலும் ஏராளமான கடிதங்கள், பல நபர்கள் அளித்த பேச்சுகள், தர்ம சங்கம் மற்றும் பல சங்கங்களின் தீர்மானங்களின் மறுபதிப்புகள் வருகின்றன. எல்லாமே இந்தப் பெரிய மனிதர் அல்லது அந்தப் பெரிய மனிதரின் அபிப்பிராயங்களை எடுத்துரைக் கின்றன. அதாவது இவைகளை கையாளுவதற்கு இந்த அவைக்கு அதிகாரமில்லை என்ற கருத்தையே கூறுகின்றன. அது சரியானது மல்ல, தர்க்கரீதியானதுமல்ல, நியாயமானதுமல்ல என்பதை மிகவும் பணிவுடனும் அடக்கத்துடனும் தாழ்மையுடனும் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே தங்களுடைய வாதத்தை வலியுறுத்த வேண்டா மென்றும், ஆனால் நியாயமான முறையிலும், விவேகத்துடனும், சரியான கண்ணோட்டத்துடனும் மசோதாவை ஆய்வு செய்ய வேண்டு மென்றும் எனது நண்பர்களுக்கு தாழ்மையாகத் தெரிவித்துக் கொள் கிறேன்.

என்னுடைய சனாதன நண்பர்களுக்கு இதுதான் என் தாழ்மை யான வேண்டுகோள். இப்பொழுது மசோதாவை ஆதரிப்பவர் களுக்குச் சில வார்த்தைகள் கூற எனக்கு அனுமதி அளிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** அவர்கள் சனாதினிகளா அல்லது புறக்கோட்பாடாளர்களா?

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** சரி, அதை அவர்களே முடிவு செய்து கொள்ளட்டும். இப்பொழுது மசோதா அறிமுகப்படுத்தப் பட்ட நிலையில் உள்ளோம். முதல் கட்டத்தில் அதைப் பற்றிச் சிறிய விவாதமே நடந்தது என்பதை அறிவோம். நாம் பொறுக்குக் குழுவில் சந்தித்தபோது, இந்த முக்கியமான மசோதாவை பரி

சீலிக்க ஆறு நாள்களே நமக்கு ஒதுக்கப்பட்டன. மசோதாவின் சில பிரிவுகளைக் குறித்து பொறுக்குக் குழு உறுப்பினர்கள் சில ஆட்சேபனைகளை எழுப்பினர். முதல் வாசிப்பில் இந்த அவையால் ஏற்றுக் கொள்ளப்பட்ட மசோதாவின் அடிப்படைக் கொள்கைகளுக்கு இந்த ஆட்சேபனைகள் எதிராக உள்ளன என்று எங்களுக்குக் கூறப்பட்டது. பொறுக்குக் குழுவின் உறுப்பினர்களான நாங்கள், அந்தச் சில முக்கியமான விஷயங்கள் குறித்து திருத்தங்கள் கொண்டு வர விரும்பியபோது, எங்களுக்கு வாய்ப்பில்லா நிலை ஏற்பட்டு விட்டது. நாங்கள் கட்டளையை ஏற்றுக்கொண்டோம். ஜூலை மாத வெய்யிலில் மசோதாவை விவாதிப்பதற்கு எங்களுக்கு ஆறு நாட்களே இருந்தன. எங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள குறுகிய நேரத்தில், அப்பொழுது மாண்புமிகு சட்ட அமைச்சர் நிர்ணயித்திருந்த குறுகிய எல்லைக்குள், அந்த சூழ்நிலைகளில் எங்களால் முடிந்த அளவுக்கு எங்கள் பணிகளை நிறைவேற்றினோம். சட்ட அமைச்சர் மட்டுமல்லாது பொறுக்குக் குழுவின் சில உற்சாகமான உறுப்பினர்கள் இவ்வாறு சிந்தித்தனர். மசோதா இப்பொழுது வந்து விட்டது. இதுதான் சரியான நேரம், இந்தக் கூட்டத் தொடரிலேயே இதைத் தள்ளிவிட வேண்டும். அக்டோபர் அல்லது நவம்பர் மாதத்திற்குள் இது சட்டப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டுவிடும். பல ஆட்சேபனைகள் எழுப்பப்பட்டன. பல வாதங்கள் முன்வைக்கப்பட்டன. ''நாம் சில மாதங்கள் காத்திருப்போம்.'' இரண்டு பேர் பெரும்பான்மையில் இறுதியாக, மசோதா சம்பந்தமான நடவடிக்கைகளைத் தொடர்வது என்று குழு முடிவு செய்தது.

பிற்பகல் 3 மணி

ஆனால் விஷயங்கள் சென்ற விதத்தில், ஒரு மாதத்திற்குள் இந்த மசோதா சட்டப் புத்தகத்தில் சேர்க்கப்படவில்லை. நம்முடைய கட்டுப்பாட்டையும், பொறுக்குக் குழுவின் பெரும்பான்மையையும் மீறி சூழ்நிலைகளால் விஷயங்கள் இழுத்தடிக்கப்பட்டன. இந்த மசோதா அரைகுறை மனதுடன் தயாரிக்கப்பட்டிருப்பதுடன், என்னைக் கூற அனுமதித்தால் அது அதிகமாக வெட்டிக் குறைக்கப்பட்டுள்ளது என்பேன். இதை நான் பொறுக்குக் குழவில் எழுப்பியிருப்பதுடன், என்னுடைய மாறுபட்ட கருத்துக் குறிப்பில் அதிகமாக இதைக் குறித்து விளக்கியுள்ளேன். இதைத் திரும்ப எடுத்துக் கூறுவதற்கு அவையின் அனுமதியையும் பெற்றுள்ளேன். இந்தக் கண்ணோட்டத்தை நான் உறுதிப்படுத்துவதுடன் அதைத் திரும்பவும் எடுத்துக்

கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. நமது சகோதரிகளுக்கும், மகள்களுக்கும் முழு உரிமைகளை அளிக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. அதாவது ஒரு பெண்ணுக்கு முழு நில உடைமை கிடையாது, இந்த மாதிரியான சொத்துகள் அல்லது அந்த மாதிரியான சொத்துகளை பெண்கள் வாரிசுரிமையாகப் பெற முடியாது போன்ற விளக்கங்களை அளித்த பழைய வாசகங்கள் அல்லது அதற்கு பிரிட்டிஷ் நீதிமன்றங்கள் அளித்த விளக்கங்களுக்குத் தொடர்ந்து அனுமதி அளிப்பதை நிறுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. முதலாவதாக, இவையெல்லாம் நமது மூல இந்துச் சட்டத்திற்கு எதிரானது என்பதை நான் கூறுகிறேன். எப்பொழுதுமே கூறிவந்துள்ளேன். அதைக் கூறிவருவதுடன் அதை நிரூபிக்கவும் செய்வேன் என்று நம்புகிறேன். மாண்புமிகு துணை சபாநாயகர் இன்னும் சில நிமிடங்கள் அனுமதி அளித்தால் ஒரு பெண்ணின் மொத்த சொத்து ஒரு வரையறைக்குள் உட்பட்டது என்ற கொள்கை உருவாக்கப்பட்ட ஒன்று. பிரிட்டிஷ் இந்திய நீதிமன்றங்களினால் உருவாக்கப்பட்டது அது. **மிதாக்ஷரா** சட்டத்திலோ, **மயூகா** அல்லது **ஸ்மிருதி**களாலோ அவை ஆதரிக்கப்படவில்லை. அவையெல்லாம் நீக்கப்பட வேண்டும். ஆனால் அதைச் செய்வதற்கு நாம் என்ன செய்யவேண்டும்? மசோதாவில் சில மாற்றங்கள் செய்யலாம் என்று நான் ஆலோசனை கூறினேன். அதை நாம் வேறு ஒரு கோணத்திலிருந்து பார்க்கவேண்டும். இந்த மசோதாவில் அளிக்கப்பட்டுள்ளதை விட அதிக அந்தஸ்து பெண்களுக்கு அது அளிக்கும். ''இல்லை மசோதா திரு. பி.என். ராவின் ஒப்புதலுடனும், டாக்டர் அம்பேத்கரின் நிபுணத்துவத்துடனும் வந்துள்ளதால் எந்தவித அடிப்படையான மாற்றமும் அதில் செய்யமுடியாது'' என்று அவர்கள் கூறினார்கள். மசோதாவை ஆதரிப்பவர்களின் அணுகுமுறை அவ்வாறு, இருந்தது. என்னை மன்னிப்பீர்களெனின் இதைச் சொல்ல விரும்புகிறேன்: பொறுக்குக் குழுவில் இருந்தபோதும், பிறகும்கூட எதிர்ப்பாளர்களைவிட அவர்கள் குறைந்த வெறியர்களாக இருக்கவில்லை. அவர்கள் கூறுகிறார்கள். நல்லது, மசோதா வந்தாகிவிட்டது. ஏற்றுக் கொள்ளுங்கள் அல்லது விட்டுவிடுங்கள். முடியுமானால் அதை நிராகரியுங்கள். சில நாட்களுக்கு முன்பு பிரதம மந்திரி வெளியிட்ட அறிவிப்பிற்கு பிறகு இது திரும்பத் திரும்பக் கூறப்படுகிறது. இந்த அறிவிப்பினால் அவையின் பெரும்பான்மை உறுப்பினர்களின் வாக்குரிமைகளும் கட்டுப்படுத்துப்பட்டுள்ளன.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** இல்லை, இல்லை.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** நல்லது ஒவ்வொருவரும் தம் விருப்பப்படி வாக்களிக்கலாம் என்று அனுமதித்தால்கூட அதன் விளைவுகள் இருக்கத்தான் செய்யும். இந்த மசோதாவை ஆதரிக்கும் நண்பர்களைக் கேட்கிறேன், என் சகோதரிகளைக் கேட்கிறேன், ...இந்த மசோதா உங்களுக்கு முழு நியாயம் வழங்குகிறதா? நீங்கள் விரும்புவதெல்லாம் இவ்வளவுதானா? நீங்கள் விரும்பும் உரிமைகளை அது அளிக்கிறதா? இல்லை என்றுதான் நான் கூறுகிறேன். நான் மிக்க அழுத்தத்துடன்தான் அதை கூறுகிறேன். ..இல்லை, அது அளிக்கவில்லை... இது மிகவும் வெட்டிக் குறுக்கப்பட்ட அரைகுறை மனதுடன் எடுக்கப்பட்ட நடவடிக்கை. இந்து சமுதாயத்திற்கு இது அதிகமான தொல்லைகளையும், பெண் குலத்திற்கு குறைந்த அளவு நன்மையையும் கொடுக்கும்.

**ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர்:** உங்களுடைய தீர்வுக்கு அவர்கள் சம்மதிக்கிறார்களா?

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** எனக்குத் தெரியாது. மசோதாவிலுள்ள சில விதிகளைக் குறித்துப் பேசுகிறேன். வாரிசுரிமை மற்றும் அது போன்றவைகள் சம்பந்தமான அதிகாரங்கள் விவசாய நிலங்களின் வாரிசுரிமைக்கு அமலாகாது என்று ஒருவிதி கூறுகிறது. ஏன்? ஏனெனில் அந்த நேரத்தில், இந்த மசோதா அறிமுகப்படுத்தப்பட்ட போது 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் 7 ஆவது அட்டவணையின் 7 ஆவது பதிவின்படி நிலைமை இதுதான். இந்தச் சட்ட மன்றம், இந்தியச சட்ட மன்றம் விவசாய நிலங்கள் சம்பந்தமாக எந்தச் சட்டத்தையும் நிறைவேற்ற முடியாது ஏனெனில் அது மாகாண விஷயமாக இருந்தது. அதுதான் அன்றைய நிலைமை. 1938ல் விவசாய நிலத்தையும் சேர்த்து டாக்டர் தேஷ்முக்கின் மசோதா விரிவுபடுத்தப்பட்டது. பிறகு அந்த விஷயம் பெடரல் நீதிமன்றத்துக்குச் சென்றது. இது இந்திய சட்டமன்றத்தின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டது என்று தீர்மானித்தது. அதுதான் நீதிமன்றத்தின் தீர்ப்பும், 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் விதியுமாகும். எனவே இயல்பாகவே, திரு. பி.என். ராவும், குழுவும், டாக்டர் அம்பேத்கரும் அவருடைய சட்டத் துறையும் இதை நீக்கிவிட்டார்கள். மாகாணச் சட்டமன்றங்கள் தீர்மானிக்க வேண்டிய விஷயம் இது என்று கூறிவிட்டார்கள். ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்நேரத்தில், அரசியல் நிர்ணய சபையின் வரைவுக்குழு வரைவு

அரசியல் சட்டத்தை வெளியிட்டது. ஏழாவது அட்டவணையிலுள்ள 7ஆம் பதிவு திருத்தப்பட வேண்டுமென்று அந்த வரைவு அரசியல் அமைப்புச் சட்டம் கூறியது. அந்தப் பொருளை பொதுப்பட்டியல் பொருளாக்க வேண்டும் அதாவது அசையாச் சொத்துக்கள் அல்லது சங்கம சொத்துக்கள் மற்றும் விவசாய நிலங்களின் வாரிசுரிமையை பொதுப் பட்டியலின் பொருளாக ஆக்க வேண்டும். அதுதான் விதியாக இருந்தது. பொறுக்குக் குழுவிலும் மற்றும் என் மாறுபாட்டுக் குறிப்பிலும் நான் சில மாதங்கள் காத்திருப்போம் என்று ஆலோசனைத் தெரிவித்தேன். பெண்களுக்கு இழைக்கப்பட்டுள்ள தீங்கிற்கு பரிகாரம் செய்கையில் நாம் எந்த நடவடிக்கைகள் எடுத்தாலும் தகப்பனாரின் சொத்தில் அல்லது கணவரின் சொத்தில் பங்கு அளித்தாலும் அது எல்லா சொத்துக்களுக்கும் பொருந்துவதாக இருக்க வேண்டும். சட்டம் ஒரேசீராக இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள். ஒரே சீரான தன்மைக்குப் பதிலாக வேறுபாடுகள்தான் அதிகரிக்கும், ஒற்றுமைக்குப் பதிலாக குழப்பந்தான் மிஞ்சும் என்று நான் துணிந்து சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்த மசோதா நிறைவேற்றப்பட்டால், நிலைமை இப்படித்தான் இருக்கும். ஒருவரின் அசையாச் சொத்து ஒரு நகரில் இருக்கையில், நகர்புறச் சொத்தும் இருக்கையில் அந்த சங்கமச் சொத்துக்கு ஒரு சட்டம், அதாவது டாக்டர் அம்பேத்கரின் நீதிமன்றத்தின் சட்டமும், ஆனால் ஒரு மூன்று மைலுக்கு அப்பால் உள்ள விவசாய நிலத்தைப் பொறுத்தவரையில், பழைய சட்டமும் தொடரும். மகள்களுக்கு எல்லா உரிமைகளும் அவர்கள் பிறந்த தருணத்திலிருந்தே இருக்கும். எஞ்சுனர் உரிமை விதியின் பயனும் அவர்களுக்குண்டு. சொத்தின் நிலைமை என்ன என்பது யாருக்கும் தெரியாது. எவ்வளவு ஓட்டைகள் விடப்படுகின்றன என்பதைப் பாருங்கள்? பெண்ணுக்குச் சொத்துக் கொடுக்க வேண்டாமென்று நீங்கள் நினைத்தால் பூனாவிலுள்ள அவள் பங்கை விற்றுவிட்டு ஐந்து மைலுக்கு வெளியே விவசாய நிலத்தை வாங்கிப் போடுங்கள். இப்பொழுது உங்கள் மகளுக்குப் பங்கு கொடுக்க வேண்டியதில்லை. மசோதாவின் விதிகளை இவ்விதமாக செயலிழக்கச் செய்யலாம். ஆனால் அதிர்ஷ்டவசமாக இப்பொழுது என்ன நடந்துள்ளது தெரியுமா? இந்த மசோதாவின் இரண்டாவது வாசிப்பின் இறுதியில் இன்று இருக்கிறோம். இன்றைய நிலைமை இதுதான். டாக்டர் அம்பேத்கர் மற்றும் வரைவுக் குழுவின் ஆலோசனைகள் அரசியல் சபையால் ஒரு மனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. கடவுள் ஆசியால், 26 ஆவது ஜனவரியில் அது அமலுக்கு வரும். அது மூன்றாவது வாசிப்புக்கு மிக முன்னதாக இருக்கும். நாலில் ஒரு பங்கு, அல்லது

அரை அல்லது முழுப் பங்கு அளிக்க அல்லது எந்த பங்கும் அளிக்காமலிருந்க்க, விவசாய நிலத்தை விலக்கம் செய்துள்ள குறிப்பிட்ட விதியை நீக்கி, மசோதாவில் இப்பொழுது மாற்றம் ஏதாவது செய்யப்போகிறாரா என்று கேட்டேன். 'இல்லை' என்று அவர் கூறினார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஓர் உரையாடலை வெளியிடும் உரிமை மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை. நான் சொன்னதெல்லாம் என்னுடைய தற்போதையக் கருத்து. பின்னர் நம் நிலையை நாம் மாற்றிக் கொள்ளலாம். இப்பொழுது நமக்கு அதிகாரம் உள்ளது. நம் பாதையில் உள்ள முட்டுக்கட்டை நீங்கிவிட்டது.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** எனது அறிவிற் சிறந்த நண்பர் என் தவறைத் திருத்திவிட்டார். இதற்காக அவருக்கு மிகவும் நன்றியுடையவனாக இருப்பேன். அவருடைய தற்போதைய நோக்கம் அந்த விதியை ரத்து செய்வது அல்ல, வேறுபாட்டை மாற்றாமலிருப்பதுதான். ஆனால் பின்னர்....

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அதைப் போன்று எதையும் நான் கூறவே இல்லை. ஓர் உரையாடலை உபயோகப்படுத்த என் நண்பருக்கு உரிமை இருப்பதாக நான் நினைக்கவில்லை.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** உரையாடலை அல்ல. நீங்கள் இந்த அவையில் இப்பொழுது கூறிதுதான் இது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் மட்டுமே முடிவெடுக்கும் விஷயங்களல்ல இவை. நான் என் சகாக்களின் ஒப்புதலையும் பெற வேண்டும்.

**திரு. துணை சபாநாயகர் :** மசோதா தற்பொழுதுள்ள நிலையிலேயே, விவசாய நிலங்களுக்கு மசோதாவில் வழி செய்யப்படவில்லை என்ற நிலையிலேயே மதிப்பிற்குரிய உறுப்பினர் தம் பேச்சைத் தொடரட்டும். தனிப்பட்ட உரையாடல்களை அவர் குறிப்பிட வேண்டாம்.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்:** மசோதாவை அது இருப்பது போன்றே எடுத்துக் கொள்வோம். மாற்றங்கள் கொண்டுவரப் போவது இப்பொழுதா அல்லது பிறகா, அமைச்சரவை அல்லது பிற தரப்பு

களின் ஒப்புதலுடனா என்பது வேறு விஷயம். ஆனால் இப்பொழு துள்ள நிலை என்ன? விவசாய நிலங்கள் விலக்கப்பட்டுள்ளன. நாட்டின் எந்தப் பகுதியை எடுத்துக் கொண்டாலும், இந்துக்களின் சொத்துக்களில் 80 சதவீதத்திற்கு மேல் விவசாய நிலங்கள்தான். மிகப் பெரும் பகுதி சொத்திற்கு வாரிசுரிமை பெறுவதிலிருந்து நமது சகோதரிகளும், மகள்களும், மற்ற பெண் உறவினர்களும் இந்த மசோதாவின்படி விலக்கப்படுகின்றனர். தற்போதைய வடிவத்தில் இந்த மசோதாவை மேலும் கொண்டு செல்லாது அதை மறு பரி சீலனை செய்வது அவசியம் என்பதற்கு மேலும் ஒரு காரணமாகும். உங்களிடம் எந்தச் சட்டம் இருந்தாலும் சரி, அது விவசாய, நகர்புற சங்கம அசையாச் சொத்துக்கள் போன்ற எல்லா சொத்துக்களுக்கும் பொருந்துவதாக இருக்க வேண்டும்.

*பண்டிட் பாலகிருஷ்ண சர்மா* (உ.பி; பொது): எனது மதிப் பிற்குரிய உறுப்பினர் ஒரு நிமிடநேரம் நிறுத்திக் கொள்வாரானால், அவரிடமிருந்து ஒன்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். இந்தச் சட்டம் விவசாய நிலங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டால் நிலங்கள் உண்மையிலேயே துண்டு தண்டாக பிளவுபட்டுவிடாதா? (குறுக்கீடு).

*திரு. துணை சபாநாயகர்:* குறுக்கீடும் இல்லாமலிருக் கட்டும். எந்நேரத்திலும் விவாதத்தை முடிக்க வேண்டி வரலாம். நான் அவைக்கு முன்கூட்டியே எச்சரிக்கிறேன். குறுக்கீடுகள் குறை வாக இருந்தால் அதிகப் பேச்சாளர்களுக்குப் பங்கு கொள்ள வாய்ப்புக் கிடைக்கும்.

*டாக்டர் பக்ஷி தேக் சந்த் :* நிலங்கள் துண்டு துண்டாகிவிடும் என்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அதிக எண்ணிக்கை யிலான வாரிசுகள் இருக்கும்போது அது ஏற்படத்தான் செய்யும். ஒருவருக்கு ஐந்து மகன்கள் இருந்தால் நிலம் சிறு சிறு துண்டுகளாகி விடும். அவருக்கு இரண்டு மகள்களும் இருந்தால் மேலும் துண்டு களாகிவிடும். அசையாச் சொத்துகள் அல்லது நகர்ப்புறச் சொத்துக் கள் துண்டுகளாகி விடுவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உங்களுக்கு ஒன்றோ அல்லது இரண்டோ வீடுகளிலிருந்து இரண்டு மகன்களும் ஐந்து மகள்களும் இருந்து சொத்தைப் பிரித்துக் கொள்ள அவர்கள் விரும்பினால் சொத்தில் பிளவு ஏற்படத்தான் செய்யும். எனவே இரண்டு தரப்பகளுக்கும் என் மரியாதையைத் தெரிவித்துக்

கொண்டு இந்த வாதம் பொருத்தமற்றதாகையால் அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது.

இந்த மசோதாவின்படி 80 சதவீதத்திற்கு மேற்பட்ட நிலங் களுக்கு விலக்கு அளிக்கப்படுகிறது. சீர்திருத்தக் கண்ணோட்டத்தின் படி அது ஒரு முக்கியமான குறைபாடுதான்.

ஆட்சேபங்களில் ஒன்று இதுதான். ஒருவருக்கு ஒரு வீடும், கொஞ்சம் நிலமும் இருக்கும். சில கிராமவாசிகள் சிறு கடையும் வைத்திருப்பார்கள். பல பங்கீடுகள் இருக்கும். மருமகனும் குடும் பத்தில் நுழைவார். அது ஒரு நியாயமான ஆட்சேபம் என்று மசோதா வின் ஆதரவாளர்கள் கூறுகிறார்கள். எனவே மூன்றாவது வாசிப்பின் போது குடும்பத்தின் வீட்டிற்கு வாரிசுரிமையிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டும் என்ற ஒரு விதியைச் சேர்க்கவேண்டும். அதாவது மகளுக்கு சொத்துரிமை இருப்பினும், அவளுக்குக் குடி யிருப்பில் பங்கு கிடைக்காது. அது அப்படியென்றால், பங்கீட்டிற் கான நகர்புற சொத்துகள் மேலும் குறைந்துவிடும். ஒரு சில செல்வந் தர்களைவிட 30 கோடி இந்துக்களில் எத்தனை பேருக்கு குடும்பம் முழுவதும் வசிக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட வீடுகள் இருக்கின்றன/ சாதாரணமாக கிராமங்களில் ஒரு வீடும் கொஞ்சம் நிலமும் உள்ளன. அவர் ஒரு வியாபாரியாக இருந்தால் ஒரு சிறு பெட்டிக்கடையும் இருக்கிறது. குடியிருக்கும் வீட்டில் மகளுக்குப் பங்கு கிடையாது என்றால், வாரிசுரிமையாகக் கிடைக்கும் சொத்தில் மேலும் ஒரு பகுதி குறைந்துவிடுகிறது.

மேலும் ஒரு ஆட்சேபம் என்னவென்றால் மருமகன்களும் இதில் சேர்ந்து கொள்வதால் பெரும்பாலான நேர்வுகளில் அவர்கள் குழப்பம் ஏற்படுத்துவார்கள் என்பதுதான். வேறு ஒரு கிராமத்தில் இருக்கும் சொத்தை அவர்கள் நிர்வகிக்க முடியாது என்பதால் ஸ்தலத்திலுள்ள யாராவது ஒருவருக்கு சொத்தை விற்க ஏற்பாடு செய்யலாம். குடும்பத்தின் பிளவுக்கு இது வழிவகுக்கும். இதைச் சமாளிக்க, மகளுக்கு பங்கு அளிக்கப்படினும் அது பணமாக இருக்க வேண்டும் என்று ஆலோசனைகள் வழங்கப்பட்டன. அப்படியென் றால் நீங்கள் சகோதரர்களுக்கு கல்யாணத்திற்குப் பிறகு ஒன்றிரண்டு ஆண்டுகளில் முன்வாங்குரிமை அளிக்க வேண்டும். அப்பொழுது சகோதரிக்கோ அல்லது அவள் கணவருக்கோ பங்குத் தொகையை பணமாகக் கொடுத்துவிட்டு சொத்தைச் சகோதரர் வைத்துக்கொள்ள முடியும். அதுவும் கூட பெரும் தொல்லை அளிக்கக்கூடும். சொத்தின்

சந்தை விலையைத் தீர்மானிப்பது கடினமான பணி. இது முடிவற்ற நீதிமன்ற நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டிய கட்டாயத்தை உருவாக்கும். கடைசியில் மகளுக்கு ஒன்றும் மிஞ்சாது. விவசாய நிலங்களுக்கு விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளன, குடியிருப்புகளுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளன. மேலும் பல சொத்துக்களும் சேர்க்கப்படலாம். மொத்தப் பங்கை அளிப்பது மிக அதிகம் என்று சொல்லப்படலாம். அரைப்பங்கு அல்லது கால் பங்கு கொடுங்கள். முழுப் பங்கு அளித்தால் என்ன என்று நான் கேட்கிறேன்?

சொர்க்கத்திலிருந்து கிடைத்த ஸ்மிருதி போலல்லாது, இந்த மசோதாவை பொறுமையாகவும் அமைதியாகவும் பகுத்தாய்ந்தால் பெண் வாரிசுகளுக்கு அதனால் குறைந்தபட்ச ஆதாயம்கூட இல்லை என்பதைக் காணலாம்.

இந்து கூட்டுக் குடும்பத்தை இந்த மசோதா நிர்மூலமாக்கி விடும். அது நல்லதோ கெட்டதோ, மக்கள் அதை இன்னும் விடாப் பிடியாகப் பின்பற்றி வருகிறார்கள். மெட்ராசிலுள்ள கிராமங்களில் அவை இன்னும் பின்பற்றப்பட்டு வருகின்றன என்பதை நம் பெரு மதிப்பிற்குரிய சகோதரர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் சுட்டிக் காட்டினார். என் நண்பர் சந்தானத்துக்கு வேறு அபிப்பிராயம் இருக்கலாம். ஆனால் அது அங்கு நடைமுறையில் இருக்கிறது. இருப்பினும் அது அங்கு உள்ளது. அதன் விகிதாசாரம் எவ்வளவாக இருந்தாலும் சில மக்களிடம் அதன் செல்வாக்குள்ளது. இந்து சட்டத்தின் மற்ற எல்லா கோட்பாடுகளையும் எஞ்சுநர் உரிமை, மரபுரிமை, மகனுக்கு ஒரு பங்கு போன்ற எல்லாவற்றையும் நீக்கிவிடுகிறீர்கள். இதற்கு அவசியம் என்ன? மகளுக்கு பங்கு கிடைக்க வேண்டுமென்பதுதான் அவசியம். எனவே, மசோதாவின் 5, 6 மற்றும் 7ஆம் பிரிவுகள் இந்து குடும்ப அமைப்பில் தீவிர மாற்றங்களைக் கொண்டு வருவதுடன் தற்போதைய வடிவில் பெண்களுக்குக் குறைந்த நன்மையையே அளிக்கிறது என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனவே, இந்தக் கட்டத்தில், நாளைக்கோ அல்லது அடுத்த கூட்டத்தொடரிலோ இந்த மசோதாவை இறுதி வாக்களிப்புக்குக் கொண்டு செல்ல வேண்டுமா என்று மசோதாவின் ஆதரவாளர்களைக் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன். இந்த விஷயத்தில் அதிகம் கவனம் செலுத்த வேண்டியது விரும்பத்தக்கதல்லவா? நாட்டின் பெரும் பகுதியில் நடைமுறையிலுள்ள வழக்கங்களில் அதிகம்

மாறுதல்கள் செய்யாமல், இந்து கூட்டுக் குடும்பத்திலுள்ள பெண் உறுப்பினர்கள், மிதாக்ஷரா அல்லது தாயபாக வழக்கங்களைப் பின்பற்றுபவர்களாக இருந்தாலும் சரி முழுப் பயனையும் அடைய வேறு ஏதாவது வழியுள்ளதா என்பதைக் காணவேண்டும்.

சனாதன மற்றும் சீர்திருத்தவாத நண்பர்களுக்கு என் கருத்து களை தாழ்மையாகத் தெரிவித்துக் கொண்டேன். ஒரே ஒரு ஆலோ சனை மட்டும் கூற வேண்டியிருக்கிறது. என் மனதில் அத்திட்டம் தயார் நிலையில் இல்லை. அதற்கு அதிகக் காலம் பிடிக்கும். அவை யின் முன் அதன் பொதுவான கோட்பாடுகளை வைக்கிறேன். இது கவனத்தில் எடுத்துக் கொள்ளத் தக்க மாற்று வழியாக இருக்காதா என்று டாக்டர் அம்பேத்கரையும், மற்ற சட்ட உறுப்பினர்களையும், சீர்திருத்தவாத உறுப்பினர்களையும், சனாதன உறுப்பினர்களை யும் கேட்டுக் கொள்கிறேன். உண்மையில் இன்று காலை வரை, இந்த விஷயம் குறித்துப் பேச எனக்குத் தயக்கமாக இருந்தது. அண்மையில் கூடுவதாக உள்ள பொறுக்குக் குழுவில் அதைச் சமர்ப் பிக்கலாம் என்று இருந்தேன். அந்தக் குழுவில் நான் உறுப்பினராக இருந்தால் குழுவிலேயே அளிக்கலாம் என்று கருதினேன். இன்றைக்கு இங்கே என்னைப் பேச அழைத்தபோது அதை இந்த அவை முன் வைப்பதே சரியான வழி என்று எண்ணினேன். என்னுடைய ஆலோ சனை இதுதான்.

நமது குறிக்கோள் என்ன? நம் குடும்பத்தின் பெண் உறுப் பினர்களுக்கு சொத்தில் முழு உரிமை அளிக்க வேண்டுமென்பது தான். எனவே நாம் செய்யவேண்டியது இதுதான். கூட்டுக் குடும்ப முறையைக் குலைத்துவிட வேண்டாம். எஞ்சுநர் உரிமையை உதறித் தள்ளவேண்டாம். அவை முடிந்த வரை தொடர்ந்து இருக்கட்டும். ஆனால் மிதாக்ஷரா குடும்பத்தில் ஒரு பெண் திருமணம் ஆன வுடன் அந்தக் குடும்பச் சொத்தில் பங்குரிமையாளர் ஆகிவிட வேண்டும். தற்சமயம் அவள் கூட்டுக் குடும்பத்தின் உறுப்பினராக இருக்கிறாள். ஆனால் பங்குரிமையாளர்களில் ஒருவராக ஆகிவிட வில்லை. என்னுடைய கருத்துகளை அவை முன்வைக்க மதிப்பிற் குரிய உறுப்பினர்களை மூன்று நிமிட நேரம் ஒதுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். பிறகு அதைப் பரிசீலனை செய்யுங்கள். அதுகுறித்து குறுக்கீடு செய்வது எந்தப் பலனையும் தராது. அது உங்கள் பார்வைக் காக, குழுவின் பரிசீலனைக்காக சட்ட அமைச்சர் மற்றும் பிரதம மந்திரி மற்றும் இந்த விஷயத்தில் ஆர்வமுள்ளவர்களின் பரிசீலனைக் காக வைக்கப்பட்டுள்ளது. தற்பொழுது, ஒவ்வொரு பெண்ணும்

தன் திருமணத்திற்குப் பிறகு கணவனின் கோத்ரத்துக்கு மாறி விடுகிறாள். மற்றும் அவள் குறைந்த உரிமைகளுடன் கூட்டுக் குடும்பத்தின் உறுப்பினராகி விடுகிறாள். 1937 வரை, பிரிட்டிஷ் இந்திய நீதிமன்றங்கள் அவளுக்குக் கொடுத்த உரிமையெல்லாம் பராமரிப்பு மட்டும்தான். சொத்தில் அவளுக்கு எந்தச் சட்ட உரிமையும் கிடையாது. அவள் அங்கு தங்கியிருந்து அதை அனுபவிக்க மட்டும் உரிமை பெற்றிருந்தாள்.

அதுதான் நிலைமை. 1937 தேஷ்முக் சட்டம் வந்தது, கணவனின் மரணத்திற்குப் பின் சொத்தில் அவளுக்கு கணவனின் பங்குக்கு இணையாக ஒரு பங்கு அளிக்கப்பட்டது, மைத்துனர்கள் அல்லது குடும்பத்தின் மற்ற உறுப்பினர்களுடன் அவளால் ஒத்து வாழமுடியவில்லை என்றால் தன்னுடைய பங்கைப் பிரித்தெடுத்துக் கொள்ளவும் உரிமை அளிக்கப்பட்டது. நான் கூறும் ஆலோசனை இதுதான். ஒன்றே ஒன்றை மட்டும் இத்துடன் சேர்த்துக் கொள்ளுங்கள். அவள் முழு பங்குரிமையாளராக வேண்டும். மிதாக்ஷராக் குடும்பத்தில் உள்ளதுபோல், ஒரு மகன் பிறந்தவுடன் தகப்பனாரின் பூர்விக சொத்தில் அவன் பிறந்த தருணத்திலிருந்து பங்குரிமையாளராகிறான். அதே போன்று ஒரு பெண்ணும், திருமணமான தருணத்திலிருந்து முழு உரிமையுடனான பங்குரிமையாளராகட்டும். அவளுடைய சொந்த மகன்களும் மற்றவர்களும் இருக்கலாம். அவர்கள் எல்லோரும் பிரிவினைக்கு அவசியமில்லாது தொடர்ந்து ஒன்றாக வாழ்வார்கள். ஆனால் அவர்களுடன் அப்படி ஒன்றாக வாழ்வது சாத்தியமில்லை என்று அவள் நினைத்தால், அவள் தன் பங்கை பிரித்தெடுத்துக் கொண்டு செல்லலாம். அதாவது தன் கணவனின் மறைவுக்குப் பிறகு 1937ஆம் ஆண்டு சட்டப்படி எவ்வாறு அவள் பிரிந்து செல்வாளோ அதே போன்றுதான். அது ஒரு மாற்றம். இதை நீங்கள் நிறைவேற்றினால் தகப்பனாரின் சொத்திலோ கூட்டுக் குடும்பத்திலோ எந்த மாற்றமும் செய்ய வேண்டியதில்லை. முடிந்தவரை கூட்டுக் குடும்பம் தொடர்ந்து இருக்கட்டும். அது உடைந்துவருகிறது என்று சிலர் சொன்னார்கள். வருமானவரி ஏய்ப்பிற்காகத்தான் அது உடைந்து வருகிறது என்று சிலர் சொன்னார்கள். எவ்வளவு பேர் வருமானவரி கட்டுகிறார்கள் என்று மற்றவர்கள் கேட்டார்கள். 99.5 சதவீத இந்துக்கள் வருமான வரி செலுத்துவது இல்லையென்றாலும் அவர்கள் கூட்டுக் குடும்ப முறையைப் பின்பற்றுகின்றனர் என்று கூறினர். இந்த வாதங்களுக்கு அர்த்தமில்லை. இந்த சூழ்நிலைகளில்தான் கூட்டுக் குடும்பம்

உடைகிறது என்று சொன்னால் அது உடைந்து நொறுங்கட்டும். ஆனால் முடிந்த காலம் வரை அது தொடர்ந்து இருக்கட்டும்.

புதிதாக எதையும் நான் ஆலோசனையாக வைக்கவில்லை, அல்லது இந்து சட்டத்தின் உணர்வுக்கு எதிரானது எதையும் கூற வில்லை. ஜைமினி மற்றும் இதரர்களும் அளித்த வேதச் சட்டங்கள் அதாவது மூலச் சட்டத்தின் உணர்வுகளுக்கு அது இசைவாக உள்ளது என்று கூறலாம் என நினைக்கிறேன். என் பேச்சை நீட்டிக்க விரும்ப வில்லை. வேத காலத்திலும் அதைத் தொடர்ந்து வந்து காலத் திலும் நிலைமை எப்படி இருந்தது என்பதை எடுத்துக்கூற விரும்பு கிறேன். 1913ல் துவரகநாத் மிட்டர் "இந்துச் சட்டத்தில் பெண் க்ளின் நிலை" குறித்து எழுதிய புத்தகத்தின் சில பகுதிகளைப் படித்துப் பாருங்கள். அலகபாத் லா ஜர்னல் தொகுதி II ல் காலஞ்சென்ற அலகபாத்தைச் சேர்ந்த டாக்டர் சதீஷ் சந்திர பானர்ஜி எழுதிய கருத் தாழமிக்கக் கட்டுரையை தயவுசெய்துப் படித்துப் பாருங்கள். இந்நாடு உருவாக்கிய நல்ல எதிர்காலமுள்ள மிகச் சிறந்த சட்ட வல்லுநர் களில் ஒருவர் அவர். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இளம் வயதி லேயே அவர் வாழ்வு முடிந்துவிட்டது. அது ஒரு மிகவும் விரிவான கட்டுரை. மேலும் பாட்னாவைச் சேர்ந்த டாக்டர் கே. பிஸ்வாஸின் நூலையும் படித்துப் பாருங்கள். இவைகளிலெல்லாம் மனுவுக்கு முன்பு தோன்றிய அறிஞர்கள், மற்றும் வேதங்களிலிருந்து அக்காலத் திலுள்ள பெண்களின் நிலை குறித்து மேற்கோள்கள் கொடுக்கப் பட்டிருந்தன. அக்காலத்தின் பெண்களின் நிலைமை என்னவெனில், கணவரின் சொத்தில் அவளுக்கு முழு உரிமை இருந்தது. வேத வாசகங்களைக் குறித்து மகரிஷி ஜைமினி கூறுகிறார்: "திருமணமான தருணத்திலிருந்தே மனைவிக்கு கணவனின் செல்வத்தில் உரிமை அளிக்கப்படுவதுடன் அவன் பிறகு சேர்க்கும் சொத்துக்களிலும் அவளுக்கு உரிமை உண்டு. அதாவது அவள் ஒரு முழுப் பங்குரிமை யாளர் ஆகிவிடுகிறாள். வேறு ஒரு வாசகத்தை இவ்வாறு விளக்கு கிறார். ஆணுக்குள்ள அதே சமய, உரிமையியல் உரிமைகள் பெண் களுக்கு இருப்பதுடன் அவன் ஈட்டும் செல்வம் அனைத்தையுமே, அவள் இஷ்டப்படி கையாளமுடியும். அவனே சேர்த்த சொத்துக் கள் அனைத்தின் அயலடைவைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் இருந்தது. நாம் கொண்டுள்ள பங்குரிமையாளர் என்ற கருத்தோட் டமும் இதுதான். மகன் ஒருவன் தன் பிறந்த தருணத்திலிருந்து பங்கொன்றைப் பெறுவதுடன், அது நியாயமான காரணத்துக்காக அல்லது குடும்பத் தேவைகளுக்காக இல்லாமலிருந்தால் தகப்ப னாரின் பராதீனத்தை கட்டுப்படுத்த முடியும். இதேபோன்று ஒரு

பெண்ணிற்கும் அவள் திருமணம் செய்து கொண்ட தருணத்திலிருந்து உரிமை வழங்கப்பட வேண்டும். சீரழிவு காலம் ஆரம்பிப்பதற்கு, பெண்களின் உரிமைகள் பரிக்கப்படுவதற்கு முந்தைய, இந்து சட்டம் மற்றும் வேத வாசகங்களுக்கு மீண்டும் செல்வோம் என்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். பெண்களையும் ஒரு பங்குரிமையாளர்களாக்குவோம். என் ஆலோசனையின் ஒரு பிரிவு இதுதான்.

என்னுடைய ஆலோசனையின் மற்ற பகுதி என்னவெனில், திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் நேற்றுக் குறிப்பிட்ட, பெண்ணுக்கு தன் சொத்தைப் பராதீனப்படுத்துவதற்குப் பூரண உரிமை இருக்கவேண்டும் என்பதாகும். இந்து விதவையின் பரிதாப நிலை நீக்கப்படவேண்டும். அதைப் பொறுத்தவரையில் இந்த அவை இரண்டு நிமிடம் செலவிடவேண்டும். இந்த மசோதாவை எதிர்க்கும் என் நண்பர்கள் யாவரும் கூறுகின்றனர்: "நாம் சாஸ்திரங்களுக்குச் செல்ல விரும்புகிறோம். நாட்டின் பெரும் பகுதிகளில் பின்பற்றப்பட்டு வரும், முக்கியமாக **மிதாக்ஷரா** சாஸ்திரத்துக்கு அப்பால் செல்ல நாங்கள் விரும்பவில்லை. வங்காளத்தைத் தவிர எல்லாப் பகுதிகளிலும் அதுவே பின்பற்றப்பட்டு வருகிறது." இதைப் பொறுத்த வரையில் மிதாக்ஷரா சட்டம் என்ன கூறுகிறது? யாக்னவல்கியர் பற்றிய விக்னானேஷ்வரின் விளக்க உரையில் அத்தியாயம் 11 பகுதி 11ல் சுலோகம் 2 மற்றும் 4ல் பெண்ணின் சீதனத்தைப் பற்றி என்ன கூறுகிறார்கள் என்பதைப் பாருங்கள். சில விஷயங்களை மேற்கோள் காட்டிவிட்டு, அதாவது திருமண நேரத்தில் பெண்ணுக்கு என்ன திருமணப் பரிசு அளித்தாலும் அது முக்கியமல்ல. அவர் கூறுகிறார்: "சீதனம் என்பது, அவைகளுடன், வாரிசுரிமை, பாகப் பிரிவினை, கைப்பற்றுதல் (எதிரனுபோகம்) ஆகியவைகளால் பெறப்படும் எல்லாச் சொத்துக்களும் அடங்கும். தனது கணவனின் அல்லது தகப்பனாரின் அல்லது வேறு யாரிடமிருந்தாவது பெறப்பட்ட சொத்திலிருந்து வாரிசுரிமையாகப் பெற்றது அவளுடைய முழு உரிமையாக இருக்கும், அதை வேறு யாரும் கட்டுப்படுத்த முடியாது. 11ஆம் நூற்றாண்டில் விக்னானேஷ்வர் வகுத்த சட்டம் இதுதான். பிரிட்டிஷார் வரும் வரை இது தொடர்ந்து சட்டமாக இருந்தது. காசி நடைமுறைகளைச்

சேர்ந்த மற்றொரு உரையாசிரியர் திரு. என்.எஸ். வீரமாதித்ரா, அதை அமோதித்து எழுதியுள்ளார். பம்பாய் மாகாணத்தில், முக்கியமாக குஜராத்திலும் பம்பாய் தீவிலும் முதன்மை நிலையில் இருந்துவரும் மயூகாவின் ஆசிரியர் நீலகந்தா மீண்டும் அதையே எடுத்துக் கூறுகிறார். பிரிட்டிஷார் வரும் வரை வங்காளம் தவிர எல்லா மாகாணங்களிலும் அதுவே சட்டமாக இருந்தது. பிரிட்டிஷார் வந்தவுடன் கூறினார்கள். "நல்லது, **மிதாக்ஷராவின்** மூல வாசகங்களை ஆய்ந்து பார்ப்போம். இது **யாக்னவல்கியர்** குறித்த உரைநூல். **யாக்ஞவல்கியர்** சில குறிப்பிட்ட குறியீடுகளை கைய ¨ண்டிருந்தார். அவர் 'அதி' என்ற சொல்லைப் பயன்படுத்தியிருந்தார். 'அதி' என்பதற்கு விக்னானேஷ்வர் இவ்வாறுதான் வியாக்கியானம் கொடுத்திருந்தார். அதுதான் நிலைமை. ஒரு பெரும் போராட்டம் தொடர்ந்தது. சில நீதிமன்றங்கள். குறிப்பாக மெட்ராஸ் நீதிமன்றம் பல ஆண்டுகள் கடும் முயற்சி எடுத்தது. இறுதியாக பிரிவி கவுன்சில் கூறியது: "நல்லது, நாம் முடிவு செய்ய வேண்டியதுதான். **ஸ்மிருதி** ஆசிரியருக்கும் உரையாசிரியருக்கும் இடையே வேறுபாடு இருக்குமானால் நாம் உரையாசிரியரின் விளக் கத்தையே பின்பற்ற வேண்டுமென்று. தான் வகுத்த விதிக்கு மாறாக பிரிவி கவுன்சில் நடந்து கொண்டது. அவர்கள் இயற்றிய விதியிலிருந்தே ஏதோ ஒரு வகையில் அவர்கள் விலகிச் சென்று விட்டனர். எனவே, ஒரு மகளின் மற்றும் ஒரு கணவனின் குடும்ப நிலையைக் குறித்த வேத நூல்களின் நிலைக்குச் சென்று பாருங்கள். **மிதாக்ஷரா** நிலைக்குச் சென்று பாருங்கள். பிற்காலத்தில் உருவாக்கப்பட்ட சட்ட இலக்கியக் குவியலைக் குப்பையில் போடுங்கள். பதினெட்டாம் நூற்றாண்டு வரை நிலவிலிருந்த சட்டத்தை நோக்கிச் செல்லுங்கள். இந்த இரண்டு விஷயங்களை மட்டும் நீங்கள் செயல்படுத்தினால் இந்த மசோதாவை ஆதரிப்பவர்களும் சீர்திருத்தம் கோரும் நண்பர்களும் அதிகம் பயன் பெறுவார்கள் என்று நண்பர்களுக்குக் கூறிக் கொள்கிறேன். ஒரு பெண், கணவனின் குடும்பத்தில் பங்குரிமையாளர்ஆனால் கூட்டுக் குடும்ப அமைப்பில் குழப்பம் ஏற்படாது, மகன்கள் தொடர்ந்து தங்கள் பங்கை அனுபவித்து வருவார்கள். கூட்டுக் குடும்ப அமைப்பில் நல்ல விஷயங்கள் இருக்கலாம்; கெட்ட விஷயங்களும் இருக்கலாம். பின்னர் அது இயற்கையான முறையில் உடைந்துச் சிதறிப் போகட்டும். கணவனின் சொத்தில்

கணவனுக்கு, மகனுக்கு இருப்பது போன்ற உரிமையை மனைவிக்கும் அளியுங்கள். அவளுடைய மறைவுக்குப் பிறகு இந்தச் சொத்துக்கள் யாருக்குச் செல்ல வேண்டும் என்பது போன்ற விஷயங்களும், மேலும் பரிசீலிக்க வேண்டிய விஷயங்களும் இருக்கலாம். இந்த விவரங்களுக்குள் எல்லாம் நான் செல்ல விரும்பவில்லை. இந்த விஷயத்தைக் குறித்து ஆழ்ந்து பரிசீலிக்குமாறும் இந்தத் திட்டம் மிகச் சிறந்ததாக இல்லையா என்பதைக் காணுமாறும் மதிப்பிற்குரிய என் உறுப் பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

திருமணமாகாத மகளைப் பொறுத்தவரையில் தன் தகப்பனாரின் சொத்தில் சகோதரர்களைப் போன்று ஏன் முழுப் பங்கு அளிக்கக் கூடாது என்பதற்கு எனக்கு காரணம் எதுவும் தெரியவில்லை. சீதனம் எதுவும் கொடுக்கப்படாததால் அவள் பிறரைச் சார்ந்திருக்கக் கூடாது. எனது நண்பர்களில் சிலர் சகோதரன் சகோதரி மேல் கொண்டுள்ள பாசத்தைக் குறித்து இனிமையான சித்திரத்தைத் தீட்டுகின்றனர். தங்களுடைய சகோதரிக்காக சகோதரர்கள் படும் பாட்டை விவரிக்கின்றனர். மிகவும் உண்மைதான். சிலர் அவ்வாறு நடந்து கொள்கின்றனர்; பலர் இவ்வாறு செயல்படுகின்றனர். ஆனால் இதற்கு மாறாக நடப்பவர்களைப் பற்றியும் தெரியும். சகோதரர்கள் முக்கியமாக சகோதரர்களின் மனைவிகள் முழுவதையும் சுருட்டிக் கொண்டு விடுகிறார்கள். கிராமத்தில் அதிகச் செல்வாக்கு இல்லாத குடும்பத்திற்கு, ஏழைக் குடும்பத்திற்கு, சகோதரி மணம் செய்து கொடுக்கப்பட்டால் வரதட்சிணையாகக் கொஞ்சமே கொடுக்கப்படுகிறது. எனவே நாம் அதற்கும் வகை செய்ய வேண்டும். சாஸ்திரங்களில் கூட அதற்குக் கணிசமான முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. சிலர் நான்கில் ஒரு பங்கும், சிலர் முழுப் பங்கும், சிலர் அரைப் பங்கும் அளிக்க வேண்டுமென்று கூறுகின்றனர். நான் அரைப் பங்கு என்பதை ஏற்றுக் கொள்ளவில்லை. முகமதியச் சட்டத்தைப் பின்பற்றி அவளுக்கு முழுப் பங்கு அளிக்க வேண்டும்.

**திரு. பி.எல். சோந்தி** (கிழக்குப் பஞ்சாப் : பொது) : திருமணமாகாத பெண் எவ்வளவு காலம் அந்தச் சொத்தை அனுபவித்துக் கொண்டிருப்பாள்?

**டாக்டர் பக்ஷி தேக் சந்த்:** சொத்தை ஒருதடவை அடைந்த பிறகு அதைத் திரும்பப் பெறும் கேள்விக்கே இடமில்லை. அது குடும்பத்தில் எந்த சீர்குலைவையும் ஏற்படுத்தப் போவதில்லை. நாம் சில விதிகளைச் செய்யவேண்டும். பின்னர் அதை நாம் தக்கவாறு சரிப்படுத்திக் கொள்ளலாம்.

திருமணம் மற்றும் விவாகரத்து சம்பந்தமான அத்தியாயங் களைக் குறித்து ஒரு வார்த்தை. மசோதாவின் இந்தப் பகுதியைப் பொறுத்தவரை எனது ஆட்சேபம் சாதாரணமானதுதான். முதல் அத்தியாயத்தின் முதல் பகுதி ஒருதார மணத்தைப் பற்றிக் கூறுகிறது. ஓர் இந்து ஒரே ஒரு தடவை மட்டுமே திருமணம் செய்ய வேண்டும். அதற்கு மேல் கூடாது என்ற விதியை முழு மனதுடன் ஏற்றுக்கொள்பவன் நான். பெரும்பான்மையான நம் மக்கள் இப்படித்தான் நடந்து கொள்கிறார்கள்.

**திரு. எச்.வி. காமத்:** ஒரு தடவை அல்லது கிடையவே கிடையாது.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** மகன் பிறக்கவில்லை போன்ற வாதங்கள் எல்லாம் பயனற்றவை. ஒருவர்பின் ஒருவராக மூவரை மணம் செய்து கொண்டாலும் அவர்களில் ஒருவருக்கு மகன் பிறக்கும் என்பதற்கு உத்தரவாதம் உள்ளதா? ஏதோ தற்செயலான நேர்வுதான். எனவே இந்த வாதத்தை என்னால் சிறிதும் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. உண்மையில், நடைமுறையில் பெரும் பாலான இந்துக்களுக்கும் ஒரே ஒரு மனைவியே இருக்கிறாள். அந்த விதியை இங்கு சேர்க்காமலிருப்பதற்கான காரணம் எனக்குப் புரியவில்லை.

**திரு. லட்சுமிநாராயண் சாஹு:** உத்கலில் மூன்று லட்சம் பெண்களுக்கும் அதிகமாக உள்ளனர். நீங்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்று பேசினால், அதிகப்படியான இந்த 3 லட்சத்திற்கு என்ன வழி வைத்துள்ளீர்கள்?

**டாக்டர் பக்ஷி தேச் சந்த் :** இங்குங்கூட மதம் கொண்டு வரப்படுகிறது. பரோடாவில், 1931-ல் மிகவும் சமயப் பற்றுள்ள

மகாராஜாவின் தலைமையில், இந்துக்கள் 95 சதவீதம் உறுப்பினர்களாக இருந்த சட்டமன்றத்தால் ஒருதார மசோதா மற்றும் விவாக ரத்து மசோதா நிறைவேற்றப்பட்டது. 19 ஆண்டுகளாக அது நடைமுறையில் உள்ளது. இந்த மசோதாவால் பரோடாவில் இந்து மதம் ஒரு முடிவுக்கு வந்து விட்டது என்று கூறமுடியுமா? பம்பாயில் திருமதி முன்ஷியின் மசோதா 1946-ல் நிறைவேற்றப்பட்டு அது அந்த பிரதேசத்தின் சட்டமாகிவிட்டது. கடந்த ஆண்டு மெட்ராசில் மெட்ராஸ் சட்ட மன்றமும் அதே போன்ற ஒரு மசோதாவை நிறைவேற்றியது. எனவே, நடைமுறையில் தென் இந்தியா முழுவதுமே ஒருதாரச் சட்டம் அமலுக்கு வந்துவிட்டது. அங்கு இந்து மதம் அழிந்துவிடவில்லை. நமது மெட்ராஸ் நண்பர்கள் அனைவரும் எப்பொழுதும் போல நல்ல ஆரோக்கியத்துடனும் உற்சாகமாகவும் இருக்கிறார்கள். எனவே, இந்த விதி வரவேற்கத்தக்க ஒன்று, அது பராமரிக்கப்பட வேண்டும்.

**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட்:** ஐயா, என்னை அனுமதித்தால், விவரம் தெரிந்து கொள்வதற்காக ஒன்றிரண்டு கேள்விகள் கேட்க விரும்புகிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** அவர் விட்டுக் கொடுக்க மாட்டார்.

**கோகுல்பாய் தவுலத்ராம் பட்:** நீங்கள் ஒருதார வழக்கத்தைப் பற்றிக் கூறியது முற்றிலும் உண்மைதான். ஆனால் நான் கேட்க விரும்புவதெல்லாம், தனது முதல் மனைவி உயிரோடிருக்கையில் அவள் ஒப்புதல் அளித்தால் இரண்டாவது மணம் செய்ய ஒருவருக்கு அனுமதி உண்டா?

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** நமது மதிப்பிற்குரிய சகோதரர் கோகுல்பாய்ஜி இந்தக் கேள்வியைக் கேட்டதற்கு நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ஒரு பெண்ணின் ஒப்புதலை எந்த வழியிலும் நீங்கள் பெறமுடியும் என்பதை நான் கூறமுடியும். இந்த மாதிரி நடந்த பல மோசமான சம்பவங்களைப் பார்த்திருக்கிறேன். ஒரு சமயம் ஒரு முதியவரும் மூதாட்டியும் இருந்தனர். மிகவும் படித்த பண்டிட், சோதிடர் ஒருவர் வரவழைக்கப்பட்டார். எல்லாப் பூஜைகளையும் முடித்த பிறகு அவர் அந்தக் கிழவியிடம் சொன்னார்: ''அடுத்த மூன்று மாதங்களில் உங்கள் கணவர் இறந்து போவார். இதிலிருந்து தப்புவதற்கான ஒரே வழி அவர் மறுமணம் செய்து கொள்ள வேண்டும். மீண்டும் அவர் மணம் செய்து கொண்டால்

அவருக்கு ஒரு மகன் பிறப்பான்.'' அவ்வளவுதான். அந்த வயதான பெண்மணி, தனக்கு வரும் பேராபத்தை உணர்ந்து தன்னுடைய சம்மதத்தை அளித்தாள். இப்பொழுது, பாருங்கள் அவர் வீட்டில் ஒன்றல்ல ஐந்து பெண்கள் உள்ளனர் (குறுக்கீடு).

**திரு. துணை சபாநாயகர்:** அமைதி, அமைதி, கடந்த அரை மணி நேரமாக நமது மதிப்பிற்குரிய உறுப்பினர் தம் பேச்சை முடிக்க வேண்டுமென்று ஆவலாயிருக்கிறார். உங்கள் குறுக்கீடுகளினால் அவர் தொடர வேண்டியிருக்கிறது.

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** நான் கடைசி விஷயமான விவாக ரத்துக்கு வருகிறேன். இந்த மசோதாவில் செய்த பெரும் தவறு பதிவுத் திருமணங்களை ரத்து செய்வதற்கு சமயச் சடங்குகளின் அடிப்படையிலான திருமணத்தை ரத்து செய்வதற்கான அதே விதிகளை வைத்து இருப்பதுதான். இதைப் பொறுத்தவரையில், பொறுக்குக் குழுவினால் அளிக்கப்பட்டுள்ள இந்த மசோதா திரு. பி.என். ராவ் குழு 1944ல் தயாரித்து அளித்த மசோதாவிலிருந்து வேறுபடுகிறது. அவர் 1945ல் அதை மறு ஆய்வு செய்து வெளியிட்டார். பதிவுத் திருமணங்களைப் பொறுத்தவரையில், மசோதா கொடுக்கும் அதே உரிமைகளை அளிக்கும் தற்போதைய சட்டத்தை வைத்துக்கொள்ளுங்கள். ஆனால் சமயச்சடங்குகள் அடிப்படையிலான திருமணங்களை பதிவுத் திருமணங்களாக மாற்றும் விதிமுறைகளை கொண்டுவராதீர்கள். புனிதச் சமயச் சடங்குகள் புனிதச் சமயச் சடங்குகளாகவே இருக்கட்டும். ஆரம்பத்தில் ஆலோசிக்கப்பட்டது போல நமது பண்டைய ஸ்மிருதி ஆசிரியர்கள் அனுமதித்தது போல விவாகரத்து விதிகள் முடிந்த அளவு மிகவும் குறுகிய எல்லைக்குள் இருக்க வேண்டும். இதைப் பொறுத்தவரையில் திரு. பி.என். ராவின் நிலை இதுதான்.

திருமண நாளிலிருந்து விவாகரத்து தினம் வரை தொடர்ந்து இருக்கும் பாலுணர்வற்ற தன்மை. இந்த நிபந்தனைக்கு யாரும் ஆட்சேபம் தெரிவிக்க மாட்டார்கள்.

பிறகு, அந்த நபர் முட்டாளாக இருந்து, அந்த உண்மை மறைக்கப்பட்டிருக்கலாம். இதுவும் உடல் சம்பந்தமான இரண்டாவது குறைபாடு, இதிலும் யாரும் தகராறு செய்ய முடியாது.

இந்த இரண்டு நிபந்தனைகளையும் தவிர ஒருவர் தன் மதத்தை மாற்றும்போது விவாகரத்து அளிக்கலாம். ஓர் இந்து முஸ்லீமாக

மாறி மணம் செய்து கொள்ளலாம். இந்துச் சட்டத்தின் தவறுதலான கண்ணோட்டத்தின்படி திருமணங்கள் ரத்து செய்யப்பட முடியாதவை, திருமணத்தின் புனிதத் தன்மை தொடர்வதால் மனைவி எதுவும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறாள். எந்தக் கொள்கையின் அடிப்படையில், ஒரு கணவன் மதம் மாறி அந்த மதத்தின் அடிப்படையில் திருமணம் செய்யும்போது திருமணம் ரத்து செய்யப்பட முடியாது என்று கூறுகிறீர்கள்?

**திரு. மகாவீர் தியாகி :** விவாக ரத்துத் தேவைப்படும்போது வழக்கமான சட்ட நடவடிக்கைகளுக்குட்படாமல் மக்கள் தங்கள் மதத்தை மாற்றிக் கொள்ளும் நிலை தோன்றாதா?

**டாக்டர் பக்ஷி தேக் சந்த் :** இல்லை. அவர்கள் மதம் மாற மாட்டார்கள். மேற்குறிப்பிட்ட நிபந்தனைகளுடன் மனைவி ஐந்து ஆண்டுகளோ, ஆறு ஆண்டுகளோ, ஏழு ஆண்டுகளோ ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு கைவிடப்பட்ட நிலையில் உள்ளதையும் சேர்த்துக் கொள்ளலாம். இந்த நிபந்தனைகள் ஒன்றும் புதிதல்ல. நமது பண்டைய ஸ்மிருதி ஆசிரியர்களுக்குத் தெரிந்ததுதான் இவை. இந்த நான்கு ஐந்து நேர்வுகளில் மட்டுமே விவாகரத்து என்று எல்லை வகுக்க வேண்டும். திருமணத்திற்குப் பிறகு மனைவியை கைவிட்டு ஓடிவிடும் கணவன்மார்களைப் பார்த்ததில்லையா? இந்த துரதிர்ஷ்டம் பிடித்த பெண்களுக்குத் தீர்வொன்றும் கிடையாதா? அவர்களுக்கு ஒரு தீர்வு வேண்டும். நான் மூன்று நான்கு நிபந்தனைகளுக்குள் அவை இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். ஆனால் வழக்குகளைக் கொண்டு வந்துவிடாதீர்கள். அது ஒரு கூடா ஒழுக்க வழக்கு என்றால் பொய் சாட்சிகள் தயாரிக்கப்படலாம். சில வகையான மோசடி சாட்சிகள் தயாரிக்கப்பட்டு குற்றங்கள் நிரூபிக்கப்படலாம். சமயச் சடங்குகளின் அடிப்படையிலான திருமணங்களில் இதைக் கொண்டுவர நான் விரும்பவில்லை. என்னுடைய மாறுபாட்டுக் குறிப்பில் குறிப்பிட்டபடி, திருமணம் மற்றும் விவாகரத்து சம்பந்தமான அதிகாரம் மாற்றி எழுதப்படவேண்டும் என்று தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்கிறேன். பதிவுத் திருமணம் மற்றும் சமயச் சடங்குகளின் அடிப்படையிலான திருமணங்கள் என இரண்டு விதமான இந்துத் திருமணங்கள் உள்ளன. ஒன்றில் அது எப்படிக் கலைக்கப்படும் என்ற நிபந்தனைகள் உங்களுக்குத் தெரியும். மற்றொன்றில், உங்களுடைய புதிய நவீன ஆலோசனைகளை வைத்துக் கொள்ளலாம். அதை ஆழ்ந்து பரிசீலித்து இந்த நடவடிக்கை பெண்களின் நிலையில் முன்னேற்றம் ஏற்படுத்துமா என்று நோக்கும்படி இந்த

மசோதாவின் ஆதரவாளர்களைக் கேட்டுக் கொள்கிறேன். என்னுடைய ஆலோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டால், இந்த மசோதா மேலும் சிறந்ததாகிவிடும். பெண்கள் தங்கள் பெண்மையில் உயர்ந்த நிலையை அடைவர். அவர்களுக்குச் சொத்தில் முழு உரிமை இருக்கும். பொருளாதாரத் தடைகளிலிருந்தும் அவர்களுக்கு விடுதலை கிடைக்கும். புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி வயதுவந்தோர் வாக்குரிமை அளிக்கப்படுகிறது. நிர்வாகத்தின் பல்வேறு துறைகளைப் பெண் அமைச்சர்கள் நிர்வகித்து வருகிறார்கள். நம் இல்லத்தரசிகளாக விளங்கும் பெண்களின் உரிமைகளுக்கு எல்லைக் கோடு போடமுடியாது. பராமரிப்பு மட்டுமே அவளுக்குரிய உரிமை; மற்ற உரிமைகள் அவளுக்கு இல்லை என்று கூற முடியாது. அது பெரும் அநீதியாகும். அது நமது பண்டைய சட்டங்களுக்கு முரணானதாகும். இடையில் அறிமுகப்படுத்தப்பட்டவைகள் அந்தக் குறிப்பிட்ட சூழ்நிலைகளுக்கு, அந்நாட்களின் நிலைமைகளுக்குப் பொருத்தமாக இருந்திருக்கலாம். அவையெல்லாம் வழக்கற்றுப் போய்விட்டன. இந்து மதத்தின் பகுதியல்ல அவை. அவைகளையப்படவேண்டும். இந்தக் காட்டுப் புதர்களை ஒழித்துவிட்டு வேதகால சிந்தனைகளுக்குச் செல்ல வேண்டும். இதுதான் சுருக்கமாக நான் கூற விரும்புவதெல்லாம். ஒவ்வொருவரையும் இதை ஆழ்ந்து பரிசீலிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

***மாண்புமிகு திரு. கே. சந்தானம்*** (போக்குவரத்து மற்றும் ரயில்வே துறைகளுக்கான ராஜாங்க அமைச்சர்): விளக்கத்துக்காக ஒரு கேள்வி கேட்கலாமா? கணவனின் குடும்பத்தில் ஒரு பெண் பங்குரிமையாளரானால் அவள் பங்கு கணவனின் பங்கின் பகுதியாக இருக்குமா அல்லது தனியாக இருக்குமா?

***டாக்டர் பக்ஷி தேக் சந்த் :*** அவர்கள் கூட்டாக இருக்கும் வரையில் அது குடும்பத்தின் கூட்டுடைமையாகத்தான் இருக்கும். அதாவது நீங்களும் உங்கள் மகன்களும் சொத்தில் பங்குரிமையாளர்களாக இருப்பதுபோல. ஆனால் பாகம் ஏற்படுகிற நிலையில் அவள் பங்கு தனியாகிறது. ஒரு மகனைப்போல் அது ஒரு புதிய சேர்க்கை. எந்தக் குழப்பமும் இல்லை.

***மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :*** ஐயா, இப்பொழுது கேள்வி கேட்கலாமா?

***மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :*** இல்லை, இல்லை.

**மௌலானா ஹஸரத் மோகனி** (உ.பி. முஸ்லீம்) : நான் ஐந்து நிமிடங்களே எடுத்துக் கொள்வேன்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** எழுகின்றனர்.

**திரு. துணை சபாநாயகர் :** அமைதி அமைதி. உறுப்பினர்கள் யாவரும் தயவு செய்து இருக்கையில் அமர்வீர்களா? பேசுவதற்கு அதிக எண்ணிக்கையிலான உறுப்பினர்களுக்கு ஆர்வம் இருப்பதைக் காண்கிறேன். ஆனால் நான் நேற்றுக் கூறியபடி இந்த வேகத்தில் சென்றால், நாம் ஒரு மாதம் அல்லது இரண்டு மாதங்கள் விவாதித் தால்கூட நேரம் இருக்காது. உறுப்பினர்கள் தங்கள் பேச்சை ஓர் அளவோடு நிறுத்திக்கொள்ள மறுக்கிறார்கள். இந்துச் சட்டத் தொகுப்பு இந்துக்களுக்கான சட்டம் மட்டுமல்ல. இந்து திருமணச் சட்டம் ஜைனர்களுக்கும், சீக்கியர்களுக்கும் பொருந்தக் கூடியது. அது முஸ்லீம்கள், கிருஸ்தவர்கள் மற்றும் பார்சிகளுக்குப் பொருந்துவ தில்லை. (குறுக்கீடு).

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** அதிலுள்ள சில விதிகள் மற்றவர்களையும் பாதிக்கிறது.

**திரு. துணை சபாநாயகர் :** சபாநாயகர் பேசிக் கொண்டிருக் கையில் எந்த உறுப்பினரும் எழுந்திருகக்கக் கூடாது என்பதை மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் நன்கு அறிவர். நான் அதை உங்களுக்கு நினைவு படுத்த வேண்டியது அவசியமில்லை. எனவே ஜெயின் சமூகத்தைச் சேர்ந்த ஒருவரையும், சீக்கிய சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவரையும் பிறகு மற்றவர்களையும் பேச அழைக்கத் தீர்மானித்துள்ளேன். பேரா சிரியர் கே.டி. ஷா.

**திரு. எச்.ஜே. காண்டேகர்** (ம.மா. மற்றும் பேரார் : பொது) : ஏன் ஹரிஜனங்களை அழைக்கக்கூடாதா?

**மௌலானா ஹஜரத் மோகினி :** எழுகிறார்.

**திரு. துணை சபாநாயகர் :** இந்த மதிப்பிற்குரிய உறுப்பினரை நான் அழைக்கப்போவதில்லை. இப்பொழுது நான் மற்றவர்களிட மிருந்து ஆரம்பிக்கிறேன்.

**மாண்புமிகு திரு. சத்யநாராயண சின்கா** (நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்கான ராஜாங்க அமைச்சர்) : நான் ஒரு யோசனைக்

கூற விரும்புகிறேன். அவை ஒத்துக் கொள்ளுமானால் இன்று இரவு 7 மணி வரையிலும் அதற்கு மேலும் கூட நாம் அமரலாம். உறுப் பினர்கள் இதை ஏற்றுக் கொள்ளாவிட்டால், இன்னும் பலர் பேச விருப்பம் தெரிவித்திருப்பதால், நாம் சனிக்கிழமையும் அமரலாம். இந்த அலுவலுக்காக அரை நாள் ஒதுக்க அரச தயாராக உள்ளது. சனிக்கிழமை கேள்வி நேரம் இருக்கப்போவதில்லை. மதிய உண விற்கு முன்பு நமக்கு இரண்டரை மணி நேரத்திற்கும் அதிகம் கிடைக்கும். அது உங்கள் நோக்கத்திற்கு ஒத்துவருவதுடன் இந்த அவை ஏற்றுக் கொள்ளுமானால் அது எல்லாத் தடங்கல்களையும் தவிர்க்க உதவும்.

**திரு. துணை சபாநாயகர் :** அது ஒரு நியாயமான யோசனை என்றுதான் நினைக்கிறேன். சனிக்கிழமை அவை கூடுகிறது என்று நான் ஏற்கெனவே கூறிவிட்டேன். அதிலிருந்து நாம் பின்வாங்கப் போவதில்லை. உடனடியாகக் கவனிக்க வேண்டிய பொது அலுவல் கள் காரணமாக சனிக்கிழமை நாம் கூட வேண்டிய அவசியம் ஏற் பட்டால் அதனால் உலகம் அழிந்துவிடாது. குழுக் கூட்டங்களுக்காக நாம் சனிக்கிழமைக் கூடுகிறோம். அன்றைய தினம் பொறுக்குக் குழு கூட்டங்களை ரத்து செய்யும்படி அரசை நான் கேட்டுள்ளேன். பொறுக்குக் குழு கூட்டங்கள் சனிக்கிழமையில் கூட ஏற்பாடு செய் யாமல் பார்த்துக் கொள்கிறேன். இந்துச் சட்டத் தொகுப்புப் பற்றிய விவாதத்தில் அவர்கள் பங்கு கொள்வதற்காக மற்ற எல்லா நாடாளு மன்ற பணிகளிலிருந்தும் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் விடுவிக்கப் படுவார்கள்.

வேறு பிற அலவல்களுக்காக சனிக்கிழமையை ஒதுக்க எண்ணி யிருந்தும் இந்து சட்டத் தொகுப்பை விவாதிப்பதற்காக அதை ஒதுக்கத் தயாராக இருப்பதாக அரசின் சார்பாக நாடாளுமன்ற நடவடிக்கை களுக்கான மாண்புமிகு அமைச்சர் ஆலோசனை கூறியுள்ளார். அதிக உறுப்பினர்கள் பேச வேண்டும் என்று ஆர்வத்துடன் இருப்பதால் சனிக்கிழமையை ஒதுக்க அவர்கள் தயாராக உள்ளனர். முற்பகல் அதிகாரபூர்வமற்ற உறுப்பினருக்காகவும் பிற்பகல் சட்ட அமைச் சரின் பதிலுக்காகவும் ஒதுக்கப்பட்டுள்ளது. அது தவிர அவையின் ஒப்புதலுக்கு அவர் மேலும் ஓர் ஆலோசனையை முன்வைத்துள்ளார். அதை ஏற்றுக் கொள்வதோ அல்லது நிராகரிப்பதோ அவர்கள் கையில்தான் உள்ளது. பல உறுப்பினர்கள் பேசுவதற்கு ஆர்வத் துடன் இருப்பதால் நாம் இன்று 7 மணிவரை அமரலாம். இன்று ஐந்து மணிக்கு அதை முடிவு செய்வோம். அப்பொழுது இந்த அவை

களைத்துவிட்டதா அல்லது சுறுசுறுப்புடன் விவாதத்தைத் தொடர லாமா என்பதைக் காண்போம். தனிப்பட்ட முறையில், தலைவரும் குழுவில் உள்ள நண்பர்களும் நானும் 7 மணிவரை அமருவதற்குத் தயாராக உள்ளோம். இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் நான் முற்றிலும் அவையின் விருப்பத்திற்குக் கட்டுப் பட்டுள்ளேன்.

**மாண்புமிகு திரு. சத்யநாராயண சின்கா :** ஐயா, இந்த சட்டத் தொகுப்பைக் குறித்த விவாதத்திற்காக சனிக்கிழமை அரைநாள் ஒதுக்க அரசு தயாராக உள்ளதாக, அதன் சார்பாக நான் கூறினேன். இதற்காக முழு நாளும் ஒதுக்கப்படும் என்று ஏற்கெனவே நீங்கள் கூறிவிட்டீர்கள். அரசு அதை ஏற்றுக்கொள்ளும்.

**திரு. துணை சபாநாயகர் :** நான் கூறிய ஆலோசனையை அரசு ஏற்கும் என்று நம்புகிறேன்.

**பண்டிட் கோவிந்த மாளவியா (உ.பி. பொது) :** உங்களுடைய முடிவைப் பொறுத்தவரையில் நான் இதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சனிக்கிழமை அலுவல் அற்ற நாளாக இருக்கும் என்ற எண்ணத்தில் வேறு இடங்களில் சில முக்கிய தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகளுக்கு ஒத்துக் கொண்டுள்ளோம். என்னைப் பற்றிக் கூறுவேனாகில், அன்றைய தினம் எனக்கும் சில முக்கியமான தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகள் உள்ளன. எனவே இந்த விஷயங் களையும், நீங்கள் கவனத்தில் எடுத்துக் கொள்வீர்கள் என்று நம்பு கிறேன். சனிக்கிழமை அலுவல் தினமாக இருக்கும் என்பது தெரிந் திருந்தால் நாங்கள் அவற்றை ஏற்றுக் கொண்டிருக்க மாட்டோம். இப்பொழுது எங்கள் நிகழ்ச்சிகள் அனைத்திலும் குழப்பம் ஏற்படும். எனவே இந்த முக்கியமான நடவடிக்கையை விவாதிப்பதற்காக சனிக்கிழமைக்குப் பதிலாக வேறு ஒரு நாளை முடிவு செய்யலாம். இதை எளிதாக அரசே முடிவு செய்யலாம். சனிக்கிழமையன்று அரசு அலுவல்களை எடுத்துக் கொள்ளலாம். இந்த நடவடிக்கையை விவாதிப்பதற்காக வேறு ஒரு நாளை முடிவு செய்யலாம். எங்க ளுக்கு அதில் எந்த ஆட்சேபமும் இல்லை. இந்த விவாதத்தில் பங்கு கொள்ள விரும்பும் மற்றவர்கள், அந்த நாளில் வர முடியா விட்டால் அவர்களுக்கும் ஏதாவது வகைசெய்யப்பட வேண்டும் என்பதை அவை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு திரு. சத்யநாராயண சின்கா :** மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் திங்கள் அன்று கூடலாமென நினைத்தால் அரசுக்கு

எந்த ஆட்சேபமும் இருக்காது என நினைக்கிறேன். சனிக்கிழமை நாம் வேறு அரசு அலுவல்களைக் கவனிக்கலாம்.

**திரு. அஜித் பிரசாத் ஜெயின் (உ.பி. பொது) :** நாளையும் தொடர்ந்து இந்த மசோதாவின் விவாதத்தை முடிக்கக்கூடாதா?

**மாண்புமிகு திரு. சத்தியநாராயண சின்கா :** அரசு அலுவல் களைக் கவனிப்பதற்காக சனிக்கிழமை நாம் கூடுகிறோம். இந்த மசோதா சம்பந்தமான விவாதத்தை திங்கள் கிழமைக்குத் தள்ளி வைக்க அரசு தயாராக உள்ளது. ஆனால் எவ்வாறிருப்பினும், சனிக் கிழமை அலுவல் தினமாகத்தான் இருக்கும்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம் :** சனிக்கிழமையை விட திங்கள் கிழமை குறைந்த நேரந்தான் இருக்கும். ஆனால் திங்கள் கிழமையில் விவாதத்தை முடித்துக் கொள்ளத் தயாரென்றால் ஆட் சேபனை ஏதும் இல்லை. ஆனால் இந்த ஒத்திவைப்பு இழுத்தடிக்கும் தந்திரமானால்....

**திரு. துணை சபாநாயகர் :** நமது நண்பர்கள் ஒத்துழைக்காம லிருப்பதைக் கண்டு நான் உண்மையிலேயே வருந்துகிறேன். பண்டிட் கோவிந்த மாளவியா மற்றும் வேறு சில மதிப்பிற்குரிய உறுப்பினர் களிடமிருந்து ஓர் ஆலோசனை வந்துள்ளது. அவர் ஒரு முக்கியமான உறுப்பினர் என்பதுடன் மசோதாவின் இந்தப் பக்கத்திலோ அல்லது அந்தப் பக்கத்திலோ அவர்கள் ஆர்வமாக செயல்படுகிறார். சனிக்கிழமை தவிர வேறு எந்த நாளிலும் விவாதத்தை எடுத்துக் கொள்ள அவர்கள் விரும்புகிறார்கள். அவர்கள் விருப்பத்தைக் கணக்கிலெடுத்துக் கொண்டு திங்கள் கிழமை அதை எடுத்துக் கொள்ளத் தயாராக உள்ளது. அரசின் பிரதிநிதி அவ்வாறுதான் தெரி வித்துள்ளார். திங்கள் கிழமை கேள்வி நேரம் இருக்கும் என்பது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்குத் தெரிந்திருக்கும். இது நன்கு தெரிந்திருந்தும் இந்த நாளை அவர்கள் ஒத்துக் கொண்டுள்ளனர்.

**திரு. ரோகிணி குமார் சௌதுரி :** ஐயா, சில காரணங்களுக் காக சனிக்கிழமை எங்களுக்கு விடுமுறை அளிக்கப்பட்டுள்ளதை மிகவும் வணக்கத்துடன் உங்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்பு கிறேன். ஏதாவது முக்கியமான காரணம் இருக்குமானால், அந்த விடுமுறையை இழக்கவும் தயாராக உள்ளேன். இப்பொழுது எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் இந்த

மசோதாவை அரசு முடிவு செய்யத் தயாராக உள்ளதா, அதில் அதற்கு நம்பிக்கை உள்ளதா? இந்த மசோதாவுக்கு ஏன் இந்த அவசரம்? அதிக முக்கியத்துவம் வாய்ந்த வேறு மசோதாக்கள் உள்ளன. உங்கள் கருத்துப்படி இந்தக் கூட்டத் தொடரிலேயே நிறைவேற்றப்பட வேண்டிய காப்பீட்டு மசோதா உள்ளது. இந்த மசோதா....

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது இருக்கையில் அமரட்டும். இந்த மசோதாவை முடிவு செய்ய எவ்வித அவசரமும் இல்லை என்று பல மதிப்பிற்குரிய உறுப்பினர்களிடமிருந்து எதிர்ப்புக் குரலைக் கேட்கிறேன். இந்த விஷயத்தைப் பொறுத்த வரையில் இந்த அவையில் கருத்தொற்றுமை இல்லை என அஞ்சுகிறேன். கருத்தொற்றுமை இருந்தால் இது போன்று நேரத்திற்காக நாம் விவாதித்துக் கொண்டிருக்க மாட்டோம். இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் கருத்து வேறுபாடுகள் உள்ளன என்பது நன்கு தெரிந்ததே. மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் தெரிவித்த யோசனையின் அடிப்படையில் இந்த அவையின் கருத்தை எடுத்துக் கொள்ள விரும்பவில்லை.

சனிக்கிழமை, இந்து சட்டத் தொகுப்பைத் தவிர பிற அலுவல்களை கவனிக்கும் அதிகாரபூர்வ அலுவல் தினமாக இருக்கும் என்பது இப்பொழுது தெளிவாகிவிட்டது. மதியம் வரை அதிகாரபூர்வமற்ற உறுப்பினர்களைப் பேச அழைப்பதாக உள்ளேன். பிற்பகலில் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரை பதிலளிக்க அழைப்பதாகத் தீர்மானித்துள்ளேன்.

**திரு. மகாவீர் தியாகி :** எங்களில் பலர் உங்கள் கவனத்தை ஈர்க்க வேண்டுமென்று காத்திருக்கின்றனர். இந்துச் சட்டத் தொகுப்பைக் குறித்து இந்துக்கள் யாரையும் இனி பேச அனுமதிக்கப் போவதில்லை என்பதே உங்கள் முடிவு என்று எடுத்துக் கொள்ளலாமா?

**திரு. துணை சபாநாயகர்:** நான் அப்படிக் கூறவில்லை. அப்படிக் கூறவும் மாட்டேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் மிகவும் கவனத்துடன் இருந்தாலும், துரதிர்ஷ்டவசமாக என்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார். நான் கூறியதெல்லாம், இந்த மசோதா சீக்கியர்களையும், ஜைனர்களையும் அதே அளவிற்கு கட்டுப்படுத்தும் என்றாலும் ஜைனர் அல்லது சீக்கிய உறுப்பினர் ஒருவர் கூடப் பேசவில்லை.

**திரு. எச்.ஜே. கண்டேகர் :** ஹரிஜனங்களைப் பற்றிய நிலை என்ன?

**திரு. துணை சபாநாயகர் :** மசோதாவை முன்மொழிந்தவரே ஹரிஜனங்களில் தலைவர். ஹரிஜனங்கள் இந்து சமூகத்தைச் சேர்ந்த வர்கள் இல்லை என்று கூறுவது சரியல்ல மற்றவர்களின் அளவுக்கு ஹரிஜனங்களும் இந்துக்களே என்று நான் நினைக்கிறேன். இந்த ஜாதி உணர்வை மேலும் தொடர வேண்டியதில்லை.

நான் கூறியதெல்லாம் மற்ற உறுப்பினர்களைவிட ஜைனர் மற்றும் சீக்கிய உறுப்பினர்களுக்கே அதிக முன்னுரிமை கொடுக்க வேண்டும் என்பதுதான். வேறு யாருக்கும் வாய்ப்பளிக்கக் கூடாது என்பதல்ல என் எண்ணம்.

மாலை 4 மணி

இப்பொழுதுள்ள நிலையில், அரசின் ஆலோசனை மிகவும் நியாயமானதாகத் தெரிகிறது. இந்த மசோதா வின் விவாதத்தில் அரசு அதிக நாட்கள் செலவழித் துள்ளது மேலும் ஒரு நாள் ஒதுக்கியுள்ளது. திங்களன்று மேலும் தொடரவேண்டுமென்று அவையின் பொதுவான விருப்பமாக இருந்தால் நான் முற்றிலும் அவையின் கருத்துப்படியே செயல் படுவேன். தலைவரைப் பொறுத்தவரையில் போதுமான அளவு விவாதங்கள் நடைபெற்றுவிட்டன என்ற திருப்திதான்.

**திரு. மகாவீர் தியாகி :** இதை நான் கண்டிக்கிறேன். தலை வரின் கருணைக் கண்கள், வர்க்கம், ஜாதி, சமயக் கோட்பாடு களுக்கிடையே வேற்றுமை காணக்கூடாது. பெரும்பான்மை அல்லது சிறுபான்மை என்று வேறுபாடின்றி உங்கள் பார்வை அவையைச் சுற்றி வரவேண்டும்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் என்னை முற்றிலும் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறார். சில சமூகங்களைப் பாதிக்கும் மசோதா ஒன்று விவாதத்துக்கு வரும்பொழுதெல்லாம் எல்லாச் சமூகங்களின் பிரதிநிதிகளுக்கும் தங்கள் கருத்துகளை வெளிப்படுத்த ஒரு வாய்ப்பு அளிக்கவேண்டும். நமது மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்த மசோதாவைப் படித்துப் பார்த்தால் இந்த மசோதா வின் நோக்கம் ஜைனர்கள் மற்றும் சீக்கியர்களையும் உள்ளடக்கி யுள்ளது. இந்துக்களில் பலர் ஏற்கெனவே பேசிவிட்டனர். எனவே நான் இப்பொழுது சில ஜைனர்களையும் சீக்கியர்களையும் பேச

அனுமதிக்க வேண்டும். நாம் மசோதாவின் ஒவ்வொரு கூறாக விவாதிக்கும் முன் அவர்களுடைய கருத்துகளை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

**திரு. மகாவீர் தியாகி :** நான் கண்டிக்கிறேன்.

**திரு. துணை சபாநாயகர் :** இதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது. இந்த மாதிரிப் பேசுவது கண்ணியமற்றது என்பதைத் தயவு செய்து உறுப்பினர் கவனத்தில் கொள்ள வேண்டும்.

***பேராசிரியர் கே.டி. ஷா** (பீகார் பொது) **:** ஐயா, ஆரம்பத்தில் இந்த மசோதா அறிமுகப்படுத்தப்பட்டபோது இந்தத் தீர்மானம் அவை முன் வந்தபோது விவாதத்தில் பங்கெடுக்க எனக்குப் பெரும் ஆவல் இருக்கவில்லை. ஆனால் இப்பொழுது விவாதம் இந்த அளவுக்கு வந்திருக்கையில் இந்த அவைமுன் பல்வேறு கருத்துகள் வைக்கப்பட்டிருப்பதால், கட்சியின் மேலிடக் கட்டளையின்படி வாக்களிப்புக்குச் சுதந்திரம் அளித்திருப்பதால் இந்தத் தீர்மானம் மற்றும் மசோதாவைக் குறித்து சில கருத்துகளைத் தெரிவிக்க வேண்டியது அவசியம் என்று உணர்கிறேன். அவை மாண்புமிகு சட்ட அமைச்சர் மற்றும் அவரது சகாக்களாலும் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படும் என்று நம்புகிறேன்.

ஐயா, இந்த விஷயத்தில் பேசுவதற்கு ஜைனர் என்ற முறையில் என்னை அழைத்ததாக நீங்கள் மகிழ்ச்சியுடன் கூறினீர்கள். இந்த அவையின் உறுப்பினர் என்ற நிலையில்தான் இங்கு நான் நிற்கிறேன். எந்தச் சமூகத்தின் சார்பாகவும் பேச உரிமையோ, தனிச் சலுகையோ நான் கோரமுடியாது. என்னை நான் ஓர் இந்தியக் குடிமகன் என்றுதான் அழைத்துக் கொள்கிறேன். இந்த மாதிரி விவாதங்களில் பங்கு கொள்வதற்கு எந்தக் குறிப்பிட்ட சமயக் கோட்பாடுகளிலாவது நம்பிக்கை வைத்திருக்கவேண்டுமென்று நான் கருதவில்லை. இந்த அவையின் உறுப்பினர் என்ற முறையில் பேசுகிறேன்.

**ஸ்ரீ ரோகிணி குமார் சௌத்திரி:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை. ஐயா, நீங்கள் பேராசிரியர் ஷாவை ஜைனர்கள் சார்பாகப் பேச அழைத்தீர்கள். ஆனால் அவர் ஜைனர்களை பிரதிநிதித்துவப்படுத்துவதாக உரிமை கொண்டாடவில்லை என்கிறார்.

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 602-607.

**திரு. துணை சபாநாயகர் :** அது ஓர் ஒழுங்குப் பிரச்சினை அல்ல.

**பேராசிரியர் கே.டி. ஷா :** இன்னும் அங்கீகரிக்கப்படாத ஓர் எதிர்ப்பு அணியை உருவாக்க நான் முயற்சி செய்திருந்தாலும், இந்த மசோதாவின் அடிப்படையான சட்டவிதிகளை நான் பொதுவாக ஆதரிக்கப் போகிறேன் என்பதை அதே நேரத்தில் எடுத்துக் கூற வேண்டும். எதிரணியில் இருப்பதாக வெளிப்படையாகத் தெரிவித்துக் கொள்ளும் உறுப்பினர் ஒருவரிடமிருந்து, அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதிகள் ஒவ்வொன்றையும் நிரந்தரமாக எதிர்த்து வந்துள்ளவரிடமிருந்து மற்றும் இந்த அரசு கொண்டுவர முயற்சி செய்த ஒவ்வொரு சீர்திருத்த மற்றும் சமுதாயக் கட்டுக்கோப்பு மாற்றம் சம்பந்தமான சட்டங்களை எதிர்த்துவந்துள்ள ஒருவரிடமிருந்து இது வந்துள்ளது. மசோதாவுக்கு நான் அளிக்கும் இந்த நிபந்தனையற்ற முழுமையான ஆதரவு அதற்குரிய மரியாதையுடன் ஏற்றுக் கொள்ளப் படும் என்று நம்புகிறேன். சாத்தான் கூட வேதம் ஓதும் என்ற பழமொழியின்படி என்னிடமிருந்து வரும் எந்த ஆதரவும் சந்தேகக் கண்ணுடந்தான் பார்க்க வேண்டும் என்று அரசு கருதாமலிருந்தால், என் ஆதரவு வரவேற்கப்படும். ஆனால் அதுதான் அவர்கள் கருத்து என்றால், இந்த மசோதாவுக்கு என்னைவிட வலுவான எதிர்ப்பை யாரும் அளிக்க முடியாது.

ஐயா, இவ்வகைக் கருத்துகளைக் கொண்டிருக்கும் நான், என் ஒத்துழைப்பை அளிப்பதுடன், நகைச் சுவையற்ற மக்கள் நாம் என்ற குற்றச்சாட்டுக்கு இலக்காகும் அபாயம் இருந்தாலும்கூட, விவாதத்தின் முக்கியத்துவத்தைக் குறைக்கும் வகையிலோ, அலட்சியப் போக்கான தன்மையுடனோ, உதாரணங்களை அள்ளிவீசி நான் பேசப் போவதில்லை என்பதை இந்த அவைக்கு மிக்க மரியாதை யுடனும், பணிவன்புடனும் தெரிவித்துக் கொள்கிறேன். நம் நாடு தொடர்ந்து அழியாது நிலைத்து நிற்பதற்கே இந்த விஷயம் மிக முக்கியமானதென்று கருதுகிறேன். இந்த மசோதா மிக முக்கியமான விளைவுகளை ஏற்படுத்தும் என்று கருதுகிறேன். இவ்விஷயத்தில் நாம் போதுமான அக்கறையுடன் நடந்து கொள்ளவில்லையென்று வெளியார்கள், பார்வையாளர்கள், இவ்விஷயத்தில் மாணவராக இருப்பவர்கள் நினைக்கும்படி என் பேச்சில் எவ்வித உதாரணங் களையோ, சொற்றொடர்களையோ நான் அனுமதிக்கப் போவ தில்லை.

இக்கருத்துகளைத் தெரிவித்த பிறகு, எழுப்பப்பட்ட சில ஆட்சேபனைகளையும், இந்த மசோதாவின் அடிப்படைக் கோட்பாடு மற்றும் மசோதாவின் பொருள் சம்பந்தமாக வலியுறுத்தப்பட்ட வாதங்களையும் பரிசீலிக்கத் தொடங்குவோம். இத்தகைய விஷயங்களைக் கையாள இந்த அவைக்குத் தகுதி உள்ளதா, இந்த மசோதாவில் அடங்கியுள்ள விஷயங்களைத் தீர்மானிக்கும் தகுதியுடன் இந்த அரசு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதா, இந்தப் பிரேரணையைத் தீர்மானிக்க இந்த அரசுக்கு அனுமதியளிக்கும் அளவுக்கு அவ்வளவு அவசரமானதா இந்தப் பிரச்சினை என்ற சவால்கள் எழுந்துள்ளன. இத்தகைய விஷயங்களைத் தீர்மானிக்க அவைக்குத் தகுதியுள்ளதா என்ற கேள்வி இருக்க முடியாது அல்லது இருக்கக்கூடாது என்று நினைப்பவன் நான். அரசியல் அமைப்புச் சட்டம் உட்பட சமுதாயக் கட்டுக்கோப்பில் மாற்றம் கொண்டு வரும் பல சட்ட நடவடிக்கைகள் இந்த அவையில் முன்மொழியப்பட்டு, நிறைவேற்றப்பட்ட பல உதாரணங்களை எனக்கு முன் பேசிய மதிப்பிற்குரிய உறுப்பினர் எடுத்துரைத்தார். இதைவிட மிக முக்கியமான சீர்திருத்தங்களைக் கூட, இந்தச் சட்டமன்றத்துக்கு முந்தைய சட்டமன்றம், இந்த அளவிற்கு இறையாண்மை பெற்றிராவிடினும், நிறைவேற்றியுள்ளது. எனவே இத்தகைய விஷயங்களைத் தீர்மானம் செய்வதற்கான தகுதி பற்றிய கேள்வி சம்பந்தமற்றதும், தகுதியற்றதும் ஆகும் என்று எனக்குத் தோன்றுகிறது. இவ்வாறு கூறுவது இந்தச் சட்டமன்றத்துக்கு மிகவும் மரியாதைக் குறைவு என்றுகூடக் கூறுவேன். தனிப்பட்ட முறையில் இந்தப் பிரச்சினை வாக்காளர்கள் முன் வைக்கப்படவில்லை என்பது உண்மைதான். இந்த அவைக்கு நாம் எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டோம் என்பதை நினைத்துப் பார்த்தால், சுதந்திரம் பெறுவது, அரசியல் சாசனம் ஒன்றை உருவாக்குவது என்பதைத் தவிர வேறு எந்தக் குறிப்பிட்ட பிரச்சினையின் அடிப்படையிலும் இந்த அவை தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதை உணர்வீர்கள். இந்த வாதத்தை மேலும் விரிவுபடுத்தினால், இந்த அவை நிறைவேற்றியுள்ள பல சட்டங்கள் சட்ட விரோதமானவையாகவோ, அல்லது செல்லுபடியாகாதவையாகவோ ஆகிவிடும். எனவே, இந்த மாதிரியான விஷயங்களை பரிசீலித்து முடிவு செய்ய இந்த அவையின் செயல்பாட்டின் தவறின்மையையும் அதற்குள்ள அதிகாரத்தையும் தகுதியையும் குறித்து சந்தேகம் எதையாவது எழுப்புவதற்காக இத்தகைய கருத்துகள் எதையாவது முன்வைப்பதை நான் விரும்பவில்லை.

மாலை நேரம் 4 மணி

ஐயா, பொதுத் தேர்தல்களிலும் கூட, ஒவ்வொரு பிரச்சினை யையும் தனித்தனியாக அலசி ஆராய்வது நடக்கக்கூடிய காரியமல்ல. பலதரப்பட்ட பிரச்சினை களின் அடிப்படையில், தேர்தலில் எப்பொழுதுமே போட்டிகள் நடைபெறுவது, பொதுத் தேர்தல்களில் அனுபவமுள்ளவர்களுக்குத் தெரிந்திருக்கும். எனவே நாம் இப்பொழுது விவாதித்துக் கொண் டிருக்கும் பிரச்சினை போன்ற சிக்கலான பிரச்சினைக்குப் பெரும் பான்மை உள்ளதா என்பதைத் தேர்தல்களில் தெளிவாகச் சுட்டிக் காட்டப்படுவதில்லை. கருத்துக் கணிப்பு போன்ற முறைகளுக்கு அரசியல் அமைப்புச் சட்டம் வழிவகுக்கவில்லையென்றால் திரு. கோகுல்பாய் பட் கூறியது போன்று அரசியல் அமைப்புச் சட்ட வழிமுறை இல்லையென்றால் இத்தகைய பிரச்சினகளில் மக்களின் தெளிவான முடிவுகளைத் தெரிந்துகொள்வது முற்றிலும் சாத்திய மில்லை என்று கூறாவிடினும் அது மிகக் கடினமான விஷயம் என்று கூறலாம். பொதுமக்கள் கருத்துகளைப் புரிந்து கொள்வதில் எந்தவித சரியான வழிமுறை எதுவும் இல்லை. அப்படியிருப்பினும், இந் நாட்டில் பொதுக்கல்வியின் நிலைமை, சில தனிப்பட்டவர்களின் கட்டுப்பாட்டில் பத்திரிகைகள் இருக்கும் நிலை, மேலும் இம்மாதிரி விஷயங்களில் வாக்காளர்களுக்குள்ள அனுபவமின்மை ஆகிய காரணங்களினால் மக்களின் தீர்ப்பு தகுதியானதாக இருப்பினும் சரியானதாக இருக்குமா என்று பலர் கேட்கக்கூடும். இம்மாதிரி யான விவாதம் அவையின் முடிவைப் பாதிக்கக்கூடாது என்று கூறுகிறேன். மசோதாவை விவாதிப்பதில் மட்டும் நம்மைக் கட்டுப் படுத்திக் கொள்ளவேண்டும். எல்லாத் தரப்புகளும் இவ்வாறே நடந்து கொள்வதில் நான் மகிழ்ச்சியடைகிறேன்.

இம்மசோதாவை எதிர்ப்பவர்களின் கருத்துகளுக்குத் தனிப் பட்ட முறையில் பெருமதிப்பு வைத்துள்ளேன். எனவே, இது சுயநலக் கும்பலின் எதிர்ப்பென்றோ, குறுகிய நோக்கத்துடனோ அல்லது ஆதாய நோக்கத்தில் உருவானவை என்றோ நான் கூறத் தயாரில்லை. ஐயா, பல நேர்வுகளில் அவர்கள் கொண்டுள்ள கருத்துகளுக்கு மிக முக்கியமான அடிப்படைக் காரணங்கள் உள்ளன என்பதை உணர்ந் துள்ளேன். துரதிர்ஷ்டவசமாக, அவர்களிடமிருந்து மாறுபட்ட கருத்தை நான் கொண்டிருந்தாலும், அந்தக் காரணத்திற்காக அவர் களுடைய கருத்துகள் நமது ஆழமான பரிசீலனைக்குத் தகுதி யற்றவை என்று கூறமாட்டேன். இந்த நிலையிலிருந்து கொண்டு, இந்த விஷயத்தை வேகவேகமாக முடிக்க வேண்டிய அவசியத்தைக் குறித்துக் கேள்வி எழுப்பியவர்களின் வாதங்களில் மிகப் பெரும்

வலிமை இருப்பதாக உணர்கிறேன். விவாதம் ஒத்தி போடப் பட்டாலும் இந்த விவாதத்திற்குக் கொடுக்கப்படுவதாக உள்ள நேரத்தைவிட மிக அதிக நேரம் ஒதுக்கப்படவேண்டும். இதைக் கூறுவதன் மூலம் என்னைத் தவறாகப் புரிந்துகொள்ளக் கூடாது. இந்த விஷயத்தைக் காலவரையின்றி ஒத்திவைக்க நான் விரும்பு வதாக என்னை நீங்கள் புரிந்துகொள்ளக் கூடாது. இந்த அவையின் அதிகாரவரம்பை நான் கேள்வி கேட்க முடியாது. இந்த விஷயம் குறித்து முடிவாக ஒரு தீர்மானத்தை இந்த அவை வழங்கவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். நாம் இதனை ஏற்றுக் கொண்டாலும் கூட அடுத்துவரும் அவை இதை ஏற்றுக் கொள்வதற்கு எந்த உத்தர வாதமும் இல்லையென மதிப்பிற்குரிய உறுப்பினர்களில் ஒருவர் கூறிய கருத்தை நான் முற்றிலும் புரிந்து கொண்டாலும், ஒரு தடவை ஒரு பாதைக் காட்டப்பட்டுவிட்டால், திசைகாட்டிக் கம்பம் நடப் பட்டால், பாதை அமைக்கப்பட்டால், என்ஜினை மறுதிசைக்குத் திருப்பிச் செலுத்தி பின்னுக்கு செல்வது கடினமான விஷயமாகும். இருப்பினும் இது அறிவின் அடிப்படையிலானது என்பதைவிட நம்பிக்கையின் அடிப்படையிலான விஷயம். அறிவுபூர்வமான நம்பிக்கையின் அடிப்படையிலானது என்பதைவிட பொதுவான நம்பிக்கையின் அடிப்படையிலான விஷயமாகும். இந்த விஷயத்தில் நான் திறந்த மனதுடன் உள்ளேன். இந்த மசோதாவிலுள்ள விதிமுறை களின் நியாயத்துக்கு எதிராக வலியுறுத்தப்பட்ட முக்கியமான கருத்து களைக் கவனத்தில் எடுத்துக் கொள்கையில், இந்த மசோதாவின் விதிமுறைகளையும், பல அத்தியாயங்களையும் பல பிரிவுகளையும் எதிர்த்து வாதாடியவர்களுக்கு ஆதரவு அளிக்க முடியாது என்று உணர்கிறேன். நான் பார்த்தவரையில் பெண்களின் நிலையைக் குறித்துதான் முக்கியமான பிரச்சினை இருப்பதாகத் தெரிகிறது. இந்த விவாதத்தைக் கொஞ்சம் நகைச்சுவையுடன் நடத்த வேண்டுமென்று எனக்குச் சிறிதளவு ஆசைகூடக் கிடையாது என்பதை ஏற்கெனவே எடுத்துக் கூறினேன். எனவே இந்த விஷயம் குறித்த விவாதத்தில் முன் வைக்கப்பட்ட சில கருத்துகள், சில வாதங்கள் என்னை உணர்ச்சி யற்றவனாக ஆக்கிவிட்டன. மதம், பால், வர்க்கம், மதக் கோட்பாடு ஆகியவைகளில் எந்தப் பிரிவைச் சேர்ந்தவர்களானாலும் சம உரிமை களைக் கொண்ட குடிமக்களின் நாட்டை நாம் உருவாக்கிக் கொண் டிருக்கிறோம். அந்தக் கோட்பாட்டின் அடிப்படையில்தான் நம் நிலைப்பாடு இருக்குமேயானால் அதுவே நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின் முகப்புரையென்றால், அதுவே இந்நாட்டில் உருவாக்கப் போகும் வாழ்க்கை முறையின் வழிகாட்டும் நெறிகள் என்றால், இந்த மசோதாவின் விதிமுறைகள் அரசியல் அமைப்புச் சட்டத்தின்

முகப்புரையில் விவரிக்கப்பட்டுள்ள லட்சியங்களுக்கு முற்றிலும் ஒத்திருக்கின்றன என்று நினைக்கிறேன். எனவே இப்பொழுது நம்மால் முன்மொழியப்படும் எதுவும், இந்த விதிமுறைகளுக்கு மாறுபட்டோ அல்லது அவைகளை இழிவுபடுத்துவதாகவோ இருக்குமாயின், அவை நம்மால் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. குடும்ப உறவுகள் சம்பந்தமாகவும், வாரிசுரிமை சம்பந்தமாகவும், சொத்து சம்பந்தமாகவும், திருமணம் மற்றும் விவாகரத்து சம்பந்த மாகவும் பெண்களுக்கு சமத்துவ உரிமை அளிக்க இந்த மசோதா எடுத்துள்ள முயற்சிகள் உலகிலுள்ள நிலைமைகளுக்கு ஒத்ததாக இருப்பதுடன் நமது நாட்டில் உருவாகிக் கொண்டிருக்கும் நிலைமை களுக்கும் ஏற்றவையாக உள்ளன. யதார்த்த நிலைமைகளையும், எல்லா இடங்களிலும் நிகழ்ச்சிகள் நடைபெற்றுவரும் போக்கை யும் முற்றிலும் உணர்ந்து கொண்டதன் விளைவாக ஏற்பட்ட நிலைமைகள் இவை, கடந்த பல காலங்களாக திருமணத்தைப் புனிதமாகக் கருதிவந்தோம். மசோதாவை நான் படித்துப் பார்த்த வரையில் இன்றும்கூட திருமணத்தைப் புனிதமாகக் கருத எவரை யும் தடுப்பதற்கு அதில் எதுவும் இல்லை. புனிதத் தன்மை என்பது உங்கள் இதயத்தைப் பொறுத்த விஷயம் மட்டுந்தான். அது உங்கள் இதயத்தின் படைப்பு. அது வெளியிலிருந்து திணிக்கப்படுவதல்ல என்பதைத் தைரியமாக உங்கள்முன் வைக்கிறேன். எவ்வளவோ புனிதமான விஷயங்கள் இன்னும் புனிதமாகவே கருதப்பட்டாலும், அவற்றின் புனிதத்தன்மை மிக மோசமான முறையில், அதில் சம்பந்தப் பட்ட தரப்புகளுக்கு அவமானம் அளிக்கும் வகையில் அழிக்கப்பட்டு வருகின்றன. கணவன் மனைவி உறவுகளுக்கு ஒரு குறிப்பிட்ட பண்பினைச் சட்டம் நிர்ணயம் செய்வதால் மட்டுமே புனிதத் தன்மை கெட்டுவிடாது. எவ்வாறாயினும், ஒரு திருமணத்தைப் பதிவுத் திருமணமாகவோ, சிவில் ஒப்பந்தமாகவோ சட்டம் அங்கீகரித்துப் பகிரங்கப்படுத்துகிறது. இத்தகைய திருமணங்களின் நோக்கங்களை யும், செயல்பாடுகளையும், இயல்புகளையும் குறித்து மிகவும் உயர்ந்த லட்சிய அபிப்பிராயங்களைக் கொண்டுள்ள தம்பதிகள் இந்த லட்சியக் கொள்கைகளைத் தொடர்ந்து கடைப்பிடிக்கின் றனர். இருப்பினும் அவர்களால் மேலும் தொடர்ந்து வாழமுடியாது என்ற சூழ்நிலை உருவாகும்போது, அந்த உயர்ந்த லட்சியங்களை கைவிட வேண்டிய சூழ்நிலை உருவானால் ஏதாவது சட்டவழி முறையிலாவது நியாயமான வழியிலாவது அந்த உறவை முறித்துக் கொள்வதே சிறந்தது என்று நினைக்கிறேன். குழந்தைகளுக்கோ, சம்பந்தப்பட்ட தரப்புகளுக்கோ தொடர்ந்து துயர் அளிக்கும், பரஸ்பர வெறுப்பை வளர்க்கும் இந்த உறவைத் தொடர்வதை விட ரத்து

செய்வதே சிறந்தது. ஐயா, திருமணங்கள் மிக உன்னத லட்சியங்களின் அடிப்படைகளில் நடைபெறும்போது, எந்த உணர்வுகளில் நடைபெறவேண்டுமோ அவ்வாறு நடைபெறும்போது, விவாகரத்துக்குச் சுதந்திரம் வேண்டுமென்று ஆலோசனை கூறுவது மிக மகிழ்ச்சிகரமான செயலல்ல. ஆசாபாசம் நிறைந்த உலகில், பொருளாதார நோக்கங்களுடனும் குறைபாடுகளுடனும் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். எனவே ஒரு சட்டத்தினாலோ, துப்பாக்கி ஏந்திய கரங்களாலோ, திருமணங்கள் உருவாக்கப்பட்ட லட்சிய உணர்வுகளில் அதைத் தொடர்ந்து பராமரிப்பது எதிர்பார்க்கக் கூடியதல்ல.

திருமணங்கள் தாங்க முடியாத கொடுமைக்களமாக மாறும் போது, கணவன், மனைவி மற்றும் குழந்தைகளுக்கும் துயரத்தின் ஊற்றாக அது மாறும்போது, சட்டப்படி நியாயமான ஒளிவுமறை வற்ற முறையில் அவற்றைக் கலைப்பதற்கு அனுமதி அளிப்பது என்பது என் கருத்தின்படி உண்மையில் நிலவிலுள்ள சூழ்நிலைகளை அங்கீகரிப்பது ஆகும். மேலும் ஒரு குறிப்பிட்ட நேர்வில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகளை ஏற்றுக் கொள்வதும் ஆகும். எனவே இந்தக் கருத்தை ஒருவர் விரும்பாவிடினும், யதார்த்த நிலைமைகளை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். உண்மை நிலைமைகளை எதிர்கொள்வதுடன், தரப்பினர்களுக்குத் (கணவன் மனைவிக்கு) தொடர்ந்து துன்பமளிக்கும் இத்திருமணங்களை ரத்து செய்வதே மிகச் சிறந்தது என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மணவாழ்க்கை முறை தொடர்ந்து வழக்கத்தில் இருக்கையில் இத்திருமணங்கள் ஒருதாரத் திருமணமாகத்தான் இருக்க வேண்டும். தொடர்ச்சியான மகிழ்ச்சிக்கும், இத்திருமணங்களின் தடையற்ற வெற்றிக்கும் இக்கருத்தே அடிப்படை என்பதுடன் ஆதாரத் தேவையுமாகிறது என்றே நினைக்கிறேன். இருப்பினும் சில நேரங்களில் நான் சற்றுமுன் கூறியபடி, எதிர்பாராத விதத்தில் சூழ்நிலைக் காரணங்களினால் இத்திருமணங்கள், பொறுத்துக்கொள்ள முடியாதவையாகவும், சகித்துக் கொள்ள முடியாததாகவும் ஆகிவிடும். ஆனால் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அதிக ஆரவாரமின்றி, குடும்பப் பிரச்சினைகளை ஊருக்கெல்லாம் பறை சாற்றாமலும், பரபரப்பூட்டும் செய்தியாக ஆக்கிவிடாமலும், தரப்புகளிடையே தேவையற்ற வெறுப்புணர்ச்சியை வளர்க்காமலும், எளிய முறையில் திருமணங்களை ரத்து செய்வதற்கு ஒரு வழிமுறையை நம் சட்டத்தில் உருவாக்க வேண்டும். விவாகரத்து வழங்க, பிற சட்டமுறைகளில் உள்ளதுபோல் காரணங்கள், நிபந்தனைகள் போன்றவைகளை

வலியுறுத்துவது அவசியமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. நாம் லட்சிய நாடுகளாகப் பின்பற்றி வரும் சில மேலை நாடுகளில் உள்ளதைக் காட்டிலும் விவாகரத்தை எளிமையானதாகவும், சிக்க லற்றதாகவும், அதிக செலவற்றதாகவும் செய்வது மிகவும் சிறந்தது என நினைக்கிறேன். இந்த அவையில் கிளம்பிய சூடான விவாதத் திற்கு வாரிசுரிமைப் பிரச்சினை, தந்தைவழி சொத்தில் பங்கு அனுபவிக்கும் பிரச்சினை மீண்டும் ஒரு நியாயமான காரணமாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. தங்கள் மறைவுக்குப் பின் சொத்துக்களை விட்டுச் செல்லும், சொத்துடைமைக்காரர்கள் எத்தனைபேர், இந்நாட்டில் உள்ளனர்? ஏற்றுக் கொள்ளப்பட்ட அளவு கோலின்படி, பத்து லட்சத்திற்கும் குறைந்த எண்ணிக்கை யிலான மக்களே மாத வருமானம் 250 ரூ. உடையவர்களாக இருப் பதை நீங்கள் காண்பீர்கள். இதில் வருமானவரி செலுத்துபவர்களாகக் கருதப்படுபவர்களுடன், அதைக் காட்டாமல் சமாளிப்பவர்களும் அடங்குவர்.

30 கோடிக்கும் மேற்பட்ட மக்கள் தொகையில், வருமான வரி செலுத்துபவர் எண்ணிக்கை சுமார் பத்து லட்சம் ஆகும், அல்லது அவர்களைச் சார்ந்திருப்பவர்களைச் சேர்த்துக் கொண்டால் முப்பது, நாற்பது லட்சம்பேர் உள்ளனர். மக்கள் தொகையில் இது 1 சதவீதத் திற்கும் குறைவே. ஒரே பெற்றோர்களின் வாரிசுகளுக்கு சமத்துவ உரிமை இல்லாத, பாசப்பிணைப்பிற்குப் பாதகம் விளைவிக்கும் கொஞ்சம் சொத்துகளை, பங்கு போடுவதற்கான சொத்துகளை இவர்கள்தான் வைத்திருக்க முடியும். தந்தைவழிச் சொத்துகளைப் பாகப்பிரிவினை செய்வதில் மகன்களுக்கும் மகள்களுக்கும் சமத்துவ உரிமையை ஏற்றுக் கொள்வது சம்பந்தமாக இவ்வளவு காரசாரமான விவாதத்திற்குக் காரணம் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. எந்த விதமான சொத்துடைமையிலும் எனக்கு நம்பிக்கை இல்லை என்று தான் சொல்வேன். சொத்துடைமை முற்றிலுமாக ஒழிக்கப்படும் நாள் எவ்வளவு விரைவில் வருகிறதோ, எல்லோருக்கும் வாழும் வழிக்கு சமுதாயம் வகை செய்கிறதோ, ஒவ்வொருவருக்கும் வேலை யும், ஆணுக்கும் பெண்ணுக்கும் அவரவர் தேவையை நிறைவேற்ற வகை செய்யப்படுகிறதோ, அந்த நாள் எவ்வளவு விரைவில் வரு கிறதோ அந்த அளவுக்கு சமுதாயத்திற்கு நல்லது. தீமைகளின் மூலஸ்தானமான இதை, ஒரு படித்த வழக்குரைஞர் தகராறுகளின் தோற்றுவாய் என்று கூறியுள்ளார். இந்த சொத்துடைமையை நான் தீமைகளின் மூலஸ்தானம் என்கிறேன். இந்த சொத்துடைமை ஒழிக்கப்பட வேண்டுமெனக் கூறுகிறேன். எவ்வளவு விரைவில் இது

நிறைவேற்றப்படுகிறதோ அந்த அளவிற்கு சமுதாயத்திற்கும் இம் மாதிரிச் சட்டங்களுக்கும் நல்லது. நான் விரும்புவதைப் போல ஒரு திருத்தத்தை இக்கட்டடத்தில் கொண்டுவர முடியுமென்றால், சொத் துரிமை சம்பந்தமான எல்லா விதிமுறைகளையும் நீக்கிவிடவோ ஒழித்துவிடவோ செய்யலாம் என்றுகூட யோசனை கூறுவேன். ஒரு சாதாரண விதிமுறை ஒன்றை மட்டும் சேர்த்தால் போதும். சொத்து உரிமை தொடர்ந்து வழக்கத்தில் இருக்கும் வரையில், எந்த வகை சொத்தானாலும், நிலமானாலும், தனிப்பட்ட சொத்தானாலும் அவை சமமாக பாகம் பிரிக்கப்பட வேண்டும். தற்போதைக்கு இதுவே போதுமானது. சொத்துடைமை முற்றிலுமாக ஒழிக்கப்படுவதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டும். எல்லோருக்கும் வேலைவாய்ப்பில் ஒரே மாதிரியான உரிமை, சொத்துரிமை உள்ளவர்கள் அனுபவிக்கும் வாழ்க்கைத்தரம் எல்லோருக்கும் அளிக்கப்பட வேண்டும்.

எனவே திருமணம் மற்றும் வாரிசுரிமை ஆகிய கடினமான இரண்டு பிரச்சினைகளில் நம்மைச் சுற்றியுள்ள நிலைமைகளின் தேவைக்கு அதிகமாக மசோதா செல்லவில்லை. நீங்கள் தனியார் சமுதாயத்தைப் பேணிப் பாதுகாக்கையில், சமுதாய அமைப்பின் அடித்தளமாக முக்கியக் கோட்பாடாகச் சொத்துரிமை இருக்கை யில் சமுதாய இயந்திரத்தின், இயங்கு சக்தியாக இலாப நோக்கமே இருக்கையில், சமத்துவமின்மை இருப்பதற்கான எந்தக் காரணத்தை யும் நான் காண முடியவில்லை. சமத்துவம் என்பது பெயரளவில் மட்டும் இருந்தால் போதாது. இந்நாட்டின் ஒவ்வொரு குடிமகனுக் கும், ஒவ்வொரு மனிதனுக்கும் பொருளாதார சுதந்திரம் உத்தர வாதம் செய்யப்படும் வரை, அரசியல் சுதந்திரம் மற்றும் வாக் குரிமைக்கு எந்த அர்த்தமும் கிடையாது. பெண்மைக்கு மிகப் பெரும் மரியாதை வழங்கப்பட்டதே, நமது சமூக அமைப்பின் மற்றும் இந்தியக் கலாசாரத்தின் சாரம் என்பதை எல்லோரும் நிறையக் கேள்விப்பட்டுள்ளனர். இதைத் தெரிந்துகொண்டதில் நான் மிக்க மகிழ்ச்சி அடைந்துள்ளேன். அது உண்மையெனில் அதைக் குறித்து எனக்கு எந்தவிதச் சந்தேகமும் இல்லை. சொத்துரிமையில் சம பங்கு வழங்குவது மட்டும் ஏன் தவிர்க்கப்பட வேண்டும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. பெண்மையை உண்மை யிலேயே நீங்கள் போற்றுபவராக இருந்தால், பெண்களுக்கு நீங்கள் அவ்வளவு மதிப்பும் மரியாதையும் அளிப்பவராக இருந்தால் அவர் களுக்குச் சமஉரிமை அளிப்பதில் நீங்கள் ஏன் தயக்கம் காட்ட வேண்டும். சொல்லப் போனால், இந்த உலகைப் பிரிந்து செல்லும் போது நாம் கொண்டு செல்ல முடியாத, இந்தப் பூவுலகச் சொத்துக்கள்

தானே இவை. எவ்வளவுதூரம் நாம் அவற்றின் மீது ஆசை வைத்திருந்தாலும் எவ்வளவு சொத்து வைத்திருந்தாலும், அதைச் சேர்த்தாலும் நாம் அதை எடுத்துச் செல்லமுடியாது. தற்போதைய பரிணாம வளர்ச்சியில் பெண்கள் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்திருப்பதுடன் ஆணைவிட அவள் ஒரு சிறந்த படைப்பு என்று நான் கருதுவதை மிகவும் மரியாதையுடனும் பணிவன்புடனும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆண் பெண் இரு பாலாரிலும் எவரையும் இழிவு படுத்துவதாக இதை எடுத்துக்கொள்ளக் கூடாது. நான் சொல்வதெல்லாம், பெண்ணுக்கு இயற்கை அளித்துள்ள பணிகள் இந்த சமுதாய அமைப்பில் பெண்மை சந்திக்க வேண்டிய செயல்பாடுகள், விஷயங்கள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டால், பெண்களுக்கு நாம் மிக அதிகம் மரியாதையோ மதிப்போ அளிக்கமுடியாது. எனவேதான் சமத்துவமின்மையின் சாயல் ஒரு சிறிதுமோ, வேற்றுமையின் தோற்றமோ, ஆணுக்கும் பெண்ணுக்கும், ஒரே பெற்றோருக்குப் பிறந்த மகளுக்கும் மகனுக்கும் இடையேயான தனிப்பட்ட வேறுபாடோ இருப்பதை நான் விரும்பவில்லை.

இருப்பினும், தத்தெடுப்பது, காப்பாண்மை போன்ற பிரச்சினைகளில், இந்த அவையில் உள்ள மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் கொண்டிருந்த அளவுக்கு ஆர்வம் எனக்கு இந்த விஷயங்களில் இருக்கவில்லை. தத்தெடுத்தல், அல்லது உயிலியற்றும் அதிகாரம் என்பது சாவுக்குப் பின் மனித ஆளுமையைச் செயற்கையாகத் தொடரச் செய்வதாகத் தோன்றுகிறது. என் கருத்துப்படி இது இயற்கைக்குப் புறம்பானது. சொத்து வைத்துக் கொள்வதும், அதன் மீது ஆதிக்கம் செலுத்துவதும் மோசமானது. நாம் உயிருடன் வாழும் போதே சொத்து வைத்துக் கொள்வதும் அதன் மீது ஆதிக்கம் செலுத்துவதும், மனதில் லாபநோக்கத்தைக் குறிக்கோளாகக் கொள்வதும் மோசமானதாகும். நம்முடைய ஆளுமையை தொடர்ந்து நாம் ஏன் நீட்டிக்கவேண்டும்? நம்முடைய சாவுக்குப் பிறகும்கூட நம்முடைய உத்தரவுக்கு கீழ்படிய வேண்டுமென வலியுறுத்த நான் ஏன் விரும்ப வேண்டும்? தத்தெடுத்தல் என்ற நடைமுறை மூலம் ஆளுமையின் செயற்கைத் தொடர்ச்சியின் அவசியம் ஏன்? இருப்பினும் அது ஒரு பண்டைய நடைமுறையாக உள்ளது என்பதுடன் அவர்களுடைய விடுதலைப்பேறுக்கு அது ஆதாரம் அல்லது ஆரம்ப நிலை என்று கருதப்படுவதைத் தெரிந்துகொண்டபின் இப்பொழுதே, இங்கேயே அதை ஒழித்துவிட வேண்டும் என்று ஆலோசனை கூற நான் தயாரில்லை. உங்கள் விடுதலைக்கு அதுவே ஆதாரம் என்று நீங்கள் கருதினால், இதன் மூலம் உங்கள் ஆளுமைக்கு அழிவே கிடையாது என்று

நீங்கள் எண்ணினால். எங்கள் நாகரிகம் மற்றும் கலாசாரம் அல்லது வாழ்வின் பணி தொடரும் என்று கருதினால், அது அவசியம் என்று கூறத் தயாராயுள்ளேன். ஆனால், இந்நிலையில் ஆண் பெண் சமத்துவ மின்மைக்கு அவசியமில்லை. ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே வேறுபாடோ, சட்ட வரம்புகளோ தேவையில்லை. சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் அதே உரிமை விரிவுபடுத்தப்பட வேண்டும். சமூக நீதி, பொருளாதார சமத்துவம், அரசியல் நேர்மை என்ற அடிப்படைகளில் இந்த மசோதாவை நான் ஆதரிக்கிறேன். நாம் ஏற்றுக் கொண்டுள்ள அரசியல் அமைப்புச் சட்டம் நம் முன்னே உள்ள நமது லட்சியங்கள், எதிர்காலத்தில் திட்டமிட்ட முற்போக்கு சமுதாயத்தை உருவாக்குவது குறித்த நமது நம்பிக்கை கள் ஆகியவற்றை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். இவை காரணமாக, சரியான பாதையில் செல்வதற்கான ஆரம்பம் என்று இந்த மசோதாவை எடுத்துக் கொள்வதைவிடச் சிறந்தது வேறொன்று மில்லை என நினைக்கிறேன். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே யான ஏற்றத் தாழ்வுகளைக் களைவது சம்பந்தமாக இதில் கொடுக்கப் பட்டுள்ள விதி முறைகளை ஏற்றுக் கொள்வதைவிட நாம் சிறப்பாக ஏதும் செய்துவிடமுடியாது. வாழ்க்கை மற்றும் பணி, உடல்நலம் மற்றும் கல்வியில் சம வாய்ப்புகள், வாழ்க்கைத் தரம், உணவு, உடை, உறைவிடம் ஆகிய விஷயங்களில் குறைந்த பட்சத் தேவைகளை ஒரேசீராக நிறைவேற்றுவது ஆகியவை சம்பந்தப்பட்டது அது. இவை எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். அவை கிடைக்கப் பெறாவிடில் சமுதாயம் முழுவதும் ஒன்றுபட்டு பொதுவான நட வடிக்கை மூலம் கிடைக்கப் பெறச் செய்ய வேண்டும். இந்தக் கடமை யைச் சமுதாயம் உணரவேண்டும். நமது அரசியலமைப்புச் சட்டத் தில் அறிவிக்கப்பட்டுள்ள வெறும் காகிதத் திட்டமல்ல அது. நம்மால் முடிந்த அளவு குறுகிய காலத்தில் நிறைவேற்றப்பட வேண்டிய புனிதமான கடமை, கடப்பாடாகும் அது. இந்நாட்டில் ஒவ்வொரு குடிமகனுக்கும் இவையாவும் கிடைக்கப்பெற வேண்டும். இந்நாடு சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து நாம் உருவாக்கிய நம்பிக்கை களும், ஆசைகளும் நாம் வளர்த்து வந்துள்ள நம்பிக்கைகளும், ஆசைகளும் நிறைவேற்றப்பட வேண்டும். ஒரு நாடு பாதி அடிமை யாகவும் பாதி சுதந்திரம் பெற்றதாகவும் இருக்க முடியாது என அமெரிக்காவின் பெரும் தலைவர் அதிபர் லிங்கன் கூறியுள்ளார். முற்றிலும் அடிமை என்று கூற முடியாவிடினும், இந்நாட்டு மக்களில் பாதிப் பேர் பெரும் குறைபாடுகளையும், பாகுபாட்டுடன் நடத்தப் படுவதையும் உணர்கின்றனர். தங்களுக்கு எதிரான இந்தக் கொடுமையை அவர்கள் மேலும் சகித்துக் கொண்டிருக்க விரும்ப

வில்லை. இது தொடர்பாக இந்த அவையினரால் இன்னும் உணரப் படாத சில புள்ளிவிவரங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். அது இதுதான். பிறக்கும் போது பெண்களின் எண்ணிக்கை பெரும்பான்மை யாக இருந்தாலும், மொத்த மக்கள் தொகையில் அவர்கள் கணிசமான அளவு குறைந்த எண்ணிக்கையிலேயே உள்ளனர். உத்கல் போன்ற மாகாணத்தின் நிலைமை எவ்வாறு இருப்பினும், இந்தியாவில் மொத்தத்தில் திருமண வயதிலிருந்து அதாவது பதினைந்து வயதி லிருந்து பெண்கள் சிறுபான்மையினராகவே உள்ளனர். அது குறைந்துகொண்டே வந்து மொத்த மக்கள் தொகையில் அவர்கள் எண்ணிக்கை சிறுபான்மையாக எப்பொழுதுமே உள்ளது. இதன் முக்கியத்துவம் என்ன?

*(இந்தக் கட்டத்தில் திரு. துணை சபாநாயகர் நாற்காலியி லிருந்து எழுந்து செல்கிறார். திரு. எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி (தலைவர் குழுவில் ஓர் உறுப்பினர்) நாற்காலியில் அமர்ந்து அவைக்குத் தலைமை தாங்குகிறார்).*

பெண்களை பாரபட்சமாக நடத்துவதன் விளைவே இது என்று நான் நினைக்கிறேன். பிறப்பில் பெரும்பான்மையாக உள்ள வர்கள் மொத்தத்தில் சிறுபான்மையினராகக் குறையக் காரணம் இதுவே. எனவே பாரபட்சமாக நடத்தப்படுகின்றனர் என்ற குற்றச் சாட்டை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். அதை நீக்குவதற்கு இந்த மசோதா முயற்சி செய்கிறது. மசோதாவைக் கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டுள்ளவர்கள், நமது சமுதாயத்தை சீர்திருத்துவதில் மசோதா ஓரளவு உதவியாக இருக்கும் என்று கருதுபவர்கள் நமது சட்டங்களையும் சமுதாய அமைப்பையும் எளிமைப்படுத்தி ஒரு குறிப்பிட்ட லட்சியத்திற்கு இட்டுச் செல்கிறது என்று நினைப் பவர்கள் ஆகிய எல்லோருக்கும், இந்த மசோதாவிலுள்ள பல விதிமுறைகள் மனநிறைவு அளிக்கிறது என்று கூற முடியாது. நாம் இப்பொழுது விவரங்களை விவாதிக்கவில்லை. குறிப்பிட்ட விதி களை விட்டுவிடுங்கள். மசோதாவின் அடிப்படையான கொள்கை கள், மொத்தத்தில் அதன் லட்சிய ஊற்று அவையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இந்த மசோதாவை அவை நிறைவேற்றும் என நம்புகிறேன்.

**திரு. லட்சுமி நாராயண் சாஹு** (ஒரிசா, பொது) : (இந்திப் பேச்சின் ஆங்கில மொழிபெயர்ப்பு) ஐயா, உத்கலில் அதிக எண்ணிக் கையில் பெண்கள் உள்ளனர் என்று நகைச்சுவையாகக் கூறவில்லை

என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். உத்கலில் உள்ள பெண்களின் எண்ணிக்கை மூன்றிலிருந்து நான்கு லட்சம் வரை அதிகமாக உள்ளது. திருமணத்துக்கு மாப்பிள்ளை கிடைக்காதபோது அவர்கள் சகதா மரத்தை மணம் செய்து கொள்கின்றனர்.

**பேராசிரியர் கே.டி. ஷா:** நான் ஒரு குறிப்பிட்ட மாகாணத்திற்காகப் பேசவில்லை. நாடு முழுவதற்குமாகப் பேசுகிறேன். எனவே இந்தக் குறிப்பிட்ட கேள்விக்கு பதிலளிக்க வேண்டியது அவசியமில்லை. அதை அப்படியே விட்டுவிடுங்கள்.

***சர்தார் ஹுக்கம் சிங்** (கிழக்குப் பஞ்சாப் : சீக்கியர்) : மிகச் சிறந்த அறிஞர்களும், புகழ்பெற்ற வழக்குரைஞர்களும் பங்கு கொண்டு பல நாட்களாக விவாதித்த விஷயங்கள் குறித்து புதிய வாதங்களையோ, புதிய கருத்துகளையோ முன்வைப்பது அவ்வளவு எளிதானதல்ல என்பதை உணர்கிறேன். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் பிரதிநிதி என்ற முறையில் என்னைப் பேச அழைத்திருப்பதால் இந்தக் குறிப்பிட்ட சட்டத் தொகுப்பு குறித்த எனது சமுதாயத்தின் உணர்வுகளை பிரதிபலிக்கும் எதையாவது நான் கூறித்தான் ஆகவேண்டும். ஓர் இந்தியனாக மட்டுமே பேச விரும்புகிறேன் என்று எனது படித்த நண்பர் ஷா கூறிய கருத்துடன் எனக்கு உடன்பாடு இல்லை. இந்தச் சட்டத் தொகுப்பு இந்தியா முழுவதற்கும் எல்லோருக்கும் அமல்படுத்தப்படுமானால் நானும் அதே வாசகத்தை மகிழ்ச்சியுடன் திரும்பக் கூறியிருப்பேன். ஆனால் இப்பொழுதுள்ள நிலையில், அது ஒரு சில சமூகங்களுக்கே அமல் படுத்தப்படவுள்ளது. எனவே, என் சமூகத்தின் சார்பாக எனக்கு உரிமையும் கடமையும் இருப்பதாக நம்புகிறேன்.

இவ்வளவு அதிகமான அறிஞர்களைக் கேட்கக்கூடிய சாதகமான நிலை எனக்கு இருந்தாலும், அதே நேரத்தில் எனக்குச் சில பாதகங்களும் இருப்பதை உணர்கிறேன். ஏனெனில், அனேகமாக எல்லா விஷயங்களும் கூறப்பட்டுவிட்டன. அவற்றை மீண்டும் கூறினால் அவை பழைய விஷயங்களாக இருக்கும். எனது சமூகத்தைப் பாதிக்கக்கூடிய சில விஷயங்களைக் குறித்து மட்டும் எனது கருத்துகளை வெளிப்படுத்தவேண்டுமென்று உணர்ந்து என் பேச்சைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடிவு செய்துள்ளேன்.

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 607-610.

சமுதாயம் தேங்கிக் கிடப்பதை நான் விரும்பவில்லை என்பதை ஆரம்பத்திலேயே தெளிவுபடுத்த விரும்புகிறேன். சமூகச் சட்டங்கள் அப்படியே இருக்க வேண்டுமென்று கூறுபவர்களைச் சேர்ந்தவனல்ல நான். காலத்துக்கேற்ப, அவைகளும் மாற வேண்டுமென்று விரும்புகிறேன். காலத்தோடு ஒட்டி ஒழுகுவதற்கு நமக்கு உரிமையில்லை என்று சொல்லுமளவுக்கு மதவாதியல்ல நான். நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்ற காரணத்தினாலோ அல்லது இந்த மசோதா சம்பந்தமாக வாக்காளர்களின் விசேஷ ஆணை இல்லை என்ற காரணத்தினாலோ, இந்த மசோதாவை நிறைவேற்றும் அதிகாரம் இந்த அவைக்கு இல்லை என்ற கருத்தும் எனக்குக் கிடையாது. எந்தச் சட்டத்தையும் நிறேவற்றுவதற்கு இந்த அவைக்குத் தகுதியுள்ளது என்று நான் கருதுகிறேன். எனவே இதுவும் அதன் அதிகார வரம்புக்குள் வருகிறது. இவையெல்லாம் இப்படியிருப்பினும், மசோதா இப்பொழுதுள்ள நிலையில் அதற்கு என் மனப்பூர்வமான ஆதரவை அளிக்க முடியாது.

ராவ் குழு சிபார்சு செய்தபடி ஆரம்பத் திட்டமே பின்பற்றப் பட்டிருந்தால் ஒருவேளை சட்டத் தொகுப்பின் சில பகுதிகள் எதிர்ப்பு ஏதுமின்றி நிறைவேற்றப்பட்டிருக்கலாம். இந்தச் சட்டத் தொகுப்பின் சில பிரிவுகள் குறித்து ஒத்த கருத்து உருவாகியிருக்கலாம். சில விஷயங்களைக் குறித்து மட்டுமே நான் பேச உள்ளேன். எனவே இந்தச் சட்டத்தின் பொதுக் கொள்கையின் எல்லா அம்சங்களையும் நான் தொடவிரும்பவில்லை.

இப்பொழுது நடைமுறையிலுள்ள, இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளை முறைப்படுத்துவதும், திருத்துவதுமே இம்மசோதாவின் நோக்கம் என்று முகப்புரையில் கூறப்பட்டுள்ளது. நான் மசோதாவைப் படித்துப் பார்த்தபோது, முறைப்படுத்தப்பட்ட எந்தவிதமான இந்துச் சட்டத்தையும் அதில் காணவில்லை. கிருஸ்தவ நாடுகளிலிருந்து விவாகரத்து சம்பந்தமான விஷயங்கள் எடுக்கப்பட்டுள்ளன. முஸ்லீம் சட்டத்திலிருந்து வாரிசுரிமைச் சட்டம் எடுக்கப்பட்டுள்ளது. இந்துச் சட்டங்களை முறைப்படுத்தி தொகுப்பது இதுதான் என்று கூறுவது தவறென எனக்குத் தோன்றுகிறது.

**டாக்டர் மனோ மோகன் தாஸ்** (மேற்கு வங்காளம் : பொது) : இந்நாட்டிலுள்ள பல்வேறு ஜாதிகளிலும், பழங்குடி மக்களிடையேயும் விவாகரத்து வழக்கம் பரவலாக உள்ளது. அவர்கள் இந்துக்கள் இல்லையா? மதிப்பிற்குரிய உறுப்பினர் அவர்களை ஒழித்துக் கட்ட விரும்புகிறாரா?

*சர்தார் ஹுக்கம் சிங் :* நீங்கள் அனுமதி அளித்தால், அந்தக் கேள்விக்குப் பின்பு வருவோம். என் பேச்சைக் கேட்பதற்கு உங்களுக்குப் பொறுமை இருக்கும் என நம்புகிறேன்.

நான் ஏற்கெனவே கூறியபடி, எனது சமூகத்தைப் பாதிக்கக் கூடிய சில விஷயங்களைக் குறித்து மட்டுமே பேசப்போகிறேன். அதற்கு மேல் நான் பேசப் போவதில்லை. இந்துச் சட்டத்தை முறைப்படுத்தி திருத்தம் செய்வதே மசோதாவின் நோக்கம் என முகப்புரையில் கூறப்பட்டுள்ளது. இந்துச் சட்டத் தொகுப்பில் அதைக் காணவில்லை என்று மீண்டும் கூறுகிறேன். 80 சதவீத மக்களிடையே விவாகரத்து வழக்கத்திலுள்ளது என்று இந்த மசோதாவை முன் மொழிந்தவர் ஆரம்பத்தில் நமக்கு எடுத்துரைத்தார். அது உள்ளபடியே இருப்பதில் எனக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை. அதை நீங்கள் இந்துச் சட்டம் என்று கூறலாம். ஆனால் நீங்கள் இப்பொழுது சட்டத் தொகுப்பில் அறிமுகப்படுத்தவுள்ள இந்த முறையை அப்படிக் கூறமுடியாது.

கூறு 2ல் சீக்கியர்களுக்கும் இந்தச் சட்டம் பொருந்தும் என்று கூறப்பட்டுள்ளது. அது மகிழ்ச்சிகரமான விஷயந்தான். சில உரிமைகளை அளிப்பதற்கு சீக்கியர்களை இந்துக்களுடன் சேர்த்துக் கொண்டிருப்பது எங்களுக்கு மிகவும் பெருமையளிக்கும் விஷயம் என்று கூடச் சொல்லலாம். ஆனால், கூறு 2ல் எங்களைக் கட்டித் தழுவிய பின்பு, கூறு 4ல் எல்லா வழக்கங்களுக்கும் வழக்காறுகளுக்கும் பலத்த அடி கொடுக்கப்பட்டுள்ளதையே இங்கே நான் காண்கிறேன். வழக்கங்கள் மறுக்கப்பட்டுள்ளன. வழக்காறுகள் ஒழிக்கப்பட்டு விட்டன. ''வழக்கம்'' என்பது தொடர்ச்சியாக ஒரே சீராக பின்பற்றப் படுவது என்றும், அது உறுதியானதாகவும், நியாயமானதாகவும் பொதுநலக் கொள்கைகளுக்கு விரோதமில்லாமலும் இருக்க வேண்டும் என்றும் கூறு 3ல் விளக்கப்பட்டுள்ளதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இப்படிப்பட்ட புனிதமான நடைமுறையை ஒரேயடியாக ஒழித்துவிடும்படி ஏன் இவ்வளவு வெறுப்புடன் அதைக் கையாள வேண்டும்? நான் இதைக் கடுமையாக ஆட்சேபிக்கிறேன். எனது மாகாணமான பஞ்சாபில், நடைமுறை வழக்கமே முதல் சட்டவிதியாக உள்ளது. முக்கியமாக இந்த உண்மையின் அடிப்படையில்தான் நான் ஆட்சேபிக்கிறேன். விவாகரத்து, திருமணம், வாரிசுரிமை, இறங்குரிமை, உயில்கள் போன்ற விஷயங்களில் பஞ்சாப் சட்டம் வகுத்துள்ளபடி நடைமுறை வழக்கமே முதன்மை பெறும் சட்டவிதி ஆகும். நெடுங்காலமாக இந்த

வழக்கங்களைப் பின்பற்றுகின்றனர். தான் பின்பற்ற வேண்டிய விதி என்னவென்பதை கிராமத்திலுள்ள ஒவ்வொருவரும் அறிந்துள்ளனர். இந்த வழக்கங்களைப் பற்றி நீதித்துறைத் தீர்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கிராமவாசியாலும் அவை எளிதில் புரிந்து கொள்ளப்படுகின்றன. அதைப்பற்றி எந்தத் தகராறும் கிடையாது. எனவே இந்த மாற்றங்கள் புதிய சட்ட மொழியைக் கொண்டுவரும். இதுவரை தங்கள் சட்டங்களை நன்கு புரிந்து கொண்டுவந்துள்ள சாதாரண விவசாயிகளுக்கு அதிகச் சிக்கலை உருவாக்கும்.

திருமணத்தைப் பற்றியதே எனது இரண்டாவது ஆட்சேபனை. இங்கே ஒரு கருத்தைக் கூறத்தான் வேண்டும். இவ்வளவு காலமாக இன்றுவரை சீக்கியர்கள் இந்துச் சட்டத்தைத்தான் பின்பற்றி வந்திருக்கிறார்கள் என்று கூறலாம். ஆனால் கொண்டு வரப்பட உள்ள மாற்றங்களைக் குறித்தே என் ஆட்சேபனையெல்லாம். இந்துச் சட்டம் இப்பொழுதுள்ளதுபோல் தொடர்ந்திருக்குமானால் அதில் எனக்கு எந்தவித ஆட்சேபனையும் கிடையாது. மாற்றங்கள் வெளியிலிருந்து கொண்டுவரப்பட்டுள்ளதால் சீக்கியர்களுக்கு மனக்குறை உள்ளதை உணர்கிறேன். இப்பொழுதுள்ள நடைமுறை வழக்கங்களை அங்கீகரிக்க வேண்டும். மேலும் சுற்றிக் கொண்டு செல்லும் சக்கரத்தில் அவர்களைக் கட்டிவைக்க வேண்டியது அவசியமில்லை. திருமண விஷயத்தைப் பற்றி நான் குறிப்பிட்டேன். கணவனின் விருப்பங்களுடன் ஒன்றுபட வேண்டும் என்று இந்துச் சட்டத்திலும் இந்து கலாசாரத்திலும் மனைவிக்கு ஆலோசனை கூறப்பட்டதைச் சுட்டிக் காட்டுகிறேன். அவள் தியாகத்தின் சின்னமாக இருந்து வருகிறாள். அதுதான் அவள் பெருந்தன்மையும் சிறப்பம்சமும் ஆகும். இவ்வளவு நாட்களாக தாங்கள் அடக்கிவைக்கப்பட்டிருந்ததாகவும் மிகவும் துன்புற்றதாகவும் இனிமேலும் இந்தத் துயரச் சுமையைத் தாங்கத் தயாரில்லையென்று இப்பொழுது நமது பெண்கள் கருதினால், நமது சகோதரர்களுக்கு நான் அளிக்கும் ஆலோசனையெல்லாம், அவர்கள் பெண்களின் நிலையைவிட தாழ்ந்த நிலைக்குச் சென்றுவிட வேண்டுமென்பதுதான். எல்லா விஷயங்களிலும், குடும்ப வாழ்விலும், சமத்துவத்தை வலியுறுத்துவது குடும்பத்தில் அமைதிக்கும் மகிழ்ச்சிக்கும் வழிவகுக்காது என்று உணர்கிறேன்.

மேலும் இரண்டுவகைத் திருமணங்களையே மசோதா அங்கீகரித்துள்ளது என்பது எனது குற்றச்சாட்டாகும். ஒன்று சமய சடங்குகளின் அடிப்படையிலான திருமணமும், மற்றொன்று பதிவுத்

திருமணமும் ஆகும். கடந்த பல நூற்றாண்டுகளுக்கு மேலாக சீக்கியர்கள் பின்பற்றிவரும் வேறு ஒருவகைத் திருமணமும் உள்ளது. உறுப்பினர்கள் பலரும் ஏற்கெனவே இதைத் தெரிந்திருப்பார்கள் என்று நான் நம்பினாலும் அவைக்கு இதை நான் எடுத்துரைத்தாக வேண்டும். அது 'ஆனந்த் திருமணச் சடங்கு' என்று அழைக்கப்படுகிறது. அது ஒரு எளிமையான முறை, குருகிரந்த் சாகேப் முன் தம்பதியர் கொண்டுவரப்படுகின்றனர். அவர்கள் ஒரு பிரமாணம் எடுத்துக் கொண்டு, கிரந்த் சகேபை நான்கு முறை சுற்றி வருகின்றனர். பிறகு பிரார்த்தனை செய்கின்றனர். அத்துடன் திருமணம் முடிவு பெறுகிறது. இப்பொழுது அது ஒரு சிவில் திருமணம் என்று கூற முடியாது. ஏனெனில் அதை எங்கேயும் பதிவு செய்ய வேண்டிய அவசியமில்லை. அதை ஒரு சமயச் சடங்கு அடிப்படையிலான திருமணம் என்றும் கூற முடியாது. ஏனென்றால், சபிந்தா உறவுகள் அல்லது தடைசெய்யப்பட்ட உறவுகளின் படிநிலை போன்றவைகள் கண்டிப்பான முறையில் பின்பற்றப்படுவதில்லை. எனவே நாங்கள் இவ்வளவு காலமாக பின்பற்றிவரும் இந்த முறையிலான திருமணம் செல்லாததாக ஆகிவிடுமோ என்று அஞ்சுகிறேன். இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் இது பற்றி சந்தேகங்கள் எழுந்தன. ஆனந்த் திருமணத்தை செல்லத்தக்கதாக்கும் சட்டம் 1909ல் நிறைவேற்றப் பட்டது. அதன் பிறகு இத்தகைய திருமணங்கள் எல்லாம் செல்லத் தக்கதாகிவிட்டன. ஆனால் இப்பொழுது மசோதாவைப் படித்த வரையில் இந்துச் சட்டத் தொகுப்பின்படி இந்தத் திருமணம் அங்கீகரிக்கப்படுமா என்பது குறித்து எனக்கு ஐயப்பாடு உள்ளது. எனவே இதைப் பொறுத்தவரையில், சீக்கியர்கள் மிகவும் கவலை கொண்டுள்ளனர். முக்கியமாக இந்த விஷயத்தில் அவர்கள் பெரும் பயம் கொண்டுள்ளனர். அவர்கள் விருப்பப்படி விட்டுவிட்டால் இந்த வகைத் திருமணத்தை அவர்கள் இழக்க விரும்பவில்லை என்பதை மசோதாவை முன்மொழிந்தவரின் கவனத்திற்குக் கொண்டு வருவதுடன், இதை அவர் முக்கியமாகக் கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது** (மேற்கு வங்காளம்: முஸ்லிம்) : இந்த மசோதாவின்படி இவ்வகைத் திருமணங்கள் செல்லுபடியாகாது.

**சர்தார் ஹுக்கம் சிங் :** இந்த மசோதாவின்படி இத்திருமணங்கள் செல்லாது என்றுதான் நானும் கருதுகிறேன். எனவேதான் நிலைமையை அவைக்கும், முக்கியமாக மசோதாவை முன்மொழிந்தவருக்கும் விளக்கியுள்ளேன்.

பிறகு விவாகரத்தைக் குறித்தும் நான் ஒரு கருத்தைக் கூற வேண்டியுள்ளது. மக்கள் தொகையில் பெரும்பகுதியினரிடையே விவாகரத்து வழக்கம் பரவலாக இருப்பதாகக் கூறப்பட்டது. என்னுடைய வேண்டுகோள் இதுதான்; நடைமுறையிலுள்ளவைகள் தொடரட்டும். சில நிபந்தனைகளை விதித்து அந்த வழக்கங்களைக் கட்டுப்படுத்துவதன் மூலம் அதிகம் செலவு செய்ய வேண்டிய நிலையை உருவாக்கி விடாதீர்கள். இந்த மாற்றங்கள் நல்லதுக்கு அல்ல, கெடுதலுக்கே என்றுதான் சாதாரண மக்கள் நினைப்பார்கள். திருமணங்களை ரத்து செய்வதற்கு எளிய முறைகள் தற்போது இருக்கையில் எதிர்காலத்தில் மிகவும் சிக்கலான அதிகச் செலவு பிடிக்கும் வழிமுறைகளை பின்பற்ற கட்டாயப்படுத்தப்பட்டால் நிச்சயமாக அதை அவர்கள் வரவேற்க மாட்டார்கள். தீமைகள் தலை தூக்குவதாக வாதிக்கப்படுகிறது. இந்த மசோதா விருப்பத்தைப் பொறுத்து, ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்று என்றும் யாரையும் அது கட்டாயப்படுத்தவில்லை என்றும் கூறப்படுகிறது. பிரச்சினையைவிட அதற்குக் கொடுக்கப்பட்ட தீர்வு மோசமாக உள்ளதா என்பதைக் குறித்து நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட அளவிற்கு தீமைகள் உள்ளன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் குடும்பப் பிணைப்பைத் தளர்த்தினோமானால், மக்கள் தொகையில் ஒரு சிறுபிரிவினர் எல்லா உறவுகளையும் முறித்துக் கொணடு தாங்களே உருவாக்கிய துன்பத்திலிருந்து விடுதலை பெற்று மகிழ்ச்சியடையக்கூடும். ஆனால் அதிகமாக உள்ள பெரும்பான்மையினரின் நிலை என்ன? அவர்களைச் சிக்கவைக்க ஒரு வலையை விரித்ததாகாதா? தவறுதல்கள் செய்வதற்கு தூண்டுவதாக ஆகாதா? அவர்கள் தங்கள் எதிர்காலத்தைப் பரீட்சிப்பதற்கு வழி வகுத்ததாக ஆகாதா? ஏனெனில் இந்தச் சோதனையை முடித்துக் கொள்ளவும் அதிலிருந்து தப்பித்துக் கொள்ளவும் வழியிருப்பதை அவர்கள் உணர்ந்திருப்பார்கள்.

இப்பொழுது எனது இரண்டாவது விஷயத்திற்கு வருகிறேன். அது தத்தெடுப்பது பற்றியது. எனது மாகாணமான, பஞ்சாபில் தத்தெடுப்பது என்பது ஒரு விசித்திரமான நடைமுறையாகும். ஒரு வாரிசின் வழக்கமான நியமனம் என்று அது அழைக்கப்படுகிறது. நடைமுறை நோக்கங்களுக்கான எளிய அறிவிப்பு அது. சமயத்துடன் அதற்கு எந்தவித சம்பந்தமும் கிடையாது. வயது அல்லது உறவு சம்பந்தமாக எந்த வரையறைகளும் கிடையாது. மகளின் மகனோ, அல்லது சகோதரியின் மகனோ தத்தெடுத்துக்கொள்ளப் படலாம் என்று இந்தச் சட்டத் தொகுப்பில் முன்மொழிந்துள்ளீர்கள்.

ஏற்கெனவே வாரிசின் வழக்கமான நியமனத்தில் மகளின் மகன் பெரும்பாலும் வாரிசாக நியமிக்கப்படுவதுடன் சகோதரியின் மகனும்கூட நியமிக்கப்படுகின்றனர் என்பதை உங்களுடன் நான் தெரிவித்துக் கொள்கிறேன். எந்தவிதமான வரையறைகளும் கிடையாது. ஓர் இளைஞன் தனது தகப்பனார் வயதுள்ள ஒருவரைத் தத்தெடுத்துக் கொள்ளலாம். பல மகன்கள் உள்ள ஒருவரை வாரிசாக நியமிக்கலாம். இங்குள்ள பலருக்கு இது விசித்திரமாகத் தோன்றலாம். ஆனால், அது உண்மைதான் என்று கூறுகிறேன். திருமணமான ஒருவரை, குழந்தைகள் உள்ள ஒருவரை வாரிசாக நியமிக்க முடியும். அது மிகவும் மதச் சார்பற்ற நடைமுறை, அதற்கும் மதத்திற்கும் சம்பந்தமே கிடையாது. இம்மாதிரியான ஒரு நடைமுறையை எப்படி அளிக்கப் போகிறீர்கள்? அதைத் தூக்கி வீசிவிடப் போகிறீர்களா? நிச்சயமாகக் காலத்தால் ஏற்பட்ட புனிதத் தன்மையும் மரியாதையும் அதற்கு உள்ளது. நாட்டின் எங்கள் பகுதியில் மிகப் பிரபலமாக உள்ள இவ்வழக்கத்தை அவ்வளவு எளிதாகத் தூக்கி எறிந்துவிட முடியாது. மக்கள் அவ்வளவு எளிதாக அதற்கு இணங்க மாட்டார்கள். சட்டத்தின் இந்தப் பகுதியைப் பொறுத்தமட்டில் எங்கள் மக்கள் மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டால், அது அங்கு செத்த சட்டமாகவே இருக்கும்.

அடுத்ததாக மரபுரிமை பிரச்சினை உள்ளது. நமது பெண்கள், சகோதரிகள், மகள்கள், சொத்தில் பங்குபெற வேண்டும் என்ற நமது நண்பர்களுடைய கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். அதைச் சுருக்கிக் கூறுவதென்றால், எனது படித்த நண்பர் டாக்டர் பக்ஷி தேக் சந்த் முன்பு கூறியதை நான் ஒத்துக் கொள்கிறேன். அதாவது அவர்களுக்குத் திருமணத்திற்குப் பிறகு மாமனாரின் சொத்தில் பங்கு இருக்கவேண்டுமே தவிர தகப்பனாரின் சொத்தில் அல்ல. அதற்கு என்னிடம் முக்கியமான காரணங்கள் உள்ளன. ஏனெனில், எனது மாகாணத்தின் சூழ்நிலைகள் மிகவும் அசாதாரணமானவை என்பதை நான் தெரிவித்துள்ளேன். பஞ்சாப் மாகாணத்தில் சிறு விவசாயிகளே அதிகம் உள்ளனர். சாதாரணமாக மூன்று அல்லது நான்கு ஏக்கரே அவர்களின் நில உடைமையாகும். கொஞ்சம் கடன் பெற்று, இரண்டு காளைகளை வாங்கி வைத்திருப்பார். மேலும் ஒரு ஹல், ஒரு பஞ்சாலி வயலுக்கு உரம் கொண்டு போகவும் வயலிலிருந்து மாட்டுத் தீனிகளை வீட்டுக்குக் கொண்டு வரவும் ஒரு கட்டா வைத்திருப்பர். இந்த நபர்களிடம் இதைவிட அதிகமாக எதையும் எதிர்பார்க்க முடியாது. சட்டத் தொகுப்பு விவசாய நிலங்களுக்கு அமலாக்கப்படாவிடினும், அசையும் சொத்துக்களின் நிலைமை

என்ன? அவருடைய காளைகளை என்ன செய்வது? ஒரு மகனும், ஒரு மகளும் உள்ள எளிய குடும்பம் ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள். தகப்பனார் இறந்தவுடன், இந்த அசையாச் சொத்துக்களெல்லாம் இந்த இருவரிடையே பிரிக்கப்பட வேண்டும். (ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர்: ஏன் கூடாது?) நான் அப்படிக் கூறவில்லை. அது பிரிக்கப்பட வேண்டும் என்றுதான் கூறுகிறேன். சாதாரணமாக அவர்களிடம் ஒரு பசுவும் இருக்கும். இந்தப் **பசு, ஹல்** மற்றும் **பஞ்சாலி**யை எப்படிப் பாகம் பிரிப்பது என்பதை மசோதாவை முன்மொழிந்தவர்தான் நமக்குத் தெரிவிக்க வேண்டும். ஐம்பது மைலுக்கு அப்பாலிருந்து வரும் மருமகனுக்கு தனது ஊர்ப் பகுதியில்தான் ஆர்வம் அதிகம் இருக்கும். இந்த நாலு ஏக்கர் நிலம் அவனுக்குக் கொடுக்கப் போவது ஒன்றுமில்லை. மைத்துனனுடன் அவனால் வாழமுடியாது. அவனுடைய அக்கறையெல்லாம் வேறு எங்கேயோ இருக்கிறது. பாகத்தைப் பிரித்துவிட்டு, வெளியே போக வேண்டியதுதான் அவன் நிலை. சகோதரி தன் பங்கைக் கேட்பாள். நிச்சயமாக, ஒரு காளையையும், வண்டியின் ஒரு பாதியையும், **பஞ்சாலி**யில் பாதியையும், எடுத்துக் கொண்டு இந்தச் சட்டத் தொகுப்பை உருவாக்கியவர்களுக்கு நன்றி கூறிவிட்டு, போய் விடுவாள். அவள் திரும்ப வரவே மாட்டாள். மீண்டும் வரவேற்பு நிச்சயமாக இருக்காது. (மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் : சகோதரனுடைய சொந்த மைத்துனன் அவனுக்கு நன்றி சொல்வான்). இது ஓர் எளிமையான உதாரணம். ஆனால் ஒன்றுக்கு மேற்பட்டு, இரண்டு மூன்று நான்கு சகோதரர்கள் இருக்கும்போது நிலைமை எப்படியிருக்கும் என்பது உணரப்படவில்லை. கிழக்குப் பஞ்சாபில், அவர்கள் ராணுவத்தில் சேர்கின்றனர். உலகில் தொலைவிலுள்ள நாடுகளான அர்ஜெண்டினா, பிரேஜில், தென் அமெரிக்கா போன்ற நாடுகளுக்குச் செல்கின்றனர். அவர்கள் துணிகர சாகசக்காரர்கள். அங்கிருந்து பணம் கொண்டுவந்து, அதிக நிலங்களை வாங்குகிறார்கள். பொதுவான சமையல் சாப்பாட்டை வைத்துக் கொண்டு, அவர்கள் ஒன்றாக வாழ்கிறார்கள்.

ஐயா, இந்த விதி, கஷ்டங்களை உருவாக்கும் என்று தாழ்மையோடு தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு மகளுக்குத் திருமணமாகாத வரையில் தகப்பனாரின் சொத்தில் பங்கும், மணமானவுடன் மாமனார் சொத்தில் சமமான பங்கும் பாகத்தைப் பிரித்து எடுத்துக் கொள்ளும் உரிமை முதலியனவும் இருக்க வேண்டுமென்று எனது படித்த நண்பர் டாக்டர் பக்ஷி தேக் சந்த் கூறியதை நான் ஏற்றுக்

கொள்கிறேன். பெண்களுக்கு பங்கு அளிப்பதை எதிர்ப்பவனல்ல நான். இந்த விஷயத்தில் என்னைத் தவறுதலாகப் புரிந்துகொள்ளக் கூடாது.

நமது படித்த பெண்களுக்கு அதிக ஓய்வு நேரம் இருப்பதாக அஞ்சுகிறேன். ஒரு சாதாரணப் பெண், கல்வி கற்ற பின்பு வீட்டு வேலைகளில் மூழ்குவதில் விருப்பப்படுவதில்லை. முழு நேரமும் ஈடுபட்டிருக்க வேண்டிய வேலை எதுவும் வீட்டில் அவளுக்கு இருப்பதில்லை.

*(இந்தக் கட்டத்தில் திரு. துணை சபாநாயகர் (திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்) மீண்டும் தலைமை தாங்க நாற்காலி யில் அமர்கிறார்).*

அவர்களுடைய ஓய்வு நேரங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ள அரசு வழிமுறை காணவேண்டும். பயனுள்ள உருப்படியான பணிகள் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டும். நீங்கள் ஒழிக்க நினைக்கும் தீமைகளை இது போன்ற சட்டங்களோ, விவாகரத்தோ நீக்கிவிடமுடியாது. கூட்டுக் குடும்பமுறை நீக்கப்படுவதற்கு முன் வயதானவர்களுக்கு பொருளாதார உதவி, மருத்துவ உதவி போன்றவைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். சமுதாயம் மேலும் பிளவுபடுதல், அன்பு மற்றும் இரக்க சிந்தனை வற்றிப் போதல், விவாகரத்து மற்றும் பிரிவினை நீதிமன்றங்கள் அதிகரித்தல், பெண் சிசுக் கொலை அதிகரித்தல், குழந்தைகள் பராமரிப்பில் அலட்சியப் போக்கு இவைகளே இந்தச் சட்டத்தின் விளைவகளாக இருக்கும் என்றுதான் நினைக்கிறேன்.

**திரு. வி.ஜ. முனிசாமிப்பிள்ளை :** எழுந்திருக்கிறார்

**திரு. பி. தாஸ்** (ஒரிஸா: பொது) : ஐயா, நாம் விவாதத்தை 7 மணி வரைத் தொடரப் போகிறோமா?

**திரு. துணை சபாநாயகர் :** 7 மணி வரை அமர்வதில் எனக்கு எந்தவித ஆட்சேபனையும் இல்லை. அவையின் பொதுவான கருத்து என்ன?

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** இல்லை, இல்லை.

**திரு. துணை சபாநாயகர் :** போதுமான அளவு கேட்டாகி விட்டது. ஒரு குரல் பல குரல்களாப் பெருகிவிடாது. மதிப்பிற்குரிய உறுப்பினர் எவ்வளவு நேரம் எடுத்துக் கொள்ளப் போகிறார்?

**திரு. வி.ஐ. முனிசாமிப் பிள்ளை** (மெட்ராஸ் : பொது) : சுமார் பதினைந்து நிமிடங்கள்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** ஐயா, எவ்வளவு பேர் பேச வேண்டுமென்று நினைக்கிறார்களோ அவ்வளவு பேருக்கும் வாய்ப் பளிக்க வேண்டுமென்பதே என் எண்ணம். ஆனால் உறுப்பினர்கள் பேச முன் வராதது, கொஞ்சம் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. உறுப்பினர்கள் பேச முன்வரும் வரை நாம் கேட்டுக் கொண்டிருப் போம். 'கோரெம்' இல்லாதபோது அவை தானாகவே முடிவுக்கு வந்துவிடும்.

**திருமதி பூர்ணிமா பானர்ஜி** (உ.பி.: பொது) : இந்துச் சட்டத் தொகுப்பு போன்ற முக்கியமான மசோதாவைக் குறித்து பல உறுப் பினர்கள் பேச விரும்புகின்றனர் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் கள் தெரிவித்துள்ளனர். தாம் விரும்புவதை பேச விரும்பும் பல உறுப்பினர்கள் இருக்கையில் அவர்களுக்கு வாய்ப்பளிக்க 7 மணி வரை அமர்வதில் என்ன ஆட்சேபனை உள்ளது?

**திரு. துணை சபாநாயகர் :** இதை முற்றிலும் ஒத்துக் கொள் கிறேன். பெரும்பான்மை உறுப்பினர்கள் விவாதத்தைத் தொடர விருப்பம் தெரிவித்தால் எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:** சரி, நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம்.

**திரு. துணை சபாநாயகர்:** மிக்க நன்று. திரு. முனிசாமிப் பிள்ளை முடிக்கட்டும். பிறகு நாம் பார்க்கலாம்.

***திரு. வி.ஐ. முனிசாமிபிள்ளை:** பல நூற்றாண்டுகளாக இந்து சமுதாயத்தின் வெளியிலிருந்துவரும் ஒரு சமூகத்திலிருந்து வருபவன்

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 14 டிசம்பர் 1949, பக்கம் 611-14.

என்கிற முறையில், சமயம் மற்றும் சமுதாயச் சீர்திருத்த மசோதா வாக விளங்கும் இதை வரவேற்கிறேன். ஜாதி இந்துக்கள், மட்டு மின்றி இந்துக்களில் எல்லாப் பிரிவினருக்கும், இந்து சமுதாயத்தில் சமவாய்ப்புப் பெற வேண்டுமென்பதற்காக இதில் புரட்சிகரமான மாற்றங்களைச் செய்த மகாத்மா காந்தியை, மக்கள் தொகையில் ஆறில் ஒரு பங்கான நாங்கள் வரவேற்கிறோம். எனக்கு முன்பு பேசிய பல உறுப்பினர்கள் மதத்திற்கு ஆபத்து என்று பேசினார்கள். எதிலிருந்து அல்லது எங்கிருந்து அவர்கள் ஆட்சேபம் கிளம்புகிறது என்பது எனக்குத் தெரியவில்லை. புத்த பகவான், சங்கரர், ராமானுஜர் போன்ற பல அவதார புருஷர்களைக் குறித்தும், ராம் மோகன் ராய் போன்ற சமூகச் சீர்திருத்தவாதிகளைக் குறித்தும், இந்த சமுதாயத் தின் ஆணி வேரையே தீண்டாமை அரித்துக் கொண்டிருக்கிறது என்று முழக்கமிட்டவரும், ஜாதிகளுக்கிடையே திருமணங்களுக்கு வழிகாட்டியாக இருந்தவருமான மகாத்மா காந்தி குறித்தும், இந்நாடு மிகவும் பெருமை கொள்கிறது. இந்தச் சீர்திருத்த நடவடிக்கைகள் எல்லாம் நாம் காலத்தோடு ஒட்டி ஒழுகுகிறோம் என்பதை நிரூபிக் கிறது. சமூகச் சீர்திருத்த நடவடிக்கைகள் எப்பொழுதெல்லாம் சட்ட மன்றங்களின் முன் வருகிறதோ, அப்பொழுதெல்லாம் அவைகள் நிறைவேறாமல் தடைபோடப்படுகின்றன. மதராஸ் சட்டமன்றத் தின் முன், ஆலயப் பிரவேசத் திட்டம் இருந்தபோது நாங்கள் எவ்வித எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது என்பதை மதராஸிலிருந்து வருபவன் என்ற முறையில் உங்களுக்கு எடுத்துரைக்க விரும்புகிறேன். தீண்டப்படாதவர்கள் அனுபவித்து வந்த சமூகக் குறைபாடுகளை நீக்கும் விஷயத்தில் அமைச்சர்களின் முகங்களை நோக்கி மிளகாய்பொடிகள் தூவப்பட்டன. சமூகச் சீர்திருத்த நட வடிக்கைகளை கொண்டு வரும்போது நாட்டில் நாம் சந்திக்கும் நிலை இதுதான். இந்நாட்டிற்கு அத்வைதத்தை அருளிய சங்கரரே அவரது குரு ''நீ யாரென்று கேட்டபோது'' அவர் கூறினார்.

न मे मृत्युङ्का न मे जातिभेदः।
पिता नैव मे न माता न जन्मः॥
न बंधुर्न मित्रो न गुरुर्न शिष्यः।
चिदानंदरुपः शिवोऽहं शिवोऽहं॥

பகவான் சங்கரரால் அருளப்பட்ட வார்த்தைகள் இவை. ஆண் பெண் பாலர்களுக்கிடையே அவர் எவ்வித வேறுபாட்டையும்

பார்க்கவில்லை. ஒவ்வொருவரையும் அவர் சமமாகவே பாவித்தார். இந்த மசோதாவுக்கு ஏன் இவ்வளவு எதிர்ப்புள்ளது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. தென்னாட்டின் மிகப் பெரும் தத்துவ மேதையான திருவள்ளுவர் ஆணும் பெண்ணும் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றியும் எவ்வாறு வாழ வேண்டு மென்பது பற்றியும் அறிவுரை கூறியுள்ளார். அவைகளெல்லாம் விலை மதிப்பற்ற முத்துக்கள். மனிதகுலத்திற்கு கடவுளால் அருளப்பட்ட எல்லாச் செல்வங்களிலும் பெண்களுக்கு சமமான பங்களிப்பதில் ஏன் இவ்வளவு எதிர்ப்புள்ளது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

மசோதா கொண்டு வரப்பட்ட நேரம் சரியானதல்ல என்று எனக்கு முன் பேசிய சில உறுப்பினர்கள் கூறினார்கள். 1944 ஜனவரி 20ல் மத்தியச் சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட நாளி லிருந்து இந்த மசோதா நாட்டின் முன் உள்ளது. இந்தியாவின் மூலை முடுக்குகளில்கூட இந்துச் சட்டத் தொகுப்பைப் பற்றித் தெரிந்திருக் கின்றனர். இம்மசோதாவின் சாரத்தை இந்நாட்டின் சாதாரண மக்கள் பொதுவாகப் புரிந்து கொண்டிருக்கின்றனர். இந்த மசோதாவை விவாதித்து முடிவு செய்யும் அதிகாரம் இந்த அவைக்கு இல்லை என்று கூறும் உறுப்பினர்கள் நாட்டிற்கான, தங்கள் பொறுப்பினை உணர்ந்து பேசுகிறார்களா என்பது புரியவில்லை. வெளிநாடுகளிலும் இந்தியாவிலும் மிகவும் பாராட்டி வரவேற்கப்பட்ட, 30 கோடி மக்களுக்கான அரசியல் அமைப்புச் சட்டத்தைத் தயாரிக்க அதிகாரம் பெற்ற இந்தச் சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு இந்நாட்டின் பெண்கள் முன்னேற்றத்திற்காக இந்த மசோதாவைக் கொண்டுவரத் தகுதி கிடையாதா? ''மதம், ஜாதி, பால்'' ஆகிய அடிப்படைகளில் மக்களை அரசு பாகுபாடு செய்யக்கூடாது என்று அரசியல் அமைப்புச் சட் டத்தின் அடிப்படை உரிமைகள் பகுதியில் தெளிவாகக் கூறப்பட் டுள்ளது. பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் அரசு சில விசேஷ விதிமுறைகளை வகுப்பதை இந்த விதியில் உள்ள எதுவும் தடை செய்யமுடியாது என விதி 15(3) கூறுகிறது. மேலும் விதி 46 இவ்வாறு கூறுகிறது: ''மக்களில் பின்தங்கிய நிலையில் உள்ளவர் களின் கல்வி, மற்றும் பொருளாதார நலன்களை விசேஷ அக்கறை யுடன் ஊக்கப்படுத்த வேண்டும். பெண்கள் இந்தப் பிரிவில் வர வில்லையா? அவர்கள் நலன்கள் பாதுகாக்கப்படவேண்டாமா? இந்தச் சட்டம் கட்டாயப்படுத்தும் சட்டம்கூட இல்லை. எல்லோரும் இதை வரவேற்க வேண்டும். திருமணம், வாரிசு தத்தெடுப்பது

போன்றவைகள் எல்லா மாகாணங்களிலும் வாழும் இந்துக்க ளிடையே ஒரே மாதிரியாக இல்லை. பல இடங்களில் அவை மாறுபட்டு உள்ளன. ஒரு பொதுவான உரிமையியல் சட்டத் தொகுப்பை உருவாக்க வேண்டுமென்று அரசியல் அமைப்புச் சட்டத் தில் நாம் கூறியுள்ளோம். அந்தச் சட்டம் வருவதற்கு முந்தைய நிலை இந்தச் சட்டம் என்பது என் கருத்து. என்னுடைய மாவட்டத்தில் ஏராளமான மலைவாழ் மக்கள் இருக்கின்றனர். அவர்கள் இந்துக் கள் என்று கூறிக் கொண்டாலும், அவர்களுடைய திருமணச் சடங்கு கள், வாரிசுரிமை நடைமுறைகள் போன்றவை இந்துக்களின் நடைமுறை களிலிருந்து மிகவும் வேறுபட்டுள்ளன. பழங்குடி மக்களான தோடர் இனத்தவரிடையே பலதார வழக்கம் இருப்பதால், அந்த இனம் சுருங்கி வருகிறது. மற்றொரு பழங்குடி மக்களான படகாஸ் இனத்தவரின் சடங்கு முறைகளும் இந்துக்களின் நடைமுறை களிலிருந்து வேறுபட் டுள்ளன. அவர்களும் இந்துக்கள் என்றே தங்களைக் கூறிக் கொள் கின்றனர். அவர்களிடையேயான ஒரு வழக்கம் என்னவென்றால், ஒரு பெண்ணை ஒருவன் மணம் புரிய விரும்பினால் அவன் அவளுக்கு வரதட்சிணை கொடுக்க வேண்டும். இதைத் 'திரைப்பணம்' என்கின்றனர். அதன் பிறகு, கணவனிட மிருந்து அந்தப் பெண் பிரிந்து செல்ல விரும்பி, வேறு ஒரு வாலிபன் அவளுக்குத் 'திரைப்பணம்' அளித்தால் அவனைக் கணவனாக ஏற்றுக் கொள்ள அவளுக்கு சுதந்திரம் உண்டு.

புகழ் பெற்ற முனிவர்களையும் துறவிகளையும் உருவாக்கிய இந்நாட்டில் இவை தொடர வேண்டுமா? பழங்குடி மக்களாக இருந்தாலும் சரி, மலைவாழ் மக்களாக இருந்தாலும் சரி, புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி அவர்கள் பாதுகாக்கப்பட வேண்டும்.

ஐயா, எனது மதிப்பிற்குரிய நண்பர்கள் ஏற்கெனவே குறிப் பிட்டபடி பலதாரத் திருமணம், சட்டப்படி ஒழிக்கப்பட்டுவிட்டது. நாடு முழுவதற்குமான ஒரு சட்டத்தை முறைப்படுத்தித் தொகுத் தாலன்றி, மெட்ராசை விட்டு வெளியேறி வேறு ஒரு மாகாணத் தில் திருமணத்தை முடித்துக் கொண்டு, திரும்பவும் மெட்ராசுக்கு வரலாம். நாட்டிலுள்ள எல்லா மாகாணங்களிலும் சட்டம் ஒரேசீராக இல்லையென்றால், மெட்ராஸ் மட்டும் இந்தச் சட்டத்தை அமல் படுத்துவது சாத்தியமற்றதாகும்.

திருமணம், விவாகரத்து சம்பந்தமான அத்தியாயங்களே அவை முன் உள்ள வேறுசில முக்கியமான விஷயங்கள். சமயச் சடங்குகள் அடிப்படையிலான திருமணம் மற்றும் பதிவுத்திருமணம் ஆகிய இரண்டு வகைத் திருமணங்களின் முக்கியத்துவத்தைக் குறித்து ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. இதன்படி பட்டியல் சாதி யினர் ''யோகத்தை'' முடித்துவிட்டு சாதாரணத் தாலியைக் கட்டு கிறார்கள். அதற்குப் பிறகுதான் திருமணம் உண்மையானதாக ஆகிறது. பதிவுத் திருமணம் வந்த பிறகு, இன்றும்கூட மக்கள் இந்த வழக்கத்தைப் பின்பற்றுவதைக் காண்கிறேன். எல்லா இந்துக்களும், சனாதினிகளும் மற்றவர்களும் ஏன் இந்த முறையைப் பின்பற்றக் கூடாது என்பதற்கான காரணம் எதுவும் எனக்குத் தெரியவில்லை.

கூறு 33 (எஃப்) விபசாரத்தைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்தச் சட்டத் தொகுப்பில் அந்தச் சொல்லே இருக்கக்கூடாது என்று நான் விரும்புகிறேன். நம் நாட்டில் மூன்று பெண்கள் இருக்கும்வரை, இந்தியாவில் கற்புடமை பாதுகாக்கப்படும் என்று சுவாமி விவே கானந்தர் சுட்டிக் காட்டியுள்ளார். இந்து சமுதாயத்தில் எந்தப் பிரி விலும் இந்தக் கூடா ஒழுக்கம் பெருமளவில் காணப்படவில்லை. நிச்சயமாக சிலர் இவ்வாறு நடந்து கொள்ளக் கூடும். ஆனால் இதற்காக ஒரு சட்ட விதிமுறை அவசியமா என்பதற்கான காரணம் தெரியவில்லை

கூறு 9ன் துணைவிதி (2) மற்றும் கூறு 16ல் சட்டத்தை மீறுபவர் களுக்கு விதிக்கப்படும் அபராதங்களைக் காண்கிறேன். முக்கிய மாக, ஏழை மக்களுக்கு, குறிப்பிட்ட அபராதத் தொகை மிக அதிகமாக உள்ளது. பெயரளவுக்குள்ள தொகையாக அது இருக்க வேண்டும். தீர்ப்புவழி பிரிதல் என்பதைப் பொறுத்தவரையில் வசதி படைத்தவர்களைப் பொறுத்தவரையில் அது சரிதான். அவர்கள் விவாகரத்திற்கு நீதிமன்றம் செல்லமுடியும். ஆனால் இந்தியாவின் லட்சக்கணக்கான கிராமங்களின் நிலைமை என்ன? ஒரு குறிப் பிட்ட மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சாதிப் பஞ்சாயத்துகள் இதை முடிவு செய்வார்கள். இந்த நடைமுறை சரி என்று நான் கருதவில்லை. இதற்கு ஒரு வழிமுறை காணப்படவேண்டும். மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட பஞ்சாயத்து உருவாக்கப்பட்டு இவை இந்த விவாகரத்து வழக்குகளுக்கு முடிவு காணவேண்டும்.

அடுத்து, சீதனப் பிரச்சினையைப் பார்க்கலாம். ஒரு தகப்ப னாராலோ, சகோதரரானாலோ இது ஒரு பெண்ணுக்குக் கொடுக்கப்

பட்டிருக்கும். கணவன் அதைச் சரியாகப் பாதுகாக்காவிடின் என்ன வாகும்? ஐயா, சீதனச் சொத்து என்றுமே பெண்ணின் உடைமை யாக சேர்க்கப்பட வேண்டுமென்று நான் நினைக்கிறேன்.

கூறு 72 தத்தெடுப்பதைக் குறித்து இவ்வாறு கூறுகிறது: ''சரியான முறையில் தத்தெடுக்கப்பட்டிருந்தால், தத்தெடுத்த தந்தையோ, தாயாரோ அல்லது வேறு எந்த நபருமோ அதை ரத்து செய்ய முடியாது. அல்லது தத்தெடுக்கப்பட்ட பையன் தன் நிலையை உதறிவிட்டு பிறந்த குடும்பத்திற்குத் திரும்ப வந்துவிட முடியாது.'' ஐயா, தத்தெடுக்கப்பட்ட மகனோ அல்லது வேறு எந்த நபருமோ தவறுதலாக நடந்து கொள்வதையும், குடும்ப சொத்தை அழிப்பதையும் தடுப்பதற்கு, ஒரு விலக்களிக்கும் விதி தேவை என நினைக் கிறேன்.

93ஆம் பிரிவு மனைவிக்காக பொறுப்பில் வைக்கப்படும் வரதட்சிணையைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இந்தச் சட்டத் தொகுப்பு அமலுக்க வந்தபின்பு இது நடைமுறைக்கு வரும் என்று கூறுகிறது. இந்தச் சட்டத் தொகுப்பு அமலாவதற்கு முன்பே நிலவிலுள்ள எல்லா நேர்வுகளுக்கும் இது அமல்படுத்தப்பட வேண்டும் என்று நினைக்கிறேன்.

ஐயா, ஆண்களின் கொடுமைக்கு ஆளாகியிருக்கும் பெண்கள் யாவருக்கும், நடைமுறைக்கு வரவுள்ள இந்த இந்துச் சட்டத் தொகுப்பு பெரும் பரிகாரமாக இருக்கும் என்று இறுதியாகச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். பெண்கள் சமமான வாய்ப்புகளையும், சலுகைகளையும் பெற்றுள்ளதாகப் பலர் கூறுகின்றனர். ஆனால் உண்மையில், அப்படியில்லை. சில சந்தர்ப்பங்களில் அப்படியிருக் கலாம். ஆனால் சுமார் 90 சதவீதம் பெண்கள் பல சமூகக் கொடுமை களால் வருந்திக் கொண்டிருக்கின்றனர். கிரேதா, திரேதாத் திவாபர மற்றும் கலி யுகங்களில் நாம் நான்காவது யுகத்தில் வாழ்ந்து வரு கிறோம். இது ஒரு இரும்பு யுகம். சீர்திருத்தங்கள் கொண்டுவர வேண்டிய யுகம். ஆண்களைப் போலவே பெண்களும் எல்லா வசதிகளையும் அனுபவிக்க வகை செய்ய வேண்டும். தொட்டிலை ஆட்டும் கரங்கள் உலகத்தை ஆளும் என்று சொல்லப்படுகிறது. இந்த வசதிகளை நம்மிடமிருந்து அவர்கள் பலவந்தமாக பிடுங்குவதற்கு முன்பு, நாம் அதை அமைதியான முறையில் அவர்களுக்கு அளித்து விடுவோம். எனவே இந்த அரசால் கொண்டுவரப்பட்ட இந்த இந்துச் சட்டத் தொகுப்பை ஆதரிக்கிறேன். இது நடைமுறைக்கு

வரும்போது, இதைக் கொண்டு வருவதற்கு பெரும்பாடுபட்ட எனது மாண்புமிகு நண்பர் அம்பேத்கருக்கு மேலும் இது ஒரு வெற்றிக் கனியாகும்.

***திரு. ஓ.வி. அளகேசன்** : (மெட்ராஸ் : பொது) : ஐயா, இந்த மசோதாவை நிறைவேற்றுவதற்கான பொறுப்பு தன் தலையில் விழுந்ததற்காக பெரும் மகிழ்ச்சியடைவதாக நேற்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். ஐயா, சுதந்திர இந்தியாவின் அரசியல் அமைப்புச் சட்டத்தின் பிறப்பிற்கு அவர் செவிலித்தாயாக இருந்து உதவியதற்கு வரலாற்றில் அவர் பெயர் பொன்னெழுத்தில் பொறிக் கப்படும். ஐயா, அவர் பேராசைக்காரர். மேலும் ஒரு வெற்றிக் கனியை அடைய அவர் விரும்புகிறார். அது நியாயமானதுதான். பழைய ரிஷிகளான மனு, யாக்னவல்கியர், மற்றும் சட்டங்களை வழங்கிய இதர பண்டைய வல்லுனர்களைவிட ஒரு படி மன்னே செல்ல வேண்டும் என்பதே அவருடைய ஆசை.

நாடு முழுவதற்குமான ஒரே சீரான சிவில் சட்டம் சம்பந்த மான புதிய அரசியலமைப்பின் 44ஆவது பிரிவைக் குறித்து, எனக்கு முன்பு பேசிய பேச்சாளர்களில் ஒருவர், திரு. படாஸ்கர் என்று நினைக்கிறேன். பேசினார். ''இந்த இந்துச் சட்டத் தொகுப்பை வாபஸ் பெற்றுக்கொண்டு சிவில் சட்டத் தொகுப்பை ஏன் கொண்டு வரக் கூடாது, என்று கேட்டார். தொல்லைதரும் நாளை ஒத்திப் போட வாதிடுவது போன்று இது தோன்றலாம். இந்தப் பிரச்சினை குறித்து, கொள்கை அறிக்கை ஒன்றை, அரசு ஏன் முன்வைக்கக் கூடாது? அந்தப் பாதைக்கான முதல் அடிதான் இதுவா? இதைத் தொடர்ந்து, அரசியல் அமைப்பின் 44ஆவது பிரிவுக்கு செயல் வடிவம் கொடுக்க மேலும் பல நடவடிக்கைகள் எடுக்கப்படுமா? அரசுக்குத் தர்ம சங்கடத்தைக் கொடுக்க நான் விரும்பவில்லை. ஆனால் அதே நேரத்தில், அரசிடமிருந்து ஒரு தெளிவான கொள்கை அறிக்கையை எதிர்பார்க்கிறேன்.

ஐயா, அன்றொருநாள், ஒரு தார மணத்திற்கு, ஆதரவாக மாண்புமிகு திரு. கே. சந்தானம் வாதிட்டது எல்லோர் மனதையும் மகிழ்வித்தது. இந்த நடைமுறையை யாராவது எதிர்க்க முடியுமா என்று அவர் சவால் விட்டார். ராமரின் பண்புகளை தனக்கே உரிய,

---

★ அ.நி.வி. (சட்) டி. தொகுதி VI, பாகம் II, 14 டிசம்பர் 1949, பக்கங்கள் 614-21.

யாரும் பின்பற்ற முடியாத பாணியில், போற்றுதற்குரிய முறையில் தியாகராஜ சுவாமிகள் பின்வரும் சொற்களில் எடுத்துரைத்துள்ளார்.

*ஒகா மாட்டா, ஒகா பாணம், ஒகா பத்னி*

*ஒரு சொல், ஓர் அம்பு, ஒரு மனைவி.*

இந்த லட்சியம் நம் முன் வைக்கப்பட்டது குறித்து நாமெல்லோரும் மகிழ்ச்சியடைகிறோம். ஐயா, அது இந்துக்களுக்கு மட்டுமே சிறந்த நடைமுறையா என்று கேட்கிறேன்? இந்தியாவின் எல்லாக் குடிமகன்களும், ஒரு தார மணத்தையே பின்பற்ற வேண்டுமென்ற பொதுவான மசோதாவை இந்த அரசு கொண்டுவருமா? அரசுக்குத் தர்ம சங்கடத்தை ஏற்படுத்துவதற்காக நான் இதைக் கூறவில்லை. அதை மீண்டும் சொல்கிறேன். இந்த முறையில் அந்த நடைமுறை கொண்டுவரப்பட்டிருக்கும்போது, பிரச்சினையையும் அதன் சரியான பகைப்புலனில் அளித்திருக்க வேண்டும். மதத்தின் அடிப்படையில், இதை ஆட்சேபிக்கக்கூடிய ஒரு சமூகம் இந்தியாவில் இருப்பது உங்களுக்கு ஞாபகத்தில் இருக்கும், மேலும், நாட்டின் பிரிவினைக்குப் பிறகு, தொடர்ந்த சோக நிகழ்ச்சிகளை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். நாட்டின் மதச்சார்பற்ற நிலைக்கு அது எதிரானது என்றும், அது மதத்தில் குறுக்கீடு செய்வதாகும் என்றும், நீங்கள் கூறுவீர்கள். நமது அரசு மதச் சார்பற்றதாக இருக்கும் என்று நமது பிரதமர் அறிவித்துவிட்டார். நமது அரசின் மதச்சார்பற்ற தன்மை குறித்து நம் மக்களுக்கு அறிவு புகட்ட வேண்டும். எல்லைக்கப்பால் நடை பெறும் பல விஷயங்களின் எதிர்விளைவுகள் இந்தப் பக்கத்திலும் நிச்சயமாக ஏற்படும். அந்த அரசு மத அடிப்படையிலானது என்பது மானக்கேடான விஷயம். அந்தக் கொள்கையின் முழு விளைவுகளையும் நிறைவேற்ற அவர்கள் தீர்மானித்துள்ளனர். மறு பக்கத்தில் நடைமுறையிலுள்ள அந்தக் கொள்கையின் எதிர் விளைவுகள் இந்தப் பக்கத்தில் ஏற்படாமல் இருக்க முடியாது. எனவே, இவ்வரசின் மதச் சார்பற்ற தன்மை குறித்து மக்களிடையே சந்தேகம் தோன்ற ஆரம்பித்துள்ளது. இந்தக் கோணத்தில், அவர்கள் அதைப் பார்க்கிறார்கள். அதற்கு நியாயமான காரணமும் உள்ளது. இந்து மதம் சம்பந்தமான எதிலும் அநாவசியமாகத் தலையிடுவதே மதச் சார்பற்றது என்று உணரப்படுகிறது. இம்மாதிரி நடவடிக்கைகளை இந்நாட்டிலுள்ள பொதுமக்கள் இவ்வகையில்தான் வரவேற்கிறார்கள். இந்நாட்டில் நாம் நிறுவ விரும்பும் மதச்சார்பற்ற அரசின் நலனுக்காக, நமது மக்களையும் நம்முடன் அழைத்துச் செல்ல நாம் முயற்சிக்க வேண்டும். நாங்கள் ஒரு மதச்சார்பற்ற அரசு என்று அரசு

மட்டும் கூறிக்கொண்டிருந்தால் போதாது. நாட்டின் பொதுமக்களும் இதைச் சரியாகப் புரிந்து கொண்டு, நன்கு வரவேற்க வேண்டும். இல்லையெனில் நீண்டகாலம் மதச்சார்பற்றதாக அது தொடர முடியாது. இந்நாட்டில் நாம் நிறைவேற்ற வேண்டும் என்று கருதிய லட்சியத்தை இழப்பதுடன், அது நிறைவேறும் நாளை தள்ளிப் போட்டு விடுவோம். எனவேதான் ஐயா, தற்போது மக்கள் சரியான மன நிலையில் இல்லை என்று கூறுகிறேன். அவர்கள் கோபத்தில் மௌனமாக இருக்கிறார்கள். அவர்கள் மன வருத்தத்தில் இருக் கிறார்கள். கோபத்திலிருக்கும் குழந்தை மிக இனிப்பான பொருளைக் கூட உண்ண மறுப்பது போன்று, இந்தச் சீர்திருத்தத்தை வரவேற்கும் நிலையில் மக்கள் இல்லை. அதில் சில நல்ல பகுதிகள் கூட இருக்கலாம். மக்கள் விரும்பாத எதையும் அவர்கள் மீது திணிப்பது சிறந்த தல்ல. கடந்த தடவை டாக்டர் அம்பேத்கர் பர்க் அவர்களை மேற்கோள் காட்டினார். அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூன்றாவது வாசிப்பின்போது நிகழ்த்திய உரையின் இறுதியில் சோக உணர் வுடன் நமக்கு ஓர் எச்சரிக்கை விடுத்தார்.

''பாதுகாக்க வேண்டும் என்று விரும்பும் எவரும் பழுது பார்க் கவும் தயாராக இருக்க வேண்டும்.''

ஐயா, இது மிக நல்லது. நாம் பழுதுபார்க்கத் தயாராக உள்ளோம். ஆனால் இந்த மசோதா வெறும் பழுதுபார்க்கும் நட வடிக்கை மட்டுந்தானா? நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் வீட்டையே, அது உடைத்து நொறுக்குகிறது. ஒருபுதிய கட்டமைப்புக்கு அது திட்டமிடுகிறது. கட்டமைப்பு மாற்றங்களைச் செய்ய அது விரும்பு கிறது. இங்கும் அங்குமாகச் செய்யப்படும் பழுதுபார்த்தல் என்று அதைக் கூற முடியாது. அது கட்டமைப்பையே மாற்றுவதாகும்; பழைய கட்டமைப்பை நீக்கிவிட்டு ஒரு புதிய கட்டமைப்பை அமைப்பதுதான் அதன் நோக்கம் என்று நிச்சயமாகக் கூறுவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பழுது பார்த்தல் யாவுமே, கட்டமைப்பைப் பழுது பார்ப்பதுதான்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** கட்டமைப்புச் செப்பனிடுவதைக் கூட நான் ஆட்சேபிக்கவில்லை. இந்தப் பழுதுபார்த்தலுக்கு முன் இந்த அவையே கட்டமைப்பைப் பழுது பார்த்தலுக்கு உள்ளாக வேண்டும். இதைக் கூறுவதன் மூலம் இந்த அவையின் இறையாண் மையையோ, பிரதிநிதித்துவ தன்மையையோ சிறிதளவு கூட குறைத்து

மதிப்பிடவில்லை. மற்ற மசோதாக்களை நாம் நிறைவேற்றியபோது, அதைக் கண்டு யாரும் ஆச்சரியப்படவில்லை. இதைக் குறித்து பேராசிரியர் ஷா நீண்டநேரம் விளக்கினார். அவை வழக்கமான விஷயங்கள். ஆனால் இது முற்றிலும் மாறுபட்ட அடிப்படையில் கையாளப்படுகிறது. சந்தேகத்துடனும், கோபத்துடனும் இது நோக்கப்படுகிறது. இந்தக் காரணத்தினால்தான், அதைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டுமென்று சொல்கிறேன். கட்டமைப்பில் பழுது பார்க்கப்பட்ட இந்த அவை, அதிகத் தன்னம்பிக்கையுடனும், அந்தக் கட்டத்தில் அடையக் கூடிய அளவுக்கு வெற்றியுடனும் இந்த மசோதாவை நிறைவேற்ற அனுமதிக்கப்பட வேண்டும்.

ஐயா, இந்த மசோதா நிறைவேற்றப்படும் சூழ்நிலை வேறு ஒரு முக்கிய விஷயம். நம்முடைய சிந்தனைகளையும் நடவடிக்கைகளையும் வழிநடத்திச் சென்ற மகான் ஒருவர் நம் நாட்டில் இருந்தார். நாம் அடிமைகளாக இருந்தாலும், சுதந்திரமாகச் சிந்திப்பதற்கும், சுதந்திர மனிதர்களாகச் செயல்படுவதற்கும் நமக்கு அவர் கற்றுக் கொடுத்தார். நாம் அவரைப் பின்பற்றினோம். அந்தப் பரம்பரைக்கு அவர் வித்திட்டார். இந்த நாடு யதார்த்தமான முறையில் சுதந்திரம் அடைவதற்கு நீண்ட காலத்திற்கே முன்பே, சுதந்திரச் சிந்தனை மற்றும் செயல்பாடுகளில் அவர் ஈடுபட்டார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக நமக்கு வழிகாட்ட, அவர் நம்மிடையே இல்லை. நாம் பின்பற்றுவதற்கு அவருடைய உதாரணம் நம் முன் இருக்கிறது. ஆலயப் பிரவேசம், தீண்டாமை ஒழிப்பு போன்ற பல்வேறு விஷயங்களில் கூட, சட்டத்தின் மூலம் இந்த உயர்ந்த லட்சியங்களை அடைய வேண்டாம் என்று அவர் அறிவுறுத்தினார். அவர் தன்னையே வருத்திக் கொண்டார். இவ்வகையில்தான் அவர் இந்தப் பெரும் சீர்திருத்தங்களை நிறைவேற்றினார். இம்மாதிரியான நடைமுறைகளை அவர் வலியுறுத்தியதுடன், மக்கள் அதை ஏற்றுக் கொள்ளுமாறு வாதிட்டு, அறிவுறுத்தினார். இது ஒரு நிலைநாட்டப்பட்ட உண்மையாகிவிட்டது. இந்த வழியைத்தான், நாமும் பின்பற்ற வேண்டும். விருப்பமில்லாத மக்களின் மீது, சீர்திருத்தங்களைத் திணிப்பதன் மூலம் அல்ல.

**திரு. வி.ஐ. முனிசாமிப் பிள்ளை :** நீங்கள்தான் அவர்களுக்கு அறிவுரை அளிக்க வேண்டும்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** நாங்கள் நாடு பூராவும் சென்று, மக்களுக்கு அறிவூட்டுவோம். விரைவில் பொதுத் தேர்தல் வருகிறது. அதுவே அதற்கு மிகச் சிறந்த நேரம் ஆகும்.

**திருமதி ஜி. துர்க்காபாய் (மெட்ராஸ் : பொது) :** மொத்த பயமே அதுதான்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** இந்த மசோதாவில் உள்ள பல்வேறு விதிமுறைகளைக் குறித்து மக்களுக்கு அறிவூட்ட அது மிகச் சிறந்த வாய்ப்பாக இருக்கும். நேற்று காங்கிரஸ் தலைவர் கூறியவை மிகவும் அர்த்தம் பொதிந்துள்ளவை. இங்கிலாந்திலுள்ள தொழிலாளர் அரசு எப்படி செயல்படுகிறது? வாக்காளர்களின் அனுமதிபெற்ற மசோதாவை, ஒரு முக்கியமான மசோதாவை அது ஒத்தி வைத்து விட்டது. வாக்காளர்களின் அனுமதியிருந்தும்கூட, நாட்டில் உள்ள நிலைமையைப் பார்த்தபின், பொதுத் தேர்தல் முடியும் வரை அதைத் தள்ளி வைத்தது. மக்களின் தீர்ப்பை அவர்கள் மீண்டும் பெறுவர். அதன்பிறகு அந்த மசோதா நிறைவேற்றப்படும். வாக்காளர்களின் அனுமதியும், ஒப்புதலும் உள்ள ஒரு விஷயத்திற்கே இப்படியென்றால், வாக்காளர்களுக்கு நமது நோக்கம் சிறுதுகூடத் தெரிவிக்கப்படாத நிலையில், அது மேலும் அவசியம் என்று நினைக்கிறேன். ஐயா, ஒவ்வொரு கூட்டத் தொடரிலும் இந்த மசோதா இரண்டு நாட்கள் விவாதிக்கப்படும் காட்சியைக் கண்டு வந்திருக்கிறோம். அடுத்த தீபாவளிக்கு தங்க வளையல்களைப் புதுப்பிப்பதாக வாக்களிப்பது போன்றதுதான் இது. இப்படித்தான் நாம் நடந்து கொண்டு வருகிறோம். இவ்வாறு நடந்து கொள்வதும் சரிதான். ஏனெனில், இந்த மசோதாவின் தீவிர ஆதரவாளர்களான, நமது சகோதரிகள் கூட தங்கள் மனதை மாற்றிக் கொண்டு, அதைத் தம் வழியில் மேலும் செழுமைப்படுத்த முயற்சிக்கலாம். யார் கண்டார்கள் எவரும் எப்போதும் ஒரே கருத்துடன் இருக்கமுடியாது. அதுவும் முக்கியமாக பெண்கள்.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** தங்களுடைய கருத்துகளை அடிக்கடி மாற்றிக் கொள்ளும் சில ஆண்களும் உள்ளனர்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** நமது நாட்டின் ஆதிகவியான பெரும் கவிஞர் வால்மீகி இவ்வாறு கூறியுள்ளார்: பெண்களின் பொதுவான குண நலன்கள் மட்டுமே இங்கு குறிப்பிடப்படுகிறது. எந்த ஒரு குறிப்பிட்ட நபரையும் இது குறிப்பிடவில்லை.

*சதாஹ்வதானம் லோலாத்ராம்*

அதாவது,

31

*மின்னலைப் போல் பெண்கள் மாறுகிறார்கள்.*

அதே போன்று, அவர்கள் தங்கள் மனதை மாற்றிக் கொள்வதுடன், மேலும் சிறப்படைய முயற்சிக்கிறார்கள். இதுவரை காத்திருந்ததால் அவர்கள் ஆதாயம் அடைந்தார்களா இல்லையா என்பதை உங்களையும் அவையையும் கேட்க விரும்புகிறேன் ராவ் குழுவின் சிபாரிசுப்படி மகள்களுக்கு பாதிப் பங்கே கொடுக்கப்பட்டது. ஆனால், இப்பொழுது டாக்டர் அம்பேத்கரின் மசோதாவின் படி மகள்கள், மகன்களுக்கு சமமான பங்கைப் பெறுவார்கள் என்பது அவர்களுக்கு ஆதாயந்தானே.

மேலும், ஐயா, அவர்கள் காத்திருந்தால் இன்னும் அதிகம் பெறலாம். மகள்கள் இரண்டு மடங்கு பெறலாம். முதல் நாளன்று மதிப்பிற்குரிய ஏ.கே. மேனனின் உரையைக் கேட்டோம். மற்றொரு நாள், வேறொரு இடத்தில் திரு. தாணுப்பிள்ளையின் உரையைக் கேட்டோம். இதைக் குறித்து மிகக் கவலையுடன் உள்ளனர். முன்னுக்குத் தள்ளுவதற்குப் பதிலாக, பின்னுக்குத் தள்ளிவிட்டதாக அவர்கள் உணர்கின்றனர். இந்தியாவின் மற்றப் பகுதிகளை முன்னுக்கு இட்டுச் செல்லும் இந்த மசோதா தங்களைப் பின்னுக்குத் தள்ளிவிட்டதாக மலபார்காரர்கள் திடமாக நம்புகின்றனர். வேறு பகுதிகளில், தாய் வழி சமுதாய அமைப்பு முறை மறைந்து வருகையில் மருமக்கள் தாயத்தின் கீழ் இந்த நாடே வருவதற்கு அவர்கள் மற்றவர்களை தம் வயப்படுத்தலாம். நமது மலபார் உறுப்பினர்கள் இந்த அவையிலுள்ள உறுப்பினர்களை ஏற்றுக் கொள்ள வைத்து விட்டால், பிறகு எல்லாம் மருமக்கள்தாயமாகிவிடும். ஒளி மிகுந்த எதிர்காலம் இருக்கும். காத்திருப்பதால் அவர்களுக்கு எந்த நஷ்டமும் இல்லை. மற்றவர்களைத் தன் வயப்படுத்தும் சக்தி அவர்களுக்குள்ளது. அவர்கள் மற்றவர்களை இசையச் செய்வதுடன், தங்கள் பாதைக்கு வர தூண்டுவார்கள். இதையெல்லாம் அவர்களால் செய்ய முடியும்.

**திரு. துணை சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் இம்மாதிரி சொற்றொடர்களை உபயோகிக்க வேண்டாம்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** மன்னிக்க வேண்டும். நான் கூறிய சொல்லை வாபஸ் பெற்றுக் கொள்கிறேன்.

நாம் இந்த அவையில் ஓர் அற்புதமான காட்சியைக் கண்டோம். ஓர் அற்புதமான நையாண்டியாக ஆரம்பித்த உரை

சோகமான உபதேசத்தில் முடிந்தது. ஓர் இரவிலேயே நையாண்டி, உபதேசமாக மாறியது. அதைப் பார்க்கும்போது எதுதான் நடக்காது என்று தோன்றுகிறது. இந்த மசோதாவை மேலும் புரட்சிகரமான தாகச் செழுமைப்படுத்த முடியும் என்று இந்த மசோதாவின் தீவிர ஆதரவாளர்களே கருதுகின்றனர். அவர்கள் காத்திருந்தால் மேலும் சிறப்பான ஒரு மசோதாவை அவர்கள் பெற முடியும். நாட்டின் அனுமதியையும் பெற்ற திருப்தியும் அவர்களுக்குக் கிட்டும்.

ஐயா, வேறொரு கண்ணோட்டத்தில், இதைப் பார்க்க விரும்பு கிறேன். பிரச்சினையின் மீதான இந்த மசோதாவின் அணுகுமுறை என்ன? இந்து சமுதாயத்தில் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே சமத்துவமின்மை உள்ளது என்ற அணுகுமுறைதான். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே சமத்துவமின்மை என்ற கருத்து. பைபிளில் அளிக்கப்படும் கருத்து என்பதை மிகவும் மரியாதையுடன் தெரி வித்துக் கொள்கிறேன். ஆணும் பெண்ணும் அர்த்தநாரீஸ்வரராக சமமாகவே இருக்கிறார்கள் என்பதே இந்து மதத்தின் கருத்தாகும். இதுதான் நமது சிந்தனைப் போக்கு. ஐயா, அதை இப்படிக் கூறலாம். அது இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கை. ஆனால் அது முற்றி லும் நிறைவேற்றப்பட்டதாக கூறமாட்டேன். ஆனால் அதுதான் இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கை. மாறுபட்டிருத்தல் என்பதே நம் கருத்து. ஆண் வலிமையென்றால் பெண் பொறுமையைக் குறிக்கிறது. ஆண் நுண்ணறிவைக் குறித்தால் பெண் ஞானத்தைக் குறிக்கிறது. ஆண் இலக்கணம், என்றால், பெண் கவிதையாகிறாள். பார்வதி பரமேஸ்வரரை காளிதாசர் சொல்லும், பொருளும் என்று வர்ணிக்கிறார். இதுதான் நமது அடிப்படை அணுகுமுறை. ஆணுக் கும் பெண்ணுக்கும் சமத்துவமின்மை என்ற அடிப்படையில் இந்தப் பிரச்சினையை அணுகினால் அடிப்படைத் தவறு இழைத்தவர் களாகிறோம்.

மேலும் ஐயா, தற்போதைய சூழ்நிலை ஒரு சுதந்திரமான சூழ்நிலை அல்ல என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஏனெனில், முக்கியமாக இந்த விஷயத்தில், ஒரு சுதந்திர நாடு என்ற முறையில் நமது சட்டங்களை நாம் ஆய்வு செய்ததில்லை. இப் பொழுது அதிகம் நடைமுறையில் இருப்பது **யாக்னவல்கியரோ** அல்லது **மனு**வோ அல்ல. பிரிட்டிஷ் நீதிமன்றங்கள்தான். இந்தியச் சட்டங்களை விருப்பு வெறுப்பின்றி, திறந்த மனத்துடன் ஆய்ந்து பார்க்க நமக்கு ஒரு பொழுதும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. எப் பொழுதுமே மேலை நாட்டுக் கருத்தோட்டங்களும், சிந்தனைப்

போக்குகளும் நம் சிந்தனையை ஒரு பக்கமாகச் சாய்த்துவிட்டன. அரசியல் அடிமைத்தனம் நீங்கிவிட்டாலும், மேலை நாட்டு நாகரிகம் மற்றும் கொள்கைகளின் ஈர்ப்பு சக்தியிலிருந்து நாம் மீளவில்லை. எனவே காலம் சிறிது சென்றால், நமது சட்டங்களிலுள்ள நல்லது, கெட்டதுகளை சுதந்திரமான முறையில், புதிய முறையில் ஆய்வு செய்ய முடியும். அது இந்த மசோதாவைச் சீர்ப்படுத்துவதற்கும், செழுமைப்படுத்துவதற்கும் நமக்கு வாய்ப்பளிக்கும்.

ஐயா, ஆண் பெண்ணுக்குச் செய்த கொடுமையைக் களைய வேண்டும் என்ற உணர்வும் இந்த மசோதா கொண்டு வரப்பட்ட தற்கு மற்றொரு காரணமாக உள்ளது. விளையாட்டாகவும் மிகுந்த அக்கறையுடனும் முன்பு கூறப்பட்ட எல்லா விஷயங்களையும், மீண்டும் நான் திரும்பிக் கூறவிரும்பவில்லை. ஆனால் பெண்ணுக்கு எந்த அநீதியும் இழைக்கப்படவில்லை என்று நான் கூற முடியும். சாதாரண வாழ்க்கையில் ஈடுபடுவதை விட வேறு எதைச் செய்ய வும் தூண்டும், தொடர்பற்ற சூழ்நிலைகளால் முறுக்கேறிய தன்மை யின் புத்தி மாறாட்டமே இது என்றுதான் நான் கூறுவேன். இவ்வாறு தான் நான் அதைக் கருதுகிறேன். இந்த நாட்டில் பெண்களுக்குத் தீங்கிழைக்க எதுவும் செய்யப்படவில்லை. மறு தரப்பினர் எழுப்பிய வாதங்கள் சிலவற்றைப் பரிசீலிக்க விரும்புகிறேன். அரசு தரப்பின ரிடம் ஒரு போக்கு அதிகமாக வளர்ந்து வருவதைக் காண்கிறேன். ஒரு மசோதா விவாதிக்கப்படும்போது, சில உறுப்பினர்கள் அதை ஆதரிக்கிறார்கள், சிலர் அதை எதிர்க்கிறார்கள். எனவே இது இசை வின் மிகப்பெரும் பொது அளவு என்று கூறுகின்றனர். இது ஒரு எளிய முறையிலான தீர்வாகும். மசோதாவுக்குப் பொறுப்பான நமது படித்த அமைச்சர் அவ்வாறு நடந்து கொள்ள மாட்டார் என நினைக் கிறேன். எனக்கு இதில் எந்த சந்தேகமும் இல்லை. அது மிகப் பெரும் பொது அளவு அல்ல, மிகச்சிறு பொது அளவு ஆகும் என்று தான் நான் கூறுவேன்.

ஐயா, இந்த மசோதாவுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டதின் அடிப்படை, பாரபட்சமான கண்ணோட்டமும், மனோபாவமேயன்றி நியாயமான காரணங்களல்ல என்று கூறப்பட்டது. இதற்கு ஆதரவு .தெரிவிக்கப்பட்டதும் அதே போன்ற குருட்டுத்தனத்தின் அடிப்படை யில்தான் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அதேபோன்ற பாரபட்சமான கண்ணோட்டமும், நியாயமற்ற காரணங்களுந்தான். ஏதோ ஆதரவு என்பது அறிவுபூர்வமானதென்றும், எதிர்ப்பு என்பது அறியாமை என்பதும் சரியல்ல.

மேலும், ஐயா, இது ஒரு இயல்விக்கும், இசைவளிக்கும் நடவடிக்கையே என மசோதாவின் ஆதரவாளர்கள் கூறுகின்றனர். சனாதனிகள் எந்தக் குறுக்கீடுமின்றி தங்கள் பழைய வழியில் செல்லலாமென்றும், சீர்திருத்தவாதிகளும் தங்கள் சொந்த வழியில் செல்லலாமென்றும், வேறு ஒரு இடத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, இந்த மசோதாவின் விதி முறைகளில் சாதகமான அம்சங் களை எடுத்துக் கொள்ள விரும்புபவர்களை அதற்கு அனுமதிப்ப துடன், மற்றவர்கள் தங்கள் சொந்தப் பாதையில் செல்ல, முழு சுதந்திரமும் அளிக்கப்பட்டுள்ளது. இதை டாக்டர் அம்பேத்கர் கூறியதாக நினைக்கிறேன். உரிமத்திற்கான பொதுவான சட்டம் ஒன்றை இயற்றி, இதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்புபவர்கள், அவ்வாறு செய்யலாம் என்று கூறுவதைப் போல் இது உள்ளது. இது ஓர் இயல்விக்கும், இசைவளிக்கும் நடவடிக் கையே என்ற வாதம் செல்லுபடியாகாது. மேலும் சாரதா சட்டம் போன்ற சட்டங்களுக்கு கடந்த காலத்தில் எதிர்ப்பு இருந்தது என்று கூறப்பட்டது. இந்த மசோதா முற்றிலும் வேறுபட்ட அடிப்படையில் உள்ளது. அந்தச் சட்டத்திற்கும் இந்த மசோதாவிற்கும் இடையே வேறுபாடு உள்ளது.

நீண்டகாலமாக, இந்த மசோதா நாட்டின் முன் உள்ளதாக வும் எனவே இனியும் நாம் காத்திருக்கவேண்டியதில்லை எனவும் டாக்டர் தேக் சந்த் கூறினார். இந்த நாட்டின் முன் பல ஆண்டுகளாக இந்த மசோதா உள்ளது என்பது உண்மைதான். ஆனால், அப்பொழுது காங்கிரஸ் அதிகாரத்தில் இல்லை. எனவே அதில் யாரும் அக்கறை கொள்ளவில்லை. காங்கிரஸ் அதிகாரத்துக்கு வந்தவுடன், காங்கிரஸ் கட்சியின் அமைச்சராக டாக்டர் அம்பேத்கர் இந்த மசோதாவை நிறைவேற்றச் செயல்படத் துவங்கிய பின்பு, அதில் ஒவ்வொரு வரும் மிகவும் அக்கறை காட்ட ஆரம்பித்துள்ளனர். அது நடை முறைக்கு வந்துவிடும் என்பது அவர்களுக்குத் தெரியும். எனவேதான் மக்கள் இந்த மசோதாவை நன்கு பரிசீலிக்க வேண்டும் என்று கூறு கிறேன். இதுவரை அது இருந்த நிலையிலும், இப்பொழுது அதன் நிலையிலும் வேறுபாடு உள்ளது.

ஐயா, இந்த மசோதாவை எதிர்க்கும் பல பெண்கள் தங்கள் ஆடவர்களின் தூண்டுதல்களால் அப்படிச் செய்கிறார்கள் என்று கூறப்பட்டது. இது எந்தவித ஆதாரமுமற்றது. குற்றச்சாட்டு என்று நினைக்கிறேன். இந்த மசோதாவை ஆதரிக்கும் பெண்கள், தங்கள் கணவன்மார்களிடம் அதிருப்தியுள்ளவர்களா? அல்லது, இந்த

மசோதாவை ஆதரிக்கும் ஆண்கள் தங்கள் மனைவிகளின் வற்புறுத்து தலினால் அப்படிச் செய்கிறார்களா? இந்த மாதிரியான அர்ப்பத் தனமான வாதங்கள் பயனற்றவை.

**திரு. பி. தாஸ் :** இந்தக் கேள்விகளுக்குப் பதிலளிக்க இங்கு யாரும் இல்லை.

**திருமதி ஜீ. துர்க்காபாய் :** தங்கள் கணவன்மார்கள் திரும்பத் திரும்பத் திருமணம் செய்து கொள்ளும்போது அவர்கள் மகிழ்ச்சி யாக இருக்கிறார்கள் என்று நீங்கள் கூறமுடியுமா?

**திரு. ஓ.வி. அளகேசன் :** அம்மையார் அவர்களே, அதற்குத் தான் நான் வருகிறேன். தயவு செய்து கொஞ்சம் பொறுமையாக இருங்கள்.

**திருமதி ஜீ. துர்க்காபாய் :** தயவு செய்து அந்தக் கேள்விக்கு முதலில் பதில் சொல்லுங்கள்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** ஆம். உரிய நேரத்தில் உரிய வகை யில் நான் பதில் சொல்வேன்.

**பண்டிட் கோவிந்த மாளவியா :** இன்னும் எவ்வளவு நேரம் அமர்வதாக உத்தேசித்துள்ளோம் என்பதைத் தெரிந்து கொள்ள லாமா?

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** ஆறு மணி.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** ஏழு மணி.

**திரு. துணை சபாநாயகர் :** அவை கொஞ்சம் கொஞ்சமாக மெலிந்து வருவதைக் காண்கிறேன். அது மிகவும் மெலிந்து போன வுடன் நான் எழுந்து விடுவேன்.

**ரோகிணி குமார் சௌதுரி :** இப்பொழுது நாம் தேனீர் அருந்தச் செல்லலாமா, ஐயா?

**திரு. துணை சபாநாயகர் :** இல்லை. மதிப்பிற்குரிய உறுப் பினர் விரைவில் முடித்துவிடுவார்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** ஐயா, இவ்வகையான மசோதாவை இருவகையில்தான் நியாயப்படுத்த முடியும். இந்த மாதிரியான மசோதாவுக்கு மக்களிடமிருந்து உணர்வு பூர்வமான கோரிக்கை இருக்க வேண்டும். அல்லது, சீர்திருத்தம் எதையாவது கொண்டுவர எண்ணம் கொண்டுள்ள சிலர், அந்தச் சீர்திருத்த நடவடிக்கையின் சிறப்பம்சத்தை சமுதாயம் உணராது இருப்பினும், இது சமுதாயம் முழுவதற்குமே பயன்தரக் கூடியது என்று கருதலாம். அவர்கள் மக்களிடம் சென்று தங்கள் நிலை சரியானதே என்று நிரூபித்து அவர்களுக்கு அறிவூட்ட வேண்டியது, இந்தச் சீர்திருத்த நடவடிக்கை பயனுள்ளது என்று நினைப்பவர்களின் கடமையாகும். என்னுடைய வாதமெல்லாம், இந்த மசோதாவைக் கொண்டு வந்தவர்கள், இந்த சமுதாயத்திற்கு இது பயன்தரத்தக்க நடவடிக்கை என்று நம்பு பவர்கள், மக்களிடம் சென்று அவர்களுக்கு இதை தெளிவுபடுத்த வேண்டும். மசோதாவின் தீவிர ஆதரவாளர்களிடமிருந்து இதைத் தவிர வேறெதையும் நான் விரும்பவில்லை.

**திருமதி ஜி. துர்க்காபாய் :** அவர்கள் அதைச் செய்துள்ளனர்.

**திரு. ஓ.வி. அளகேசன் :** இதை ஏற்கெனவே அவர்கள் செய்து விட்டதாக என் சகோதரி கூறுகிறார். இந்தச் சிறுபான்மையினரான சீர்திருத்தவாதிகள், இந்துக்களின் பெரும்பான்மையினரின் சார்பாக பேசும் உரிமை இருப்பதாகக் கூறுவது நம்ப முடியாதது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அவர்களுக்குப் பொறுமை வேண்டும். இந்த மசோதாவின் சிறப்புகளை மக்களுக்கு எடுத்துணர்த்த வேண்டும். ஏதோ திருப்திக்காக அதை வேக வேகமாக நிறைவேற்ற முயற்சிக்கக் கூடாது.

நான் சுட்டிக்காட்ட விரும்பும் மேலும் ஒரு முக்கியமான விஷயம் இதுதான் : அவசர கோலத்தில் இம்மசோதாவை நிறை வேற்றிச் சட்டமாக்கிவிட்டாலும், விதவை மறுமணச் சட்டம் ஒரு நூற்றாண்டுக்கு முன்பு நிறைவேற்றப்பட்டுச் செயலற்ற சட்டமாக இருப்பது போல், இதுவும் ஆகிவிடும். அது ஒரு செயலற்ற சட்ட மாகிவிடக் கூடாது என்று நீங்கள் நினைத்தால், சமுதாய மக்கள் அதன் பலனைப் பெற வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் அதற்காகக் காத்திருப்பதோடு அதைப் பற்றி மக்ளுக்குத் தெளிவுபடுத்த வேண்டும்.

டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்ட சில விஷயங்களுக்குச் செல்ல விரும்புகிறேன். இந்த மசோதா விதி விலக்குகளுக்கான ஒரு சட்டம் என்று தோன்றுகிறது. கூட்டுரிமை முறை பத்துவித சொத்து களுக்கு அதன் அதிகார வரம்பிலிருந்து விலக்களித்துள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறியுள்ளார். அவை தனியார் சொத்தாகக் கருதப்படுகின்றன. இந்த மாதிரி பல விலக்குகள் அளிக்கப்பட்டுள் ளதால் அந்தக் கூட்டுரிமை முறைக்கே முடிவு கட்டலாம் என்று அவர் கூறுகிறார். இது அவர் கூறிய கருத்துகளில் ஒன்று. சீதனச் சொத்தில் பெண்களுக்கு முழு உரிமை இருப்பதால், எல்லாச் சொத்து களுக்கும் அவ்வாறே இருக்கட்டும் என்று மேலும் அவர் கூறுகிறார். இந்தக் கூட்டுரிமை முறையில் அழிவின் விதைகள் உள்ளடங்கி இருப்பதால், கூட்டுக் குடும்ப முறைக்கே முற்றுப்புள்ளி வைக்க வேண்டியதுதான். நான் அவரிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன். இப்பொழுதுதான் அவர் அரசியல் அடிப்படைச் சட்டத்தை நிறை வேற்றியுள்ளார். அரசியல் அமைப்புச் சட்டத்தின் பல விதிகளுக்கும் விதிவிலக்குகளும், வரம்புரைகளும் அளிக்கப்பட்டுள்ளன. இந்தக் காரணத்திற்காக விலக்குகளையே விதிகளாக மாற்றவேண்டுமா? அவருடைய வாதங்களைப் பார்த்தால் விலக்குகளையே மூல விதி களாக மாற்ற வேண்டுமென்பது போல தோன்றுகிறது.

ஐயா, மேலும், என் சகோதரிகளை மிகவும் கவர்ந்துள்ள இந்த மசோதாவை.....

**திருமதி ஜி. துர்க்காபாய் :** சகோதரர்களையும் கூட.

**திரு. ஓ.வி. அளகேசன் :** இந்த மசோதா அதற்கு அருகதை யற்றது என்று நினைக்கிறேன். ஒருவரை மட்டுமே மணம் புரியும் பழக்கம் எல்லோராலும் போற்றிப் புகழப்படுகிறது. அது ஏதோ ஒரு புதிய நடைமுறை என்று கூறமுடியாது. பெண்கள் ஒருவரை மட்டுமே மணம் செய்து கொள்ளும் நடைமுறை வழக்கத்திலிருந்தும், விவாகரத்து உரிமை அளிக்கப்பட்டதா? ஒருவரை மட்டுமே மணக்க வேண்டுமென்ற சட்டத்திற்குள் ஆண்களும் கொண்டுவரப்பட்ட வுடன் விவாகரத்துக்கான கோரிக்கை கிளம்புகிறது. பெண்கள் ஒருவரை மட்டுமே மணக்க வேண்டுமென நடைமுறையில் பெண்கள் இருந்தபோது விவாகரத்துக்கான வாய்ப்பு அளிக்கப்பட வில்லை. ஆனால் ஒருவரை மட்டுமே மணந்துகொள்ளும் வழக்கத் தின் இயற்கையான தொடர்விளைவே விவாகரத்து என்று இப் பொழுது கூறப்படுகிறது. நமது சகோதரிகள் இதில் ஏன் இவ்வளவு

ஆர்வம் காட்டுகின்றனர்? இதன் பொருள்தான் என்ன? ஒருவரை மட்டுமே மணக்கும் நடைமுறையின் தொடர் விளைவு விவாகரத்து என்றால், இந்த இயற்கையான தொடர் விளைவு இதுவரை ஏன் வரவில்லை?

**திரு. துணை சபாநாயகர் :** இன்னும் எவ்வளவு நேரம் மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடரப் போகிறார்?

**திரு. ஓ.வி. அளகேசன்:** இன்னும் பத்து நிமிடங்கள் மட்டும். ஆனால் சுருக்கமாக முடிக்க முயற்சிக்கிறேன். எனவே விவாகரத்துக்கான உரிமை அளிப்பது மிகவும் இனிமையான விஷயமல்ல என்று கூறுகிறேன். ஆனால் பல குறிப்புகளைப் படித்துக் காட்ட நான் விரும்பவில்லை. விவாகரத்து ஆண்களைவிட பெண்களுக்கு பெரும் நாசத்தை விளைவிக்கும் என்று பல பெண்களே குறிப்பிட்டுள்ளனர்.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை:** விவாகரத்து உரிமை இல்லாத ஒருவரை மட்டுமே மணக்கும் சட்டத்தை மதிப்பிற்குரிய உறுப்பினர் ஆதரிக்கிறாரா?

**திரு. ஓ.வி. அளகேசன்:** விவாகரத்துக்கு வாய்ப்பில்லாத ஒருவரை மட்டுமே மணக்கும் சட்டத்தை நான் விரும்புகிறேன். விவாகரத்துக்கான விதிமுறையை நியாயப்படுத்திப் பேசிய டாக்டர் அம்பேத்கர், இந்நாட்களில் கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் அனுபவிக்கும் கொடுமைகளை பட்டியல் போட்டுக் காட்டினார். இந்தக் கொடுமைகளை விவாகரத்தான பெண்களும் அனுபவிக்க வேண்டியிருக்கும். கைவிடப்பட்ட பெண்களின் எதிர்காலம் எவ்வளவு இருண்டுள்ளதோ, அதே போன்றுதான் விவாகரத்து பெற்ற பெண்ணின் எதிர்காலமும் இருக்கும். விவாகரத்துப் பெற்ற ஆண் மறுமணம் செய்து கொள்வது வெகு எளிது. ஆனால் விவாகரத்து பெற்ற பெண், மறுமணம் செய்து கொள்வது அவ்வளவு எளிதல்ல.

**டாக்டர் பி. சுப்பராயன் :** எனவே நீங்கள் இரட்டைத் தர நிலை வேண்டும் என்கிறீர்களா?

**திரு. ஓ.வி. அளகேசன் :** இதை நமது சகோதரிகள் நன்கு கவனிக்க வேண்டும். இது எந்தப் படுகுழிக்கு இட்டுச் செல்கிறது என்பதைப் பாருங்கள். விவாகரத்து விதிமுறைகளை வேறு பல

அடிப்படைகளிலும்கூட கடுமையாக ஆட்சேபிக்கிறேன். மற்ற நாடுகளில் இதன் அனுபவம் என்ன? மற்ற பேச்சாளர்களும் இதைக் குறித்துப் பேசியுள்ளனர். எனவே இது குறித்து மேலும் நான் விவரிக்க விரும்பவில்லை. பாரிசில் மட்டும் அண்மையில் விவாகரத்து வழக்குகள் 600லிருந்து 1200 ஆக உயர்ந்துள்ளது என்று நமக்குக் கூறப்பட்டுள்ளது. இது 100 சதவீத அதிகரிப்பாகும்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** இந்தியாவில் பாரிஸ் இல்லை.

**திரு. ஓ.வி. அளகேசன்:** தற்போது இந்தியாவில் பாரிஸ் இல்லை என்பதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் இந்த மசோதா இந்தியாவில் பாரிசை உருவாக்க முயல்கிறது என அஞ்சுகிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** பரோடா இருக்கிறது, மலபார் இருக்கிறது.

**திரு. ஓ.வி. அளகேசன் :** உலகின் மிகவும் வளர்ச்சி பெற்ற நாடுகளில் ஒன்றான சோவியத் ரஷ்யாவில் குடும்பம் என்ற அமைப்பு உடைந்து வருகிறது. வெகு எளிதான விவாகரத்துக்கு வழி வகுத்ததால், குடும்ப அமைப்பைத் திரும்பவும் உயிரூட்டுவதில் சோவியத் ரஷ்யா மிகக் கஷ்டப்படுகிறது. குடும்பம் என்ற சமூக அமைப்பின் புனிதத்தன்மையை மக்களுக்கு உணர்த்த அவர்கள் இப்பொழுது விரும்புகின்றனர். கம்யூனிசப் பண்பாட்டை மக்களிடம் புகுத்த விரும்புகின்றனர். தங்கள் நாட்டில் எளிய முறையில் விவாகரத்து அளித்ததன் மூலம் நேர்ந்த இழப்பிலிருந்து, குடும்ப அமைப்பைக் காப்பாற்ற கடுமையாக முயல்கின்றனர். பதிவாளருக்கு, தன் மனைவியை விவாகரத்துச் செய்கிறேன் என்று ஓர் அஞ்சல் அட்டை அனுப்பினால் போதும், விவாகரத்து உடன் அளிக்கப்பட்டது. இப்பொழுது விவாகரத்துச் சட்டங்கள் கடுமையாக்கப்பட்டுள்ளன. நம்முன் உள்ள நல்ல உதாரணம் இது.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி :** மலபாரைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்? ஏன் ரஷ்யாவிற்கும் பாரிசுக்கும் போக வேண்டும்?

**திரு. ஓ.வி. அளகேசன்:** இந்த முறையை அவர்கள் சோதனை செய்து பார்த்து, அது எவ்வளவு ஆபத்தானது என்பதை உணர்ந்துள்

ளனர். அதே நிலைமைக்கு நாமும் சென்று, பிறகு அதை மாற்ற முயற்சிப்பானேன்? நமது இந்தியக் குடும்பங்கள் இன்றைக்கு வறுமையில் வாடவும், அறியாமையில் மூழ்கியிருக்கவும், ஆரோக்கிய மற்றும் இருக்கலாம். ஆனால் அவை உடைந்து போகவில்லை என்று சொல்லலாம். மற்ற நாடுகளில் அவை பணச் செழிப்புடனும், ஆரோக்கியத்துடனும், கல்வி அறிவு பெற்றும் இருக்கலாம். ஆனால் மற்ற நாடுகளிலுள்ள குடும்பங்களில் பல சிதறுண்டு கிடக்கின்றன என்பதை வருத்தத்துடன் கூறத்தான் வேண்டியிருக்கிறது. இதற்கு முக்கியமான காரணம் விவாகரத்துக்கு அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள தாராள உரிமைதான். இதுதான் என் கருத்து.

இந்துக் கூட்டுக் குடும்ப முறையை நாம் பாதுகாத்து வைத்துக் கொள்வதுடன், குடும்பத்தில் மனைவி ஒரு கூட்டுப் பங்காளி ஆக்கப் பட வேண்டும் என்று டாக்டர் தேக் சந்த் போன்ற பிரபல அறிஞரே கூறியுள்ளார். ஒரு மகளுக்கு சொத்தில் பங்கு அளிப்பதை நான் ஆட்சேபிக்காவிட்டாலும், அதன் மூலம் பெண்களுக்கு உண்மையான பொருளாதார சுதந்திரம் வந்துவிடாது என்பதை கூறிக்கொள்ள விரும்புகிறேன். கணவனின் சொத்தில் அவளுக்கு சம பங்கு அளிப்பதன் மூலமே அவள் பொருளாதார சுதந்திரத்தை அடைய முடியும். தகப்பனாரின் சொத்திலிருந்து ஒரு பங்கை பெறுவதன் மூலம் அல்ல. மருமகனுக்குக் கொடுக்கப்பட வேண்டிய ஒப்படைக்கப்பட்ட நபர்தான் மகளாகும். தகப்பனார் மகளை தன்னிடம் ஒப்படைக்கப் பட்ட நபராக காப்பாளர் என்ற முறையில் வளர்த்து வருகிறார். தகப்பனாரின் சொத்தில் பங்கு கேட்க அவளுக்கு உரிமை கொடுப்பதைவிட கணவனின் சொத்தில் சமமான பங்கு அளிக்கப்படவோ அல்லது கூட்டு உரிமையாளராகவோ ஆக்கப்பட வேண்டும். அவள் திருமணம் ஆகாதவளாக இருந்தால் தகப்பனாரின் சொத்தில் பங்கு கேட்க அவளுக்கு உரிமை அளிக்கப்படலாம்.

மேலும் நான் விரிவாக விளக்க விரும்பவில்லை. இந்தக் குறிப்புடன் அதை முடித்துக் கொள்கிறேன். இந்தச் சட்டத் தொகுப்பை சிந்தனை செய்து உருவாக்கிய முக்கிய மனிதர் திரு. பி.என். ராவ் அவர்களே. (நேற்று ஒரு மனிதருக்கு சிந்திப்பதே கடினமாகி விட்டது) இந்த மசோதாவின் மீது அவர் மிகவும் ஆர்வம் கொண்டுள்ளார். கூடிய விரைவில் அவருடைய எல்லா ஆலோசனைகளும், மாற்றங் களுடனாவது நடைமுறைக்கு வரவேண்டுமென்று விரும்புகிறார். இந்து சட்டக் குழுவின் சாரமாக விளங்கும் அவரது கருத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

**திருமதி ஜி. துர்க்கபாய் :** அவருடைய ஆலோசனைகளைப் பரிசீலிப்பதற்கு பொறுக்குக் குழு ஒன்றுள்ளது. அவர் மட்டுமல்ல....

**திரு. ஓ.வி. அளகேசன் :** இந்துச் சட்டக் குழு பின்வருமாறு கூறியுள்ளது :

''முடிந்தவரையில் ஒப்புக் கொள்ளப்பட்ட தீர்வுகளை அடைவதே குறிக் கோளாகும். கடுமையான சச்சரவுகளை எழுப்பும் எதையும் நாம் விலக்க வேண்டும். இதன் பொருள் சீர்திருத்த நடவடிக்கைகளைத் தாமதப்படுத் துவது ஆகாது. உண்மையான சீர்திருத்தம் நிர்ப்பந்தத்தைத் தொடர்ந்து வருவதல்ல. இசைவிணக்கத்தை தொடர்ந்தே அது வரமுடியும்.''

ஐயா, என் உரையை முடித்து விட்டேன்.

*(1949 டிசம்பர் 15 வியாழக்கிழமை பத்தே முக்கால் மணி வரை அவை ஒத்திபோடப்பட்டது.)*

---

## *இந்துச் சட்டத் தொகுப்பு - தொடர்ச்சி

**திரு. சபாநாயகர்:** அவையால் பரிசீலிக்கப்பட்டு வந்த தீர்மானம் யாதெனில் :

''இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளை முறைப்படுத்தவும் திருத்தவும் செய்யவும் கொண்டுவரப்பட்டுள்ள மசோதா, பொறுக்குக் குழுவினால் அளித்துள்ளபடி பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''

**+மாண்புமிகு திரு. ஜவஹர்லால் நேரு (பிரதமர்) :** ஐயா, இந்துச் சட்டத் தொகுப்புச் சம்பந்தமாக ஓர் அறிக்கை வெளியிட இந்த அவையின் ஆதரவையும், உங்கள் அனுமதியையும் மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். என் அறிக்கை இந்த அவையின் ஒப்புதலைப் பெறும் என நம்புகிறேன்.

இந்தக் கூட்டத் தொடரின் ஆரம்பத்தில், என் உரையினிடையே இந்த இந்துச் சட்டத் தொகுப்பைப் பற்றிக் குறிப்பிட்டேன். இந்தச் சட்ட நடவடிக்கைக்கு அரசு மிக முக்கியத்துவம் கொடுப்பதையும், இந்தப் பரிசீலனைக் கட்டம் இந்தக் கூட்டத் தொடரிலேயே முடிந்துவிடும் என்று நம்புவதாகவும் கூறினேன். மசோதாவிலுள்ள பல சர்ச்சைக்குரிய விதிகள் சம்பந்தமாக ஒரு பரந்த உடன்பாட்டுக்கு வகை செய்ய, நம்பிக்கையூட்டும் ஒரு வழிமுறையைப் பின்பற்றுவோம் என்று யோசனை கூறினேன். இந்த விஷயத்தைப் பொறுத்து அரசின் கொள்கையைத் தெளிவுபடுத்த அன்று கூறியதை மேலும் விளக்கமாக எடுத்துரைக்கிறேன். இந்தக் கூட்டத் தொடரில் மட்டுமல்லாது முந்தைய கூட்டத் தொடர்களிலும்கூட, இந்த மசோதா சம்பந்தமாக கணிசமான அளவுக்கு நீண்ட விவாதம் நடைபெற்றுவிட்டது. இத்தடவை நாம் அதற்கு இரண்டு நாள்கள் ஒதுக்கியிருந்தோம். இந்த நாட்களில் இரண்டு தடவை விவாதத்தின் நேரம் நீட்டிக்கப்பட்டது அவைக்குத் தெரியும். நமக்கு நேரக்கட்டுப்பாடு கடுமையாக இருந்தாலும் கூட இந்தக் கூட்டத் தொடரில் நாம் முடிக்க வேண்டிய பல சட்ட நடவடிக்கைகள் உள்ளன - இம்மாதிரியான முக்கிய மசோதா சம்பந்தமான விவாதத்தைக் கட்டுப்படுத்த அரசுக்கு எந்தவித விருப்பமும் கிடையாது. இருதடவை விவாதத்திற்கான நேரம் நீட்டிக்கப்பட்துடன், இன்றும் அதற்காக ஒதுக்கப்பட்டுள்ளது.

---

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VI, பிரிவு II, 13 டிசம்பர் 1949, பக்கம் 783-85.

இந்த விவாதத்தை கட்டுப்படுத்தும் விருப்பம் எதுவும் அரசுக்கு இல்லையென்றாலும், உண்மையில் அதிக நேரம் ஒதுக்குவது அரசுக்கு மிகவும் கஷ்டமாக உள்ளது. இருப்பினும் இந்த அவையில் உள்ள சில உறுப்பினர்களின் விருப்பம், மற்றும் மசோதாவின் முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு, மேலும் அதிக நேரம் ஒதுக்க முயற்சிக்கிறோம். இந்தப் பிரச்சினையில் மேலும் ஓர் அம்சம் இருக்கிறது. அது இதுதான். முடிந்த வரையில் சர்ச்சைக்குரிய விதிகளைப் பொறுத்தவரை ஓர் உடன்பாட்டிற்கு வர முயற்சி செய்யும் உணர்வில் இந்த விஷயத்தை நாம் பரிசீலித்தால், ஆரம்பத்திலேயே நான் குறிப்பிட்ட பாதையில் மேலே செல்வோமானால் அப்போது இந்த கட்டத்தில் இந்த விவாதத்தை நடத்துவது வரவேற்கத்தக்கதே. அது ஒரு வேளை அந்த மாதிரியான முடிவுக்கு எளிதாக இட்டுச் செல்லாத ஒரு சூழ்நிலையை உருவாக்கவோ, அல்லது ஒரு சூழ்நிலை உருவாக உதவவோ செய்யலாம். அது சிந்திக்க வேண்டிய முக்கிய விஷயமாக அரசின் கருத்தில் உள்ளது. ஆரம்பத்திலிருந்தே, அவைக்கு நான் நினைவூட்டியது போன்று அதை நாம் கருத்தில் கொண்டுள்ளோம். பெரும்பான்மை பலம் உள்ளது என்ற அடிப்படையில், இந்த மசோதாவின் எல்லா விதிகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகச் செயல்படுவது அரசின் எண்ணமல்ல. அதைக் குறித்து பலதரப்பட்ட கருத்துகள் இருக்கலாம். இந்த மசோதாவைப் பொறுத்தவரை அரசின் நிலை இதுதான். மசோதா முழுவதற்குமான பரந்த அணுகுமுறையை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். ஒவ்வொரு விதியையும் வறட்டுப் பிடிவாதமின்றி பரிசீலனை செய்ய நாம் தயாராக உள்ளோம். உண்மையில் இந்த மசோதாவில் அரசு நம்பிக்கை கொண்டுள்ளதால்தான் அதை முன்வைத்துள்ளது. ஆனால் எவ்வளவு அதிகமான ஆதரவு கிடைக்குமா அவ்வளவு ஆதரவு இந்த மசோதாவுக்குக் கிடைக்க அரசு விரும்புகிறதோ அதற்கும், இப்பொழுது நடைபெற்றுவரும் பொதுவான பரிசீலனைக்கும் இடையே வேறுபாடுள்ளது. மசோதா மிகவும் அதிகமாக விவாதிக்கப்பட்டதாக உணர்கின்றனர். இந்த அவையின் அதிகமான உறுப்பினர்கள் இந்த விவாதத்தில் பங்கு கொண்டனர். இந்த விவாதக் கட்டத்தின் முடிவிற்கு அவர்கள் முக்கியத்துவம் அளிக்கின்றனர். ஏனெனில் அப்பொழுதுதான் அவர்கள் விரைவில் அடுத்த கட்டமான முறை சாரப் பரிசீலனைக்குச் செல்ல முடியும். இந்த முதல் கட்டம் முடியாத வரையில் முறைசாராப் பரிசீலனைப் பயனுள்ள முறையில் நடைபெற முடியாது. இல்லையென்றால், நாம் அந்தரத்தில்தான் தொங்க வேண்டும். நாம் அடுத்த கட்டத்திற்குச் செல்ல முடியாது. எனவே இப்பொழுது நம் முடிவு

என்னவென்றால், பரிசீலனையிலுள்ளத் தீர்மானத்தின் மீதான இந்த விவாதத்தை கூடிய விரைவில் முடித்துக் கொள்வோம். இதைத் தைரியமாக அவை முன் வைக்கலாம் என நினைக்கிறேன். மற்ற சட்ட நடவடிக்கைகளை ஒதுக்கிவிட்டு அதிக நேரத்தை இதற்கு அரசு ஒதுக்குவது பற்றி எனக்குக் கவலையில்லை. முறைசாரா விவாதத்தை வைத்துக் கொள்வோம் என்ற பொதுவான யோசனையை இந்த அவை ஏற்றுக்கொள்ளும் பட்சத்தில் அடுத்த கட்டத்திற்குச் செல்வதே சிறந்தது என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இக் கட்டத்தில் மேலும் கடுமையான விவாதத்தில் இறங்கி சூழ்நிலை யைப் பாழாக்க வேண்டாம்.

முறைசாரா ஆலோசனைகள் என்று நான் பேசும்போது ''முறைசாரா'' என்று நான் கூறுவதின் பொருளைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். அதை முக்கியமாகக் கருதாததால் அப்படிக் கூறு கிறேன் என்று சொல்ல முடியாது. அந்த விவாதம் ஓரளவு நெளிவு சுளிவுடன் நடைபெற விரும்புகிறேன். இந்த மசோதாவின் சுமையைத் தாங்கிக் கொண்டிருக்கும், என்னுடைய ஆலோசனையை ஏற்றுக் கொண்டு அதை மகிழ்ச்சியுடன் செயல்படுத்துவார் என நான் நம்பும், எனது மாண்புமிகு சகாவான சட்ட அமைச்சர் பொறுக்குக் குழு உறுப்பினர்களைக் கலந்தாலோசிப்பது மட்டுமின்றி, இதில் அக்கறை யுள்ள அவையின் இதர உறுப்பினர்களையும், அவைக்கு வெளியே உள்ளவர்களையும் கூட கலந்தாலோசிக்க முடியும். ஒருவிதக் கட்டுப் பாடான நடைமுறையை அனுசரித்தோமானால், அது கடினமாகி விடும். மேலும் ஒரு முறையான, கட்டுப்பாட்டான நடைமுறையை அனுசரிக்கும் போது, ஒரு சுதந்திரமான மனந்திறந்த விவாதத்திற்குச் சாத்தியமற்றுப் போகிறது. ஆனால் நடைமுறை நெளிவுசுளிவுடனும் முறை சாராதிருக்கும் போது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மைக் கான சூழல் உருவாகிறது. எனவே இத்தீர்மானத்தை அவை முன் வைக்கிறேன். நாம் இதுவரை நடத்திய விவாதங்களையும், சர்ச்சை களையும் கவனித்தோமானால், அவையின் எல்லாப் பிரிவினரும் ஒப்புதல் தரும் ஒரு நியாயமான தீர்மானமாக இது உள்ளது. ஏனெனில் இந்த அவையிலும், அதிகமான ஆதரவுடன் நாட்டிலும் ஒரு விஷயத்தை எடுத்துச் செல்ல அரசின் தரப்பிலிருந்து வந்துள்ள நியாயமான முயற்சியாகும் இது. மிகவும் தீவிரமாக நாம் கருத்து வேறுபாடு கொண்டுள்ள விஷயங்களில், நமது கருத்தை நாம் விட்டுக் கொடுத்ததாகவோ, அல்லது மற்றவர்களின் தீர்ப்புக்கு நாம் அடி பணிந்து விட்டதாகவோ பொருள் கொள்ளக் கூடாது. இந்த அவை உறுப்பினர் எவரும் எதிலாவது நம்பிக்கை கொண்டிருந்தால், அவர்

அவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்று யாரும் எதிர் பார்க்க வில்லை. விவாதிப்பது, பரிசிலிப்பது, ஒருவர் தம் கருத்தை மற்றவர் ஏற்றுக் கொள்ள முயற்சி செய்வது, ஒருவர் மற்றவரைப் புரிந்து கொள்ள முயற்சிப்பது, சில சமயங்களில் அதிக ஒத்துழைப்புடன் ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற சில விஷயங்களை விட்டுக் கொடுப்பது, ஜனநாயக நடைமுறையின் சாரமாகும். இந்த முக்கிய மசோதாவைப் பொறுத்தும் கூட நாம் பின்பற்ற வேண்டிய நடைமுறை இதுதான் என்று தாழ்மையாக இந்த அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த இந்துச் சட்டத் தொகுப்பை அவ்வளவு முக்கியமாக நாங்கள் நினைத்துவிடக் கூடாது. ஏனெனில் நாங்கள் அதற்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கிறோம். ஒரு குறிப் பிட்ட விதிமுறை முக்கியமானதாக உள்ளதாலோ அல்லது வேறு காரணங்களுக்காகவோ அல்ல அது. பொருளாதார மற்றும் சமூக பிரச்சினைகளுடன் மிக நெருக்கமான தொடர்பு கொண்ட இந்த நாட்டின் இந்தப் பெரும் பிரச்சினையின் அடிப்படை அணுகுமுறையே அதன் காரணமாகும். இந்நாட்டில் நாம் அரசியல் சுதந்திரம் பெற்று விட்டோம். அரசியல் விடுதலை பெற்றுவிட்டோம். இது நமது பாதையில் ஒரு கட்டம். பொருளாதார, சமூக மற்றும் இதர கட்டங் களும் உள்ளன. எல்லா முறைகளிலும் நாம் முன்னேறினால்தான், சமுதாயம் முன்னேற முடியும். ஒரு முனையில் முன்னேறிவிட்டு மற்ற முனைகளில் பின் தங்கியிருந்தால், நாம் சரியாகச் செயல்பட வில்லை என்றாகிறது. மேலும் நாம் முன்னேறிச் சென்ற முனைக்கும் ஆபத்து என்பதை உணர வேண்டும். எனவே எல்லா முனைகளிலும் எப்படி முன்னேறுவது என்ற உணர்வுடன் இந்த விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும். மக்கள் தொகையின் பெரும்பகுதியினரின் ஒப்புதலுடனும் ஒருங்கிணைப்புடனும் இந்த முன்னேற்றம் இருக்க வேண்டும் என்பதை எப்பொழுதும் கருத்தில் கொள்ள வேண்டும். இதை நான் ஏன் கூறுகிறேன் என்றால், இந்திய மக்களுக்குப் பதிலளிக்கும் பொறுப்புள்ள ஒரு ஜனநாயகச் சட்டமன்றமாக நாம் செயல்பட்டு வருகிறோம். இந்திய மக்களையும் நம்முடன் இட்டுச் செல்ல வேண்டும். இதைக் கருத்தில் கொண்டு, வெறும் பின் பாட்டுக்காரர்களாக இருப்பது அவைக்கோ நமக்கோ நல்லதல்ல என்பதை உணர வேண்டும். நாம் வழிகாட்டிச் செல்ல வேண்டும், தலைமை தாங்கி நடத்திச் செல்ல வேண்டும். அப்படி வழிகாட்டி நடத்திச் செல்லும் போது மக்களையும் நம்முடன் இட்டுச் செல்ல வேண்டும். இந்த விஷயத்திலும், இதர விஷயங்களிலும் நாம் தலைமை தாங்கி நடத்திச் செல்ல தீர்மானித்துள்ளோம். ஆனால் எப்பொழுதும் மற்றவர்களையும் நம்முடன் இட்டுச் செல்வோம்.

எனவே இந்த நடைமுறையைத் தான் உங்களுக்கு நான் விவரமாக எடுத்துரைத்தேன். அதாவது இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொள்வதன் மூலம், தற்போதைய பரிசீலனைக் கட்டத்தை முடிவுக்குக் கொண்டு வருவோம். பிறகு பல்வேறு விதிகள் மற்றும் பிரிவுகள் குறித்த ஆலோசனைகள் சம்பந்தமாக, நான் குறிப்பிட்டுள்ள முறைசாரா நடவடிக்கைகளை எடுக்க அவை அரசுக்கு அனுமதி அளிக்கட்டும். அதை நாம் நிறைவேற்றிவிட்டால், பிறகு விஷயம் மீண்டும் விவாதத்திற்கு வரும்போது - அடுத்த கூட்டத் தொடரில் என்று நம்புகிறேன் - அதற்கு இந்த அவையிலும், வெளியிலும் மிகப்பெரும் ஆதரவு இருக்கும்.

***மாண்புமிகு திரு. சத்ய நாராயண் சின்ஹா :** *(நாடாளுமன்ற நடவடிக்கைகளின் ராஜாங்க அமைச்சர்)*

''இந்த விஷயத்தை இப்பொழுது அவை முன் வைக்கலாம்.''

**திரு. நசிருத்தீன் அகமது :** (மேற்கு வங்காளம் : முஸ்லீம்) நான் ஒரு விளக்கம் கேட்கலாமா? அவையின் மாண்புமிகு தலைவர் தற்பொழுது அளித்துள்ள ஒளிவு மறைவற்ற அறிக்கைக்குப் பிறகு மேலும் நாம் நேரத்தை எடுத்துக் கொள்வது அவசியமில்லை என நினைக்கிறேன். விவாதத்தின் இந்தக் கட்டம் ஒன்பது முழு நாள்கள் நடைபெற்றிருப்பதுடன் இன்று பத்தாவது நாளாகத் தொடர்கிறது என்பதை நமது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு நினைவூட்டு கிறேன். அதில் முப்பத்தி மூன்று உறுப்பினர்கள் பங்கு கொண்டதுடன் முப்பது மணி நேரமும் இருபத்தெட்டு நிமிடங்களும் நாம் செலவழித்துள்ளோம். நாம் போதுமான நேரம் எடுத்துக் கொண்டு விட்டோம்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :** நான் அறிந்து கொள்ளலாமா? திரு சபாநாயகர் விவாதத்திற்கு முடிவு கட்டலாம் என்ற கோரிக்கையை ஏற்றுக் கொள்ளும் போது, எந்தக் காரணங்களுக்காக என்பதைத் தெரிவிக்க வேண்டிய கட்டாயம் எனக்குக் கிடையாது. அதைப் பற்றி என் கருத்து என்ன என்பதை விளக்கியாக வேண்டும் என்று நினைக்கிறேன். இந்த மசோதாவின் பல்வேறு விதிகளைக் குறித்து தங்கள் கருத்துரைகளை எடுத்துரைக்க அவையிலுள்ள மற்றும் அவைக்கு வெளியிலுள்ள ஒவ்வொருவருக்கும் முழு வாய்ப்பு அளிக்கப்படும் என்பதை பிரதமர் தற்போது அளித்த அறிக்கை நன்கு தெளிவுபடுத்துகிறது. பொதுவான பரிசீலனைக் கட்டமாகத்தான்

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VII, பிரிவு II, 19 டிசம்பர் 1949, பக்கம் 785 -87.

தற்போதைய நிலை உள்ளது. எந்தக் குறிப்பிட்ட விதியின் குறிப்பிட்ட பிரிவையும் நாம் விவாதிக்கவில்லை. விவரங்கள் குறித்து கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். மசோதாவின் பொதுவான தன்மையைப் பொறுத்த வரையில் அதிக அளவிலான உடன்பாடு இருக்க முடியும். இந்தக் கட்டத்தில் நாம் விவாதத்தைத் தொடர்ந்தோமானால் அது ஒரு தெளிவற்ற, பொதுவான, தொடர்பற்ற விவாதமாக இருக்கும் என அஞ்சுகிறேன். மேலும் விவாதத்தில், ஏற்கெனவே கூறப்பட்டவைகளே திரும்பத் திரும்ப எடுத்துரைக்கப்படலாம். மசோதாவின் ஒவ்வொரு விதியையும் பரிசீலிக்கும் கட்டமே அதைவிட முக்கியமான கட்டமாகும். அந்தக் கட்டத்திற்குச் செல்லுமுன், எல்லாப் பிரச்சினைகள் குறித்து அரசுடனும் அவைக்கு வெளியே உள்ள பிற மக்களுடனும் விவாதிப்பதற்கும், ஆலோசனை செய்வதற்கும் மதிப்பிற்குரிய ஒவ்வொரு உறுப்பினர்களுக்கும் எல்லா வாய்ப்புகளும் அளிக்கப்படும்.

எனவே மசோதாவைப் பரிசீலனை செய்யும் இந்த விவாதத்தைத் தொடர்வது நேரத்தை வீணடிப்பதாகும் என்று கருதுகிறேன். எனவே விவாதத்தை முடிக்க வேண்டும் என்ற கோரிக்கையை ஏற்றுக் கொண்டு, பிறகு சட்ட அமைச்சரைப் பேச அழைக்கலாம் என நினைக்கிறேன்.

**ரோகிணி குமார் சௌதுரி** (அசாம் : பொது) : நான் சில விவரங்கள் அளிக்க விரும்புகிறேன்.

**திரு. சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் என்ன விவரங்கள் அளிக்கப் போகிறார்? அவரை நான் பேச அனுமதித்தால், ஒவ்வொருவரும் ஏதாவது கூற முன் வருவார்கள். தயவு செய்து இருக்கையில் அமருமாறு மதிப்பிற்குரிய உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி** (உ.பி : பொது) ஐயா, உங்களிடம் ஒரு விளக்கம் கேட்க விரும்புகிறேன். இக்கட்டத்தில், இத்தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிறகு இந்த மசோதாவிலுள்ள எல்லா விதிகளையும் ஏற்றுக் கொண்டதாகப் பொருள்படுமா?

**திரு. துணை சபாநாயகர் :** நிலைமையைத் தெளிவுபடுத்துகிறேன். தேர்வுக் குழுவுக்கு அனுப்பும் தீர்மானத்தை இந்த அவை ஏற்றுக் கொண்டபோது, அது இந்த மசோதாவின் கொள்கையை

ஏற்றுக் கொண்டதாகப் பொருள்படும். ஆனால் இம்மாதிரி மசோதா வின் கொள்கையை வரையறுப்பது மிகக் கடினமான விஷயம். ஏனெனில் ஒவ்வொரு விதியும் ஒரு கொள்கையாகக் கருதப்பட லாம். இந்த நிலையை தெளிவுபடுத்துகிறேன். பரந்த அளவிலான அதன் விதிகைளப் பார்க்கும் போது, இந்துச் சட்டத்தை முறைப் படுத்தித் தொகுப்பது விரும்பத்தக்கது என்ற கொள்கை ஒன்றை மட்டும் அவை ஏற்றுக் கொண்டுள்ளது என்பது தெளிவாகும். மேலும் விதிகள் ஒவ்வொன்றும் விவாதத்திற்கும், மாற்றத்திற்கும், திருத்தத்திற்கும் உட்பட்டதாகக் கருதப்படும்.

**திரு. மகாவீர் தியாகி :** அப்படியென்றால், ஐயா, எங்களுக்கு எந்த ஆட்சேபணையும் இல்லை.

**ரோகிணி குமார் சௌதுரி :** இந்த மசோதா குறித்து ஆலோ சனை ஒன்றை அவை முன் வைக்க விரும்புகிறேன். விவாதத்தை முடிவுக்குக் கொண்டுவர, தீர்மானம் முன்மொழியப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படலாம். அதைக் குறித்து எனக்கு எந்த ஆட்சேபணை யும் இல்லை. இந்த விஷயம் குறித்து மேலும் விவாதிப்பதை நான் விரும்பவில்லை. உண்மையில், ஒரு சமரசச் சூழ்நிலை உருவாக வேண்டுமென்பதற்காக, மசோதாவிற்கு எதிராக நான் எதுவும் பேச வில்லை. என்றுடைய ஆலோசனை என்னவென்றால், இந்த மசோதாவை இப்பொழுது வாக்களிப்புக்கு விட வேண்டாம். மாண்பு மிகு பிரதமரின் அறிவிப்பினால், ஒரு நடைமுறை வெற்றி கிடைத் துள்ளதைக் குறித்து எதிர்தரப்பினரை உணரச் செய்ய விரும்புகிறோம்.

**திரு. துணை சபாநாயகர் :** நடைமுறை பற்றி அவைத் தலை வரின் அறிக்கைக்குப் பிறகும், அவையை எது கட்டுப்படுத்தும் எது கட்டுப்படுத்தாது என்பதைக் குறித்த எனது விளக்கத்திற்குப் பிறகும், இந்தப் பரிசீலனைத் தீர்மானத்தை நிறைவேற்றுவதால் ஏற்படும் விளைவுகளைக் குறித்து சந்தேகம் எதுவும் இருக்காது என்று நினைக் கிறேன். உண்மையில், இதை இன்னும் முடிவுக்குக் கொண்டு வராமல் இருப்பது விரும்பத்தக்கதல்ல. இந்தப் பரிசீலனை விவாதத்தைத் தொடர்ந்தோமானால், மேலும் விவாதங்களும் பேச்சுகளும் தொடரும். எனவே மசோதாவை அவை முன் வைக்கிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக் :** (ம.மா மற்றும் பேரார் : பொது) : ஐயா, ஒரு ஒழுங்குப் பிரச்சினை. மாண்புமிகு பிரதமரின் சிறந்த ஆலோசனையை நாமெல்லோரும் கேட்டோம். அவை அதை

ஏற்றுக் கொள்ளக்கூடும் என்பதில் சந்தேகமில்லை. என் ஒழுங்குப் பிரச்சினை என்னவென்றால், பரிசீலனைக்கான தீர்மானமே அவை முன் உள்ளது என்பதே. மசோதாவைத் திரும்பவும் தேர்வுக் குழுவுக்கு அனுப்புவதே, இந்த ஆலோசனையின் நோக்கமாகத் தெரிகிறது.

***மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :*** இல்லை, இல்லை.

***டாக்டர் பி.எஸ். தேஷ்முக் :*** இது நாடாளுமன்ற நடைமுறையை தவிர்ப்பதற்கான முயற்சி என்று உங்களுக்கு எடுத்துரைக்கிறேன். சரியான, நியாயமான ஒரே நடைமுறை என்னவென்றால், அதே தேர்வுக் குழுவுக்கோ அல்லது விரிவு படுத்தப்பட்டத் தேர்வுக் குழுவுக்கோ மசோதாவை அனுப்புவதுதான். தெரிவிக்கப்பட்டுள்ள ஆலோசனை, நாடாளுமன்ற நடைமுறைகளுக்கு எதிரானதால், அது ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல. இந்த ஆலோசனை அவைக்கு ஏற்றுக் கொள்ளக்கூடியது என்றால் எனக்குச் சிறிது அளவும் ஆட்சேபனை இல்லை. ஆனால், நியாயமான நடைமுறை என்ன வென்றால், அதே தேர்வுக் குழுவுக்கோ அல்லது விரிவுபடுத்தப்பட்டத் தேர்வுக் குழுவுக்கோ மசோதாவை அனுப்புவது தான்.

***திரு. துணை சபாநாயகர் :*** மதிப்பிற்குரிய உறுப்பினர் நடைமுறைக் கோணத்திலிருந்து எழுப்பிய ஆட்சேபனையின் சக்தியை நான் புரிந்து கொள்கிறேன். ஆனால், அவைத் தலைவர் மேலும் பரிசீலனைக்கான தீர்மானம் எதையும் அவை முன் வைக்கவில்லை. அவர் தம் நிலையை மட்டுமே விளக்கினார். அரசு எவ்வாறு செயல் படப்போகிறது என்பதையும், மசோதாவின் விதிகளைப் பரிசீலனை செய்வதை எவ்வாறு தொடரப் போகிறது என்பதையும் அவர் எடுத்துரைத்தார். வழக்கமாக எந்த குழுவிற்கும் இந்த மசோதாவை மேலும் ஆய்வு செய்ய அனுப்புவது குறித்து இந்த அவையின், எந்தக் குறிப்பும் அதில் இல்லை. அந்த மாதிரியான தீர்மானம் கொண்டு வரப்படுமானால், இந்த ஒழுங்குப் பிரச்சினையை மகிழ்ச்சியுடன் நான் ஏற்றுக் கொள்வேன். அவை முன் அந்த மாதிரி எந்தத் தீர் மானமும் தற்போது இல்லை. அது நாடாளுமன்ற நடைமுறை களுக்கு எதிரானதல்ல. மாறாக, சாதாரண நடைமுறைக்கு அது சிறிது மாறுபட்டிருந்தாலும் கூட ஜனநாயகம் என்பது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை என்பதே என் கருத்து. நாம் ஒரு புதிய நடைமுறையை உருவாக்க வேண்டும். தீர்மானத்தை அவை முன் வைக்கிறேன்.

*கேள்வி என்னவென்றால் :*

*"தீர்மானத்தை முன் வைக்கிறேன்."*

*தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (சட்டத்துறை அமைச்சர்) : ஐயா, மொத்தத்தில், அவை முன் மூன்று தீர்மானங்கள் உள்ளன. அவற்றில் இரண்டு திரு நஜிருதீன் அகமதால் கொண்டு வரப்பட்டுள்ளது. மேலும் பரிசீலனை செய்ய மசோதாவைத் தேர்வுக் குழுவுக்கு அனுப்ப வேண்டுமென்று அவற்றில் ஒன்று கூறுகிறது. மக்கள் கருத்தை மேலும் தெரிந்து கொள்வதற்காக சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்று இரண்டாவது தீர்மானம் கூறுகிறது. இத்துடன் கூட என் தீர்மானமும் அவை முன் உள்ளது. தேர்வுக் குழுவின் அறிக்கையை பரிசீலிக்க வேண்டுமென்று அது கூறுகிறது. திரு நஜிருத்தீன் அகமது கொண்டுவந்துள்ள தீர்மானங்கள் குறித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஒன்பது நாட்கள் தொடர்ந்து நடந்த விவாதத்தில், மசோதாவை எதிர்த்தவர்கள் கூட அவருடைய தீர்மானங்களை ஆதரிக்கவில்லை என்பதைக் காண முடிந்தது. விவாதத்தில் பங்கு கொண்ட முப்பத்திமூன்று பேர்களில், அதிகபட்சம் இரண்டு உறுப்பினர்கள் மட்டுமே அவருடைய தீர்மானத்திற்கு ஆதரவாக இருந்தனர். மற்றவர்கள் அவருக்கு எந்தவித ஆதரவும் அளிக்கவில்லை. இரண்டாவதாக ஏன் இந்த மசோதா திரும்பவும் தேர்வுக் குழுவின் பார்வைக்கு அனுப்பப்பட வேண்டும் அல்லது மக்களிடையே சுற்றுக்கு விடப்பட வேண்டும் என்று அவர் உரையாற்றுகையில் பலதடவைகள் கேள்விகள் எழுப்பட்டும். தமது தீர்மானத்தை ஆதரிக்கும் வகையில் சரியான காரணம் எதையும் அளிக்க அவர் தவறிவிட்டார் என்பதே என் முடிவாகும். ஆறு மணி நேரம் தொடர்ந்து அவர் ஆற்றிய உரையை நன்கு கவனித்தவர்கள் இதைத் தெளிவாக உணர்ந்திருப்பார்கள். எனவே இந்த இரு தீர்மானங்கள் சம்பந்தமாக எனது நேரத்தையும் அவையின் நேரத்தையும் வீணடிப்பது அவசியமற்றது என்று நான் நினைக்கிறேன்.

ஐயா, இப்பொழுது நான் என் தீர்மானத்திற்கு வருகிறேன். ஏற்கெனவே கூறியபடி இவ்விவாதத்தில், மொத்தத்தில் முப்பத்திமூன்று பேர் பங்கு கொண்டனர். இந்த மசோதாவுக்கு அளிக்கப்பட்ட

★ அ.நி.வி. (சட்) டி., தொகுதி VII, பிரிவு II, 19 டிசம்பர் 1949, பக்கம் 787 -92.

ஆதரவின் அளவையும் எதிர்ப்பின் அளவையும் அவை புரிந்து கொள்ள, சில விஷயங்களை எடுத்துரைக்க விரும்புகிறேன். இந்த விவாதத்தில் பங்கு கொண்ட முப்பத்தி மூன்று பேர்களில் இருபத்தி மூன்று உறுப்பினர்கள் ஆதரவாகப் பேசினர். இந்த இருபத்தி மூன்று பேர்களில், வரையறைக்குட்பட்ட ஆதரவு அளிக்கத் தயாராக இருப் பதாக இருவர் மட்டுமே கூறினர். மூன்று பேர்கள் நடுநிலை வகித் தனர். மூன்று பேர்கள் சுற்றுக்கு விடவும், நான்கு பேர்கள் மசோதா வின் பரிசீலனையை ஒத்திப்போட வேண்டும் என்றும் கூறினர். எனவே அவை உறுப்பினர்களில் மிகப் பெரும்பான்மையினர் மசோதாவுக்கு ஆதரவாக இருப்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. நான் கூறியபடி இருபத்தி மூன்று உறுப்பினர்கள்.

**ரோகிணி குமார் சௌதுரி :** இந்த மசோதாவிற்கு எதிர்ப்புத் தெரிவிக்க தங்கள் பெயர்களை அளித்துள்ள முப்பத்தி நான்கு உறுப் பினர்களுக்கு பேச வாய்ப்பளிக்கப்படவில்லை என்பதை அவர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** விவாதத்தில் பேசியவர்களின் பேச்சுகளை பகுத்தாய்வு மட்டுமே செய்கிறேன் (குறுக்கீடு)

**திரு. சபாநாயகர் :** அமைதி. அமைதி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த விஷயத்தை மேலும் சிறிது ஆழமாகப் பார்க்கலாம். மசோதாவின் எப்பகுதிக்கு எதிர்ப்புள்ளது என்பதைத் தெரிந்து கொள்ள, மசோதாவை எதிர்த்த வர்களின் நிலைப்பாட்டைப் பகுத்தாய்வோம். எட்டு விஷயங்கள் சம்பந்தமாக இந்துச் சட்டத்தை முறைப்படுத்தித் தொகுக்க முனைந் துள்ள இந்த மசோதாவின் ஐந்து விஷயங்கள் குறித்து எந்த வித ஆட் சேபணையும் எழுப்பப்படவில்லை.

**ரோகிணி குமார் சௌதுரி :** ஏனெனில் நீங்கள் எங்களைப் பேச அனுமதிக்கவில்லை.

**திரு. சபாநாயகர் :** அமைதி, அமைதி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, எனது நண்பர் குறுக்கீடு செய்ய மாட்டார் என நம்புகிறேன்.

**திரு.சபாநாயகர்:** ஒரு சமரசத்திற்கான சூழ்நிலையை பாழ்படுத்த விரும்பவில்லை என்று இப்பொழுதுதான் மதிப்பிற்குரிய உறுப்பினர் வாக்குறுதி அளித்துள்ளார்.

**ரோகிணி குமார் சௌதுரி:** இப்பொழுது அவர் பேசாம லிருப்பதுதான் சமரசத் திட்டம்.

**திரு. சபாநாயகர்:** தொடர் வர்ணனை இப்பொழுது வேண்டாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூறியபடி, திருமணம், தத்தெடுப்பது காப்பாண்மை, கூட்டுக் குடும்பச் சொத்து, மகளிர் சொத்து, உயில் எழுதா வாரிசுரிமை, உயில் வழி வாரிசு உரிமை, ஜீவனாம்சம் ஆகிய விஷயங்கள் சம்பந்தமாக இந்துச் சட்டத்தை முறைப்படுத்தித் தொகுக்க இந்த மசோதா கொண்டு வரப்பட்டுள்ளது. தத்தெடுப்பது சம்பந்தப்பட்ட வரை, மசோதா வின் இந்தப் பகுதிக்கு எதிர்ப்பு எதையும் நான் காணவில்லை. அதே போன்று காப்பாளர்கள் குறித்தும்....

**பண்டிட் தாகூர் தாஸ் பர்கவா** (கிழக்கு பஞ்சாப் : பொது) : தத்தெடுப்பது சம்பந்தமான சில விதிகள் குறித்தும், வாரிசு நியமனம் சம்பந்தமாக சில விதிகள் இல்லாதது குறித்தும் எதிர்ப்புத் தெரிவித் துள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர் அம்பேத்கர் :**மகளிர் சொத்து, உயில் வழி வாரிசுரிமை, மற்றும் ஜீவனாம்சம் குறித்தும் எதிர்ப்பு இல்லை. உயில் எழுதா வாரிசுரிமை, கூட்டுக் குடும்ப சொத்து, திருமணம் சம்பந்தமான பிரிவுகள் குறித்து மட்டுமே சிறிது எதிர்ப்பு காணப்பட்டது. மசோதாவின் இந்தப் பகுதிகளைப் பொறுத்த வரையில், ஒன்றிரண்டு விஷயங்களைக் குறித்து மட்டுமே அதிக எதிர்ப்பு காணப்பட்டது.

**ரோகிணி குமார் சௌதுரி:** ஓர் ஒழுங்குப் பிரச்சினை நாம் திருத்தங்களுக்கு வரும்போது இந்த விஷயங்கள் விவாதிக்கப்பட லாம் என்று நீங்கள் தீர்ப்பளித்துள்ளீர்கள்.

**திரு. சபாநாயகர் :** மதிப்பிற்குரிய உறுப்பினர் தம் இருக்கை யில் அமர்வாரா மற்ற உறுப்பினர்கள் தங்கள் கருத்துகளைத்

தெரிவிக் கும்போது குறுக்கீடு செய்யக் கூடாது. உறுப்பினர்கள் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். மாண்புமிகு அமைச்சர் குறுக்கீடு செய்யப்படாமல் தம் பேச்சைத் தொடர அனுமதிக்கப்பட வேண்டும். பின்னர் இந்த மசோதா இங்கு விவாதத்திற்கு வரும்போது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படும்.

**ரோகிணி குமார் சௌதுரி :** ஆனால் ஐயா, நீங்கள் எங்களை அனுமதிக்காவிட்டால்.....

**திரு. சபாநாயகர் :** எந்தக் குறுக்கீட்டையும் நான் அனுமதிக்கப் போவதில்லை.

**ரோகிணி குமார் சௌதுரி :** நிலைமையை விளக்க ....

**திரு. சபாநாயகர்:** நிலைமையை விளக்க அனுமதித்தால் மீண்டும் ஒவ்வொரு வாக்கியத்திற்கும் பதில் தொடர ஆரம்பிக்கும். இம்மாதிரி எதையும் அனுமதிக்க நான் தயாரில்லை. (குறுக்கீடு) இப்பொழுது மதிப்பிற்குரிய உறுப்பினர் குறுக்கீடு செய்ய மாட்டார் கள் என நினைக்கிறேன். இல்லையெனில் இம்மாதிரியான குறுக் கீடுகள், ஒழுங்குப் பிரச்சினைகள், ஆலோசனைகள் குறித்து கடுமை யான எச்சரிக்கை அளிக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். ஆனால் நான் தீர்மானத்தை....

**திரு. எச்.வி. காமத்** (ம.மா. மற்றும் பேரார் : பொது) மசோதா மீண்டும் விவாதத்திற்கு வரும் என்று நீங்கள் கூறினீர்களா, ஐயா?

**திரு. சபாநாயகர் :** அதன் விதிகள் விவாதத்திற்கு வரும்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா** (மதராஸ் : பொது) : தயவு செய்து நான் ஒரு சிறு ஆலோசனை கூறலாமா? இது விவாதிக்கப் பட்டாலும், விவாதிக்கப்படாவிட்டாலும் சரி, பரிசீலனைத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்படும். எனவே மசோதாவிற்குப் பொறுப்பான அமைச்சர் எவ்வித அறிக்கை அளித்தாலும், அதற்கு எந்தவிதச் சவாலும் இருக்க முடியாது. சவால் இல்லாதவரை, சரியான வாக்கெடுப்பிற்கு வழியிருக் முடியாது. மசோதாவை முன்மொழிந்தவர் பல மணி நேரம் அவையில் இருக்கவில்லை. அவையில் என்ன நடந்தது. என்ன நடைபெறவில்லை என்பது அவருக்குத் தெரிவிக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, தத்தெடுக்கும் பிரச்சினை சம்பந்தமாக எதிர்ப்பு

ஏதும் இல்லையென அவர் கூறுகிறார். ஆனால் இங்கு ஒரு கனவான் எழுந்திருந்து அந்த விதிகளுக்கு எதிராகப் பேசியதாகக் கூறுகிறார். எனவே மாண்பு மிகு அமைச்சர் தமது பதிலுரையை விவாதத்துக் குரியதாக ஆக்கிவிட வேண்டாம் எனக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. சபாநாயகர் :** மாண்புமிகு அமைச்சரை நான் புரிந்து கொண்ட வரையில், தமது கண்ணோட்டத்தை அவர் சுருக்கிக் கூற முயற்சிக்கிறார் என நினைக்கிறேன்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா :** இல்லை.

**திரு சபாநாயகர் :** அமைதி, அமைதி. மதிப்பிற்குரிய உறுப் பினர் குறுக்கீடு செய்ய வேண்டாம். தமது கருத்தை அவை முன் வைக்க அவர் முழு உரிமை பெற்றுள்ளார். அது சரியாக இருக்கலாம், தவறாகவும் இருக்கலாம். எனவே அவர் பதிலளிக்கும்போது, அவ ருடைய பதிலுரை கேட்கப்பட வேண்டும். மதிப்பிற்குரிய உறுப் பினர்கள் உடன் எழுந்து நின்று ''இந்தக் கூற்று சரியில்லை; அந்த அறிக்கை சரியில்லை'' என்று கூறக்கூடாது. ஏனெனில் அது சர்ச்சை யில் போய் முடியும். அவர் பேசுவதை நாம் கேட்போம். எதிர் தரப்பினருடன் பொறுமையைக் கடைப்பிடிப்பதே ஜனநாயகத்தின் சிறந்த பண்பு.

**ரோகிணி குமார் சௌதுரி :** தவறான பேச்சுகளுக்கு நாங்கள் பதிலளிக்க வேண்டாமா?

**திரு. சபாநாயகர் :** இப்பொழுது பதிலளிக்க வேண்டாம். விதி வாரியாக விவாதம் நடக்கும் போது எதிர் தரப்பினருக்கு வாய்ப்பு அளிக்கப்படும்.

**ரோகிணி குமார் சௌதுரி :** அவருக்கும் அப்பொழுது வாய்ப்புக் கிடைக்கும்.

**திரு. சபாநாயகர் :** இப்பொழுது மதிப்பிற்குரிய உறுப்பினர் குறுக்கீடு செய்தால் நான் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டி வரும். எந்த வித குறுக்கீடோ இடைமறித்தலோ, விமர்சனமோ இருக்கக்கூடாது. தன் சொந்த விளக்கங்களையும், விஷயங்களைப் பற்றிய தமக்குச் சரி என்று தோன்றும் சொந்தக் கருத்துகளைக் கூற மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் உரிமை பெற்றுள்ளார். நமக்கு

அதில் உடன்பாடு இல்லாமல் இருக்கலாம். (குறுக்கீடு) அமைதி, அமைதி. பதில் அல்லது விவாதம் எதுவும் இப்பொழுது வேண்டாம். குறுக்கீடு எதையும் நான் அனுமதிக்கப் போவதில்லை. மாண்புமிகு சட்ட அமைச்சர் தம் உரையைத் தொடர்வார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, மசோதாவின் ஐந்து பிரிவுகளைக் குறித்து எந்த வித எதிர்ப்பும் இல்லை என்பதை விளக்கிக் கொண்டிருந்தேன். திருமணம், கூட்டுக் குடும்ப சொத்து, உயில் எழுதா வாரிசுரிமை ஆகிய மூன்று பிரிவுகளைப் பொறுத்த வரையில், இந்த மசோதாவை எதிர்ப்பவர்களின் கண்ணோட்டத்தை, நான் கவனித்த வரையில் அந்தப் பிரிவுகள் முழுவதையும் அவர்கள் எதிர்க்கவில்லை. சில விஷயங்களைக் குறித்து மட்டுமே அவர்கள் எதிர்ப்பு இருந்தது. திருமணத்தைப் பொறுத்த வரையில் விவாகரத்தைக் குறித்துதான் அதிக எதிர்ப்பு இருந்தது, கூட்டுக் குடும்பத்தைப் பொறுத்தவரையில், எஞ்சுநர் உரிமை பற்றியே எதிர்ப்பு பலமாக இருந்தது. உயில் எழுதா வாரிசுரிமையைப் பொறுத்தவரையில் மகளின் பங்கைப் பற்றியே அதிக எதிர்ப்பு காணப்பட்டது. இந்த மசோதாவை எதிர்த்தவர்கள் முன் வைத்த வாதங்கள் மற்றும் விவாதங்களுக்கு முழுமையான பதில் அளிக்க வேண்டுமென்றால் விவாகரத்து, எஞ்சுநர் உரிமை விதிகள், மற்றும் மகளின் பங்கு ஆகிய மூன்று விஷயங்களை மட்டுமே ஆழ்ந்து கவனித்தால் போதுமானது. மசோதாவின் இந்த மூன்று பகுதிகளிலும் உள்ள விதிகளை ஆதரித்து வாதிட நான் முற்றிலும் தயாராக உள்ளேன். மாண்புமிகு பிரதமர் அளித்துள்ள அறிக்கையின் காரணமாக, இப்பொழுது எந்தவித சர்ச்சையிலும் இறங்குவது அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். மாண்புமிகு பிரதமரின் ஆலோசனையை வரவேற்பதுடன், அது எவ்வளவு தூரம் வரவேற்கப் படுகிறது என்பதைப் பார்க்க விரும்புகிறேன். இதனால், இக்கட்டத்தில் இவ்விஷயங்கள் குறித்து விரிவான பதிலளிக்க நான் விரும்பவில்லை. ஐயா, உங்கள் யோசனைப்படி என்னுடைய பதிலை பின்னர் அளிக்கலாமென நினைக்கிறேன்.

நாடு இருக்கும் நிலையை அவை உணர்ந்து கொள்ள ஒரே ஒரு விஷயத்தை மட்டும் விளக்கிக் கூறுவது அவசியம் என்று நினைக்கிறேன். இந்தியா ஒருங்கிணைக்கப்பட்டு, ஒரே நாடாக குடியரசாக உருவானபின், அதன் எல்லைப் பரப்புக்குள், இந்துச் சட்டத்தின் பல்விதத் தொகுப்புகள் வந்துள்ளதை காண முடிகிறது. பரோடா சமஸ்தானத்தில் இந்தியாவின் மற்ற மாகாணங்களில் நடைமுறை

யிலுள்ள இந்துச் சட்டத்திருந்து மாறுபட்ட இந்துச் சட்டத் தொகுப்பு நடைமுறையிலுள்ளது. இந்த சமஸ்தானம் இப்பொழுது பம்பாய் மாகாணத்தின் பகுதியாகிவிட்டது. அதேபோன்று 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி, இந்திய இறையாண்மைக்கும், நிலப்பரப்புக்கும் வெளியே இருந்த திருவிதாங்கூர் கொச்சின், இப்பொழுது இந்தியாவின் பகுதியாகிவிட்டது. மகளின் சொத்து உரிமை சம்பந்தமாக, தனியாக இந்துச் சட்டத் தொகுப்பை மைசூர் சமஸ்தானம் கொண்டிருந்தது. பிரிட்டிஷ் மாகாணங்களில் நடைமுறை யிலுள்ள சட்டத்திலிருந்து இது பெருமளவு மாறுபட்டது. இப்பொழுது அந்த சமஸ்தானம் இந்தியாவின் பகுதியாகிவிட்டது. எனவே, 1950 ஜனவரி 26ல் இந்தியக் குடியரசு உதயமாகும்போது இந்துச் சட்டத் தின் பல்வேறு நடைமுறைகளை நாம் சந்திக்க வேண்டியிருப்ப துடன், அதை நாம் ஒருங்கிணைக்க நம்மால் முடிந்த அளவுக்கு பாடுபட வேண்டும். உதாரணமாக, இந்துச் சட்டத்தின் இரண்டு முறைகளை பம்பாய் மாகாணத்தில் அமல்படுத்துவது எப்படி சாத்தியமாகும்? பரோடா சமஸ்தானமும், இதர நிலப்பரப்புகளும் இணைந்து ஒரே மாகாணமாக, மாநிலமாக உருவான பிறகு பரோடா நிலப்பரப்பில் ஒருவகை இந்துச் சட்டத்தையும், மற்ற பகுதிகளில் வேறொரு வகை இந்துச் சட்டத்தையும் எப்படி செயல்படுத்த முடியும்? இதேபோன்ற நிலைதான் மற்ற பகுதிகளிலும் நமது ஆளுகையின்கீழ் வரும் என்று நாம் நம்பிக்கை கொண்டுள்ள போர்த்துகீசியர் மற்றும் பிரெஞ்சுக்காரர்களின் அதிகாரத்தின் கீழுள்ள பகுதிகளில் மாறுபட்ட இந்துச் சட்டம் நடைமுறையிலுள்ளது. அவர்கள் நம்முடன் இணையும்போது, இதே பிரச்சினையை நாம் சந்திக்க வேண்டியிருக்கும். கோவாவிலுள்ள இந்துக்கள் பின்பற்றி வரும் சட்டங்களின் நிலை என்னவாகும்? அவர்கள் தங்கள் சட்டங் களைத் தொடர்ந்து பின்பற்ற அனுமதிக்கப்படுவார்களா? இங்கு அமலிலுள்ள சட்டத்தை அவர்கள் மீது திணிக்கப் போகிறோமா? இரண்டு தரப்பினர்களும் ஏற்றுக் கொள்ளக்கூடிய சட்டநடை முறையை உருவாக்கப் போகிறோமா? இந்திய ஒருங்கிணைப்பின் விளைவாக, இந்துச் சட்டத்தை முறைப்படுத்தி தொகுக்க வேண்டிய பிரச்சினை மிகத் தெளிவாக நம்முன் எழுந்துள்ளது. இந்தியக் குடியரசில் வந்து இணையும் பலதரப்பட்ட மக்களிடையே ஒற்றுமை, மற்றும் ஒருமைப்பாட்டை வளர்க்க, இந்தப் பிரச்சினையைத் தவிர்ப் பதோ, ஒத்திப்போடுவதோ கூடாது என்று அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**டாக்டர் பி. பட்டாபி சீதாராமையா:** முறைப்படுத்தித் தொகுப்பதை ஏற்றுக்கொள்கிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மேலும் மிக முக்கியமாக எனக்குத் தோன்றும் ஒரு விஷயத்தை அவையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இந்த அவையும், நிச்சயமாக இந்த மசோதாவை எதிர்ப்பவர்களும் இந்திய அரசியல் அமைப்பின் விதியை மறந்துவிட்டதாகத் தெரிகிறது. நாம் நிறைவேற்றியுள்ள, இந்திய அரசியல் அமைப்பின் விதி 15, அடிப்படை உரிமைகள் என்பதன் கீழ், மிகத் தெளிவாக வரையறுத்துள்ளது.

> ''இந்தியக் குடிமகன் எவரையும் சமயம், இனம், ஜாதி, பால், பிறப்பிடம் அல்லது அவற்றில் எதன் அடிப்படையிலாவது அரசு பாகுபடுத்தி நடத்தக்கூடாது.

இந்துச் சட்டத்தில் பல குறைபாடுகள் இருப்பதுடன், சவர்ணா ஜாதிகளுக்கும், சூத்திரர்களுக்கும் இடையே பாகுபாடு காட்டப்படும் கொள்கை இந்து சட்டத்தில் உள்ளதை, அதைக் கவனமாகப் படித்த எவரும் ஒத்துக் கொள்வர். ஒரு இந்து ஆணும் ஒரு இந்து பெண்ணுமே பாகுபாடுடன் நடத்தப்படுகின்றனர்.

**திரு. மகாவீர் தியாகி:** ஒரு இந்துவும் முஸ்லீமும் கூடத்தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனவே, இந்திய அரசியல் அமைப்பின் சில விதிகளுடன் இந்துச் சட்டத்தின் சில பகுதிகள் முரண்பாடானதாக இருக்கும் என்பது தெளிவாகத் தெரிகிறது. வேறு ஒரு விஷயத்தையும் நாம் இங்கு கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றம் எதிர்காலத்தில் இயற்றும் சட்டங்களை மட்டுமல்ல விதி 15 கட்டுப்படுத்துகிறது. இந்திய அரசியலமைப்பு அதற்கும் மேலும் செல்கிறது. விதி 13ல் கொடுக்கப்பட்டுள்ளதை உங்களுக்குப் படித்துக்காட்ட விரும்புகிறேன்.

> ''இந்த அரசியல் அமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன், இந்திய நிலப்பரப்பில் நிலவிலுள்ள எந்தச் சட்டமும், அது எந்த அளவுக்கு இந்தப் பகுதியில் உள்ள விதிகளுக்கு முரணானதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு அது செல்லாதது எனக் கருதப்படும்."

ஒரு வழக்குரைஞர் என்ற முறையில் பார்க்கும்போது, இந்துச் சட்டத்தை முறைப்படுத்தித் தொகுப்பதுடன் கூறு 15ன் விதிகளுக் கொப்ப அதில் மாற்றம் செய்யாவிடின், இந்துச் சட்டத்தின் பல பகுதிகள் கூறு 13ன்படி நீதிமன்றத்தால் செல்லாதவை என்று அறிவிக்கப்படும் என்பதில் எனக்கு எவ்வித சந்தேகமுமில்லை. அரசியல் அமைப்பின் கூறு 13ன்படி இந்துச் சட்டத்தை நீதிமன்ற பரிசீலனைக்கு உட்படுத்த வேண்டுமென்று அவை விரும்புகிறதா? மேலும் நீதி மன்றத்துக்கு வரும் போது, இந்தச் சட்டத்தின் பல பகுதிகள் கொஞ்சம் கொஞ்சமாக செல்லுபடியாகதவை என்று அறிவிக்கப்பட வேண்டுமா? அல்லது அவை இந்த விஷயத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டு கூறு 15ன் விதிகளுக்கேற்ப இந்துச் சட்டத்தில் மாற்றங்கள் கொண்டு வருவதன் மூலம் கூறு 13ன் கீழ் அவை செல்லுபடியாகதவை என்று அறிவிக்கப்படுவதைத் தவிர்க்கப் போகிறதா? நீதித்துறை கொஞ்சம் கொஞ்சமாக இந்துச் சட்டத்தை உடைக்காமல், நமது அரசியல் அமைப்புக்கு ஏற்ப, ஒருங்கிணைந்த ஒரு முறையாக அதை மாற்றுவதை அவை விரும்புகிறதெனின், இந்த விஷயத்தைப் பரிசீலிக்காது தள்ளிப் போடுவது தவறானது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஐயா, என்னுடைய முடிவின்படி இவை முக்கியமான காரணங் களாகும். எனவே இந்த விஷயத்தை பரிசீலிப்பதை ஒத்தி வைப்பதோ, தாமதப்படுத்துவதோ இந்த அவைக்கு ஏற்புடையதல்ல. எனவே எனது தீர்மானத்தை அவை ஏற்றுக் கொண்டு, மசோதாவின் பரி சீலனைக் கட்டத்தை நிறைவேற்றிவிடும் என நம்புகிறேன்.

**டாக்டர் பி, பட்டாபி சீதாராமையா :** ஐயா, நான் ஒரு விளக்கம் கேட்கலாமா? தாம் மேற்கோள் காட்டிய அரசியல் அமைப்பின் குறிப்பிட்ட விதிக்கு முரணான எல்லா விதிகளும் செல்லுபடியாகமல் போகும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். ஜனவரி 26ல், அரசியல் சாசனம் நடைமுறைக்கு வரும்போது அவர் குறிப்பிட்ட விதியும் நடைமுறைக்கு வருமாகையில் இந்துச் சட் டத்தின் பல பிரிவுகள் செல்லுபடியாகமல் போய், ஒரு சூன்யம் உருவாகி விடுமா? இதைவிட நியாயமற்ற அனுமானம் இருக்க முடியுமா?

**திரு. சபாநாயகர் :** அமைதி, அமைதி. மதிப்பிற்குரிய உறுப் பினர் தம் சொந்தக் கருத்தை வெளியிடுகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, எனது நண்பர் டாக்டர் பட்டாபி சீதா ராமையாவைப் பொறுத்துவரையில் நான் மிக அதிகமான சுயக் கட்டுப்பாடுடன் நடந்து கொண்டுள்ளேன் என்பதைத் தெரிவிக்கலாம் என நினைக்கிறேன். அதைக் குறித்து நான் சொல்ல விரும்பியதையெல்லாம் சொல்லியிருந்தால் நான் சொன்னதை அவர் கேட்டிருப்பார்.

**திரு. சபாநாயகர்:** தேர்வுக் குழுவால் அனுப்பட்ட, இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளைத் தொகுத்து, மாற்றங்கள் செய்வதற்கான மசோதாவை, பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வது என்ற பிரேரணைக்கு இரு திருத்தங்கள் உள்ளன. முதலில் இந்தத் திருத்தங்களை அவை முன்வைக்கிறேன். முதலாவதாக, 1949 ஆம் ஆண்டு இறுதிக்குள், மக்களிடமிருந்து மேலும் கருத்துகளைப் பெற மசோதாவைச் சுற்றுக்கு விடக் கோரும் திரு. நஜிருத்தீன் அகமதின் திருத்தம் மிகவும் கால தாமதமாகி விட்டதால் தேதியை நீட்டிக்க முடியவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** நிலைமையை விளக்கட்டுமா, ஐயா?

**திரு. சபாநாயகர் :** வேண்டாம். விஷயம் என்னவென்றால் :

> ''1949 ஆம் ஆண்டு முடிவிற்குள், மக்களிடமிருந்து மேலும் கருத்துகளைப் பெற மசோதாவைச் சுற்றுக்கு விடுவது''

தீர்மானம் தோல்வியடைந்தது.

**திரு. சபாநாயகர்:** பிறகு அடுத்த திருத்தம் விஷயம் எனன வென்றால் :

> ''1948 ஏப்ரல் 9ல் அனுப்பப்பட்ட மூல மசோதா சம்பந்தமாக மேலும் அறிக்கை கோரி, மசோதாவை முன்பு அனுப்பப்பட்ட அதே தேர்வுக் குழுவுக்கு அனுப்புவது.''

தீர்மானம் தோல்வியடைந்தது.

**திரு. நசிருத்தீன் அகமது :** ஐயா, வாக்களிப்புக்கு விடக் கோருகிறேன்.

**திரு. சபாநாயகர் :** மிக்க நன்று. ஆம் என்பவர்கள் ஐந்தும் மற்றவர்கள் இல்லை என்றும் தெரிவித்துள்ளனர். பெரும்பான்மை

யினரால் தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது. நான் இப்பொழுது ஆரம்பத் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

விஷயம் என்னவென்றால் :

''இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளை முறைப்படுத்தித் தொகுக்கவும், மாற்றங்கள் செய்யவும், தேர்வுக்குழுவால் அனுப்பப்பட்ட இந்த மசோதாவை பரிசீலினைக்கு எடுத்துக் கொள்வது''.

தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**பேராசிரியர் ஷிபன் லால் சாக்சேனா** (உ.பி : பொது): ஐயா, 'இல்லை' யென்பவர்களுக்கு வெற்றி.

**திரு. சபாநாயகர்:** அவர்கள் எண்ணிக்கை ஆறு அல்லது ஏழு தான். பெரும்பான்மை உறுப்பினர்கள் தீர்மானத்திற்கு ஆதரவாக உள்ளனர்.



## *இந்து திருமணங்களைச் செல்லத்தக்கதாக்கும் (திருத்த) மசோதா

### (பிரிவு 2ன் திருத்தம்)

**திரு. ஹிமத்சிங்கா** (மேற்கு வங்காளம்) : 1949 ஆம் ஆண்டு இந்து திருமணங்களைச் செல்லத்தக்கதாக்கும் சட்டத்திற்கு (பிரிவு 2ன் திருத்தம்) மேலும் திருத்தம் செய்ய மசோதா ஒன்றை அறிமுகப் படுத்த அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. சபாநாயகர் :** விஷயம் என்னவென்றால் :

''1949 ஆம் ஆண்டு இந்து திருமணங்களைச் செல்லத் தக்கதாக்கும் சட்டத்திற்கு (பிரிவு 2ன் திருத்தம்) மேலும் திருத்தம் செய்ய மசோதா ஒன்றை அறிமுகப்படுத்த அனுமதிப்பது.

மசோதா ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**திரு. ஹிமத்சிங்கா :** மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

## **இந்து சட்டத் தொகுப்பு

**திரு. சபாநாயகர் :** பட்டியலின் அடுத்த பொருளான டாக்டர் அம்பேத்கரின் தீர்மானத்திற்கு வருகிறோம் : இந்துச் சட்டத்தின் சில பிரிவுகளை முறைப்படுத்தி தொகுக்கவும், மாற்றங்கள் செய்யவும் தேர்வுக் குழுவால் அனுப்பப்பட்ட மசோதாவை மேலும் பரிசீலனைக்கு எடுத்து கொள்வது.

இப்பொழுது, இதைப் பொறுத்த வரையில், பல திருத்தங்கள் வந்துள்ளன. ஒவ்வொரு உறுப்பினராக அழைக்கிறேன்.

**திரு. தியாகி** (உத்திரப் பிரதேசம்) : இந்த விஷயத்தை அவை முற்றிலும் எதிர்பார்க்கவில்லை. உறுப்பினர்களுக்கு சிறிது அவகாசம் கொடுக்க வேண்டுமென நான் நினைக்கிறேன்.

**திரு. சபாநாயகர் :** அமைதி, அமைதி. ஒரு நேரத்தில் ஒருவரே பேச வேண்டும். மாண்புமிக சட்டத்துறை அமைச்சர் ஏதாவது கூற வேண்டயுள்ளதா?

***சட்டத்துறை அமைச்சர்*** *(டாக்டர் அம்பேத்கர்): அதை எடுத்துக் கொள்ளலாம்.*

***திரு. சபாநாயகர்:*** *உறுப்பினர்கள் இதை எதிர்பார்க்கவில்லை என்று கூறப்படுகிறது.*

***டாக்டர் அம்பேத்கர்:*** *கடந்த பதினைந்து நாட்களாக பொருள் கள் பட்டியலில் மசோதா உள்ளது. எனவே அவ்வாறு கூறமுடியாது.*

***திரு. ஜே.ஆர். கபூர்*** *(உத்தரப்பிரதேசம்) : இந்த மசோதாவில் மிகவும் ஆர்வம் உள்ளவர்களுக்கு வருத்தம் இருக்கலாம். திருமதி ரேணுகாரே இங்கில்லை. மேலும் அதில் குறிப்பாக ஆர்வமுள்ள வர்கள் பலர் இங்கில்லை.*

***திரு. சபாநாயகர் :*** *பல்வேறு திருத்தங்கள், ஒத்திவைப்புத் தீர்மானங்களின் முடிவு எப்படியிருப்பினும், இதைக் கொண்டு வந்த உறுப்பினர்கள் தங்கள் இருக்கையில் இல்லாததைத் தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். எதிர்பாராத முறையில் இந்த அலுவல் எடுக்கப்பட்டுள்ள நிலையில் அவர்களை அழைப்பது நமது தரப்பிலிருந்து சரியான நேர்மையான நடவடிக்கைதானா என்பதைச் சிந்தித்துப் பார்க்கிறேன். இந்த விஷயமே எனக்குக் கவலை அளிக் கிறது. திரு ரோகிணி குமார் சௌதுரி இருப்பதைக் காண்கிறேன். திரு. நஜிருதீன் அகமது இங்கு இருப்பதும் தெரிகிறது.*

***திரு. ஆர்.கே. சௌதுரி*** *(அசாம்) எங்களுக்கு அரை மணி நேரம் அவகாசம் கொடுத்தால் மற்ற உறுப்பினர்களும் வந்து விடுவார்கள்.*

***திரு. சபாநாயகர்:*** *அவையின் நடவடிக்கைகளைத் தொடர் வோம். திரு. நஜிருதீன் அகமதைப் பேச அழைக்கிறேன்.*

***பண்டிட் குன்ஸ்ரு*** *(உத்தரப்பிரதேசம்) : இதில் அக்கறை கொண் டுள்ள பல்வேறு அமைப்புகளுடன் மாண்புமிகு சட்ட அமைச்சர் மாநாடு ஒன்று நடத்தியுள்ளார். எனவே, விவாதத்தை அவருடைய அறிக்கையிலிருந்தே ஆரம்பிக்கலாமென்று யோசனை கூறலாமா? அம்மாநாட்டில் நடந்த விவாதங்கள் குறித்து அவர் சிறு அறிக்கை ஒன்றைச் சுற்றுக்கு விட்டிருந்தார். மாநாட்டின் முழு விவரங்களை யும் அவரிடம் இருந்து தெரிந்து கொள்வதில் எல்லாத் தரப்பின ருக்கும் மகிழ்ச்சிகரமாக இருக்கும். அவர் கொண்டு வரவுள்ள*

திருத்தங்களின் சுருக்கத்தையும் தெரிவிக்கலாம். இதுவே சரியான வழியாக இருக்கும் என்பதுடன், உறுப்பினர்களுக்கு ஒரு வகையில் இது சிறிது அவகாசம் கொடுக்கும் என நினைக்கிறேன்.

*டாக்டர் அம்பேத்கர் :* இன்னும் ஏதாவது சேர்க்க வேண்டுமா என்பது எனக்குத் தெரியவில்லை. இந்தக் கூட்டத் தொடரின் ஆரம்பத்திலேயே உறுப்பினர்கள் கைகளில் கிடைக்க வேண்டுமென்ற எண்ணத்துடன், அறிக்கை ஒன்றை அளிக்க நான் முக்கிய கவனம் எடுத்துக் கொண்டேன். அப்பொழுதுதான் என்ன நடந்தது என்பதன் முழு விவரத்தையும் உறுப்பினர்கள் தெரிந்து கொள்ள முடியும். மாநாட்டின் நடவடிக்கைகளை வார்த்தைக்கு வார்த்தை பதிவு செய்ய எங்களால் முடியவில்லை என்பதற்காக வருத்தப்படுகிறேன். காரணம் என்னவென்றால் பல உறுப்பினரகள் பல்வேறு மொழிகளி உரை நிகழ்தினார்கள். சிலர் இந்தி மொழியில் பேசினர். சிலர் மராத்தியிலும், சிலர் குஜராத்தியிலும், சிலர் சமஸ்கிருதத்திலும் கூட பேசினர். இந்த உரைகளை வார்த்தைக்கு வார்த்தை பதிவு செய்ய எங்களால் முடியவில்லை. சிலர் தமிழ் மொழியில் கூட பேசினர். எனவே வார்த்தைக்கு வார்த்தை பதிவு செய்ய சுருக்கெழுத்தாளர் யாரும் கிடைக்கவில்லை. இல்லையென்றால் முழு உரைகளையும் பதிவு செய்திருக்கலாம். எனவே தான், விவாதத்திற்காக மாநாட்டின் முன் வைக்கப்பட்ட விஷயங்கள், மற்றும் விவாதத்தின்போது பல்வேறு தரப்பிலிருந்து வந்துள்ள கருத்துகள் ஆகியவைகளை, என் நினைவில் உள்ளபடி நானே சுருக்கமாக தயார் செய்து கொண்டேன். இவை அவை முன் வைக்கப்பட்டு மாநாட்டுப் பிரதிநிதிகள் பேச அழைக்கப்பட்டனர். இதில் பங்கு கொண்ட பேச்சாளர்களிடையே எந்த விஷயங்களில் அதிக அளவில் உடன்பாடு காணப்படுகிறது என்பதைத் தெரிந்து கொண்டேன். அதன் அடிப்படையில் மசோதாவிற்கு சில திருத்தங்களைக் கொடுத்துள்ளேன்.

ஐயா, அவைக்கு உதவும் பொருட்டு, இந்துச் சட்டத் தொகுப்பின் இரண்டு வகை வாசகங்களைத் தயாரித்து அளித்துள்ளேன் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவர்களுக்கு ஒரு முழுமையான சித்திரத்தைக் கொடுப்பதற்காக, மூலப் பிரிவுகளும், நான் அதில் சேர்க்க விரும்பும் திருத்தங்களும் ஒரு வாசகத்தில் வரிசைக் கிரமத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாவது வாசகம் ஒன்றையும் தயாரித்துள்ளேன். அதில் தேர்வுக் குழுப் பிரிவின் மூல வாசகங்கள் வலது பக்கத்திலும், புதிய தொகுப்பு மற்றும் அதன் திருத்தங்கள் இடது பக்கத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன. இதனால், திருத்தம்

2

ஒன்று கொண்டு வரப்படும்போது, பழைய விதி என்ன கூறுகிறது என்பதைத் தெரிந்து கொள்வதுடன், புதிய விதி என்ன கூறுகிறது என்பதையும் உறுப்பினர்கள் கண்டு கொள்ள முடியும். முறைசாரா குழுக்களுடனான விவாதங்களுக்குப் பிறகு, மாற்றங்கள் செய்யப் பட்ட இந்துச் சட்டத் தொகுப்பின் விதிகளை அவை சரிவரப் புரிந்து கொள்ள உதவுவதற்கு என்னால் முடிந்த அளவு பாடுபட்டுள்ளேன். மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் யாராவது கேள்விகள் கேட்க வேண்டு மென்று நினைத்தால், இந்த அறிக்கையில் கொடுத்த விவரங்கள் சம்பந்தமாக மேலும் தெளிவுபடுத்தத் தயராய் இருக்கிறேன்.

**திரு. ஞானிராம்:** மசோதா ஒன்றிரண்டு நாட்கள் விவாதிக்கப் பட்டு அது ஒத்திவைக்கப்படும் என்று சட்டத்துறை அமைச்சர் தெரி வித்துள்ளார்.

**திரு. சபாநாயகர்:** கட்சிக் கூட்டத்தில் நடைபெற்றதைக் குறித்து நாம் அக்கறை கொள்ள வேண்டியதில்லை.

**திரு. ஆர்.கே. சௌதுரி :** கட்சிக் கூட்டத்தில் கூறப்பட்டதைக் குறித்து மாண்புமிகு சட்ட அமைச்சர் தயவு செய்து அறிக்கை ஒன்றை வெளியிடலாம்.

**திரு. சபாநாயகர்:** அமைதி, அமைதி. கட்சி நடவடிக்கைகள் இங்கு அனுமதிக்கப்படுவதில்லை.

**திரு. சிவன் பிள்ளை : (திருவாங்கூர் : கொச்சி):** இப்பொழுது விதி வாரியாக விவாதம் நடைபெறப் போவது என்றால் மசோதாவின் கொள்கை பற்றிய பொதுவான விவாதம் முடிந்துவிட்டதா?

**திரு. சபாநாயகர்:** மசோதா எந்தக் கட்டத்தில் உள்ளது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் சரியாகப் புரிந்து கொள்ள வில்லை என்று தெரிகிறது. பரிசீலனைத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டு விட்டது. விதிவாரியாக பரிசீலிக்க வேண்டியதுதான் அடுத்த பணியாக உள்ளது. விதி 2ஐ அவை முன் வைக்குமுன், சில திருத் தங்கள் அல்லது இந்த விவாதத்தை ஒத்தி வைக்க வேண்டுமென்று வலியுறுத்தி ஒத்தி வைப்புத் தீர்மானங்களைக் கவனிக்க வேண்டி யுள்ளது. இவை ஒத்தி வைப்புத் தீர்மானங்கள் என்ற முறையில் முன்னுரிமை பெறுகின்றன. தமது தீர்மானத்தை முன்மொழிய நஜிருதீன் அகமது விரும்பினால், அவரைப் பேச அழைக்கிறேன்.

**பிரதம மந்திரி மற்றும் வெளியுறவுத் துறை அமைச்சர்** (திரு ஜவஹர்லால் நேரு): உறுப்பினர்களில் ஒருவர் என்னிடம் கேள்வி ஒன்று கேட்டார். ஐயா, அதற்குப் பதில் அளிக்க அவசியம் இல்லை என்று நீங்கள் கருதினாலும், நான் பதில் அளிப்பது, இந்த அவையின் நடைமுறைக்கு நியாயமானது என நினைக்கிறேன். நாம் விதி வாரியாக விவாதிக்கப் போகிறோம் என்றால், அதற்கு இந்த அவை அதிக நேரம் எடுத்துக் கொள்ளும் என்பது தெரிந்ததே. இருப்பினும் அதற்கு அரசு அதிக முக்கியத்துவம் அளித்துள்ளது. எனவே அதை இப்பொழுதே எடுத்துக் கொள்ளலாம் என நினைக்கிறேன். ஆனால் விஷயங்கள் இப்பொழுது இருக்கிற நிலையில் இன்றே நாம் அதை எடுத்துக் கொண்டாலும், இந்தக் கூட்டத் தொடருக்குள் அதை நாம் முடித்துவிட முடியாது. எனவே, நீங்கள் அனுமதி அளித்தால், ஆரம்ப கட்டத்தை எடுத்துக் கொள்ளலாம் என்று அரசு கருதுகிறது. சில ஆட்சேபனைகள் தெரிவிக்கப்பட்டுள்ளன. இந்த ஆட்சேபனை களுக்கெல்லாம் ஒரு வகை தீர்வை காண்போமானால், மேற்கொண்டு செல்ல வேண்டிய பாதை தெளிவாகிவிடும். இல்லையெனின், இந்தக் கூட்டத் தொடரில் அவையில் நேரம் வீணாகிவிடும்.

**திரு. சபாநாயகர்:** நிலையைச் சரியாக நான் புரிந்து கொண்டிருந்தால், ஒத்திவைப்பு திருத்தங்கள் அல்லது தீர்மானங்கள் முதலில் முடிவு செய்யப்பட வேண்டும். பின்னர் விதிவாரியான விவாதங்கள் எடுத்துக் கொள்ளப்படும்.

**நாடாளுமன்ற நடவடிக்கைகளுக்கான ஸ்டேட் அமைச்சர்** (திரு. சத்ய நாராயண் சின்ஹா) : ஆம் அப்படித்தான்.

**திரு. சபாநாயகர் :** இந்த வெளிச்சத்தில் பார்த்தால் ஒத்திவைப்பு தீர்மானம் எதையும் கொண்டு வருவது அவசியமா?

**திரு. நசிருத்தீன் அகமது :** (மேற்கு வங்காளம்) : இல்லை.

**திரு. சபாநாயகர்:** பேச்சு எதுவுமின்றி அவர் முன்மொழி யட்டும். நாம் மற்ற அலுவல்களைத் தொடர முடியும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் முன்மொழிகிறேன்.

இந்துச் சட்டத்தொகுப்பு மசோதா மற்றும் அது சம்பந்தமான திருத்தங்களை உறுப்பினர்கள் நன்கு பரிசீலிப்பதற்காக நாடாளுமன்ற

சிறப்புக் கூட்டத் தொடர் கூட்டப்பட்டு, அந்தக் கூட்டத் தொடருக்கு, இந்த மசோதாவின் விவாதம் ஒத்திவைக்கப்பட வேண்டும்.

மாற்றுத் தீர்மானங்களை முன்மொழிய நான் விரும்ப வில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் சில கருத்துகளை முன்வைக்க விரும்புகிறேன். விஷயத்தை முற்றிலும் அரசுக்கே விட்டு விடுகிறேன். அது, எதிர்ப்பு அல்லது ஆட்சேபனை என்ற முறையில் அல்ல.

**திரு. சபாநாயகர் :** தீர்மானம் எவ்வடிவில் இருக்க வேண்டு மென்பதே கேள்வி. அடுத்த கூட்டத் தொடருக்கு ஒத்திவைக்க விரும்பு கிறார். சுருக்கமாகச் சொன்னால், அதுதான் விஷயம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** அப்படியென்றால், உங்கள் அனுமதியுடன் மாற்றுத் தீர்மானங்களையும் முன்மொழிகிறேன்.

> ''அடுத்த பட்ஜெட் கூட்டத் தொடர் தேதிக்கு இந்து சட்டத் தொகுப்பு மசோதா விவாதங்கள் ஒத்தி வைக்கப்பட வேண்டும்''.

மேலும்,

> ''பட்ஜெட் கூட்டத் தொடர் முடிந்த பிறகு ஒரு தேதிக்கு இந்து சட்டத் தொகுப்பு மசோதா விவாதங்கள் ஒத்தி வைக்கப்பட வேண்டும்''

தீர்மானம் எந்த வடிவில் இருக்க வேண்டும் என்பது குறித்து நான் முற்றிலும் அரசின் கட்டுப்பாட்டிற்குள் உள்ளேன். ஆட் சேபனைகள் சிலவற்றை முதலில் பரிசீலித்துவிட்டு, பின்னர் பொருத்தமான நேரத்தில் விதி வாரியான பரிசீலனையை எடுத்துக் கொள்ளலாம் என்று மாண்புமிகு பிரதம மந்திரி தெளிவு படுத்தி விட்டார். இது என் கருத்துக்கு முற்றிலும் ஏற்புடையதாக உள்ளது. அரசுதான் பொருத்தமான தேதியையும் நேரத்தையும் முடிவு செய்ய வேண்டும்.

மசோதாவின் கொள்கையை நடைமுறைப்படி ஏற்றுக் கொண் டுள்ளோம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இது சில நிபந்தனை களுக்குட்பட்டது. அவை நடவடிக்கையில் சேர்க்கப்படாவிடினும், இந்துச் சட்டத்தை நன்கு அறிந்துள்ள பரந்த அளவிலான மக்களின் கருத்தைப் பெறுவதற்கும், மசோதாவுக்குத் திருத்தங்கள் அளிக்க வும் மாண்புமிகு சட்டத்துறை அமைச்சர் உறுதி அளித்துள்ளார்.

இரண்டு தரப்பினர்களும் ஏற்றுக்கொள்ளக்கூடிய திருத்தத்திற்கான பொருத்தமான வழிமுறையை அரசு அவைக்கு அளிக்கும் என்ற அடிப்படையில்தான், மசோதா முதல் வாசிப்பில் நிறைவேற்றப் பட்டுள்ளது. மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பல திருத்தங்களை மாண்புமிகு சட்ட அமைச்சர் அவை முன் வைத்துள்ளதை நான் காண்கிறேன். உறுப்பினர்களும் அதிக எண்ணிக்கையான திருத்தங் களை முன் வைத்துள்ளனர். நம் முன் 17 பட்டியல்கள் உள்ளன. விதிவாரி விவாதத்திற்காக ஓர் இறுதிக் கூட்டத் தொடரை அழைக்க அரசு முடிவு செய்துள்ளதாகப் பத்திரிகைச் செய்திகளிலிருந்து தெரிகிறது. அது அவ்வாறெனின் இன்னும் பல திருத்தங்கள் கொண்டு வரப்படலாம் என்பதற்கு காரணம் இருப்பதாகத் தெரிகிறது. இது ஆழ்ந்து கவனிக்கப்பட வேண்டிய விஷயம்.

நான் கூற விரும்புவதெல்லாம் இதுதான். விதிவாரிப் பரி சீலனையில் கவனிக்கப்பட வேண்டிய பல முக்கிய விஷயங்கள் உள்ளன. விவரங்களைப் பொறுத்தவரையில், உறுப்பினர்களிடையே அவை பெரும் பிளவை ஏற்படுத்தியுள்ளது. இந்தச் சூழ்நிலை களில் திருத்தங்களைப் பரிசீலிக்கவும் உடன்பாடுள்ள விஷயங்களைக் கண்டு கொள்ளவும் அரசு இந்த அவைக்குப் போதுமான நேரம் ஒதுக்குவது மிகச் சிறந்தது என தாழ்மையாகத் தெரிவித்துக் கொள் கிறேன். குடிமக்கள் பலரிடம் கலந்தாலோசித்ததாக மாண்புமிகுச் சட்டத்துறை அமைச்சர் கூறுகிறார். ஆனால், எனக்குத் தெரிந்த வரையில், மசோதாவின் கொள்கைகளை எதிர்க்கும் அவையிலுள்ள பல்வேறு பகுதியினரை அவர் சந்தித்தாகத் தெரியவில்லை. முதல் வாசிப்பின் போது எதிர்ப்புத் தெரிவித்த பல உறுப்பினர்கள் கலந் தாலோசிக்கப் படவில்லை.

**திரு. தியாகி :** அவர்கள் எல்லோரும் இந்துக்கள் அல்ல.

**திரு. நசிருத்தீன் அகமது :** குறைந்தபட்சம் ஒருவர் இந்து வல்ல. அது நான் தான். விஷயம் இதுதான். இந்த விஷயங்களை யெல்லாம், அவையில் சரியான முறையில் விவாதிக்கவோ, முடிவு செய்யவோ முடியாது. அவை மசோதாவின் அடிப்படைக் கொள்கை களாக உள்ளன. ஒவ்வொரு விதியும் முக்கியமான, புதிய விஷய மாக உள்ளது. ஒவ்வொரு விதியும் விரிவாகப் பரிசிலிக்கப்பட வேண்டியவை. எனவே, அரசு நமக்கு நேரம் ஒதுக்க வேண்டு மெனக் கேட்டுக் கொள்கிறேன். இந்தக் கருத்து வேற்றுமைகளை முடிவுக்குக் கொண்டுவர ஒரு வட்ட மேசை மாநாட்டில் அமர்ந்து

விவாதிக்க நாங்கள் தயாராக உள்ளோம். இதன் மூலம் பொதுவாக இந்த அவை ஏற்றுக் கொள்ளத்தக்கதாக மசோதா உருவாகக் கூடும். இந்த அவையினுள், நொடி நேரத்தில் முடிவு செய்யும் விஷயமாக இது இருக்கக் கூடாது.

இதற்கிடையில் பல விஷயங்கள் நடைபெற்றுள்ளன. இந்திய சமஸ்தானங்கள் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. விவசாய நிலங்கள் இப்பொழுது இந்த மசோதாவின் வரம்புக்குள் வருகிறது என நினைக்கிறேன். இது மேலும் ஒரு புதிய நிலைமையைத் தோற்றுவித்துள்ளது. எனவே, அரசிடமிருந்து வரும் முக்கியமான திருத்தங்களையும், நிலப்பரப்பு மற்றும் மக்கள் தொகை அதிகரிப்பையும் கணக்கிலெடுத்துக் கொண்டு, உறுப்பினர்கள் மசோதாவை ஆழ்ந்து பரிசீலனை செய்ய போதுமான நேரம் ஒதுக்கப்பட வேண்டுமென்று நான் நினைக்கிறேன். இந்தக் கருத்து வேற்றுமைகளுக்குத் தீர்வுகாண ஒரு நல்ல நடைமுறை வேண்டும். அதன் மூலம், ஓரளவு இசைவான அதிக அளவில் உடன்பாடுள்ள ஒரு சூத்திரம் உருவாக்கப்பட வேண்டும். இம்மாதிரியான விவாதத்திற்குரிய மசோதாவிற்கு நமக்கு போதிய நேரம் ஒதுக்கப்பட வேண்டும். முதல் வாசிப்பின் போது நான் தெரிவித்த கருத்துக்கள் முற்றிலும் சரியென நிரூபிக்கப்பட்டு விட்டது. அந்த நேரத்தில் இந்து சமுதாயம் இதன் மீது முழு கவனம் செலுத்தவில்லை. அரசே பல திருத்தங்களைக் கொண்டு வந்ததன் மூலம் என் ஆட்சேபனைகள் நியாயமானது என்று மீண்டும் நிருபிக்கப்பட்டுவிட்டது எனது பணி முடிந்துவிட்டது. சில தவறுகளைக் கவனத்திற்குக் கொண்டு வருவது எனது பொதுநலக் கடமை என்று அந்நேரத்தில் கருதினேன். இல்லையென்றால் அவை கவனத்திற்கு வராமல் தப்பிவிடும். இந்த அவைக்கும், இந்து சமுதாயத்திற்கும் எத்தகையச் சட்டங்கள் தேவை என்பது உண்மையிலேயே இந்து சமுதாயத்தின் விஷயம் இந்தச் சட்டத் தொகுப்பு எந்த வடிவத்தில், உருவத்தில் நிறைவேற்றப்பட வேண்டுமென்பதில், குறிப்பிட்ட அக்கறை எதுவும் எனக்குக் கிடையாது. சில பயனுள்ள யோசனைகளை எடுத்துரைப்பதும், சில திருத்தங்களைப் பரிந்துரைப்பது மட்டுமே என் நிலையாக உள்ளது. இக்கருத்துகளின் அடிப்படையில் இந்த விஷயத்தை அரசு பரிசீலிக்க வேண்டும் என நினைக்கிறேன். அவர்கள் என்ன செய்ய நினைக்கிறார்கள் என்பதை நமக்குக் கூறட்டும். மசோதா நிறைவேறுவதற்கு ஆக்க பூர்வமான உதவி அளிக்க நான் தயாராக இருக்கிறேன். விவாதத்திற்குரிய விதிகள் எந்த வடிவில் அளிக்கப்படும் என்ற விஷயத்தில் தனிப்பட்ட முறையில் எனக்கு அக்கறையில்லை. ஆனால் இந்த விஷயத்தில்

எனக்குக் கவலை இல்லை என்று கூற முடியாது எங்களுக்குப் போதுமான நேரம் அரசு ஒதுக்குவதற்கும், கருத்து வேறுபாடுகளைக் களைவதற்கு ஒரு நல்ல நடைமுறையை உருவாக்குவதற்கும், பொதுவாக அவை ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒரு சட்டத் தொகுப்பைத் தயாரிக்கவும், இந்த விஷயங்களே தூண்டுதலாக இருக்கும் எனத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நான் கூற விரும்பிய விஷயங்கள் இவ்வளவுதான்.

**திரு. சித்வா (மத்தியப்பிரதேசம்) :** ஒரு தகவல் பிரச்சினை ஐயா. மதிப்பிற்குரிய உறுப்பினர் இரண்டு திருத்தங்களைக் கொண்டு வர உள்ளார். கூட்டத்தைத் தேதி குறிப்பிடாமல் ஒத்தி வைப்பது ஒன்று, மேலும்.....

**திரு. சபாநாயகர்:** அதை நான் அனுமதிக்கப் போவதில்லை....

தீர்மானம் சிறந்த வடிவில் இருக்க வேண்டுமென்பதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஒரு தீர்மானம் சிறப்புக் கூட்டத் தொடர் சம்பந்தமானது. இரண்டாவது பட்ஜெட் கூட்டத் தொடருக்கு முன்பு என்றும், மூன்றாவது பட்ஜெட் கூட்டத் தொடர் முடிந்த பிறகு என்று கூறுகிறது. நாம் அடுத்த கூட்டத் தொடர் வரை ஒத்தி வைக்கலாமா?

**திரு. நசிருத்தீன் அகமது :** நான் முற்றிலும் அரசின் தயவில் உள்ளேன்.

**திரு. சபாநாயகர் :** அடுத்தக் கூட்டத் தொடர் வரை என்பது தான் வழக்கமான திருத்தம். ''இந்துச் சட்டத் தொகுப்புச் சம்பந்தமான விவாதம் அடுத்த பட்ஜெட் கூட்டத் தொடர் நடக்கையில் அல்லது அதற்குப் பிறகு ஒரு தேதிக்கு ஒத்தி போடப்படுகிறது'' என்று கூறட்டுமா?

பிற்பகல் 3 மணி

**டாக்டர் அம்பேத்கர் :** குறிக்கோள் சம்பந்தமாக எவ்விதக் கருத்து வேறுபாடும் இல்லை. இந்த மசோதாவை நன்கு ஆய்வு செய்யவும், அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து எடுத்த முடிவுகளை அளிக்கவும், அதிக நேரம் உறுப்பினர்களுக்கு ஒதுக்க வேண்டும் என்ற அரசின் தீர்மானத்தைப் பொறுத்த வரையில் அரசு உறுப்பினர்களுக்கும், மற்றவர்களுக்குமிடையே முழுமையான உடன்பாடு காணப்படுகிறது. பிரதமர் சற்று முன் கூறியபடி, விதிவாரியாக மசோதாவைப்

பரிசீலிக்கையில் வரிசைக் கிரமத்தில் தொடர வேண்டுமென்பது அரசின் நோக்கமல்ல. எனவே தாழ்மையுடன் நான் தெரிவித்துக் கொள்வதென்னவென்றால், அடுத்த கூட்டத் தொடரில் அவர்கள் விரும்பும் போது அதை எடுததுக் கொள்ள அரசை விட்டுவிட வேண்டும். அவர்கள் சிறப்புக் கூட்டத் தொடர் ஒன்றை நடத்தலாம்; விரிவான பட்ஜெட் கூட்டத் தொடர் ஒன்றை நடத்தி, பகுதியை இந்துச் சட்டத் தொடர் ஒன்றை நடத்தி, பகுதியை இந்துச் சட்டத் தொகுப்பிற்கும், பகுதியை வழக்கமான பட்ஜெட் விவாதத்திற்கும் ஒதுக்கலாம்; அல்லது பட்ஜெட் கூட்டத் தொடருக்குப்பிறகு வேறு ஒரு கூட்டத் தொடரை நடத்தலாம். குறிப்பிட்ட தீர்மானம் எதன் மூலமாவது அரசின் கைகளைக் கட்ட நான் விரும்பவில்லை. நான் கூறியபடி, இந்தக் கூட்டத் தொடரிலேயே இந்த மசோதாவை நிறைவேற்ற நான் தீர்மானிக்கவில்லை. அது முற்றிலும் சாத்திய மற்றது. அது முற்றிலும் நியாயமற்றதும் கூட. எனினும் திரு. நஜிருதீன் கொண்டு வரும் தீர்மானத்தின் விளைவாக மசோதாவை பரிசீலிப்பதை ஒத்திப்போடுவதை நான் விரும்பவில்லையாகை யால், நான் அத்தீர்மானத்தை எதிர்க்கிறேன். அரசு ஓர் உறுதிமொழி அளித்துள்ளது. அதன் படி அரசு நடக்கும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்தச் சுற்றி வளைத்தக் குற்றச் சாட்டிற்கு நான் ஏன் இலக்காக வேண்டும்.

**திரு. சபாநாயகர் :** எனவே தீர்மானம் எந்த வடிவில் இருக்க வேண்டுமென்பதில் அக்கறை கொள்ளத் தேவையில்லை.

**டாக்டர் அம்பேத்கர் :** எல்லாத் தீர்மானங்களையும் அவர் கொண்டு வரட்டும். எல்லாவற்றையும் நாம் தோற்கடிப்போம்.

**திரு. தியாகி :** அல்லது முந்திய விஷயத்தைப் பார்ப்போம். இந்த விஷயத்தை ஒத்திபோடுவோம்.

**திரு. சபாநாயகர் :** அது அவசியம் என்று நான் நினைக்க வில்லை. நல்லது, இந்த விஷயம் ஒத்திப் போடபட்டு விட்டது, அடுத்த அலுவலுக்குச் செல்வோம் என்று கூறட்டுமா?

**டாக்டர் அம்பேத்கர் :** திரு. நஜிருதீன் அகமது கொண்டு வந்த தீர்மானத்தை முடிவு செய்த பிறகு, அதைச் செய்வது சிறப்பாக இருக்கும் என்பதே என் முடிவாகும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனக்கு முடிவு கட்டவா :

**டாக்டர் அம்பேத்கர் :** அதை முடிவு செய்த பிறகு, மசோதா வின் பகுதியாக விதி 2 உள்ளது என்று மட்டும் கூறுங்கள் அதன் பிறகு, மசேதாதவை மேலும் பரிசீலிப்பது ஒத்தி போடப்படுகிறது என்று நானே முன்மொழிகிறேன். அரசின் அலுவல் பட்டியலில் இந்துச் சட்டத் தொகுப்பு மசோதாவை கடைசிப் பொருளாக மாற்றத் தயாராக உள்ளேன்.

**திரு. பி.கே. சௌதுரி :** நான் திருத்தம் ஒன்றை முன் வைத்துள் ளேன். இப்பொழுது என்னிடம் அதற்குரிய தாள்கள் இல்லாததால் அது என்ன வென்று சரியாக என்னால் கூறமுடியாது. நான் இந்த விஷயத்துக்குத் தயராக இருக்கவில்லை. ஆனால் நினைவுகூர்ந்து பார்த்தால், இந்துச் சட்டத் தொகுப்பை பரிசீலிக்க ஒரு விசேஷக் கூட்டத் தொடருக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்பதே எனது தீர்மானமாகும். அலுவல் மிகுந்த இந்தக் கூட்டத் தொடரில், இம் மாதிரியான விவாதத்தைக் கொண்டு வருவதால், இந்த விஷயத்தை பரிசீலிக்கச் சரியான சந்தர்ப்பம் கிடைக்காது என்பதே வருத்தப்பட வேண்டிய விஷயம். எனவே இந்த மசோதா சிறப்புக் கூட்டத் தொடர் ஒன்றில் பரிசிலிக்கப்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

**திரு.எம்.ஏ. ஐயங்கார் :** (மெட்ராஸ்) உறுப்பினர்களுக்குப் போதுமான நேரம் ஒதுக்கப்பட வேண்டுமென்று திரு. நஜிருதீன் அகமதின் தீர்மானம் கோருகிறது. பிரதம மந்திரியும் இதற்கு இசைவு அளித்துள்ளார். எனவே, இந்தத் தீர்மானத்தை வலியுறுத்த வேண்டாம் என திரு. நஜிருதீன் அகமதைக் கேட்டுக் கொள்கிறேன். பிரதம மந்திரி யின் அறிக்கையின் காரணத்தினால், அடுத்த கூட்டத் தொடரின் ஒரு தேதிக்கு இது ஒத்தி போடப்படலாம். அடுத்தக் கூட்டத் தொடரில் ஒரு தேதியை நிர்யிப்பது அரசின் பொறுப்பாகும். அல்லது அதற்குப் பிறகு உடனடியாக விசேஷக் கூட்டத் தொடருக்கு அழைப்பு விடுக் கலாம். மசோதாவின் விதி வாரியான விவாதத்தை நாம் எடுத்துக் கொள்ளப் போவதில்லை என்பதில் நமக்குள் உடன்பாடு இருப் பதால், இருதரப்பினரும் திருப்தி அடைந்துள்ளதாக நான் கருது கிறேன். எனவே பிரதம மந்திரியின் அறிக்கையை ஏற்றுக்கொள் வோம். நஜிருதீன் அகமது அவரது தீர்மானத்தை வலியுறுத்த வேண்டாம். எனவே அடுத்த கூட்டத் தொடரில் ஒரு தேதிக்கு இது ஒத்தி வைக்கப்படும், பிரதம மந்திரியோ, அல்லது அரசோ பொருத்த மான நாள் ஒன்றை தீர்மானம் செய்யட்டும்.

**டாக்டர் அம்பேத்கர்:** மீண்டும் நான் குறுக்கீடு செய்யலாமா? இந்த அவையில் நடந்து கொண்டிருப்பது மீண்டும் நடைபெற நான் விரும்பவில்லை. இந்த மசோதா அவையில் வரும்பொழுதெல்லாம், மசோதாவை கிடப்பில் போட தீர்மானம் கொண்டுவர மதிப்பிற் குரிய உறுப்பினர் யாராவது முன் வருகின்றனர். இது நிறுத்தப்பட வேண்டும். விதிவாரியாக பரிசீலனை செய்ய வேண்டிய கால கட் டத்தை எட்டிவிட்டோம். விதி வாரியாக மசோதாவை பரிசீலிக்க அவை ஏற்றுக் கொண்டதன் அடையாளமாக, விதி 2ஐ அவை முன் வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். அதற்குப் பிறகு விவாதத்தை நாம் ஒத்திவைக்கலாம்.

**திரு. நசிருத்தீன் அகமது :** சுற்றி வளைத்து தொடுக்கப்பட்ட குற்றச்சாட்டின் இலக்கு நான்தான் என நினைக்கிறேன். நான் தாமதப் படுத்தும் தீர்மானம் எதையும் கொண்டு வரமாட்டேன் என முழு உறுதி அளிக்கிறேன்.

**திரு. சபாநாயகர் :** சட்ட அமைச்சர் மற்றும் திரு. நஜிருதீன் அகமதின் நிலைகள் மட்டுமின்றி, திரு சௌத்ரியின் பிரச்சினையும் உள்ளது. எனவே, நான் இப்படிச் செய்யலாம் என நினைக்கிறேன். தீர்மானங்களை நான் அவை முன் வைக்கிறேன். அவர்கள் அதன் மீது வாக்களிக்கட்டும்.

**திரு. ஆர்.கே. சௌதுரி:** ஆனால் ஐயா, என் தீர்மானத்தைக் குறித்து விளக்கம் அளிக்க வேண்டும்.

**திரு. சபாநாயகர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏற்கெனவே விளக்கம் அளித்தாகிவிட்டது. இதற்காக மேலும் நேரம் எடுத்துக் கொள்ள வேண்டாமென்று நினைக்கிறேன்.

**திரு. எம்.ஏ. ஐயங்கார் :** இந்தப் பிரச்சினையை சிறப்புக் கூட்டத் தொடர் ஒன்றுக்கு ஒத்திவைக்க வேண்டுமென்பது, அவ ருடைய தீர்மானத்தின் நோக்கமாக இருப்பதால், அது தோற்று விட்டதாகக் கருதலாம் என நினைக்கிறேன். சிறப்புக் கூட்டத் தொடரை அழைப்பது சாத்தியமில்லை என நினைக்கிறேன். எவ்வா றாயினும், விஷயத்தை அரசின் கையில் விட்டுவிடுவதே சிறந்தது என நினைக்கிறேன். பட்ஜெட் கூட்டத் தொடரில் ஒரு வசதியான தேதியில் அதை இணைத்துக் கொள்ளலாம். சிறப்புக் கூட்டத் தொட ருக்கு ஒத்துக் கொள்ள வேண்டிய அவசியமென்ன? அது அவசியம் என்று அரசு நினைத்தால், அதற்கு ஏற்பாடு செய்யலாம். சிறப்புக் கூட்டத் தொடர்தான் வேண்டுமென்று அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்வதால் எந்தப் பயனும் இல்லை.

டாக்டர் பட்டாபி (மெட்ராஸ்) விஷயத்தை கொஞ்சம் நிதான மாகப் பரிசிலிக்கும் சாதகமான மாற்றம், அரசின் கண்ணோட்டத் தில் தெரிகிறது. அதற்கு நான் நீண்ட விளக்கம் எதையும் அளிக்க விரும்பவில்லை. இம்மாதிரி ஒத்தி வைப்புக் கோருவதை அனுமதிக்க முடியாது என்று ஆசிரியத் தோரணையில் சட்ட அமைச்சர் கூறு வதை ஆட்சேபிக்கிறேன். அது அனுமதிக்கப்பட வேண்டும். உண்மை யான, நேர்மையான திட நம்பிக்கை எதிர் தரப்பில் இருக்கையில், எதிர்ப்பைத் தெரிவிக்க எல்லா நியாயமான முறைகளையும் பயன் படுத்துவது, இந்த அவை உறுப்பினர் ஒவ்வொருக்கும் உள்ள உரிமை யாகும். திரு. பால்ஃபேர் கூறிய அளவுக்குச் செல்ல நான் விரும்ப வில்லையெனினும், அவர் என்ன கூறுகிறார் என்பதைப் பார்ப்போம். முடிந்த அளவு நியாயமான வழிகளிலும், தேவைப்பட்டால் நியாய மற்ற வழிகளிலும் கூட அரசை எதிர்க்க வேண்டியது எதிர்க் கட்சி களின் கடமை. பிரதம மந்திரி தமது அறிவு கூர்மையால், இருவிதச் சிந்தனைப் போக்குகள் இருப்பதை ஒத்துக் கொண்டதுடன், மிகவும் நியாயமாகவும் பரந்த மனதுடனும் ஒத்திவைப்பு ஆலோசனையை ஏற்றுக் கொண்டுள்ளார். இது இப்படியிருக்கையில், பேராசிரியர், போதகர் மற்றும் மதகுருமார் போன்று சட்ட அமைச்சர் நடந்து கொள்வது விரும்பத்தக்கதல்ல. இது ஏற்கெனவே உருவான ஓரளவு சுமுகமான சூழ்நிலையை கெடுபிடி நிலையாக மாற்றிவிடும்.

**திரு. நசிருத்தீன் அகமது :** இப்பொழுது யாருமில்லாத எதிர் தரப்பை அழைக்கிறார்கள்.

**திரு. ஜவஹர்லால் நேரு :** சட்டத்துறை அமைச்சர் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் நான் ஏற்றுக் கொள்கிறேன் என்பதைத் தெளிவுபடுத்துகிறேன். இதுதான் நிலை. இந்தப் பிரச்சினையைப் பரிசிலிக்க அதிக நேரம் வேண்டுமென்று விதிவாரியான பரிசீலனை பின்னர் எடுத்துக் கொள்ளப்படும் என்று ஆலோசனை கூற முடிவு செய்தோம். தீர்மானத்தின் தன்மையை நாம் தெளிவாக முடிவு செய்ய வேண்டும். அது ஒரு தாமதப்படுத்தும் நோக்கத்துடனான தீர்மானம் என்றால், மதிப்பிற்குரிய உறுப்பினர் அதைப் பரிசீலிக்க விரும்பினால் இப்பொழுதே அதை முடிவு செய்வோம். அந்தத் தீர்மானத்தை நாம் ஒத்திவைக்கப் போவதில்லை. எந்தத் தீர்மானத்தையும் நான் தடுக்க விரும்பவில்லை. தாமதப்படுத்தும் நோக்கத்துடனான தீர்மானம் ஏதேனும் இருந்தால் அதை இப்பொழுதே முடிவு செய்வோம்.

**பண்டிட் மாளவியா** (உத்தரப்பிரதேசம்) : இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் அழுத்தமான கருத்து வேற்றுமைகள் இருப்பதை நாம் அறிவோம். இந்த அவையின் பல்வேறு பிரிவினர்களுக் கிடையே கடுமையான கருத்து வேறுபாடுகள் உள்ளன. நமது பிரதமர்

யதார்த்தமான கண்ணோட்டத்துடன் உள்ளார். நாம் எப்பொழுதும் எதிர்பார்ப்பதைப் போல, இந்த விஷயத்திலும் அவர் நமக்கு வழி காட்டியாக உள்ளார். இது மிகவும் விவாதத்திற்குரிய விஷயம் என்பதுடன், விஷயங்கள் இருக்கும் நிலையில், இதற்கு அதிக நேரம் ஒதுக்க வேண்டும் என்று கூறியுள்ளார். இந்த மசோதா ஒத்தி போடப் படவுள்ளதாலும், எந்தத் தீர்மானத்தின் மீதாவது அல்லது பிரிவின் மீதாவது இந்த விவாதத்தை இன்று தொடர்வதால் எந்தப் பயனும் அடையப் போவதில்லை என்பதாலும், இந்தப் பிரச்சினை குறித்து அடிப்படையான வேறுபாடுகள் உள்ளதாலும், இப்பொழுது அதை எடுத்துக் கொள்வதால் இந்துச் சட்டத் தொகுப்பைச் சட்டமாக்கு வதில் எந்தவித முன்னேற்றமும் காணமுடியாது என்பதாலும் அதை இருக்கின்ற நிலையில் விட்டுவிடுவதால், எந்தப் பிரிவிற்கும், எந்தத் தரப்பிற்கும் எந்தவித நஷ்டமும் ஏற்படப் போவதில்லை என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டு, உண்மையில் அதில் ஏதாவது முன்னேற்றம் காண வேண்டுமென்பது நோக்கமென்றால், அப்பொழுது எனக்குக் கூறுவதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில், அப்பொழுது ஒவ்வொரு உறுப்பினருக்கும் தங்கள் கருத்தைக் கூற வாய்ப்பிருக்கும். தங்கள் கூட்டான அறிவுத்திறன் மூலம், அவை முடிவு எடுக்கும் எதுவும், சட்டப் புத்தகத்தில் சேர்க்கப்படும். ஆனால் இப்பொழுது சிபாரிசு செய்யப்பட்டுள்ள நடைமுறையின்படி எந்த உண்மையான முன்னேற்றமும் ஏற்படப் போவதில்லை. நாட்டில் இன்றுள்ள பெரும் எதிர்ப்பும், கவலையும் மேலும் அதிகரித்து விடக்கூடாது என்று கூறுகிறேன். இந்த விஷயத்தைப் பற்றி நாடு என்ன நினைத் தாலும் அதைப் பற்றிக் கவலை இல்லை என்ற ஒரு துரதிர்ஷ்ட வசமான கண்ணோட்டமும் உள்ளது என்பதை அறிவேன். பிரச் சினையின் எல்லா பகுதிகளும் கவனத்துடன் பரிசீலிக்கப்பட வேண்டும், மதிக்கப்பட வேண்டும் என்ற வேறொரு கண்ணோட் டமும் உள்ளது. இப்பொழுது விஷயத்தின் விவரத்திற்குள் செல்ல வேண்டாமென நினைக்கிறேன். எந்தவித பயனுள்ள நோக்கத்திற்கும் பயன்படாத செயல்களைச் செய்ய வேண்டாமென அரசை மிகவும் மனப்பூர்வமாகக் கேட்டுக் கொள்கிறேன். மாறாக, இதனால் நாட்டில் அதிக அதிருப்தியும் வெறியுமே உருவாகும். இந்த மசோதாவை ஒத்திவைப்பது என்றால், அதை நாம் முழுமனதுடன் நிறைவேற்ற வேண்டும். இதை நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். மாறாக நாம் அதை ஒத்திவைக்கப் போவதில்லை, இப்பொழுது நாங்கள் அதை எடுத்துக் கொள்ளப் போவதில்லை. இருப்பினும், நாங்கள் அதை எடுத்துக் கொள்ளப் போகிறோம், அதை நாங்கள் தொடரப் போவ தில்லை, இருப்பினும் நாங்கள் அதைத் தொடர்வோம் என்று கூறிக் கொண்டிருக்கக்கூடாது. விஷயத்தை நாம் ஒத்தி போடப் போகிறோம்

என்றால், அரசு குறிப்பிடும் ஒரு தேதிவரை உடனடியாக அவை ஒத்திபோடப்பட வேண்டும்.

**பண்டிட் எம்.பி. பர்கவா (ஆஜ்மீர்) :** சட்ட அமைச்சரின் ஆலோசனையை என்னால் முற்றிலும் புரிந்து கொள்ள முடிய வில்லை. இனி எதிர்காலத்தில் எந்தவித ஒத்திவைப்புத் தீர்மானமும் கொண்டுவரக் கூடாது என்று அவைத் தலைவர் உத்திரவு போட வேண்டுமென்று அவர் விரும்புகிறாரா? அது அவையில் எழுப்பப் பட வேண்டிய அரசியல் அமைப்புப் பிரச்சினை. அதற்கு அவைத் தலைவர் தீர்ப்பளிக்க வேண்டும். எந்த நேரத்தில் ஒத்தி வைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வருவதற்கு அவையின் உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் முழு உரிமை உள்ளது என்று தான் நான் புரிந்து கொண்டுள்ளேன். அதை ஏற்றுக் கொள்வதோ நிராகரிப்பதோ அவைத் தலைவரின் முடிவு என்பதில் சந்தேகமில்லை. அது தாமதப் படுத்தும் நோக்கத்துடனான ஒரு தீர்மானம் என்று அவைத்தலைவர் நினைத்தால், அதற்கு அவர் அனுமதி அளிக்கமாட்டார். ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றை அவைத்தலைவரே அனுமதித்தாலும், அவை அதை விவாதித்து ஏற்றுக் கொள்ளவோ நிராகரிக்கவோ செய்யும். உறுப்பினரின் உரிமையைப் பொறுத்தவரையில், அது ஒரு நிபந்தனை யற்ற முழு உரிமை. எந்தக் கட்டத்திலும் அவர் ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வரலாம். நீங்கள் விதி 2ஐ முன் மொழிந்து விட்டு, இந்த மசோதாவின் விவாதித்தின் போது எந்தவித ஒத்தி வைப்பும் முடியாது என்று கூறினால், அது அரசியல் அமைப்புப் பிரச்சினையாகும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** அது சபாநாயகரின் இசைவைப் பொறுத்தது.

**திரு. சபாநாயகர்:** எதிர்காலத்தில் கொண்டு வரப்படும் ஓர் ஒத்திவைப்பு தீர்மானம் அனுமதிக்கப்படுமா அல்லது அனுமதிக்கப் படாதா என்பதைக் குறித்து, உடனடியாக நான் எந்தவிதக் கருத்தை யும் கூற விரும்பவில்லை. அவை முன் அந்த மாதிரியான தீர்மானம் வரும்போது உள்ள சூழ்நிலையைப் பொறுத்து அது இருக்கும். மசோதாவைத் தள்ளிப் போட வேண்டுமென்ற எண்ணத்துடன் மட்டுமே, தாமதப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடனான தீர்மானம் எதையும், கொண்டுவரக்கூடாது என்ற நிலையை, சட்டப் படியோ, அரசியல் அமைப்பின்படியோ இல்லாவிடினும், தார்மீக ரீதியில் அவை எடுத்துள்ளது என்பது மாண்புமிகு சட்டத்துறை அமைச்சரின் நோக்கம் என நினைக்கிறேன்.

**டாக்டர் அம்பேத்கர் :** ஆம் அவ்வளவுதான்.

**திரு. சபாநாயகர் :** அவருடைய நோக்கம் அது ஒன்றுதான் எனத் தெரிகிறது. உறுப்பினர்களின் அரசியல் அமைப்பு உரிமைகளுக்குத் தடைபோடும் நோக்கத்துடனல்ல என நினைக்கிறேன். எனவே 2ஆம் விதியை முன் மொழியாமலேயே அவையை நேரடியாக ஒத்திவைப்பதையே நான் பரிந்துரை செய்கிறேன். வேறு எந்தவித நோக்கமுமின்றி மசோதாவைத் தாமதப்படுத்துவதற்காகவே எந்த ஒரு தீர்மானமும் கொண்டுவரப்படக் கூடாது என்பது நமது தார்மீக நிலை என்பதும் அறிவிக்கப்பட வேண்டும்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** இல்லை, இல்லை.

**திரு. சபாநாயகர் :** இது ஒரு முக்கியமான விஷயம். அம்மாதிரியான கருத்தைத் தெரிவிக்கும் வகையில் அவர் பேசுகையில் அதன் வலிமையையும், நோக்கத்தையும் நான் புரிந்து கொண்டாலும், இறுதியான எனது கருத்து எதையும் நான் கூறவில்லை. நான் அவை மரபைப் பின்பற்றுபவன். ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டுவர வேண்டுமென்று விரும்பும் ஒவ்வொரு அவை உறுப்பினரையும் தடுத்து நிறுத்துவது சாத்தியம் என்று யாரும் நினைக்க வேண்டியதில்லை. அது தாமதப்படுத்தும் நோக்கம் கொண்டது என்று அவைத் தலைவர் அதை ஏற்றுக் கொள்ளாமலிருக்கலாம். ஆனால் இது அந்தத் தீர்மானம் கொண்டுவரப்படும் நேரத்திலுள்ள சூழ்நிலையைப் பொறுத்திருக்கும். 2 ஆம் விதியை முன் மொழிந்துவிட்டு அவையை ஒத்திவைப்பதற்கும், அல்லது நேரடியாக அவையை ஒத்திவைப்பதற்கும் இடையே உண்மையிலேயே எந்த வேறுபடும் இல்லையென்றே நான் நினைக்கிறேன். எனவே நான் கூறியபடி, இந்த மசோதாவைப் பொறுத்தவரைத் தாமதப்படுத்தும் நோக்கத்துடனான தீர்மானம் எதுவும் கொண்டுவரப் போவதில்லை என்ற இந்த அவை உறுப்பினர்களின் தார்மீகக் கட்டுப்பாட்டை அறிவித்துவிட்டு பிறகு விவாதத்தை ஒத்தி வைக்கலாமென நினைக்கிறேன். மீண்டும் அரசியல் அமைப்பின்படியான உரிமையைக் கிளப்பவும், அல்லது இம்மாதிரியான தீர்மானம் கொண்டு வரலாமா கூடாதா என்ற கேள்விக்கு இரண்டாவது தடவை உயிரூட்டவும் நான் விரும்பவில்லை அலுவல்களை ஒத்திவைக்கும் பணியைத் தொடர்கிறேன். மேலும் அரசு.....

**டாக்டர் அம்பேத்கர்:** இந்தத் தீர்மானங்கள் அவை முன் உள்ளனவா?

**திரு. சபாநாயகர் :** இந்தத் தீர்மானங்கள் தோற்றுவிடும்.

**டாக்டர் அம்பேத்கர் :** இந்தத் தீர்மானங்களின் நிலை என்ன?

**திரு. சபாநாயகர் :** உறுப்பினர்கள் தீர்மானங்களை வலியுறுத்த வில்லை. அவர்கள் வலியுறுத்தியிருந்தால், அவைமுன் வைக்க வேண்டியது என் கடமையாக இருந்திருக்கும்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:** அவர்கள் அவ்வாறு கூறவில்லை.

**திரு. சபாநாயகர் :** அவர்களைக் கேட்டுவிட்டேன்

**திரு. ஆர்.கே. சௌதுரி:** ஒழுக்கப் பிரச்சினை ஒன்று எழுப்பப் பட்டுள்ளதால், என்னுடைய தீர்மானத்தை அவை முன் வைக்கவே விரும்புகிறேன். அது ஒரு தாமதப்படுத்தும் நோக்கத்துடனானதா இல்லையா என்பதை அவையே முடிவு செய்யட்டும்.

**திரு. சபாநாயகர் :** அப்படியென்றால் நிலைமை தெளிவாகி விட்டது. இப்பொழுது நேரடியாகவே அதை அவை முன் வைக் கிறேன். பிறகு மேலும் தொடரலாம். இப்பொழுது ஆர்.கே. சௌதுரி யின் தீர்மானத்தை அவை முன் வைக்கிறேன்.

**திரு. ஆர்.கே. சௌதுரி:** ஐயா, ஆழ்ந்து மேலும் சிந்தித் ததால், என்னுடைய தீர்மானத்தை முன் மொழிய வேண்டாமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு சபாநாயகர்:** எனவே விஷயத்தின் பரிசீலனை முடித்து விட்டதால், இதை ஒத்தி வைப்போம். அரசு ஒரு தேதியை நிர்ணயம் செய்யும்.

**மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் :** அவையின் அனுமதி யுடன் அவர் வாபஸ் பெற வேண்டும்.

**திரு. சபாநாயகர்:** தீர்மானம் முன்மொழியப்படாத நிலை யில், அனுமதி எதுவும் தேவையில்லை என்பதே நமது விதியாக உள்ளது.

**திருமதி துர்க்காபாய் (மெட்ராஸ்):** இந்த ஒத்திவைப்புத் தீர்மானம் பரிசீலனையில் உள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**திரு. சபாநாயகர்:** எல்லாம் தோற்றுவிட்டன. அவர்கள் கொண்டுவந்த ஒத்திவைப்புத் தீர்மானம் ரத்தாகிவிட்டது. இப் பொழுது ஒன்றும் அவைமுன் இல்லை. அவர்களிடம் கேட்கப்பட்ட தற்கு அவர்கள் வலியுறுத்தவில்லை. இதே போன்ற தீர்மானங் களைக் கொண்டுவந்த மற்றவர்களைப் பொறுத்தவரையில், தீர்மானங்களை முன் மொழிய அவர்களை அழைத்த போது, அவர்கள் அவையில் இல்லை. இதுதான் நிலைமை இப்பொழுது விவாதம்

ஒத்திபோடப்படுகிறது. எல்லா நேரத்திலும், எல்லோரையும் கட்டுப் பாட்டிற்குள் வைத்திருக்க முடியாது. சூழ்நிலைகள் உருவானால், அவர்களை நாம் சந்திப்போம்.

**திரு. தியாகி:** தீர்மானத்தை அவை முன் வைத்துள்ள உறுப் பினர்களை மட்டும் ....

**திரு. சபாநாயகர்:** விவாதத்தை மதிப்பிற்குரிய உறுப்பினர் சரியான முறையில் கவனிக்கவில்லை என்று தோன்றுகிறது. நான் எந்தத் தீர்மானத்தையும் அவை முன் வைக்கவில்லை. அவை முன் தீர்மானம் ஒன்றை நான் வைக்காத வரையில் அதை வாக்களிப்புக்கு விடும் பிரச்சினையோ, வாபஸ் பெறும் பிரச்சினையோ எழுவ தில்லை.

**திரு. தியாகி :** அப்படியென்றால், தார்மீக கடமை ஏதுமில்லை.

**திரு. சபாநாயகர் :** தார்மீகக் கட்டுபாடு உள்ளது.

**திரு. தியாகி:** தார்மீகத்தை விட ஒழுக்கமற்றதையே நான் விரும்புகிறேன்.

**திருமதி துர்க்காபாய்:** இந்தத் தீர்மானங்கள், முன்மொழியப் பட்டு வலியுறுத்தப்படவில்லை.

**திரு. சபாநாயகர்:** இந்தத் தீர்மானங்கள் முன் மொழியப்பட வில்லை. நான் அவைகளை அவை முன் வைக்கவில்லை.

**திருமதி துர்க்காபாய்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் அதை முன் மொழிந்தார். ஆனால் வலியுறுத்தவில்லை.

**திரு. சபாநாயகர்:** அதில் என்ன வேறுபாடு உள்ளது. அவர் திரும்பவும் அந்தத் தீர்மானத்தை முன் மொழிந்து வாக்களிப்பின் போது அது தோற்கடிக்கப்பட்டால் இம்மாதிரித் தீர்மானத்தைக் கொண்டுவரக்கூடாது என்பது பொருளாகுமா?

**திரு. தியாகி:** இன்று மட்டும் நாம் தார்மீக ரீதியில் கட்டுப் பட்டுள்ளோம்.

**திரு. சபாநாயகர்:** எல்லாக் காலங்களுக்கும் கட்டுப்பட்டுள் ளோம். மேலும் விவாதம் தேவை இல்லை. நாம் அடுத்த விஷயத் திற்குப் போவோம்.

**திருமதி ரேணுகா ரே:** எழுந்திருக்கிறார்.

**திரு. சபாநாயகர்:** விஷயம் முடிவுக்கு வந்துவிட்டது. மேல் கொண்டு விவாதம் ஏதும் இல்லை.



